தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—198

ஆக்ஸ்ஃபோர்டின்

# இந்திய வரலாறு—II

## (THE OXFORD HISTORY OF INDIA)

ஆசிரியர்
காலஞ்சென்ற வின்செண்ட் ஏ. ஸ்மித், சி.ஐ.இ.

மூன்றும் பதிப்பு
பெர்சிவல் ஸ்பியர் அவர்களால்
திருத்தியமைக்கப்பட்டது.

பாகம் II
ஜே. பி. ஹாரிசன் அவர்களால்
திருத்தியமைக்கப்பட்டது.

தமிழாக்கம்
ஏ. உஸ்மான் ஷெரிப், எம்.ஏ.,
விரிவுரையாளர்
அரசினர் கலைக் கல்லூரி, கோவை.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு — அரசாங்கம்



தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—138

ஆக்ஸ்ஃபோர்டின்

# இந்திய வரலாறு—II

## (THE OXFORD HISTORY OF INDIA)

ஆசிரியர்
காலஞ்சென்ற வின்செண்ட் ஏ. ஸ்மித், சி.ஐ.இ.

மூன்றும் பதிப்பு
பெர்சிவல் ஸ்பியர் அவர்களால்
திருத்தியமைக்கப்பட்டது

பாகம் II
ஜே. பி. ஹாரிசன் அவர்களால்
திருத்தியமைக்கப்பட்டது.

தமிழாக்கம்
ஏ. உஸ்மான் ஷெரிப், எம்.ஏ.,
விரிவுரையாளர்;
அரசினர் கலைக் கல்லூரி, கோவை.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு — அரசாங்கம்

First Edition—April 1967

B.T.P. No. 138



THE OXFORD HISTORY OF INDIA—II

Vincent A. Smith

*Translation*

A. Oosman Sheriff

Price Rs. 7-50

This translation of 'The Oxford History of India' by Vincent A. Smith is published by arrangement with the Clarendon Press, Oxford.

*Printed by*
Elangovan Printers,
23, Muthu Mudali Street,
Royapettah, Madras-14.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும், மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகின்றது.

பல துறைகளில் பணி புரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'ஆக்ஸ்ஃபோர்டின் இந்திய வரலாறு–II' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 138ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 173 நூல்கள் வெளி வந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கிறாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

## பாகம் II
## முஸ்லீம் காலத்து இந்தியா

### மடல் IV — பக்கம்
### வட இந்தியாவின் முஸ்லீம் இராச்சியங்கள்



### மடல் V
### தென்னிந்திய அரசுகள்



### மடல் VI
### முகலாயப் பேரரசு

# படங்களின் அட்டவணை

## தேசப் படங்கள்



## புகைப் படங்கள்

பக்கம்

மடல் IV

# வட இந்தியாவின் முஸ்லீம் இராச்சியங்கள்

## 1. இந்தியாவில் முஸ்லீம் ஆட்சியின் எழுச்சியும் தில்லி சுல்தானிய ஆட்சியும், கி.பி. 1175-1290

### முஸ்லீம் ஆட்சியின் எழுச்சியும் வீழ்ச்சியும்

காபூல், பஞ்சாப், சிந்து ஆகிய மாகாணங்களைத் தவிர இந்தியாவின் மற்றப் பகுதிகளின்மீது நடந்த முஸ்லீம் படையெடுப்புப் பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதிக் கால்பாகம் வரை தொடங்கப்படவில்லை. அப் படையெடுப்பு 1340ஆம் ஆண்டுவரை நீடித்திருந்ததென்று கணக்கிடலாம். அச் சமயத்தில் முகம்மது பின் துக்லக்கின் பேரரசு உச்சப் பரப்பை எய்தியிருந்தது. இப் பேரரசில் இருந்த இருபத்துநான்கு மாகாணங்கள் ஏறக்குறைய சுல்தானின் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டிருந்தன.[1] இம் மாகாணங்கள் தக்கணத்தின் பெரும் பகுதியையும், மலபார் அல்லது சோழமண்டலக் கடற்கரையையும் உட்கொண்டிருந்தன.

1340ஆம் ஆண்டிற்குப் பின் பல புதிய இந்து, முஸ்லீம் இராச்சியங்கள் தோன்றியதால், தில்லி சுல்தானியத்தின் எல்லைகள் சுருங்க ஆரம்பித்தன. விஜயநகர இந்துப் பேரரசின் துரிதமான வளர்ச்சி, தெற்கே இஸ்லாமின் முன்னேற்றத்தைத்

[1] இப் பட்டியல் Thoma's 'Chronicles' என்ற நூலில் 203ஆம் பக்கத்தில் உள்ளது.

தடுத்தது. முஸ்லீம் ஆதிக்கத்திலிருந்த சில பகுதிகளை விஜய நகரப் பேரரசு மீட்டது. மற்ற இடங்களிலும் இந்துத் தலைவர்கள் தங்களுடைய நிலையை வலுப்படுத்திக்கொண்டனர். 1340ஆம் ஆண்டுமுதல் அக்பர் அரியணையேறிய 1556ஆம் ஆண்டுவரையில் பொதுவாக இஸ்லாம் தன் செல்வாக்கை இழந்துகொண்டிருந்தது எனக் கூறலாம்.

அக்பர் காலத்திலும், இவருக்கு அடுத்து வந்தவர்கள் காலத்திலும் முஸ்லீம் எல்லை 1691ஆம் ஆண்டுவரை அவ்வப்பொழுது விஸ்தரிக்கப்பட்டுக்கொண்டிருந்தது. அப்பொழுது, ஒரு காலம் வரையில், அவுரங்கசீப்பின் (Aurangzeb) அலுவலர்கள் தூரத் தெற்கில் உள்ள திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் ஆகிய பகுதிகளிடமிருந்து கப்பங்களை வசூலித்துக்கொண்டிருந்தனர். குறிப்பிட்ட அவ்வாண்டிற்குப் பின், 1818ஆம் ஆண்டுவரை, மராட்டியர்கள் இந்து இராச்சியத்தின் எல்லைகளைப் பரவச் செய்தனர். அவ்வாண்டில் இவர்களுடைய சக்தி குலைந்தது. மேலும், 1757ஆம் ஆண்டுக்கும் 1765ஆம் ஆண்டுக்குமிடையில் வங்காளம், பீஹார் ஆகியவற்றைக் கைப்பற்றுதலை அடிப்படையாகக்கொண்ட பிரிட்டிஷ் ஆதிக்கத்தை அவர்கள் அங்கீகரிக்கும்படி நேர்ந்தது. சுருங்கச் சொல்லின், இதுதான் இந்தியாவில் முஸ்லீம் மேலாண்மை ஆட்சியின் எழுச்சி, தளர்ச்சி, வீழ்ச்சி ஆகியவற்றின் சுருங்கிய வரலாறாகும். 1818ஆம் ஆண்டிலிருந்து 1858ஆம் ஆண்டுவரை தில்லிப் பேரரசு பெயரளவுக்குமட்டுமே இருந்துவந்தது.

கி.பி. 1175ஆம் ஆண்டிலிருந்து 1340ஆம் ஆண்டுவரை முஸ்லீம் படையெடுப்பின் முன்னேற்றத்தைச் சுருக்கமாக வருணிக்க இவ்வதிகாரமும், இதற்கு அடுத்த அதிகாரமும் ஒதுக்கப்பட்டுள்ளன. முந்திய படையெடுப்புகளுக்குப் பின் நடந்த பல படையெடுப்புகளெல்லாம் தில்லியின் சுல்தானியர்களுக்காகவோ, இவர்கள் சார்பாகவோ நடந்தவையாகும். இவர்களின் வம்சாவளி 1206ஆம் ஆண்டிலிருந்து தொடங்கியது.

**கோர் வம்சாவளி (கோரி)**

வரலாற்றில் பிரசித்தியற்ற கோர் என்ற சிற்றரசு நாட்டின் தலைவர் முதல் தாக்குதலை நடத்தினர். இந்நாடு ஹெராட்டுக்குத் (Herat) தென்கிழக்கிலிருக்கும் ஆப்கானிய மலைகளில் மறைந்து கிடந்தது. சுல்தான் மகமூத் காஸ்னிக்குப் (Sultan Mahmud of Ghazni)பின் வந்தவர்களோடு நடத்திய போர்களின்மூலமாகக் கோரின் தலைவர்கள் வளர்ச்சி பெற்றனர். மத்திய ஆசியாவில் (Central Asia) அவர்களுடைய ஆதிக்கம் வளர்ந்துகொண்டிருந்த

செல்ஜுக்கிய பேரரசினுல் (Seljuk Empire) சிதைவுண்டது. அப் பின்னேர்களில் ஒருவரான பஹ்ராம் (Bahram) கோரின் இரு இளவரசர்களைக் கொன்றதனுல் கொடும் போர் மூண்டது.




இங்ஙனம் மூண்ட இப் போர் கி.பி. 1150-ல் (ஹி.பி. 544) அலாவுதீன் உசேனை (Ala-ud-din Husain) காஸ்னியைத் தாக்கிப் பகைமை தீர்த்துக்கொள்ளுமாறு தூண்டியது. துயருற்ற இந் நகரம் ஏழு நாட்களாக தீயில் மூழ்கியிருந்தது. அப்பொழுது இடைவிடாமல் கொள்ளையும், நாசவேலையும், கொலையும் நடந்தன. கண்ணில் பட்ட ஒவ்வோர் ஆண்மகனும் கொல்லப்பட்டான். எல்லாப் பெண்களும் குழந்தைகளும் கைதுசெய்யப்பட்டனர். மகம்மது வமிசத்து அரசர்களின் உலகத்தில் நிகரற்ற மாட மாளிகைகளெல்லாம் அழிந்தன. இந்தப் பேரழிவிலிருந்து தப்பியவை சுல்தான் மகம்மதுவின் கல்லறையும், இவருடைய இரண்டு உறவினர்களின் கல்லறைகளுமேயாம். பஹ்ராமின் மகனை குஸ்ரு ஷா (Khusru Shah), குஸ் துருக்கியர்கள் நாட்டிற்குள் புகுந்ததால், சிறிது காலத்திற்குப்பின் காஸ்னியைக் கைவிட்டு லாகூருக்குத் (Lahore) திரும்ப நேர்ந்தது (1160). எனினும்,

காஸ்னி பன்னிரண்டு அல்லது பதின்மூன்று ஆண்டுவரை (*1173*) கோர் இராச்சியத்துடன் சேர்க்கப்படவில்லை. அப்பொழுது கோரைச் சேர்ந்த சுல்தான் கியாசுத்தின் (Ghiyaz-ud-din) இதைத் துருக்கியர்களிடமிருந்து மீட்டுவித்துத் தன் இராச்சியத்துடன் இணைத்துக்கொண்டார். இச் சுல்தான் காபூல் உட்படக் கைப் பற்றப்பட்ட பகுதியையும், அதன் சார்பரசு நாடுகளையும் தன் சகோதரனும், சாம் என்பவரின் மைந்தருமான சுல்தான் முகம்மதுவின் அரசாங்கத்தினிடம் ஒப்படைத்தார். சுல்தான் முகம்மது ஷியாபுத்தீன் (Shihab-ud-din), மொய்ஸுத்தீன் (Muizz-ud-din) (ர-தௌலத்) என்ற பட்டப் பெயர்களையும் பெற்றிருந் தார். இவரை முகம்மது கோர் அல்லது கோரைச் சேர்ந்த முகம்மது என்றும், காஸ்னியின் சுல்தான் என்றும், இந்துஸ்தானை வென்றவர் என்றும் மிகத் திடமாகக் குறிப்பிடலாம்.

## முகம்மது கோரியின் முந்திய படையெடுப்புகள்

முகம்மது கோரி முல்தானை (Multan—*1175–6*) வெற்றிகர மாகத் தாக்கித் தன் இந்தியப் படையெடுப்புகளைத் தொடங் கினார். இதை அடுத்து உச் (Uch) என்ற இடத்தை ஓர் அரசியின் துரோகச் செயலால் கைப்பற்றினார். மூன்று ஆண்டுக்குப்பின் இவர் தெற்கே வந்து வளர்ச்சியுற்ற குஜராத்தின்மீது படை யெடுக்க முயன்றார். ஆனால், பட்டான் அல்லது அன்ஹில்வா ராவின் இரண்டாம் பீம் தேவ் (Bhim Dev) என்பவர் படையெடுப் பாளரைக் காட்டிலும் வலிமை பெற்றவராக இருந்தார். இதனால் படையெடுத்தவர் தோற்கடிக்கப்பட்டு மிக்க நஷ்டத்துடன் விரட்டியடிக்கப்பட்டார் (*1178*). இவ் வெற்றி குஜராத் முழுவதையும் பல முக்கியத் தாக்குதல்களிலிருந்து ஒரு நூற்றாண்டுக்குமேல் காப்பாற்றியது. எனினும், இடை இடையே கொள்ளைகள் நடந்தன. இருபது ஆண்டுகட்குப்பின் அன்ஹில் வாரா (Anhilwara) கைப்பற்றப்பட்டது. இரண்டாம் பீம் தேவ் விதித்த தடைகளைப்போல இஸ்லாமின் முன்னேற்றத்தை நிறுத்த இவ்விதம் விதித்த தடைகள் மிகச் சிலவே ஆகும்.

*1181*ஆம் ஆண்டில் முகம்மது கோரி சபக்டிஜின் (Sabuktigin), மகமூத் ஆகியவர்களின் வமிசத்தின் கடைசி இளவரசனை குஸ்ரு மலீக்கைப் (Khusru Malik) பதவியிலிருந்து விலக்கித் தானே பஞ்சாபைக் கைப்பற்றினார். முந்தியே சிந்துவைப் பெற்றிருந்தத னால் சிந்து நதிப் பள்ளத்தாக்கை இவர் பெற முடிந்தது. மேலும், இந்தியாவின் செழிப்பு மிக்க சமவெளிகளில் நுழைய இவரால் முடிந்தது. இச் சமவெளிகள் கவர்ச்சியான செல்வத் தைப் பெற்றிருந்தன. சிலையுருவங்களை வழிபாடு செய்பவர்கள்

இங்கே குடியிருந்தனர். படையெடுப்பாளரின் எளிய சமயக் கொள்கையின் கருத்தில் இவர்கள் நரகத்திற்கு அனுப்பப் படுவதற்குத்தான் தகுதியுடைவர்களாக இருந்தனர்.

### முதலாம் தாரேய்ன் போர்

சுல்தான் வெகுவிரைவில் வலிய படையெடுப்பிற்காகத் தன்னை ஆயத்தம் செய்துகொண்டு, 1191-ல் (ஹி.பி. 587) இந்தியாவுக்குள் நுழைந்தார். இப் பேராபத்து, தங்களுக்குள் சண்டையிட்டுக்கொண்டிருந்த இந்து அரசர்களைத் தங்களுடைய சண்டைகளைக் கைவிட்டுப் படையெடுப்பவருக்கு எதிராகக் கூட்டுக் கழக இணைப்பு ஒன்றை ஏற்படுத்தும்படி செய்தது. இந்து அரசர்களின் முன்னோர்கள் அமீர் சபக்டிஜினுக்கும் சுல்தான் மகமூதுக்கும் எதிராக இதுபோன்ற இணைப்பை உண்டாக்கியிருந்தார்கள். வட இந்தியாவின் முக்கிய அரசர்களெல்லாம் படைகளை அனுப்பி வைத்தனர். அஜ்மீர், தில்லி ஆகியவைகளின் சௌஹானிய அரசரான ராய் பிதோரா (Rai Pithaura) அல்லது பிரித்விராஜ் (Prithviraj) இப் படைகளுக்குத் தலைமை தாங்கினார். கர்னாலுக்கும் (Karnal) தானேஸ்வருக்கும் (Thaneswar) இடையிலும் பின்குறிப்பிட்ட இடத்திற்குப் பதினான்கு மைலுக்கு அப்பாலும் உள்ள தாரேய்ன் (Tarain) அல்லது தரோரீ (Taraori) என்ற இடத்தில் இந்துப் படைகள் இஸ்லாமியப் படைகளுடன் மோதின. தற்போது கர்னால் மாவட்டம் என இப் பகுதி வழங்கப் படுகிறது. இது வடமேற்கிலிருந்து வரும் படையெடுப்பாளர்கள் தில்லியையும் கங்கை நதிப் பள்ளத்தாக்கையும் காக்கும் படைகளோடு போரிடும்படியாக இயற்கையாலேயே அமைக்கப்பட்டிருந்தது. வரலாற்றுக் காலத்திற்கு முன்னால் மகாபாரதத்தின் வீரர்கள் போர்செய்த குருக்ஷேத்திரப் போர்க்களம் இவ்விடத்திலிருந்து வெகு தூரத்தில் இல்லை. இவ்விடத்திற்குச் சுமார் முப்பது மைல் தெற்கில் பானிப்பட்டும் அமைந்திருக்கிறது. பிற்காலத்தில் பானிப்பட்டில் முடிவான மூன்று போர்கள் நடந்தன. பிரித்விராஜின் உடன்பிறந்தானுடன் தனியாக நடத்திய போரில் சுல்தான் காயமுற்றார். இவ்வெதிர்பாரா நிகழ்ச்சியின் விளைவாக இவருடைய படை சிதைவுண்டது. இந்துக்கள் தோல்வியுற்றவர்களைப் பின்தொடராது, அவர்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்று ஓய்வு பெற்றுப் புதிய தாக்குதலுக்கு வலிமை பெற அனுமதித்தனர்.

### இரண்டாம் தாரேய்ன் போர்

சுல்தான் அடுத்த ஆண்டு திரும்பிவந்து, இணைக்கப்பட்ட இந்து அரசர்களோடு அதே இடத்தில் போர் நடத்தி, அவர்களை

அறவே தோற்கடித்தார் (1192—ஹி.பி. 588). இந்துக்களின் ஒழுங்கற்ற படை, குதிரையில் வீற்றிருந்த பத்தாயிரம் வில்வாளிகளினால் தாக்குண்டு கலைந்தவுடன், ராய் பிரித்விராஜ் போர்க்களத்திலிருந்து தப்பி ஓடினார். ஆனாலும், பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். இவருடைய உடன்பிறந்தாரும் போர்க்களத்தில் இறந்தார். வெற்றிகொண்டவர்கள் அஜ்மீரையும், இதர பிரதேசங்களையும் கைப்பற்றினார்கள். 1192-ல் நடந்த இரண்டாம் தாரேய்ன் போரை உண்மையில் ஒரு முடிவான போர் எனக் கருதலாம். இப் போர் முஸ்லீம்களை இந்துஸ்தானைத் தாக்கி இறுதியில் வெற்றி பெறும்படி உறுதிப்படுத்தியது. பின் நாட்களில் கிடைத்த வெற்றிகள் பல, தில்லிக்கு வடக்கிலிருக்கும் வரலாற்றுச் சிறப்புப் பெற்ற பள்ளத்தாக்கில் இந்துக்களின் கூட்டுக் குழு அடைந்த படுதோல்வியின் விளைவுகளாகும். அனுபவத்திலிருந்து இலாபம் பெறுவதற்கோ, முற்காலத்தில் அலெக்ஸாண்டர் நடத்திய படையெடுப்புகள் கற்பித்த பாடங்களைக் கற்றுக்கொள்வதற்கோ எந்த இந்து தளபதியும் விரும்பவில்லை. கணக்கற்ற அரசர்கள் நம்பமுடியாத யானைப்பலத்தைப் பெற்ற சேனைகளைத் திரட்டினார்கள். இச் சேனைகளெல்லாம் மேற்கிலிருந்து வந்த சக்திவாய்ந்த வீரர்களின் சிறுசிறு கூட்டங்களால் காலாகாலமாக மிக எளிதில் விரட்டியடிக்கப்பட்டன. மேற்கிலிருந்து வந்த இவ் வீரர்கள், வெகு எளிதாக இயங்குகிற குதிரைப் படையின் பலத்தில் நம்பிக்கைகொண்டு, தனித் தலைமையின் கீழ்ப் போர்புரிந்தனர். அலெக்ஸாண்டர் (Alexander), முகம்மது கோரி, பாபர் (Babur), அகமது ஷா துர்ராணி (Ahmad Shah Durrani) என்பவர்களும், திறமைவாய்ந்த மற்றத் தளபதிகளும் இதே செயல்திறன்களைக் கையாண்டு நம்பமுடியாத எண்ணிக்கை கொண்ட இந்துப் படைகளின் மீது முடிவான வெற்றி கொண்டனர். அந்நியப் பகைவர்களோடு போர்புரியும்பொழுது இந்தியாவின் சாதிமுறை இராணுவத்திறனுக்குச் சாதகமாக இருந்ததில்லை.

## குத்புத்தீன் எய்பெக் (Kutb-ud-din Aibak)

தாரேய்ன் வெற்றிக்குப்பின் இந்தியப் படையெடுப்புப் பொறுப்பைக் குத்புத்தீன் எய்பெக் அல்லது ஐபக் என்பவரிடம் ஒப்படைத்துவிட்டு, சுல்தான் குரேசான் (Khurasan) திரும்பினார். அடிமையாக விலைக்கு வாங்கப்பட்ட குத்புத்தீன் ஒரு தர்கிஸ்தான் (Turkistan) வாசியாவர். இந்துஸ்தான் படையெடுப்புக் காலத்திலும் இவர் ஓர் அடிமையாகத்தான் இருந்தார். 1193-ல் இவர் தில்லியைக் கைப்பற்றி டோஆப் (Doab) நோக்கிச் சென்றார்; அவ்விடத்தில் முகம்மது கோரியோடு சேர்ந்து கானோஜைத் (Kanauj)

தாக்கினுர். இதன் ராதர் (Rathor) ஆட்சியாளரான ஜெய்சந்த் (Jai Chand) என்பவர் தோல்வியுற்றுக் கொல்லவும்பட்டார். வெகு விரைவில் குவாலியரும் (Gwalior) கைப்பற்றப்பட்டது. 1197-ல் குஜராத்தின் (Gujarat) தலைநகரான அன்ஹில்வாரா பிடி பட்டது. எனினும், இம் மாகாணம் ஒடுக்கப்படவில்லை. அதே ஆண்டில் அஜ்மீர் கைப்பற்றப்பட்டது; அங்கே கோட்டைப் பாதுகாப்புப் படை ஒன்றும் நிறுவப்பட்டது.

**பீஹாரைக் (Bihar) கைப்பற்றுதல்**

பக்தியாரின் (Bakhtyar) மகனும், குத்புத்தீனின் தளபதியுமான முகம்மது கில்ஜி (Muhammad Khilji) கிழக்கு இராச்சியத்தை மிக எளிதில் அடக்கினுர். கொள்ளையடிக்கும் நோக்கத்துடன் பல படையெடுப்புகளைச், செய்து முடித்த இம் முஸ்லீம் தளபதி, சுய மாகவே 1197-ல் பீஹார் அரணைத் துணிகரமாகக் கைப்பற்றினுர். இவர் இவ்விதம் செய்து பீஹார் மாகாணத்தின் தலைநகரான பீஹாரைத் தன் ஆட்சிக்குட்படுத்திஞர். இருநூறு குதிரை வீரர்கள் இவ்வரணைப் பிடித்தார்கள். பீஹாரில் அக் காலத்தில் சிறப்பற்ற பௌத்த சமயம் ஒன்று பரவியிருந்தது. பாலா (Pala) வமிசத்தில் தோன்றிய பல அரசர்கள் அச் சமயத்தை மூன்று நூற்றுண்டுகளுக்கு மேற்பட்டே ஆதரித்துவந்தனர். சிலை யுருவங்களை வழங்குபவர்களிடம் இருந்த வேறுபாடுகளைக் கவனிக் காத ஒரு முஸ்லீம் வரலாற்றறிஞர், குடிமக்களில் பெரும்பாலோர் மொட்டை அடித்துக்கொண்டிருக்கும் பிராமணர்களென்றும், அவர்களெல்லாம் வாளுக்கு இரையாஞர்களென்றும் கூறுகிருர். பீஹார் என்ற பெயர் கல்லூரியைக் குறிக்கிறது. நகரமும் கோட் டையும் ஒரு கல்லூரியாகவே கருதப்பட்டன என்று இவ்வாசிரி யருக்குத் தெரியவந்ததால், இவர் உண்மையில் பௌத்தத் துறவி களையே மனத்தில் கொண்டிருக்கவேண்டும். பெரிய நூலகம் ஒன்று சிதறடிக்கப்பட்டது. வாரணுசிக்கு (Benares) அருகிலுள்ள சார்நாத் (Sarnath) என்ற இடத்தில் உள்ள பௌத்தக் கோயில் கள் பலவற்றின் சிதைவுகள் சிலையுருவங்களை உடைப்பவர்களின் கோபத்திற்குச் சான்று பகரும். வட இந்தியாவில் பீஹாரிலும், அதற்கடுத்த பகுதிகளிலும்தாம் பௌத்த சமயம் வலிமை பெற் றிருந்தது. இப் படையெடுப்புகள் வட இந்தியாவில் ஒழுங்கு பெற்ற சமயமாக இருந்த பௌத்த சமயத்திற்கு மிக்க தீங்கு விளைத்தன. படுகொலையிலிருந்து தப்பிய துறவிகள் நேபாளிலும், திபெத்திலும், தெற்கிலும் பரவியிருந்தனர். கி.பி. 1200ஆம் ஆண்டிற்குப்பின், வட இந்தியாவில், பௌத்த சமய அடை யாளங்கள் புகழற்றும் சக்தி குன்றியும் இருந்தன,

### வங்காளப் (Bengal) படையெடுப்பு

அக்காலத்தில் வங்காளம் வயது முதிர்ந்தவரும், எல்லாருடைய நன்மதிப்பைப் பெற்ற பிராமண அரசகுமாரருமான லக்ஷ்மண சேனரின்(Lakshmana Sena) ஆட்சிக்குட்பட்டிருந்தது. இவ்வாட்சிக் குட்பட்டிருந்த வங்காளம் சிறிது காலத்திற்குப்பின் 1199 அல்லது 1202-ல் வெகு எளிதில் கைப்பற்றப்பட்டது. பக்தியாரின் மகனை முகம்மது கில்ஜி, பதினெட்டு வீரர்களை முன்னணியாகக்கொண்டு படைகளைப் பின்விட்டு, நூதியா (நுத்தியா) (Nudia) என்ற தலை நகருக்குமுன் திடீரென்று தோன்றினர். நாட்டு மக்கள் இப் படை வீரர்களைக் குதிரை வீரர்களென்று தவருக நினைத்துக்கொண் டார்கள். இவர் இவ்விதம் மிகச் சிலரையே உடன்கொண்டு, அரசரின் அரண்மனைக்குச் சென்று, தைரியமாகக் காவலாளிகளைத் தாக்கினர். கொள்ளைக்காரர்களின் துணிகரம் வெற்றி யடைந்தது. உணவு அருந்திக்கொண்டிருந்த அரசர் பின்வாயி லாகத் தப்பித்துக்கொண்டு டாக்காவின் (Dacca) அண்டைப் பகுதிக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே அவருக்குப் பின்வந்த வர்கள் பல தலைமுறைகளாகத் தலத்தலைவர்களாக ஆட்சி புரிந்து கொண்டிருந்தனர். முஸ்லீம் தளபதி நூதியாவை அழித்துத் தலைநகரத்தினை லக்ஷ்மணவதி அல்லது கௌர் (Gaur) என்ற பழைய இந்து நகரத்திற்கு மாற்றினர். இச் செயல்களுக்கெல் லாம் தன் தலைவரான குத்புத்தீனின் ஒப்புதல் பெறுவதற்கு முகம் மது கொள்ளைப் பொருள்களை ஏராளமாகக் கொடுத்தார். மேலும், இவர் சுதந்திரம் பெற்ற முஸ்லீம் மாகாண நிர்வாகம் ஒன்றையும் நிலைநாட்டினர். இராச்சியம் முழுவதிலும் மசூதி களையும், இதர முஸ்லீம் மாளிகைகளையும் கட்டினர். இவ்வாறு எளிய முறையில் வங்காளத்தைத் தன் ஆட்சிக்குட்படுத்தியது முடிவானதாக அமைந்தது. முஸ்லீம்களின் ஆட்சியிலிருந்து வங்காளம் வெகுநாட்கள் விடுதலை பெற்றிருக்கவில்லை. பதி னெட்டாம் நூற்றூண்டில் பிரிட்டிஷார் இவ்வாட்சிக்கு முடிவு கட்டினர்கள்.

### பண்டேல்கண்டைக் கீழடக்குதல்

மறைந்துபோன இராஜா பர்மால் (Parmal) என்பவரின் பேரவாக்கொண்ட அமைச்சரான அஜா தேவ் (Aja Deo) பண்டேல் கண்டில் (Bundelkhand) உள்ள கலஞ்சரின் (Kalanjar) வளமைமிக்க சந்தேளிய அரணை 1203-ல் எய்பக்குக்குச் சரணடைவித்தார். வெற்றியாளரின் செயலாற்றல்களை வருணிக்கும் வரலாற்றறிஞர் மகிழ்ச்சியோடு பின்கண்டவாறு கூறுகிறர்: ‘கோயில்களெல்லாம் மசூதிகளாகவும் உன்னதமான இடங்களாகவும் மாற்றப்பட்டன,

செபமாலைகளை உருட்டுபவர்களின் (தொழுகை மணிமாலைகளை உபயோகிக்கும் பக்தர்களின்) கூச்சல்களும், தொழுகைக்காக அழைப்பவர்களின் குரல்களும் வானேக்கி எழுந்தன. சிலை யுருவங்களை வணங்குவது தடைசெய்யப்பட்டது. ஐம்பதினயிரம் பேர் அடிமையானர்கள்; பள்ளத்தாக்கு முழுவதும் இந்துக்களைக் கொண்டு கறுப்பாக மாறியிருந்தது.' வெற்றியடைந்தவர் மேலும் சென்று சந்தேளியரின் அரசாங்க பீடமாகிய மஹோபாவையும் (Mahoba) கைப்பற்றினர்.

## முகம்மது கோரியின் மரணம்

கோரியின் சுல்தானை கியாசுத்தீன் அதே ஆண்டில் இறந்தார். இவருக்குப் பின் இவருடைய உடன்பிறந்தாரான முகம்மது அரியணையேறினர். இங்ஙனம் இவர் தன் வமிசத்தின் இராச்சியங்களுக்கெல்லாம் தானே அரசரானர்; கலஞ்சாரைக் கைப்பற்றிய பிறகு முகம்மது, காஜ்னிக்குத் திரும்பினர். இரண்டு ஆண்டுக்குப் பின் 1205-ல் இவர் சக்தி வாய்ந்த கொக்கார் (Khokhar) மரபுக்குழுவின் கிளர்ச்சியை அடக்குவதற்காகப் பஞ்சாபுக்குத் திரும்ப நேர்ந்தது. அப்போதைய வழக்கம்போல் சுல்தான் பகைவர்களை மிகக் கடுமையாக நடத்தினர். கீழ்ப் படியாத குலத்தை நரகத்திற்கு அனுப்பிய சுல்தான், இஸ்லாம் விதித்த விதிகளின்படி புனிதப் போர் ஒன்றினை நடத்தி, மடிந்தவர் களின் இரத்தம் ஆறுபோல் ஓடும்படி செய்தார். ஆனாலும், விதி இவரை வென்றது. இவர் 1206-ல் (ஹி.பி. 602) காஜ்னியை நோக்கிப் புறப்பட்டுக்கொண்டிருந்தபொழுது; தற்போது ஜீலம் மாவட்டத்திலிருக்கும் தாமியாக் (Dhamiak) என்ற போர்க் களத்தில் இஸ்மேயிலி (Ismaili) என்ற மதப்பிரிவினையைச் சேர்ந்த வெறிகொண்ட ஒருவனல் இவர் குத்திக் கொல்லப் பட்டார்.

## தில்லியின் முதல் சுல்தான்

முகமது கோரிக்குப்பின் இவர் சகோதரரின் மகனை கியாசுத் தீன் மகமூத் என்பவரால் சுல்தான் எனச் சிறப்பிக்கப்பட்ட குத் புத்தீன், புதிதாகக் கைப்பற்றிய இந்தியப் பகுதிகளின் அரசராகப் பதவியேற்ருர். இவரை 1206ஆம் ஆண்டிலிருந்து தில்லியின் முதல் சுல்தானுக ஆட்சி புரிந்தவர் என்று கருதலாம். ஆனாலும், இவர் லாகூரில்தான் அரியணை யேறினர். புதிய அரசர் செல்வாக்கு மிக்க எதிர்த் தலைவர்களோடு மண உடன்பாடுகளைச் செய்து கொண்டு தன் நிலையை வலுப்படுத்த முயன்ருர். இவர் கிர்மானின் (Kirman) கவர்னரான தாஜுத்தின் இல்திஸ் (Taj-ud-din Yildiz)

என்பவரின் மகளைத் தானே மணம்புரிந்துகொண்டதுமட்டுமன்றித் தன் உடன்பிறந்தாளையும் பின்னல் சிந்துவின் அரசரான நசீருத் தீன் குபாச்சா (Nasir-ud-din Qabacha) என்பவருக்கு மணம் செய்து வைத்தார். பீஹாரின் கவர்னரான இல்துத்மிஷ் (Iltutmish) (அல்தம்ஷ்) குத்புத்தீன் மகளை மணம்புரிந்துகொண்டார்.

குறிப்பிட்ட இல்திஸ், இபாச்சா, இல்துத்மிஷ் என்ற மூவரும் குத்புத்தீனைப் போலவே அடிமைகளாக இருந்தவர்களாவர். இக் காரணத்தால் குத்புத்தீனல் தொடங்கப்பட்டு அடிமைகளாக இருந்து, பின்னல் அரசரான மற்றவர்களால் நீடிக்கப்பட்ட வமிசத்தின் வரலாற்றில் 'அடிமைகள் வமிசம்' என்ற பெயர் வழங்கிவந்தது.

நான்கு ஆண்டுகட்குமேல் ஆட்சிபுரிந்த சுல்தான் குத்புத்தீன், குதிரைமேல் அமர்ந்து ஆடும் பந்தாட்ட மைதானத்தில் (Polo), எதிர்பாரா நிகழ்ச்சியின் விளைவாக 1210ஆம் ஆண்டில் உயிர் நீத்தார்.

## முந்திய படையெடுப்பாளரின் கொடுமை

அவன் அக் காலத்து மத்திய ஆசியாவின் கொடுமை வாய்ந்த வீரர்களின் வர்க்கத்தைச் சேர்ந்தவனுவன். அவன் இரக்க மற்றவனும் பித்துப் பிடித்தவனுமாவன். அவனுடைய பராக் கிரமும், தன் சகாக்களுக்குத் தாராளமாகக் கொடுக்கும் தன்மையும் அக் காலத்துக் கொடுமை வாய்ந்த வரலாற்றறிஞரை அவன்மீது பற்றுக்கொள்ளும்படி செய்தன. அவனை வரலாற்றறிஞர், நலன் செய்பவனும் வெற்றி கொண்டவனுமாவன் என்று புகழ்கிருர். மேலும், பல்லாயிரக்கணக்கான நன்கொடைகளை அளித்தான் என்றும், அதேபோல் பல்லாயிரக்கணக்கான மக்களைப் படு கொலை செய்தான் என்றும் அவனைத் 'தபகாதி' என்ற நூலின் ஆசிரியர் கூறுகிருர். இதுபோன்ற மனப்பான்மையை இதர வரலாற்றறிஞர்களிடத்தும் காணலாம். துரிதமாக மிகைப்படுத்திக் கூறும் இத்தன்மை முஸ்லீம்களின் ஆத்ம உறுதிநிலையை எடுத்துக்காட்டுவதுமன்றி, அரசவையில் இருப்பவர்களைப் புகழ் வதற்காகவென ஆசிரியர் எழுதுகிருர் என்பதையும் நமக்கு நினைவூட்டுகிறது. இரக்கமற்ற அச்சமூட்டும் தன்மையே இவர் களின் விரைவான முன்னேற்றத்திற்குக் காரணமாகும் இத் தன்மையை எதிர்ப்பது பேராபத்தாகும். பணிவாகக் கீழ்ப் படிவதாலும் இதிலிருந்து தப்பித்துச்கொள்ள முடியாது. இது போன்ற கொடுமையான கொள்கை, எண்ணிக்கையில் மிக அதிகமாக இருந்த இந்துக்களின் கிளர்ச்சிகளை அடக்குவதற்காக

எண்ணிக்கையில் ஒருசிலராக இருந்த படையெடுப்பாளர்கள் இயல்பாகவே கடைப்பிடித்த கொள்கையாகும்.

இந்துக்களின் கருத்துப்படி முஸ்லீம் படையெடுப்பின் வரலாறு ஓரளவு இராசபுதனத்தைத் தவிர மற்ற எந்த இடத்திலும் எழுதப்படவில்லை. எல்பின்ஸ்டனின் (Elphinstone) வரலாற்றுக் குறிப்புகள், முஸ்லீம் ஆசிரியர்கள் அளித்த மூலப்பொருள்களையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. அவைபோன்ற குறிப்புகள், பாரசீக மொழியில் எழுதிய வரலாற்றறிஞர்களின் தவறான எண்ணங்களையே அடிக்கடி வெளிப்படுத்துகின்றன.

## முந்திய சுல்தானியர்களின் கட்டடக் கலை

முந்திய இந்திய சுல்தானியர்கள் மதிப்புகளின்மீது தற்சமயம் சாதகமான அல்லது கடுமையற்ற தீர்ப்புகள் நிலைத்திருக்கின்றன. இவர்களின் கட்டடக் கலைச் செயல்களின் புகழே இந் நிலைக்குப் பெருமளவு காரணமாகும். இப் புகழ் தகுதியாகவே பெறப்பட்டதாகும். குதுப் வகைக் கட்டடங்கள் பழைய தில்லியில் இருக்கின்றன. இவைகள் இவ்விடத்தில் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் உச் (Uch) நகரைச் சேர்ந்த திருத்தொண்டரின் பெயரையன்றி முதல் சுல்தானின் பெயரைப் பெறவில்லை. இருந்தபோதிலும், சந்தேகமின்றி இவைகள் ஓரளவு குத்புத்தீன் எய்பெக்கின் வேலைப்பாடுகளேயாகும். இவர்தான் மேல்வளைவுகளின் உன்னதமான திரையைக் கட்டினார். பிரசித்திபெற்ற கோபுரம் இவரால் தொடங்கப்பட்டு இல்துத்மிஷால் முடிக்கப்பட்டதா, அல்லது பின்னால் வந்த அரசரால் முழுவதுமே கட்டப்பட்டதா என்ற வினா கருத்து வேறுபாடுகளுக்கு இடங் கொடுத்திருக்கிறது. இக் கருத்து வேறுபாடுகள் சில கல்வெட்டுகளின் விளக்கங்களைப் பொறுத்திருக்கின்றன.

இந்திய முஸ்லீம் கட்டடக் கலை குத்புத்தீன் எய்பெக்கின் குறுகிய ஆட்சிக் காலத்திலிருந்து ஆரம்பமாகிறது. அந்நிய சமயக் கட்டடங்களைக் கட்டி முடிக்கும் செயலில் தேவையான இந்தியத் தொழிலாளர்கள் அமர்த்தப்பட்டனர் என்பதனால், இக் கலை தனக்கென அமைந்த தனிச் சிறப்பினைப் பெற்றது. மற்றப் பாணிகளுக்குரிய தொன்மை வாய்ந்த எண்ணற்ற கட்டடங்களும் சிற்பவேலைகளும் அழிக்கப்பட்டதனால், புதிய முறையில் கட்டப்பட்ட தலைசிறந்த கட்டடங்களின் விலை மதிப்பு மேலும் அதிகமாகியது. இருபத்தேழினுக்குக் குறைவில்லாமல் அழிக்கப்பட்ட இந்துக் கோயில்களின் பொருள்களைக்கொண்டுதான் இக் குதுப் கட்டப்பட்டதாகும்.

**பக்தியாரின் மகனுன முகம்மதுவின் முடிவு**

பீஹாரும் வங்காளமும் மிக எளிமையாகக் கைப்பற்றப்பட்டு இணைக்கப்பட்டது, முகம்மது பின் பக்தியாரை மேலும் துணிகரச் செயல்கள் புரிவதற்குத் தூண்டியது. "தற்கெஸ்தான் நாட்டையும் திப்பத்தையும் (திபெத்) கைப்பற்றும் பேரவா இவருடைய மூளைக்கு வேதனையளிக்கத் தொடங்கியது. இதற்காக இவர் ஒரு படையைத் தயார் செய்ததுமன்றிப் பத்தாயிரம் குதிரைப்படை ஒன்றையும் தயார் செய்தார்'. இவர் எவ்வழியாகச் சென்ருர் என்ரே, எம்முனை வரை முன்னேறினுர் என்ரே கணக்கிட நம்மிடத்தில் துர்வசமாகப் போதுமான தகவல் இல்லை. தற்போது போக்ரா (Bogra), ஜல்பைகுரி (Jalpaiguri) என்ற மாவட்டங்களாக விளங்கும் பகுதியின் வழியாக இவர் சென்று, கரதோயா (Karatoya) எனக் கருதப்படும் ஒரு பெரிய நதியை இருபது வளைவுகளைக்கொண்ட கற்பாலம் ஒன்றின் உதவியால் கடந்தார்போலும். இப் பாலம் இருந்த இடம் எது என்று கண்டுபிடிக்கப்படவில்லை. இப்பொழுது இவ் வாறுகளெல்லாம் தங்கள் செல்திசைகளை அடியோடு மாற்றிக் கொண்டன. உதாரணமாக, பிரம்மபுத்திராவின் கிளையாருக இருக்கும் தீஸ்தா (Tista) நதி கரதோயாவில் வந்து கலந்தது. இவர் திறந்த நாடான திபத்தை அடைந்தார் என்று கூறப்படுகிறது. ஆனுல், இச் சொற்ருெடர் எதைக் குறிக்கிறது என்று நிச்சயமாகச் சொல்லமுடியவில்லை. இவர் ஓரிடத்திற்கப்பால் போகமுடியாது பின்வாங்க நேர்ந்தது. அவ்விடம் டார்ஜீலிங்குக்கு (Darjeeling) வடக்கிலிருந்திருக்கும்போலும். பட்டினியால் வருந்தும் இவர் படை, பாலம் உடைந்துவிட்டதை நோக்கி நீந்தி நதியைக் கடக்க முயன்றது. அச்சமயம் தலைவர் உட்பட ஒரு நூறு பேர்தாம் அதிலிருந்து தப்பி எப்படியோ நதியைக் கடந்தார்கள். மற்றெல்லோரும் நீரில் மூழ்கினுர்கள். வருத்தத்திலும் வெட்கத்திலும் மூழ்கிய முகம்மது நோய்வாய்ப்பட்டு இறந்தார். இவர் அலி மர்தான் கல்ஜியால் (Ali Mardan Khalji) கொல்லப்பட்டார் என மற்ருெரு குறிப்பும் உண்டு. கி. பி. 1205-6ஆம் ஆண்டிற்குச் சமகாலமான ஹிஜ்ரி 602-ல் இவர் காலமானுர். அவுரங்கசீப் ஆட்சியின் தொடக்கத்தில் மீர் ஜும்லா (Mir Jumla) அஸ்ஸாமைக் கைப்பற்ற முயன்ருர். ஆனுல், அம் முயற்சியில் இவருடைய முந்தையோர் எவ்விதம் தோல்வியுற்ருர்களோ அவ்விதமே இவரும் தோல்வியுற்ருர். வங்காளத்துக்கு வடக்கில் இருக்கும் மலைகளை எப்பொழுதும் எந்த முஸ்லீம் மேலதிகாரியும் தன் ஆட்சிக்குக்கீழ்க் கொண்டுவர முடியவில்லை,

**சுல்தான் இல்துத்மிஷ்**

குத்புத்தீனின் மகனை ஆராம் (Aram) முகம்மதுக்குப்பின் அரியணையேறினர். ஆனாலும், இவர் தன் தந்தையின் திறன்களைப் பெறவில்லை. ஆகையால், வெகு விரைவில் (1211) இவருடைய சகோதரியின் கணவரான இல்துத்மிஷ் என்பவருக்காக இவர் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். இல்துத்மிஷ் என்ற பெயர் சிதைந்து அல்தமஷ் என வழங்கப்படுகிறது. இவர் ஷம்ஸுத்தின் (Shamsuddin) 'சமயத்தின் சூரியன்' என்ற பட்டப் பெயரைப் புனைந்துகொண்டார். இவரோடு போட்டியிட்ட மற்ற அடிமைத் தலைவர்களான இல்திஷ், கபாச்சா ஆகியவர்களோடு வெற்றிகரமாகச் சண்டையிடுவதில் இவருடைய காலத்தின் பெரும்பகுதி கழிந்தது. இவர் 1229-ல் ஆட்சிபுரிந்துகொண்டிருந்த பாக்தாத் கலிபாவினிடமிருந்து சுல்தானி ஆஜம் (Sultan-i-Ajam) என்ற பட்டப் பெயரைப் பெற்றார். இவர் தான் 1236-ல் இறப்பதற்கு முன் வங்காளத்தின் கல்ஜி மாலிக்குகளைத் தனக்குக் கீழ்ப்படிய வைத்து, குத்புத்தீன் இறந்தபோது இழக்கப்பட்ட குவாலியரை மீண்டும் கைப்பற்றினர். மரணமுற்ற தன் தலைவனின் ஆதிக்கத்துக் குட்பட்டிருந்த பகுதிகளையும் இவர் மீண்டும் பெற்றதுமல்லாமல், மாளவத்தையும் (Malwa) சிந்துவையும் அவற்றோடு இணைத்தார்.

இவருடைய ஆணையின்படி கி.பி. 1232-ல் குதுப்மினரின் நிலவறையைத் தவிர மற்ற எல்லாப் பகுதிகளும் கட்டப்பட்டன. குதுப் வகைக் கட்டடங்களில் இவர் சில முக்கிய முன்னேற்றங்களைக் கொண்டுவந்தார். இவர் அழகிய சமாதி ஒன்றில் அடக்கம் செய்யப்பட்டுள்ளார். சிறப்பு மிக்க முஸ்லீம் கட்டட வேலைகளுக்காக எவ்விதம் இந்துக்களின் கலை பயன்படுத்தப்பட்டது என்பதைக் காட்ட, பழைய தில்லி அளிக்கும் உதாரணங்களில் இக் கல்லறையும் ஒன்ருகும். இந்துக் கோயிற் பொருள்களைக்கொண்டு தில்லியில் கட்டப்பட்ட மசூதியைப்போலவே அஜ்மீரில் இல்துத்மிஷ் ஒரு மசூதியைக் கட்டினர்.

**சிங்கிஷ்கான்** (Chingiz Khan)

இல்துத்மிஷ் காலத்தில் இந்தியா மங்கோலியர்களின் அச்சமூட்டும் பெரிய கானை அல்லது காகானை சிங்கிஷ்கான்[1] விஜயம்

[1] இப் பெயரின் எழுத்துமுறை பலவகைப்பட்டதாகும். சிங்கிஷ் என்று எழுதுவது சாலச் சரியான முறை என்று ஹோவர்த் (Howorth) கூறுகிருர். ராவெர்டி (Raverty) சிங்கிஸ், சிங்கீஷ் என்ற இரண்டையும் பயன்படுத்துகிருர். சிங்கிஸ் மிக எளிமையானதும் பொருத்தமானதுமான எடுத்துக்காட்டாகும். மங்கோல் (மங்க்கோல்) என்பது முகல் (மொகல்) போன்ற வார்த்

செய்திருத்தலால், உண்டாகியிருக்கக்கூடிய பேராபத்திலிருந்து மயிரிழையில் தப்பியது. பல துணிகர அனுபவங்களைப் பெற்றுத் தில்லியின் அரசவையில் தஞ்சம் புகுந்த ஜலாலுத்தீன் மங்க்பர்னி (Jalal-ud-din Mangbarni) என்பவரை செங்கிஷ் பின் தொடர்ந்து உண்மையில் இந்து நதிவரைக்கும் முன்னேறி வந்தார். மேற்குப் பஞ்சாபைக் கொள்ளையடித்தாலும், மங்கோலியப் படைகள் இந்தியாவின்மீது ஒழுங்கான படையெடுப்புகளை நடத்தவில்லை.

சிங்கிஷ்கான் என்பது தெமுஜின் (Temujin) அல்லது தெமூர்ச்சி (Temurchi) என்ற மங்கோலியத் தலைவரின் அதிகாரத்திற்குரிய பட்டமாகும். 1162-ல் பிறந்த இவர் இளம் பிராயத்திலேயே மங்கோலிய இனங்களின்மீது ஆதிக்கம் பெற்றார் பதின்மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்தில் அவர்கள் இவரைத் தங்கள் இணைப்புக் கூட்டரசு நாட்டுத் தலைவனாகத் தேர்ந்தெடுத்தார்கள். அப்பொழுது இவர் 'சிங்கிஷ்கான்' என்ற பட்டத்தைப் புனைந்துகொண்டார். சில ஆண்டுகளுக்குள் இவர் சீனாவின் பெரும்பகுதியையும், மத்திய ஆசியாவின் பிரசித்தி பெற்றநாடுகளையும் கைப்பற்றினார். பால்க், பொகாரா, சமர்கண்ட் (Samarqand), ஹெராட், காஜ்னீ என்பனவும், புகழ்மிக்க இன்னும் பல நகரங்களும் இரக்கமற்ற இவருடைய கைகளில் சிக்கி அழிந்தன. தோற்கடிக்கப்பட்ட மக்கள், ஆண்கள், பெண்கள், குழந்தைகள் யர்வரும் உண்மையில் இலட்சக்கணக்கில் கொல்லப்பட்டனர். இவர் தன் வெற்றிப் படைக் கூட்டங்களை ரஷியாவில் வெகு தூரம், நீபர் (Dnieper) நதிக்கரைவரை கொண்டுசென்றார். இவர் 1227-ல் தான் இறக்கும் சமயத்தில் பசிஃபிக் (Pacific) கடலிலிருந்து கருங்கடல் (Black Sea) வரை பரவியிருந்த ஒரு பெரிய பேரரசை ஆட்சி புரிந்தார்.

---

தையேயாகும். ஆனாலும், சிங்கீஷைப் பின்பற்றும் சமயமற்றவர்களுக்கே மங்கோல் என்ற வார்த்தையைப் பயன்படுத்திக்கொள்வது பொருத்தமாகும். இவர்களுள் பெரும்பாலோர் சுருங்கிய கண்களைக்கொண்டவர்கள்; பல எழுத்து முறைகளைக்கொண்ட மொகல் என்ற பெயரை அதிக நாகரிகமடைந்த இனங்களைக் குறிக்கும்படி ஒதுக்கிவைக்கலாம். இவ்வினங்களைச் சேர்ந்தவர்களில் பலர் துருக்கியர்களாகப் பிறந்து பதினான்காம் நூற்றாண்டில் முஸ்லீம்களானவர்கள். இவ்வினங்களிலிருந்துதான் சகதாய் (Chagatai) அல்லது ஜகதாய் (Jagatai) என்ற துருக்கியக் குழு ஒன்று தோன்றியது. பாபரும் அவருக்குப்பின் வந்தவர்களும் அக் குழுவைச் சேர்ந்தவர்கள். தோற்றத்தில் இத் துருக்கிய இனங்கள் சாதாரணமாக ஐரோப்பியர்களின் சுருங்கிய கண்களை அழுத்தமாகப் பெறவில்லை. எனினும், துருக்கியர்களும் மங்கோலியர்களும் ஒருவருக்கொருவர் கட்டுப்பாடுகளின்றி மணம் புரிந்துகொண்டனர். மங்கோலிய இரத்தம் அவ்வப்பொழுது மேலோங்க முயன்றது. இக் குணம் அக்பரின் உருவப்படங்களில் தென்படுகிறது.

ஒரு முஸ்லீம் கொலையாளியைப் புகழ்பவரும்; ஒழுங்கற்ற மதத்தைத் சேர்ந்த கொலையாளியை வெறுப்பவருமான தபகாதி நாசிரீ (Tabaqat-i Nasiri) என்ற நூலின் ஆசிரியர் குறிப்பிடுவதற்குத் தகுதியுள்ள முறையில் மிகத் தெளிவாக வெற்றியாளரை வருணித்திருக்கிறார்.

'குரேசானுக்குத் தான் வரும்பொழுது சிங்கிஷ்கான் அறுபத்தைந்து (சந்திர) ஆண்டு வயதடைந்தவர் என்றும், மிக உயரமானவர் என்றும், திடமான உடம்பைப் பெற்றவர் என்றும், ஆரோக்கியத் திடலைப் பெற்றவர் என்றும், ஒருசில முடிகளே முகத்தில் இருந்தன என்றும், அவை வெண்ணிறமாக இருந்தன என்றும், பூனைக்கண்களைக்கொண்டிருந்தவர் என்றும் மிக்க சக்திவாய்ந்தவர் என்றும், அறிவுத் திறத்தால் அறியும் தன்மை, சிறப்புத் தன்மை, புரிந்துகொள்வதற்கான ஆற்றல், அச்சமூட்டும் தன்மை ஆகியவற்றைப் பெற்றிருந்தவர் என்றும், கொலைகாரர் என்றும், நீதிமான் என்றும், மனவுறுதி கொண்டவர் என்றும், பகைவர்களைத் தோற்கடிப்பவர் என்றும், அஞ்சாதவர் என்றும், குருதி வெறியுள்ளவர் என்றும், கொடூரமிக்கவர் என்றும் நம்பத்தக்கவர்கள் இவரைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.'

### சுல்தான் ரசியதுத்தீன்

உயிருடன் இருந்த தன் மக்களின் திறனற்ற தன்மையை உணர்ந்த சுல்தான் இல்துத்மிஷ், தன் மகள் ரசீயா (Raziyya) அல்லது ரசீயதுத்தீன் (Raziyyat-ud-din—மதத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டவள்) என்பவளைத் தனக்குப் பின் வாரிசாக நியமித்தார்.[1] எனினும், தாங்கள் எல்லாம் அறிந்தவர்கள் என்று தங்களைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்த பிரபுக்கள், இவரைப் பதவியிலிருந்து விலக்கிப் பயனற்றவனும் ஒழுக்கமற்றவனுமான ருக்னுத்தீன் (Rukn-ud-din) என்ற இளவரசனை நியமித்தார்கள். இவ்விளரசன் அவதூறு நிறைந்த ஆட்சியைச் சில மாதங்கள் செலுத்தியபின் அகற்றப்பட்டான். அவனிடத்திற்கு அவனுடைய தங்கை 'சுல்தான்' என்ற பட்டப் பெயரோடு பதவிக்கு கொண்டுவரப்பட்டாள். ஆண்மகனைப் போல ஆட்சி புரிவதற்கு இவள் பெரு முயற்சி செய்தாள். எல்லா ஆண்களின் கண்ணுக்கெதிராக யானைமேல் சவாரி செய்துகொண்டு இந்துக்களோடும், எதிரிகளான முஸ்லீம்

[1] இவள் ஜலாலுத்தீன் என்ற பட்டப் பெயரையும் கொண்டிருந்தாள் (Thomas Chrnoicles, p. 138). இப்னேபடூடா இவளுக்கு 'ரசியாத்' என்ற பெயரையே இடுகிறார். அன்னாருடைய வார்த்தைகளாவன "அம் மகளுக்கு 'ரஸையாத்' எனப் பெயரிடப்பட்டது" (Defremery, tome iii, பக்கம் 166).

தலைவர்களோடும் இவள் போர் புரிந்தாள். இருந்தபோதிலும், இவளுடைய பெண்பாலினம் இவளுக்கு எதிராக இருந்தது. இக் குறையை அகற்றுவதற்காகக் கிளர்ச்சியில் தன்னை எதிர்த்த ஓர் இளைஞனை இவள் மணம் புரிந்துகொண்டாள். ஆனால், சில இந்துக்கள் இவளையும் இவளுடைய கணவரையும் கொன்றூர்கள். இவள் இடர் நிறைந்த ஆட்சியை மூன்று ஆண்டு நடத்தினாள். தபகாதி நாசிரியின் ஆசிரியர்தான் அக் காலத்திற்குரிய சிறந்த ஆசிரியராவர். இவர் தன் முஸ்லீம் கருத்தின்படி சுல்தான் ரசீயுத்தீன் ஒழுங்கு மிக்கவள் என்று கூறுகிறார். மேலும், இவர் 'இச் சுல்தான் ஒரு பெரிய அரசி; புத்தி கூர்மையுடைவள்; நீதிமான்; தாராளமாக நலஞ் செய்பவள்; அறிஞர்களை ஆதரிப்பவள்; நீதி அளிப்பவள்; தன் குடிமக்களின் நலனைக் காப்பவள்; போர் புரியும் திறன் பெற்றவள் என்றும், அரசருக்குத் தேவையான புகழ்வதற்குரிய நிறையியல்புகளையும் பெற்றிருந்தவள் என்றும், ஆனால், விதிவசத்தால் மனிதர்களுக்குச் சரிசமமாக இவள் இருக்க முடியவில்லையாதலால் இச் சிறந்த பண்புகளினால் பலன் ஒன்றுமில்லை என்றும் கூறுகிறார்.

### சுல்தான் நாசிருத்தீன்

இவருக்குப்பின் சுல்தான் இல்துத்மிஷின் மகனும் பேரனும் வெற்றிகரமாக அரியணையேறினர்கள். இவ்விருவரும் சிறப்பாக ஆளவில்லையாதலால், இவர்கள் இல்துத்மிஷின் இளைய மகனை நாசிருத்தீனுக்காகப் பதவியிலிருந்து விலக்கப்பட்டனர் (1246). இவர் இருபது ஆண்டுகளாகத் தன் உயிரையும் பதவியையும் காப்பாற்ற முடிந்தது. மின்ஹாஜி சிராஜ் (Minhaj-i Siraj) என்ற வரலாற்றறிஞர் நாசிருத்தீனின்கீழ்ச் சிறந்த பதவியை மேற்கொண்டிருந்தார். இவ்வறிஞர் சுல்தானின் பெயரையே தன் நூலுக்கிட்டிருக்கிறார். தாராள ஆதரவாளர் குறித்து இவர் கொண்டிருந்த கருத்து உண்மையில் ஒருசார்புற்றதாயிருந்தது. இருந்தபோதிலும், சம காலத்தவர்களில் இவரைப்போல எவரும் நமக்குக் கிடைக்கவில்லை. இதனால் இவர் அளிக்கும் குறிப்புகளை உண்மைக் குறிப்புகளென்று மனநிறைவு கொள்ள வேண்டும். நமக்குத் தெரிந்தவரை, சுல்தான் இராச்சிய விவகாரங்களைத் தன் மாமனாரும் அமைச்சருமான உலுக்கான் பால்பனிடம் (Ulugh Khan Balban) ஒப்படைத்துவிட்டுப் பற்றுமிக்க பக்தனாக வாழ்ந்துவந்தார்.

### மங்கோலியக் கொள்ளைகள்

சிங்கிஷ்கான் பின்னால் விட்டுச் சென்றிருந்த மங்கோலியர்கள் அல்லது இவர் பின்வாங்கிய பிறகு எல்லையைக் கடந்துவந்த

மங்கோலியர்கள் இவ்வாட்சிக் காலத்தில் அடிக்கடி தொல்லை அளித்துக்கொண்டிருந்தனர். இவர்கள் 1241–42-ல் லாகூரைக் கைப்பற்றி முல்தான் உள்பட சிந்துவின்மீது பல கொள்ளைகளை நடத்தினார்கள். வாரிசுகள் எவரையும் கொண்டிராத நாசிருத்தின் உலுக்கான் பால்பனையே தன் வாரிசுரிமையாளராக நியமித்தார்.[1] நாசிருத்தின் 1266-ல் உயிர் நீத்தார்.

## மியோஸுக்களை அடக்குதல்

பால்பன் 1258ஆம் ஆண்டிலும், 1259ஆம் ஆண்டிலும் டோ ஆப்பின் கீழ்ப்படியாத இந்துக்கள்மீது படையெடுத்து 1260-ல் தில்லியின் தெற்கிலிருந்த மியோஸுக்களைத் (Meos) தாக்கினர். இவர்கள் தலைநகருக்குச் செல்லும் பாதைகளையெல்லாம் தாக்கி, பயானு (Bayana) மாவட்டத்தையும் கொள்ளையடித்தார்கள். அப்பொழுது. இருபது நாள் நீடித்த படையெடுப்பில் இவர்களெல்லாம் சூறையாடப்பட்டுக் கொல்லவும் பட்டனர். இவர்களில் முக்கியமான இருநூறு பேர்கள் கொல்லப்படுவதற்காகத் தில்லிக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அரச ஆணையின் படி கிளர்ச்சியாளர்கள் யானைகளால் மிதிக்கப்பட்டனர். கொடுமை வாய்ந்த துருக்கியர்கள் இந்துக்களின் உடம்பை இரண்டு துண்டாக வெட்டி வீழ்த்தினர். சுமார் நூறு பேர் தோல் உரிப்பவர்களின் கையில் சிக்கித் தலையிலிருந்து கால்வரை தோல் உரிக்கப்பட்டு மடிந்தனர். இவர்களுடைய தோலில் வைக்கோல் நிரப்பப்பட்டது; சிலர் நகரத்தின் ஒவ்வொரு வாயிலிலும் தொங்க விடப்பட்டிருந்தனர். ஹௌஸ் ராணி (Hauz-Rani) என்ற பள்ளத்தாக்கும் தில்லியின் வாயில்களும் இத் தண்டனையை நினைவிற் கொண்டதில்லை; இது போன்ற பயங்கர நிகழ்ச்சியைப்பற்றி கேட்டதுமில்லை.

ஆனாலும், 1260, ஜூலை மாதத்தில் மீண்டுமொரு முறை இவர்களைத் தாக்க வேண்டியிருந்தது. இவர் கிளர்ச்சியாளர் எதிர்பாரா முறையில் திடீரென்று அவர்கள் மேற்பாய்ந்து ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எல்லாரும் உள்படச் சுமார் பன்னிரண்டாயிரம் பேரைப் பிடித்து எல்லோரையும் வாளுக்கு இரையாக்கினர். இஸ்லாமின் சிறந்த இவ் வெற்றிக்கு இறைவனுக்கு நன்றி செலுத்துவோம்.

## சுல்தான் பால்பன்

எல்பின்ஸ்டன் கூறுவது போல, 'அரசனின் எல்லா அதிகாரங்களையும் முந்தியே பெற்றிருந்ததனால் பால்பன் பதவியை மேற்

[1] பால்பன் நாசிருத்தீனைக் கொன்றார் என்று இப்னே படூடா (Ibn-Batuta) குற்றஞ்சாட்டுகிறார்.

கொள்ளுவதில் எவ்வித இடையூற்றையும் காணவில்லை.' சுல்தான் இல் துத் மிஷிடம் பற்றுக்கொண்டிருந்த 'நாற்பது அடிமைக'ளில் இவரும் ஒருவராவர். இவர்களில் பலர் உயர் பதவியடைந்திருந்தார்கள். எதிரிகளின் அபாயத்திலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக நாற்பது அடிமைகளில் எஞ்சியவர்களைக் கொலை செய்வது பால்பனின் முதற்கடமையாக இருந்தது. இவரிடம் மனித உயிருக்கு மதிப்பே கிடையாது. இரத்தம் சிந்துவதிலும் தயக்கமே கிடையாது. இவர் ஒழுங்கான ஒற்றர்கள் முறையைக் கையாண்டு மாகாணங்களிலெல்லாம் தன் ஆதிக்கத்தை நிலை நாட்டினூர்; முக்கியமான நிகழ்ச்சிகளை அறிவிக்காத ஒற்றர்களை தூக்கிலிட்டார். இவர் இந்து அலுவலர்களை வேலையில் அமர்த்த மறுத்துவிட்டார்.

பால்பன் தன் ஆட்சிக்காலத் தொடக்கத்தில் மீண்டும் தில்லிக்கு வரும் பாதைகளிலிருந்து மியோஸ்ஸுக்குத் துரத்த வேண்டியிருந்தது. இவர்களை அடக்க இவர் ஓர் அரணைக் கட்டி, பல பாதுகாப்பு நிலையங்களை வரிசையாக நிலைநாட்டினூர். கிளர்ச்சி செய்துகொண்டிருந்த டோ ஆப் பகுதி மானியங்களாகத் துண்டிக்கப்பட்டு பிரபுக்களுக்கு அளிக்கப்பட்டது. இவர்கள் காடுகளைச் சுத்தப்படுத்தி இந்துக் கொள்ளைக்காரர்களை வேரோடு களைந்தெறிந்தார்கள். புதிய அரண்கள் கட்டப்பட்டன. வங்காளத்தோடு செய்திப் போக்குவரத்து நடப்பதைப் பாதுகாப்பதற்காகப் பல ஆப்கானியப் படைகள் நாட்டில் நிறுவப்பட்டிருந்தன.

இச்சமயத்தில் காஜ்னியிலிருந்த மங்கோலியர்களின் பேராபத்து, 1270-ல் லாகூரை மறுமுறை வலுப்படுத்தியதாலும், பால்பனின் ஒன்றுவிட்ட சகோதரரான சுங்கர் (Sungar) பலத்தாலும் தடுக்கப்பட்டது. சுங்கர் விஷமிடப்பட்டுக் கொல்லப்பட்டார். இவர் இறந்த பின் மீண்டும் புதிய கொள்ளைகளைத் தொடங்கினூர்கள். முல்தானின் எல்லையைக் காக்கப் பால்பன் தன் மூத்த மகனை முகம்மதுவை நியமித்த காலம்வரைக்கும் இக்கொள்ளைகள் நீடித்திருந்தன. இவ்விளவரசன் 1279-ல் படையெடுப்பாளர்களை முற்றிலும் விரட்டியடித்தான்.

துக்ரில் (Tughril) என்ற பெயரைக் கொண்ட துருக்கியப் பிரபு ஒருவர் வங்காளத்தில் அரச நிலையை மேற்கொள்ளத் துணிவுற்றுக் கிளர்ச்சி செய்ததை அடக்க 1279-லிருந்து மூன்று ஆண்டுகள் கழிந்தன. கிளர்ச்சி செய்தவரின் குடும்பமே அழிக்கப்பட்டது. மாகாணத் தலைநகரின் வீதிகளில் நிறுவப்பட்டிருந்த கழுமரங்களின் வரிசைகளைப் பார்த்து நாட்டுப்புறப்பகுதி

களெல்லாம் அஞ்சின. வங்காள கவர்னர் பதவி 1338ஆம் ஆண்டு வரை பால்பனின் குடும்பத்தின் கையில் நீடித்திருந்தது. அவ்வாண்டில் கிளர்ச்சி நடந்ததனால் இம் மாகாணம் சுதந்திரம் பெற்றது. பால்பனின் கொடுமை எவ்வளவு கொடியதாகத் தோன்றியபோதிலும் அதன் குறிக்கோளை அது நிறைவேற்றியதுமின்றி ஒழுங்கற்ற அக்காலங்களில் ஓரளவு அமைதியை நிலைநாட்டியது. இவர் இறக்கும் காலத்தில் உயிருக்கும் பொருளுக்கும் இருந்த எல்லாப் பாதுகாப்பும் தொலைந்தது. இராச்சியத்தின் உறுதிநிலையில் யாருக்கும் நம்பிக்கையில்லை.

### தஞ்சம் புகுந்த இளவரசர்கள்

பால்பனின் பிரசித்திபெற்ற அரசவையானது மங்கோலியர் பாழாக்குதலின் கொடுமைகளிலிருந்து தப்பி, தில்லியில் தஞ்சம் புகுந்த பதினைந்து அரசர்களாலும் இளவரசர்களாலும் சிறப்பிக்கப்பட்டிருந்தது. சாலச் சிறந்த அறிஞர்கள் பலர் தஞ்சம் புகுந்த இளவரசர்களுடன் இருந்தனர். இவர்களில் மிகச் சிறந்தவர் அமீர்குச்ரோ (Amir Khusru) ஆவர். மங்கோலியப் படையெடுப்புகள் பெருமளவில் நடைபெறப் போகிறதோ என்று சுல்தான் அஞ்சியதனால் இவர் பல புதிய பகுதிகளைக் கைப்பற்றுவதைத் தடுத்தது. சமயமற்றவர்களோடு செய்த போர் ஒன்றில் இவருடைய அன்பைப் பெற்ற மூத்த மகன் கொலையுண்டான். இத் துயரம் பால்பனின் பலத்த உடம்பை நலிவு செய்தது. 'அறுபது ஆண்டாகத் தில்லியைத் தம் கீழ் வைத்திருந்த வயதடைந்த, விழிப்பாய் இருந்த ஓநாய்' என்று இவரை ஆசிரியர் வருணிக்கிறார். முதிர்ந்த வயதில், 1286-ல் இவர் உயிர் நீத்தார்.

### சுல்தான் கெய்கோபாத்

பால்பன் தகுதியுள்ள வாரிசைத் தனக்குப் பின் விட்டுச் செல்லவில்லை. அந்நாட்களில் உறுதியான வாரிசுரிமைச் சட்டம் எதுவும் இல்லையாதலால், பிரபுக்கள் கரடு முரடான தேர்தலை நடத்தித் தாங்கள் விரும்பியவர்களையே தேர்ந்தெடுத்தார்கள். பால்பனின் பதினெட்டு வயது நிறைந்த பேரன் கெய்கோபாத் (Kaikobad) தன் தகப்பனார் வங்காளத்தில் இருந்தபோதிலும் மாகாணத்தின் கவர்னராக அரியணைக்கு உயர்த்தப்பட்டார். இவர் அவதூறு விளைவிக்கும் பல சிற்றின்பங்களில் மூழ்கித் தன்னையே அவமதித்துக்கொண்டார். குறுகிய ஆட்சிக்குப்பின் பதவியிலிருந்து அகற்றப்பட்டார்.

**அடிமை அரசர்களின் முடிவு**

பால்பன் வமிசம் ஒன்றை நிலைநாட்டுவதற்குக் கொண்டிருந்த ஆசைகள் இங்ஙனம் முறிந்தன. அடிமை அரசர்களின் புயல் மிக்க ஆட்சி முடிவடைந்தது. இவர்களின் வமிச வரலாறுகள் இவர்களைக் கொடிய வெறியர்களென்றோ, பயனற்ற சிற்றின் பங்களை விரும்பியவர்களென்றோதான் வருணிக்கின்றன. போரில் தைரியம், சுறுசுறுப்பாக வேலை செய்தல் போன்ற குணவியல்புகளை வெறியர்கள் பெற்றிருந்தனர். முஸ்லிம் களோடு தொடர்பு கொள்ளும்பொழுது இவர்கள் கரடுமுரடான ஒருவகை நீதி மனப்பான்மையைக் காட்டினார்கள். உருவச் சிலைகளை வணங்கும் இந்துக்களும், பிசாசுகளை வணங்கும் மங்கோலியர்களும் எவ்வித உரிமைகளையும் பெற்றிருக்கவில்லை யென்றும், நரகத்திற்கு அனுப்பப்படும் விதியைத் தவிர இவர் களுக்கு வேறு எந்த விதியும் கிடையாதென்றும் இவ்வரசர்கள் கருதினர். முஸ்லிம் வரலாற்றறிஞர்கள் புனிதப் போர்களைப் பற்றிக் கூறுவதில் மகிழ்ச்சி கொண்டதுமின்றி, ‘இராணுவ அர சாங்கத்திற்கு ஆதரமும் வழியும்’ என்று அழுத்தமாகக் கூறினர். எனினும், இந்துக்களைக் கீழாட்களாக நியமிப்பதற்கும், அலுவலர் களாகவும் வீரர்களாகவும் அமர்த்துவதற்கும், வருமான நிர் வாகத்தில் இவர்களை ஒழுங்காக வேலையில் அமர்த்துவதற்கும் சுல்தானியர்கள் ஆவலாக இருந்தார்களென்று தெளிவாகிறது. அரசியல் பொறுத்தவரை இவர்கள் பஞ்சாப், ஆக்ராவையும் அவுத்தையும் (Oudh) உட்கொண்ட ஐக்கிய மாகாணங்கள், ஆகியவைமீதும், பீஹார், குவாலியர், சிந்து என்ற இப் பெயர் களைக் கொண்ட பகுதிகளின்மீதும், மத்திய இந்தியாவிலும் இராச புதனத்திலும் இருக்கும் சில பகுதிகளின்மீதும் கிட்டத்தட்ட உறுதியான பிடிப்பைக் கொண்டிருந்தனர். பால்பனின் கொடுமை களால் வங்காளம் வெளித்தோற்றத்திற்காவது தில்லி சுல்தானிய ஆதிக்கத்திற்குட்பட்டு, அவ்வப்பொழுது கப்பங்களைச் செலுத்தி வந்தபோதிலும், அது சுதந்திர நாடாகியது. எனினும், இப் பகுதியிலிருந்த இந்து கதேர் (Katehr) என்ற இடம் சுதந்திர மாகவே இருந்தது; ஒரு சில சமயங்களில் இதன்மீது படை யெடுப்புகள் நடந்தன. டோஆப்பில் இந்துக்கள் கொடூர சக்தியைப் பெற்றிருந்தனர். இந்தியாவின் இதர பகுதிகளும், மாளவமும், குஜாரத்தும் தொடர்ந்து இந்து அரசர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தன. இவ் இந்து அரசர்கள் பலவகைப் பட்ட முக்கியத்துவத்தைப் பெற்றிருந்தனர். சுல்தானியர் களுக்கு வந்த துயர்களை இவர்கள் பொருட்படுத்தவில்லை.

## காலவரிசை (Chronology)

கோரின் சுல்தான் முகம்மது (கோரி; சாம் என்பவரின் மகன்; ஷஹாபுத்தின், மொய்ஸுத்தின் என்ற பட்டப்பெயர் களைக் கொண்டவர்)

| | கி.பி. |
|---|---|
| முல்தானையும் உச்சையும் கைப்பற்றுதல் | 1175–6 |
| குஜராத்தின் இராசாவால் தோற்கடிக்கப்படுதல் ... | 1178 |
| லாகூரின் குஸ்ரூமலீக்கைப் பதவியிலிருந்து விலக்குதல் | 1187 |
| முதலாம் தாரேய்ன் போர் ... ... ... | 1191 |
| இரண்டாம் தாரேய்ன் போர் ... ... | 1192 |
| தில்லி, வாரணசி, பீஹார் என்பவற்றை அடக்குதல் | 1193–7 |
| வங்காளத்தைக் கைப்பற்றுதல் ... | 1199–1200 |
| கலஞ்சாரைக் கைப்பற்றியது ... ... | 1203 |
| சுல்தானின் மரணம் ... ... ... | 1206 |

### தில்லி சுல்தானியர்கள் ; அடிமை அரசர்கள்

| | |
|---|---|
| குத்புத்தீன் எய்பெக் அல்லது ஐபக் ... ... | 1206 |
| ஆராம் ஷா ... ... ... | 1210 |
| இல்துத்மிஷ் (அல்தமஷ்) ... ... ... | 1211 |
| மங்கோலியர்களின் படையெடுப்பு ... | 1221, 1222 |
| சிங்கிஷ்கானின் மரணம் ... ... ... | 1227 |
| ருகனுத்தீனும் ரசீயத்தீனும் (ரசீயா) ... ... | 1236 |
| பஹ்ராமும் மற்றவர்களும் ... ... ... | 1240 |
| நாசிருத்தின் மகமுத் ... ... ... | 1246 |
| கியாஸுத்தின் பால்பன் ... ... ... | 1266 |
| மொய்ஸுத்தின் கெய்கோபாத் ... ... | 1286 |
| கெய்கோபாத் கொல்லப்படுதல் ; வமிசத்தின் முடிவு ... | 1290 |

### ஆதாரங்கள்

அக்காலத்துச் சிறந்த ஆதாரமாகவும், பெருமளவு ஒரே ஒரு ஆதாரமாகவும் உள்ளது 'தபகாதி நாசிரீ' என்ற நூலாகும். இது ராவர்டி (லண்டன், 1881) என்பவரால் மொழி பெயர்க் கப்பட்டுள்ளது. இம் மொழிபெயர்ப்புக் கருத்து நிறைந் துள்ளதாக இருப்பினும் தொடர்ச்சியற்றுள்ளது. இந்நூலின் ஒரு பகுதி எலியர், டௌசன் (Ellior & Dowson) என்ப வர்கள் எழுதியுள்ள நூலின் இரண்டாம் பகுதியில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மற்ற பாரசீக ஆதாரங்கள் அப் பகுதியிலும் மூன்றும் பகுதியிலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. தபகாதி அக்பரி (Tabakat-i-Akbari) என்ற நூலின் வாயிலாக தபகாதி நாசிரீயையே ஃபெரிஷ்டா (Ferishta) அநேகமாகப் பகர்ப்புச் செய்துள்ளார். [Raverty's Notes on Afghanistan, (London, 1888)] என்ற இந்நூல் பயனுள்ளதாக இருந்தபோதிலும், பருமனாகவும் ஒழுங்குற வகை செய்யாமலும் உள்ளது. இது எனக்கு மிக்க பயனுள்ள தாக இருக்கிறது.

இதர நூல்கள் : E. Thomas-'Chronicles of the Pathan Kings of Delhi' ; A. B. M. Habibullah, Foundations of Muslim Rule in India, Lahore, 1945.

## 2. தில்லி சுல்தானியத்தின் தொடர்ச்சி; கி.பி. 1290ஆம் ஆண்டிலிருந்து 1340ஆம் ஆண்டுவரை; கில்ஜீ, துக்லக் வமிசங்கள்

**சுல்தான் ஜலாலுத்தீன் கில்ஜீ**

கெய்கோபாத் கொடுமையாகக் கொல்லப்பட்டதனுல் கல்ஜ் (Khalj) அல்லது கில்ஜீ (Khilji) குலத்தைச் சேர்ந்த ஃபிரோஸ் ஷா (Feroz Shah) என்னும் உயர் அதிகாரி ஒருவர் பிரபுக்களின் ஒரு பகுதியினரால் அரியணையில் அமர்த்தப்பட்டார். இவர் ஜலாலுத்தீன் என்ற பட்டப்பெயரைப் புனைந்துகொண்டார். ஜலாலுத்தீன் 'துருக்கியர்களோடு வேறுபட்டிருந்த ஒரு குலத்தைச் சேர்ந்தவர்' என்று பரணி (Barani) கூறுகிருர். ஆனல், ஆப்கானிஸ்தானில் உள்ள கர்ம்ஸீர் (Garmsir) என்ற இடத்தில் பல ஆண்டுகள் தங்கி இருந்தாலும் உண்மையில் கில்ஜீக்களின் குலம் ஒரு துருக்கியக் குலமேயாகும். ஜலாலுத்தீன் அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பொழுது இவர் சுமார் எழுபது வயதடைந்திருந்தார். இன்னுருடைய தேர்தலை மக்கள் விரும்பாததனுல் இவருக்கு தில்லியில் வாழ நெஞ்சுரமில்லை. இதனுல் இவர் கிலோக்ரி (Kilokhri) என்ற கிராமத்தில் இருந்த கெய்க்கோபாதின் அரண்மனையிலேயே வசிக்க நேர்ந்தது. தில்லிக்குச் சிறிது வெளிப்புறத்தில் உள்ள இக்கிராமம் நௌஷார் (Naushar) அல்லது புதிய நகரம் (new town) என்று பின்னல் புலனுகியது. இவர் அரியணையேறிய அடுத்த ஆண்டில் ஒரு கொடிய பஞ்சம் தோன்றியது. இதனுல் பல இந்துக்கள் யமுனையில் மூழ்கி இறந்தனர். இச் சுல்தானின் நிர்வாகம் பெரும்பாலும் தளர்ச்சியுற்றிருந்தது என்று குறை கூறுகிருர்கள். இவருக்குரிய பணிகளை ஆற்றுவதற்கு இவருடைய முதிய வயது இடங்கொடுக்கவில்லைபோலும். வைதீகமற்ற திருத்தொண்டர் ஒருவரை இவர் ஒரு நாள் மிக்க கோபத்தில் கொடுமையாகத் தூக்கிலிட்டார் எனக் குறிப்பிட்டுள்ளது. ஒழுங்கற்ற முறையில் தூக்கிலிட்டது அல்லது கொலை செய்தது இச் சுல்தானின் கொடூர விதிக்குக்

காரணம் என நம்பப்பட்டது. ஒரு இலட்சம் மங்கோலியர்கள் 1292-ல் இந்தியாவின்மீது படையெடுத்து சூனம் (Sunam) என்ற இடத்தை அடைந்தனர். ஆனல், இவர்கள் ஃபிரோஸால் தோற்கடிக்கப்பட்டனர். இவர் தங்களைத் துன்புறுத்தாவிட்டால் பின் வாங்கிக் கொள்வதற்கு இணங்கினர்கள். மங்கோலியரில் பலர் இந்தியாவிலேயே தங்கி வாழ முடிவு செய்தனர்; பெயரளவுக்கு முஸ்லீம்களுமானர்கள். 'புதிய முஸ்லீம்கள்' என வழங்கப்பட்ட இவர்கள் தில்லியில் அருகிலிருந்த கிராமங்களிலும் கிலோக்ரி என்ற இடத்திலும் தங்கியிருந்தனர்.

## ஜலாலுத்தீன் கொல்லப்படுதல்

சுல்தான் சகோதரரின் புதல்வரும், ஜலாலுத்தீனின் மருமகனுமான அலாவுத்தீன் (Alauddin) மாளவத்தின்மீது படையெடுப்பதற்கு அனுமதி பெற்றார். ஆனல், இதற்கப்பால் தக்காணத்தின் இதய பாகம்வரை நுழைந்தார். அரசவைக்கு அறியாமலேயே இவர் இச் செயல்களைப் புரிந்துவந்தார். பீரார் (Berar), காண்டேஷ் (Khantesh) ஆகிய இடங்களின் யாதவ அரசரான இராமச்சந்திரர் (Ramachandra) தலைநகரைத் தாக்கி எல்லிச்பூர் (Ellichpur) (இலிச்பூர்) என்ற இடத்தை ஒப்படைக்கும்படி இவர் வற்புறுத்தினர். அதுவரை கேட்டிராத பெருஞ் செல்வத்தை அலாவுத்தீன் பெற்றார். ஆனலும் இதைத் தன் அரசனேடு பங்கிட்டுக் கொள்ள இவர் விரும்பவில்லை. உண்மையில் இவருடைய வஞ்சக நோக்கங்களை இவருடைய சிற்றப்பரும் மாமனருமான சுல்தானைத் தவிர மற்ற யாவரும் அறிந்திருந்தனர். இறுதியில் சுல்தான் அலகாபாத் (Allahabad) மாவட்டத்தில் உள்ள கரா (Kara) என்ற இடத்தில் தன் சகோதரன் புதல்வரின் ஆதிக்கத்திற்குட்பட வற்புறுத்தப்பட்டார். இவ் வஞ்சகர் சுல்தானின் கையைப் பற்றியவுடன் சைகை காண்பிக்கப்பட்டது. உடனே சுல்தான் கீழே தள்ளப்பட, இவருடைய தலை துண்டிக்கப்பட்டது. இவருடைய தலை ஈட்டியின்மேல் வைக்கப்பட்டுப் பாசறையைச் சுற்றிக் கொண்டு வரப்பட்டது. உரிமையின்றி அரியணை பெற்றவர் தாராளமாகப் பணத்தைச் செலவிட்டுப் படையின் பற்றுதலைப் பெற்றார்; அலாவுத்தீன் சுல்தானனர் (1296, ஜூலை, மாதம்).

## தாகி (Thagi)

ஜலாலுத்தீன் இக் கொடிய விதியைப் பெற்றிருக்க வேண்டியதில்லை. எனினும், இவர் ஆட்சி புரிய அறவே தகுதியற்றவராவர். இவருடைய தளர்ந்த ஒரு செயல், குறிப்பாக மூடச்செயலாக இருந்தது. இவருடைய ஆட்சிக் காலத்தில் ஒரு சமயத்தில்

சுமார் ஆயிரம் தாகியர்கள் தில்லியில் கைது செய்யப்பட்டிருந்தனர். அவர்களில் ஒருவரையும் சுல்தான் தூக்கிலிட அனுமதிக்கவில்லை. இவர்களைப் படகுகளில் வைத்து வங்காளத்தின் தலைநகரான லக்னௌதிக்குக் (Lakhnauti) (கௌர்) (Gaur) கடத்துவதற்கான பித்துமிக்க திட்டம் ஒன்றை விதித்தார். சியாவுத்தின் பரனி (Ziauddin Barani) கூறும் இக் கதை வரலாற்றில் முதல்முதலாகத் தாகியரைக் குறிப்பிடுகிறது என்பதனால் தனிப்பட்ட முக்கியத்துவம் பெற்றுள்ளது.

### சுல்தான் அலாவுத்தீன் கில்ஜீ

'சிறந்த சுல்தானியர்களில் ஒருவர்'[1] என்று கருதப்படுவதற்கு அலாவுத்தீன் தகுதியுள்ளவர் என்று இப்னே படூடா (Ibn Batuta) என்ற ஆப்பிரிக்கச் சுற்றுப் பிரயாணி ஒருவர் பதினான்காம் நூற்றாண்டில் தன் கருத்தை அறியப்படுத்தியுள்ளார். ஓரளவு வியப்புமிக்கதாயிருந்த இத் தீர்ப்பு நியாயமானதே என்பதை அலாவுத்தீன் சக்தி பெறுவதற்குக் கையாண்ட முறையோ சுல்தானாகப் புரிந்த செயல்களின் வரலாறோ ஆதரிக்கவில்லை. சியாவுத்தீன் பரனீ என்ற வரலாற்றறிஞர் இவருடைய ஆட்சிக்கால விவரங்கள் அனைத்தையும் அளிக்கிறார்; இவ்வறிஞர் சுல்தானுடைய தந்திரமிக்க கொடுமையையும், வெறுப்பூட்டும் தீய குணத்தையும் வருணிக்கிறார். 'ஃபேர்வாவை (Pharaoh) விட மிக அதிக அளவில் குற்றமற்ற பலரின் குருதியைச் சிந்தியுள்ளார். இதிலிருக்கும் தத்துவ போதனையைச் சுட்டிக்காட்டி, இவரும் தன் புரவலரின் குருதியைச் சிந்தியதற்காகப் பழிவாங்கப்பட்டார் என்று நமக்கு எடுத்துரைக்கிறார். தன் அரியணைக்கு ஆபத்து விளைவிப்பவர்கள் என்று தான் கருதிய ஒவ்வொருவரையும் இவர் இரக்கமின்றிக் கொன்று தம் தந்தை சகோதரரின்கீழ்ப் பணியாற்றிய மூன்று பிரபுக்களைத் தவிர மற்றெல்லோரையும் வேரோடு களைந்தெறிந்தார். குற்றமற்ற பெண்களும் குழந்தைகளும்கூட விடப்படவில்லை; இது ஒரு புதிய கொடூரச் செயலாகும். இக்காலம்வரை ஆண்கள் செய்த குற்றங்களுக்கு எவரும் மனைவி மக்களைத் துன்புறுத்தவில்லை. சிறந்த சுல்தானியர்களில் ஒருவரால் தொடங்கப்பட்ட இக் கொடூரமான வழக்கம் பிற்காலத்தில் அடிக்கடி பின்பற்றப்பட்டு வந்தது.

### அரசியல் நிகழ்ச்சிகள்

குஜராத்தைத் தாக்குவதற்கு 1297-ல் ஒரு படை அனுப்பப்பட்டது. பகேலா (Bhagela) இராசபுத்திர அரசரின் இராச்சி

[1] இவர் தன்னைச் சிறந்த சுல்தான்களுள் ஒருவராக்கிக் கொண்டார். (Defermery, tome iii, பக்கம் 184).

யங்கள் தாக்கப்பட்டுக் கைப்பற்றப்பட்டன; துறைமுகங்களி லிருந்து ஏராளமான கொள்ளைப் பொருள்கள் பிடிக்கப்பட்டன. கமலாதேவியும் (Kamala Devi), காபூர் (Kabur) என்ற இளம் பேடியும் அலாவுத்தீனுக்காகக் கைப்பற்றப்பட்டனர்.

ராந்தம்போர் (Ranthambhor) நீண்ட முற்றுகைக்குப் பின் 1306-ல் கைப்பற்றப்பட்டது. இராஜபுத்திர காப்பாளரான ஹமீர் தேவா (Hamir Deva) பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். இவருடைய குடும்பம் ஜௌஹர் (Jauhar) என்ற தற்கொலைக்கு இரையாகியது. சித்தூரின் (Chitore) மீதும் படையெடுத்தார்கள்; அதை 1303-ல் கைப்பற்றி 1311ஆம் ஆண்டுவரை தங்கள் கையில் வைத்திருந்தனர். போரின் முடிவில் நடந்த நிகழ்ச்சிகளையும், இராஜபுத்திரப் பெண்கள் தங்களையே அழித்துக் கொண்டதையும் பற்றி டாடு (Tod) என்பவர் விரிவாகவும் சிறப்பாகவும் வருணிக் கிறார். 1305-ல் நடைபெற்ற போரில் மாளவாவின் அரசர் மரணமடைந்ததன் விளைவாக உஜ்ஜெய்ன் (Ujjain), மாண்டு (Mandu,) தார் (Dhar,) சந்தேரி (Chanderi) ஆகிய இடங்களெல் லாம் இணைக்கப்பட்டன.

### தெற்குப் பகுதிகளின்மீது நடந்த படையெடுப்புகள்

சுல்தானின் தனிப் பற்றுக்குரியவரான காபூர் இவ் வெற்றி களைப் பின் தொடர்ந்து இலாபமிக்க பல கொள்ளைகளைத் தக்கா ணத்தில் நடத்தினர். இவர் தேவகிரியின் (Devagiri) யாதவ (Yadava) அரசரான இராமச்சந்திரதேவனை அடக்கினர். தில்லிக்குக் கொண்டுபோகப்பட்ட இவர் கப்பங்கட்டும் கீழ்ப்படுபவராக தக்காணத்துக்குத் திருப்பி அனுப்பப்பட்டார். 1310ஆம் ஆண்டின் தொடக்கத்தில் வாரங்கலின் (Warrangal) காகதீய (Kakatiya) அரசரான முதலாம் பிரதாப்ருத்ர தேவா (Prataprudra Deva) தன் தலைநகரில் முற்றுகையிடப் பட்டுக் கொள்ளையாளர்களுக்கு ஏராளமான பணத்தைக் கொடுக்க வேண்டியிருந்தது. அவ்வாண்டின் பிற்பகுதியில் ஹோய் சாலாவின் (Hoysalas) அரசரான மூன்றும் பல்லாளர் (Ballalar III) முன் திடீரென்று தோன்றிய காபூர் இவ்வரசனை ஆச்சரியத்துக் குட்படுத்தினர்; 1311, பிப்ரவரி மாதத்தில் பல்லாளர் சரணடைந்ததும் காபூர் பெருங் கொள்ளைப் பொருளைப் பெற்றார். இவர் தெற்கில் வெகு தூரத்தில் மற்றும் ஒரு கொள்ளையை நடத் தினர். காபூர் திரும்புவதற்குள் மாபாரின் (Mabar) தலைநகரம் கொள்ளையிடப்பட்டது. எல்லையற்ற கொள்ளைப் பொருளைத் திரட்டிக்கொண்டு 1311-ல் அக்டோபர் மாதத்தில் இவர் தில்லி வந்து சேர்ந்தார். 1312-ல் இராமச்சந்திர தேவா இறந்ததும்

கிளர்ச்சி செய்து இவருடைய மகனை விரட்டியடித்து தேவ கிரியைத் தம் பகுதிகளோடு சேர்த்தார்கள்.

**மங்கோலியர் நடத்திய கொள்ளைகள்**

அக்காலத்தில் மங்கோலியர் பஞ்சாபில் (the Punjab) பல முறை நுழைந்தனர்; 1296-லும், 1297-லும் செய்த திடீர் நுழைவுகள் கொள்ளைகளாகும்; குத்லுக் காஜாவின் (Qutlugh Khwaja) தலைமையின் கீழ் 1299-ல் செய்த திடீர் நுழைவு படையெடுப்பாக இருக்கவேண்டித் திட்டமிடப்பட்டதாகும். இவரைத் தில்லிக்கு வெளியில் சுல்தானின் படை தாக்கி விரட்டியடித்தது. இவ் வெற்றி அலாவுத்தீனுக்கு மிக்க திருப்தி அளித்தது; ஏனெனில், இவ் வெற்றியைப் பெறுவதில் இவரின் மிகப் பிரசித்திபெற்ற தளபதியான சபர்கான் (Zabar Khan) உயிரிழந்தார். அவ் வெல்லைப் புறங்களுக்குக் காவலாளியாக இருந்த காஸி மாலிக் (Ghazi Malik—பின்னாட்களில் கியாஸுத்தீன் துக்லக் என வழங் கப்பட்டுவந்தவர்) பின்னாட்களில் பொதுவாக மங்கோலியர்கள் நுழைவதைத் தடுத்தார். தில்லியின் அருகில் குடியிருந்த புதிய முஸ்லீம்கள் என்று வழங்கிவந்த மத மாற்றம் செய்யப்பட்ட மங்கோலியர்களைப் படுகொலை செய்து உள்நாட்டுப் பாதுகாப் புப் பெற முடிந்தது.

**நிர்வாக நடவடிக்கைகள்**

நிர்வாக நடவடிக்கைகள் இவ்வரசியல் வெற்றிகளை உறுதிப் படுத்தின. மங்கோலியர்கள் யமுனைப்பகுதியில் நுழைதல், வாரங்கலில் உண்டான பேரழிவு, இராஜபுதனத்தில் நடந்த கடுமையான படையெடுப்பு ஆகியவைகளெல்லாம் நிரந்தரப் படை பலத்தை அதிகரிக்கச் செய்தன. பல உள்நாட்டுக் கிளர்ச்சிகள் உள்நாட்டுப் பாதுகாப்புப் பிரச்சினையை எழுப்பி விட்டன. தலைநகரில் இருந்த நிரந்தரப்படை மிகத் தீவிரமாக அதிகரிக்கப்பட்டது. விலைவாசிகள் உயர்ந்திருந்த அக்காலத்தில் இவர்களைக் காக்க மத்திய பகுதிகளில் விலைவாசிகளை சுல்தான் கட்டுப்படுத்தினர்; வரிகளைப் பண்டமாக அளிக்கும்படி ஆணை யிட்டார்; ஏராளமான தானியங்களைச் சேகரித்து வைத்தார். பற்றுக்குறை காலத்திலும், தலைநகரில் இருந்த கடைகளில் செயற்கை மலிவு நிலை ஏற்படுத்திவைப்பதில் இவருடைய நடவடிக்கைகள் வெற்றிபெற்றன. ஆனால், இந் நிலைமையை உண் டாக்க அடக்குமுறையைக் கையாளவேண்டியதிருந்தது. பிரபுக் கள் நடத்திய ஆடம்பர விருந்துகளுக்கு இவர் தடையிட்டார். ஏனெனில், சூழ்ச்சிகளுக்கு இவைகள் போர்வையாக இருந்தன. ஒற்றர்கள் முறை மேலும் அதிகரிக்கப்பட்டு உறுதியாக்கப்பட்டது.

மேலும், இவர் வருங்காலத்துக் கிளர்ச்சியாளர்களிடமிருந்து கிளர்ச்சி செய்வதற்கான எல்லாச் சாதனங்களையும் பறித்துக் கொண்டார். 'சொந்த உரிமையாலோ, தானமாகவோ, அறக் கொடையாகவோ பெற்றிருந்த எக் கிராமமும் பேனுவினுல் எழுதப்பட்ட ஆணையால் கருவூலத்தின்கீழ்க் கொண்டுவரப்பட வேண்டும்....வாழ்வுக்குத் தேவையான வசதிகளைத் தேடுவதில் குடிமக்கள் தங்களையே மறந்து மூழ்கியிருந்ததனுல் கிளர்ச்சி என்ற சொல்லை எவரும் சொல்ல முடியவில்லை'. அதேபோல இந்துக் களை அடக்குவதற்கும், அதிருப்தியையும் கிளர்ச்சியையும் தூண்டுகிற செல்வத்தையும் சொத்தையும் இவர்களிடமிருந்து பறிப்பதற்கும் சட்டங்கள் விதிக்கப்பட்டன. பயிர் செய்யப்பட்ட நிலத்தை அரசாங்கம் அளந்து, அதிலிருந்த மொத்த உற்பத்தி யிலிருந்து, ஆதியிலிருந்து பழக்கத்திலிருந்த முறைகளின்படி ஆறில் ஒரு பங்கை எடுக்காது, 'அரைப்பாகத்தை எடுத்துக் கொண்டது'. எந்த இந்துவும் தலைதூக்கி நடக்க முடியவில்லை. இவர்களின் வீடுகளில் வெள்ளியோ அல்லது தங்கமோ, அத்தியா வசியமான பொருள்களுக்கு மேற்பட்ட பொருளோ காணப்பட வில்லை.

## கட்டடங்களும் இலக்கியமும்

அலாவுத்தீன் கட்டடங்களைக் கட்டுவதில் மிக்க விருப்பம் காட்டினுர். இவர் பல சிறந்த கட்டடங்களையும் கட்டி முடித்தார். தற்பொழுது ஷாபூர் (Shahpur) என்னும் கிராமம் இருக்கும் இடத்தில் சீறி (Siri) என்ற புதிய தில்லி ஒன்றைக் கட்டினுர். ஆனுல், இவர் அவ்விடத்தில் கட்டிய கட்டடங்களெல்லாவற்றையும் ஷெர்ஷா இடித்துப் பாழாக்கினுர். இவைகள் அடியோடு மறைந்து விட்டன. குதுப் வகையைச் சேர்ந்த புனிதக் கட்டடங்களுக்கு இவர் ஏராளமான அபிவிருத்திகளைச் செய்தார். உன்னதமான குதுப்மினுரை (Gutub Minar) விடச் சிறப்பு மிக்கதாயிருக்கும்படி ஒரு மாபெருங்கோபுரத்தை (மினுர்) இவர் கட்ட ஆரம்பித்தார். பூர்த்தியடையாத அடித்தறி இன்றைக்கும் நின்று கொண்டிருக் கிறது. புதிய கட்டடத்தில் இரத்தத்தைத் தெளிப்பது ஒரு முக்கியச் சடங்காகும் என்பதை நினைவிற்கொண்டு இவர் இதற்காக ஆட்டுத் தாடிகளைப்போலத் தாடிகளை முகத்தில் வளர்த்த ஆயிரக்கணக்கான முகலாயர்களைப் பலியிட்டார்.

இளவயதில் இவர் படிப்பின்றி இருந்தார். ஆனுலும், அரியணை யேறிய பின் ஓரளவு பாரசீக மொழியில் படிக்கக் கற்றுக்கொண் டார். கல்வியில் இவர் தம் தனிக் கருத்தைச் செலுத்தவில்லை யாயினும், இவருடைய அரசவையில் கற்றறிந்தவர்கள் பலர் கூடி

யிருந்தனர். இவர்களுள் மிக்க புகழ் பெற்றவர் அமீர் குஸ்ரோ என்பவராவர். இவர் கவிதை, வசனம் ஆகியவற்றை ஏராளமாக எழுதியவராவர்; பலருடைய நன்மதிப்பையும் பெற்றவர்.

## அலாவுத்தீனின் மரணம்

இக்கொடிய அரசர் தம் இறுதிக்காலத்தில் பல துன்பங்களுக்குள்ளானார். 'வெற்றி இவரைப் பின் தொடரவில்லை'. சமயமற்ற தேசியக் கொள்கையைப் பின்பற்றுவதில் மத குருமார்கள் ஆதிக்கத்திற்கு இவர் மதிப்புக் கொடுக்காதது இதற்குக் காரணமாயிருக்கக் கூடும் என்று பரணி நம்புகிறார். இயற்கையாகவே அமைந்திருந்த இவருடைய பலாத்கார குணம் அடக்க முடியாத நிலையை யடைந்தது. மாலிக்காபூர்மீது சுல்தான் கொண்டிருந்த குற்றம் நிறைந்த பற்றுனது சுல்தானின் எல்லாச் செயல்கள்மீதும் செல்வாக்குப் பெற்றிருந்தது. இவருடைய உடல் நலிந்து கொண்டேயிருந்தது; மகோதர நோய் வளர்ந்துகொண்டிருந்தது. இவர் 1316, ஜனவரி மாதத்தில் உயிர் நீத்தார். 'இவருடைய இந் நோய் இவரது மரணத்துக்குக் காரணமாக அமைகின்ற வகையில் இகழ்ச்சிக்குரிய மாலிக்காபூர் உதவி செய்தார் என்று சிலர் கருதுகின்றனர்.'

எல்லா அதிகாரங்களையும் தம் கையிலேயே வைத்துக் கொண்டு மாலிக்காபூர் சுல்தானின் இளஞ்சிறு மகனை அரியணையில் ஏற்றினர். அரச குடும்பத்தினரில் பலரைச் சிறையிடவும், குருடாக்கவும், கொல்லவும் செய்தார். ஆனால், வஞ்சகம் நிறைந்த இவருடைய ஆட்சி முப்பத்தைந்து நாட்களே நீடித்திருந்தது. அக்காலம் கழிந்தபின் இவரும் இவருடைய தோழர்களும் அடிமைக் காவலாளர்களால் கொல்லப்பட்டனர்.

## சுல்தான் குத்புத்தீன் முபாரக் (Kutbuddin Mubarak)

அலாவுத்தீனின் மகனை குத்புத்தீன் அல்லது முபாரக் கான் (Mubarak Khan) அழிவிலிருந்து தப்பினர்; இவர் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டு அரியணையில் ஏற்றப்பட்டார். இளைஞரான இவ்வரசர் அறவே தீயவராக இருந்தார். இவர் ஹசன் (Hasan) என்ற இளைஞனின்மீது அளவு கடந்த பற்றுக் கொண்டிருந்தார். இவ்வரசன் முதலில் சாதியிலிருந்து விலக்கப்பட்ட பர்வாரியாவன் (Parwari). சுல்தான் அவருக்கு குஸ்ருகான் (Khusru Khan) என்ற பட்டத்தை அளித்துப் பிரபுவாக்கினர். 'இவருடைய ஆட்சி நான்கு ஆண்டு. நான்கு மாதம் நீடித்திருந்தது. அக்காலத்தில் குடிப்பதிலும், இசைகேட்பதிலும், சிற்றின்ப நுகர்ச்சியிலும், பலருக்கு அன்பளிப்பதிலும், தன் இச்சைகளைப்

பூர்த்தி செய்வதிலும் காலத்தைக் கழித்தாரே தவிர மற்ற எந்த விவகாரத்திலும் அரசர் கருத்துச் செலுத்தவில்லை.' நற்செயலாக மங்கோலியர்கள் தங்கள் தாக்குதலைச் செய்யவில்லை. அவ்விதம் அவர்கள் செய்திருந்தால் அவர்களை எதிர்க்க யாருமில்லை. முபாரக் இரு இராணுவ வெற்றிகளைப் பெற்றார். இவருடைய அதிகாரிகள் இவர் அரசாங்கம் குஜராத்தின்மீது கொண்டிருந்த பிடிப்பை இன்னும் அதிகப்படுத்தினர். மேலும், இவரே தேவ கிரிக்கு எதிராகத் தன் படைக்குத் தானே தலைமைதாங்கித் தக்கணத்திற்குள் நுழைந்தார். தேவகிரியின் அரசரை ஹர்பாலத் தேவர் (Harbala Dev) அவ்விடத்தில் கிளர்ச்சி செய்தார். இந்து அரசர் அதிக எதிர்ப்பை அளிக்க முடியவில்லை. அதனால் அவர்கள் உயிருடன் இருக்கும் பொழுதே படையெடுப்பாளர்கள் அவர் களுடைய தோலை உரித்தார்கள் (1318). வெற்றியுடன் தக்கணத் திலிருந்து திரும்பியதும் சுல்தான் முன்னைவிட இன்னும் அதி மோசமாக நடக்க ஆரம்பித்தார்.

இவர் கோபங்கொண்டதுமன்றிக் கீழ்த்தர உணர்ச்சி களையும் வெளிப்படுத்திக்கொண்டிருந்தார்; கொடூரங்களைச் செய்தார்; பழிவாங்கினார்; இரக்கமின்றி நடந்துகொண்டார்; குற்ற மற்றவர்களைக் கொன்றார்; தம் தோழர்களோடும் ஏவலாளர் களோடும் பேசும் பொழுது கேவலமான சொற்களையும் வெறுப் பூட்டும் வார்த்தைகளையும் பயன்படுத்தினர்; ஒழுங்குப் பண்புக்கு இவர் எவ்வித மதிப்பும் கொடுக்கவில்லை. சிறுதர அணிமணிகளை அணிந்துகொண்டு பெண்களைப் போல உடுத்திக்கொண்டு கூடி யிருந்தவர்களின் முன் தோன்றினர். இன்னும் பல தீய செயல்களை யும் புரிந்தார்.

மிக இழிவடைந்த இவரை இறுதியில் இவருடைய செல்வச் சிறுவனை குஸ்ரூகான் தன் கீழ்த்தர சகாக்களுடைய உதவியைக் கொண்டு கொன்றுவிட்டான். 'அலாவுத்தீன் வம்சாவளியின் அடிப்படை அறவே அழிக்கப்பட்டது.'

சட்டமுறையின்றிப் பதவி ஏறியவர் முஸ்லீம்களுக்கு எதிராக இந்துக்களையே ஆதரித்தார். 'தில்லி மீண்டும் இந்துக்களின் ஆட்சிக்குட்பட்டது' என்று கூறப்பட்டது. இழிவாகப் பிறந்த வெற்றியாளர் பல நாள் நீடித்திருக்கவில்லை. சட்ட முறையின்றிப் பதவி ஏறியவர் சில மாதங்களுக்குப்பின் முறியடிக்கப்பட்டு பஞ்சாப்பில் உள்ள திபால்பூர் என்ற இடத்தின் கவர்னரான காஸீமாலிக் என்ற துருக்கிய பிரபுவால் கொல்லப்பட்டார். எல்லாம் குழப்பத்தில் மூழ்கின. அரச குடும்பத்தில் எந்த ஆண் மகனும் உயிருடன் விட்டுவைக்கப்படவில்லை.

**கியாஸுத்தீன் துக்லக் ஷா** (Ghiyas-ud-din Tughluq Shah)

இங்ஙனம் கட்டுப்பாடின்றி இருந்த பிரபுக்கள் ஒழுங்கற்ற இந் நிலைமையை சமாளிப்பதற்கு ஒரு தலைவன் இருக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்து காஸீமாலிக் என்பவரைக் காலியாக இருந்த சிம்மாசனத்துக்குத் தேர்ந்தெடுத்தனர்; இவர் கியாஸுத்தீன் துக்லக் என்ற பட்டப்பெயரைப் புனைந்துகொண்டார். இவரைத் துக்லக் ஷா என்றும் அழைப்பர் (கி. பி. 1321). இவர் தகப்பனர் ஒரு துருக்கியராவர்; பால்பனுக்கு அடிமையாக இருந்தவர். இவருடைய தாய் ஒரு ஜாட் (Jat) பெண்ணுவாள்; இந்தியாவில் பிறந்தவள். இவருடைய சகாக்கள் இவர்மீது கொண்டிருந்த நம்பிக்கை தகுந்ததுதான் என்பதை இவருடைய போக்கு எடுத்துக் காட்டியது. இவர் உள்நாட்டு நிர்வாகத்தில் போதுமளவுக்கு ஒழுங்கை மீண்டும் ஏற்படுத்தினர். மங்கோலியர்களின் உள்நுழைவால் எப்பொழுதும் அழுத்திக்கொண்டிருந்த ஆபத்திலிருந்து பாதுகாக்க நடவடிக்கைகளை எடுத்தார்.

இவர் தம் மகன் ஜுனகானை (Junakhan) தக்கணத்துக்கு அனுப்பி வைத்தார். அங்கே அலாவுத்தீன் கைப்பற்றிய பகுதிகளெல்லாம் கீழ்ப்படிவதற்கு மறுத்துவிட்டன. இளவரசர் தற்போது நைஸாமின் (Nizam) இராச்சியப் பகுதிகளுக்குக் கிழக்கில் உள்ள வாரங்கலை (Warrangal) அடைந்து அரணை முற்றுகையிட்டார். கோட்டையின் உறுதியான மண்சுவர்கள் இவரை எதிர்த்தன; கொள்ளை நோய் பரவியது; தன் அதிகாரிகளிடையில் நடந்த சூழ்ச்சிகளின் விளைவாக இவருடைய ஆட்கள் இவரை விட்டோடினர். இதனல் இவர் தில்லிக்குத் திரும்பும் கட்டாயம் ஏற்பட்டது. ஆனலும், இரண்டாம் படையெடுப்பு வெற்றி பெற்றது. இதன் விளைவாக பீடாரும் (Bidar) வாரங்கலும் கைப்பற்றப்பட்டன. அச் சமயத்தில் வாரங்கல் தன் சுதந்திரத்தை மீண்டும் பெற்று, ஓர் இந்து அரசரின் ஆட்சிக்குப்பட்டிருந்தது. இதற்கிடையில் வாரிசுரிமைப் பிரச்சினை ஒன்றை முடிவு செய்வதற்காக வரவழைக்கப்பட்ட சுல்தான் வங்காளத்தை நோக்கிச் சென்று டாக்காவின் (Dacca) அருகிலுள்ள சுனர்கோன் (Sunargaon) என்னும் இடத்திற்கு வந்து சேர்ந்தார். அங்கிருந்து வீட்டுக்குத் திரும்பும்பொழுது திர்ஹுத் (Tirhut) என்ற இடத்தைக் கைப்பற்றினர். அம் மாகாணத்தின் சிம்மாசனத்திற்கு உரிமை கொண்டாடிய ஒருவனைத் தில்லிக்குக் கைதியாகக் கொண்டுவந்த போதிலும் இவர் வங்காளத்தைச் சுதந்திர நாடாகவே விட்டு வந்தார்.

## துக்லக் ஷா கொல்லப்படுதல்

அப்பொழுது சுல்தானியத்தின் தலைநகரம் இவருடைய மகன் ஜுனு அல்லது முகம்மதுவின் பொறுப்பில் இருந்தது. அம் மகன் தெற்கிலிருந்து திரும்பி வந்திருந்தார். யமுனை நதிக்கரையில் தன் மகன் சுல்தானுக்காகத் தாற்காலிக வரவேற்புப் பந்தல் அல்லது மகிழ்விக்கும் வீடு ஒன்று கட்டவேண்டுமென்று இவர் விரும்பினர். பின்னளில் காஜாகான் என வழங்கப்பட்டவரும் பொதுப் பணித் துறையின் தலைவரும், ஜுனகானின் நம்பிக்கையைப் பெற்றிருந்தவருமான அகமது (Ahmad) என்பவரிடத்தில் இப் பொறுப்பை ஜுனகான் ஒப்படைத்திருந்தார். தம் தகப்பனரின் முன் அலங்கரிக்கப்பட்ட யானைகளின் அணிவகுப்பு ஒன்று நடத்த ஜுனகான் அனுமதி கேட்டு அதைப் பெற்றார். தகப்பனர் மத்தியானத் தொழுகைக்குப் புதிய கட்டடத்தில் தங்கியிருந்தார். ஊர்வலத்தில் நடந்து செல்லும்போது யானைகள் மரக்கட்டடத்தின் மேல் மோதிக்கொள்ளும்படி சதியாளர் செய்தனர். அதன்படி கட்டடம் சுல்தானின்மீதும், அவரோடு இருந்த அவருடைய இளைய மகன் முகமதுமீதும் விழுந்தது. புதைந்து கிடந்த தகப்பனரையும் சகோதரனையும் தோண்டி எடுப்பவர்போல் பாவனை செய்துகொண்டு கடப்பாரைகளையும் மண்வெட்டிகளையும் கொண்டுவரக் கட்டளையிட்டார்; ஆனால், எந்த நடவடிக்கையும் வெகு நேரம் வரை வேண்டுமென்றே எடுக்கக்கூடாதபடி தடுத்தார். தம் மகனின் உடலின்மேல் சுல்தான் குனிந்துகொண்டிருக்கும் நிலையில் காட்சியளித்தார். அப்பொழுதும் அவர் மூச்சு விட்டுக்கொண்டிருந்தார் என்று சிலர் உறுதியாகக் கூறுவர். அந் நிலையில் அவர் இருந்திருப்பாரேயாயினும் அவர் வெகு விரைவில் கொல்லப்பட்டார் (கி.பி. 1325). இரவு சூழ்ந்த பின் அவருடைய உடலை எடுத்துச்சென்று துக்லுகாபாத் (Tughluqabad) என்னும் இடத்தில் அவர் தானே தனக்காகத் தயார் செய்திருந்த பெரிய சமாதியில் அடக்கம் செய்தனர். துக்லுகாபாத் என்பது இவர் தில்லியின் அருகில் கட்டிய மிகப் பெரிய கோட்டையாகும்.[1]

## முகம்மது பின் துக்லக் சிம்மாசனமேறுதல், பிப்ரவரி மாதம் 1325

அலாவுத்தீன் கில்ஜீ செய்ததுபோலவே தகப்பனைக் கொன்ற இவரும் தன் குற்றத்தின் பலன்களைத் திரட்டிக்கொண்டு எவ்வித

[1] இப்னே படுடா குறிப்பிட்டிருக்கும் உண்மைகள் உறுதியானவையாகும். இவற்றை இச் சுற்றுப் பிரயாணிகளுக்கு ருக்நூத்தீன் என்னும் துறவி ஒருவர் விவரித்திருக்கிறர். மிக்க கவனத்துடன் திட்டமிடப்பட்ட எதிர்பாரா நிகழ்ச்சியின் பொழுது இத் துறவி அங்கே இருந்தார். ஜுனகான் இத்தொழிலைச் செய்திருக்கமாட்டார் என்று சொல்வதற்கு எக் காரணமும் இல்லை.

எதிர்ப்புமில்லாமல் சிம்மாசனம் ஏறினர்.[1] அதில் இவர் இருபத்தாறு ஆண்டுகளாக வீற்றிருந்து கொடுங்கோலாட்சி நடத்திய பிறகு தன் படுக்கையில் உயிர்நீத்தார். அலாவுத்தீனைப் போலவே இவரும் ஏராளமான நன்கொடைகளை அளித்துப் பிறருடைய நன்னம்பிக்கையைப்பெற்றர். நெருங்க முடியாத சுவர்களைக் கொண்டிருந்த துக்லுகாபாதில் தன் தகப்பனர் சேமித்து வைத்திருந்த பொற்பொக்கிஷத்தை வரையறையின்றி வாரி இறைத்தார். துக்லக் ஷா பெருங்களஞ்சியம் ஒன்றைக் கட்டி உருக்கி வார்த்த பொற்கட்டிகளை இதில் நிரப்பினர் என்று கூறப்படுகிறது.

## இப்னே படூடா (Ibn Batuta); சுல்தானின் குணவியல்பு

முகம்மது பின் (மகன்) துக்லக் என்று வரலாற்றில் தோன்றுகிற துக்லக் வமிசத்தின் இரண்டாம் அரசனைப்பற்றி நாம் பெற்றுள்ள அறிவு வழக்கத்துக்கு மாறுகப் பல குறிப்புகளைக் கொண்டிருக்கிறது. ஏனெனில், சாலச் சிறந்த இந்திய வரலாற்றறிஞரின் (ஸீயாவுத்தின் பரனீ) நிகழ்ச்சி உரையுடன் இப்னே படூடா என்ற ஆப்ரிக்க சுற்றுப்பயணி ஒருவரின் குறிப்புகளையும் நாம் பெற்றிருக்கிரேம். இவர் பல ஆண்டுகள் சுல்தானின் அரசவையில் இருந்ததுமின்றி அவரிடம் பணியுமாற்றினர். 1347, ஏப்ரல் மாதத்தில் ஓய்வு பெறுவதற்கு நிறைந்த பணித்துறையிலிருந்து இவர் விலகிக்கொண்டார். இவருடைய இந்திய அனுபவக் குறிப்புகளுடன் நாம் தொடர்புகொண்டிருக்கிரேம். இவற்றின் ஒவ்வொரு பக்கத்திலும் உண்மையின் முத்திரையே படிந்திருக்கிறது. முகம்மது பின் துக்லக்கைப்பற்றி இவர் எழுதியுள்ள குறிப்புகளெல்லாம் தானே நேர்முகமாகப் பெற்ற அறிவினை அடிப்படையாகக் கொண்டிருந்தனவாகும்.[2] பரன் (Baran) என்ற இடத்தைச் சேர்ந்த ஸியாவுத்தீன் என்பவரும் (புலந்தஷார்-Bulandshahr) சமகாலத்து அதிகாரி ஆவர். இவர் முகம்மது பின் துக்லக்கின் நெருங்கிய உறவினரும் வாரிசுமான ஃபிரோஸ் துக்ல்க்கின் ஆட்சிக் காலத்தில் எழுதினர். வெளிநாட்டிலிருந்து வந்து கூர்ந்து கவனிப்பவருடைய பாரபட்சமற்ற தன்மையை இவர் பெற்றிராவிடினும், இவருடைய நிகழ்ச்சியுரை பல தெளிவான விவரங்களைக் கொண்டிருக்கிறது.

[1] சுல்தான் துக்லக் கொல்லப்பட்டபொழுது அவருடைய மகன் முகம்மது கிளர்ச்சி அல்லது விரோதி தோற்றத்தில் எவ்வித எதிர்ப்புமில்லாமல் இராச்சியத்தின் பேரரசரானர்.

[2] இவ்வரசனின் துணிகரச் செயல்களைப் பொறுத்தவரை அவற்றில் பலவற்றை நான் அவருடைய இராச்சியத்தில் வசிக்கும்பொழுது நேரடியாக அறிந்திருந்தேன்.

முகம்மது பின் துக்லக் புரிந்த குற்றங்களைப்பற்றிக் குறிப்பிடுவதற்குப் பேனு கூச்சப்பட்டாலும், இவர் தன்னுடைய ஆட்சிக் காலத்தில் சொல்லமுடியாத பல கடுந்துயரங்களை விளைத்திருந்தாலும், இரவலர்க்கான விடுதிகளையும் இவர் கட்டினுர். கற்றறிந்த முஸ்லீம்களுக்கு இவர் தாராளமாகப் பொருள் அளித்தது நிகரற்றதாயிருந்தது. 'மனிதர்களில் மிக்க தாழ்மையானவர் என்றும், தீவிரமாகத் தற்பெருமை செய்துகொள்பவர் என்றும் இவரை உண்மையாக வருணிக்க முடியும்.' இவருடைய புதிர் நிறைந்த குணத்தைப்பற்றி எல்பின்ஸ்டன் அளித்திருக்கிற சுருக்கம் மேற்கோளாக அளிக்கப்படுவதற்குத் தகுதிபெற்றிருக்கிறது.

'இவர் அக்காலத்திற்குரிய இளவரசர்களுள் பேசுவதிலும் கலையிலும் மிக்க திறன்வாய்ந்தவர் என்று எல்லோரும் ஒப்புக் கொள்ளுகிருர்கள். அராபிய மொழியிலும் பாரசீக மொழியிலும் இவர் எழுதிய கடிதங்கள், ஆளுவதை நிறுத்திக்கொண்ட நீண்ட காலத்துக்குப் பின்பும் அவைகளின் நேர்த்தியான குணத்திற்காகப் புகழப்பட்டன. இவருடைய நினைவாற்றல் எல்லை கடந்திருந்தது. கிரேக்க அளவை நூலிலும் (Logic), மெய் விளக்கத்துறையிலும் இவர் மிக்க அறிவுத்திறன் பெற்றிருந்தார்; மேலும், கணித சாஸ்திரத்திலும் விஞ்ஞானத்திலும் பற்றுக் கொண்டிருந்தார். புதிய வியாதிகளின் அறிகுறிகளை உற்றுக் கவனிப்பதற்கு, இவரே நோயாளிகளுக்கு சிகிச்சையளித்தார்; தொழுகைகளில் ஒழுங்காக இருந்தார்; சாராயம் அருந்துவதில்லை; தம் சொந்த வாழ்க்கையில் சமயத்தைச் சேர்ந்த ஆன்மீகக் கட்டளைகளுக்கெல்லாம் கீழ்ப்படிந்தார். இவர் போரில் தன் வீரத்துக்கும் தனிப்பட்ட செயல்களுக்கும் பிரசித்திபெற்றிருந்தார். இதனுல் இவருடைய சம காலத்தவர்கள் இவரை அக்காலத்தின் அற்புதம் என்று நியாயமுற மதிப்பிட்டனர்.'

எனினும், தலைசிறந்த குணவியல்புகளும் கலைத்திறன்களும் இவருக்குப் பயன்படவில்லை. இவற்றுடன் இயல்புக்கு மாருக முடிவு செய்யும் தன்மையும் இருந்தது. இதற்குக் காரணம் இவர் சர்வாதிகாரப் போதையில் மூழ்கியிருந்ததாகும் என்று கொண்டாலும், இவர் இங்ஙனம் நடந்துகொண்டது இவர் ஓரளவு மூளைக் கோளாற்ருல் பாதிக்கப்படாமல் இருந்திருப்பாரா என்ற சந்தேகத்தை நம் மனத்தில் எழுப்புகிறது.

மேலும், தான் ஒரு நேர்மையான மனிதன் என்றும், தான் செய்த கொடுமைகளெல்லாம் நியாயத் தத்துவங்களின்படியும் முஸ்லீம் சட்டப்படியுமே செய்யப்பட்டன என்றும் தன்னைப்பற்றிக் கருதிக்கொண்டார். இதுபோலவே பின்னுட்களில் ஜஹாங்கீரும்

(Jahangir) தன்னைப்பற்றி நினைத்துக்கொண்டார். சுல்தானுடைய மனச்சாட்சி தன்னைத் துன்புறுத்தியது என்று கூறுவதற்குக் காரணம் எதுவும் இல்லை. அதற்கு மாறாக, இவர் தன்னுடைய செயல் குற்றமற்றது என்பதை நிலைநாட்டித் தான் மேற்கொண்ட போக்கினை இறுதிவரை தொடர்ந்து மேற்கொள்வது என்ற முடிவினை உறுதியுடன் கூறினார். 'கீழ்ப்படியாக் குற்றம் எவ்வளவு எளிதாக இருப்பினும், அதற்கு நான் மரண தண்டனை அளிப்பேன். இவ்விதம் நான் சாகும்வரையில் செய்வேன்; அல்லது மக்கள் நேர்மையாக நடக்கும்வரையிலும், கிளர்ச்சி செய்வதையும் கீழ்ப்படியாததையும் கைவிடும்வரையிலும் செய்வேன். நான் குடிமக்களுக்கு ஏராளமான செல்வத்தை அளித்திருக்கிறேன். ஆனால், அவர்கள் என்னிடத்தில் நட்புள்ளவர்களாகவும் பற்றுறுதியுள்ளவர்களாகவும் நடந்துகொள்ளவில்லை' என்று சுல்தான் கூறினார். இங்ஙனம் இவர் தன் கொடிய நோக்கத்திலிருந்து மாறாமல் ஆட்சி புரிந்துகொண்டிருந்தார். இவருடைய மனிதத் தன்மையற்ற கொடுங்கோலாட்சி இறுதியில் தில்லியின் பேரரசைச் சிதறடித்தது.

நிகழ்ச்சிகளின் ஒழுங்கைப்பற்றிய ஆதாரங்கள் வேறுபடுகின்றன என்றும், இதனால் இவ்வாட்சிக் காலத்தின் கால நிர்ணயம் ஓரளவுக்கு உறுதியற்றிருக்கிறது என்றும் நாம் கருத்தில் கொண்டோமானால், சுல்தானுடைய ஆட்சியில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகளை இப்பொழுது குறிப்பிடலாம்.

**முந்திய கிளர்ச்சிகள்**

பேரரசை ஆதிக்கத்துக்குட்படுத்துவதற்கும், நிர்வாகத்தை ஒழுங்குபடுத்துவதற்கும் இவ்வாட்சிக் காலத்தில் சில நடவடிக்கைகள் முதன் முதலாக எடுக்கப்பட்டன. முகம்மதுவின் பிடி பேரரசின்மீது 1328ஆம் ஆண்டின் முடிவில் முழுமையாக இருந்தது. இரண்டு கிளர்ச்சிகள் நடந்தன. ஒரு கிளர்ச்சி இவருடைய ஒன்றுவிட்ட சகோதரரான பாஹுத்தீன் கர்ஷாஸ்ப் (Baha-ud-din Garshasp) என்பவரால் தொடங்கப்பட்டது (1327). மற்றொன்று முல்தான், சிந்து ஆகியவற்றின் கவர்னரான கிச்லூகான் (Kishlu Khan) என்பவரால் தொடங்கப்பட்டது (1328). முதற் கிளர்ச்சியை காஜா ஜஹான் என்பவரும், இரண்டாவதை சுல்தானும் அடக்கினார்கள். கர்ஷாஸ்பின் தோல்வி அவருக்குத் தஞ்சம் அளித்த கம்பிலியின் (Kampili) அரசரையும் அழித்தது. வாரங்கல், மாபார், துவார சமுத்ரம் (Dwara Samudra) என்ற பகுதிகள் கைப்பற்றப்பட்டன. அதே சமயத்தில் மதுரை இராச்சியத்திலும் முஸ்லீம்களின் ஆதிக்கம்

நிறுவப்பட்டது. இதனல் தக்கணத்தில் சுதந்திரமாக விடப் பட்டிருந்த பகுதி மூன்ரும் வீரபல்லாளரின் தலைமையின்கீழ் இருந்த ஹோய்சாளர்களுடைய நாடு ஒன்றேயாகும்.

### நிர்வாக நடவடிக்கைகள்

எல்லா மாகாணங்களின் வருமானப் பத்திரங்களையெல்லாம் சரிவரத் தொகுக்கும்படி கட்டளை இடப்பட்டது. மத்தியப் பகுதியில் இருந்தவை போலவே எல்லாவற்றையும் அமைக்க முயற்சி எடுக்கப்பட்டது. இம் மாறுதலோடு அமைதியற்ற டோயெப்பின் செல்வர்களிடமிருந்து வசூலித்த தீர்வை அதிகரிக்கப்பட்டது. இச் செயல் அலாவுத்தீனுடைய செயலின் எதிரொலி போலிருந்தது. தீர்வை பத்து மடங்காகவும், இருபது மடங்காகவும் உயர்த்தப்பட்டது என்று பரனீ உற்சாகம் ததும்பக் கூறுகிருர்; அதிகாரிகள் தீர்வைகளை வலிந்து பெற்ற முறைகளைப் பற்றியும், உழவர்களின் கிளர்ச்சியைப்பற்றியும், அவர்களை அடக்குவதற்குக் கையாண்ட வன்முறையைப்பற்றியும் உள்ளம் புண்படுமாறு வருணிக்கிருர். இப் பகுதி தன் சொந்த ஊராகிய தால், அதில் தனிப்பட்ட கருத்தைச் செலுத்தி விவரங்களை மிகைப்படுத்திக் கூறியிருக்கக்கூடும். எனினும், அங்கே பெருந்துயரம் குடிகொண்டிருந்தது என்பதும், அத் துயர் அப் பகுதியில் உண்டான பஞ்சத்தால் மேலும் அதிகமாகியது என் பதும் உண்மையேயாகும்.

### தில்லியிலிருந்து வெளியேற்றம்

தலைநகரம் 1327-ல் தில்லியிலிருந்து தௌலதாபாத்துக்கு (Daulatabad) மாற்றப்பட்டது. அதனல் அரசவையும், இராணுவ மும், அலுவலர்களும், அன்னரின் வேலையாட்களும், அவர்களை யெல்லாம் நம்பியிருந்த வணிகர்களும் மாற்றப்பட்டனர். இங்ஙனம் நடந்த மாற்றம் அதிருப்திக்கும் துன்பத்திற்கும் மற்றெரு காரண மாக இருந்தது. ஆனல், அது தண்டிப்பதற்காகச் செய்யப்பட்ட தென்றும், முகம்மதுவின் வெடுவெடுப்பின் உற்பத்தி அது வென்றும், மிகக் கடுமையாகச் செய்து முடிக்கப்பட்டதென்றும் கூறுவது சரியன்று. விந்தியமலைக்கு இப்பாலும் பரந்திருந்த பேரரசின் இராணுவ நிர்வாகப் பிரச்சினையை முடிப்பதற்கு இராணுவக் கண்ணேட்டத்தில் சிறந்த இடத்தில் அமைந்திருந்த தௌலதாபாத் என்னும் நகரம் தலைநகராகத் தேர்ந்தெடுக்கப் பட்டது. தெற்கில் முஸ்லீம்களின் எண்ணிக்கையும் செல்வாக்கும் அதிகரிக்க ஒருவேளை இம் மாற்றம் செய்யப்பட்டிருக்கக்கூடும். உறுப்புக் குறைந்தவர்களும் தில்லியிலிருந்து மிகக் கொடுமையாக வெளியேற்றப்பட்டனர் என்று பரனீ கூறுகிருர். ஆனல்,

நாணயச்சாலை ஒன்றினை தில்லியில் நீடித்துவைத்து அந் நகரில் கட்டடங்களைக் கட்டிக்கொண்டேயிருந்தது, இரண்டு ஆண்டுக்குப் பின் சுல்தான் அவ்விடத்தில் தன் இராணுவத்தை வலுப்படுத்தியது ஆகியவையெல்லாம் பிரபுக்களும் அலுவலர்களும்தாம் மாற்றப்பட்டனர் என்பதை அறிவிக்கின்றன.

### கட்டாயச் செலாவணி

1330-ல் ஒப்புச் செலாவணி ஒன்று கொண்டுவரப்பட்டது. இது ஒரு விந்தையான பரிசோதனையாகும். போதிய வெள்ளி கிடைக்காததனாலோ, போர்ச் செலவினங்களுக்காகவோ இம் முறையைக் கையாண்டிருந்திருக்கக்கூடுமாயினும், அதன் நோக்கம் தெளிவாக இல்லை. நிதி நெருக்கடி இதற்குக் காரணமாக இருந்திருக்க முடியாது. மூன்று ஆண்டுகளாகப் பித்தளை அல்லது செப்புக் காசுகள் வெள்ளி நாணயங்களைப்போலவே முத்திரையிடப்பட்டு வெளியிடப்பட்டன. ஆனால், சீனாவில் வெளியிடப்பட்ட தாள்நாணயத்தை மேற்பார்வை செய்ததைப்போல இங்கே செய்யாததால் எங்கும் மோசடி ஏற்பட்டது:

'இவ்வாணையை வெளியிட்டதனால் ஒவ்வோர் இந்துவின் வீடும் நாணயச்சாலையாக மாறியது. பல மாகாணங்களிலிருந்த இந்துக்கள் ஆயிரக்கணக்கில் செப்புக் காசுகளை அச்சிட்டனர். இவற்றைக்கொண்டு அவர்கள் கொடுக்கவேண்டிய கப்பத்தைச் செலுத்தினர்; குதிரைகளையும் ஆயுதங்களையும் சிறந்த பல பொருள்களையும் விலைக்கு வாங்கினர்.' அதனால் வெளியிடப்படுவது நிறுத்தப்பட்டது. மீண்டும் தங்க நாணயங்களையோ, வெள்ளி நாணயங்களையோ ஏற்கெனவே அச்சிடப்பட்ட செப்பு நாணயங்களுக்கு ஈடாகக் கொடுத்தனர். அதனால் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது.

### மங்கோலியர்கள்

மங்கோலியரின் சகதாய்ப் (Chagatai) பிரிவின் கானான தர்மாஷிரீன் (Tarmashirin) என்பவர் 1328–9-ல் இந்தியாவுக்குள் நுழைந்தார். குரேசானின்மீது படையெடுக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தபொழுது 1326-ல் இவர் முறியடிக்கப்பட்டார். கொள்ளையடிக்கும் நோக்கத்துடன் பிறகு இவர் தில்லிக்கு விரைந்தார்போலும். இப்னே படூடா இக் கொள்ளையைப்பற்றி ஒன்றும் குறிப்பிடாமல் மௌனம் சாதித்தார். 1332-ல் இவர் கானைச் சந்தித்தபொழுது சுல்தானுக்கும் கானுக்கும் நட்பு இருந்ததாகக் கூறுவதும், இந் நிகழ்ச்சி வெறும் கொள்ளையே என்று கருதச் சார்பாயிருக்கிறது.

## வடமேற்குப் பகுதிகளின்மீது படையெடுப்புகள்

ஒரு சமயம் முகம்மது ஒழுக்கங் கெட்ட பாரசீக அரசன் அபூ சைட் (Abu Said) என்பவன்மீது படையெடுக்கத் திட்ட மிட்டார். அப் பாரசீக அரசனுக்கு எதிராக இவரின் பாதுகாப் பாளர் கலகம் செய்தார். அதனுடன் 1329-32ஆம் ஆண்டுகளில் மும்முறை கொரேசானின் கவர்னர் பதவியில் மாறுதல் ஏற்பட்ட தனுல் இவருக்குத் தொல்லைகள் ஏற்பட்டன. சுல்தான் 1331–2-ல் எகிப்து நாட்டிடம் உதவி கோரி ஒரு தூதுவரை அனுப்பிவைத் தார். இவர் டிரான்சோக்சியானுவிலிருந்த (Transoxiana) தர்மா ஷிரீனேடும் நட்புத் தொடர்புகொண்டிருந்தார். பெருஞ்செலவில் ஒரு படையைத் திரட்டிவைத்திருந்தாலும் இவர் படையெடுக்க வில்லை. தர்மாஷிரீன் பதவியிலிருந்து விலக்கப்பட்டது இதற்குக் காரணமாக இருக்கக்கூடும்.

இரண்டாம் படையெடுப்பு—சீனுவின்மீது ஃபெரிஷ்டாவின் படையெடுப்பு—குமான் பிரதேசத்திருந்த மலைநாடுகளின்மீது நிகழ்ந்தது. இக் கராச்சில் (Qarachil) படையெடுப்பில் பல மலை நாட்டுத் தலைவர்கள் சரணடைந்தனர் என்று இப்னே படூடா கூறுகிருர். இருந்தபோதிலும் ஆட்சேதம் அதிகமாக ஏற்பட்ட தால், இப் படையெடுப்பு பெருந்தோல்வியில் முடிந்தது. ஆனுல், மீண்டும் 1337-ல் நாகர்கோட் (Nagarkot) (காங்கரா—Kangra) கைப்பற்றப்பட்டது.

முகம்மதின் பேரரசு தனக்கு முன்னிருந்த முஸ்லீம் அரசர் களின் பேரரசைக் காட்டிலும் பெரிதாக இருந்தது. ஆனுல், 1337-ல் இப் பேரரசு சிதற ஆரம்பித்தது. முன்னுல் நடந்த கிளர்ச்சிகள் மிகக் கடுமையாக அடக்கப்பட்டன. பின்னுல் சுல் தானின் கொடுங்கோலாட்சி பொறுக்கமுடியாததாக இருந்தது. இவரிடமிருந்த கைவளங்கள் குறைந்துகொண்டே வந்தன. அதனுல் கிளர்ச்சியை அடக்குவதற்கோ, பேரரசு சிதறு வதைத் தடுப்பதற்கோ இவரால் முடியவில்லை. முகம்மதுவின் விருப்பத்தைப் பெற்றிருந்த வெளிநாட்டுத் துணிகரச் செயலாளர் களுக்கு உள்நாட்டுப் பிரபுக்கள் பகைமை காட்டினர்கள். சுல்தான், முஸ்லீம் சமய அறிஞர்களின் அறிவுரையைப் பின்பற்றவில்லை. அவர்கள் பெற்றிருந்த தனிச் சிறப்பையும் தகர்த்தார். இதனுல், அவர்கள் இவருக்கு எதிர்ப்பு அளித்தனர். இவையெல்லாம் பேரரசின் நலிவை விரைவுபடுத்தின.

1334–5-ல் மாபார் அல்லது சோழமண்டலம் (Coromandal) கிளர்ச்சி செய்து தில்லியின் வல்லாட்சியிலிருந்து விடுதலை பெற்றது. இது ஒரு திருப்புமுனையாகும். சுல்தானியத்தின் நலிவும் வீழ்ச்சியும் அவ்வாண்டிலிருந்து ஆரம்பமாயின என்று கொள்ளலாம். இதைப்பற்றி நாம் அடுத்த அதிகாரத்தில் ஆராயலாம்.

## 3. தில்லி சுல்தானியத்தின் சீர்குலைவும் வீழ்ச்சியும்; கி.பி. 1340–1526; துக்ளக் வமிசம் முடிவடைதல்; தைமூர், சையதுகள், லோடி வமிசம்; இந்தியரின் வாழ்க்கையில் இஸ்லாம்.

**தெற்கில் கிளர்ச்சி**

மாபாரின் கவர்னரான ஹசன் ஷா (Ahsan Shah) 1334-ல் கிளர்ந்தெழுந்து தன் பெயரைக்கொண்ட நாணயங்களை அச்சிட்டார். சுல்தான் 1335-ல் தில்லியிலிருந்து தெற்கு நோக்கிச் சென்று பீடார் வழியாக வாரங்கலை அடைந்தார். அங்கே அவரும் அவருடைய படையில் பெரும்பாலோரும் கொள்ளை நோயால் பாதிக்கப்பட்டனர்; அதனால் அவர்கள் முன்னேறுவதைக் கைவிட்டனர். மாபார் மீட்கப்படவில்லை.

திரும்பிவருங்கால், ஒரு கடுமையான வறுமையின் விளைவுகளை முகம்மது பின் துக்ளக் மாளவத்திலும் தில்லியின் சுற்றுப் புறங்களிலும் காண நேர்ந்தது. பஞ்ச நிவாரணத் திட்டம் ஒன்று அமலில் கொண்டுவரப்பட்டது. அதன்படி விவசாயத் தொழில்களுக்காகப் பணவுதவி அளிக்கப்பட்டது. ஆனாலும், அப்பணத்தைப் பயன்படுத்திக்கொள்ள முடியாத அளவுக்கு மக்கள் மிகக் களைப்புற்றிருந்தனர். பிறகு தில்லிவாசிகள் அவுத்திலிருந்து (Oudh) தாற்காலிக நகரம் ஒன்றுக்கு மாற்றப்பட்டனர்; போதிய அளவு வசதிகளும் அவர்களுக்கு அளிக்கப்பட்டன.

வாரங்கலின் (Warangal) பேரழிவும், சுல்தானின் மரணத்தைப்பற்றிய வதந்திகளும் பல கலகங்களை விளைவித்தன. இவற்றை லாகூரில் ஹுலாகு (Hulagu) என்ற மங்கோலியனும், தௌலதாபாத்தில் (Daulatabad) மலீக் ஹோஷாங் (Malik Hoshang)

என்பவரும், ஹான்சி (Hansi) என்ற இடத்தில் ஹசன் ஷாவின் மகனும் நடத்தினர். அவைகள் அடக்கப்பட்டபோதிலும் வங்காளத்தில் கிளர்ச்சி நீடித்திருந்தது.

**வங்காளம் கிளர்ந்தெழுதல்**

பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து வங்காளத்தை கவர்னர்கள் ஆண்டுவந்தனர். தில்லியின் ஆதிக்கத்தை அவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும், அரசவைக்கு ஏறக்குறைய ஒழுங்கான கப்பத்தைச் செலுத்தவேண்டும் என்றும் அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டது. துக்ரில் கான் (Tughril Khan) சுதந்திரம் பெறுவதற்காகச் செய்த முயற்சியை பால்பன் (Balban) எங்ஙனம் ஒடுக்கினார் என்பதை நாம் ஏற்கெனவே கண்டிருக்கிறோம். துக்ரில் கானும் அவருடைய துணைவர்களும் ஒடுக்கப்பட்ட பிறகு, பால்பனின் இரண்டாம் மகனும், சுல்தான் கெய்கோபாத்தின் (Sultan Qaiqabad) தந்தையும், அவருக்குப்பின் பால்பனின் குடும்பத்தினரும் வங்காளத்து கவர்னர் பதவியை மேற்கொண்டிருந்தனர். இரு சகோதரர்களும் தலைமைப் பதவிக்காக நடத்திய போரில் துக்ளக் ஷா தலையிட நேர்ந்தது என்பதை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளோம். துக்ளக் ஷா வங்காளத்துக்குள் நுழைந்து பகதூர் ஷா (Bahadur Shah) என்பவரைத் தில்லிக்குக் கடத்திச் சென்றார். உரிமை கொண்டாடியவரின் போலி உரிமைகள் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. முகம்மது பின் துக்ளக் கைதியை விடுதலை செய்து வங்காளத்துக்கு அனுப்பி வைத்தார். ஆனால், கைதி மீண்டும் கிளர்ந்தெழுந்து தோல்வியுற்றார்; கொல்லவும்பட்டார். அவருடைய தோலை நிரப்பி, அதைப் பேரரசு முழுவதும் சுற்றிக் கொண்டுவந்தனர்.

கிழக்கு வங்காளத்தில் ஃபக்ருத்தீன் (Fakhr-ud-din) அல்லது ஃபக்ரா (Fakhra) என்பவர் *1337–8*-ல் (ஹி.பி. *739*) கிளர்ச்சியைத் துவக்கினார். அக் கிளர்ச்சி இறுதியில் மாகாணம் முழுவதும் பரவியது; மூன்று அரசர்களின்கீழ் அம் மாகாணம் தில்லி சுல்தானியத்திடமிருந்து விடுதலை பெற்றிருந்தது. முகம்மது பின் துக்ளக் தன் கவனத்தை வேறோர் இடத்தில் செலுத்தவேண்டியிருந்ததால், அவரது அதிகாரத்தை வங்காளத்தின்மீது உறுதிப்படுத்த முடியவில்லை. அவர் அம் மாகாணத்தை அதன் வழியே போக விட்டுவிட்டார். அக்பர் அதை மீண்டும் கைப்பற்றும் வரையில் அது தனது சுதந்திரத்தை நீடித்துப் பெற்றிருந்தது. அது சில வேளைகளில் தில்லி சுல்தான் அல்லது பாதுஷாவின் உயர்நிலையைப் பெயரளவுக்கு ஒப்புக்கொண்டிருந்தது; ஆனாலும், அது அங்ஙனம் செய்தது வங்காள அரசர்களின் உறுதியான சுதந்திர நிலையைப் பாதிக்கவில்லை.

**பின்னுல் நடந்த கிளர்ச்சிகள்**

முகம்மது பின் துக்ளக்கின் பேரிழவான ஆட்சியின் பிற் பகுதியில் நடந்த கிளர்ச்சிகளைப்பற்றியும், அவற்றை அடக்குவதற் காக அவர் செய்த முயற்சிகள் வெற்றி பெற்றதைப்பற்றியும் வரலாற்றறிஞர்கள் போதுமான விவரங்களைத் தருகின்றனர். 'மக்கள் கிளர்ந்தெழுவதற்கும், அரசர் அவர்களைத் தண்டிப்பதற் கும் சலிப்பதில்லை.' முல்தானைச் சேர்ந்த மாலிக் சாஹு லோடி (Malik Shahu Lodi) என்பவர் நடத்திய கிளர்ச்சி அக் கிளர்ச்சிகளில் ஒன்ருகும். கிளர்ச்சியாளர் ஆப்கானிஸ்தானுக்கு ஓட நேர்ந்தது. இதைப்பற்றி சர் டபிள்யூ. ஹேய்க் (Sir W. Haig) என்பவர் பின்வருமாறு கூறுகிருர்: 'சாஹு செய்த கிளர்ச்சியின் விளைவாக இந்தியாவிலிருந்த ஆப்கானியர்களின்மீது தடைகள் விதிக்கப்பட்டன. அத் தடைகளின் கொடுமைகள்தாம் குஜராத் திலும் தக்காணத்திலும் பின்னுல் நடந்த கிளர்ச்சிகளுக்கு ஓரளவு காரணமாக இருந்தன.' அதிக விலை கொடுக்கத் தயாராக இருந்தவர்களுக்கு மாகாணங்களைக் குத்தகைக்கு விடும் முறையை அடிக்கடி பயன்படுத்தியதும் பெருந் துன்பத்தை விளைவித்தது. ஏனெனில், அம் முறை மக்களை அதிகக் கொடுமைகளுக்குள்ளாக் கியது; மேலும், குத்தகையாளர்கள் தங்களுடைய ஒப்பந்தத்தை நிறைவேற்ற முடியவில்லை; இதனுல் அவர்களும் கிளர்ந் தெழுந்தனர்.

வடக்கில் *1342*ஆம் ஆண்டுக்குள் அமைதி மீண்டும் நிறுவப் பட்டது. ஆனுலும், அதை உறுதிப்படுத்த முகம்மது, வெளியாரின் ஆதரவையும் அநுமதியையும் பெற விரும்பினுர். அவற்றை அவர் எகிப்தின் (Egypt) காலிஃபாவினிடமிருந்து (Khalif) பெற விரும்பினுர், காலிஃபாவின் தூதுவர் அதிகாரத்துக்குரிய அங்கி யோடும் ஆணையோடும் வந்து இறங்கியபொழுது மிக மரியாதை யுடன் வரவேற்கப்பட்டார். முகம்மது பின் துக்ளக் தான் காலி ஃபாவின் பிரதிநிதியே என்று கூறிக்கொண்டார்; தன் பெயரை நாணயங்களிலிருந்து எடுத்துவிட்டு அதற்குப் பதிலாக இஸ்லாமின் ஆதிக்கம் பெற்ற அரசனின் பெயரை அச்சிட்டார். முகம்மதுவின் வாரிசான ஃபிரோஸ் துக்ளக்கும் எகிப்தின் காலிஃபாவிடமிருந்து பதவிச் சின்னங்களைப் பெற்ருர். இவ் விருதைப்பற்றி ஃபிரோஸும் அவரது ஒன்றுவிட்ட சகோதர ரைப்போலவே மிக்க பெருமை கொண்டிருந்தார்.

தக்காணத்தின் கவர்னர், குத்லுக் கான் (Qutlugh Khan) என் பவர் *1344–5*-ல் அடக்கப்பட்டார். அம் மாகாணம் மாளவத்துடன் நான்கு வருவாய்ப் பிரிவுகளாக ஒழுங்குற அமைக்கப்பட்டது.

வருவாயை அதிகப்படுத்துவதற்காக இவை புதிய அதிகாரிகளின் பொறுப்பில் விடப்பட்டிருந்தன. அவையெல்லாம் அமைதியற்ற நிலையை மேலும் வலுப்படுத்தின. 'அதிருப்தியின் விதை' என்று அவர்கள்மீது அல்லது நூறு பேர் கொண்ட அலுவலர்கள் குழுவின்மீது நடத்திய தாக்குதல்கள் குஜராத்தில் அமைதியற்ற நிலையை ஏற்படுத்துவதற்கு உதவி செய்தன.

கவர்ச்சியற்ற இவ் வரலாறு கொடுமைகள் நிறைந்ததாகவும் இருக்கிறது; இதை ஆராயத் தேவையில்லை. சுல்தான் தக்காணத்தில் தௌலதாபாத்தைத் தவிர மற்றெல்லாவற்றையும் இழந்து விட்டார். அதை மீட்பதற்குப் பல முயற்சிகளைச் செய்தார். அம் முயற்சிகளெல்லாம் வீணாயின. அதற்குப்பின் சுல்தான் குஜராத்தின் அமைதியற்ற நிலையை அடக்குவதற்கு அம் மாகாணத்துக்குள் நுழைந்தார். அந்த இடத்தில் சுல்தான் மூன்று மழைப் பருவ காலங்களைக் கழித்தார். தேகநலனற்றிருந்தபோதிலும், சுல்தான் 1350ஆம் ஆண்டின் இறுதியில் குஜராத்திலிருந்து வெளிவந்து கிளர்ந்தெழுந்த ஒருவனைப் பின்தொடர்ந்து இந்து நதியைக் கடந்து சிந்துக்குள் நுழைந்தார். நதிக்கரையில் வெகு தூரத்துக்கப்பால் கீழ்சிந்துவின் தலைநகரான தத்தா (தட்டா) என்னும் இடத்தில் இருக்கும்பொழுதே சுல்தானுடைய வியாதி முதிர்ந்து கடுஞ்சுரமாக மாறியது. அதனால் அவர் 1351, மார்ச்சில் இறந்தார். இவ்விதம் 'சுல்தான் தன்னுடைய மக்களிடமிருந்தும் மக்கள் தங்களுடைய சுல்தானிடமிருந்தும் விடுதலை பெற்றனர்.' இவ்வரக்கன் இருபத்தாறு ஆண்டுகளாகப் பதவியில் இருந்துகொண்டு பிறகு அவனுடைய படுக்கையிலேயே அமைதியாக உயிர்நீத்தது வியக்கத்தக்கதாகும். அவருடைய கொடிய ஆட்சி கணக்கிட முடியாத துயரை இழைத்தது. அரசியலைப் பொறுத்தவரை பெரிதும் முயன்று பெறப்பட்ட தில்லி சுல்தானியத்தின் ஆதிக்கத்தை அவர் அழித்தார்.

### விஜயநகர, பாமனி இராச்சியங்கள் (Vijayanagar Bahmani Kingdoms)

சில ஆண்டுகளுக்கு முன்னால் முஸ்லீம்களின் ஆட்சி தெற்கில் பரவுவதற்குத் தடையிடப்பட்டிருந்தது. கிருஷ்ணா (Krishna) நதிக்குத் தெற்கில் இருக்கும் விஜயநகரின் ராயர்கள் இராச்சியத்தின் துரிதமான எழுச்சி இராச்சியப் பகுதியை இந்துக்கள் கைக்கு மாறும்படி செய்தது. அந் நகரம் 1336-ல் தோற்றுவிக்கப்பட்டது என்று கூறுவர். அப் புதிய இராச்சியம் பத்து ஆண்டுகளுக்குப் பின் ஒரு முக்கிய அரசாகியது.

சுல்தானின் அலுவலரான ஹசன் அல்லது சஃபர் கான் (Zafar Khan) என்பவர் 1347-ல் கிளர்ந்தெழுந்தார். அவர் ஓர் ஆப்கானியர் அல்லது துருக்கியராக இருக்கக்கூடும். அக் கிளர்ச்சி குல்பர்கா (Gulbarga) அல்லது அசனுபாத் (Ahsanabad) என்ற நகரத்தைத் தலைநகராகக்கொண்டிருந்த மாபெரும் பாமனி இராச்சியத்தை நிறுவியது.

பாமனி, விஜயநகர இராச்சியங்கள் அல்லது பேரரசுகளின் வரலாற்றை ஐந்தாம் மடலில் முற்றிலும் குறிப்பிட்டிருப்பதால், அதை இங்கே குறிப்பிடவேண்டியதில்லை.

**சுல்தானது அரசவை**

சுல்தான் முகம்மது பின் துக்ளக்கின் அரசவையிலிருந்த ஏற்பாடுகளும் சடங்கு முறைகளும் அக்பரின் அரசவையிலும், அவருக்குப் பின் வந்தவர்களுடைய அரசவையிலும் இருந்தவைகளிலிருந்து வேறுபட்டிருந்தன. பிந்திக் குறிப்பிட்ட ஏற்பாடுகளும் சடங்குகளும் பாரசீக ஏற்பாடுகளையும் சடங்குகளையும் அடிப்படையாகக்கொண்டிருந்தன. அவற்றைப்பற்றி அபுல் பாஸலும், பல ஐரோப்பியப் பயணிகளும் குறிப்பிட்டிருக்கின்றனர். சுல்தானது அரசவையின் நடவடிக்கைகளிலெல்லாம் சமயச் சடங்குகள் பெரிதும் இடம் பெற்றிருந்தன. ஒவ்வொரு சடங்கும் 'இறைவனின் பெயரால்' என்ற வழிபாட்டு மொழியுடன் துவக்கப் பட்டது. சமய சித்தாந்திகள் முற்பட்ட தன்மை பெற்றனர். ஆனால், மொகலாயர்கள் பின்பற்றிய சடங்குகள் சமயச் சார்பற்றிருந்தன. அம் முறைகளின்படி அரச குடும்பத்தினரும், அவர்களுக்குப்பின் அதிகாரிகளும் அவரவரது மரபுக்கேற்றவாறு முற்பட்ட தன்மை பெற்றனர்.

**தூக்கு தண்டனைகள்**

ஒன்றன்பின் ஒன்ருக அமைந்திருந்த வாயில்களின் வழியாக சுல்தானுடைய அரண்மனையின் உட்பகுதிக்குச் செல்லலாம். முதல் வாயிலின் வெளிப்புறத்தில் இருந்த மேடையில் தூக்கு தண்டனை நிறைவேற்றுவோர் அமர்ந்திருந்தனர். குற்றவாளிகளை வாயிலுக்கு வெளியில் தூக்கிலிட்டனர். அங்கே அவர்களது உடல்கள் யாவரும் பார்க்கும்படி மூன்று நாட்கள்வரை திறந்து வைக்கப்பட்டிருந்தன.

**தனிப்பட்டோர் வந்து காண்பதற்குரிய அரசிருக்கை (Audience-hall)**

இரண்டாவது வாயிலின் வழியாகப் பெரிய மண்டபத்திற்குள் செல்லலாம். இது பொதுமக்களுக்கான மண்டபமாகும்;

'வாயிலில் இருக்கும் எழுத்தாளர்கள்' மூன்றும் வாயிலில் அமர்ந்திருந்தனர். சுல்தானுடைய அனுமதியின்றி எவரும் இதற்குள் நுழைய முடியாது. இதற்குள்தான் சுல்தான் ஆயிரக்கால் மண்டபத்தில் (Hall of Thousand Columns) வீற்றிருந்து பேட்டியளித்தார். மரத்தால் செய்யப்பட்ட தூண்கள் மெருகு எண்ணெயும் பூசப்பட்டிருந்தன. மேல்தளம் பலகைகளால் மூடப்பட்டிருந்தது. பிற்பகல் தொழுகைக்குப்பின் ஒழுங்குறப் பேட்டிகள் அளிக்கப்பட்டன. ஆனால், சிற்சில வேளைகளில் காலையிலும் பேட்டிகள் அளிக்கப்பட்டன. இரண்டு பெரிய புனித நாட்களின் பொழுது (ஈதுல் ஃபிதர் — Id-ul fitr; ஈதுல் குர்பான்—Id-ulkurban) தனிப்பட்ட சடங்குகள் பின்பற்றப்பட்டன.

### பலரோடும் கூடியிருந்து உணவு அருந்துதல்

முகலாய அரசர் தனது அந்தரங்க அறைகளில் தனியாக உணவு அருந்துவர். முகம்மது பின் துக்ளக் முறையிட்டு மண்டபத்திலேயே உணவு அருந்தினார். அவரது உணவை இருபது பிரமுகர்களுடன் அவர் கலந்து உண்டார். அவர் ஒரு நாளுக்கு இருமுறை, ஒன்று நண்பகலுக்கு முந்தியும், மற்றொன்று பிற்பகலிலும் பொது விருந்துகளை அளித்தார். அவற்றில் முன்னுரிமை ஒழுங்குமுறை அரசவையில் இருந்ததுபோலவே பின்பற்றப்பட்டது. நீதிபதிகளும் சமய சித்தாந்திகளும் முதலிடத்தைப் பெற்றனர். உணவுப் பட்டியலில் அப்பம் போன்ற ரொட்டிகளும், அரிசியும், இறைச்சி வறுவல்களும், கோழி இறைச்சியும், கொந்திய இறைச்சியும் இடம்பெற்றன.[1]

### ஃபிரோஸ் ஷா அரியணையேறுதல், 1351

சுல்தானது மரணம் நதிக்கரையில் தங்கியிருந்த படையைத் தலைவனற்றதாகவும் உறுதியற்றதாகவும் செய்தது. பெண்களும், குழந்தைகளும், பணியாட்களும் போர்ப்படைக்கு இடையூறாக இருந்தனர். வெகு தூரத்திலிருந்த தாய்நாட்டுக்குத் திரும்ப ஆரம்பித்தபொழுது, அப்படை சிந்துவைச் சேர்ந்த கிளர்ச்சியாளர்களாலும் மங்கோலியக் கொள்ளைக்காரர்களாலும் தாக்குண்டது. பெருமிதப் பொருட்சேதம் ஏற்பட்டது. குழந்தைகளும் பெண்களும் மடிந்தனர். மரணமடைந்த அரசனுடைய ஒன்றுவிட்ட

[1] இப்னே படூடா (Ibn Batuta) மொழிபெயர்ப்பு: டிஃப்ரெமெரியும் சாங்குனெட்டியும் (Defremery and Sanguinetti) tome iii. பக்கங்கள் 217-42. முழு விவரமும் படிப்பதற்குத் தகுதியுள்ளதாகும். இதை எலியட், டௌசன் ஆகியவர்கள் எழுதிய நூலில் மொழிபெயர்க்கவில்லை. சில குறிப்புகளை முழு ஆதாரம் பெற்றிராத மற்றோர் ஆசிரியர் மூன்றும் பகுதியில் அளிக்கிறார்; பக்கங்கள் 575. அலாவுத்தீனைப்பற்றி எலியட், டௌசன் எழுதியுள்ள நூலில் சியாவுத்தீன் பரணியின் குறிப்பைக் காணவும், பகுதி iii பக்கம் 158.

சகோதரரும், ஆட்சிப் பகுதியின் கால்பாகத்துக்கு கவர்ன ராக இருந்தவருமான ஃபிரோஸ் ஷா (Firuz Shah) அப்பொழுது பாசறையில் இருந்தார். ஆனாலும், அவர் தமது உறவினரின் இடத்தைப் பெறுவதற்கு எவ்வித முயற்சியும் செய்ய விரும்ப வில்லை. வழிகாட்டுபவர் எவரும் இல்லாததனால் படை மூன்று நாட்களாகக் கடுந் துயரில் மூழ்கியிருந்தது. ஃபிரோஸ் ஒருவர் தான் அப் படையைப் பேரழிவிலிருந்து காப்பாற்ற முடியும் என்று முக்கிய முஸ்லீம் தலைவர்களும் இந்துத் தலைவர்களும் முடிவு செய்தனர். அவரை 1351, மார்ச்சு 23ஆம் நாள் பாசறையிலேயே அரியணையேற்றினார்கள். தலைவர் என்று ஒருவர் தோன்றிய வுடனே நிலைமை சீரடைந்தது. புதிய சுல்தான் எஞ்சிய படையை முல்தான் (Multan), திபால்பூர் (Debalpur) ஆகிய வற்றின் வழியாகத் தில்லிக்குக் கொண்டுவருவதில் திட்டவட்ட மாக வெற்றிபெற்றார்.

### போலி உரிமை கொண்டாடியவர்

அதற்கிடையில் தில்லியின் வயது முதிர்ந்த கவர்னர் காஜா கான் (Khwaja Khan) என்பவர் ஃபிரோஸ் ஷா இறந்துவிட்டார் என்ற வதந்தியைக் கேட்டு, ஒரு குழந்தையை சுல்தானாக நியமித் தார். அக் குழந்தை ஒருவேளை முகம்மது பின் துக்ளக்கின் மகனாக இருந்திருக்கக்கூடும். எனினும், அதைப்பற்றி உறுதி யாகக் கூறுவதற்கில்லை. ஃபிரோஸ் தலைநகரை நெருங்கினார்; எதிர்ப்பது பயனற்றது என்று உணர்ந்த காஜா கான் சரணடைந் தார். சுல்தான் அவரை மன்னித்து விடுதலை செய்தார்; ஆனாலும், சிறிது காலத்திற்குப்பின் அவர் கொலையுண்டார்.

### ஃபிரோஸின் ஆளுமை

முகம்மது பின் துக்ளக்கின் வாரிசாக வருவதற்கு ஃபிரோஸ் ஷா தகுதியற்றிருந்தார். இழக்கப்பட்ட மாகாணங்களின்மீது தில்லியின் ஆதிக்கம் மீண்டும் நிலைநாட்டுவதற்கான படைத் திறமையை அவர் பெற்றிருக்கவில்லை. அவர் நடத்திய மூன்று படையெடுப்புகளிலும் மிக நெருக்கடியான நிலைமையில் ஊசலாடும் வலுவின்மையை வெளிப்படுத்தினார். நல்வாய்ப்புகள் பல சாதக மாக இருந்தபோதிலும், அவர் தக்காணத்தை அடக்க மறுத்துவிட் டார். அவர் வங்காளத்தின்மீது இரு முறை, 1353-4ஆம் ஆண்டி லும் 1359ஆம் ஆண்டிலும் படையெடுத்தார். இருமுறையும் அவர் வங்காள அரசரை அவரது பிரமபுத்திரா கோட்டையில் வீணாக முற்றுகையிட்டுப் பின்வாங்கினார்; எனினும், இரண்டாவது படை யெடுப்பின்பொழுது ஒரிஸ்ஸாவிலுள்ள (Orissa) பூரியை (Puri) வெற்றியுடன் கொள்ளையடித்தார். அவர் சிந்துவில் அடைந்த

இன்னல்களுக்குப் பழிவாங்க 1362-ல் தொண்ணூறாயிரம் குதிரை வீரர்களுடனும் ஒரு கப்பற்படையுடனும் கிளம்பினார். ஆனால், அதன் விளைவு மிக அவலமானதாக இருந்தது. தத்தா மிகப் பலமாகப் பாதுகாக்கப்பட்டது. தேவைப் பொருள்கள் வந்து சேரவில்லை. குதிரைகளெல்லாம் தொத்துநோயால் பாதிக்கப்பட்டு மாண்டன. வேறு வழியில்லாமல் குஜராத்தி லிருந்து பின்வாங்குமாறு அவர் ஆணையிட்டார். படை ராண் கட்சைக் (Rann of Cutch) கடந்து செல்லும்பொழுது சொல்ல இயலாத துன்பங்களுக்காளாகியது. வஞ்சகமிக்க வழிகாட்டு பவர்கள் படைவீரர்களைத் தவறான பாதைகளில் கொண்டுசென் றதே அதற்குக் காரணம் என்று சொல்லப்படுகிறது. அப் பகுதியி லிருந்து தில்லிக்கு எத் தகவலும் எட்டவில்லை. சுல்தான் இறந்து விட்டார் என்று ஒவ்வொருவரும் நம்பினர். திறமை வாய்ந்த கான் ஜஹான் ஒழுங்கை நிலைநாட்டினார். அவ்வமைச்சர் அப் பொழுது தில்லியின் பொறுப்பை ஏற்றிருந்தார். காலப் போக்கில் சுல்தான் தனது எஞ்சிய படையுடன் குஜராத்தில் தோன்றினார்.

படைவலுப் பெருக்குதலைப் பெற்றதற்குப் பின்னால் புதிய படை ஒன்றைத் திரட்டிக்கொண்டு ஃபிரோஸ் குஜராத்திலிருந்து சிந்துக்குள் நுழைந்தார். அவ் வேளையில் படையெடுப்பாளர்கள் தானியங்களைத் தக்க சமயத்தில் பறித்துக்கொண்டனர். இதன் விளைவாக நாட்டிலிருந்த மக்கள் பற்றாக்குறையால் கஷ்டப்பட் டனர். தத்தா பேராபத்துக்குட்பட்டபொழுது அதன் தலை வரும் மற்றொரு தலைவரும் சரணடைந்தனர்; இருவரும் ஃபிரோஸ் ஷாவுடன் தில்லிக்குச் சென்றனர். அங்கே அவர்கள் வெளித் தோற்றத்திற்குப் பிணைகளாக வாழ்ந்துவந்தனர். அவர்களுடைய உறவினர் ஒருவர் தத்தாவை நீடித்து ஆட்சி புரிந்துவந்தார். தில்லி அரசாங்கம் நடத்திய விலைமிக்க இரண்டு படையெழுச்சி களிலிருந்தும், பெயரளவில் பெற்ற இறுதி வெற்றியிலிருந்தும் எவ்விதப் பலனும் ஏற்படவில்லை.

புதான் (Budaun) என்ற இடத்தின் கவர்னராக இருந்த வரைக் கொன்றதற்காக ஃபிரோஸ் கதேரின் (Katehr) அரசரை ஐந்து ஆண்டுகளாகப் பழிவாங்கினார். அவரது அச் செயல் அவருக்கு முன்னால் இருந்தவருடைய கோபாவேசத்தின் மின்ன லாக இருந்தது. 'அவ்வாண்டுகளில் ஓர் ஏக்கர் நிலமும் பயிரிடப்படவில்லை. அவரும் தன் வீட்டில் உறங்கவில்லை. மூன்று சையதுகளின் மரணத்திற்காக எண்ணற்ற இந்துக்கள் பழிவாங்கப்பட்டனர்.'

**ஃபிரோஸ் ஷாவின் தனிப்பட்ட விருப்பங்கள்**

அவர் அரசருக்குரிய மது அருந்தும் பழக்கத்தைப் பெற்றிருந்தாலும், வேட்டையாடுவதில் அதிக காலத்தைச் செலவழித்தாலும், அவர் மிகத் தீவிரமான சமயப் பற்றுடையவராவர். அவர் வரலாற்றைப் படிப்பதை விரும்பினர்; கட்டடங்களைக் கட்டுவதில் பெரும் ஆர்வத்தைக் காட்டினர். ஃபிரோஸாபாத் (Firuzabad) என்ற புதிய ஒரு தில்லியைக் கட்டி அவர் தனது முன்னவர்களைப் பின்பற்றினர். அவ்விடம் புராணத்தில் புகழ் பெற்று விளங்கிய இந்திரபதம் (Indarpat) அல்லது இந்திரப் பிரஸ்தம் (Indraprastha) என்ற இடத்தை உட்கொண்டிருந்தது. தற்பொழுது தில்லிக்கு அருகில் நின்றுகொண்டிருக்கும் இரண்டு அசோகத் தூண்களை ஃபிரோஸ் ஷா அவ்விடத்திற்குக் கொண்டு வரும்படி ஆணையிட்டார். எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்த அவ்விரண்டு தூண்களில் ஒன்று அம்பாலா (Ambala) மாவட்டத்திலுள்ள தோப்ரா (Topra) என்ற இடத்திலிருந்தும், மற்றொன்று மீரட்டிலிருந்தும் (Meerut) கொண்டுவரப்பட்டன. சமகாலத்திய வரலாற்றறிஞரான ஷம்சி–சிராஜ் ஆஃபீஃப் (Shams-i-Siraj Afif) என்பவர் அந்தப் பெரிய கற்களை மிகப் பத்திரமாக மாற்றுவதற்குக் கையாண்ட நுட்பமுறைகளைப்பற்றி கவர்ச்சியான பல விவரங்களை வருணிக்கிறர்.

அச் சுல்தான் ஹிசார் ஃபிரோஸா (Hisar Firuza) என்ற நகரத்தையும் (ஹிச்சார், தில்லிக்கு வடமேற்கில்), ஜான்புரி (Jaunpur) என்ற நகரத்தையும் (வாரணசிக்கு வடமேற்கில்) கட்டினர். அவற்றைக் கட்டுவதில் பழைய இந்து நகரங்களையும் கட்டடங்களையும் பயன்படுத்திக்கொண்டார். அவரது முப்பத்தேழு ஆண்டு ஆட்சியில் அவர் ஆற்றிய கட்டடப் பணிகளைப்பற்றிய பட்டியல் ஒன்றை அவரது கையாலேயே எழுதிவிட்டுச் சென்றிருக்கிறர். அப் பட்டியலில் நகரங்களும், அரண்களும், மசூதிகளும், கல்லூரிகளும், மற்றப் பல கட்டடங்களும், கால்வாய்களும், அணைகளும் இடம்பெற்றுள்ளன. ஹிசார் பிரோஸாவுக்குத் தண்ணீர் கொண்டுவருவதற்காகக் கட்டப்பட்ட கால்வாய் ஷாஜஹான் ஆட்சிக் காலத்தில் திருத்தம் பெற்றது. மேற்கு யமுனைக் கால்வாயை வரிசைப்படுத்துவதில் அக் கால்வாய் பயன்படுத்தப் பட்டுள்ளது. அவருடைய சிறந்த சிற்பி மலீக் காஸி ஷான (Malik Ghazi Shahna) என்பவராவர். ஜாஹிர் சுந்தர் (Jahir Sundhar) என்றும் வழங்கிவந்த அப்துல் ஹக் (Abdul Haq). என்பவர் அவருடைய துணையாளர் ஆவார். பொதுவாக ஆசிய அரசர்கள் தங்களுடைய முன்னவர்கள் கட்டிய கட்டடங்களில் கருத்தைச் செலுத்தவில்லை. அக் கட்டடங்களைச் சரிவர

மேற்பார்வை இடாததால் அவை அழிவடைந்துகொண்டிருந்தன. இவ் விதிக்கு மாறாக ஃபிரோஸ் ஷா தமக்கு முன்னால் இருந்த அரசர்களும் பழமைமிக்க பிரபுக்களும் கட்டிய கட்டடங்களைத் திருத்தி அமைப்பதிலும், மீண்டும் கட்டுவதிலும் பெருங்கருத்தைச் செலுத்தினர். இவ்விதம் செய்வதில் அவர் தனிப்பட்டவராவர். புதிய கட்டடங்களைக் கட்டுவதற்கான தமது திட்டங்களைவிடப் பழைய கட்டடங்களை உயிர்ப்பிக்கும் செயல்களில் இவர் அதிகக் கருத்துக்கொண்டிருந்தார்.

### உள்நாட்டு நிர்வாக முறை

சுல்தானின் தனிப்பட்ட விருப்பத்தைப் பெற்ற தொழில்களைப் போலன்றி இராச்சியத்தின் உள்நாட்டு நிர்வாகம் தெலுங்கானுவிலிருந்த கான் ஜஹான் (Khan Jahan) என்ற அமைச்சரின் பொறுப்பில் இருந்தது. அவர் இந்து மதத்தைப் புறக்கணித்து இஸ்லாம் மதத்தைத் தழுவியவராவார். அவர் 1370-ல் (ஹி.பி. 772) இறந்ததும், அவருடைய மகன் அவரது பதவிக்கு வந்தான். அம் மகனும் கான் ஜஹான் என்ற அதே பட்டப் பெயரைப் புனைந்துகொண்டு அரசாங்கத்தை ஆட்சிக் காலம் முடியும்வரை நடத்தி வந்தார். 'அரசாங்கத்தின் தொல்லை கொடுக்கும் விவரங்களைக் கண்டு அவர் பொறுமை இழந்தாலும், அவருடைய பண்பாட்டுத் திறன் உண்மையில் அதை ஈடு செய்தது' என்று சர் டப்ளியூ. ஹேக் (Sir W. Haig) கூறுகிறார். சுல்தான் அலாவுத்தீன் தன்னுடைய அலுவலர்களுக்குச் சம்பளத்தை ரொக்கமாகக் கொடுக்கும் முறையை இவரும் மேற்கொண்டார். அவர்களுக்கு ஜாகீர்களையோ, வருவாய் தரும் கிராமங்களையோ சம்பளமாகக் கொடுப்பதை அவர் அனுமதிக்க வில்லை. அம் முறை கீழ்ப்படியாத் தன்மையையும் கிளர்ச்சியையும் உண்டுபண்ணும் என்று அவர் நம்பினர். ஆனால், ஃபிரோஸ் ஷாவும், அவருடைய ஆலோசகர்களும் ஜாகீர்களை அளிக்கும் முறையை விதியாக்கினர்கள். அக்பர் கருவூலத்திலிருக்கும் ரொக்கத்தை அளிப்பதையும் செயலில் கொண்டுவரும் அளவுக்கு நேர்முக அலுவலர் நிர்வாக முறையை மீண்டும் கையாண்டார்.

### நாடு வளம் பெற்றிருந்தது எனக் கூறுதல்

ஃபிரோஸ் ஷாவைப்பற்றி சியாவுத்தின் பரணி (Zia-ud-din Barani) புகழ்ந்து கூறுவதை முற்றிலும் ஒப்புக்கொள்ளமுடியாது. சுல்தான், நபிநாயகத்தின் சட்டங்களைத் தனக்கு வழிகாட்டியாகக் கொண்டிருந்தார் என்பதும், அடக்குமுறையைத் தடுக்க விரும்பினர் என்பதும் உண்மையேயாகும். ஆனாலும், 'உழவர்கள்

செல்வர்களானார்கள்; திருப்தி அடைந்திருந்தார்கள்; அவர்களுடைய வீடுகள் தானியங்களாலும், 'செல்வத்தாலும், குதிரைகளாலும், தட்டுமுட்டுப் பொருள்களாலும் நிறைந்திருந்தன; ஒவ்வொருவரும் ஏராளமான தங்கத்தையும் வெள்ளியையும் பெற்றிருந்தனர். ஒவ்வொரு வீட்டிலும் சிறந்த படுக்கைகளும் கட்டில்களும் இருந்தன; செல்வம் ஏராளமாகக் குவிந்திருந்தது; பொதுவாகப் பல வசதிகள் இருந்தன' என்று அவர் நமக்குக் கூறியது அரசவை முகப்புகழ்ச்சிக்குரிய மிகைப்பட்ட கூற்றாகும் என்றே கருதவேண்டும். உழவனுக்கு ஒரு பசுவைமட்டும் விட்டுவிட்டு மற்ற எல்லாவற்றையும் பறித்துக்கொள்வது முந்திய சுல்தான்களின் வழக்கமாகும் என்று வரலாற்றறிஞர் கூறுகிறார். ஃபிரோஸ் ஷாவின் நயமான ஆட்சி பழக்கத்திலிருந்த கொடுங்கோலாட்சியை ஓரளவு தணித்தது என்றாலும், அது ஒரு சுவர்க்கத்தை உண்டாக்கிவிடவில்லை.

**அடிமைகளைக் கைப்பற்றுதல்**

அதே ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார்: 'அடிமைகளுக்கு வசதிகளை அளிப்பதில் சுல்தான் விடாமுயற்சி செய்தார். போரிடும்பொழுது அவ்வடிமைகளைப் பிடித்து அவர்களுள் மிகச் சிறந்தவர்களை அரசவைப் பணிக்காக அனுப்பிவைக்கும்படி பெரிய நிலமானியத் தலைவர்களுக்கும் அதிகாரிகளுக்கும் ஆணையிடும் அளவுக்கு அவர்கள்மீது அவர் தனது கருத்தைச் செலுத்தினார். அடிமைகள் பலரைக் கொண்டுவந்தவர்களை சுல்தான் மிக அதிகமாக விரும்பினார். சுமார் 12,000 அடிமைகள் பலவகைத் தொழிலாளர்களானார்கள்; 40,000 அடிமைகள் சுல்தானின் காவலாளர்களாகப் பணியாற்றுவதற்கோ, அரண்மனையில் பணிபுரிவதற்கோ எப்பொழுதும் சித்தமாக இருந்தனர். நகரத்திலும் பல பண்ணைகளிலும் மொத்தத்தில் 180,000 அடிமைகள் இருந்தனர். அவர்களின் பிழைப்பிற்காகவும் வசதிகளுக்காகவும் சுல்தான் தனிப்பட்ட அக்கறை காட்டினார். இந்த நிலையம் நாட்டின் இதயபாகத்திலேயே அமைந்திருந்தது. அதனை ஒழுங்குபடுத்துவது தமது முக்கியக் கடமைகளில் ஒன்றாக சுல்தான் கருதினார்.' இவ்விதமாக அடிமைகளை அறவே விடுதலை செய்வதற்கு நடத்திய கொள்கைகளால் பல துன்பங்கள் விளைந்தன. இருந்தபோதிலும், பிடிக்கப்பட்டபின் அவ்வடிமைகள் சிறப்பாக நடத்தப்பட்டனர் என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். அடிமைகளெல்லாம் முஸ்லீம்களானார்கள். அவ்விதம் மதமாற்றம் செய்வதற்குத்தான் சுல்தான் அம் முறையை மிக அதிகமாக விரும்பினார் போலும்.

## சித்திரவதை செய்வதை ஒழித்தல்

நல்வினையாக நாம் ஃபிரோஸ் ஷா எழுதிய கட்டுரை ஒன்றைப் பெற்றிருக்கிறோம். அக் கட்டுரையில் அவரது கருத்தின்படி அவர் செய்த அருட்செயல்களைப்பற்றி எடுத்துரைக்கிறார். துண்டிப்பதும் சித்திரவதை செய்வதும் தடுக்கப்பட்டன. இச் சீர்திருத்தம் நமது மதிப்புக்குரியதாகும். அவருடைய வாழ்நாளிலேயே அந்த ஆணைகளெல்லாம் பெரும்பாலும் நிறைவேற்றப்பட்டிருக்கவேண்டும். முன்னாள் அரசர்கள் கையாண்ட பலவகைச் சித்திரவதைகளைப்பற்றி எடுத்துக் கூறுவது மிகக் கோரமாக இருக்கும்.

'அருள் பொழியும் மாபெரும் இறைவன் என்னைத் தன் பணியாளாகப் படைத்திருக்கிறான். சட்டமுறையின்றி முஸல்மான்களைக் கொல்லுவதையும், அவர்களையும் மற்றவர்களையும் சித்திரவதை செய்வதையும் தடுப்பதற்கு நான் பாடுபட்டு அவருடைய அருளைப் பெறுவேன்.'

## சமயப் பொறையின்மை

ஆனாலும், அவரது சமய ஆர்வம் தூண்டப்பட்டுவிட்டால், ஃபிரோஸ் ஷா மிகப் பயங்கரமாக நடந்துகொள்வார். பின் வரும் நிகழ்ச்சிகளை அவர் குறிப்பிடுகிறார்:

'ரவாஃபிஸ் (Rawafiz) என்று வழங்கிவந்த ஷியாக்களின் (Shias) சமயக் கட்சி ஒன்று மதமாற்றம் செய்யும் முயற்சியில் முனைந்திருந்தது. நான் அவர்களையெல்லாம் பிடித்து அவர்களது குற்றச் செயல்களுக்கும் பிழைகளுக்கும் தண்டனை விதித்தேன்; பெரும் ஆர்வம் கொண்டவர்களுக்குத் தூக்குத் தண்டனை (siyasat) விதித்தேன். மற்றவர்களையும் கண்டித்து (tasir–தாஸீர்) அவர்களைத் தண்டிப்பதாகப் பயமுறுத்தினேன். அவர்களுடைய திருநூல்களை வெளிப்படையாக எரித்தேன். இறைவனின் அருளால் இம் மதப்பிரிவினைச் செல்வாக்கு அடியோடு ஒடுக்கப்பட்டது'.

மஹ்தி (Mahdi) என்று உரிமை கொண்டாடிய ஒருவரைக் கொல்லும்படி புனிதச் சட்டத்தைக் கற்றறிந்த நிபுணர்களுக்கு அவர் ஆணையிட்டார். 'இந் நற்செயலுக்காக வருங்காலத்தில் வெகுமானம் பெறுவேன் என்று நம்புகிறேன்' என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.

தில்லிக்கு அருகில் இருக்கும் மாலூ (Maluh) என்ற கிராமத்தில் நடைபெற்ற உற்சவம் ஒன்றுக்கு சுல்தான் நேரில் சென்றார்.

அதில் 'பண்பற்ற சில முஸல்மான்களும்' கூடக் கலந்து கொண்டனர்.

'நான் அம் மக்களின் தலைவர்களையும் வெறுப்பூட்டும் அச் செயலைத் துவக்கியர்களையும் கொல்லும்படி ஆணையிட்டேன். பொதுவாக இந்துக்களின்மீது எவ்விதக் கடுந் தண்டனையும் விதிக்கக்கூடாது என்று கட்டளையிட்டேன். ஆனாலும், சிலை யுருவங்களைக் கொண்டிருந்த அவர்களது கோயில்களை அழித் தேன்; அவ்விடங்களில் மசூதிகளைக் கட்டினேன்.'

ஒரு பிராமணர் அவரது சமயச் சடங்குகளை வெளிப்படை யாகச் செய்ததனால் எரிக்கப்பட்டதை வரலாற்றறிஞர் நேரில் கண்டார்.

மறுக்க முடியாத உண்மைகள் சில, ஃபிரோஸ் ஷா முந்திய படையெடுப்பாளர்களின் மரபைப் பின்பற்றினார் என்பதையும், அவருடைய குடிமக்களில் பெரும்பாலோர் அவர்களது சமயத்தை வெளிப்படையாகப் பின்பற்றியதனால் அவர்களுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது என்பதையும், அவர் இவ்விதம் செய்து தம் இறைவனுக்குப் பணியாற்றுகிறார் என்று அவர் நம்பினார் என்பதையும் உறுதிப்படுத்துகிறது.

## பணம் அளித்து மதமாற்றம் செய்தல்

சுல்தான் மேலும் கூறுகிறார்: 'சிலையுருவங்களை வழிபாடு செய்யும் என் குடிமக்களை நபிநாயகத்தின் மதத்தைத் தழுவுமாறு ஊக்கமூட்டினேன். சமயச் சுலோகத்தைக் கூறி முஸல்மானான ஒவ் வொருவருக்கும் ஜெஸ்ஸியா (Jizya) அல்லது தலைவரி (Poll-tax) செலுத்துவதிலிருந்து விலக்குக் கொடுப்பதாகப் பிரகடனஞ் செய்தேன். இதைப்பற்றிய தகவல் இறுதியில் மக்களுக்கு எட்டி யதும், பெரும்பாலான இந்துக்கள் முன்வந்து இஸ்லாம் சமயத் தைத் தழுவினர். அவ்விதமாக அவர்கள் நாள்தோறும் பல இடங்களிலிருந்து முன்வந்து அச் சமயத்தைத் தழுவி, ஜெஸ்ஸியா என்ற தீர்வையைச் செலுத்தும் கடமையிலிருந்து விடுதலை பெற்றனர். அவர்களுக்குப் பல பரிசுகளும் சிறப்புகளும் வழங்கினேன்.'

தற்காலத்திய முஸ்லீம்களில் பெரும்பாலோர் இவ்விதம்தான் தோன்றினார்கள். மற்றப் பல அரசர்களும் பணத்தைக் கொடுத்து மதமாற்றம் செய்யும் முறையைக் கடைபிடித்தனர்.

### ஜெஸ்ஸியா (Jizya)

ஜெஸ்ஸியா எனப்படும் தீர்வை மூன்று விதங்களாக மதிப்பிடப்பட்டது. அதாவது, முதலாம் வகுப்பு, நாற்பது டங்காக்கள் (tankas); இரண்டாவது வகுப்பு; இருபது டங்காக்கள்; மூன்றும் வகுப்பு, பத்து டங்காக்கள்.[1] முந்திய ஆட்சிக் காலங்களில் பிராமணர்கள் அதைச் செலுத்தவேண்டியதில்லை என்று இருந்தது. ஃபிரோஸ் ஷா கற்றறிந்த சட்டநிபுணர்களைக் கலந்து ஆலோசித்து, பிராமணர்களும் அத் தீர்வையைச் செலுத்த வேண்டும் என்று தீர்மானித்தார். பிராமணர்கள் சாகும்வரை உண்ணாவிரதம் இருப்பதாக அச்சுறுத்தினாலும், அவர்கள் அவ்வித முடிவுக்கு வந்ததை ஃபிரோஸ் பலமாக வரவேற்றார்; அத் திட்டம் நிறைவேற்றப்பட்டது.

### சுல்தானுக்குரிய மதிப்பு

அவரது கல்விக்கும் சூழ்நிலைகளுக்கும் தக்க மதிப்புக் கொடுத்தாலும், ஃபிரோஸ் ஷா சமயப் பொறையின்மையின் தத்துவம், செயல்முறை ஆகியவற்றிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாது. அவர் காலத்தில் இந்துஸ்தானின் அரசர்கள் தங்களுடைய குடிமக்கள் முஸ்லீம்களாயினும், இந்துக்களாயினும் அவர்களோடு மகிழ்ச்சியுடன் வாழவேண்டும் என்பதும், மனச்சாட்சி, வெளிப்படையாக மதத்தைப் பின்பற்றுதல் ஆகியவற்றைப் பொறுத்தவரை ஒவ்வொருவருக்கும் முழு உரிமை அளிக்கவேண்டும் என்பதுமான உயர்நோக்கங்களை, அக்பர் செய்ததுபோலவே அவர் தம் காலத்தில் நிறைவேற்ற முடியவில்லை. பதினான்காம் நூற்றாண்டு முஸ்லீம்கள், இஸ்லாமின் முந்திய நாட்களில் நிலைத்திருந்த கருத்துகளைப் பின்பற்றிவந்தனர். சிலையுருவங்கள் வழிபாடு செய்வதை அனுமதிப்பது பாவம் என்று அவர் உறுதியாக நம்பியிருந்தார். ஃபிரோஸ் ஷாவுக்கு பலவீனங்களும் குறைபாடுகளும் இருந்தபோதிலும், அவருடைய முன்னவர்களின் கொடிய பழக்கங்களை ஒருசில வகைகளில் தணித்ததற்காகவும், நிர்வாகத்தில் இரக்கம் தோய்ந்த உணர்ச்சிகளை வெளிப்படுத்தியதற்காகவும் அவர் நம் மதிப்புக்குரியவராவர். தராதரமறியாது அவர் அறஞ் செய்தாலும், அவர் இயற்கையாகவே இரக்க குணம் பெற்றிருந்தார். அவர் புரிந்த அருஞ்செயல்களில் மருத்துவமனை நிறுவியதும் ஒன்றாகும்.

[1] Thomas, 'Chronicles', பக்கங்கள் 218, 219 281. அறுபத்து நான்கு ஜிடால்கள் (jaitals) கொண்டது ஒரு டங்கா. இதனால் ஒரு பிராமணர் ஓர் ஆண்டுக்கு சுமார் பத்து ரூபாய் கொடுத்தார்.

### 1388-ல் ஃபிரோஸ் ஷாவின் இறப்பு: குழப்பம்.

சிம்மாசனம் ஏறும்பொழுது ஃபிரோஸ் ஷாவுக்கு வயது நாற்பத்திரண்டாக இருந்தது. முதிர்ந்த வயதினால் ஏற்படும் பல வீனங்களால் அவருக்கு அதிகமான விவரங்களைக் கவனிக்கமுடியவில்லை. அரசாங்கத்துறையில் அவரது குடிமக்களை அவரோடு இணைத்துக்கொள்ளும் முயற்சியில் சுல்தான் தோல்வியுற்றார். அவருடைய அமைச்சரான இளைய கான்ஜஹான் துரோகச் செயல்களில் ஈடுபடுமாறு தூண்டப்பட்டார். வயது முதிர்ந்த சுல்தான் 1388 செப்டம்பரில் உயிர்நீத்தார். அப்பொழுது அவருக்கு வயது சுமார் எண்பத்துமூன்றாக இருந்தது. அரசாங்கம் அறவே குழப்பத்தில் மூழ்கியது. கைப்பொம்மைகள் போன்ற சுல்தான்கள் பலர் திரைமுன் விரைவாகத் தோன்றி மறைந்தனர். அவர்கள் எல்லாம் தனிப்பட்ட சிறப்பு எதையும் பெற்றிராதவர்கள். உண்மையில் இராச்சியமே அழிந்துவிட்டது. ஒவ்வொரு மாகாணத்தின் கவர்னரும் செயல்முறையில் சுதந்திரம் பெற்றிருந்தார். 1394ஆம் ஆண்டிலிருந்து 1397ஆம் ஆண்டுவரை சுமார் மூன்று ஆண்டுக்காலமாகப் போட்டியிடும் இரு சுல்தானியர்களும் தில்லி வகை நகரங்களின் எல்லைகளில் தங்குவதற்கு இடங்களைத் தேடிக்கொண்டிருந்தனர். ஃபிரோஸ் ஷாவின் பேரரான சுல்தான் மகமூத் (Sultan Mahmud) என்ற இளைஞர் பழைய தில்லியில் சுல்தானாக ஏற்றுக்கொள்ளப்பட்டார். அவருடைய உறவினரான நுச்ரத் ஷா (Nusrat Shah) சில மைல் தூரத்துக்கப்பால் இருந்த ஃபிரோஸ் ஷாபாத் என்னும் இடத்தில் அதேபோன்ற உரிமைகளைக் கொண்டாடினர். 'நாள்தோறும் இவ்விரு அரசர்களுக்கிடையில் போர்கள் நடந்துகொண்டிருந்தன. இவ்விருவரும் சதுரங்க ஆட்டத்தில் வரும் இரு அரசர்களைப்போல இருந்தனர்'. இகழ்ச்சி நிறைந்த அரியணைக்காகப் போட்டி உரிமை கொண்டாடும் பலருக்கிடையில் பொருளற்ற சண்டைகள் நினைவிற்கொள்வதற்கோ குறிப்பிடுவதற்கோ தகுதி பெறவில்லை.

1388-ல் உயிர்நீத்த ஃபிரோஸ் ஷாவுக்கும், பத்து ஆண்டுகளுக்குப் பிறகு தைமூர் நடத்திய படையெடுப்புக்குமிடையில் இருந்த இடைக்காலத்தில் மகமூதும் அவரோடு போட்டியிட்ட நுச்ரத் ஷாவும் பெயரளவில் சுல்தான்களாக இருந்தவர்களுடைய வரிசையின் இறுதி அரசர்களாக ஆட்சி புரிந்தவர்களாவர்.

### தைமூரின் படையெடுப்பு (Invasion of Timur, 1398)

அமீர் தைமூர் (Amir Timur) [தைமூரிலங்க (Timur-i-lang), தேமர்லேன் (Tamerlane) அல்லது தம்பர்லேன் (Tamburlaine) என்று ஆங்கில இலக்கியத்தில் விளங்கியவர்] ஒரு பர்லாஸ்

துருக்கியராவர் (Barlas Turk). முதன் முதலாக இஸ்லாம் மதத்திற்கு மாற்றம் செய்யப்பட்டவர்களுள் அவருடைய தந்தையும் ஒருவராவர். தைமூர் 1336-ல் பிறந்து 1369-ல் சமர்கண்டின் சிம்மாசனம் ஏறினர். அதற்குப்பின் தூரதேசங்களின்மீது படையெடுக்கும் வாழ்க்கையை அவர் மேற்கொண்டார். அவரது படையெடுப்புகள் சிங்கிஷ்கானின் படையெடுப்புகளுக்கு நிகராக இருந்தன. அவர் ஒரு முஸ்லீமாக இருந்தபோதிலும், முஸ்லீம் சமயக் கோட்பாடுகளைப்பற்றிய அறிவைப் பெற்றிருந்தாலும், கொடுமைகள் இழைப்பதில் அவர் செங்கிஷ்கானுக்குச் சரிசமமாகவே இருந்தார். அவர் 1405-ல் உயிர்நீத்தார். இந்தியாவின்மீது படையெடுப்பதற்கு அவருக்கு ஒழுங்குற சாக்குப்போக்கு எதுவும் தேவை இல்லை. அரசாங்கத்தின் பலவீனம், நாட்டின் பெயர் பெற்ற செல்வம், நாட்டில் வாழ்பவர்களின் பெரும்பாலோர் சிலையுருவ வழிபாட்டினை மேற்கொண்டவர்கள் என்ற உண்மை ஆகிய இவையெல்லாம் படையெடுப்பதற்குப் போதிய காரணங்களாகும்.

1397ஆம் ஆண்டின் இறுதியில் அவருடைய பேரனை பீர் முகம்மது (Pir Muhammad) என்பவர் முற்போய்க்கொண்டிருந்த பாதுகாவல் படைக்குத் தலைமை வகித்து உச் (Uch) என்ற இடத்தையும், பிறகு முல்தானையும் (Multan) முற்றுகையிட்டார். அப்பகுதிகள் 1398, மே மாதத்தில் அவர்களுக்கு வந்துசேர்ந்தன. தைமூரே இலையுதிர் காலத்தில் 90,000 குதிரைப் படையுடன் இந்து நதியைக் கடந்தார். முல்தானுக்கு வடகிழக்கில் உள்ள துலம்பா (Tulamba) என்ற இடத்தைத் தாக்கினர். நாட்டில் வாழ்பவர்கள் பலரைக் கொன்றுர்; அல்லது சிறை அடிமைகளாக்கினர். மகமூத் துக்ளக் லோனி (Loni) என்ற இடத்திற்கருகில் அவருக்கு எதிர்ப்பளிக்க முயன்றபொழுது, படையெடுப்பாளர்கள் ஒரு மிக எளிய வெற்றியைப் பெற்றுர்கள்.[1] நகருக்கு அருகில் தைமூர் இரண்டாம் முறை வெற்றி பெற்றுர். அதற்குப் பிறகு தில்லியைக் கைப்பற்றினர். அவர் அரசர் என்று பிரகடனஞ் செய்துகொண்டார். நகரம் முழுவதும் ஐந்து நாட்களாகச் சூறையாடப்பட்டது. பல தலைமுறைக் காலமாகச் சேர்த்துவைக்கப் பட்டிருந்த செல்வம் சமர்கண்டுக்கு (Samarqand) அனுப்பப்பட்டது. அதனேடு எண்ணற்ற பெண்களும் மற்றக் கைதிகளும் அனுப்பப் பட்டனர். புதிய தலைநகரில் கட்டடங்களைக் கட்டுவதற்குச் சிறந்த தொழிலாளர்களை மிக்க விழிப்புடன் தைமூர் அழைத்துவந்து விட்டார்.

[1] மகமூதின் எதிர்ப்பு, தைமூரைத் தம் கூடாரத்திலிருந்த இலட்சம் கைதிகளைக் கொல்லும்படி ஆணையிடத் தூண்டியது.

இந்தியாவில் தங்கியிருக்கும் எண்ணம் தைமூருக்குக் கிடையாது; மீரட் (Meerut) வழியாகத் திரும்பி அந்த நகரைத் தாக்கி எல்லோரையும் கொன்றார். அவர் பிறகு ஹரித்வாருக்கு (Hardwar) விஜயம் செய்து மலையடியின் நெடுகே சென்றார். நதியை எளிதாகக் கடக்கக்கூடிய ஓர் இடத்தில் கடந்து பஞ்சாபின் வழியாக இந்தியாவுக்குள் நுழைந்ததுபோல இந்தியாவை விட்டு வெளிச்சென்றார். அவர் எங்கும் குழப்பத்தையும், பஞ்சத்தையும், கொள்ளைநோயையும் பின்விட்டுச் சென்றார்.

### சய்யதுகள் எனப்படுவோர் (The So-called Sayyids)

முந்திய பத்திகளில் தைமூர் செய்த கொள்ளைகள், இழைத்த பயங்கரக் கொடுமைகளைப்பற்றிய சுருக்கம் அளிக்கப்பட்டது. அக் கொடுமைகள் மேல் இந்தியாவில் அரசாங்கத்தின் முழுத் தோற்றத்தையும் அழித்தன. தைமூர் நாட்டைவிட்டுச் சென்றதற்குப் பிறகு பதினைந்து ஆண்டுகள்வரை எந்தச் சுல்தானுடைய ஒழுங்கான அரசாங்கமும் நிலைநாட்டப்படவில்லை. முந்திய பஞ்சாப் கவர்னராக இருந்த கிசர்கானும் (Khizr Khan) அவருடைய மூன்று வழித் தோன்றல்களும் 1414–1450ஆம் ஆண்டுவரை நகரம், அதைச் சுற்றியிருந்த நிலையற்ற ஆட்சிப் பகுதி ஆகியவற்றின் பொறுப்பை ஏந்தியிருந்தனர். அவர்கள் தங்களைச் சய்யதுகள் (Sayyids) என்று அழைத்துக்கொண்டனர். அதனால் அவர்களது வமிசம் வரலாற்று நூல்களில் 'சய்யது வமிசம்' என்று வழங்கப்பட்டுவருகிறது. கிசர்கான் ஆண்டுதோறும் படையெடுத்துப் பஞ்சாபிலிருந்து டோஆப் (Doab) வரை பரவியிருந்த பகுதியைத் தமது ஆதிக்கத்துக்குட்படுத்தி யிருந்தார். இப் படையெடுப்புகள் வருவாயையும் கொண்டுவந்தன. ஆனாலும், அவருக்குப் பின் வந்தவர்களுடைய காலத்தில் அதுபோன்ற படையெடுப்பதற்கான பகுதி வெகு விரைவில் குறைந்துகொண்டே வந்தது. ஆலம் ஷா (Alam Shah) அவ் வமிசத்தின் கடைசி சுல்தானவார். அவர் பூதோன் (Budaon) என்ற இடத்திற்குச் சென்று ஓய்வு பெறுவதற்கு அனுமதிக்கப்பட்டார்; அந்த இடத்தில் பல ஆண்டுகளாக அமைதியாக வாழ்ந்துவந்தார்.

### சுல்தான் புகலூல் லோடி (Sultan Buhlul Lodi)

புகலூல் கான் என்பவர் லோடி இனத்தைச் சேர்ந்த ஓர் ஆப்கானியராவர்; தில்லி ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றுப் பஞ்சாபின் கவர்னரானார். அவர் 1451-ல் சிம்மாசனம் கைப்பற்றினார்; சுல்தான் என்று பிரகடனஞ் செய்துகொண்டார். 1206-லிருந்து 1450-வரை ஆட்சி புரிந்த தில்லி சுல்தான்கள் ஆப்கானியர்களாவர் அல்லது பட்டாணியர்களாவர் என்று அவர்களைப்

பல ஆசிரியர்கள் தவறாக அழைத்தபோதிலும், உண்மையில் புகலூல் லோடி முதல் ஆப்கானியச் சுல்தானாவார். அவர் கிழக்கில் ஜான்புரி அரசரோடு போரிட்டார். தைமூரின் படையெடுப்பைத் தொடர்ந்து தோன்றிய குழப்பக் காலத்தில் அவ்விராச்சியம் தன் கட்டுப்பாட்டைக் களைந்தெறிந்தது. புகலூல் இறக்கும்பொழுது ஜான்புரியின் அரசரான ஹுசேன் ஷா (Hussain Shah) என்பவரின் உரிமைகளைப் பறித்து, அவ்வரசருடைய பதவியில் தம்முடைய மகன் பார்பக் ஷா (Barbak Shah) என்பவரை நியமித்தார். மலையடியிலிருந்து வாரணாசிவரையிலும், தெற்கில் பண்டேல்கண்டின் எல்லைகள்வரையிலும் பரந்திருந்த நிலப்பகுதியின்மீது மீண்டும் தம் ஆதிக்கத்தை அவர் நிலை நாட்டினார் என்று கூறலாம்.

### சிகந்தர் லோடி (Sikandar Lodi)

பிரபுக்கள் புகலூலின் மகனான நைஸாம் கானைப் (Nijam Khan) பின்வருவோராகத் தேர்ந்தெடுத்தனர். அவர் சுல்தான் சிகந்தர் காஸி (Sultan Sikandar Ghazi) என்ற பட்டப் பெயரைப் புனைந்துகொண்டார்; அவருடைய சகோதரரான பார்பக் ஷாவை ஜான்புரியிலிருந்து துரத்தி அவ்விராச்சியத்தையும் இணைத்துக் கொண்டது, அவரது ஆட்சியில் நடந்த முக்கிய அரசியல் நிகழ்ச்சியாகும். சுல்தான் பீஹாரையும் இணைத்துக்கொண்டு திர்ஹூத் (Tirhut) என்ற பகுதியிலிருந்து கப்பத்தையும் வசூல் செய்து வந்தார். அக் காலத்தில் 'இணைப்பு' என்பது ஆப்கானிய இராணுவத் தலைவர்களின் மாவட்டங்களின்மீது கொண்டிருந்த தளர்ச்சியான ஆதிக்கத்தையே குறிக்கிறது என்பதை வாசகர்கள் நினைவிற் கொள்ளவேண்டும். அத் தலைவர்கள் தாற்காலிகமாகவும் குறைந்தும் இருந்த கீழ்ப்படிதலைத் தில்லி சுல்தானியர்களுக்கு அளிக்கும்படி வற்புறுத்தப்பட்டனர். பஞ்சாப் துவக்கத்திலிருந்தே லோடிகளின் அதிகார கேந்திரமாக இருந்துவந்தது. அப் பகுதியையும் சிகந்தர் ஓரளவு தமது ஆதிக்கத்துக்குட் படுத்தினார்.

முஸ்லீம் ஆசிரியர்கள் சிகந்தரைப் புகழ்ந்துள்ளார்கள். அவர் ஒரு சமயப் பித்தராவர்; மதுராவிலுள்ள கோயில்களை முற்றிலும் பழாக்கினார். அக் கட்டடங்களை முஸ்லீம் கட்டடங்களாக்கினார். பொதுவாக இந்துக்களிடம் கொடும் பகைமை கொண்டிருந்தார். அரசியலைப் பொறுத்தவரை அவர் அம்மாதிரியாக இருந்ததற்குக் காரணம் உண்டு. டோஆப்பில் இருந்த இந்துக்கள் எப்பொழுதும் கீழ்ப்படியாத நிலையில் இருந்தனர். ஜான்புரியின் இந்துக் கிளர்ச்சியாளரின்மீது 1494-ல் முழு நிறை

வான ஒரு படையெடுப்பை நடத்தவேண்டியிருந்தது. அளவுமீறி இருந்த அவரது சமயப்பற்றின் எல்லைகளுக்குள் ஒரு விழிப்பான, அயரா உன்னிப்பு வாய்ந்த அரசாங்கப் பணியாற்றினர்; குர்ரானிய (Quranic) சட்டங்களைக் கண்டிப்பாகப் பின்பற்றினர். மருத்துவக் கல்வியில் அதிக கவனத்தைச் செலுத்தினர். உணவுப் பண்டங் களோடு மற்றப் பொருள்களின் விலையும் அசாதாரணமாகக் குறைந்திருந்தது அவரது ஆட்சியில் குறிப்பிடத்தக்க சிறப்பாகும். அதன் விளைவாக ஏழைகளும் மிக வசதியாக வாழமுடிந்தது.

ஆக்ரா நகரம் முகம்மது காஜ்ஜியால் அழிக்கப்பபட்டு அதனது முக்கியத்துவத்தையும் இழக்க நேரிட்டது. அந் நகரை சுல்தான் சிகந்தர் செம்மைப்படுத்தினர். பொதுவாக அவர் அந்த இடத்திலேயே வசித்துவந்தார். ஆற்றல் மிக்க குவாலியர் இராஜாவுக்கு எதிராகச் செய்த படையெழுச்சிகளுக்காக அந் நகரை அவர் தமது தளமாகப் பயன்படுத்திக்கொண்டிருந்தார். சிகந்தரா (Sikandara) என்ற இடம் அந்த லோடி அரசனின் பெயரைத்தான் பெற்றுள்ளது. அவ்விடத்தில்தான் அக்பரின் கல்லறை இப்பொழுதும் அமைந்துள்ளது.

1505-ல் ஏற்பட்ட ஒரு பயங்கரமான புவியதிர்ச்சி பாரசீகம் வரை பரவி, வட இந்தியாவைப் பெருஞ்சேதத்துக்குள்ளாக்கியது.

சிகந்தர் 1517ஆம் ஆண்டின் இறுதியில் இயற்கை மரணம் அடைந்தார்.

## ஜான்புரி இராச்சியம் (The Kingdom of Jaunpur)

ஜான்புரி இராச்சியம் சிறிது காலமே நீடித்திருந்தது. அவ்விராச்சியத்தின் வரலாற்றை இங்கே சுருக்கமாக ஆராயலாம். இவ்விராச்சியம் லோடி சுல்தான்களுடன் வைத்துக்கொண்டிருந்த தொடர்புகளே அவர் காலத்தில் நிகழ்ந்த முக்கிய அரசியல் நிகழ்ச்சிகளுக்குக் காரணங்களாயின. ஃபிரோஸ் ஷா துக்ளக், ஜான்புரி என்ற முஸ்லீம் நகரை நிறுவினர் என்பதை ஏற்கெனவே குடுப்பிட்டுள்ளோம். மகமூத் துக்ளக், காஜா ஜஹான் என்ற பட்டப்பெயரைப் புனைந்திருந்த ஆற்றல் மிக்க ஓர் அலியைக் 'கிழக்கின் சுல்தானக' நியமித்தார். அவருக்கு ஜான்புரி தலைநகராக அமைந்திருந்தது. அந்த நாட்களில் ஒவ்வொரு மாகாண கவர்னரும் செயல்முறையில் சுதந்திரமாகவே இருக்கும் அளவுக்குத் தில்லியின் ஆதிக்கம் தளர்ச்சியுற்றிருந்தது. தைமூர் இழைத்த கொடுமைகள் 1398-ல் தில்லி அரசாங்கத்தைச் சிதறடித் தன. அதற்குப்பின் காஜா ஜஹானின் சுவீகார மகன் அந்த

வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு, முபாரக் ஷா ஷர்கி (Mubarak Shah Shargi—கிழக்கின் சுல்தான்) என்ற பட்டப்பெயருடன் 1399-ல் தம்மைச் சுதந்திர அரசராக ஆக்கிக்கொண்டார்.

புதிதாக அரசராக்கப்பட்டவருக்குப்பின் அவருடைய தம்பி இப்ராஹிம் என்பவர் பதவியேற்று முப்பத்துநான்கு ஆண்டுகள் வளம்பெற ஆட்சிபுரிந்தார். சிகந்தர் ஷாவைப்போலக் கடுமையாகத் துன்புறுத்தாவிடினும் நிதானமாகத் துன்புறுத்தினர். அவருடைய சமயக் கருத்துகள் உடன்பட்ட வரலாற்றறிஞர்களின் ஒப்புதலைப் பெற்றிருந்தன. ஆனாலும், அவர்கள் அந் நிலையின் மறுபுறத்தைப்பற்றிக் குறிப்பிடவில்லை. இப்ராஹிமின் மகன் மகமூதும் ஒரு சிறந்த அரசர் என்று வழங்கப்படுகிறார். அவ் வமிசத்தின் கடைசிச் சுதந்திர அரசரான ஹுசேன் ஷா என்பவர் 1476-ல் புகலூல் லோடியால் முறியடிக்கப்பட்டார்; விரட்டியடிக்கவும் பட்டார். தமது பெயரையே புனைந்திருந்த வங்காள அரசரிடம் அடைக்கலம் புகுந்தார்.

சிகந்தர் ஷா தமது ஆட்சியின் துவக்கத்தில் தமது மூத்த சகோதரரான பார்பக் ஷாவிடம் ஜான்புரியை முழு ஆதிக்கத்துடன் ஒப்படைத்த சாதனை தோல்வியுற்றது; போரையும் தூண்டியது. இப் போரில் தில்லியின் சுல்தான் வெற்றிபெற்றார்.

இப்ராஹிம் லோடி சிம்மாசனம் ஏறிய காலத்தில் இச் சாதனை மீண்டும் கையாளப்பட்டது; ஆனல், மீண்டும் தோல்வியுற்றது. இப்ராஹிமின் சகோதரர் ஜவால் கான் (Jawal Khan) என்பவர் ஜான்புரியின் அரசராக்கப்பட்டார்; ஆனல், தோல்வியுற்றுக் கொலையுண்டார். அக் காலத்திலிருந்து 'கிழக்கு இராச்சியம்' சுதந்திர நாடு என்று போலி உரிமை கொண்டாட முடியவில்லை; அது 1476-ல் முடிவடைந்தது என்று கொள்ளலாம். அவ்வாண்டில் சிகந்தர் லோடி அவருடைய சகோதரர் பார்பக் ஷா என்பவரை விரட்டியோட்டினர்.

ஜான்புரி வமிசத்தவர்கள் எல்லோரும் பாரசீக, அராபிய இலக்கியத்தை ஆதரித்தார்கள். ஜான்புரியிலிருக்கும் மேன்மை வாய்ந்த மசூதிகளெல்லாம் அவர்களுடைய தலையாய நினைவுச் சின்னங்களாகும். அவர்களுடைய பாணி தனிப்பட்ட முறையில் அமைக்கப்பட்டிருந்தது; அதில் பல இந்துக் கூறுகளும் அடங்கியிருந்தன. அக் கட்டடங்கள் வழக்கத்துக்கு மாருக மிகப் பெரியனவாக அமைந்திருந்தன. அவைகளுக்குக் கோபுரங்கள் இல்லை., விழுமிய தோற்றமுடைய வாயில்களையும், சாய்ந்திருக்கும் சுவர்களையும் கொண்டிருந்தன. இப்ராஹிமும் மகமூத் ஹுசேன்

ஷாவும் மசூதிகளைக் கட்டுவதைத் தங்களது காலத்தில் துவக்கி வைத்தனர்.[1]

### இப்ராஹிம் லோடி (Ibrahim Lodi)

பிரபுக்களின் ஓர் உட்குழு இளைய சகோதரரை ஜான்புரியின் சுதந்திர அரசராகச் செய்த முயற்சியைப் புதிய சுல்தான் அடக்கி, பிறகு அவரது தகப்பனாரின் சிம்மாசனம் ஏறினார். அவரது மிகப் பெரிய வெற்றி குவாலியரைக் கைப்பற்றியதாகும். அதன் கட்டுறுதி வாய்ந்த அரசர் மான் சிங் (Man Singh) என்பவர் அண்மையில் மரணமடைந்திருந்தார். ஆனால், சுல்தான் அவ் வெற்றிக்குப்பின் ஆப்கானியப் பிரபுக்களுடன் நட்புறவு கொண்டிருக்க முடியவில்லை. அவருடைய ஆட்சிக் காலம் பெரும்பாலும் அவர்களுடன் போர் செய்வதிலேயே கழிந்தது. அவர் வெற்றி பெற்றவுடன் கடுமையாகப் பழிக்குப் பழி வாங்கினார். இறுதியில் ஆப்கானியப் பிரபுக்களிடையிலிருந்த மனநிறைவின்மை தௌலத்கான் லோடி (Daulatkhan Lodi) என்பவரைக் காபூலின் பாதுஷா அல்லது அரசராக இருந்த பாபருக்கு (Babur) அழைப்பு அனுப்பும்படி தூண்டியது. பாபர் உறுதியற்ற பல உள்ளேறித் தாக்குதல்களைச் செய்து, 1525, நவம்பரில் தமது இறுதிப் படையெடுப்பைத் துவக்கினார்; 1526, ஏப்ரல் 21ஆம் நாள் பானிப்பட்டு என்ற இடத்தில் இப்ராஹிமைப் பலமாகத் தோற்கடித்தார். அதனால் லோடி தமது சிம்மாசனத்தையும் உயிரையும் இழக்க நேரிட்டது. வெற்றிபெற்றவரின் ஆட்சியைப்பற்றிக் கூறும்பொழுது இந்த யுத்தம் வருணிக்கப்படும்.

### குறைந்த விலைகள்

இவருடைய தந்தையின் ஆட்சியில் இருந்ததைவிட இவருடைய ஆட்சியில் விலைகள் குறைந்திருந்தது இவ்வாட்சியின் சிறப்புக் கூறாகும். கனத்த மழை பெய்ததனால் விளைபொருள்கள் ஏராளமாக உண்டானதும், உலோக நாணயங்களின் பற்றாக் குறையும் அந் நிலைக்குக் காரணங்களாகும். 'தங்கமும் வெள்ளியும் கிடைப்பது மிக அரிதாக இருந்தது' என்றும், 'வியாபாரிகள் ரொக்கத்திற்கு எண்ணற்ற அளவில் பொருள்களை விற்பதற்குச் சித்தமாயிருந்தனர்' என்றும் நமக்குத் தெரியவருகிறது. 'ஒரு சுற்றுப்பயணி தில்லியிலிருந்து ஆக்ராவிற்குப் போவதென்றால், அவருக்கும், குதிரைக்கும், நான்கு வேலையாட்களுக்கும் செலவிற்காக ஒரு பஹ்லோலி (bahloli) போதுமானதாகும்.'[2]

[1] A Fuhrer, 'The Sharqi Architecture of Jaunpur', Calcutta, 1889.

[2] Thomas, 'Chronicles', p. 360 ; E & D., vol. iv, p. 476.

குறிப்பிடப்பட்ட நாணயம் நூற்றுநாற்பது குண்டுமணி எடையுள்ள நாணயமாகும். அது பில்லன் (Billon) அல்லது செம்பும் வெள்ளியும் வேறுபட்ட அளவில் கலக்கப்பட்ட கலவையால் செய்யப்பட்டதாகும். வழக்கமான விதிகளின்படி, அது வெகு சிறு உள்ளார்ந்த மதிப்பையே பெற்றிருந்தது. தைமூரின் படையெடுப்பு வெளித்தோற்றத்தில் கடுமையான பொருளாதார விளைவுகளை இழைத்திருக்கவேண்டும். அவையெல்லாம் சரிவரக் குறிப்பிடப்படவில்லை. ஃபிரோஸ் ஷாவின் காலத்தில் தைமூரின் படையெடுப்புகளுக்குமுன், ஃபிரோஸ் ஷா துக்ளக்கின் காலத்தில் தங்கமும் வெள்ளியும் ஏராளமாகக் கிடைத்தனபோலும்.

**தில்லி சுல்தானியம்**

தில்லி சுல்தானியத்தின் வரலாறுகள் கிட்டத்தட்ட முன்னூற்று இருபத்தைந்து ஆண்டுக்கு மேலாக நீடித்திருந்தன (1206-1526). ஆனால், அவை வாசிப்பதற்கு இனிமையானவையாக இல்லை. சிங்கீஷ், தைமூர் ஆகியவர்களின் வரலாறுகள் அருவருப்பூட்டும் கொடுமைகளால் நிறைந்துள்ளன. பல சுல்தான்களின் ஆட்சிகள் இரத்தம் சிந்துதல், கொடுங்கோலாட்சி, வஞ்சகம் போன்ற காட்சிகளையே அளிக்கின்றன. எல்லா சுல்தான்களும் முஸ்லீம்களாவர்; அவ்விதமாகவே நடந்துகொண்டனர். இரக்கம் தோய்ந்த மனிதத் தன்மையை ஓரளவு காட்டியவரும், தமது குடிமக்களுக்கு அருஞ்செயல்களைப் புரிய விரும்பியவருமான ஃபிரோஸ் ஷா துக்ளக்கும் தமது சமகாலத்தவரது பொறையின்மைக் கொள்கையைப் பின்பற்றினர். சுல்தானியத்தின் வரலாற்றைப் படிக்கிறவர்கள் முஸ்லீம் ஆசிரியர்களை நம்பித்தான் இருக்கவேண்டும் என்பதையும், சில வேளைகளில் ஒரே ஒரு சாட்சியத்தைத்தான் நம்பியிருக்க நேரிடுகிறது என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும். கூரிய கவனத்துடன் அவ்வாசிரியர்களின் உட்கருத்துகளைப் பரிசீலனை செய்வதிலும்; புகழ்வதிலும், இகழ்வதிலும் காணக்கூடிய உயர்வு நவிற்சியின்மீது முறையாகக் கவனத்தைச் செலுத்துவதும் இன்றியமையாததாகும்.

மிக்க கொடுமையாளர்கள் உட்படப் பல சுல்தான்கள் அராபிய, பாரசீக இலக்கியத்தின் பண்பு நலன்களில் பற்றுமிக்கவராக இருந்தனர். சுல்தான்கள் இஸ்லாமிய அறிவில் சிறந்தவர்கள் தங்களைச் சுற்றியிருப்பதை விரும்பினர். மேலும், அவர்களது கவனத்தைக் கவர்ந்த செயல்களைத் தாராளமாக ஆதரிப்பவர்களாகவும் இருந்தனர்.

அவர்கள் பல புதிய கட்டடக் கலைப் பாணிகளை இந்தியாவுக்குள் நுழைத்தனர். அவைகள் மெக்காவிலும் (Mecca), டமாஸ்

கஸ்ஸிலும் (Damascus), இஸ்லாமிய உலகத்திய மற்ற நகரங்களி லும் இருந்த கட்டடங்களை மேற்கோளாகக் கொண்டிருந்தன. எனினும், இந்துக் கூறுகளும் அவற்றை மிகத் தீரமாக மாற்றி யமைத்திருந்தன. புதிய மசூதிகள், கல்லூரிகள் ஆகியவற்றைக் கட்டுவதற்கான பொருள்களை, இடிக்கப்பட்ட கோயில்களி லிருந்து எடுத்தனர். அவற்றைக் கட்டுவதற்கு வெற்றியாளர் இந்தியத் தொழிலாளிகளின் பணிகளை கட்டாயமாகப் பயன் படுத்தவேண்டியிருந்தது. அதனால் சுல்தானியக் காலத்துக் கட்ட டங்கள் சில தனிப்பட்ட குணதிசயங்களைப் பெற்றிருக்கின்றன. அச் சிறப்புக் கூறுகள் அக் கட்டடங்களை உலகத்திலுள்ள மற்ற முஸ்லீம் கட்டடங்களிலிருந்து வேறுபடுத்துகின்றன. பல ஆசிரி யர்கள் சுல்தானிய காலத்து எல்லாக் கட்டடக் கலைப் பணிகளை யும் பட்டாணியக் கட்டடங்கள் என்று வழங்குகின்றனர். ஆனால், அது பொருத்தமற்றதும், தவறான எண்ணத்தை உண்டாக்குவது மாகும். சுல்தானிய காலத்தில், பல தலங்களில் பல சமயங்களில், வெவ்வேறு வகையான பல பாணிகளை வேறுபடுத்தலாம். ஆனால், இத் தலைப்பு தனித்துறைக்குரியதாதலால், மேலும் இதைப்பற்றிக் கவனிக்கவேண்டியதில்லை.

### முஸ்லிம் வெற்றிக்குக் காரணங்கள்

முஸ்லீம் படையெடுப்பாளர்கள் போரிடுவதில் தங்களுடைய இந்து எதிரிகளைவிட உண்மையில் சாலச் சிறந்தவர்களாவர். அவர்கள் செல்வத்தாலும் இன்ப வாழ்வாலும் பாதிக்கப்படாத வரையில் அவர்களை வெல்லுவது சாதிக்க முடியாததாக இருந்தது. அவர்கள் உவப்பான காலநிலை வாய்ந்த மலைப்பகுதி களிலிருந்து வந்தவர்களாவர். அவர்களுடைய பகைவர்களைவிட அவர்கள் வீரார்ந்தவர்களாவர்; திடமான உடல்நிலையும் பெற்றிருந் தனர். இந்தியாவில் வழக்கத்திலிருந்த சைவ உணவோடு ஒப்பிடுகையில், அவர்களுடைய இறைச்சி உணவும், உணவைப் பொறுத்தவரை அவர்கள் சாதி விதிகளால் விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகளுக்குட்படாததும் அவர்களுக்குப் படையெடுப்புக் கான ஆற்றலை அளித்தன. முஸ்லீம்களல்லாதவரை அழிப்பது இறைவனுக்கு மனநிறைவு உண்டாக்கும் பணியாகும் என்று அவர்கள் கருதினார்கள். அவர்களது கொடுமை வாய்ந்த சமய வெறி அவர்களை இரக்கமற்றவர்களாக்கியது. அதனால் அவர்கள் இந்தியாவில் போர்செய்த சாதாரணப் பகைவர்களைவிட மிக்க பயங்கரமானவர்களாக இருந்தனர். ஒரு காஜி (Ghaji)—புறச் சமயத்தவரைக் கொல்லுபவர்—கொலையுண்டால் அவர் சுவர்க்கத் திலுள்ள இன்பங்களைப் பெறுவார் என்றும், அதே சமயத்தில் உயிர்த்தியாகி என்ற அழியாப் புகழையும் பெறுவார் என்றும்

அவர் கொண்டிருந்த உறுதியான நம்பிக்கையே அவர்களைப் பயத்திலிருந்து காப்பாற்றியது. அவர்கள் பின்வாங்க முடியாது என்ற உணர்ச்சி படையெடுப்பாளரின் துணிவை மேலும் அதிகப்படுத்தியது. இலட்சக் கணக்கிலிருந்த எதிரிகளை அவர்கள் அறவே கீழ்ப்படியும்படி செய்யவேண்டும் அல்லது அவர்களால் அழிக்கப்படவேண்டும். இதைத் தவிர, நடுத்தரப் பாதை எதுவும் அவர்களுக்குக் கிடையாது. இந்தியாவின் நகரங்களிலும், அரண்மனைகளிலும், கோயில்களிலும் நிறைந்துகிடந்த விலைமிக்க பொருள்களும், தங்கம், வெள்ளி அணிமணிகளும் உட்பட ஏராளமான செல்வம் அவர்களது கற்பனையைத் தூண்டியதுமன்றி, நினைவில் கொள்ளமுடியாத சிறப்பான பரிசுகளையும் வீரத்திற்கு அளித்தது. இந்துக்களின் போர்த்திறன் முறைகளும் சாதுரியங்களும் பழமைமிக்கனவாக இருந்தன. அவை பண்டைய நூல்களின் அடிப்படையில் அமைந்திருந்தன. இந் நூல்கள் வெளிநாட்டு முறைகளை ஏற்றுக்கொள்ளவில்லை. இந்தியப் படையைப் பொறுத்தவரை வமிச, மத, சாதிப் பிரிவுகள் ஆணை ஒருமைப்பாட்டிற்குப் பெரும்பாலும் தடையாகவே அமைந்திருந்தன. இதற்கு மாருக, அந் நிலங்களின் ஒவ்வொரு படைக்கூட்டமும் போர்க்களத்தில் ஒருவருக்குக் கீழ்ப்படிந்திருந்தது. தளபதிகள் அதிர்ச்சி தரும் சாதுரியங்களை, அதாவது, ஒழுங்காக நடத்தப்பட்ட குதிரைப்படைத் தாக்குதல்களைச் செய்ய அறிந்திருந்தனர். அம் முறைகள் இந்துக்களின் படைக்கூட்டங்களைக் கலைப்பதில் தோல்வி பெறவில்லை. இந்து மரபு யானைப்படைக்கு அதிக முக்கியத்துவத்தைக் கொடுத்தது. ஆனல். அப் படையும் சிறந்த ஆயுதப்படைகளைத் தாங்கிச் சுறுசுறுப்பாகப் போரிடும் குதிரைப் படைக்கெதிரில் பயன்தரவில்லை. இந்துக் குதிரைப்படை நாட்டின் பெரும்பாலான பகுதிகளில் உயர்தர ஆற்றலைப் பெற்றிருந்ததாகத் தெரியவில்லை.

மிகப் பெரிய இந்து ஜனத்தொகையோடு ஒப்பிடுங்கால், எண்ணிக்கையில் சிறுபான்மையோராக இருந்த முஸ்லீம்கள், இவ்விதமாக வெற்றிகளை மிக எளிதாகப் பெற்றனர். எண்ணற்ற இந்துக்களைப் பல நூற்ருண்டுகளாகத் தங்களுடைய ஆதிக்கத்துக்குட்படுத்திவைத்திருந்தார்கள்.

**சுல்தானிய அரசாங்கத்தின் தன்மை**

சில குதிரைப் படைவீரக் கூட்டத்தினர் பன்னிரண்டாம் நூற்ருண்டின் இறுதியில் வங்காளத்தைக் கைப்பற்றினர். அதனல், பிறகு வங்காளம் நெடுங்காலமாக வேற்று நாட்டுத் தலைவர்களுக்கு அடிபணிந்திருந்தது. அத் தலைவர்கள் சிற்சில

வேலைகளில் ஆப்கானியர்களாகவும் இருந்தனர். மேலும், அம் மாகாணம் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்படும்வரையில் முஸ்லிம் ஆட்சி யிலிருந்து தப்பியிருக்க முடியவில்லை. சுல்தானியத்தின் காலத் தில் வங்காளத்துடன் நடந்த போர்களைப்பற்றி நாம் படிக்கிறோம்; அப் போர்களெல்லாம் வங்காளத்தின் முஸ்லீம் அரசர்களிட மிருந்து கப்பங்களைப் பெறுவதற்கும், அவர்களைக் கீழ்ப்படியச் செய்வதற்குமான உரிமைகளைக் கொண்டாடவேதான் தில்லி அரசாங்கம் நிகழ்த்தியது. அவ்வரசர்களும், இந்து அரசர்கள் ஏறக்குறைய ஒழுங்கான கப்பத்தைச் செலுத்தும் நிபந்தனையின் பேரில் அவர்களது ஆட்சிப் பகுதிகளில் அவர்களைச் சுதந்திர நிலையில் விட்டுவைத்திருந்தனர். உண்மையில் இவ் வழக்கம் பெரும்பாலான முஸ்லீம் ஆட்சிப் பகுதிகளில் நிலைத்திருந்தது. எவ்வித சிவில் நிர்வாகமாவது நடத்தவேண்டியிருந்தது. அந்நி யர்களுக்கு அவ்வித ஆட்சியை நடத்த ஒருசில பகுதிகளைத் தவிர மற்றப் பகுதிகளெல்லாம் போதிய ஆட்களோ தகுதியோ இல்லை. சுல்தான்கள் ஒருசில கருத்துகளையோ அல்லது பயன்தரும் நிறுவனங்களையோ தாம் பின்விட்டுச் சென்றனர்.

தலைநகரிலும் மாகாணங்களிலும் ஆணவமான சர்வாதிகார அரசாங்கமே அமைந்திருந்தது; அது செயல்முறையில் தடையற் றிருந்தது. கிளர்ச்சியும் படுகொலையுமே அதற்குத் தடையாக நின்றன. அலாவுத்தீன்போன்ற ஆற்றல் மிக்க ஓர் ஏகாதிபதி சட்டத்திற்குரிய நுணுக்க ஐயப்பாடுகளைத் தனது விருப்பத்திற்கு எதிராக நிற்க அனுமதிக்கவில்லை. புனிதச் சட்டத்தின்மீது மிக்க பற்றுக்கொண்டிருப்பதாகக் கூறிக்கொண்டிருந்த முகம்மது பின் துக்லக், எல்லோரையும்விட மிக மோசமான ஏகாதிபதி யாவார். இராணுவத் தலைவர்கள் ஒழுங்கற்ற ஒரு தேர்தலை நடத்தி சிம்மாசனத்திற்குரிய வாரிசுரிமையை வழக்கமாக நிறு வினர். சுல்தானைத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் அவருடைய முன்ன வருக்கு உறவினராகவும் இருந்திருக்கமாட்டார்.

### இந்திய வாழ்க்கையில் இஸ்லாம்

தில்லியிலும் இதர பல நகரங்களிலும் முஸ்லீம் அரசாங் கங்கள் நிரந்தரமாக நிறுவப்பட்டிருந்ததும், கணக்கற்ற இந்துக் களுக்கிடையில் ஆளும் வகுப்பினராக நிரந்தரமாகக் குடியிருந்த முஸ்லீம் ஜனத்தொகையின் வளர்ச்சியும் கட்டாயமாக இந்தி யாவில் முக்கிய மாறுதல்களைக் கொண்டுவந்தன. முஸ்லிம்களின் தொகை வடமேற்கு எல்லைக்கப்பாலிருந்து இங்கு வந்து குடியேறு தல், பணம் கொடுக்கப்பட்டோ வற்புறுத்தப்பட்டோ மதமாற்றம் செய்யப்படுதல், பிறப்பு என்ற மூன்று வகைகளில் வளர்ந்து

வந்தது. குறிப்பிட்ட இம் மூன்று வகைகளிலும் முஸ்லீம் ஜனத் தொகை வளர்ந்ததைப்பற்றிய புள்ளிவிவரங்கள் நம்மிடத்தி வில்லை; இருந்தபோதிலும், இது எல்லா வகைகளிலும் நடந்து கொண்டிருந்தது என்பது நமக்குப் புலனாகிறது. இவ்வளவு பெரிய அந்நியக் கூறு ஒன்று இங்கே வந்தமர்ந்ததால் இந்திய வாழ்க்கையில் முக்கிய மாறுதல்கள் ஏற்பட்டன.

**முஸ்லீம் சமயத்தின் வலிமை**

முஸ்லீம்களுடைய அந்நிய முன்னவர்களான சாக்கியர்களும் (Sakas), ஹூணர்களும் (Huns), மற்றவர்களும் ஓரிரண்டு தலை முறையில் இந்து சாதி முறையில் பிணைக்கப்பட்டதுபோல முஸ்லீம்கள் பிணைக்கப்படவில்லை. ஷமானியம் (Shamanism), மற்றத் தெளிவற்ற மத்திய ஆசிய சமயங்கள் ஆகியவற்றைப் பின் பற்றுவோர் அடைந்த கதியை, தெரிந்த ஒரு காலத்தில் தெளி வான ஒன்றில் திட்டவட்டமாக அமைதலுற்ற இஸ்லாமிய சமயம் தன்னைப் பின்பற்றுவோர் அடையாதபடி காத்தது. சாக்கியர் களும், ஹூணர்களும், முன்னாளில் குடிபுகுந்த இன்னும் பலரும் இந்தியாவில் நிலையாகத் தங்கி இந்துப் பெண்களை மணம் புரிந்து கொண்டு வாழ்ந்துவந்தபொழுது, அசாதாரண வேகத்தில் இந்துக்களின் சாதி முறைகளோடு கலந்துகொண்டனர். பிராம ணர்களது ஆதிக்கத்திலிருந்து தங்களைக் காத்துக்கொள்ளும் அளவுக்கு அவர்கள் தெளிவான சமயத்தைப் பெற்றிரா ததுதான் அதற்குக் காரணமாகும். குர்ஆனையும் நபிநாயகத் தையும் பெற்றிருந்த முஸ்லீமோ வேறு நிலையில் இருந்தார். தாம் புரிந்துகொள்ளக்கூடிய சமயத்தை முழுமனத்துடன் நம்பினார். மேன்மை பொருந்திய இறைவன் ஒருமைப்பாட்டுத் தத்துவத்தை வருபவர்களுக்கிடையில் காப்பாற்றினார். பலதரப் பட்ட தெய்வங்களை வழிபாடு செய்பவர்களையும், அவர்கள் வணங்கும் தெய்வச் சிலையுருவங்களையும், சடங்குகளையும் அவர் வெறுத்தார். ஆகையினால், நிலையாகத் தங்கியிருந்த முஸ்லீம்கள், அவர்கள் ஏழைகளாயினும் செல்வர்களாயினும், ஒரு சிறந்த இனத்தவர் என்று தங்களைக் கருதிக்கொண்டனர். அவர்கள் முடிந்தவரையில் உருவ வழிபாடு செய்பவர்களுடன் சமயத் தொடர்பு வைத்துக்கொள்ளாமல் தங்களைத் தனிப்படுத்திக் கொண்டனர். ஆனாலும், இருதரத்தாருக்குமிடையில் இருந்த எல்லைக் கோடு காலப்போக்கில் ஓரளவு உடைபட்டது. முஸ்லீம்கள் ஏற்றுக்கொள்ள முடியாதிருந்த பல பதவிகளில் எழுத்தர்களாக மதமாற்றம் செய்யப்படாத இந்துக்களை நீடித்து நியமிக்கவேண்டிய தேவை அந் நிலைக்கு ஒரு முக்கியக் காரணமாகும்; பணத்திற்காகவோ வாளுக்குப் பயந்தோ பெரும்

பாலும் மதமாற்றம் செய்துகொண்டது அதற்கு மற்ருெரு காரண மாகும். இங்ஙனம் பெயரளவுக்கு மதமாற்றம் செய்துகொண்ட இந்துக்கள், தங்களது பண்டைக் காலப் பழக்கங்களையும் தொடர்பு களையும் கைவிடாது பின்பற்றினர்கள். தற்சமயமும் இவர்கள் தங்களது வாழ்க்கைப் போக்கில் அரை இந்துக்களாகவே இருக்கின்றனர்.

**உருது மொழியின் உயிர்வளர்ச்சி** (Evolution of Urdu)

முஸ்லீம்களும் இந்துக்களும் ஒருவரை ஒருவர் சந்திக்கும்படி செய்த பலவகைக் காரணங்கள் பொதுமொழி ஒன்றின் உயிர் வளர்ச்சியை இன்றியமையாததாக்கின. ஹுமாயூன் காலத்தில் ஜெய்ஸ் (Jais) என்ற இடத்தைச் சேர்ந்த மாலிக் முகம்மது வைப் போலச் (Malik Muhammad) சில முஸ்லீம்கள் ஹிந்தி மொழியைக் கற்று அம்மொழியில் எழுதிக்கொண்டுமிருந்தார்கள். கணக்கற்ற இந்துக்கள் பாரசீக மொழியில் அறிவுபெற்றிருந்தனர். இவ்விருமொழிகளும் பொருத்தமாகக் கலந்ததனுல் உருது மொழி (Urdu) தோன்றியது. இது பாசறை மொழியாகும். பாசறை எனப் பொருள்படும் 'உருது' என்னும் துருக்கியச் சொல்லி லிருந்து இப் பெயர் வந்தது. பாசறை (camp) என்பது ஆங்கிலச் சொல்லான (horde) 'கூட்டம்' என்பதன் முதல் தோற்றமாகும். உருது, மேற்கிந்தியாவில் பராசீகத் தோற்றம் கொண்டு பேசப் பட்டுவந்த ஹிந்தி மொழியாகும். இது போன்ற மொழி குறிப்பாகத் தில்லியின் சுற்றுப்புறங்களில் பேசபட்டுவருகின்றது. இதன் இலக்கணமும் அமைப்பும் பெருமளவு ஹிந்தியாகவே நீடித்திருக்கின்றது. சொற்கள் பராசீகச் சொற்களாகும். முஸ்லீம் படையெடுப்புக்குப் பிறகு பாரசீக மொழி அராபியச் சொற்களால் நிறைந்திருந்தது; அதனுல் உருதுவிலும் எண்ணிக்கையின்றி இருக்கின்றன. எந்தத் தேதியிலிருந்து உருது மொழி திட்டவட்டமாகத் துவங்கியது என்று கூறமுடியாது. இம் மொழி பொருளற்ற பலதரங்களைப் பெற்று ஹிந்திமொழியில் கலந்துகொள்கிறது. எனினும், சுல்தானியத்தின் காலத்தில் படையெடுப்பாளரும் படையெடுக்கப்பட்டவர்களும் புரிந்து கொள்ளும் ஒரு மொழியின் வளர்ச்சி இடைவிடாமல் நடந்து கொண்டிருந்தது. காலப்போக்கில் உருது இந்திய முஸ்லீம்களின் பேசும் மொழியாகி, இலக்கியத்தையும் பெற்றது. 1325-ல் இறந்த அமீர் குஸ்ருவின் (Amir Khusru) நூல்களில் பல ஹிந்திச் சொற்கள் தென்படுகின்றன. சிலர் இவரை ஓர் உருது எழுத்தாளர் என்றும் கருதுகிருர்கள்.

## இந்து மதத்தில் திருத்தம்

இந்திய வாழ்க்கையில் நபி நாயகத்தின் மதம் நிரந்தரக் கூருக நுழைந்து, இந்து சிந்தனையாளர்களின் கருத்துகளைத் திருத்தி அமைக்கும்படி செய்தது. கல்வி அறிவு பெற்றிராத இந்துக்களும் இறைவன் ஒருமைப்பாட்டுத் தத்துவத்தை உணர்ந்திருந்தார்கள் என்று கூறத் தேவையில்லையாயினும், அத் தத்துவத்திற்கு முஸ்லீம்களின் போதனை அளித்த முக்கியத்துவம் பல சமயப் பள்ளிகள் தோன்றுவதற்கு ஊக்கமளித்தது. இப் பள்ளிகள் இந்து, முஸ்லீம் பற்றை வெளிப்படுத்தக்கூடிய ஒரு சமயத்தை நிலைநாட்ட விரும்பியது.

## இராமானந்தரும் (Ramanandar) கபீரும் (Kabir)

இராமானந்தருடைய தத்துவம் இப் பள்ளிகளுக்கு அடிப் படையாக அமைந்திருந்தது. இவர் பதினைன்காம் நூற்றுண்டில் வாழ்ந்துவந்த மிக்க புகழ்பெற்ற ஆசிரியராவார்; தெற்கிலிருந்து வந்தவர். இவர் ஹிந்தியில் பிரசங்கங்களைச் செய்தார்; தமது சங்கத்தில் எல்லா சாதியினரையும் சாதியற்றவரையும் சேர்த்துக் கொண்டார். இவர் பன்னிரண்டு சீடர்கள் அல்லது மாணவர் களைக் கொண்டிருந்தார். இவர்களுள் ஒருவர் இராசபுத்திரர்; ஒருவர் சமையற்காரர்; ஒருவர் நாவிதர்; இன்னும் ஒருவர் கபீரென்னும் (Kabir) முஸ்லீம் நெசவாளர்; வட இந்தியாவில் தற்பொழுதும் கபீரின் செய்யுள்கள் வழக்கத்தில் உள்ளன. இவற்றில் முஸ்லீம் கூற்றின் சின்னங்களைக் காணலாம். இவர் சிலை உருவ வழிபாட்டையும் சாதிமுறையையும் கண்டித்தார். இந்துக்களும் முஸ்லீம்களும் இவருடைய சீடர்களாக இருக் கின்றனர். கபீர்பந்திகள் (Kabirpanthis) அல்லது 'கபீர் பாதையில் செல்லும் சுற்றுப்பிரயாணிகள் என்று வழங்கப்பட்ட இவர்கள், தாங்கள் அல்லா, இராமர் இவர்களின் குழந்தைகள் என்று உரிமை கொண்டாடினர்.

இந்து சமயமும் இஸ்லாமும் எவ்விதம் ஒன்றுக்கொன்று எதிர்த்துச் செயலாற்றின என்பதை எடுத்துக்காட்டச் சில செய்யுள் பத்திகளை இங்கே மேற்கோளாகக் குறிப்பிடலாம்.

I

ஓ பணியாளனே, என்னை எங்கே தேடுகிருய்? பார்! நான் உன் பக்கத்திலேயே இருக்கின்றேன். நான் கோயிலிலுமில்லை; மசூதியிலுமில்லை; நான் காபாவிலுமில்லை; கைலாசத்திலுமில்லை.

நான் சடங்குகளிலும் பிராயச்சித்தங்களிலும் இல்லை; யோகாவிலும் துறவு பூணுவதிலுமில்லை.

நீ உண்மை பக்தனாக இருந்தால் என்னை உடனே காண்பாய்;

நீ என்னை ஒரு விநாடிக் காலத்துக்குள் சந்திப்பாய். கபீர் கூறுகிறான், 'ஓ சாதுவே, இறைவன் எல்லா மூச்சுக்கும் மூச்சு ஆவான்.'

## II

'அவர் எந்தச் சாதியைச் சேர்ந்தவர் என்று ஒரு துறவியைக் கேட்கவேண்டியதில்லை. ஏனென்றால், முனிவரும், வீரனும், வணிகனும், முப்பத்தாறான எல்லா சாதிகளும் இறைவனையே நாடுகின்றனர்.

ஒரு முனிவருடைய சாதி எதுவாக இருக்கக்கூடும் என்று கேட்பது மடமையாகும். நாவிதனும், வண்ணானும், தச்சனும் இறைவனை நாடுகின்றனர்.

ராய்தாசும் (Raidas) ஆண்டவனை நாடுபவராயிருந்தார். சுவாபாச்சா (Swapacha) என்னும் ரிஷி சாதியில் சக்கிலி. இந்துக்களும் முஸ்லீம்களும் சிறப்பு வேறுபாடுகளின்றி அம் முடிவையடைந்திருக்கிறார்கள்.

## XLII

'புனித நீராடுமிடங்களில் நீரைத் தவிர வேறெதுவும் இல்லை; இவையெல்லாம் பயனற்றவை என்பதையும் நான் உணர்வேன்.

ஏனென்றால், இவற்றில் நான் நீராடி இருக்கிறேன். சிலை உருவங்களெல்லாம் உயிரற்றவை; அவைகள் பேசமாட்டா.

நான் அவர்களிடம் உரக்கக் கதறி இருக்கிறேன். ஆதலால் நான் இதை அறிவேன். புராணமும் குர்ரானும் வெறும் வார்த்தைகளே; திரையை எடுத்தபின் இதை நான் உணர்ந்தேன். கபீர் அனுபவம் நிறைந்த சொற்களையே உச்சரிக்கின்றான்; மற்ற எல்லாப் பொருள்களும் உண்மையல்ல என்பதை அவன் வெகு சிறப்பாக அறிவான்.'[1]

[1] 'கபீரின் நூறு கவிதைகள்' (One Hundred Poems of Kabir). எவிலின் அண்டர்ஹில் (Evelyn Underhill) என்பவருடைய உதவியைக்கொண்டு ரவீந்திரநாத் தாகூர் (Rabindranath Tagore) மொழிபெயர்த்துள்ளார். லண்டனில் இந்தியச் சங்கத்தாரால் சிச்விக் அச்சகத்தில் அச்சடிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. கபீரின் காலம் 1440ஆம் ஆண்டிலிருந்து 1518ஆம் ஆண்டுவரை என்று குமாரி அண்டர்ஹில் குறிப்பிடுகிறார். திரு. ஆமத்ஷா கபீரின் கவிதைகளை இந்தியாவிலிருந்து மொழிபெயர்த்துள்ளதை ஐக்கியப் பிரதேசத்திலுள்ள (U.P.) ஹமீர்பூர் என்னும் இடத்தில் 1917-ல் வெளியிட்டுள்ளார்கள்'.

இப் போதனை ஜலாலுத்தீன் ரூமியும் (Jalal-ud-din Rumi), ஹஃபீஸும் (Hafiz), மற்றப் பாரசீக அனுபூதி நெறியாளரும் அளித்துள்ள போதனையை ஒத்திருக்கிறது. அவர்களின் தத்துவத்தைப் பதினாரும் நூற்றாண்டில் அபுல் ஃபாஸலும் (Abu-l Fazl) அக்பரும் கடைப்பிடித்தனர். கபீர் சீக்கிய (Sikh) சமயத்தை நிலைநாட்டிய நானக்குக்கு (Nanak) முதாதையாவார்.

'கபீரின் இறையியல் இந்துக்களையும் முஸ்லீம்களையும் ஒரு கடவுளை வணங்கும் முறையில் இணைக்க முயன்றது ஓர் அசாதாரண உண்மையாகும். இருந்தபோதிலும், சீக்கியர்களுக்கும் முகம்மதியர்களுக்குமிடையில் தணிக்க முடியாத வெறுப்புமூண்டது. அவ் வெறுப்பிலிருந்து கல்சாவும் (Khalsa) சீக்கிய இராணுவ நிறுவனமும் தோன்றின. இவைகள் மொகலாயப் பேரரசர்களின் பகைவர்களைப் படைத்தன. சாதி முறையைப் புறக்கணித்த ஒவ்வொரு சமயப் பிரிவிலும் சாதிமுறை மீண்டும் நுழைந்தது என்பதுவும் குறிப்பிடத்தக்கதாகும்' என்று டாக்டர் ஃபர்குஹார் (Dr. Farquhar) உண்மையாகக் குறிப்பிடுகிறார்.[1]

### பெண்களை ஒதுக்கிவைத்தல்

கவுடில்யர் (Kautilya) எழுதிய அர்த்தசாஸ்திரத்தைப் (Arthasastra) போன்ற இந்தியப் புராதன இலக்கியங்கள் சிற்சில சமயங்களில் பெண்களை ஒதுக்கிவைக்கும் பழக்கத்தைப்பற்றிக் குறிப்பிட்டபோதிலும், அவ்வாறு பெண்களை ஒதுக்கிவைத்தல் செல்வர்களிடமும் ஓய்வான வகுப்பினரிடமும் நடைமுறையில் இருந்திருப்பினும், இந்தியாவின் பல பகுதிகளில் தற்போது இருப்பதைவிட அவ்வளவு கடுமையாக அப் பழக்கம் இருந்ததில்லை என்பதை வற்புறுத்தப் பல குறிப்பேடுகள் உள்ளன. ஆதிக்கம் பெற்றிருந்த முஸ்லீம்களின் மேற்கோளும், தங்கள் குடும்பங்களிலிருக்கும் பெண்களை அந்நியர்களிடமிருந்து காப்பதற்குக் கொண்டிருந்த அவாவும், 'திரைக்குப் பின்னால் வாழும் பழக்கத்தை'ப் பண்டைக் காலத்திலிருந்ததைவிட அப்பொழுது அதிகமாகப் பரப்பியிருந்தது; நவீன மரபாகவும் அமைந்திருந்தது.

## சுல்தானியத்தின் காலவரையறைப் பட்டியல் 1290–1526

### கில்ஜி வமிசம் (கில்ஜி)

| | |
|---|---|
| ஜலாலுத்தின் (ஃபிரோஸ்ஷா) அரியணையேறல் | 1290 |
| பஞ்சம் ... — ... | 1291 |

[1] 'Primier of Hinduism.' 2nd ed., Oxford University Press, 1912, p. 188.

மங்கோலிய இடையீடு ... ... 1292

எலிச்பூர் (இலிச்பூர்) இணைக்கப்பெறல் ... 1294

அலாவுத்தின் அரியணையேறல் – ஜலாலுத்தின் கொல்லப்படுதல் ... 1296

குஜராத்துப் படையெடுப்பு ... ... 1297–8

மங்கோலியப் படையெடுப்புகள் ... 1296–1305

தில்லி மங்கோலியர்களின் படுகொலை ... ? 1298

மாலிக் காஃபூரின் தெற்குப் படையெடுப்புகள் ... 1302–11

சித்தூர் தாக்கப்படுதல் ... ... 1303

குத்புத்தீன் முபாரக் ... ஜனவரி, 1316

ஹர்பால்தேவ் யாதவத்தை அழித்தல் ... 1318

குஸ்ரு கான், சட்டமுறையின்றி வந்தவர் ... 1318–20

## துக்ளக் வமிசம்

கியாஸுத்தின் துக்ளக் ஷா (காஸி மாலிக்) ... 1320

வங்காளத்திலும் தக்காணத்திலும் போர்கள் சுமார் 1321–4

முகம்மது ஆதில் பின் துக்ளக் (ஃபக்ருத்தீன் ஜூனா, உலுக்கான் என்றும் அழைக்கப்பட்டவர்) பிப்ரவரி, 1325

தில்லியிலிருந்து வெளியேறல்; தௌலதாபாத் நிறுவப்பெறல் ... 1327

வெள்ளிக்குப் பதிலாகப் பித்தளை செப்புக் காசுகளைப் பயன்படுத்துவதை வற்புறுத்தல் 1329–32

இமயமலைப் பகுதியின்மீது படையெடுத்தல் ... 1337–38

வங்காளமும் மாபெரும் கலகம் செய்தல் ... 1338–39

பொதுவாகப் பேரரசின் சிதைவின் துவக்கம் சுமார் 1340

பல ஆண்டுகளாக நீடித்திருந்த பஞ்சத்தின் துவக்கம் 1342

மிக்க ஆற்றல் வாய்ந்த விஜயநகர இராச்சியம் 1346

தக்காணத்தில் பாமினி இராச்சியம் நிறுவப்பெறல் 1347

சுல்தான் குஜராத்திலும் சிந்துவிலும் தோன்றுதல் 1347–51

ஃபிரோஸ் ஷா துக்ளக் ... ... 1351

வங்காளத்தில் போர் ... ... 1353–54

சிந்துவைத் தாக்குதல் ... ... 1362–63

ஃபிரோஸ் ஷாவின் இறப்பு ... செப்டம்பர், 1388

## சுல்தானியத்தின் சிதைவு

பலதரப்பட்ட சிறிய இளவரசர்கள், மகமூத் துக்ளக் முதலியவர்கள் ... 1388–98

தைமூரின் படையெடுப்பு ... ... 1398

ஜான்புரி சுதந்திரம் பெறல் ... ... 1399

குழப்பம் ... ... ... 1399–1414

தில்லியிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் சையதுகள் என அழைக்கப்பட்டோர் ... 1414–50

## லோடி வமிசம்

சுல்தான் புகலூல் லோடி அரியணையேறல் 1450
ஜான்புரியின் மீட்சி சுமார் 1476
சுல்தான் சிகந்தர் லோடி அரியணையேறல் 1489
பாரசீகத்திலும் இந்தியாவிலும் பூமி அதிர்ச்சி 1505
சுல்தான் இப்ராஹிம் லோடி அரியணையேறல் 1517
முதலாம் பானிப்பட்டு யுத்தம்; இப்ராஹிம் தோல்வியுற்று மரணமடைதல், சுல்தானியத்தின் முடிவு 1526

## ஆதாரங்கள்

எல்லியட், டௌசன் (Elliet & Douson) பகுதி iii–இந் நூலில் காணப்படும் கியாவுத்தீன் பரணி இயற்றிய தாரிகி ஃபிரோஸ் ஷாஹி (Tarikh-i Firoz Shahi) என்னும் நூல் கில்ஜி, துக்ளக் வமிசங்களுக்குச் சிறந்த ஆதாரமாகும். முகம்மது பின் துக்ளக்கின் காலத்திற்கு நான் 'இப்னே படுடா (Ibn Batuta) இயற்றிய சுற்றுப்பயணங்கள்' என்னும் நூலைப் பெரும்பாலும் பயன்படுத்தியிருக்கின்றேன். இந் நூலை டிஃப்ரேமரி (Defremery), சாங்குனெட்டி (Sanguinetti) என்பவர்கள் பிரெஞ்சு மொழியில் (அராபிய மூலப் பகுதியுடன்) மொழி பெயர்த்துள்ளனர். பாரீஸ் (1853–8). அந் நூலின் ஒரு பகுதி எலியட், டௌசன் இயற்றியுள்ள நூலில் நான்காம் பகுதியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது ஹெச்.எ.ஆர். கிப் (H.A.R. Gibb. லண்டன், 1929) என்பவர் இதை ஆங்கிலத்தில் சுருக்கிப் பதிப்பித்தார். 'சுற்றுப்பயணங்கள்' (The Travels) என்ற நூலின் மற்றொரு பதிப்பு ஹக்லுயிட் சங்கத்தாரால் இயற்றப்பட்ட Cathay and the Way Thither, யூல், கார்டியர் (Yule & Cordier) என்ற நூலில் தோன்றுகிறது, (1916) பகுதி iv, பக்கங்கள் 1–166, முகவுரைக் குறிப்புடன் பக். 1–79 வெளியாகியிருக்கிறது. இதில் உள்ள குறிப்புகள் காலத்தோடொட்டிய வளர்ச்சியுடையனவாக இல்லை. எலியட், டௌசன் நான்காம் பகுதியில் மற்ற ஆசிரியர்களைக் காணலாம். மேலும், ஃபிரோஸ் ஷாவும், பதோனியும் (Badaoni), மற்றவர்களும் அவர்களுடைய கருத்துகளின் சுருக்கத்தை அளிக்கின்றனர். எலியட், டௌசன் நான்காம் பகுதியில் தம்முடைய வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்து (Memoirs) எடுக்கப்பட்ட தைமூரியப் படையெடுப்பின் வரலாறும், ஐந்தாம் பகுதியில் லோடியின் வரலாறும் அடங்கியுள்ளன. இ. தாமஸ் (E. Thomas) The Chronicles of the Pathan kings of Delhi என்ற நூலும் எனக்கு மிக்க பயனுள்ளதாக இருந்தது. கபீரைப்பற்றி அகமது ஷா என்பவர், கான்பூர் 1911-ல் பதிப்புச் செய்துள்ள மூலப்பதிப்பைப் பார்க்கவும். அவரே சிறப்பாக மொழிபெயர்ப்புச் செய்துள்ளதையும் காண்க: ஹமீர்பூர் 1947. பிரமுகர்

களைப்பற்றியும் பிரச்சினைகளைப்பற்றியும் கூறும் சமீப கால நூல்கள்: 'Mahd' Husain, Rise & Fall of Md. bin Tughluq, Luzac-1938; Ishwari, Prasad, 'History of the Qaraunah Turks,' Allahabad, 1936; I. H. Qureshi 'Administration of the Sultanate of Delhi,' 2nd ed., Lahore, 1945; W. H. Moreland, 'The Agrarian System of Muslim India' Kunwar M. Ashraf, 'Life and Condition of the people of Hindustan, in F. A S. B.-Letters, 1935; R. S. Tripathi, 'Some Aspects of Muslim Administration'; Tara Chand, article in the 'Calcutta Review,' 1935, on 'Early Indo-Persian Literature and Amir Khusrav', அக்காலத்திய நாணயங்களைப்பற்றிப் பார்க்க: H. N. Wright, 'The Sultans of Delhi-their Coinage and Metrology.' தெற்குப் பகுதியைப்பற்றிக் காண்க. R. Sewell and S K. Aiyanagar, 'Historical Inscriptions of Southern India,' and S. K. Aiyanagar, 'South India and her Muhammadan Invaders.'

# 4. வங்காளம், மாளவம், குஜராத், காஷ்மீர் ஆகிய முஸ்லீம் இராச்சியங்கள்

**இவ்வதிகாரத்தின் நோக்கம்**

இந்திய வரலாற்றின் பொது வருணிப்பில் சூழ்ந்திருந்த ஒவ்வொரு இராச்சியத்தின் வரலாற்றையும் விவரமாக வரைந்து காட்ட இயலாவிடினும் அதை முற்றிலும் அறிந்துகொள்வதற்கு இவற்றின் முக்கிய இராச்சியங்களில் நடந்த சிறந்த நிகழ்ச்சிகளைப் பற்றிக் குறிப்பிட வேண்டியது அவசியமாகும். தக்காணத்தில் முஸ்லீம் பாமினி இராச்சியம் அல்லது பேரரசு 1347-ல் நிலை நாட்டப்பட்டது. இவ்விராச்சியம் கவனத்தைக் கவரும் சில சிறப்புக் கூறுகளைப் பெற்றுள்ளது. பாமினியப் பேரரசு சிதைவு களின்மீது கட்டப்பட்ட ஐந்து இராச்சியங்களின் சிக்கல் நிறைந்த நிகழ்ச்சிகள், இந்துப்பேரரசான விஜயநகரத்தின் வரலாறு ஆகியவையெல்லாம் ஐந்தாம் படலத்தில் குறிப்பிடப்படும். சிறிது காலமே வாழ்ந்த ஜான்புரி இராச்சியம் ஏற்கெனவே குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வதிகாரம் தில்லி சுல்தானியத்தின் காலத்திற்குரிய வங்காளம், மாளவம், குஜராத், காஷ்மீர் ஆகிய முஸ்லீம் இராச்சியங்களின் வரலாற்றின் முக்கியப் பகுதிகளைச் சுருக்கமாகக் கவனிப்பதற்கு ஒதுக்கி வைக்கப்படும். தொடர்ந்து வரும் குறிப்புகளை வரிசையாக எழுதுவதற்கு முயற்சி செய்யப்படவில்லை.

## வங்காளம் (Bengal)

முகம்மது பின் துக்ளக்கின் சர்வாதிகாரத்தை எதிர்த்து ஃபக்ருத்தின் செய்த கிளர்ச்சியின் விளைவாக உண்டான வங்காளத்தின் சுதந்திரம் அதாவது, தில்லி சுல்தானியத்திட மிருந்து முஸ்லீம் மாகாண அரசாங்கம் முற்றிலும் பிரிந்துபோதல் 1338-ல் தொடங்கியது எனக் கூறலாம். சில ஆண்டுகளுக்குப்பின் ஃபிரோஸ் ஷா துக்ளக் கிளர்ச்சி செய்த மாகாணத்தின்மேல்

தில்லி நிலைநாட்டியிருந்த மேலாண்மை முழுவதையும் அநேகமாகத் துறந்துவிட்டார். இம் மாகாணம் 1576ஆம் ஆண்டுவரை தனி அரசாங்கத்தின்கீழ் நீடித்திருந்தது. அவ்வாண்டில் அக்பரின் தளபதிகள் கடைசி ஆப்கானிய அரசரான தாவூத் ஷாவைத் தோற்கடித்துக் கொன்றனர். 1340ஆம் ஆண்டிலிருந்து சுல்தானியம் முற்றுப்புள்ளி பெற்ற ஆண்டான 1526ஆம் ஆண்டுவரை வங்காளத்தை ஆண்ட பல வமிசங்களின் உறுதியற்ற நிலைகள் நினைவில் வெகு எளிதாகக் கொள்ளும் நிகழ்ச்சிகளையோ, தன்னியல்பான முக்கியத்துவத்தைப் பெற்ற நிகழ்ச்சிகளையோ அளிக்கவில்லை. முஸ்லீம் வமிசங்களின் வரலாறுகளில் மிக அதிகம் இடம் பெற்றிருக்கும் போர்களும், கிளர்ச்சிகளும், படுகொலைகளும் பெரிய உலகத்தின் செயல்களிலிருந்து பிரித்து அவற்றை மாகாணத்தில் நடந்த நிகழ்ச்சிகளாக ஆராய்வதென்றால் அவை படிக்கமுடியாதவைகளாக இருக்கும். வங்காளத்தின் சுதந்திர அரசர்களின் வரலாறு இந்தியாவிலும் அவ்வுலகம் பொறுத்தவரை வெகுசில தொடர்புகளையே கொண்டிருந்தது என்பதைக் காட்டுகிறது. அம் மாகாணம் சாதாரணமாகத் தன் வழியே சென்றது. வெளித்தோற்றத்தில் தன் எல்லைப்புறங்களில் நடந்த சில போர்களைத் தவிர மற்ற எல்லா இராச்சியங்களையும் இம் மாகாணம் பொருட்படுத்தவில்லை. அதேபோல் மற்ற இராச்சியங்களும் இம் மாகாணத்தைப் பொருட்படுத்தவில்லை. குறிப்பிட்ட அக் காலத்தில் இந்துக் குடிமக்களின் நிலைமை எவ்விதம் இருந்தது என்பதைப்பற்றி மிகச் சொற்பமே தெரிந்திருந்தது. ஏனெனில், பாரசீக மொழியில் எழுதிய வரலாற்று அறிஞர்கள் அக் குடிமக்களை அடியோடு புறக்கணித்துவிட்டனர். அவர்களின் பொறுமை காட்டும் தன்மை பொது விதியாக இருந்தது எனத் தோன்றுகிறது. எனினும், ஜலாலுதீன் மதமாற்றம் செய்யப்பெற்றவராதலால், இவர் காலத்தில் மத மாற்றம் மிகுதியாக நடந்திருக்கக்கூடும் (1414–31).

**ஹுசேன் ஷா** (Husain Shah).

ஹுஸேன் ஷா (அலாவுத்தீன் ஹுசேன் ஷா (Ala-ud-din Husain Shah) கி.பி. 1493–1519 என்பவர் வங்காளத்தின் முஸ்லீம் அரசருள் சாலச் சிறந்தவரும் மிகப் பிரசித்தி பெற்றவருமாவார். இவர் அராபிய மரபில் தோன்றிய சையது ஆவார். இவர் ஷம்சுத்தீன் முஜாபர் ஷா என்னும் சர்வாதிகாரியின்கீழ் வசீர் அல்லது பிரதம மந்திரியாக வேலை பார்த்து வந்தவர். இச் சர்வாதிகாரி ஒரு நீக்ரோ அடிமையாவார். ருக்நுத்தீன் பார்பக் ஷா (Rukn-ud-din Barbak Shah, 1459–74) என்பவரின் கீழ் முதன் முதலாக முக்கியத்துவம் பெற்ற அபிசீனியக் கூட்டத்

தாரில் ஒருவராவர். இக் கூட்டத்திலிருந்து மூன்று அரசர்கள் தோன்றினர். முஜாபர் ஷா பதவியிலிருந்து விலக்கப்பட்டுக் கொலையுண்டதும், தலைவர்கள் ஒரு மனத்துடன் ஹுஸேன் ஷா என்பவரைத் தங்கள் மேலதிகாரியாகத் தேர்ந்தெடுத்தனர். இவர்கள் தம்மைத் தேர்ந்தெடுத்தது நியாயமானதே என்பதை இவர் நிரூபித்தார். இப்போதும் வங்காளத்தில் இவர் பெயர் பலருக்குத் தெரிந்துள்ளது. இருபத்து நான்கு ஆண்டுகள் நீடித்து இருந்த இவருடைய ஆட்சிக் காலத்தில் எந்தக் கிளர்ச்சியோ ஆட்சிக் கெதிரான எழுச்சியோ நடைபெறவில்லை. இவர் அமைதியானதும் மகிழ்ச்சி நிறைந்ததுமான ஆட்சியை நடத்தினர். மக்களால் நேசிக்கப்பட்டதுமல்லாமல் சுற்றி இருப்பவர்களின் நன்மதிப்பையும் பெற்று கௌர் (Gaur) என்ற இடத்தில் உயிர்நீத்தார். இவர் நாடோடியாகவும், தன் பெயரைப் புனைந்திருந்தவருமான ஜான்புரி அரசரை வேளாண்மைப் பண்புடன் வரவேற்றார்.

### நுஸ்ரத் ஷா (Nusrat Shah)

ஹுசேன் ஷா பதினெட்டு மக்களைத் தனக்குப்பின் விட்டு மறைந்தார். இவருக்குப் பின் எல்லோருக்கும் மூத்தவரான நுஸ்ரத் ஷா தலைவர்களால் வாரிசாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தம் சகோதரர்களைப் பொறுத்தவரை ஆசியாவில் சாதாரணமாகப் பின்பற்றிவரப்பட்ட பழக்கத்திலிருந்து விலகித் தம் சகோதரர் களைத் தாராள மனப்பான்மையோடும் பிரியத்துடனும் நடத்தினர். இவர் திர்ஹத் என்னும் இடத்தைக் கைப்பற்றி பாபருடன் மதிப்புமிக்க நிபந்தனைகளைக்கொண்ட ஒப்பந்தத்திற்கு ஏற்பாடு செய்தார். இவர் ஆட்சியின் பிற்காலத்தில் கொடிய ஆட்சி யாளரானர் எனக் கருதப்படுகிறது.

### கட்டடங்கள்

கௌரிலும் வங்காளத்தின் இதர பண்டை நகரங்களிலும் இருந்த மசூதிகள் பெரும்பாலும் செங்கற்களாலும் தனிப்பட்ட முறையிலும் கட்டப்பட்டவையாகும். கௌரில் இருக்கும் ஹுஸேன் ஷாவின் கல்லறையும் இவருடைய ஆட்சிக் காலத்தில் கட்டப்பட்ட சிறிய பொன் மசூதியும், நுஸ்ரத் ஷாவினல் கட்டப் பட்ட பெரிய பொன் மசூதியும், கதம் ரசூல் (Kadam Rasul) என்னும் கட்டடமும் தனிப்பட்ட கவனத்திற்குரியவை என்று குறிப் பிடலாம். கௌருக்கு இருபது மைல் தூரத்தில் உள்ள பண்டுவா (Pandua) என்னும் இடத்தில் 1368-ல் சிகந்தர் ஷா என்பவரால் கட்டப்பட்ட ஆதினா மசூதி (Adina mosque) நானூறு கோபுரங் களைக் கொண்டுள்ளது. இது வங்காளத்திலேயே மிகச் சிறப்பு

வாய்ந்த கட்டடம் எனக் கருதப்படுகிறது. கௌரின் எண்ணற்றதும், மிகப் பெரிதுமான சிதைவுகள் இருபது மைலிலிருந்து முப்பது மைல்வரை பரவியிருக்கின்றன எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

## இந்து இலக்கியம்

கி.பி. 1346-ல் பிறந்த கிரித்திவாசன் (Krittivasa) என்பவரால் சமஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட இராமாயணம் (Ramayana) மக்கள் மிக விரும்பிய வங்காள நூலாகும் என்று வங்காள இலக்கியத்தைக் கற்றறிந்த வரலாற்று அறிஞர் குறிப்பிடுகிறார். அதை வங்காளத்தின் விவிலிய ஏடு (Bible) என்றழைக்கலாம். பிற்காலத்தில் துளசிதாஸ் (Tulsi-Das) எழுதிய நூல் மேல் மாகாணங்களில் பெற்ற மதிப்பை இந்நூல் வங்காளத்தில் அடைந்தது. சில முஸ்லீம் அரசர்கள் இந்து இலக்கியத்தின் சிறப்புகளைப் பொருட்படுத்தாமலில்லை. நுஸ்ரத் ஷாவின் ஆணையின்படி வங்காள மொழியில் மகாபாரதம் இயற்றப் பட்டது. இவர் இவ்விதம் செய்து, இதே செயலை ஆற்றிய அக்பரை முந்தினார். அப்பாடலின் முந்திய பதிப்பு ஒன்று பதினைன்காம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது என்று நம்பப்படுகிறது. மற்றொன்று ஹுஸேன் ஷாவின் காலத்தில் இவருடைய தளபதியான பாரகல் கானின் (Paragal Khan) ஆணையின்படி இயற்றப் பட்டது. 'பேரரசர் ஹுசேன் ஷா எவ்வளவு இந்துக்களின் மதிப்பையும் நம்பிக்கையும் பெற்றிருந்தார் என்று பண்டை வங்காள இலக்கியத்தில் அடிக்கடி குறிப்பிடப்பட்டுள்ளது. உண்மையில் முஸ்லீம் பேரரசர்களும் தலைவர்களும் அளித்த ஆதரவும் உதவியும் இந்து இராசாக்களின் நீதிமன்றங்களில் வங்காள மொழியைப் பயன்படுத்துவதற்காக அளித்த ஊக்கமும் உண்மை போலும். இவ்வரசர்கள் தங்களுடைய பிராமண ஆசிரியர்களின் அறிவுரையின்படி சமஸ்கிருத மொழியையே ஆதரிக்க விரும்பினர்.[1]

## மாளவம் (Malwa)

தற்போது பெரும்பாலும் மத்திய பாரதத்தில் உள்ள மிகப் பரந்த பகுதியாகவும், தெற்கில் நர்மதா, வடக்கில் சாம்பல் (Chambal) மேற்கில் குஜராத், கிழக்கில் பண்டேல்கண்ட் ஆகியவைகளுக்கிடையில் அமைந்திருக்கும் மாளவம் (Malwa) இந்துக்களின் காலத்தில் பிரசித்தி பெற்ற இராச்சியங்களின் தலைநகராக

[1] Dinesh Chandra Sen, 'History of Bengali Language and Literature,' Calcutta University—1911, pp. 12, 14, 170, 184, 201, 203.

படம் 15



(அ) பாபர்



(b) ஹுமாயூன்

*புகைப்படம் 16*



(a) அக்பர்



(b) ஜஹாங்கீர்

இருந்துவந்தது. பதின்மூன்றும் நூற்றுண்டின் ஆரம்பத்தில் இது இல்துத்மிஷால் சூறையாடப்பட்டது. 1310-ல் அலாவுத்தீன் கில்ஜியின் அதிகாரி ஒருவர் இதை அடிபணியச் செய்தார். அதன்பின் சுல்தானியம் சிதறுண்ட காலம்வரை முஸ்லீம் பிரதிநிதிகளால் நீடித்து ஆளப்பட்டு வந்தது.

## கோரி வமிசம்

தைமூரியப் படையெடுப்பிற்குப்பின் 1398-ல் கோரைச் சேர்ந்த ஷிஹாபுத்தீன் முகமது (Shihab-ud-din-Muhammad) என்னும் மிகப்பெரிய சுல்தானின் வழித்தோன்றிய பிரதிநிதி ஒருவர் சுல்தான் ஷிஹாபுத்தீன் கோரி என்றபட்டப்பெயரைப் புனைந்துகொண்டு தன்னையே அரசனுக அறிமுகப்படுத்திக்கொண்டார் (1401). இவர் இப் புதிய பதவியில் நான்கு ஆண்டுதான் அமர்ந்திருக்க முடிந்தது. அப்போது இவர் திடீரென்று மரணமடைந்தார். ஒருவேளை இவர் தம்முடைய மூத்த மகனுல் விஷமிட்டுக் கொல்லப்பட்டிருக்கலாம். இவ்வாறு நிறுவப்பட்ட சுதந்திர இராச்சியம் 1401ஆம் ஆண்டிலிருந்து 1531ஆம் ஆண்டுவரை நூற்றுமுப்பது ஆண்டுகள் நீடித்திருந்தது. பின்னைய ஆண்டில் இது குஜராத்தால் கைப்பற்றப்பட்டது. நான்கு ஆண்டுகள் கழிந்தபின் ஹுமாயூன் இதைத் தாற்காலிகமாகத் தில்லியின் ஆதிக்கத்திற்கு உட்படுத்தினர். ஆனுலும், இது அக்பர் ஆட்சிக் காலத்தில் முதற் சில ஆண்டுகள்வரை பேரரசின் பகுதியாகவில்லை (1561–64). இந்த முஸ்லீம் இராச்சியத்தின் அரசியல் வரலாறு நிரந்தரமாகக் கவரும் புதிய கூறுகளை அதிகமாகப் பெற்றிருக்கவில்லை. இவர் கட்டிய சிறப்பு வாய்ந்த கட்டடங்களுக்குத்தான் முக்கியமாக இவர்களை நினைவுபடுத்திக்கொள்கிறுர்கள்.

புதிய இராச்சியத்தின் முதல் தலைநகரம் தார் (Dhar) ஆகும். அங்கே ஒரு காலத்தில் ராஜ போஜர் (Raja Bhoja) என்பவர் ஆட்சி புரிந்தார். ஆனுல், ஹேஷாங் ஷா (Hashang Shah) என்னும் பட்டப்பெயர் புனைந்துகொண்ட இரண்டாவது சுல்தான் அரசவையை மாண்டு (Mandu) என்னு நகருக்கு மாற்றினுர். அங்கே இவர் சிறந்த பல கட்டடங்களைக் கட்டி முடித்தார். குஜராத்துடன் நடந்த போரில் தோல்வியுற்று ஓராண்டுவரை சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். ஆனுல், இவர் மீண்டும் அரியணைக்குக் கொண்டுவரப்பட்டு முறையின்றிப் பெற்ற அதிகாரத்தை 1432ஆம் ஆண்டுவரை தானே வைத்திருந்தார். அவ்வாண்டில் இவருக்குப் பின் இவருடைய மகனுன சுல்தான் மகமூத் கோரிவமிசத்தின் மூன்றுவது மன்னராகவும், கடைசி

மன்னராகவும் சிம்மாசனம் ஏற்ருர். இவர் மதிப்பற்றவராகவும் குடிப்பழக்கமுள்ள பிராணியாகவும் இருந்தார்.

### கில்ஜி வமிசம்

சுல்தான் முகம்மது கோரி 1436-ல்[1] கில்ஜிய துருக்கியரும், தம் அமைச்சருமான மகமத்காளுல் விஷமிடப்பட்டுக் கொல்லப் பட்டார். இவ்வமைச்சர் சிம்மாசனத்தைக் கைப்பற்றி, கில்ஜி வமிசத்தை நிறுவினுர். இவ் வமிசம் சுமார் நூறு ஆண்டு நீடித் திருந்தது. இவர் மாளவ அரசர்களுள் மிக்க மேன்மை பொருந் தியவராவர். இவர் குஜராத்தின் சுல்தான்கள் உள்பட எல்லை யிலிருக்கும் பலரோடும், இராஜபுதனத்தின் அரசர்களோடும், நைஸாம் ஷா பாமினியோடும் (Nizam Shah Bahmani) போரிட்டுச் சுறுசுறுப்பான வாழ்க்கையை மேற்கொண்டிருந்தார். இவர் ஒழுங்கற்ற முறைகளைக் கையாண்டு முடியைப் பெற்றதை ஃபிரிஷ்டா புறக்கணித்து விட்டு இவருடைய நீதியைப்பற்றிச் சிறப்பாகப் புகழ்கிருர். பொதுவாக நற்குணத்தைப் பெற்றிருந் தார் என்று குறிப்பிடுகிருர்.

'சுல்தான் மகமூத் பண்பட்டவரும், துணிவுமிக்கவரும், முறைதவருதவரும், கற்றறிந்தவருமாவார். இவருடைய ஆட்சிக் காலத்தில் இந்துக்கள், முஸ்லீம்கள் முதலிய எல்லாக் குடி மக்களும் மகிழ்ச்சியுற்றிருந்தனர். ஒருவரோடொருவர் நட்புக் கொண்டு விளங்கினர். இவருக்குப் போர்க்களத்திற்குப் போகாமல் ஓர் ஆண்டுகூடக் கழியவில்லை. இதனுல் பாசறையே இவர் இல்லமாகவும், போர்க்களமே இவர் ஓய் வெடுத்துக்கொள்ளும் இடமாகவும் இருந்தன. இவருடைய ஓய்வுநேரம் உலகத்தின் வெவ்வேறு அரசர்களின் அரசவையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் வரலாறுகளையும் படிப்பதிலும் கேட் பதிலும் செலவிடப்பட்டது'.

இப் புகழ்ச்சியை முற்றிலும் நம்பலாமெனில் அது மகிழ்ச்சிக் குரியதாகும். ஆனுலும் மகமூத் இந்துக்களை அடிமைப்படுத்தி யதும், கோவில்களைப் பாழ்படுத்தியதுமான செயல்கள் குறிப் பிடப்பட்டுள்ளதனுல் இப் புகழ்ச்சியை எளிதில் நம்புவது மிகக் கடினமாகும். சித்தூர் இராணுவுடன் நடத்திய போர் தெளி வான முடிவை அடைந்திருக்க முடியாது. ஏனெனில், தாம் பெற்ற வெற்றியின் நினைவாக மகமூத் உன்னதமான வெற்றிக் கோபுரம் ஒன்றைக் கட்டினுர். இதே போன்ற மதிப்பைத் தானும்

[1] ஹி.பி. 840—கி பி. 6, ஜூலை 1436—4, ஜூலை 1437—Wright's 'Catalogue' என்ற நூலில் உள்ள பதினைந்தாம் எண்ணிக்கை பெற்ற நாணயம் உறுதிப் படுத்துகிறது.

பெற்றிருப்பதாகக் கூறிக்கொண்டு சுல்தானும் மாண்டு (Mandu) நகரில் இருக்கும் சிறந்த ஏழடுக்குக் கோபுரத்தைக் கட்டினர். துரதிர்ஷ்டவசமாக இக் கோபுரம் இடிந்து வீழ்ந்துவிட்டது.

## தந்தையைக் கொன்ற குற்றத்தைப் புரிந்த சுல்தான் நசிருத்தீன்

அடுத்த சுல்தானன கியாஸுத்தீன் (1469–1501) தம் வாழ் நாளிலேயே 1500-ல் தம் மூத்த மகனை நசிருத்தீனிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு அமைதியாக இருந்தபோதிலும் சிறு மனப்பான்மை நிறைந்த ஆட்சிக்கு முற்றுப்புள்ளியிட்டார். எனினும், எங்கும் பரவியிருந்த கிளர்ச்சிகளைக் கண்ட மகன் 1501-ல் தன் தகப்பனுக்கு விஷமிட்டுக் கொன்று, அவரை உலகத் திலிருந்து நீக்கினன். 1617-ல் மாண்டுவில் தங்கியவரும், அங்கிருந்த புகழுக்குரிய கட்டடங்களைப் புதுப்பித்தவருமான ஜஹாங்கீர் (Jahangir), நம்பத்தகாததாயிருப்பினும் உணர்ச்சி ததும்பும் முறையில் இந் நிகழ்ச்சியைப்பற்றி வருணித்துள்ளார். இவர் நசிருத்தீனின் கல்லறையைத் தகர்த்து அவர்மீது கொண்டுள்ள வெறுப்பை வெளிப்படுத்திக்கொண்டார். 'நொறுக்கப்பட்ட இவருடைய எலும்புகளையும், அழிவடைந்த கால்களையும் நான் நர்மதை நதியில் எறியுமாறு கட்டளையிட்டேன்.'[1]

நசிருத்தீன் பதவியிலிருக்கும்பொழுது கொடிய மிருகத்தைப்போல் நடந்துகொண்டார். 1512-ல் இவர் ஜுரத்தால் இறந்தார். இவருக்குப் பின் இவருடைய மகனை இரண்டாம் மகமூத் பதவியேற்றார். தன் வமிசத்தின் கடைசி அரசராக இருந்த இவர் குஜராத்தின் பகதூர்ஷா என்பவரால் முறியடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். அரச குடும்பத்தின் ஆடவர்களெல்லாம் ஒழிக்கப்பட்டனர். இதிலிருந்து தப்பிய ஒருவர் ஹுமாயூனின் அரசவையில் இருந்தார். இவ்விராச்சியம் குஜராத்துடன் இணைக்கப்பட்டது.

## கட்டடங்கள்

கோட்டைகளால் சூழப்பட்டிருந்த மாண்டு நகரம் தற்போது சிதைவுண்டிருக்கிறது. உயர்ந்த மலையின் பரந்த உச்சியின்

[1] 'Memoirs of Jahangir,' translation by Rogers and Beveridge Rozal Asiatic Society, 1909, vol. i, pp. 365–7. தகப்பனைக் கொன்ற பழி ஹோஷாங் ஷா, நசிருத்தீன் ஷா ஆகியவர்களின்மீது சுமத்தப்படுவதை ஃபிரிஷ்டா நம்பவில்லை; ஆனாலும், இக் குற்றச்சாட்டுகள் இவ்விருவரைப் பொறுத்தவரையில் உண்மை என்று நான் உறுதியாகக் கூறுவேன். பின்னவரைப் பொறுத்தவரை ஷெர்ஷா, ஜஹாங்கீர் ஆகிய இரண்டு பேருக்கும் இதைப்பற்றித் தவறாகச் சொல்லப்பட்டுள்ளது என்பது பெரும்பாலும் பொருத்தமற்றதாகும்.

எதிரில் இருபத்தைந்து மைல்களுக்கப்பாலாக நீண்டிருந்த மதில் ஒன்று சுற்றியிருக்கும்படி இந் நகரம் அமைந்திருந்தது. எண்ணிக்கையற்ற மாபெருங் கட்டடங்களின் சின்னங்களை இன்னும் கண்டுபிடிக்கலாம். இக் கட்டடங்கள் மிக்க கட்டடக் கலைத்திறன் பெற்றவையாகும். இக் கட்டடங்களில் சில ஜாமி மசூதி (Jami Masjid) அல்லது தலைமை மசூதி, ஹிந்தோலா மகால் (Hindola Mahall), ஜஹாஸ் மகால் (Jahaz Mahall), ஹோஷாங் ஷாவின் கல்லறை (the tomb of Hoshang Shah), பஸ் பகதூர் (Buz Bahadur), ரூப்மதி (Rupmati) என்பவர்களின் அரண்மனைகள் மணற்கல்லாலும், சலவைக் கல்லாலும் கட்டப் பட்ட சிறப்பு வாய்ந்த பல கட்டடங்கள் என்பவையாகும். இக் கட்டடங்கள் தொல்பொருள் இலாகாவின் (Archaeological department) அதிகாரிகளாலும், தார் (Dhar) சிற்றரச நாட்டின் அதிகாரிகளாலும் சீர்படுத்தப்பட்டுப் பாதுகாக்கப்பட்டுள்ளன. இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேற்பட்டுப் புலிகளாலும், இதர காட்டு விலங்குகளாலும் நிறைந்திருந்த இம் மலைகளைத் தற் போது மிக வசதியாகக் காணலாம்; ஆய்ந்து தேடலாம்.

## குஜராத் (Gujarat)

குஜராத் என்னும் பெயர் விரிந்ததும் தெளிவற்றதுமான உட்பொருளைக் கொண்டுள்ளது. மிக விரிந்த பொருளில் இது குஜராத் மொழி வழங்கிவரும் எல்லா நிலப்பகுதியையும் குறிப்ப தாகவும், இதனால் கட்ச் தீபகற்பத்தை (கச்சு–Cutch) உட்கொண் டிருப்பதாகவும் கருதலாம்.[1] இப் பகுதி குஜராத்தில் சேர்க்கப் பட்டுள்ளதாகக் கருதப்படுவதில்லை. சாதாரணமாக வழங்கும் பொருளில் ‘கட்ச்’ பகுதியை விலக்கிவிட்டால் குஜராத் பெரு நிலப் பகுதியில் உள்ள மிகப் பெரிய மண்டலத்தையும் தற்பொழுது கத்தியவார் (Kathiawar) என்று அழைக்கப்படுவதும், பண்டைக் காலத்தில் சௌராஷ்டிரா (Saurashtra) என்று இந்துக்களாலும், சோராத் (Sorath) என்று முஸ்லீம்களாலும் அழைக்கப்பட்டு வந்ததுமான தீபகற்பத்தையும் உட்கொண்டிருந்தது. சிலர் தெற்கு எல்லையை நர்மதை நதிக்கரையிலும், மற்றும் சிலர் அதைத் தாமன்வரை (Daman) விஸ்தரித்தும் அமைக்கிறார்கள். முஸ்லீம்களின் காலத்தில் தப்தி (Tapti) நதியின் முகத்துவாரத் திலிருந்த சூரத்தும் (Surat), தெற்கில் இன்னும் தூரத்திலிருந்த டாமனும் திட்டவட்டமாக குஜராத்துடன் சேர்ந்தவையாகும். முஸ்லீம் காலத்து குஜராத் பெருநிலப்பகுதி வடக்குத் தெற்காக

[1] குஜராத் மொழி கட்சின் ஆட்சிமொழியும் இலக்கிய மொழியுமாகும். ஆனாலும், பேசப்படும் மொழி சிந்தி மொழியின் சிறப்பு மொழிப் பிரிவாகும்.

ராஜபுதனத்திலிருக்கும் சிரோஹி (Sirohi), பின்மால் (Bhinmal) என்ற இடங்களிலிருந்து டாமன்வரையிலும், கிழக்கு மேற்காக மாளவத்தின் எல்லையிலிருந்து கடல் வரையிலும் கட்ச் பாலைவனம் வரையிலும் பரவியிருந்தது என்று கொள்ளலாம். இங்ஙனம் வரையறுக்கப்பட்ட பகுதி தற்போதைய ஆமதாபாத் (Ahmadabad), கைரா (Kaira), பஞ்ச் மகால்கள் (Panch Mahals), புரோச் (Broach) —பாரோச் (Bharoch), சூரத் (Surat), தாணு (Thana) மாவட்டத்தில் ஒரு பகுதி என்பவைகளையும், முன்னாள் பரோடா (Baroda) இராச்சியம் அல்லது கெய்க்வாரின் (Gaikwar) ஆட்சிப்பகுதிகளையும், இதர பல சிறு இராச்சியங்களையும் பெற்றுள்ளது. இது போன்ற பல இராச்சியங்கள் தங்களுக்குள் பங்கிட்டுக்கொண்டிருந்த கத்தியவார் தீபகற்பம் முஸ்லீம்களின் காலத்தில் குஜராத்தின் ஒரு பகுதியாக இருந்தது எனக் கொள்ளலாம்.

இம் மாகாணம், குறிப்பாகப் பெருநிலப்பகுதி, அசாதாரண இயற்கை வன்மைகளைப் பெற்றிருந்தது. செழுமை வாய்ந்ததாகவும், தயாரிக்கப்பட்ட பொருள்களைச் சரிவரப் பெற்றதாகவும், பண்டைக்காலந்தொட்டே கடல் கடந்த நாடுகளுடன் லாபம் தரும் வாணிகத்தை நடத்திக்கொண்டிருந்த எண்ணற்ற துறைமுகங்களைப் பெற்றதாகவும் இப் பகுதி விளங்கியது. கைப்பற்றுவதற்குத் தகுதியுற்ற இவ்வித நாடு வடக்கு, மேற்கு இந்தியாவின்மீது படையெடுப்புகளை நடத்திய எல்லா இனங்களின் கவனத்தையும் கவர்ந்தது. காஸ்னியைச் சேர்ந்த சுல்தான் மகமூத் 1024-ல் நடத்திய பிரசித்திபெற்ற கொள்ளையானது சோமனுதபுரத்திலிருந்த (Somnath) இவருடைய படை வீரர்களுக்கு மிக்க கொள்ளைப் பொருளை அளித்தது. ஆனாலும், அப்பொழுது இப் பகுதியை நிரந்தரமாகக் கைப்பற்றுவதற்கு எம் முயற்சியும் செய்யப்படவில்லை. பன்னிரண்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் நடந்த படையெடுப்புகளும் நிரந்தரமான நலனை உண்டாக்கவில்லை. நாடு இந்து வமிசங்களால் நீடித்து ஆளப்பட்டு வந்தது. அலாவுத்தீன் கில்ஜியின் அதிகாரி ஒருவர் 1297-ல் இதை தில்லி சுல்தானியத்துடன் இணைத்தார். அவ் ஆண்டுக்குப் பிறகும் சுல்தானியம் முடிவடையும்வரை தலைநகரிலிருந்து முஸ்லீம் பிரதிநிதிகள் நீடித்து நியமிக்கப்பட்டு வந்தனர்.

**சுதந்திரம்**

1391-ல் நியமிக்கப்பட்டுச் செயல்முறையில் சுதந்திரமாகவே இருந்த ஸஃபர்கான் (Zafar Khan) என்னும் கடைசிப் பிரதிநிதி தான் கொண்டிருந்த பற்றை 1401-ல் வெளித்தோற்றத்திலும்

பின்வாங்கிக் கொண்டார்.[1] இவர் மகன் தாதர் கான் (Tatar Khan) 1403-ல் தகப்பனுரைச் சிறையிலடைத்து நசிருத்தீன் முகம்மது ஷா (Nasir-ud-din Muhammad Shah) என்ற பட்டப் பெயரைப் புனைந்துகொண்டு தன்னையே சுல்தானுக மாகாண சிம்மாசனத்தில் அமர்த்திக்கொண்டார். புதிய சுல்தான் 1404-ல் தம் தந்தையால் விஷமிடப்பட்டுக் கொல்லப்பட்டார்போலும். ஆனுலும், சுல்தான் முஸஃபர் ஷாவான (Sultan Mujaffar Shah) முதியவருக்குப் பின் 1407-ல் தம் பேரர், ஏற்கெனவே வாரிசாக நியமிக்கப்பட்டிருந்தவர் அகமது ஷா என்ற பட்டப்பெயரை புனைந்துகொண்டு பதவிக்கு வந்தார்.

**அகமது ஷா** (Ahmad Shah)

1411ஆம் ஆண்டிலிருந்து 1441ஆம் ஆண்டுவரை முப்பது ஆண்டு ஆட்சி புரிந்த அகமது ஷாவை சுதந்திர குஜராத்தின் உண்மை முகவர் எனக் கருதலாம். இவருடைய தகப்பனுரும் பாட்டனுரும் பதவியிலிருந்த சிறிதுகாலத்தில் அச்சமயம் அசாவல் (Asawal) என வழங்கப்பட்டு, ஆமதாபாத்தின் சுற்றுப்புறத்தி லிருந்த மிகச்சிறிய நிலப்பகுதியை அடக்கி ஆண்டு வந்தனர். அகமது ஷா தம் சக்தியையும் பெரும்பான்மைத் திறனையும் தம் ஆட்சிப்பகுதியை விரிவுபடுத்துவதிலும், நபிநாயகத்தின் சமயத் தைப் பரப்புவதிலும், தம் ஆட்சிப் பகுதியின் நிர்வாகத்தை விருத்தி செய்வதிலும் செலவிட்டார். தம் ஆட்சிக்காலம் முழுவதிலும் இவர் ஒரு தோல்வியையும் அடைந்ததில்லை. இவர் மாளவ சுல்தானியத்தின்மீதும், அசீர்கர் (Asirgarh), இராஜ புதனம், மற்றும் சுற்றுப்புற நாடுகள் முதலியவற்றின் தலைவர்கள் மீதும் எப்பொழுதும் வெற்றியடைந்துகொண்டிருந்தார். சுல்தான் அகமது என்பவர் சுல்தான் ஃபிரஸ்ஷின் (Sultan Firuz Bahmani) நெருங்கிய நண்பராவார் அவரைப்போலவே இவரும் புறச்சமயத்தினரோடு போரிடுவதிலும் அவர்களை அழிப்பதிலும் மிகுந்த கருத்துடையவராயிருந்தார். இவர் இந்து நகரமான அசாவலுக்கு அடுத்திருந்த ஆமதாபாத் என்னும் உன்னதமான நகரைக் கட்டினுர். "பூமியில் இதைப்போன்று அழகு வாய்ந்ததும் பகட்டானதுமான வேறெந்த நகரையும் பயணிகள் கண்டதில்லை என்று தல வரலாற்றறிஞர் கூறுகிறுர்.

**சுல்தான் மகமூத் பேகரா** (Sultan Mahmud Bigarha)

அகமது ஷாவின் பேரரான சுல்தான் முகமது பெகாரா அல்லது பேகர தம் பதின்மூன்ரும் வயதில் 1459-ல்

[1] ரைட் (Wright) என்பவர், ஜி. பி. டெய்லர் (G. P. Taylor) என்பவர் F. Bom. Br. R.A.S. for 1902-ல் எழுதியுள்ள கட்டுரையைப் பின்பற்றி ஹி.பி. 806.-கி.பி. 1403–4 என்று குறிப்பிடுகிருர்.

(ஹி.பி. 863) சிம்மாசனத்திற்கு வந்தார்; 1511ஆம் ஆண்டு வரை (ஹி.பி. 917) ஐம்பத்திரண்டு ஆண்டுகள் வளம்பெற ஆட்சி புரிந்தார். இவர் அதுவரை ஆட்சி புரிந்த இவரது மரபைச் சேர்ந்த அரசர்களுள் மிகச் சிறந்த அரசராவர். அரியணை ஏறும் பொழுது இளைஞராக இருந்தபோதிலும் தொடக்கத்திலிருந்தே இவர் ஓர் ஆடவனுக்குரிய பொறுப்பை மேற்கொண்டு, தன் மீதிருந்த காப்பாளரை விலக்கிவிட்டார். இது போன்ற காப்பாளரை அக்பரும் அதே வயதில் பெற்றிருந்தார்.

'குஜராத் இராச்சியத்திற்கு இவர் புகழும் ஒளியும் அளித்தார்; இவருக்கு முற்பட்ட குஜராத் அரசர்களிலும் பின் வந்த அரசர்களிலும் இவர் தலைசிறந்தவராயிருந்தார். நீதியிலும் தாராள குணத்திலும், சமயப்போர்கள் வெற்றி பெறுவதிலும், இஸ்லாமியச் சட்டங்களையும் முஸ்லீம்களின் சட்டங்களையும் பரப்புவதிலும், இளமையிலும், நடுப்பருவத்திலும், முதுமையிலும் நீதி வழங்குவதில் ஒரே வகையான அறிவுடைமை படைத்த தீர்ப்பு முறையிலும், அதிகாரம், சக்தி, தீரம், வெற்றி ஆகியவற்றிலும் இவர் ஒரு சிறப்பு வாய்ந்தவராக இருந்தார்.

தமது நாட்டின் சிறந்த வரலாற்றறிஞரிடமிருந்து வரும் உரம் வாய்ந்த இவ்விதப் புகழ்ச்சி தகுதியுற்றதே என்பது இவர் கண்ணோட்டத்தின்படி உண்மை நிகழ்ச்சிகள் எனக் கருதப் பட்டவைகளால் நிரூபிக்கப்பட்டது.

மகமூத் போரில் மிக மேன்மையாக வெற்றி பெற்றார். பரோடாவுக்கு (Baroda) வடகிழக்கிலுள்ள சாம்பானீர் (Chanpaner) அரசனுக்கும், கத்தியவாரிலிருக்கும் ஜூனகர் (Junagarh) என்ற அரசனுக்கும் இவர் தம்மையே தலைவராக்கிக் கொண்டார்: கட்சைக் கைப்பற்றி ஆமத் நகர் சுல்தான்மீதும், மற்ற மன்னர்கள்மீதும் வெற்றிபெற்றார்.

இவருடைய ஆட்சிக் காலத்தின் இறுதியில் போர்ச்சுகீசியர்களோடு போர் செய்தார்; அவர்களுக்கு எதிராக எகிப்து சுல்தானோடும் கள்ளிக்கோட்டையின் (Calicut) சாமோரினுடனும் கூட்டுறவு நேசத் தொடர்பைக் கொண்டிருந்தார். சூயஸ் கால்வாயில் கட்டப்பட்ட எகிப்திய கப்பற்படையொன்று அமீர் ஹூசேன் (Amir Husain) என்பவரின் தலைமையின்கீழ் 1507-ல் இந்தியாவை அடைந்தது. இங்கே இது மாலிக் அயாஸ் (Malik Ayaz) என்பவரின் தலைமையின்கீழ் இருந்த இந்தியக் கப்பல்களுடன் சேர்ந்தது. ஒருங்கிணைந்த படைகள் போர்ச்சுகீசியப்

படையணிப் பிரிவொன்றை வியக்கத்தக்க முறையில் தோற்கடித்தது; பிரதிநிதியின் மகனை டாம் லூரென்கோவைப் (Dom Luorenco) போரில் கொன்றது (1508ஆம் ஆண்டு ஜனவரி மாதம்). ஆனாலும், கத்தியவாரில் உள்ள டையூ (Diu) துறை முகத்துக்கப்பால் கடலில் ஓரிடத்தில் 1509-ல் நடைபெற்ற போரில் முஸ்லீம் கப்பற்படை அறவே தோற்கடிக்கப்பட்டது. அப்பொழுது கத்தியவார் குஜராத் இராச்சியத்திற்குட்பட்டிருந்தது. அந்நியர்கள் பீஜப்பூரிடமிருந்து (Bijapur) கோவாவை இறுதியில், 1510-ல் கைப்பற்றினர். அவர்கள் அக்காலத்திலிருந்து தங்களுடைய ஆட்சி நிலப்பரப்புகளை இந்திய அரசுகளிடமிருந்து காப்பாற்ற முடிந்தது. இருந்தபோதிலும், அவர்கள் 1535ஆம் ஆண்டுவரை டையூவில் ஓர் அரணையும் பெற முடியவில்லை. மிக்க செழுமை வாய்ந்த தம் மாகாணத்திலிருந்து வெறுக்கப்பட்ட ஊடுருவல்களைத் துரத்தும் செயலைப்போல வேறெந்தச் செயலும் அக்பரின் இதயத்தை நெருங்கி இருக்கவில்லை. எனினும், வெற்றி கொண்ட அக்பராலும் அவர்களைத் தீவிரமாகக் கலைக்க முடியவில்லை.

மகமூதின் தனிப்பட்ட சிறப்பியல்புகள் அவருடைய சமகாலத்தவர் மனத்தில் மிக ஆழமாகப் பதிந்திருந்தன. இவை இத்தாலியப் பயணியான லுடோவிக்கோ தி வர்தேமாவின் (Ludovicco di Varthema) வாயிலாக நம்பமுடியாத கதைகளாக ஐரோப்பாவில் வழங்கி வந்தன. சுல்தானுடைய மீசைகள் தலைக்குமேல் கட்டுமளவுக்கு நீண்டிருந்தன. இவரது தாடி இவருடைய கச்சையை எட்டியிருந்தது. அக்பரின் செயலாளரான அபுல் பாஸலைப்போல இவருடைய பசிச்சுவையும் இவர் ஒரு நாளுக்கு இருபது பவுண்டு எடையுள்ள ஆகாரத்தை உண்ணும் அளவுக்கு அசாதாரணமாக இருந்தது. இவர் குழந்தைப் பருவத்திலிருந்தே விஷமிடப்பட்டவர் என்றும், இதனால் இதன் விளைவுகளிலிருந்து தடைகாப்புப் பெற்றவராக இருந்தார் என்றும் நம்பப்படுகிறது. இவருடைய கையின்மேல் ஈ ஒன்று உட்கார்ந்த மாத்திரத்தில் பிணமாகக் கீழே விழுமளவுக்கு இவருடலில் விஷம் பாய்ந்திருந்தது. சாமுவெல் பட்லர் (Samuel Butler) இதனைக் குறிப்பிடுவதனால் இக்கதை ஆங்கில இலக்கியத்திலும் நுழைந்துள்ளது. 'காம்பே இளவரசன் நாள் தோறும் உண்ணும் உணவு, விரியன் பாம்பு வகைகளையும், நச்சுப்பாம்புகளையும், தேரைகளையும் உட்கொண்டிருந்தது'.[1]

[1] **Hudibras, Part ii, Canto i, Published in 1664.**

**சுல்தான் பகதூர் ஷா** (Sulttan Bahadur Shah)

மகமூத் பேகராவின் பேரனை பகதூர் ஷா குஜராத்தின் குறிப்பிடத்தக்க மிகக் கடைசி சுல்தானவார். இவர் 1526ஆம் ஆண்டின் இறுதியிலிருந்து 1537, பிப்ரவரி மாதம்வரை ஆட்சி நடத்தினர். பிந்திய ஆண்டில் அமைதியற்ற வாழ்வு போர்ச்சு கீசியர்கள் விளைவித்த துயர மரணத்தால் முடிவடைந்தது. மாள வத்தை 1531–32-ல் இணைக்கும்படி செய்த இரண்டாம் மகமூத் முறியடிக்கப்பட்டதனாலும், 1534 ல் தாம் சித்தூரைச் சிதறடித்த தனாலும் உண்டான இராணுவப் புகழில் தமக்குரிய முழுப்பங்கை யும் இவர் பெற்றுக்கொண்டார். சித்தூர் சிதறடைந்தபொழுது இராஜபுத்திரர்கள் தங்களுக்கு வழக்கமான பயங்கர உயிர்ப் பலியைச் செய்துகொண்டனர்.

ஹுமாயூன் பகதூர் ஷா தம் பீரங்கிப் படையின்மீது அளவு மீறிய நம்பிக்கை கொண்டிருந்ததனால் அடுத்த ஆண்டான 1535-ல் அறவே தோற்கடிக்கப்பட்டுத் தம் இராச்சியத்திலிருந்து துரத்தப்பட்டு, மாளவத்தில் கட்டாயமாகத் தஞ்சம் புக நேர்ந்தது. ஹுமாயூன் 'சாம்பானே' என்ற கோட்டையைப் பெருந்திறனோடு கைப்பற்றினர். கோட்டையின் சுவர்மேல் முதல் முதலாக ஏறியவர்களுள் இவரும் ஒருவராவர். ஆனாலும், தமது ஆப்கானிய எதிரியான ஷாவைச் (Sher Khan) சந்திக்க மொக லாயர் வெகு விரைவில் தாம் வெற்றி பெற்ற மேற்கிலிருந்து கட்டாயமாகத் திரும்பி அழைக்கப்பட்டார். அப்பொழுது பகதூர் ஷா தம் இராச்சியத்துக்குத் திரும்பிவர முடிந்தது.

சாதாரணமாகப் போர்ச்சுகீசியர்களுக்கும் குஜராத் அரசாங் கத்திற்குமிடையில் பகைமை நிறைந்த தொடர்புகளே இருந்து வந்தன; ஆனல், மொகலாயர்களிடமிருந்து வந்த துன்பம் பக தூரை பச்சீனைச் (Bassien) சரணடைத்தும், அவ் அந்நியர் களோடு அமைதி உடன்படிக்கை செய்துகொண்டும் போர்ச்சு கீசியர் உதவி செய்வதற்கான வாக்குறுதியைப் பெறும்படி செய்தது. அப்பொழுது வாணிகக் களமாக முக்கியத்துவம் பெற்றிருந்த டையூவின் துறைமுகம், அரண் ஆகியவற்றைப்பற்றி நடந்த பேச்சுவார்த்தைகள் பகதூர்ஷாவைப் போர்ச்சுகீசியரின் பிரதிநிதியான நூனேடா குன்ஹாவைச் (Nuno da Cunha) சந்தித்து அவருடைய கப்பலுக்குப் போகும்படி தூண்டியது. அப்பொழுது என்ன நடந்தது என்பதை எடுத்துரைக்கும் எட்டுக் குக் குறையாத குறிப்புகள்—நான்கு போர்ச்சுகீசியர், நான்கு முஸ்லீம்கள்—எல்லாம் மாறுபட்ட விவரங்களுடன் குறிப்பிடப் பட்டுள்ளன. அவற்றையெல்லாம் மிக்க ஆய்வுத் திறனுடன்

ஆராய்ச்சி செய்த கர்னல் வாட்சன் (Col. Watson) பின்வருமாறு தீர்ப்பு அளிக்கிறார்: 'எதிர்காலத்தில் புரியக்கூடிய ஏதேனும் ஒரு வஞ்சகச் செயலால் மற்றவனைப் பிடிக்க ஒவ்வொரு பக்கத்திலும் இருந்த தலைவனும் எண்ணினன். அமைதியாக நடைபெற வேண்டுமென்று கருதப்பட்டதும் மற்றவனுக்கு சாதகமான, ஆனல், பொய்யான பாதுகாப்பை அளிப்பதான அமைதி ஒன்றை ஏற்படுத்தியிருக்க வேண்டியதுமான இரு கட்சிகளின் சந்திப்பை ஒருவர்மேல் மற்றொருவர் கொண்டிருந்த அழிவைத் தரும் தெருச்சண்டையாக மாற்றியது. குஜராத்தின் சுல்தான் திரும்பிவர முயற்சி செய்தபொழுது கப்பலிலிருந்து குதித்தார் என்பதும், நீரில் இருந்தபொழுது ஒரு மாலுமி அவர் தலையில் ஓங்கி அடித்தார் என்பதும் உண்மையே. இவர் முப்பத்தொரு வயதே அடைந்திருந்தார். டையூ துறைமுகத்தின் தலைவரான மானுவல் டி சௌஸா (Manual de Souza) அதே காலத்தில் உயிரிழந்தார்.

பகதூர்ஷா அளவுமீறி அருந்திய மதுவும் மருந்துகளும் இவருடைய மூளையைப் பாதித்தன. உணர்ச்சிக்கு வசப்பட்டு மதியற்ற செயல்களைப் புரியும்படி தூண்டின.

**பிற்கால வரலாறு**

1537-ல் இவர் மரணமடைந்த காலத்திலிருந்து 1572–3-ல் மின்வெட்டு வேகத்தில் அக்பர் படையெடுப்புகளை நடத்தியபின் இம் மாகாணத்தைச் சேர்த்துக்கொள்ளும்வரை இதன் வரலாறு குழப்பமிக்க குறிப்பேடாக இருந்தது. இதன் விவரங்களை நாம் தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. முகலாயப் பேரரசுடன் இணைக்கப்பட்டபின்பும் குழப்பங்கள் அடிக்கடி ஏற்பட்டுக்கொண்டிருந்தன.

**கட்டடக் கலை**

மரத்தின்மீது மிக நேர்த்தியாகச் செதுக்கப்பட்ட சிற்பங்களைக் கொண்டும், மேலும் அழகு பெற்ற குஜராத்தின் நயநுணுக்க மிக்க கட்டடக்கலை இம் மாகாணத்திற்குரிய தனிப்பட்ட சிறப்பியல்பாகும். முஸ்லீம் படையெடுப்பாளர்கள் இந்து, சமணச் சிற்பிகளின் கவர்ச்சி மிக்க அமைப்புகளை ஒரு சில மாற்றங்களுடன் மேற்கொண்டு ஆமதாபாதிலும் காம்பேவிலும், இதர பல நகரங்களிலும் வியக்கத்தக்க முறையில் கண்களுக்குக் குளிர்ச்சி அளிக்கும் மிக நேர்த்தியான கல் தட்டிகளாலும் இதர அலங்காரங்களாலும் வளம் பெற்ற எண்ணற்ற கட்டடங்களைக் கட்டினார்கள். தொல்பொருள் இலாகாவால் வெளியிடப்பட்ட மிக

அழகான படங்களைக் கொண்ட இரு பெரிய தொகுதிகளில் டாக்டர் பர்ஜெஸ் (Dr. Burgess) என்பவர் குஜராத்தின் பெரு நிலப் பகுதிகளிலும் கத்தியவாரிலும் உள்ள பழைமை வாய்ந்த இந்து நினைவுச் சின்னங்களைப் பற்றி வருணித்துள்ளார். அதே ஆசிரியர் மற்ற மூன்று தொகுதிகளிலும் முஸ்லீம் கட்டடக் கலையைப் படங்களுடனும் சமமான ஆதாரங்களுடனும் வருணித்திருக்கிறார். இம் மாகாணத்தின் சிற்பிகள் தற்போதும் அவர்களுடைய சான்றோரின் திறனைப் பெருமளவு பெற்றிருக்கிறார்கள். குறிப்பாக ஆமதாபாத் மெச்சத் தகுந்த பல கட்டடங்களால் நிரப்பப்பட்டுள்ளது. ஆமதாபாத் நிலைநாட்டப்பட்டதிலிருந்து பதினெட்டாம் நூற்றாண்டுவரை—சுமார் மூன்று நூற்றாண்டுகள்—தம் புகழ் ஓங்கியிருந்த காலத்தில் அது உலகத்தில் மிக்க அழகு வாய்ந்த நகரங்களில் ஒன்றாக விளங்கி வந்தது. அப்பொழுது அதன் ஜனத்தொகை ஒன்பது இலட்சமெனக் கணக்கிடப் பட்டிருந்தது. வணிகர்களில் சிலர் இலட்சக்கணக்கில் செல்வத்தைப் பெற்றிருந்தனர். தற்போது இந் நகரம் மீண்டும் செல்வத்தையும் செழுமையையும் பெற்றுப் பாம்பே இராஜதானியின் இரண்டாவது பெரிய நகரமாக அமைந்திருக்கிறது. 1951-ல் இதன் ஜனத்தொகை எட்டு இலட்சமாகும். தலத்தில் வழங்கி வந்த பழமொழியின்படி ஆமதாபாத்தின் செழுமை மூன்று வகைப்பட்ட நூல்களை நம்பிக்கொண்டிருக்கிறது. பட்டு, தங்கம், பருத்தி.

## காஷ்மீர் (Kashmir)

### நாடு

இடைக்கால வரலாற்றில் காஷ்மீர் என்ற பெயர் ஜீலம் நதியின்மேல் செல்திசையில் சுமார் எண்பத்தைந்து மைல் நீளமும், இருபதிலிருந்து இருபத்தைந்து மைல் அகலமும் பரந்திருந்த அழகிய பள்ளத்தாக்கையே குறிப்பதாகும். பள்ளத்தாக்கினுள் இருந்த இந்து இராச்சியத்தின் நீண்ட கவர்ச்சி மிக்க வரலாறு படிப்பதற்குப் பொதுவாகத் துயருள்ளதாயிருக்கிறது. இதனுடைய அரசர்கள் பலர் கொடுங்கோலரசர்களாக ஆட்சி புரிந்தனர்.

### முதல் சுல்தான்

பதினான்காம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஸ்வாத் (Swat) என்னும் இடத்திலிருந்து வந்த முஸ்லீம் துணிகரச் செயல்வீரரான ஷா மிர்ஸா அல்லது மீர் (Shah Mirza or Mir) என்பவர் இந்து அரசரின் அமைச்சரானார். இவர் 1346-ல் சிம்மாசனத்தைக்

கைப்பற்றி, காலஞ்சென்ற அரசரின் மனைவியை மணம் புரிந்துகொண்டார். தம் தாராள வருமானக் கொள்கையால் தம் வமிசத்தின் நிலையை உறுதிப்படுத்திக்கொண்டார். *1359*ஆம் ஆண்டிலிருந்து *1378*ஆம் ஆண்டுவரை ஆட்சி நடத்திய இவருடைய மூன்றும் மகன் நில வருமான முறையை மேலும் செம்மைப்படுத்தினர். இங்ஙனம் செய்து தாம் ஒரு சிறந்த வீரன் என்பதை மெய்ப்பித்தார்.

**சுல்தான் சிகந்தர்** (Sultan Sikandar)

*1398*-ல் தைமூரியப் படையெடுப்பு நடந்தபொழுது ஆட்சி புரிந்துகொண்டிருந்த ஆறும் சுல்தானை சிகந்தர் (Sikandar) (*1393–1414*) மலைச்சுவர்கள் அளிக்கும் பாதுகாப்பைப் பெற்றிருந்த தனல் எதிர்க்க முடியாததாக இருந்த அப் படையெடுப்பிலிருந்து அவர் தப்பித்துக்கொண்டார். சிகந்தரின் உதார குணம் பாரசீகம் (Perisa), அராபியா (Arabia). மெஸோபடோமியா (Mesopotamia) என்ற இடங்களின் அறிஞர்களுடைய கவனத்தைக் கவர்ந்தது. ஆனுலும், இவர் துயருற்ற மதவெறியராஞர். விக்கிரகங்களை உடைப்பவர் என்று பெயர் பெறும் அளவுக்குக் கோயில்களையும் சிலை உருவங்களையும் நாசமாக்குவதில் இவருடைய ஆர்வம் முற்றியிருந்தது. இஸ்லாமைப் பரப்புவதில் கட்டுப்பாடின்றி வாள் பலத்தைப் பயன்படுத்திக் குடிமக்களில் பெரும்பாலோரை வெளித்தோற்றத்தில் முஸ்லீம்களின் சமயத்தை வலுவந்தமாகப் பின்பற்றும்படி இவர் செய்தார். அம் முயற்சியில் வெற்றியும் பெற்றுர். பிராமணர்களில் பலர் மத மாற்றம் செய்துகொள்ள மறுத்துவிட்டனர்; இவர்கள் தங்கள் உறுதியுடைமைக்காகத் தங்கள் உயிரை இழக்க நேர்ந்தது. மற்றும் பலர் நாடு கடத்தப்பட்டனர்; ஒரு சிலரே மதத்தைப் பின்பற்றினர்.

**சுல்தான் ஸெய்னுலாப்தீன்** (Sultan Zainul Abideen)

*1420*ஆம் ஆண்டிலிருந்து *1467*ஆம் ஆண்டுவரை சுமார் அரை நூற்ருண்டிற்கு நீண்டதும் வளம் பெற்றதுமான ஆட்சியை நடத்திய எட்டாம் சுல்தான் ஸெய்னுலாப்தீன் என்பவர் வேறுபட்ட வகையினராவர். பிற மதங்களுடன் பொறுமையோடிருக்கும் கொள்கையை இவர் கடைப்பிடித்தார். நாடுகடத்தப் பட்ட பிராமாணர்களைத் திரும்பி வரச்செய்தார்; இந்துக்களின் மேலிருந்த ஜெஸ்ஸியா அல்லது தலைவரியை (Jizya or Poll-tax) ரத்து செய்தார், கோயில்கள் கட்டுவதையும் அனுமதித்தார். மாமிசம் சாப்பிடுவதை இவர் விட்டிருந்தார். பசுக் கொலையைத் தடுத்தார். இவரை நியாயமுறவே முனிவர் என்று அழைத்தனர்.

இலக்கியம், ஓவியம், இசை முதலியவற்றை இவர் ஆதரித்தார். அராபிய, சமஸ்கிருத மொழிகளிலும், மற்ற மொழிகளிலும் எழுதப்பட்ட பல நூல்களை மொழிபெயர்க்கும்படி செய்தார். பாலங்கள், நீர்ப்பாய்ச்சல் வேலைகள் போன்ற ஏராளமான பொதுப்பணிகளை யாற்றினர். இவ்வகையில் இவர் அக்பரை ஒத்திருந்தார்; ஆனாலும், ஒரே மனைவியின்மீது கண்டிப்பான பற்றுதல் கொண்டிருப்பதைப் பின்பற்றுவதில் இவர் அம் மன்னரோடு வேறுபட்டிருந்தார்.

**பிற்கால வரலாறு**

மற்ற சுல்தானியர்களின் ஆட்சிகள் இவ் வரலாற்றில் குறிப்பிடப்படும் அளவுக்கு முக்கியத்துவமோ கவர்ச்சியோ பெறவில்லை. ஹுமாயூனின் உறவினரான மிர்ஸா ஹைதர் (Mirza Hyder) பதினோராண்டுகளாகப் (1540–1551) பள்ளத்தாக்கின் மீது படையெடுத்துப் பெயரளவிற்கு ஹுமாயூனின் பிரதிநிதியாக அல்லது அவர் சார்பாக உண்மையில் சுதந்திர சிற்றரசராக அதை ஆண்டு வந்தார். சில ஆண்டுகளுக்குப் பின் சாக் (Chak) என்னும் வமிசம் சிம்மாசனத்தைக் கைப்பற்றியது.

## சுல்தானியத்தின் கால வரிசை

(முக்கியமான தேதிகள் மட்டுமே)

| | |
|---|---|
| ஃபக்ருதீன் சுதந்திரமடைதல் | 1338 |
| ஹுசேன் ஷா ... ... ... | 1493-1518 |
| நுஸ்ரத் ஷா ... ... ... | 1518-1532 |
| வங்காளம் அக்பரால் இணைக்கப்படுதல் ... | 1576 |

## மாளவம்

| | |
|---|---|
| சுல்தான் ஷிஹாபுத்தீன் கோரி சுதந்திரம் பெறுதல் | 1401 |
| சுல்தான் மகமூத் கோரி ... ... | 1432 |
| சுல்தான் மகமூத் கில்ஜி, கில்ஜி வம்சத்தை நிலை நாட்டுதல் ... | 1436 |
| குஜராத்தைச் சேர்ந்த பகதூர் ஷா மாளவத்தை இணைத்துக் கொள்ளுதல் ... | 1531 |
| அக்பரால் மாளவம் இணைக்கப்படுதல் ... | 1561-64 |

## குஜராத்

| | |
|---|---|
| நஸீருத்தீன் முகம்மது ஷா சுதந்திர மடைதல் | 1403 |
| சுல்தான் அகமது ஷா, ஆமதாபாத் நிலைநாட்டப்படுதல் | 1411-31 |
| சுல்தான் மகமத் பேகர் ஷா ... ... | 1459-1511 |

| | | |
|---|---|---|
| போர்ச்சுகீசியர்களுடன் நடந்த கடற்போர்கள் | ... | 1507–1509 |
| போர்ச்சுகீசியர் கோவாவைக் கைப்பற்றுதல் | ... | 1510 |
| சுல்தான் பகதூர் ஷா ... | ... | 1526–37 |
| மாளவம் இணைக்கப்படுதல் ... | ... | 1531 |
| சித்தூர் தாக்கப்படுதல் ... | ... | 1534 |
| ஹுமாயூன் பகதூரைத் தோற்கடித்தல் | ... | 1535 |
| பகதூர் ஷா போர்ச்சுகீசியரால் கொல்லப்படுதல் | ... | 1537 |
| அக்பர் குஜராத்தை இணைத்துக் கொள்ளுதல் | ... | 1577–73 |

## காஷ்மீர்

| | | |
|---|---|---|
| சுல்தான் ஷம் சுத்தீன் ... | ... | 1346 |
| சுல்தான் சிகந்தர்–சிலை உருவங்களை உடைப்பவர் | ... | 1393–1416 |
| சுல்தான் ஸெய்னுலாப்தீன் ... | ... | 1420–67 |
| மிர்ஸா ஹைதர் ... ... | ... | 1541–51 |
| அக்பர் காஷ்மீரை இணைத்துக்கொள்ளுதல் | ... | 1586 |

## ஆதாரங்கள்

சிறிய அளவிலேயே தம் கவனத்தைக் கவர்ந்த வரலாற்றுக்காக நான் ஃபிரிஷ்டாவையும், ஸ்டிவர்ட்டின் வங்காளத்து வரலாறு (*1813*—Stewart, History of Bengal) என்ற நூலையுமே முக்கியமாகப் பயன்படுத்தியுள்ளேன். Nalini K. Bhattacharis' 'Coins and Chronology of the Early Independent Sultans of Bengal' என்ற நூலையும், 'History of Bengal', ed. by R. D. Banerjee, Dacca என்ற நூலையும் பார்க்கவும்.

ஃபிரிஷ்டா மாளவ வரலாற்றின் திடமான சுருக்கத்தை அளிக்கிறார்.

Col. Watson என்பவர் Bombay Gazetteer என்பதில் எழுதியிருப்பது குஜராத்திய முஸ்லீம் வரலாற்றின் சாலச் சிறந்ததும் தகுதியுடையதுமான சுருக்கமாகும். அதே தொகுதி மாளவத்தின் தலைநகரான மாண்டுவைப்பற்றிய சிறந்த குறிப்பை அளிக்கிறது. Bayley—History of Gujarat (1886), Whiteway—'The Rise of Portugese Power in India,' 1497–1550. (Constable, 1899) என்ற நூல்களையும் நான் பயன்படுத்தியுள்ளேன்.

எல்லா இராச்சியங்களுக்காக I. G.-ல் (*1908*) உள்ள கட்டுரைகள் பயன்படுகின்றன.

ஃபிரிஷ்டாவும் அபுல்பாஸலும் (Aini Akbari, பகுதி ii—ஜாரெட் மொழி பெயர்ப்பு) காஷ்மீரின் வரலாற்றைக் குறிக்கின்றனர்; இதை I. G.-யிலும் காணலாம். ஆனாலும், அநேக

விவரங்கள் தெளிவற்றிருக்கின்றன. சுல்தானியர்களின் வரலாறு மிக விவரமாக J. A. S. B. பாகம் i, 1885, 'காஷ்மீர் சுல்தானியர்களின் சதுரமான வெள்ளி நாணயங்கள் என்ற தலைப்பைக் கொண்ட கட்டுரையில் ரோட்ஜெர்ஸ் (Rodjers) என்பவர் ஆராய்ந்திருக்கிறார். T. W. Haig, J. R A S (1918)-ல் காஷ்மீரின் முகம்மதிய அரசர்கள் எழுதியுள்ளதையும் பார்க்க.

மற்ற வெளியீடுகளையும் குறிப்பிட்டு H. N. Wright என்பவர் 'Catlogue of the Coins in the Indian Museum' பகுதி ii, (Carvendon Press) 1907 என்ற நூலில் பல இராச்சிய நாணயங்களைப்பற்றிக் குறிப்பிடுகிறார்.

குஜராத் மாகாணத்தின் கலையைப்பற்றி பர்ஜெஸ் எழுதிய கீழ்வரும் நூல்கள் சிறந்த ஆதாரங்களாகும்.

(1) 'Report on the Antiquities of Kathiawad and Kachh,' 1876 (A. S. W. I., vol. ii=Imperial Seri s, vol ii).

(2) 'Muhammadan Architecture in Gujarat,' 1896 (A. S W. I. vol. vi=Imperial Series, vol. xxiii).

(3) 'Muhammadan Architecture of Ahmadabad'-Part I, 1900-A. S. W. I., vol. vii=Imperial Series, vol. xxiv)

(4) Ibid, Part II, 1905 (A. S. W I., vol. viii=Imperial Series, vol. xxxiii)

(5) 'Architectural Antiquities of Northern Gujarat,' 1903 (A. S. W. I., vol. ix—Imperial Series, vol. xxxii).

M. S. Commissariat, 'History of Gujarat,, 1938.

மடல் V

# தென்னிந்திய அரசுகள்

## 1. தக்காணத்தின் பாமினி வமிசம் (1347-1526)

### பாமினி வமிசம் : முதலாம் அலாவுதீன் சுல்தான்

முகம்மது பின் துக்ளக்கின் கொடுங்கோல் ஆட்சியின் காரணமாக 1343-1351ஆம் ஆண்டுகளுக்கிடையில் எழுந்த பல கிளர்ச்சிகள் பரந்து விரிந்திருந்த தில்லிப் பேரரசைச் சிறு பகுதியையுடைய அரசாக ஆக்கிற்று.

தில்லி சுல்தானின் அராபிய அல்லது துருக்கிய அதிகாரியும் சபர்கான் என்ற பட்டப் பெயர் பெற்றவருமான ஹசன் என்பவர் கி.பி. 1347ஆம் ஆண்டில் தக்காணத்திலிருக்கும் தௌலதாபாத்தைக் கைப்பற்றி, அவ்வாண்டின் இறுதியில் தம் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தினர். இவரே வரலாற்றில் முதலாம் அலாவுதீன் சுல்தான் என்ற பெயர் பெறுகின்ருர். தக்காணத்தில் பாமினி வமிசத்தை நிறுவியவரும் இவரே. இந்திய வரலாற்றில் கி.பி. 1347ஆம் ஆண்டிலிருந்து 1526ஆம் ஆண்டுவரைக்கும் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகள் இவ் வமிசம் முக்கியப் பங்கு பெறுகின்றது. பண்டையக் காலத்து பாரசீக நாட்டின் அரசன் பாமன் என்பவரின் மரபில் தோன்றியவர் என்று உரிமை கொண்டாடியதால் முதலாம் அலாவுதீன் தம்மை அலாவுதீன் பாமன் ஷா என்று அழைத்துக்கொண்டார். அப் பாரசீக மன்னர் ஆர்டா செர்சஸ் என்ற பெயராலும் சிறப்பாக விளங்கியவராவர்.

### தலைநகரான குல்பர்கா

குல்பர்காவில் (Gulbarga) தம் தலைநகரை நிறுவி, அந்நகருக்கு ஆசனபாத் என்ற முஸ்லீம் பெயரிட்டார்[1] 1351ஆம் ஆண்டில்

[1] ஆசனபாத் அல்லது ஹசனபாத், சுல்தானின் பெயரான ஹசன் என்பதை ஒட்டியிருக்கிறது. (பார்க்க E & D. பகுதி Viii, பக்கம் 16. ஹைதராபாத் அலுவலர்கள் குல்பர்காவைத் தவருக அழைக்கிருர்கள். இப்பெயரை தல்புர்கா என்றும், குல்பர்கா அல்லது குல்புர்கா என்றும் அழைக்கலாம்,

முகம்மது பின் துக்லக் இறந்தபின் அலாவுதீன் தக்காணத்தின் பெரும் பகுதியைக் கைப்பற்றுவதில் முனைந்தார். 1358ஆம் ஆண்டு முதலாம் அலாவுதீன் மறைந்தபொழுது, அவருடைய அரசு மேற்கில் கடல்வரைக்கும் கோவா (Goa), தாபோல் (Dahbol) என்ற துறைமுகங்களையும், உட்கொண்டிருந்த ஒரு பரந்த அரசாக இருந்தது. தாபோல் இப்பொழுது பம்பாயில் ரத்னகிரி (Ratnagiri) என்னும் மாவட்டத்தில் சிறிய நகரமாக இருக்கிறது. இந்நகரம் பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்து பதினாறும் நூற்றாண்டுவரை கொங்கணத்தின் (Konkan) தலைமைத் துறைமுகமாக விளங்கிற்று. போனகிர் (Bhonagir) அல்லது போங்கிர் (Bhongir) (17° 31'N; 78° 53'E) என்பது பாமினிப் பேரரசின் கிழக்கு எல்லையாக அமைந்திருந்தது. வெண் கங்கை நதி வட எல்லையாகவும், கிருஷ்ணை நதி தென் எல்லையாகவும் விளங்கிற்று. ஆட்சி நிர்வாகம் சீராகவும் எளிமையாகவும் நடைபெற வேண்டுமென்பதற்காக இவ்வரசு நான்கு மாகாணங்கள் அல்லது தரப்ஸ்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன.

### முதலாம் முகம்மது ஷா (Muhammad Shah); இந்துக்களுடன் போர்கள் (1358–73)

முதலாம் முகம்மது ஷா தம் ஆட்சிக் காலத்தில் (1358–73) பெரும்பான்மையான பகுதியை விஜயநகர இந்து அரசர்களோடும் தெலிங்கானா (Telingana) அல்லது வாரங்கல் (Warrangal) அரசர்களோடும் போர்புரிவதில் செலவிட்டார். இப்போர்களில் ஐந்து இலட்சம் இந்துக்கள் கொல்லப்பட்டனர். போரில் பங்கு பெறாதவர்களும் சுல்தானின் சமய வெறிக்கு இரையாயினர். இறுதியில் இப் படுகொலை நிறுத்தப்பட்டு, கைதிகள் போர் செய்யாதவர்கள் முதலானோர் கொல்லப்படக் கூடாது என்ற கருத்துக்கு இரு தரத்தாரும் இணங்கினர். வெளிநாட்டு இந்துப் பகைவர்களுடன் நடந்துகொண்டதுபோலவே முகம்மது ஷா தம் நாட்டினுள் இருந்த கொள்ளைக்காரர்களோடும் மிகக் கடுமையாக நடந்துகொண்டார். வருங்கால முகலாயப் பேரரசர்களைப் போன்று இவரும் கொள்ளையடித்தலைப் படுகொலையால் அடக்க முயன்றார். ஆறு அல்லது ஏழு மாத காலத்தில் சுமார் எட்டாயிரம் கொள்ளைக்காரர்களின் தலைகளைக் கொய்து நகரங்களின் வாயில்களில் குவித்து வைக்குமாறு ஆணையிட்டார். இவருடைய ஆட்சிக் காலத்தில் அரசாங்கக் கருவூலத்தில் ஏராளமான செல்வம் நிரம்பியிருந்தது. இவரிடத்தில் 3,000 யானைகள் இருந்தன. பாமினி அரசுக்கும், அதற்குப் பின்னர் அமைந்த அரசுகளுக்கும் ஆட்சி முறையை அமைத்துத் தந்தவர் முகம்மது ஷா ஆவர். ஆண்டுதோறும் நாடு முழுவதும் சுற்றுப்பயணம்

மேற்கொண்டார்; இதனால் மாகாணங்கள் நன்கு அடக்கி ஆளப் பட்டன. அரண்மனைப் பாதுகாவல் துறையை ஒழுங்குற அமைத் தார். ஆட்சி முறையில், தமக்கு உதவுவதற்கு எட்டு அமைச்சர்கள் கொண்ட ஒரு குழுவை ஏற்படுத்தினார்.

**ஃபிரோஸ் (Firoz, 1397-1422)**

முகம்மது ஷாவின் இளைய சகோதரரின் மகனான ஃபிரோஸ் எட்டாவது சுல்தானவார். மிகுதியான பிராமணர்கள் நியமிக்கப் பட்ட நிர்வாகத்தைச் சீர்திருத்துவதில் ஓராண்டு கழித்த பின்னர் ஃபிரோஸ் தம் கவனத்தை விஜயநகர அரசர் இரண்டாம் ஹரி ஹரன் எடுத்த படையெடுப்பைத் தடுக்கும் முயற்சியில் ஈடுபடுத் தினார். மழைக் காலத்தில் விஜயநகரப் படை எதிர்பாராத சமயத்தில் ஃபிரோஸ் திடீர்த் தாக்குதல் நிகழ்த்தினார். விஜய நகரப் படையில் குழப்பம் ஏற்பட்டது; இதனால் ஃபிரோஸ் அப் படையை எளிதில் தோற்கடித்து விஜயநகருக்கே விரட்டியடித் தார். ஹரிஹரனின் மகன் கொல்லப்பட்டான். இதன் பின்னர் மாளவம், குஜராத்து, விஜயநகரம் ஆகிய மூன்று அரசுகளும் தங்களுக்குள் ஒரு கூட்டுறவை ஏற்படுத்திக்கொண்டன. இக் கூட்டுறவு பாமினி அரசு வடக்கே விரிவதைத் தடுத்தது, என்றாலும், 1604ஆம் ஆண்டில் ஃபிரோஸ் விஜயநகரப் பேர ரசைத் தோற்கடித்தார். விஜயநகர இளவரசி ஃபிரோஸின் அந்தப்புரத்துக்குக் கொண்டுவரப்பட்டாள். இவ் வெற்றியினால் பாமினி அரசு தெற்கில் துங்கபத்திரா வரைக்கும் விரிந்தது. ரெய்ச்சூர் (Raichur), தோஆப் (Doab) தனி மாகாணங்களாக ஆக்கப்பட்டன.

ஃபிரோஸ் அளவு மீறிக் குடித்தும், இன்பக் கேளிக்கைகளில் மிகுதியாக ஈடுபட்டும் தம் சமயத் தத்துவங்களுக்கு முரண்பட்டு நடந்துகொண்டார். இவருடைய அந்தப்புரத்தில் ஐரோப்பிய நாடுகள் உட்படப் பல நாட்டுப் பெண்கள் இருந்தனர் ஒவ் வொருத்தியோடும் அவளுடைய தாய்மொழியில் இவரால் பேச முடிந்தது என்ற பெருமை இவருக்கு உண்டு. கோவா, தாபோல் போன்ற துறைமுகங்களின் வழியாக ஐரோப்பிய நாடுகளிலிருந்து பல விந்தைப் பொருள்கள் இவருக்கு வந்துகொண்டிருந்தன. ஃபிரோஸ் கட்டடங்கள் கட்டுவதில் மிகுந்த விருப்பம் கொண் டவர். தலைநகருக்குத் தெற்கில் பீமா (Bhima) நதிக்கரையில், ஃபிரோஸாபாத் என்ற இடத்தில் அரண் சூழ்ந்த மாளிகை ஒன்றை இவர் கட்டினார். இவரால் கட்டப்பட்ட பல அழகிய கட்டடங்கள் குல்பர்காவை அணி செய்தன. அக் கட்டடங்களுள் மிக முக்கியமானது தலைமை மசூதியாகும். இது ஸ்பானிய

(Spanis) நாட்டிலுள்ள கார்டோவா (Gardova) என்ற இடத்தி லிருக்கும் மசூதியைப்போல் இருக்கவேண்டும் என்று திட்ட மிட்டுக் கட்டப்பட்டதுஎன்று சொல்லப்படுகிறது. இந்தியாவில் முழுமையாகக் கூரையிடப்பட்டிருக்கும் மசூதி இது ஒன்று தான்.[1]

ஃபிரோஸ் பல படையெடுப்புகளை நடத்தினர். தம் ஆட்சிக் காலத்தின் இறுதியில் சுமார் 1402-ல் கிருஷ்ணா நதிக்கு வடக்கில் பாங்கல் (Bangal) என்ற இடத்தில் இவர் கடுமையாகத் தோற்கடிக்கப்பட்டார். இப்போரில் தம் படை வலிமையெல்லாம் இழந்து வலிமை குன்றியவராக நாடு திரும்பினர். தம்முடைய எஞ்சிய வாழ்நாட்களைத் தம் மனத்துக்கிசைந்த புனிதப் பணிகள் செய்வதில் செலவிட்டார். நாட்டின் நிர்வாகப் பணிகளை இரு துருக்கிய அடிமைகளிடம் ஒப்படைத்தார். கிருத்துவர்களின் பழைய, புதிய ஏற்பாடுகளைப் படிப்பதில் இவர் ஆர்வம் காட் டினர் என்றாலும் சமயப்பொறை இவரிடத்தில் இல்லை. 'மற்றச் சமயங்களிடத்துப் பொறை கொண்டவர்' என்று மீடோஸ் டேய்லர் கூறுவது சரியன்று.

ஃபிரோஸ் காலத்தில் பாமினி வமிசம் சிறந்து விளங்கிற்று என்று ஃபிரிஷ்டா (Firishta) கருதுகிறார்.

### அஹமது ஷா (1422–35)

துருக்கிய அடிமைகளின் நிர்வாகம் சுல்தானின் சகோதர ரான அகமது என்பவருக்குத் திருப்தி அளிக்காததால் அவர் கலப் ஹசன் பஸ்ரீ (Khalaf Hasan Basri) என்ற வெளிநாட்டு வணிகர் ஒருவரின் உதவியைக்கொண்டு ஃபிரோஸைப் பதவியி லிருந்து விலக்கி, அவரையும், அவரது மகனையும் கொன்றுவிட் டார். இதுபோன்ற துயர நிகழ்ச்சிகள் பாமினி அரசின் வரலாற்றில் சாதாரண நிகழ்ச்சிகளாகும். அஹமது எவ்வித எதிர்ப்புமின்றி சிம்மாசனமேறினர். தம்முடைய சகோதரன் காலத்தில் இஸ்லாமியப்படை அடைந்த நஷ்டங்களுக்கு வஞ்சம் தீர்த்துக்கொள்வதற்காக அகமது இந்துக்களோடு மீண்டும் போர் தொடங்கினர்; தமக்கு முற்பட்டவர்கள் கையாண்டதைவிட

[1] குல்பர்கா ஃபிரோஸின் மரணத்திற்குப் பின்னர் அழிவடைந்தது. அதன் பின்னர் அது தலைநகராக விளங்கவில்லை. இந்நகரம் பல நூற்றாண்டுகளாகப் புறக்கணிக்கப்பட்டு வந்தது. சமீப காலத்தில்தான் இது புதுப்பிக்கப்பட்டது. இப்பொழுது முப்பதினாயிரம் மக்களைக்கொண்ட சிறந்த வாணிக இடமாகச் செல்வம் கொழிக்கும் நகரமாக விளங்குகிறது இந் நகரிலிருக்கும் மசூதி கார்டோவாவிலிருக்கும் மசூதியைப் (Historic Landmarks, p. 94) போன்று இருக்கின்றது என்ற கருத்தை ஹெய்க் மறுக்கின்றார்.

மிகுந்த இரக்கமற்ற முறைகளைக் கையாண்டு விஜயநகர ஆட்சிப் பகுதியைத் தாக்கினர்.

'அகமது ஷா விஜயநகரப் பேரரசின் தலைநகரத்தைத் தாக்கு வதில் ஈடுபடாமல் சுற்றுப்புறப் பகுதிகளைத் தாக்கிக் கைப்பற்று வதில் முனைந்தார். தம்முடைய சிற்றப்பனும், முற்பட்டவரு மான முகமது ஷாவிற்கும் விஜயநகர ராயருக்குமிடையில் ஏற் பட்ட உடன்படிக்கைக்கு மாருக இவர் சென்ற இடங்களிலெல் லாம் ஆண்களையும், பெண்களையும், குழந்தைகளையும் இரக்கமில்லா மல் கொன்ருர். மூன்று நாட்களில் இருபதினையிரம் பேர் கொல்லப் பட்டனர். இதன் பின்னர் இக் கொலைநிகழ்ச்சியைக் கொண்டாட விழா ஒன்று நடத்தப்பட்டது. இந்துக்களின் கோயில்களிலுள்ள சிலைகள் உடைக்கப்பட்டன: பிராமணர்களின் கல்லூரிகளும் அழிக்கப்பட்டன.'

இறுதியில் விஜயநகரோடு உடன்படிக்கை செய்யப்பட்டது. வாரங்கல்லுக்கு எதிராக 1425ஆம் ஆண்டில் எடுத்த இராணுவ நடவடிக்கைகள் இறுதியில் அந்த இந்து அரசு சுதந்திரத்தை இழப் பதில் முடிந்தது. பாமினி அரசின் எல்லைகள் கடல்வரைக்கும் விரிந்தது. சுமார் 1428ஆம் ஆண்டில் தக்காணம் மீண்டும் கடும் பஞ்சம் ஒன்றினல் துன்புற்றது.

'அகமது ஷா மாளவ, குஜராத்து சுல்தான்களோடும், கொங் கணத்தின் இந்துத் தலைவர்களோடும் போர்புரிவதில் ஈடுபட்டார். குஜராத்துடன் நடத்திய போர் பல ஆண்டுகள் நீடித்தது. அது 1462-ல் பாதுகாப்புக் கூட்டுறவு உடன்படிக்கை ஒன்ருல் முடிவடைந்தது. இவ்வுடன்படிக்கையால் நைஸாம் ஷா (Nizam Shah) மிகுதியான பலனடைந்தார்.

### தலைநகரம் பீடாருக்கு மாற்றப்படுதல்

அகமது ஷா குல்பர்காவில் நோய்வாய்ப்பட்டதனல் அது அதிர்ஷ்டமற்ற இடம் என்று கருதித் தம் தலைநகரை வடகிழக்கில் சுமார் அறுபது மைலுக்கு அப்பாலுள்ள பீடார் (Bidar) என்ற இடத்திற்கு மாற்றினர். இத் தலைநகர் மாற்றம் அகமது ஷாவின் நுண்ணறிவைக் காட்டுகின்றது. புதிய தலைநகரைப் பற்றிய மீடோஸ் டெய்லரின் வருணிப்பு இதை நிரூபிக்கின்றது.

'பீடாரைப்போன்று அழகும் தூய்மையும் வாய்ந்த நகரம் தக்காணத்தில் வேறென்றும் இல்லை. சரளைக்கறகள் நிறைந் திருக்கின்ற ஓர் உயர் நிலப் பகுதியின் வடகிழக்கில் கடல் மட்டத் திலிருந்து 2,500 அடி உயரத்தில் ஒரு மேடு உள்ளது. இம் மேடு

தெற்கிலும் மேற்கிலும் திரும்பி, மஞ்சேரா பள்ளத்தாக்கின் விரிந்த சம்வெளிக்கு 500 அடிக்கு அப்பால் திடீரென்று ஓரிடத்தில் கீழிறங்குகிறது. இவ்விடத்தில்தான் பீடார் நகரக் கோட்டை கட்டப்பட்டிருக்கின்றது. இக் கோட்டை மஞ்சேராப் பள்ளத்தாக்கிற்கு எதிராக அமைந்து, இன்றும் அழியாமல் நின்று நிலைத்திருக்கின்றது. கோட்டையின் அரண் காப்பு மதில்கள் சரளைக்கற்களால் கட்டப்பட்டவை. நகரம் கோட்டைக்கு அடுத்திருந்தது. இவ்விரண்டிற்குமிடையில் அகல் வழிக்காக இடை வெளி விடப்பட்டிருந்தது; இவ்விடைவெளி மேட்டின் சிகரத்தின் தெற்கு வழியாக நீண்டிருந்தது. அகன்ற வீதிகளும் அமைக்கப் பட்டிருந்தன. கிணறுகள் ஆழமாக இருப்பினும் சுவையுள்ள தண்ணீர் ஏராளமாகக் கிடைத்தது. பழைய தலைநகர் குல்பர்காவைவிட இப் புதிய தலைநகர் எல்லா விதங்களிலும் சிறந்து விளங்கிற்று. பீடாரின் தட்பவெப்ப நிலை குல்பர்காவின் தட்பவெப்ப நிலையைவிடக் குளிர்ச்சியும் சுகாதார வசதியும் பெற்றிருந்தது. பழைய தலைநகரைவிடப் புதிய தலைநகரம் சிறந்த சூழலிலும் அமைந்திருந்தது. தற்சமயம் பீடார் ஒரு நாட்டுப்புற நகரமாகக் காட்சியளித்தாலும், அங்கு பாமினி அரசர்களின் புனிதமான நினைவுச் சின்னங்கள் அழிந்துவிட்டபோதிலும் வழிப் போக்கர் மறுபடியும் பார்க்க விரும்பும்படியான நகரம் பீடாரைத் தவிரத் தக்காணத்தில் வேறு நகரம் இல்லை.[1]

## இரண்டாம் அலாவுதீன்

அகமது ஷாவிற்குப்பின் இவருடைய மூத்த மகனை இரண்டாம் அலாவுதீன் (1435–57) என்பவர் அமைதியான சூழ்நிலையில் எந்தவித இடையூறுமின்றி அரியணை ஏறினர். விஜயநகரத்துடன் மீண்டும் தொடங்கப்பட்ட போர் இறுதியில் சுல்தானுக்குச் சாதகமான சூழ்நிலையில் முடிந்தது. போர் முடிந்தபின் சுல்தான் தன் கடமைகளை மறந்து மது, மாது போன்ற சிற்றின்பங்களில் மூழ்கி இருந்தார். இச் சமயத்தில் முஸ்லீம் சமுதாயத்தில் இருபெரும் பிரிவு ஏற்பட்டு; அரசின் ஆட்சிமுறையைக் குலைத்தன. ஒரு பிரிவு தக்காண முஸ்லீம்களைக் கொண்டது ; இப் பிரிவில் பெரும் பாலோர் ஸுன்னி (Sunni) முஸ்லீம்கள். இரண்டாவது பிரிவு, அராபியர்கள், துருக்கியர்கள், பாரசீகர்கள், மொகலாயர்கள் போன்ற அந்நிய முஸ்லீம்களைக் கொண்டது; இப் பிரிவினர் ஷியா (Shia) முஸ்லீம்களாவர். இப் பிரிவினைச் சேர்ந்த அதிகாரிகளின் தலைமையின்கீழிருந்த படையொன்று இந்துக்களால் தோற்கடிக்கப்பட்டபொழுது. பூனவுக்கு (Poona) வடக்கிலிருந்த

[1] Manuel, p. 169.

சாகன் (Chakan) என்ற அரணில் தஞ்சம் புகுந்தது. இச் சூழ்நிலையைத் தங்களுக்குச் சாதமாக ஆக்கிக்கொள்ள நினைத்த தக்காண முஸ்லீம்கள், வெளிநாட்டு முஸ்லீம் அதிகாரிகள்மீது துரோகக் குற்றம்சாட்டி அரணில் இருக்கும் சய்யிதுகளையும் மொகலாயர்களையும் அழிப்பதற்கு அனுமதிக்குமாறு சுல்தானை வற்புறுத்தினர். குடிபோதையில் இருந்த சுல்தான் அனுமதி வழங்கினார். தக்காண முஸ்லீம் தலைவர்கள் தொடக்கத்தில் இரக்கம் காட்டுபவர்கள் போல் நடித்துத் தங்கள் பலியாட்களின் நம்பிக்கையைப் பெற்ற பின்னர், வஞ்சகமாகச் சுமார் 1,200 சய்யதுகளையும், சுமார் ஆயிரம் வெளிநாட்டு முஸ்லீம்களையும் கொன்றார்கள். இவ்வாறு அலாவுதீன் குடிபோதையில் செய்த தவறு ஒரு பெரும் பயங்கர நிகழ்ச்சியில் முடிந்தது. அகமது ஷா அரியணை ஏறுவதற்கு உதவியவரும், பின்னர்த் தலைமை அமைச்சராகப் பணியாற்றிய வருமான கலப் ஹசன் (Khalaf Hasan) என்பவரும் கொல்லப்பட்டவர்களுள் ஒருவராவர். பெண்களும் தக்காண முஸ்லீம்களின் மிருகத்தனத்தால் மிகுந்த அவமானத்திற்கு உள்ளானார்கள். தன்னை ஏமாற்றிவிட்டார்கள் என்று இறுதியில் அறிந்த சுல்தான் படுகொலைக்குக் காரணமாயிருந்தவர்களைத் தண்டித்தார்.

## ஹுமாயூன் (Humayun, 1457-61)

அலாவுதீனுக்குப் பின் இவருடைய மூத்த மகனான ஹுமாயூன் அரச பதவியேற்றார். இவர் ஏற்கெனவே பல கொடுமைகளைச் செய்திருந்ததால் இரக்கமற்றதன்மையுள்ளவர் என்று பெயர் பெற்றிருந்தார். இவருடைய சகோதரருக்காக இவரைப் பதவியிலிருந்து விலக்கச் செய்யப்பட்ட முயற்சி நிறைவேறவில்லை. கிளர்ச்சிகளை அடக்குவதில் இரக்கமின்றி சுல்தான் நடந்து கொண்டார். கிளர்ச்சிகளை ஆதரிக்கின்றனர் என்று காரணமின்றியே சந்தேகிக்கப்பட்டு ஆடவர்களும் பெண்டிர்களும் உடைவாளால் குத்தப்பட்டோ, கைக்கோடரியால் துண்டு துண்டாக வெட்டப்பட்டோ, கொதிக்கும் நீர் அல்லது எண்ணெயில் தள்ளப்பட்டோ இரக்கமின்றிக் கொல்லப்பட்டனர்.

'எல்லா நிலங்களையும் நீரையும் கொளுத்திச் சாம்பலாக்கும் வகையில் இவருடைய கோபத்தீ கொழுந்துவிட்டெரிந்தது; இவருடைய மூர்க்கத்தனத்தின் தரகன் குற்றவாளிகளையும் குற்றமற்றவர்களையும் ஒரு விலைக்கே விற்றான் பிரபுக்களும், தளபதிகளும் சுல்தானுக்கு மரியாதை செலுத்தப் போகும் பொழுது தங்களுடைய மனைவி மக்களிடமிருந்து இறுதி விடை பெற்றுக் கொண்டும் உயில்களை எழுதிவைத்துவிட்டும் செல்வார்கள்;

பிரபுக்கள், அமைச்சர்கள், இளவரசர்கள், இறைமை வாரிசுகள் இவர்களில் பலர் வாளுக்கு இரையாயினர்'.

ஹுமாயூன் ஒரு பெருங் கொடுங்கோலன். இவர் இயற்கையாகவே மரணமடைந்தார் என்று சிலர் கருதுகின்றனர். இருப்பினும், இவர் குடிபோதையில் இருக்கும்பொழுது பணியாட்களால் கொல்லப்பட்டார் என்ற கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதாகும்.

இக் கொடுங்கோல் அரக்கன் இறந்தபொழுது உலகம் முழுவதும் மகிழ்ச்சியடைந்தது என்பதைக் கவிஞர் ஒருவர் பின்வரும் அடிகள்மூலமாக வெளிப்படுத்துகிறார் :

'ஹுமாயூன் ஷா உலகத்திலிருந்து மறைந்துவிட்டார்;
எல்லாம் வல்ல ஆண்டவனே, ஹுமாயூனின் மரணம்
தங்களுடைய அருட்பேறுகும்!
அவர் மரணமடைந்த நாள் உலகத்தின் மகிழ்ச்சி
நன்னாளாகும்;
இதனால் 'உலகத்தின் மகிழ்ச்சி' அவருடைய மரண
நாளைத் தருகிறது.'[1]

இக் கொடுங்கோலனின்கீழ் காஜா முகம்மது கவான் என்ற மேன்மைமிக்க அமைச்சர் பணியாற்றியது வியப்பிற்குரியது. இவ்வமைச்சரால் சுல்தானின் கொடுங்கோலாட்சியைத் தடுக்க இயலவில்லை. ஹுமாயூனுக்குப்பின் வந்தவர்களின் ஆட்சிகளில் முகம்மது கவான் சிறந்த முறையில் பாமினி அரசுக்குப் பணியாற்றினார். இச் சீரிய பணிக்கு இவர் பெற்ற பரிசு கொலைத் தண்டனை!

### மூன்றும் முகம்மது ஷா (Muhammad Shah III)

மூன்றும் முகம்மது ஷா என்பவர் அடுத்த முக்கிய சுல்தானவார். இவர் சுமார் இருபது ஆண்டுகள் (1463–1482) ஆட்சி புரிந்தார். இராணுவத்துறையிலும் சிவில் நிர்வாகத்திலும் சமமான திறனைப் பெற்றிருந்தவரும், ஹுமாயூனின் ஆட்சிக் காலத்தில் பணியாற்றியவருமான காஜா முகம்மது காவான் (Khaja Mahamud Gavan)[2] மூன்றும் முகம்மது ஷாவிற்கும் அமைச்சராகப் பணியாற்றினார். இக் காஜா பெல்காம் என்ற வலிமைமிக்க அரணை 1473ஆம் ஆண்டில் கைப்பற்றினார்.

[1] பாரசீகச் சொற்களாவன ஜௌக், ஜஹான். மொத்தச் சொற்களின் எண்ணிக்கை 865. இது ஹிஜிரா ஆண்டில் 865 ஆகும்; அதாவது, கி.பி. 1460. இவ்வாறாக (z)=700, au (w)=60, (k)=100, (j)=3, h=5, a (alif)=1, and n=50.

[2] H. K. ஷெர்வானி, 'மகமூத் காவான்'.

கோவாவை 1472-ல் விஜயநகரப் பேரரசிடமிருந்து மீட்டார்; முந்திய சுல்தான்களில் ஒருவரால் இந் நகரம் விஜயநகர ராயருக்கு இழக்கப்பட்டிருந்தது; ஆனால், எப்பொழுது என்பது உறுதியாகத் தெரியவில்லை. இவருடைய இராணுவப் படையெடுப்புகளின் விளைவாக, பாமினி அரசு 'முந்திய சுல்தான்களால் அடைய முடியாத அளவுக்கு' விரிந்தது. புதிய ஆட்சிப் பகுதிகளின் நிர்வாகத்திற்காக அமைச்சர் மாகாணங்களை ஒன்பதாக அதிகப்படுத்தினர். பல பர்கானாக்கள் (Parganas) அரசு நிலங்களாக மாற்றப்பட்டன; தலபதவிகளில் அதிகாரிகளை நியமிக்கும் உரிமை கவர்னர்களிடமிருந்து பறிக்கப்பட்டது; இராணுவ நிலையங்களில் இருப்பவர்களின் எண்ணிக்கை சரிவரக் கணக்கிடப்பட்டன; இதன் மூலம் மத்திய அரசாங்கத்தின் அதிகாரப் பிடிப்பு வலுப்படுத்தப்பட்டது.

தக்காணத்தில் 1473 அல்லது 1474ஆம் ஆண்டில் ஒரு பெருங்கொடிய பஞ்சம் ஏற்பட்டது. பீஜப்பூர் மகாணத்தில் இப் பஞ்சம் தொடங்கியதால், 'பீஜப்பூர் பஞ்சம்' என்று வழங்கப்படுகிறது. இப் பஞ்சத்தால் ஏராளமான பேர்கள் இறந்தார்கள். இரண்டாண்டுகள் மழையேயில்லை; மூன்றாம் ஆண்டில் மழை பெய்தபொழுது 'நிலங்களைப் பண்படுத்த உழவர்கள் ஒருவரும் உயிரோடிருக்கவில்லை'.

### காஸி (Ghazi) என்ற பட்டப் பெயர்

காஞ்சிக் (Kanchi) கொள்ளைக்குமுன், 1481ஆம் ஆண்டின் தொடக்கத்தில், கொண்டபள்ளி (Kondapalli) சரணடைந்தது. அப்பொழுது நடந்த நிகழ்ச்சி ஒன்று பாமினிஅரசர்களின் சமய வெறிக்குச் சான்றாக விளங்குகின்றது.

[ஃபேரிஷ்டா குறிப்பிடுகிறார்:] 'அரசர் கோட்டையைக் காணச் சென்றார்; சிலைகளைக் கொண்டிருந்த கோயில் ஒன்றை அழித்தார்; அக் கோயிலில் பூசாரிகளாகப் பணியாற்றிய பிராமணர்களைத் தம் கையாலேயே கொன்றார்; தான் அழித்த இந்துக் கோயிலின் அடித்தளத்தின்மீது ஒரு மசூதி கட்டுவதற்கு ஆணையிட்டார்; பீடத்தின் மேலேறிச் சில வழிபாட்டு மந்திரங்களைத் திரும்பத்திரும்ப உச்சரித்தார்; இரவலர்களுக்குப் பிச்சை அளித்தார்; தம்முடைய பெயரிலேயே குத்பாவைப் படிக்குமாறு ஆணையிட்டார். தம் கைகளினாலேயே பிற மதத்தவரை மேன்மை தங்கிய அரசர் கொன்றதனால், காஸி என்ற பட்டத்தை நியாயமாகவே புனைந்துகொள்ளலாம் என்று காஜா மகமூத் காவான் எடுத்துக் கூறினர். இப் பட்டத்தில் இவர் மிகப் பெருமிதம்

அடைந்தார்.' நன்னெறியில் வாழ்ந்த அமைச்சர் தம் தலைவரின் கருத்துகளையே கொண்டிருந்தார் என்பதைக் குறிப்பிட வேண்டும்.

## காஞ்சி அல்லது காஞ்சிபுரத்தைக் கொள்ளையிடுதல்

விஜயநகரத்தின்மீது 1481-ல் படையெடுத்தபொழுது, சிறந்த ஏழு இந்து புனித நகரங்களில் ஒன்ருன காஞ்சி அல்லது காஞ்சி புரத்தின்மீது வெற்றிகரமாக நடத்திய கொள்ளை இவ்வாட்சிக் காலத்தின் மிகச் சிறந்த இராணுவ நடவடிக்கையாகும். சென்னைக்குத் தென்கிழக்கில் காஞ்சி நாற்பத்திரண்டு மைல் தொலைவில் அமைந்திருந்ததால், முஸ்லீம்களின் தாக்குதல்களிலிருந்து இந் நகரம் காப்பாற்றப்பட்டுவந்தது. காஞ்சி மக்களும் தாங்கள் முழுப் பாதுகாப்பில் இருக்கின்ருேம் என்று நம்பிக்கொண்டிருந் தனர். தற்போது சென்னை மாகாணத்து(இப்பொழுது ஆந்திரப் பிரதேசத்தில் உள்ளது) கிஷ்ணு (கிருஷ்ணு) மாவட்டத்திலிருக்கும் கொண்டபள்ளி என்ற இடத்தில் சுல்தான் தன் பாசறையை அமைத்தார். அப்பொழுது புனித நகரான காஞ்சியைத் தாக்குவதால் ஏராளமான செல்வங்களைப் பெறமுடியும் என்று அறிந்த சுல்தான், காஞ்சியின்மேல் திடீர்த் தாக்குதல் செய்யத் திட்டமிட்டார். ஃபெரிஷ்டாவின் சொற்களிலேயே இந் நிகழ்ச்சியைப் பின்வருமாறு சிறப்பாகக் கூறலாம்:

'முகம்மது ஷா சிறந்த தன் குதிரை வீரர்களில் ஆருயிரம் பேரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு, மீதிப் படையைக்கொண்ட பள்ளியில் விட்டுவிட்டு மிக விரைந்து (காஞ்சி நோக்கிச்) சென்ருர். அக் காலத்து வரலாற்று அறிஞரின் கருத்துப்படி, இவர் கடைசி நாள் நைஸாமுல் முல்க் பஹ்ரீயும் (Nizam-ul-mulk Bahri) யூரிஷ் கான் (Yurish Khan) துருக்கியரும் உட்பட நாற்பது படைவீரர்களே தம்மோடு வரக்கூடிய அளவிற்கு மிக விரைவில் சென்றுகொண்டிருந்தார். கோயிலை அணுகும்பொழுது சில இந்துக்கள் வெளியே வந்தனர். இவர்களில் மிக உயரமான ஒருவன், குதிரைமேல் ஏறி உருவின கொடுவாளைச் சுழற்றிக்கொண்டு கோயிலை நோக்கி வருகின்றவர்களைத் தடுத்து நிறுத்துவதற்காக, சுல்தானை நோக்கி மிக வேகமாகப் பாய்ந்து சென்று தாக்க முயன்ருன். ஆனல், சுல்தான் இத் தாக்குதலிலிருந்து தப்பித்துக்கொண்டு, தம் வாளால் அம் மனிதனை இரண்டு துண்டுகளாக வெட்டி வீழ்த்தினர். இதற்குப் பின்னர் மற்ருெரு பிற சமயத்தவன் சுல்தானைத் தாக்க முயன்ருன். இம் முறையும் சுல்தான் நல்வினையால் தப்பித்துக் கொண்டு தாக்க வந்தவனைக் கொன்ருர். அச் சமயத்தில் மக்கள் ஈக்களைப்போலக் கூட்டங் கூட்டமாக உள்ளிருந்து வெளித்

தோன்றிக் கோயிலைப் பாதுகாக்க அதைச் சுற்றி நின்றனர். இறுதியில் அரசனது மீதிப்படை வந்தவுடன் இந்துக்கள் எளிதில் சிதறடிக்கப்பட்டனர்; எண்ணற்றவர்கள் கொல்லப்பட்டனர். வெற்றியாளர்கள் கையில் ஏராளமான கொள்ளைப் பொருள் சிக்கியது. கோயிலிலிருந்த செல்வங்களில் தங்கத்தையும் தங்க நகைகளைமட்டுமே எடுத்துக்கொண்டனர். பிறகு அரசர் காஞ்சி நகரைக் கொள்ளையிட்டு (1481, மார்ச்சு மாதம், பன்னிரண்டாம் நாள்), அங்கே ஒரு வாரம் தங்கியிருந்து, பின் தம் படைக்குத் திரும்பினர்'.

## மகம்மது காவான் கொல்லப்படுதல்

பெருங்குடிகாரரான முகம்மது ஷா, நாட்கள் செல்லச் செல்லத் தம்முடைய பாவங்களுக்கு இரையாகிக்கொண்டிருந்தார். இவருடைய அளவுக்குமீறிய குடிப்பழக்கத்தினல், இவருடைய வாழ்க்கையின் இறுதி ஆண்டில் ஒரு கொடுமையான நிகழ்ச்சி ஏற்பட்டது. இந் நிகழ்ச்சி இவருடைய இறுதி ஆண்டை வெறுக்கத்தக்கதாகவும் இழிந்ததாகவும் ஆக்கிற்று. இவருடைய சிறப்பு வாய்ந்த அமைச்சர் பலர் தக்காண முஸ்லீம்களோடு நட்புறவு கொண்டிருந்தாலும், இவர் பாரசீகராக இருந்ததால், அவர்களால் 'வெளிநாட்டவர்' என்று கருதப்பட்டார். குறிப்பாக மாலிக் ஹசன் (Malik Hasan) என்பவர் காவானின் அழிவுக்கு இடைவிடாமல் முயன்றுகொண்டிருந்தார். மாலிக் ஹசன் பிராமணராயிருந்து சமயம் மாறியவர். இவர் தெலுங்காணவின் கவர்னராக அப்பொழுது பணியாற்றிவந்தார். இறுதியாக, 1481ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தின் தொடக்கத்தில் சதியாளர்கள் வஞ்சக எண்ணத்தோடு காவான் எழுதியதுபோன்று ஒரு பொய்க்கடிதத்தைத் தயாரித்து, குடிமயக்கத்திலிருந்த சுல்தானிடம் அதைக் கொடுத்தார்கள். சுல்தான் உண்மையைக் கண்டுபிடிப்பதற்கான எந்த முயற்சியும் செய்யாமல், தம்மிடத்து மிகுந்த அன்பு கொண்டவரும் வயது முதிர்ந்தவருமான காவானைத் தூக்கிலிட ஆணையிட்டார். காலம் கடந்த பின்னரே இவ் வஞ்சகச் செயல் சுல்தானுக்குத் தெரியவந்தது. தாம் செய்த தவற்றுக்கு சுல்தான் மிக வருந்தினர். தம் வருத்தத்தைப் போக்க மேலும் மிகுதியாகக் குடித்தார். தமது அளவு கடந்த தீச்செயல்களின் விளைவாக 1482ஆம் ஆண்டில் சுல்தான் காலமானர்.

## இக் குற்றத்தின் விளைவுகள்

'முகம்மது காவானின் மரணம் பாமினி அரசின் அழிவின் ஆரம்பம்' என்றும், 'அவரோடு பாமினி அரசின் ஒற்றுமையும்

வலிமையும் மறைந்தன' என்றும் மீடோஸ் டெய்லர் கூறுகிறார்; இவர் கூற்று முற்றிலும் நியாயமானதாகும். இவ்வமைச்சர் வைதிகப் பற்றுக்கொண்ட ஸுன்னி முஸ்லீமாவார். உருவ வழிபாடு செய்பவர்களைக் கொல்வதிலும், அவர்களுடைய செல்வங்களைக் கொள்ளையிடுவதிலும், மற்ற வைதீக முஸ்லீம்களைப்போன்றே இவரும் இரக்கமற்றவராயிருந்தார். இக் கண்ணோட்டத்தில் நோக்கினால், காவானின் தன்மை ஃபெரிஷ்டாவின் புகழ்மொழிகளுக்குத் தகுதியுடையதாகத் தோன்றுகிறது. ஃபெரிஷ்டாவின் கருத்தே மீடோஸ் டெய்லரின் புகழ்மொழிகளிலும் ஒலிக்கின்றது. மீடோஸ் டெய்லரின் புகழ் மொழிகள் மிகையுள்ளனவாக இருப்பினும் குறிப்பிடத்தக்கன.

## முகம்மது காவானின் குணாலன்கள் : மீடோஸ் டெய்லர் குறிப்பிடுவது

இவருடைய சமகாலத்தவர்கள் இந்தியாவின் பண்டைக் கால முஸ்லீம்கள் எல்லோரினும் முகம்மது காவானின் தன்மை ஒப்பற்றதாகவும், குறைபாடற்றதாகவும், மாறாத தன்மையுள்ளதாகவும் சிறந்து விளங்குகின்றது. இவருடைய உன்னதமான அறிவிற் சிறந்த சீர்திருத்தங்கள், போரில் இவர் காட்டிய திறமை, வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் இவர் அளித்த நன்கொடைகள் இந்திய முஸ்லீம்கள் வரலாற்றில் இவரை ஒப்புயர்வற்றவராக ஆக்குகின்றன......தம் சொந்த நிலபுலன்களிலிருந்து வந்த வருமானத்தைக்கொண்டு பொது நிலையங்களையும், பீடாரில் எழில்மிக்க கல்லூரி ஒன்றையும் நிறுவுவதற்குச் செலவிட்டார். இக் கல்லூரி அவுரங்கசீப்பின் ஆட்சிக் காலத்தில் வெடிமருந்தைப் பயன்படுத்தி அழிக்கப்பட்டது. காவான் தலைநகரில் இருந்தவரைக்கும் இவர் நாள்தோறும் பொழுதுபோக்கும் இடமாக இக் கல்லூரி விளங்கிற்று. ஆசா, பாரேந்தா, ஷோலாபூர் (Sholapur), தாரூர் (Darur), இன்னும் வேறு பல இடங்களிலிருந்த அரண்கள் இவருடைய இராணுவ அறிவுக்கும், திறமையான முறைக்கும் சான்று கூறுகின்றன.[1]

## மகமுத்ஷா (Mahamud Shah) (1482–1518) பாமினி வமிசத்தின் முடிவு

பாமினி வமிச வரலாற்றைப்பற்றிக் கூறவேண்டியது இனி மிகக் குறைவாகவே இருக்கின்றது. மூன்றாம் முகம்மதுவிற்குப்

[1] பார்க்க தேசப்படம், பக்கம் 287. ஆசா (ஔசா) குல்பர்காவுக்கு வடமேற்கிலுள்ளது; பரேந்தா ஆசாவுக்கு 70 மைல் மேற்கில் உள்ளது; ஷோலாபூர் குல்பர்காவிற்கு 70 மைல் வடமேற்கில் இருக்கிறது; தாரூர் ராய்ச்சூருக்கு 22 மைல் கிழக்கிலுள்ளது. பர்ஜெஸ் அழிந்துபோன கல்லூரியின் புகைப்படத்தையும் நிலப்படத்தையும் கொடுத்திருக்கிறார். (A. S. W. I., தொகுதி 3, pl. 23–39). Ann. Rep. A. S. Nizam's 'Dominions for 1914-15' என்பதிலும் படங்களைக் காணலாம்.

பின் இவருடைய மகனை மகமூத் பதவியேற்றார். பன்னிரண்டு வயதேயடைந்த இவ்விளைஞர் 1518ஆம் ஆண்டுவரை வாழ்ந்து ஒருவகையாக ஆட்சியும் புரிந்தார். இவர் நிலையான அதிகாரங்கள் எதுவும் பெற்றிருக்கவில்லை. ஒருவருக்குப்பின் ஒருவராக மாகாண கவர்னர்கள் தங்களுடைய சுதந்திரத்தைப் பிரகடனப் படுத்தினார்கள். தலைநகரத்தைச் சுற்றியிருந்த மிகக் குறுகிய நிலப்பகுதியே முகம்மதுவின் சீரற்ற அதிகாரத்தின்கீழ் இருந்து வந்தது. அரசாங்கம் உண்மையில் தந்திரமிக்க காசிம் பரீத் (Kasim Barid) என்ற துருக்கியரின் கையிலும், இவர் இறந்தபின் இவருடைய மகனை அமீர் பரீத் (Amir Barid) என்பவரின் கையிலும் இருந்தது. மகமூதின் துயர் நிறைந்த ஆட்சியில் நடந்த கொலைகளைப்பற்றியும் கிளர்ச்சிகளைப்பற்றியும் நாம் குறிப்பிட வேண்டியதில்லை. அவைகளைப்பற்றித் தெரிந்துகொள்ள விருப்ப முள்ளவர்கள் ஃபெரிஷ்டா எழுதிய நூல்களையும், 'புர்ஹானி மாசீர்' (Burhan-i Masir) என்ற நூலையும் படித்துத் தெரிந்து கொள்ளலாம். மகமூதின் இறப்பிற்குப்பின் அடுத்தடுத்து நான்கு பொம்மை சுல்தான்கள் சிம்மாசனத்தில் அமர்த்தப்பட்டனர். இறுதியாக 1526ஆம் ஆண்டில், அமீர்பாத் வெளிப்படையாகத் தன் பெயரிலேயே ஆட்சி புரியத் தொடங்கினான்.

**வமிசத்தின் குணவியல்பு**

பாமினி அரசு சீர்குலைந்து, அதிலிருந்து தோன்றிய ஐந்து தனிப்பட்ட சுல்தான் அரசுகளின் சிக்கல் நிறைந்த வரலாற்றின் முக்கிய நிகழ்ச்சிகளை நாம் ஆராய்வதற்குமுன், தக்காணத்து பாமினி அரசு சாதித்த செயல்களின் தன்மையைப்பற்றியும், வரலாற்றில் தம்முடைய தகுதிக்கேற்ப அவைகள் பெறவேண்டிய இடத்தின் மதிப்பீட்டைப்பற்றியும் சிறிது ஆராய்வது இன்றியமையாதது.

இவ் வமிசத்தைப்பற்றி நூல்கள் கூறும் செய்திகள் படிப்பதற்குக் கவர்ச்சியற்றிருக்கின்றன. 1347ஆம் ஆண்டுக்கும் 1518ஆம் ஆண்டுக்குமிடையில் பதினான்கு சுல்தான்கள் சிம்மாசனம் ஏறினார்கள்; அவர்களில் நான்கு பேர் கொல்லப்பட்டனர். வேறு இருவர் பதவியிலிருந்து அகற்றப்பட்டுக் குருடர்களாக்கப் பட்டனர். அமைதி விரும்பும் ஐந்தாம் சுல்தான் தவிர மற்றெல்லா சுல்தான்களும் இரத்தம் சிந்தும் சமய வெறியர்களாகவே இருந்திருக்கின்றனர். ஹுமாயூன் ஓர் அரக்கன்; வரலாற்றிலுள்ள கொடுங்கோலர்களின் வரிசையில்தான் இவரைச் சேர்க்க வேண்டும். சுல்தான்களில் பலர் குடிகாரர்களாகவும் சிற்றின்பப் பற்று மிகுந்தவர்களாகவும் இருந்தனர். இவ் வமிசத்தைச்

சேர்ந்த சுல்தான்களில் எவருடைய தன்மையும் குறிப்பிடத் தகுந்தவாறு இல்லை. மிகுதியான புகழ்ச்சிக்கு உரியவராய் விளங்குபவர் முகம்மது காவான் ஒருவரே; ஆனால், அவரும் சமயவெறி மிகுந்தவர். இவ் வமிசத்தினால் இந்தியாவுக்கு நிலையான பயன்கள் விளைந்தன என்று கூறமுடியாது. மீடோஸ் டெய்லர் குறிப்பிடுவதுபோல் பாமினி சுல்தான்கள் முஸ்லீம் கல்விக்கே ஊக்கமளித்தனர் என்பதிலும், கிழக்கு மாகாணங்களில் நீர்ப்பாசன வசதிகள் செய்து கொடுத்தார்கள் என்பதிலும் ஐயமில்லை. இப் பணிகள் அரசனுக்கு அதிக வருவாய் அளித்தது என்றாலும், எதிர்பாரத வகையில் உழவர்களுக்கும் நன்மை அளித்தது. இச் சுல்தான்கள் செய்த போர்கள், கொலைகள் தீமூட்டும் செயல்கள் இவர்கள் செய்த சில நல்ல பணிகளின் சிறப்பையும் குறைக்கின்றன.

### பாமர மக்களின் கடுந்துயரம்

பாமினி சுல்தான்களின் குணநலன்களைப்பற்றியும், அவ்வரசர்களின் ஆட்சியினால் குடிமக்களுக்கு ஏற்பட்ட விளைவைப் பற்றியும் அவ்வரசர்கள் சாதித்த சாதனைகளின் அடிப்படையில் நாம் மதிப்பிடவேண்டியதில்லை. புறக்கணிக்கப்பட்ட இந்து உழவர்களின் வாழ்க்கையைப்பற்றிய குறிப்புகளை முஸ்லீம் வரலாற்று அறிஞர்களின் நூல்களில் நாம் பார்க்கக்கூடாது; அந் நூல்கள் வட இந்தியாவைப்பற்றியோ, தென் இந்தியாவைப் பற்றியோ எப் பகுதியைப்பற்றி எழுதப்பட்டிருந்தாலும் சரியே. பண்டைக் கால இந்திய மக்களைப்பற்றிய சில செய்திகளை, சமுதாயத்தை நன்கு கூர்ந்து கவனிக்கின்ற வெளிநாட்டு வழிப் போக்கர்களின் குறிப்புகளிலிருந்து நாம் அறியலாம். ரஷிய (Russia) நாட்டைச் சேர்ந்த அதனேஸியஸ் நிகிடின் (Atanasius Nikitin) என்ற வாணிகர் அவ்வித வழிப்போக்கர்களுள் ஒருவராவர். அவர் பல ஆண்டுகள் பீடாரில் வாழவும், மூன்றும் முகம்மது ஷாவின் ஆட்சிக் காலத்தில், 1470-லிருந்து 1474 வரைக்கும் பாமினி அரசைச் சுற்றிப் பயணம் செய்யவும் அவருக்கு நேரிட்டது. நல்ல காலமாக அவருடைய நூல்கள் பாதுகாக்கப்பட்டு, ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

அவ் வாணிகர் தம் நூலில் கூறுவதாவது:

'சுல்தான் இருபது வயதே அடைந்த இளவயதினர்.[1] இவர் பிரபுக்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தார். மெலிக் துச்சார்

[1] 1463-ல் இவர் பத்து வயதுடையவராயிருந்தார் (King, p 98). இதனால் இக் குறிப்பு 1473 அல்லது 1474ஆம் ஆண்டுக்குப் பொருந்தும்.

(மலிக்-உத்-துஜ்ஜார் 'வாணிகர்களின் தலைவன்' அல்லது 'வாணிக இளவரசன்' காஜா மகம்மது காவானின் பட்டப் பெயர்) என்ற கொரேசானிய (Khorasan) பேராயர் ஒருவர் (கொரேசானிலிருந்து வந்த பாரசிகப் பிரபு) இரண்டு இலட்சம் ஆட்களைக்கொண்ட படை ஒன்றை வைத்திருக்கின்றார்; மெலிக் கான் ஓர் இலட்சம் ஆட்களையும், கரட்கான் இருபதினாயிரம் ஆட்களையும் வைத்திருக்கின்றனர். அநேக கான்கள் ஆயுதம் தாங்கிய பத்தாயிரம் ஆட்களை வைத்திருக்கின்றனர். சுல்தான் தம் படைகளைச் சேர்ந்த மூன்று இலட்சம் ஆட்களோடு வெளியே செல்வார்.

நாட்டில் மக்கள்தொகை அளவுக்கு மீறி இருக்கிறது; நாட்டுப்புறங்களில் வாழ்பவர்கள் துயரில் மூழ்கியிருக்கின்றனர். ஆனால், பிரபுக்கள் ஆடம்பரத்திலும் கேளிக்கைகளிலும் திளைக்கின்றனர்.

தங்கத்தால் அணி செய்யப்பட்ட இருபது குதிரைகள் முன்னே செல்ல, குதிரைகள் மேலேறிய முந்நூறு ஆட்களும், சங்கூதுபவர்களும், பத்துத் தீவட்டி பிடிப்பவர்களும், பத்துப் பாணர்களும் உடன்வர இப் பிரபுக்கள் வெள்ளிப் பல்லக்குகளில் தூக்கிச் செல்லப்பட்டனர்.

தம்முடைய தாயுடனும், மனைவியுடனும், குதிரைமேலேறிய பத்தாயிரம் ஆட்களுடனும், பளபளப்பான கவசங்களால் அழகு படுத்தப்பட்ட இரு நூறு யானைகளுடனும்; நூறு குதிரைகளும், நூறு கூத்தாடிகளும், பொன் ஆடைகள் தரித்த முந்நூறு சாதாரணக் குதிரைகளும் முன்செல்ல, நூறு குரங்குகளுடனும் நூறு வெளிநாட்டு வேசியர்களுடனும் சுல்தான் வேட்டைக்குச் செல்வார்.'

### படைகள் ஆயுதங்கள் ஏந்திய கும்பல்களே

தந்நலமும் ஆடம்பரமும் மிகுந்த சிறுபான்மையரான பிரபுக்களின்கீழ் இயங்கும் ஆயுதம் தாங்கிய ஆடவர், பெண்டிர், விலங்குகள் கொண்ட படையமைப்புகள் நாட்டின் வலிமையைக் குறைத்தது என்பது வெள்ளிடை மலை. பொதுமக்கள் 'மிக மோசமான நிலையில்' இருந்தார்கள் என்று கூறுவதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். விஜயநகரப் பேரரசில் இருந்த மக்களும் அதேபோல் அடக்கபட்டு மிக மோசமான நிலையில் இருந்தார்கள். அக் காலத்திலிருந்த பிரம்மாண்டமான படைகளெல்லாம் உண்மையில் ஆயுதம் தாங்கிய கும்பல்களே. இவர்கள் போர்த்திறனே இல்லாது இருந்தார்கள். இதே போன்ற பெரும் படைக்கும்பல்களை அண்டை முஸ்லீம் நாடுகளும்

இந்து நாடுகளும் பெற்றிருந்தன. இவ்விதமான ஒழுங்கற்ற மனிதக் கூட்டங்கள் ஒருசிறிதும் இராணுவ மதிப்பைப் பெற்றிருக்கவில்லை. இவைகள் விரைவாக இயங்கும் சிறுபடைகளால் எளிதில் விரட்டியடிக்கப்பட்டிருக்கின்றன என்பதற்கு மிகுதியான சான்றுகள் உண்டு. எனினும், பொதுவாகத் தங்களுடைய இந்துப் பகைவர்களைவிடக் கவசம் தாங்கிய முஸ்லீம் கூட்டங்கள் அதிகத் திறன் வாய்ந்தவைகளாக இருந்தன. இதனல், முஸ்லீம்கள் வழக்கமாக வெற்றி பெற்றுக்கொண்டிருந்தனர்.

**அரண்களும் இதர கட்டடங்களும்**

இவர்கள் கட்டிய அரண்கள் மிகச் சிறந்தனவும் அழிக்க முடியாதனவுமான நினைவுச் சின்னங்களாகும். அக் காலத்தில் ஐரோப்பாவில் இருந்ததைவிட அதிகமான கோட்டைகள் பாமினி அரசில் இருந்தன என்று மீடோஸ் டெய்லர் குறிப்பிடுகின்ருர்; இது பாமினி அரசின் தனிப்பெருஞ் சிறப்பாகும். இவ்வாசிரியர் பாமினி அரசின்மேல் நடுநிலை நழுவிய மதிப்பு வைத்திருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. பீராரில் உள்ள கவில்கார் (Gawilgarh), நர்னலா (Narnala) என்ற இரு அரண்கள், குறிப்பாக நர்னலா அரண் அரண்களுக்கு வேண்டிய கட்டட வன்மையுடனும், செலவைப் பாராது கட்டப்பட்டதால் சிறந்த எழிலுடனும் விளங்குகின்றது. நர்னலாவின் முதல் வாயில், கல்லால் செதுக்கப்பட்ட வேலைப்பாடுகளைக்கொண்டு மிகச் சிறப்பாக அமைந்திருக்கிறது. டெய்லரின் காலத்திலும் இது பழுதடையாது தொடக்கத்தில் இருந்த மாதிரியே இருந்தது; இப்பொழுதும் அதே நிலையிலிருக்கலாம். ஆசா (Ausa), பரேந்தா (Parenda) என்ற இடங்களிலுள்ள கட்டடங்களின் மிக நேர்த்தியான வேலைபாடுகள் இராணுவ நுணுக்க அறிவுக்காகப் புகழப்படுகின்றன. காய்ச்சப்பட்டு இணைக்கப்பட்ட கம்பிகளால் செய்யப்பட்ட பெரிய பீரங்கிகள் இக் கோட்டையில் இருந்தன. இப் பீரங்கிகளின் மாதிரிகள் பல இன்னும் இருக்கின்றன.

குல்பர்காவிலிருக்கும் கட்டடங்கள் மிகப் பளுவாகவும், அழகற்றும், கரடுமுரடாகவும் கட்டப்பட்டவை என்று வருணிக்கப்பட்டுள்ளன. சுமார் 1430ஆம் ஆண்டிலிருந்து தலைநகராக விளங்கிய பீடாரிலிருப்பவை, செயல்திறனிலும் அலங்காரத்திலும் இன்னும் மேன்மையுடையனவாகும். பாரசீகர்கள் விரும்பும் அழகுபடுத்தும் முறையான எனமல் பூசப்பட்ட ஓடுகள், பீடார் கட்டடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

### தக்காணத்தின் முஸ்லீம் மக்கள்

பாமினி சுல்தான்கள் இந்து இராச்சியங்களின் மக்களை அடியோடு அழிப்பதற்காவது, அல்லது அம்முறை தோல்வியுற்றால் அவர்களை இஸ்லாம் சமயத்தை ஏற்றுக்கொள்ளும்படி செய்வதற்காவது எடுத்துக்கொண்ட கடுமையான முயற்சிகள் தோல்வியடைந்தன. பல்லாயிரக்கணக்கான ஆடவர்களையும் பெண்டிர்களையும் குழந்தைகளையும் கொல்லுவதிலும், பலரைச் சமய மாற்றம் செய்வதிலும் இவர்கள் வெற்றியடைந்தனர். இருப்பினும், முயற்சிக்கு மாறாக, மக்கள்தொகையில் பெருமளவு இந்துக்களாகவே இருந்துவந்தனர். நைஸாமின் முன்னாள் அரசப் பகுதிகளிலும், பீஜப்பூர் மாவட்டத்திலும் முஸ்லீம்களின் தொகை சுமார் பதினொரு சதவிகிதமாகவே இருந்திருக்கின்றது. மீடோஸ் டெய்லர் குறிப்பிட்டிருப்பதன்படி, இச் சிறுபான்மை மக்களின் தோற்றம் பாமினி ஆட்சியினால் விளைந்த விளைவாகும். இவ்வாட்சியின்கீழ்ப் பல பாரசீகர்களும், துருக்கியர்களும், அராபியர்களும், முகலாயர்களும் நாட்டில் தங்கியிருந்து, அந் நாட்டுப் பெண்களை மணம் புரிந்துகொண்டனர். பல இந்துக் குடும்பங்களும் வன்முறையாகச் சமய மாற்றம் செய்யப்பட்டன. பல நூற்றாண்டுகளாகப் பல பகுதிகளில் முஸ்லீம் வமிசங்கள் தொடர்ந்து ஆதிக்கம் செலுத்தியதால், சிறுபான்மையராயிருந்த முஸ்லீம்களின் எண்ணிக்கை வீதமும் அதிகரிக்க ஆரம்பித்தன. 'முஸ்லீம்களின் ஆதிக்கத்தால் தக்காணம் பழக்க வழக்கங்களில் முன்னேற்றம் அடைந்தது' என்று மேலே குறிப்பிடப்பட்ட ஆசிரியர் கருதுகிறார். இக் கருத்து தவறானதாகும். முஸ்லீம்களின் ஆதிக்கத்தினால் இந்து நாகரிகத்தின் நினைவுச் சின்னங்களுக்கு மிகுதியான சேதங்கள் ஏற்பட்டன.

### தக்காணத்து பாமினி வமிசத்தைச் சேர்ந்த சுல்தான்கள்

| | பெயர் | அரியணை ஏறுதல் | குறிப்புகள் |
|---|---|---|---|
| 1. | அலாவுதீன் ஹசன் | ஹி.ப. 748 கி.பி. 1347 | ('புர்ஹானி மாசிர்' என்ற நூலின்படி) இவருடைய முழுப் பட்டப் பெயர் பாமினியைச் சேர்ந்த அலாவுதீன் ஹசன் ஷா அல்வாலி அல்பாமனீ என்பதாகும். தொடக்கத்தில் இவர் ஸபர் கான் என்று வழங்கப்பட்டுவந்தார். இவர் இயற்கை மரணமடைந்தார். |

**தக்காணத்து பாமினி வமிசத்தைச் சேர்ந்த சுல்தான்கள்-(தொடர்ச்சி)**

| | பெயர் | அரியணை ஏறுதல் | | குறிப்புகள் |
|---|---|---|---|---|
| 2. | முதலாம் முகம்மது | 759 | 1358 | மேலே குறிப்பிடப்பட்டவரின் புதல்வர் மதத்துக்கு விரோத மான வாழ்க்கை முறையினுல்—ஒருவேளை குடிபோதையால்—ஏற்பட்ட விளைவுகளால் இறந் தார். |
| 3. | முஜாஹித் | 775 | 1378 | இரண்டாமவரின் மகன் மிகப் பெருங் குடியர். நான்காமவரால் கொல்லப்பட்டார். |
| 4. | தாவூத் | 779 | 1378 | இரண்டாமவரின் சகோதர ரின் மகன் ஓர் அடிமையால் கொல்லப்பட்டார். |
| 5. | இரண்டாம் முகம்மது | 780 | 1378 | நான்காமவரின் சகோதரர் இயற்கை மரணமடைந்தார். போர்களோ கிளர்ச்சிகளோ இல்லை. மமூகத் என்று தவருக ஃபெரிஷ்டாவால் அழைக்கப்பட் டவர். |
| 6. | கியாஸுத் தீன் | 799 | 1397 | ஐந்தாமவரின் மகன், இளைய வன். குருடாக்கப்பட்டுப் பதவி யிலிருந்து அகற்றப்பட்டவர். |
| 7. | ஷம்ஸுத்தீன் | 799 | 1397 | ஆருமவரின் சகோதரர். ஃபெரிஷ்டாவின் கருத்துப்படி பதவியிலிருந்து விலக்கப்பட்டு, நஞ்சு கொடுக்கப்பட்டவர் அல் லது குருடராக்கப்பட்டவர். |
| 8. | ஃபிரோஸ் | 800 | 1397 | இரண்டாமவரின் தம்பியின் மகன் பதவியிலிருந்து விலக்கப் பட்டுக் கழுத்தை நெரித்துக் கொலை செய்யப்பட்டார். |
| 9. | அகமது | 825 | 1422 | எட்டாமவரின் சகோதரர். பீடாருக்குத் தலைநகரை மாற்றி ஞர். இயற்கை மரணமடைந் தவர். |
| 10. | இரண்டாம் அலாவுதீன் | 838 | 1435 | ஒன்பதாமவரின் மகன். இயற்கை மரணமடைந்தார். |
| 11. | ஹுமாயூன் | 862 | 1457 | பத்தாமவரின் மகன் ஒருகால் கொலை செய்யப்பட்டிருக்க லாம். |

தக்காணத்து பாமினி வமிசத்தைச் சேர்ந்த சுல்தான்கள்–(தொடர்ச்சி)

| | பெயர் | அரியணை ஏறுதல் | | குறிப்புகள் |
|---|---|---|---|---|
| 12. | நைஸாம் | 865 | 1461 | பதினொன்றுமவரின் மகன். இளையவர். திடீரென்று மரண மடைந்தார். |
| 13. | மூன்றும் முகம்மது | 867 | 1463 | பன்னிரண்டாமவரின் சகோதரர். குடியின் விளைவால் இறந்தார். |
| 14. | மகமூது | 887 | 1482 | பதின்மூன்றுமவரின் மகன். 1518 டிசம்பரில் இயற்கை மரண மடைந்தார். இவரோடு இவ் வமிசம் அநேகமாக முடிவடைந்தது. |

குறிப்பு: மரபுமுறையின்படியும் வாரிசு உரிமை முறையின் படியும் இப் பெயர்கள் 'புர்ஹானி மாசீர்' என்ற நூலிலும், இதர நூல்களிலும் இருப்பதற்கு ஏற்ப உள்ளன. இதற்கு நாணயங்களும் ஆதாரமளிக்கின்றன. சில சமயங்களில் ஃபெரிஷ்டா தவருன செய்திகளைக் கூறியிருக்கின்ருர். தேதிகள் நூலுக்கு நூல் மாறுபடுகின்றது. பத்தாமவரின் மரணத்திற்கும், பதினேராமவர் அரியணை ஏறுவதற்கும் நான்கு ஆண்டுகள் வேறுபடுகின்றன. தேதிகளைப்பற்றிய மிக நுட்பமான முரண்பாடுகள் ஏற்பட்டிருக்கின்றன. இவை மேலே கொடுக்கப்பட்ட அட்டவணையில் குறிக்கப்படவில்லை. கடைசி சுல்தானை கலிமுல்லா பீஜப்பூருக்குத் தப்பி ஓடி, அங்கிருந்து அகமது நகருக்குச் சென்று அவ்விடத்தில் உயிர் நீத்தார்.

## ஆதாரங்கள்

ஃபெரிஷ்டாவும் மற்றவர்களும் எழுதியுள்ள பாரசீக வரலாறுகளே முக்கியச் சான்றுகளாகும். மேடோஸ் டெய்லர் எழுதியுள்ள 'Manual of Indian History' (லாங்மன்ஸ், லண்டன், 1895) என்ற நூலில் காணப்படும் வமிசத்தைப்பற்றிய குறிப்பு ஃபெரிஷ்டாவை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. இதைத் தல அறிவு பூர்த்தி செய்கிறது. பாரசீக நூல்களில் உள்ள செய்திகளைப் பூர்த்தி செய்யும் விவரங்கள் 'புர்ஹானி மாஸீர்' (லூஸிக், லண்டன், 1900) என்ற நூலை அடிப்படையாகக்கொண்ட 'Kings' History of the Bahamini Dynasty' என்ற நூலில் பிரசுரிக்கப் பட்டுள்ளன. மற்றக் கால வாலாற்ருசிரியர்களிலிருந்து எடுக்கப் பட்டு, மேலும் கூட்டப்பட்ட பகுதிகளோடு இது 'Indian Antiquary', தொகுதி 28 (பம்பாய், 1899-ல்) மீண்டும் அச்சிடப்

பட்டுள்ளது. இவ்வாறு T. W. ஹேய்க் எழுதியுள்ள கட்டுரையில் 'பாமினி சுல்தான்களைப்பற்றிய சில குறிப்புகள்' (F. A. S. B., Part I, V. N. lxxiii, 1904); 'தக்காணத்தின் வரலாற்றுக் கட்டடங்கள்' என்பதிலும் காணலாம்.

அதனேஸியஸ் நிகடின் என்ற ரஷிய வழிப்போக்கர் எழுதியுள்ள குறிப்புகள் R. H. மேஜர் (Hakluyt Society, issued for 1858), 'பதினைந்தாம் நூற்றுண்டில் இந்தியா' என்ற நூலில் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இதிலிருந்து சுவையான சில செய்திகள் கிடைக்கின்றன.

மேலே குறிப்பிட்டதுபோல் ஹேய்க் கல்வெட்டுகளைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவ்வாறே ஹாரோவிட்ஸ் என்பவர், 'Epigraphia Moslimica'-வில் குறிப்பிட்டுள்ளார் (கல்கத்தா, 1909–10, 1912), S. V. பீடார், கவில்கர், குல்பர்கா, கோலாபூர். 'Numismatic, Chronology 1898-ல்' O. கார்டிங்டன் என்பவர் நாணயங்களைப்பற்றிப் படங்களுடன் விளக்கியுள்ளார். இவ்வாறே H. N. ரைட் என்பவரும் 'Catal. of Coins in I. M., V. N. II' (கிலாரென்டன் அச்சகம், 1907) செய்திருக்கிருர். இவ்விரு ஆசிரியர்களும் முந்திய தாள்களை மேற்கோளாக அளிக்கின்றனர்.

கட்டடக்கலையைப்பற்றி ஃபெர்குசன் என்பவர் ஓரளவு விவரித்துள்ளார். மேலும், பர்ஜெஸ் (A. S. W. I, V. N. iii, லண்டன், 1878), ஜி. யஸ்தானி என்ற இருவரும் 'பீடாரின் தொல் பொருள்கள்' (G. Yazdani, 'Antiquities of Bidar') என்ற நூலில் விவரித்துள்ளார்கள். நைஸாம் அரசாங்கத்தின் தொல்பொருள் இலாகாவின் ஆண்டு முன்னேற்ற அறிக்கைகளில் (1914–15 to 1922–3) இப் பொருள் ஆராயப்பட்டுள்ளது.

## 2. தக்காணத்து ஐந்து சுல்தான் அரசுகளும் காண்டேஷும்—1474ஆம் ஆண்டிலிருந்து 17ஆம் நூற்றுண்டுவரை

### ஐந்து சுல்தானியங்கள்

மகம்மது ஷா பாமினியின் புகழற்ற ஆட்சிக் காலத்தில் (1482-1518) முன் குறிப்பிட்டப்படி பல மாகாணப் பிரதிநிதிகள் ஒருவர்பின் ஒருவராகத் தங்கள் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தினர்கள். தனிப்பட்ட ஐந்து இராச்சியங்கள் அல்லது சுல்தானியங்களை ஏற்படுத்தினர்கள். அவைகளாவன: பீராரின் இமாத் ஷாஹி வமிசம்; அகமது நகரின் நைஸாம் ஷா வமிசம்; பிஜப்பூரின் ஆதில் ஷாஹி வமிசம்; பீடாரின் பரீத் ஷாஹி வமிசம்; கோல்கொண்டாவின் குதுப் ஷாஹி வமிசம்.

### பீராரின் (பிராரின்) இமாத் ஷாஹி வமிசம்

பாமினி இராச்சியங்களின் மிக்க வடக்குப் பகுதியில் உள்ள பீரார் மாகாணம் முதன்முதலாகப் பிரிந்து சென்றது. இப் பகுதி சமஸ்கிருத இலக்கியங்களில் சிறப்புற்றிருந்த பண்டைய விதர்பாவுக்கு ஏறக்குறைய சமமாகும். தக்காணத்து முதல் பாமினி சுல்தான் தம் இராச்சியங்களை நான்கு மாகாணங்களாகப் பிரித்திருந்தார். அம் மாகாணங்களுள் பீரார் ஒன்றுகும். பதினைந்தாம் நூற்றுண்டின் இறுதியில் இம் மாகாணம் வடக்குப் பகுதியில் காவீல், தெற்குப் பகுதியில் மாகூர் என்ற இரண்டு மாவட்டங்களைக் கொண்டிருந்தது. 1484ஆம் ஆண்டில் மகம்மது பாமினி என்பவரின் ஆட்சித் தொடக்கத்தில், காவில்காரின் கவர்னரும், இந்து சமயத்திலிருந்து இஸ்லாம் சமயத்திற்கு மாறியவரும், இமதுல் முல்க் என்ற பட்டப் பெயரைக் கொண்டிருந்தவருமான ஃபத்துல்லா என்பவர் தம் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தி, முழு மாகாணத்திற்கும் தலைவராஞர் என்பதற்குப் பல ஆதாரங்கள் உள. 1490ஆம் ஆண்டில்தான் தன் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தினர் என்று வேறு பல ஆசிரியர்கள் கருதுகின்

ருர்கள். இவ்விதமாக இவர் இமாத் ஷாஹி வமிசம் என்ற ஒரு வமிசத்தை ஏற்படுத்திஞர். இது 1574ஆம் ஆண்டுவரை நான்கு




தலைமுறைகள் நீடித்திருந்தது. 1574ஆம் ஆண்டில் இவ்வரசப் பகுதி ஆமத்நகரோடு இணைக்கப்பட்டது. இதன் தனிப்பட்ட வரலாற்று விவரங்கள் சுவை தருவனவாக இல்லை. 1596-ல் இம் மாகாணம் அக்பரின் மகனை சுல்தான் முரத்திற்கு வழங்கப் பட்டது. பேரரசின் கவர்னர் முதலில் பாலாஸ்பூரிலும், பின்னர் இலிச்பூரிலும் (எலிச்பூர்) வசித்துவந்தார்.

## பீடாரின் பரீத் ஷாஹி வமிசம் (The Barid Shahi Dynasty of Bidar)

பாமினிப் பேரரசின் மிஞ்சிய பகுதியான சிறிய இராச்சியப் பகுதியையே பரீத் ஷாஹி வம்சத்து சுல்தான்கள் ஆண்டு வந்தனர் மிக்க தொலைவிலுள்ள மாகாணங்கள் பிரிந்துசென்ற பின், தலைநகருக்கு அருகில் எஞ்சியிருந்த பகுதியை இவ்வரசு கொண்டிருந்தது. முகம்மது ஷா பாமினியின் அமைச்சரான காசிம் பரீத் (Kasim Barid) என்பவர் சுமார் 1492ஆம் ஆண்டி லிருந்து இப் பகுதியின் தனிப்பெருந் தலைவராயிருந்தார். இவ் வாண்டில்தான் இவ் வமிசம் நிறுவப்பட்டது என்று சில நூல்கள் குறிப்பிடுகின்றன. எனினும், இவரும் இவருடைய புதல்வருமான

அமீர் (Amir) என்பவரும் அரசப் பதவியை மேற்கொள்ளுவதைப் பல காலமாக ஒத்திப்போட்டனர். 1518ஆம் ஆண்டில், மகம்மது இறந்தபின்னர், இவர்கள் பாமினி சுல்தான்களை ஆக்குவதிலும் நீக்குவதிலும் 1527ஆம் ஆண்டுவரை ஈடுபட்டிருந்தார்கள். 1527ஆம் ஆண்டு அமீர் வெளிப்படையாகத் தம் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தினார்.[1] இவ் வமிசம் சுமார் 1619ஆம் ஆண்டு வரை அல்லது அதற்குச் சிறிது காலத்திற்குப் பின்புவரை நீடித்திருந்தது. பின்னர் இப் பகுதி பீஜப்பூருடன் இணைக்கப்பட்டது. பரீத் சுல்தான்கள் செய்த பணிகளில் நினைவில் கொள்ளத்தக்கன ஒன்றும் இல்லையென்றாலும், அவர்கள் கட்டடக் கலைக்குச் செய்த பணிகள் குறிப்பிடத்தக்கனவாகும்.

## கோல்கொண்டாவின் குதுப் ஷாஹி வமிசம்

ஆமதுநகர், பீஜப்பூர், கோல்கொண்டா (கோல்கந்தா) என்பவை பாமினிப் பேரரசின் சிதைவுகளிலிருந்து நிறுவப்பட்ட மூன்று மிகப் பெரிய நாடுகளாகும். கோல்கொண்டா அரசு 1518ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. மற்ற அரசுகளுக்குப் பின்னர் நிறுவப்பட்டபோதிலும், இவ்வரசு மற்ற அரசுகளைக் காட்டிலும் இறுதிவரை நிலைபெற்றிருந்தது. மற்ற அரசர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, இவ்வரசு ஒதுங்கியே இருந்தது. ஆமதுநகரும் பீஜப்பூரும் முடிவற்ற போர்களில் ஈடுபட்டுக்கொண்டிருந்தபொழுது, கோல்கொண்டா அரசு அப் போர்களில் ஒரு சிறு பங்கையே கொண்டிருந்தது. இருப்பினும், இவ்வரசு பீஜப்பூருடன் மிகுதியாகப் போரிட்டது. விஜயநகர இராச்சியத்தின் தோல்விக்கும் அழிவுக்கும் காரணமாயிருந்த நான்கு முஸ்லீம் அரசர்களைக் கொண்டிருந்த தாற்காலிகக் கூட்டுறவு ஒன்றில், 1565ஆம் ஆண்டில் கோல்கொண்டாவும் சேர்ந்துகொண்டது.

## கோல்கொண்டாவின் இராச்சியப் பகுதி

இப் புதிய இராச்சியம் வாரங்கல் என்ற பண்டைய இந்து காக்கத்திய இளவரசப் பகுதியின் பிரதிநிதியாகவும் வாரிசாகவும்

[1] இவ் வமிசத்தைப் பொறுத்தவரையில் 1530-ல் இறந்த அமீர் பரீத் தம்மைச் சுல்தானென்றோ அல்லது மற்ற சமமான பட்டப் பெயராலோ அழைத்துக்கொள்ளவில்லை என்று வாய்வழி மரபுகளை நம்பியிருந்த ஃபெரிஷ்டா கருதினார். இவ் வமிசத்தின் பெயரைப் புனைந்த சுல்தான்கள் அல்லது அரசர்களுள் இவருடைய மகனை அலீபரீத் முதல்வராவர். ஏனென்றால், இவருடைய பாட்டனாரான காசீம் பரீத் அரச படாடோபங்களை மேற்கொண்டாலும், அரசப் பட்டத்தை மேற்கொள்ளவில்லை. இந் நிலையைத் தில்லியைச் சார்ந்த சய்யதுகள் என அழைக்கப்பட்ட வமிசத்தோடு ஒப்பிட்டுப்பார்க்க. இவ் வமிசத்தின் அரசர்கள் அரசபட்டங்களை மேற்கொள்வதையோ, தங்களுடைய பெயரிலேயே நாணயங்களை அச்சிடுவதையோ செய்யவில்லை.

அமைந்திருந்தது.[1] அகமது ஷா பாமினி என்பவரால் அவருடைய ஆட்சியின் தொடக்கக்காலத்தில் சுமார் 1423-ல் வாரங்கல் அடக்கப்பட்டது. இவ்வரசின் பெரும்பகுதி கிருஷ்ணு, கோதாவரி ஆகிய நதிகளின் கீழ்த் திசைகளுக்கிடையில் முகத்துவாரங்களை நோக்கி வங்காள விரிகுடாவரையில் பரவி விரிந்திருந்தது. இதனுடைய மேற்கு எல்லையும், பீடார் அரசப் பகுதியின் கிழக்கு எல்லையும் அநேகமாக ஒன்றாகவே இருந்தன. இவ்வரசின் வடக்கில் அமைந்திருந்த பகுதி கோதாவரி, பென்கங்கா, வெய்ன் கங்கா ஆகிய ஆறுகளுக்கிடையில் இருந்தது. இப் பகுதி மிக வளமான பகுதியாகும். இந்து அரசர்களின் காலத்தில் கையாளப்பட்ட பல நீர்ப்பாசனப் பணிகள் இச் சுல்தான்களுடைய காலத்திலும் கையாளப்பட்டு விரிவுப்படுத்தப்பட்டன.

**சுல்தானியர்கள்**

மகமூத் காவானுல் கிழக்கு மாகாணத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டவரும், சுல்தான் கூலி குதுப்ஷா என்ற பட்டப் பெயர் கொண்டவருமான துருக்கிய அதிகாரி இவ் வமிசத்தைத் தோற்றுவித்தவர் ஆவார். அமைச்சர் அநீதியாகக் கொல்லப்பட்ட பின் பாமினி அரசவையிலிருந்து இவர் வெளியேறினர். ஆனாலும், 1518ஆம் ஆண்டுவரை மகம்மது ஷாவின் இறைமையை இவர் ஒப்புக்கொண்டிருந்தார். 1518ஆம் ஆண்டில் பரீத் ஷாஹியின் ஆதிக்கத்திற்குக் கீழ்ப்படிய மறுத்து, இவர் தம் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தினர்.

முதலாம் குதுப் சுல்தான் நீண்ட ஆயுளையும் பெற்றிருந்தார்; சிறப்பான ஆட்சியையும் நடத்தினர். இவர் 1543ஆம் ஆண்டில் தமது 90ஆம் வயதில் தம் மகன் ஜம்ஷீதின் என்பவரின் தூண்டுதலின்மேல் கொல்லப்பட்டார். தந்தையைக் கொன்ற ஜம்ஷீதின் ஏழு ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். 1550ஆம் ஆண்டில் ஜம்ஷீதினுடைய சகோதரரான இப்ராஹீம் என்பவருக்கு அரசபதவி கொடுக்கப்பட்டது. இப்ராஹிம் விஜயநகரத்துக்கு எதிராக ஏற்பட்ட கூட்டுறவு இணைப்பில் சேர்ந்தார் (1565); 1580ஆம் ஆண்டில் அவர் உயிர் நீத்தார். இவருடைய நிர்வாகம் சிறப்பாக இருந்தது என்று பாராட்டப்பெற்றுள்ளது. இவர் காலத்தில் இந்துக்கள் அரசாங்கபதவிகளில் தாராளமாக நியமிக்கப்பட்டனர். பல உயர் பதவிகளும் இந்துக்களுக்குக் கொடுக்கப்

[1] வாரங்கல் என்பது 'ஒரு கல்' என்பதன் திரிபாகும். இதன் பொருள் ஒரு கல் என்பதாகும். இது பழைய தலைநகரம் இருந்த இடத்தின் முக்கியப் பகுதியாகும்.

பட்டன. இவருடைய மகனை முகம்மது கூலி 1611ஆம் ஆண்டு வரை வாழ்ந்தார். அவ்வாண்டிற்குப் பின்னர் இவ் வமிசத்தின் தனி வரலாறு அநேகமாக முற்றுப்பெற்றது. இதனுடைய விவகாரங்கள் இந்துஸ்தானின் மொகலாயப் பேரரசர்களின் விவகாரங்களோடு இணைய ஆரம்பித்தன. 1687-ல் அவுரங்கசீப் பால் இந் நாடு இறுதியாக இணைக்கப்பட்டது.

### தலைநகரம்

இவ்வரசின் தலைநகரம் முதல் சுல்தானின் ஆட்சி காலத் தொடக்கத்தில் வாரங்கல்லிலிருந்து கோல்கொண்டாவுக்கு மாற்றப்பட்டது. இப் புதிய தலைநகரம் இப்ராஹீமின் காலத்தில் மிகுந்த வளர்ச்சி பெற்றது; ஆனால், 1589-ல் சீர்குலையத் தொடங் கிற்று. பிறகு, சில மைல்களுக்கு அப்பாலிருந்த பாக் நகருக்கு அரசவை மாற்றப்பட்டது. வெகுவிரைவில் இவ்விடம் 'ஹைதரா பாத்' என்று அழைக்கப்பட்டது. இவ்விதம் உண்டாக்கப்பட்ட நகரம் பின்னர் நைஜாம்களின் தலைநகராக வளர்ச்சி பெற்றது. இப்போது இது சுமார் 7½ இலட்ச மக்கள்தொகையைக் கொண் டுள்ளது. இப்பொழுது பெருமளவில் சிதைந்திருக்கும் கோல் கொண்டா அங்குள்ள குதுப் ஷாஹி அரசர்களின் கல்லறை களுக்குச் சிறப்புப் பெற்றிருக்கிறது.

### அகமதுநகரின் நைசாம் ஹாஹி வம்சம்

பீடாரிலிருந்த தக்காணப் பிரிவின் தலைவரும், மகமூத் காவானின் இறப்புக்குக் காரணமாக இருந்த நைசாம்-உல்-முல்க் பைரி என்பவர் விரைவில் வன்முறையால் மரணமடைந்தார். இதன் பிறகு, பூனாவிற்கு வடக்கிலுள்ள ஜுன்னரி என்னும் பகுதிக்கு கவர்னராய் இருந்த இவருடைய மகன் மாலிக் அகமது கிளர்ச்சி செய்தார். 1490-ல் இவர் மகமது பாமினியின் படை ஒன்றைத் தோற்கடித்தார். தம்மை ஒரு சுதந்திர அரசராகப் பிரகடனப் படுத்திக்கொண்டார். சிறிது காலத்திற்குப் பிறகு, இன்னும் கிழக்கில் மிக்க வசதியாகவும், இராணுவக் கண்ணோட்டத்தின்படி சிறந்ததாகவும் இருந்த அகமதுநகருக்கு அரசவையை மாற்றினார். இவ்விதமாக அகமதுநகரம் ஏற்படுத்தப்பட்டது. புதிய அரசர் ஆமது நைசாம் ஷா என்ற பட்டப் பெயரைப் புனைந்துகொண்ட தால், இவர் நிறுவிய வமிசம் நைசாம் ஷாஹி வமிசம் என்ற பெயர் பெற்றது. இன்றும் அகமதுநகரம் மகாராஷ்டிர மாகாணத்தில் ஒரு பெரிய நகரமாக விளங்குகின்றது.

முன்னாளில் யாதவ இராச்சியத்தின் தலைநகராக இருந்த தேவகிரி அல்லது தௌலதாபாத் என்ற வலிமை மிக்க அரணைக்

கைப்பற்றுவதில் ஆமது நைஸாம் ஷா பல முயற்சிகளை எடுத்தார். இறுதியாக 1499-ல், அப் பகுதியைக் கைப்பற்றித் தம்முடைய இராச்சியத்தை வலிமையுள்ளதாக ஆக்கினுர்.

## இரண்டாம் மூன்றும் சுல்தான்கள்

புர்ஹான் நைஸாம் ஷா என்ற இரண்டாவது அரசர் நாற்பத்தைந்து ஆண்டுகள் ஆட்சிபுரிந்தார் (1508–53). இவர் சுற்றுப்புற நாடுகளுடன் பல போர்களில் ஈடுபட்டார். இவர் 1550-ல் பீஜப்பூர் சுல்தானுக்கு எதிராக விஜயநகர இந்து இராயருடன் சேர்ந்துகொண்டு சுல்தானியர்களின் மரபில் புதுப்போக்கை ஏற்படுத்தினுர். சில ஆண்டுகளுக்குமுன் (1537) புர்ஹான், ஷியாப் பிரிவு இஸ்லாமைத் தழுவினுர். இவருக்குப்பின் வந்தவரான ஹுசேன் ஷா என்பவர் 1565-ல் விஜயநகரைக் கொள்ளையடித்த கூட்டுக் கழக இணைப்பில் சேர்ந்தார்.

## பிற்கால வரலாறு

இவ் வமிசத்தின் பிற்கால வரலாற்றை ஃபெரிஷ்டாவின் குறிப்பேடுகளில் மிக விவரமாகப் படிக்கலாம். இவர் ஆமதுநகரில் பல காலம் தங்கியிருந்தவர் எனினும், இவர் குறிப்பிடும் நிகழ்ச்சிகள் சுவை குன்றியவையாக இருக்கின்றன. 1574-ல் பீரார் இணைக்கப்பட்டது. பீஜப்பூரின் பெருங்கோப் பெண்டு (Dowager) அரசியான சாந்த் பீபீ அகமதுநகருக்குத் திரும்பிவந்துவிட்டார். இவர் அக்பரின் மகனை இளவரசன் முரத்தை 1596-ல் வீரத்துடன் எதிர்த்து வெற்றியடைந்தார். இளவரசர் பீராரைக் கொடுத்து அமைதியை விலைக்கு வாங்கும்படி செய்யப்பட்டார். இருப்பினும், போர் வெகுவிரைவில் மீண்டும் தொடர்ந்தது. 1600ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் மக்கள் கும்பல் ஒன்றினுல் சாந்த் பீபீ கொல்லப்பட்டதற்குப் பின்னர், முகலாயப் படை அகமது நகரை எளிதில் தாக்கிற்று. இந் நிகழ்ச்சியைப்பற்றிய முழு விவரங்கள் அக்பரின் வரலாற்றைக் கூறும்பொழுது விளக்கமாகக் கூறப்படும். அக்பர் அகமது நகருக்குப் பெயருக்காகப் புதிய சுபா அல்லது மாகாணத்திற்குரிய மதிப்புத்தரம் அளித்தாலும், அவ் இராச்சியத்தின் சிறு பகுதியைமட்டுமே தம் ஆதிக்கத்தின்கீழ்க்கொண்டு வர முடிந்தது. மீதிப் பகுதிகள் சுதந்திரத்துடன் இருந்துவந்தன. இறுதியில் ஷாஜஹானின் ஆட்சிக் காலத்தில் 1637ஆம் ஆண்டுவரை அந் நாடு இணைக்கப்படவில்லை.

## பீஜப்பூரின் ஆதில் ஷாஹி வமிசம்; முதல் சுல்தான்

ஐந்து சுல்தானியங்கள் அல்லது இராச்சியங்களுக்குள் மிக முக்கியமானதும் சுவையுள்ளதுமான பீஜப்பூர் அதிகக்

கவனிப்பைப் பெறத் தகுதி பெற்றுள்ளது. இவ் வமிசம் ஆதில் ஷாஹிவமிசம் என்றழைக்கப்பகிறது. இப் பெயர் இவ் வமிசத்தை நிறுவியரான பீஜப்பூர் கவர்னர் யூசுப் ஆதில் ஷா என்பவரின் பெயரிலிருந்து தோன்றியதாகும். இவர் 1489ஆம் ஆண்டில் தம் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தினர்; அதே சமயத்தில் இவருடைய சகாக்களும், பீஜப்பூரிலும் அகமது நகரிலும் அவ்விதமே செய்தனர்.

யூசுப் ஆதில் ஷா, காஜா மகமூத் காவானல் விலைக்கு வாங்கப்பட்ட ஜார்ஜிய நகரின் அடிமை ஆவார். தம்முடைய திறமையினாலும் அமைச்சரின் ஆதரவாலும் இவர் பாமினி அரசவையில் உயர் பதவி எய்தினர்; இறுதியில் பீஜப்பூர் கவர்னராகவும் உயர்ந்தார். இது யூசுப் ஆதில் ஷாவைப்பற்றிய பொதுவான கருத்தாகும். ஆனல், நம்பத்தகுந்த ஆதாரங்களின் அடிப்படையில் எழுந்த ஃபெரிஷ்டாவின் கருத்துக்கேற்பத் தனிப் பட்ட செய்திகளின்படி, இவர் உண்மையில் துருக்கிய நாட்டின் இரண்டாம் மூரத் சுல்தானின் மகனுவார்; மறைமுகமாக பாரசீகத்தில் வளர்ந்துவந்தார்; 17ஆம் வயது அடைந்தபோது மேலும் பாரசீகத்தில் தொடர்ந்து வாழ்வது இடையூறு தருவதாக இருக்கும் எனக் கருதித் தன்னை அடிமையாக விற்றுக் கொள்வதற்கு இணங்கினர்; பீடாரில் பாமினி சுல்தானின் அமைச்சருக்கு விற்கப்பட்டார். இக் கதையை ஃபெரிஷ்டா உண்மையில் நம்பித் திருப்தியடைந்தார்.

### ஃபெரிஷ்டா எழுதிய வரலாறு

எந்தக் கட்டுப்பாடும் இன்றி விடுதலையுடன் எழுதப்பட்ட ஃபெரிஷ்டா எழுதிய வரலாற்றிற்கும், அரசவைக்குரிய கட்டுப் பாடுகளுடன் அபுல் பாஸலால் எழுதப்பட்ட 'அக்பர்நாமா' என்ற நூலுக்கும் ஒரு பெரிய வேறுபாடு இருக்கின்றது. பதினேழாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வரலாற்று ஆசிரியருக்கு முக்கியம் என்று தென்பட்ட போர்களும் சூழ்ச்சிகளும் பதினும் நூற்றுண்டில் இந்தியாவின்மீது எந்தவித விளைவையும் ஏற்படுத்துவனவாக இல்லை; மாருக, மாகாணத்திற்கே உரிய முக்கியமான விஷயமாகக் கருதப்பட்டது. இருப்பினும், பீஜப் பூரும் அந் நாட்டு அரசர்களும் இந்திய வரலாற்றில் இடம் பெறத் தகுதியுள்ளவர்களாகவே சில துறைகளில் காட்சியளிக்கிருர்கள்.

### யூசுப் ஆதில்ஷா ஷியா சமயத்தை அதிகமாக விரும்புதல்

யூசுப் ஆதில் ஷா விஜயநகரத்துடனும், அண்டைய நாட்டு முஸ்லீம் அரசர்களுடனும் பல போர்கள் புரிந்தார். இப்

போர்களின் விளைவுகள் பலதிறப்பட்டவை. இவர் தம் இளம்பிராயத்தில் பாரசீகத்தில் வாழ்ந்ததால், ஷியாப் பிரிவை விரும்புபவராக இருந்தார்; பிறகு அம் மதத்தைத் தழுவிக்கொள்வதாக எல்லோர் முன்னிலையிலும் சத்தியமும் செய்தார்; 1502-ல் ஷியா சமயத்தை நாட்டின் சமயமாக்கித் தம் குறிக்கோளைப் பூர்த்தி செய்துகொண்டார்; அதே சமயத்தில் ஸுன்னிகளுக்கு விடுதலையுள்ளதும் கட்டுப்பாடற்றதுமான மத உரிமையை அளித்தார். சுற்றுப்புற நாடுகளிலுள்ள இளவரசர்கள் பேராபத்து விளைவிக்கும் கூட்டு இணைப்பு ஒன்றை ஏற்படுத்தியதனால், இக் கொள்கையைச் சிறிது காலத்திற்கு இவர் கைவிடவேண்டியது நேரிட்டது. ஆனலும், இவர் பிறகு, 'ஷியா சமயத்தை மீண்டும் பின்பற்றத் தொடங்கினர்'.

## போர்ச்சுகீசியர்கள் கோவாவைக் கைப்பற்றுதல்

அக் காலத்தில் யூசுப் ஆதில்ஷா விரும்பித் தங்கும் இடமாக கோவா விளங்கிற்று. இத் துறைமுகத்தைத் தம் அரசாங்கத்தின் இருப்பிடமாக ஒரு காலத்தில் ஆக்கவேண்டும் என்று இவர் எண்ணினர். இத் துறைமுகம் தக்காணத்து முஸ்லீம்களின் சந்திப்பிடமாக விளங்கிற்று. மெக்கா செல்லும் முஸ்லீம் யாத்திரீகர்கள் இத் துறைமுகத்தில் கப்பலேறிச் செல்வார்கள். 1510ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் (ஹி.பி. 915) போர்ச்சுகீசியத் தளபதி அல்புகர்க் எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தி, மக்கள் சேதமின்றி இந் நகரைக் கைப்பற்றிக்கொண்டார். அல்புகர்க்கின் இவ் வெற்றிக்குக் காரணம் அரசரின் அதிகாரிகளின் அக்கறையற்ற தன்மையேயாகும். ஆனல், சுல்தான் தாம் மிகுதியாக விரும்பும் அந் நகரத்தை மீண்டும் கைப்பற்ற உறுதிகொண்டு பெரும்படையொன்றைக் கொண்டு 1510-ல் (ஹி.பி. 916) ஆகஸ்டு மாதத்தில் கோவாவைக் கைப்பற்றினர். மழைக் காலத்தில் மிகுந்த துயருக்குள்ளாகிய அல்புகர்க்கின் கப்பற்படை இலையுதிர் காலத்தில் மீண்டும் வலிமையுள்ளதாக ஆக்கப்பட்டது. அக்டோபர் அல்லது நவம்பரில், தமது 74ஆம் வயதில் ஏற்பட்ட யூசுப் ஆதில் ஷாவின் இறப்பு, நாட்டின் பாதுகாப்பை இன்னும் பலவீனப்படுத்தியது. இதனல் போர்ச்சுகீசியர்கள் மும்முரமாகச் சண்டையிட்டு, கோவா நகரைத் தகர்ப்பதில் வெற்றிகொண்டனர்.

## மராட்டியப் பெண்ணை மணம்புரிந்துகொள்ளுதல்

தக்காணத்து முஸ்லீம் இளவரசர்கள் இந்துப் பெண்களைத் திருமணம்புரிந்துகொண்டதற்குப் பல சான்றுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. தம் ஆட்சியின் தொடக்கத்தில் யூசுப் ஆதில் ஷா,

முகுந்தராவ் என்ற மராட்டியத் தலைவர் ஒருவரைத் தோற்கடித்தார்; இம் மராட்டியருடைய சகோதரியை இவர் திருமணம் புரிந்து கொண்டார். இவள் பூபூஜி கானம் என்ற முஸ்லீம் பெயரைப் புனைந்துகொண்டு இரண்டாவது சுல்தானுக்கும், சுற்றுப்புற நாடுகளிலிருக்கும் அரசகுடும்பத்தினரை மணம் புரிந்துகொண்ட மூன்று இளவரசிகளுக்கும் தாயானாள். பொறுப்புள்ள பல உயர் பதவிகளில் மிகுதியான இந்துக்களை யூசுப் ஆதில் ஷா நியமித்தார். கணக்கு எழுதுவதற்கும் வாணிகம் நடத்துவதற்கும் சாதாரணமாக மராட்டிய மொழியே பயன்பட்டது.

**யூசுப் ஆதில் ஷாவின் குணநலன்கள்**

பீஜப்பூரின் முதல் சுல்தான் மிக உயர்ந்த குணநலன்கள் பெற்றிருந்தார் என்று ஃபெரிஷ்டா கூறுகிறார். பல சிறந்த ஆதாரங்களின் அடிப்படையில் இம் மன்னர் நுண்ணறிவுள்ளவர் என்றும், மக்களின் தன்மையை நன்கு தெரிந்தவர் என்றும், அழகும், பேச்சுத் திறனும், கல்வியறிவும், இசைஞானமும் ஒருங்கே பெற்றவர் என்றும் ஃபெரீஷ்டா கூறுகின்றார்.

'இவர் கேளிக்கையைக் கடமையோடு கலந்தார் என்றாலும்' முன்னதைப் பின்னதில் இடையூறு விளைவிக்க இவர் அனுமதிக்கவில்லை. இவர் தம் அமைச்சர்கள் நீதியுடனும் நேர்மையுடனும் நடந்துகொள்ளும்படி எச்சரித்தார். அதோடு தாமே இந் நற்குணங்களுக்குச் சான்றாக விளங்கினார். பாரசீகம், துருக்கிஸ்தான், ரூம்போன்ற நாடுகளிலிருந்து பல தலைசிறந்த அறிஞர்களையும், வலிமைமிக்க அதிகாரிகளையும், அறிவிற் சிறந்த கலைஞர்களையும் தம் அரசவைக்கு வரவழைத்தார். இவர்கள் எல்லோரும் இவருடைய நல்லாதரவுடனும் மகிழ்ச்சியுடனும் வாழ்ந்துவந்தனர். இவருடைய ஆட்சிக் காலத்தில் பீஜப்பூரின் கோட்டை கல்லால் கட்டப்பட்டது'.

இவருடைய கல்லறை இவரால் மதிக்கப்பெற்ற ஒரு துறவியின் கல்லறைக்கு அருகில் கூகி அல்லது கோகி என்ற இடத்தில் அமைந்திருக்கின்றது; பீஜப்பூரில் அன்று.

'இவருக்குமேல் எந்தக் கல்லறைக்கூடமும் கட்டப்படவில்லை; புனித மயானத்தின் சுற்றுப்புறங்களில் மற்றக் கல்லறைகளைப் போன்றே இவருடைய திறந்த கல்லறையும் மிக எளிமையாக இருக்கிறது. இன்றும் வழங்கிவருகின்ற அறக்கொடையின் மூலமாக ஒவ்வோர் ஆண்டும் பருத்தியால் செய்த மேற்போர்வையால் அது மூடப்பட்டுவருகிறது; இரவில் நன்றியுள்ள பணியாளர்களால் கல்லறைக்கு விளக்கு ஏற்றப்பட்டுவருகின்றது

இவருடைய ஆத்மா சாந்தியடைய ஃபதேஹாக்கள் (தொழுகைகள்) தொடர்ந்து நடைபெற்றுவருகின்றன இதை கோகி மக்கள் தங்களின் பெருமைக்குரிய பணிகளாகச் கருதிவருகின்றனர். மாபெரும் பாமினி அரசர்களின் கல்லறைகளும் இவருடைய எதிரிகளின் கல்லறைகளும் அழிக்கப்பட்டு, இவருடைய கல்லறைமட்டும் பேணப்படுவதில் கோகி மக்கள் பெருமையடைகிருர்கள்"[1]

### இஸ்மாயில் ஷா

புதிய அரசர் இஸ்மாயில் இள வயதினராக இருந்த காரணத்தினுல், இறந்துபோன அரசரின் அலுவலர்களுள் ஒருவரான கமால் கான் என்பவரால் அரசாங்கம் நடத்தப்பட்டு வந்தது. இவர் நன்றி கொன்று, அரியணையைத் தானே கைப் பற்றிக்கொள்ளச் சூழ்ச்சி செய்தார்; ஆனுல், இம் முயற்சியில் தம் உயிரையே இழக்க நேர்ந்தது. அக் காலத்து மற்ற அரசர்களைப் போன்றே இஸ்மாயிலும் தம் அண்டை நாட்டவர்களோடு சண்டையிடுவதில் தம் காலத்தின் பெரும்பகுதியைச் செலவிட்டார். கிருஷ்ணு, துங்கபத்திரை நதிகளுக்கு இடையில் பலரால் உரிமை கொண்டாடப்பட்ட ரெய்ச்சூர் தோஆப் பகுதியை இவர் விஜயநகரத்திடமிருந்து மீட்டார்; பாரசீகத்தின் ஷா பீஜப்பூரை சுதந்திர நாடாக ஏற்றுக்கொண்டு, ஒரு தூதுக்குழுவையும் அங்கு அனுப்பினுர். இத் தூதுக்குழுவை வரவேற்கும்பொழுது, தம் இராணுவ அதிகாரிகள் ஷியா சமயத்திற்கு உரிய தலைப் பாகையை அணியும்படி சுல்தான் ஆணையிட்டார். இவருடைய உடல் இவருடைய தகப்பனுருக்கு அருகில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. குணநலன்களிலும் செயலாற்றும் திறனிலும் இவர் தம் தந்தையை ஒத்திருந்தார். இவருக்குப்பின் பதவிக்கு வந்த இவருடைய மகன் மல்லூ என்பவர் மாற்றமுடியாத அளவுக்குக் கொடியவராகவும் திறனற்றவராகவும் விளங்கினுர். இதனுல் இவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டுப் பின் குருடராக்கப்பட்டார். சில மாதங்களுக்குப் பின் அரசாட்சி இவருடைய சகோதரரான இப்ராஹீமின் கைக்கு மாறியது.

### முதலாம் இப்ராஹீம் ஆதில் ஷா

இப்ராஹீம் ஆதில் ஷா என்ற பட்டப் பெயர் புனைந்து கொண்ட இப்புதிய அரசர் ஷியா தலைப்பாகை உட்பட எல்லா அன்னியப் பழக்க வழக்கங்களையும் புறக்கணித்து, சுன்னி சடங்குகளை முழுமையாக மேற்கொண்டார். பாரசீகர்களுக்கும் மற்ற

[1] Meadows Taylor,—'Manual' p. 198.

அன்னியர்களுக்கும் எதிராக தக்காணத்தவர்களுக்கும் அவர்களுடைய கூட்டாளிகளான அபிசீனியர்களுக்கும் இவர் ஆதரவு அளித்தார். விஜயநகரின் உண்மை அரசராக இருந்த ராமராஜாவினல் பல அந்நியர்கள் விஜயநகர அரசாங்கப்பணியில் அமர்த்தப்பட்டார்கள். இச் சமயத்தில் விஜயநகரத்தில் பல புரட்சிகள் ஏற்பட்டன. இவைகளைப்பற்றி இவ்வரசின் வரலாற்றில் காணலாம். 1535ஆம் ஆண்டில் இந்துகட்சி ஒன்றின் தலைவன் அழைப்பை ஏற்றுக்கொண்டு, பீஜப்பூர் சுல்தான் விஜயநகரிற்கு விருந்தினராகச் சென்றார். விஜயநகரத்தில் ஒரு வாரம் தங்கியிருந்தார். ஏராளமான பொன் நாணயங்களையும் சிறந்த குதிரைகளையும் யானைகளையும் அன்பளிப்பாகப் பெற்று, இவர் அங்கிருந்து மீண்டார். இதற்குப் பின் பீடார், அகமத் நகர், கோல்கொண்டா ஆகிய நாடுகளின் சுல்தான் பீஜப்பூருக்கு எதிராக ஒன்று சேர்ந்து கொண்டார்கள். இருப்பினும், ஆசாத் கான் என்ற அமைச்சரின் திறமையின் காரணமாக பீஜப்பூர் வெற்றி பெற்றது. இவ்வமைச்சரின் புகழ் மகமூத்காவானின் புகழைவிட எவ்வகையிலும் குறைந்ததல்ல. ஆட்சிக் காலம் முழுவதும் நடந்த போர்களையும் சூழ்ச்சிகளையும் பற்றி விவரமாக படிக்கவேண்டியதில்லை. தம் வாழ்நாளின் இறுதியில் குடிப்பதிலும் இன்பக் கேளிக்கைகளிலும் மூழ்கி, 1557ஆம் ஆண்டில் மிக இழிந்த நிலையில் மரணமடைந்தார். கோகி என்ற இடத்தில் தம் தந்தைக்கும் பாட்டனுருக்கும் பக்கத்தில் இவர் அடக்கம் செய்யப்பட்டுள்ளார்.

### அலி ஆதில் ஷா

தம் தகப்பனர் இறந்தபின் அரசபதவி ஏற்ற அலி ஆதில்ஷா ஷியா மதத்தை வெளிப்படையாக மீண்டும் மேற்கொண்டு, தம் ஆட்சியைத் தொடங்கினர். இவருடைய தந்தையின் காலத்தில் சமயப்பொறை மிகுந்த எச்சரிக்கையோடு காக்கப்பட்டு வந்தது. ஆனல் இவருடைய காலத்தில் சமயவெறி தாண்டவமாடும் அளவுக்கு ஷியா சமயம் பின்பற்றப்பட்டு வந்தது. சுல்தான் இராமராஜரோடு தாற்காலிகக் கூட்டுறவு ஒன்றை ஏற்படுத்திக் கொண்டார். இவ்விந்து முஸ்லீம் கூட்டுப் படை ஆமது நகரின் இராச்சியப் பகுதியின்மீது 1558-ல் போர் தொடுத்தது. ஆமது நகரம் இரக்கமின்றிச் சூறையாடப்பட்டது; கடந்த இரண்டு நூற்றுண்டுகளாக முஸ்லீம்களால் தாங்கள் பெற்ற துன்பங்களுக்குப் பழிவாங்குவதற்கு இந்த வாய்ப்பை இந்துக்கள் நன்குப் பயன்படுத்திக்கொண்டு ஆமது நகரின்மேல் இரக்கமின்றி, மிருகத்தனமாகத் தங்கள் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டனர். இராமஇராஜர் செய்த கொடுமைகளினுலும்

அவருடைய முஸ்லீம் கூட்டாளிகளுக்கு இவர் செய்த அவமதிப்பினாலும் அலி ஆதில்ஷா இராமராஜருடன் தம் உறவை அகற்றிக் கொண்டார். செருக்குமிக்க இந்து அரசர்களின் செல்வத்திற்கும் படைகளுக்கும் எதிரில் தனித்த முஸ்லீம் அரசர் எவரும் போட்டியிடமுடியாது என்று ஆதில்ஷாவுக்கு அறிவுரைகள் கூறப்பட்டன. இறுதியில் பீஜப்பூர், பீடார், அகமதுநகர் கோல்கொண்டா ஆகிய நான்கு நாடுகளின் சுல்தான்கள் தங்களிடையே உள்ள பகைமையை ஒழித்து, வலிமையுள்ள ஓர் இணைப்பைப் பிற மதத்தவர்களை அழிக்க ஏற்படுத்திக்கொண்டனர். தங்களுக்கிடையில் கூட்டுறவுப் பிணைப்புகள் இன்னும் அதிகரிப்பதற்காக அலி ஆதில் ஷா ஆமதுநகரின் ஹுசேன் நைஸாம் ஷா என்பவரின் மகள் சாந்து பீபீயை திருமணம் புரிந்துகொண்டார். நைஸாம் ஷாவின் சகோதரியை பீஜப்பூர் சுல்தானின் மகன் மணம் புரிந்துகொண்டான்.

### விஜய நகருக்கு எதிராகக் கூட்டு

1564 டிஸம்பர் மாதத்தில் நான்கு கூட்டுறவு அரசர்களும் தலைக் கோட்டை என்ற சிறிய நகரத்தில் தங்களுடைய கூட்டுறவு இருப்பிடத்தை ஏற்படுத்தினர். இந் நகரம் கிருஷ்ணா நதிக்கு 25 மைல் வடக்கில் 16° 28' வடக்கு அட்சரேகையிலும் 76°, 19' கிழக்கு தீர்க்கரேகையிலும் அமைந்துள்ளது.

முஸ்லீம் படையெடுப்பை சமாளிப்பதற்காக விஜய நகர அரசாங்கம் வெற்றி பெறுவதில் முழு நம்பிக்கையுடன் பல்லாயிரக் கணக்கான வீரர்களைக்கொண்ட படையைத் திரட்டியது. இஸ்லாமியப் படை கிருஷ்ணா நதியைக் கடப்பதைத் தடுக்க இராமராஜாவின் சகோதரர்கள் திருமலை, வேங்கடாத்திரி என்பவர்களின் கீழ் இரண்டு பெரும் படைகள் முன்னால் அனுப்பப்பட்டன. ஆனால், முஸ்லீம் அரசர்கள் எளிய தந்திரம் ஒன்றைக் கையாண்டு, இங்கலிக்கி என்ற கடவுத்துறை ஒன்றினைக் கடந்து சென்றனர். வயது முதிர்ந்த இராமராஜர் பிறகு தலைமைப் படையோடு விஜயநகரத்திலிருந்து கிளம்பி முட்கல் அரணுக்கு அருகில் ஓர் இடத்தில் தம் பாசறையை அமைத்தார். இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் அடிக்கடி சண்டைகள் ஏற்படுவதற்கு இவ்விடம் காரணமாக இருந்திருக்கின்றது.

### தலைக்கோட்டைப் போர்

1565, ஜனவரி 23ஆம் நாள் போர் நடந்தது.[1] இரு புறத்திலும் படை வீரர்கள் எண்ணற்று இருந்தமையால் அநேக

[1] திரு. சிவெல் வாரநாள் ஃபெரிஷ்டா கூறுவதுபோல வெள்ளியல்ல என்றும் அது செவ்வாயாக இருந்தது என்றும் குறிப்பிடுகிறார்,

மைல்கள் நீண்டிருந்த முனையில் போர் நடந்திருக்க வேண்டும். அகமதுநகரைச் சேர்ந்த உசேன் நைஸாம்ஷாவின் கீழ் முஸ்லீம் களின் நடுப்படை இருந்தது. இவர் தம்முடைய பீரங்கிப் படையின் சக்தி வாய்ந்த பகுதியை வைத்திருந்தார். பீஜப்பூரின் அலி ஆதில்ஷா வலது அணிக்குத் தலைமை தாங்கினர். இடது அணி கோல்கொண்டாவின் அலி பாத்ஷாவினிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது. 'பீரங்கிகள் உறுதியான சங்கிலிகளாலும் கயிறு களாலும் இறுக்கிக் கட்டப்பட்டு முனைக்குக் கொண்டுவரப் பட்டன. வழக்கம்போல் போர்யானைகள் பல இடங்களில் நிறுத்தப்பட்டிருந்தன. ஒவ்வோர் அரசரும் தமக்குரிய கொடியை தம் படையின் நடுவில் ஏற்றி இருந்தார். நேசப்படைகள் மிக நெருங்கி எதிரியை நோக்கி அணிவகுத்துச் சென்றனர்.'

முதுமையடைந்திருந்த இராமராஜர் தம்முடைய சக்திகளை சரிவரப் பெற்றிருந்தமையாலும் அகமதுநகர் எதிராக இருந்த மத்தியப் படைக்குத் தலைமை தாங்கினர். இவருடைய சகோதரர் திருமலை பீஜப்பூரின் அலி ஆதில் ஷாவை எதிர்த்தார். மற்ற சகோதரர் வெங்கடாத்திரியும் அதே சமயத்தில் பீரார், கோல் கொண்டா ஆகிய நாட்டு இளவரசர்களை எதிர்த்துச் சண்டையிட் டார். மிக மும்மரமான சண்டை நடந்தபின் பீஜப்பூர் கோல் கொண்டா நாட்டு அரசர்கள் பின் வாங்க யோசனை செய்து கொண்டிருந்தனர். ஆனாலும் அகமது நகரின் சுல்தான் படை நடுவில் நிலை குலையாது நின்றார். அத்தருவாயில் வெறி கொண்ட யானை ஒன்று இராமராஜர் அமர்ந்திருந்த பல்லக்கைத் தாக்கியது. பல்லக்கைச் சுமப்பவர்கள் இதனால் அச்சமுற்று இராமராஜரை கீழே வீழ்த்தினர். இவர் கைதியாக்கப்பட்டு ஹுசேன் நைஸாம் ஷாவின் கைகளாலேயே கொல்லப்பட்டார். இராமராஜரின் துண்டிக்கப்பட்ட தலை நீண்ட ஈட்டி முனையில் குத்தப்பட்டு இராம ராஜரின் படைவீரர்கள் காணும்படி வைக்கப்பட்டது. 'தங்கள் தலைவர் அழிந்ததைப் பார்த்த இந்துக்கள் வழக்கம்போல் குழப்ப மடைந்து போர்க்களத்தை விட்டுச் சின்னபின்னமாகச் சிதறி ஓடினர். ஆற்றின் தண்ணீர் இரத்தத்தால் சிவப்பாக மாறும் அளவுக்கு இவர்கள் நேசப்படைகளால் துரத்தப்பட்டுக் கொல்லப் பட்டனர். போரில் துரத்திஅடிக்கப்பட்டபொழுது ஓர் இலட் சத்திற்கு மேலாகப் பிற மதத்தினர் கொலையுண்டனர் என்று நம்பத்தகுந்த ஆசிரியர்கள் கணக்கிட்டிருக்கின்றனர்'.

### போரின் விளைவுகள்

முஸ்லீம் கூட்டுப்படைகள், போர்க்களத்திலிருந்து முப்பது மைல் தூரத்திலுள்ள தலைக்கோட்டை என்ற இடத்தில் கூடி

யிருந்ததால் இப்போர் தலைகோட்டைப் போர் என்று வரலாற்றில் அறியப்படுகிறது. இப்போர் இந்திய வரலாற்றின் நிலையான முடிவுகளை நிர்ணயிக்கும் போர்களில் ஒன்றாகும். வாளின் தீர்ப்புக்கு எதிராக இந்துக்கள் எம்முயற்சியும் செய்ய வில்லை. இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாக நீடித்திருந்த பரந்த, தெற்கு இந்துப் பேரரசு இப்போரினால் பெருமளவு சிதைந்தது தக்காணத்தில் இஸ்லாமின் ஆதிக்கம் உறுதிப் படுத்தப்பட்டது. புனிதமான விஜயநகரம் அறவே அழிக்கப் பட்டது. இன்று வரையில் பாழடைந்து காணப்படுகிறது. பீஜப் பூர், கோல்கொண்டா ஆகிய இராச்சியங்கள் பரப்பில் பெரு மளவு விரிந்தன.

**போர்ச்சுகீசியருக்கு எதிராகக் கூட்டுறவு; சுல்தானின் மரணம்**

பீஜப்பூர், ஆமதுநகர் அரசர்கள் மீண்டும் தங்களுடைய படைகளை இணைத்து, அச்சமயத்தில் ஆதிக்கத்தின் உச்சியில் இருந்த போர்ச்சுகீசியரின் இடங்களைக் கைப்பற்றுவதற்கு 1570-ல் முயன்றார்கள். இருப்பினும் கள்ளிக் கோட்டையின் சாமோரின் அச்சின் ராஜா ஆகியவர்கள் அளித்த உதவியைப் பெற்றும் கூட இவர்களால் போர்ச்சுக்கீசிய ஆதிக்கத்தை எதிர்த்து வெற்றி பெற முடியவில்லை. பெரும் படையுடன் கோவா முற்றுகையிடப்பட்டது. இம்முற்றுகை பத்து மாதங்கள் நீடித்தது. கோவாவை முஸ்லீம்களிடமிருந்து பாதுகாக்கும் பணியில் 700 ஐரோப்பிய வீரர்கள், 300 துறவிகள், பாதிரிகள், 1000 அடிமைகள், தேவைப்பொருள்களை சரிவரக் கொண்டிராத படகுகள் மட்டுமே போர்ச்சுகீசியர்களின் தரப்பில் ஈடுபட்டி ருந்தன. 1579ஆம் ஆண்டு அலி ஆதில் ஷா ஒரு பேடியால் கொல்லப்பட்டான். பேடி செய்த செயலுக்குப் பொருத்தமான காரணம் இருந்தது.

**இரண்டாம் இப்ராஹீம் ஆதில் ஷா**

சிம்மாசனத்திற்கு வரவேண்டியவரான இரண்டாம் ஆதில் ஷா இள வயதினராக இருந்த காரணத்தினால் அவருடைய தாய் சாந்துபீபியின் பொறுப்பில் இருந்து வந்தார்; அமைச் சர்கள் அரசாங்கத்தை நடத்தி வந்தனர் 1584ஆம் ஆண்டில் இராணித் தாயார் தம் பிறந்தகமான ஆமதுநகருக்குத் திரும் பினார். இவர் பீஜப்பூருக்கு மீண்டும் திரும்பி வரவே இல்லை. அக்பருடன் நடத்திய போரில் இவர் செய்த துணிகரச் செயல் களைப் பற்றி விரைவில் நாம் அறியப் போகிறோம். 1595-ல் பீஜப் பூருக்கும் ஆமத்நகருக்கும் இடையில் இறுதிச் சண்டை நடந்தது. ஆமத்நகர் மன்னர் கொல்லப்பட்டார். இப்பொழுதிலிருந்து

இவ்விரண்டு நாடுகளின் தனிப்பட்ட வரலாறுகள் முடிவடைகின்றன எனலாம். இவ்விரண்டு நாடுகளின் வரலாறு முகலாயப் பேரரசின் வரலாற்றோடு இணைந்து கொள்கின்றன. இரண்டாம் ஆதில் ஷா 1626ஆம் ஆண்டு வரை உயிருடன் இருந்தார். ஒரு சிறந்த நிர்வாகி என்ற புகழைப் பெற்று, அவ்வாண்டில் அவர் உயிர் துறந்தார். நாட்டைப் பற்றியும் தல மரபுகளைப் பற்றியும் சிறப்பாக அறிந்திருந்த மீடோஸ்டெய்லரின் சான்றை மேற்கோளாகக் கொள்ளலாம். இப்ராஹிம் ஆதில் ஷா 1626-ல் தன் 56 ஆம் வயதில் உயிர் நீத்தார். ஆதில் ஷாஹி வமிசத்தில் இவர் தாம் தலைசிறந்தவர். எல்லா விதங்களிலும் இவ்வமிசத்தை தோற்றுவித்தவரைத் தவிர மற்றெல்லோரையும் விடத் திறமை மிக்கவராகவும் மக்களால் பெரிதும் விரும்பப்பட்டவராகவும் இருந்தவர் இவர் ஒருவரேயாவர்.'

போரினால் ஏற்படும் மனக்குழப்பம் இல்லாமல் இவர் உள் நாட்டு விவகாரங்களில் மிக்க கவனத்துடன் ஈடுபட்டிருந்தார். தம் இராச்சியத்தின் மாகாணங்களில் இவரால் கொண்டுவரப் பட்ட நில ஏற்பாடுகள் போற்றப் படக்கூடிய முறையில் திறமை யுள்ளனவாகச் சொத்துக்களையும் அதன் மதிப்புக்களையும் பதிவு செய்யப்பட்டுள்ள முறை இவருடைய நிர்வாகத் திறமையைக் காட்டுகின்றது. இவ்வேற்பாடுகளில் பல இன்னும் மாவட்டக் குறிப்பேடுகளில் காணப்படுகின்றன. அக்பரின் காலத்தில் புகுத்தப்பட்ட தோடர்மாலின் முறை இம்முறையில் சில மாறுதல் களுடன் பின்பற்றப்பட்டது.

இவர் ஆட்சிக்கு வந்ததும் நாட்டின் மதத்தை சுன்னியிலிருந்து ஷியாவாக மாற்றிய போதிலும், இப்ராஹீம் மற்ற சமயங்களுடன் பொறையுடன் நடந்துகொண்டார். இந்துக்கள் இவரால் துன் புறுத்தப்படாததோடு சிவில் இராணுவத் துறைகளில் உயர் பதவிகள் பிராமணர்களுக்கும் மராட்டியர்களுக்கும் வழங்கப் பட்டன.[1] கோவாவின் போர்ச்சுகீசியர்களுடன் இவர் நல்லுறவு கொண்டிருந்தார். போர்ச்சுகீசிய ஓவியர்கள் இவரது அரண்மனையைத் தங்களது ஓவியங்களால் அலங்கரித்தனர். போர்ச்சுகீசிய வியாபாரிகள் இவர் நாட்டில் கட்டுப்பாடின்றி வியாபாரம் நடத்தினர். போர்ச்சுகீசிய சமயப் பிரச்சாரகர் களுக்கும் இவர் பாதுகாப்பு அளித்தார். பிற சமயங்களைப்

[1] இப்ராஹிம் இந்துக்களிடம் அதிக விருப்பம் கொண்டிருந்ததால் இவருடைய முஸ்லீம் குடிமக்கள் இவருக்கு 'ஜகத்குரு' (உலகப் போதகர்) என்ற ஏளனப்பட்டத்தை அளித்தார்கள். அதே பட்டத்தை அக்பர் போற்றி, ஆசிரியருக்கு அளித்ததோடு, தம்மைப் போற்றுவோரிடமிருந்து இப்பட்டத்தைப் பெற்றார்.

பொறுத்துக்கொள்ளும் இவருடையத் தன்மை இவரது சம காலத்தவரான அக்பருடைய தன்மையைப் போலிருந்தது. அல்லது அதற்கு மேலும் இருந்தது என்று கூறும் நொடிக் கதைகள் பல இன்றைக்கும் நாட்டில் வழங்கிவருகின்றன. தம் மக்களிடையில் கிறித்துவ சமயம் கிறித்தவர்களால் பரப்பப் படுவதை அனுமதித்தார். இவர் காலத்துப் பல கத்தோலிக்கக் கோயில்கள் இன்றும் இருக்கின்றன. ஒரு கோயில் சீதப்பூரிலும், ஒன்று முட்கலிலும், வேறொன்று ரெய்ச்சூரிலும் இன்றும் பல்வேறு இடங்களிலும் இருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் நிலங்களை யும், மற்ற வருமான வசதிகளையும், அரசர் அறக்கொடைகளாக அளித்தார். இவர் தந்த அறக்கொடைகள் முன்னூறு ஆண்டு களில் ஏற்பட்ட பல மாறுதல்களையும் புரட்சிகளையும் கடந்து இன்றும் நிலைத்து இருக்கின்றன. ஒவ்வொரு கோவிலும் பல நூறு உறுப்பினர்களைக் கொண்டுள்ளது. கோவாவின் தலைமைக் குருவின் சமய வரம்பு முறைகட்கு இக்கோயில் உட்பட்டுள்ளது

இப்ராஹீமின் இராச்சியம் மைசூர் எல்லைகள் வரைக்கும் பரவி இருந்தது. இவர் இறக்கும்பொழுது தன் வாரிசுக்குச் செல்வம் நிறைந்த கருவூலத்தையும் நன்முறையில் ஊதியம் பெற்ற எண்பதினுயிரம் (80,000) குதிரைப்படை ஒன்றையும் விட்டுச் சென்ருர். இவருடைய ஆட்சி காலத்தில் ஏற்படுத்தப் பட்ட சிறப்பு மிக்க நினைவுக் கட்டடங்கள் விரைவில் ஆராயப்படும்.

தல வரலாற்றை இதைவிட இன்னும் அதிகமாக ஆராய வேண்டியதில்லை தலைநகரம் பிடிக்கப்பட்டது. நாடு அவுரங்க சீப்பால் 1686-ல் இணைக்கப்பட்டது.

### காண்டேஷின் ஃபாருக்கி வமிசம்

தக்காணத்து முஸ்லீம் இராச்சியங்களைப் பற்றி அறியுமுன் தபதி சமவெளியில் இருக்கும் காண்டேஷ் என்ற சிறிய இராச்சியத்தைப் பற்றி நாம் சிறிது நோக்கலாம் இப் பகுதியின் அரசர்கள் ஃபாருக்கி வமிசத்தைச் சேர்ந்தவர்கள். பாமினி இராச்சியத்தோடு இணைந்திருந்த இப்பகுதி டெல்லி சுல்தான் ஃபிரோஸ் துக்ளக்கின் ஆட்சியின் இறுதியில் 1388-ல் தனி நாடாக நிறுவப்பட்டது. அதன் பின்னர், கணக்கற்ற போர்களில் ஈடுபட்டிருந்தது. சில சமயம் இது குஜராத்தைச் சேர்ந்தபகுதி யாக இருந்தது. இந் நாடு முக்கியத்துவம் பெறுவதற்கு இந் நாட்டில் உள்ள வலிமைமிக்க ஆசிர்கார் (Asirgarh) அரண் காரணமாயிருந்தது. புர்கான்பூர் (Burkanpur) நாட்டின் தலைநகர மாக விளங்கிற்று. 1601ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில்

அக்பரால் ஆசிர்கார் கைப்பற்றப்பட்டதும் இந் நாட்டின் சுதந்திரம் முற்றுப்பெற்றது. பிறகு இது காண்டேஷ் அல்லது கான்தேஷ் என்ற சுபாவாக மாறியது.

**பீஜப்பூரின் ஆதில் ஷாஹி அரசர்கள் அல்லது சுல்தான்கள்**

| | பெயர் | அரியணை ஏறுதல் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | கி.பி. | |
| 1. | யூசுப் | 1490 | பாமினி அரசரின் பிரதிநிதியாக இருந்தவர். |
| 2. | இஸ்மாயில் | 1510 | முதலாமவரின் புதல்வர். |
| 3. | மல்லூ | 1534 | இரண்டாமவரின் மகன். ஆறு மாதங்களுக்குப் பின் பதவியிலிருந்து விலக்கப்பட்டுக் குருடராக்கப்பட்டவர். |
| 4 | முதலாம் இப்ராஹீம் | 1535 | மூன்றுமவரின் சகோதரர் |
| 5. | அலி | 1557 | நான்காமவரின் மகன்; கொல்லப்பட்டார். 1565 விஜய நகரம் அழிக்கப்படுதல். |
| 6. | இரண்டாம் இப்ராஹீம் | 1580 | ஐந்தாமவரின் மைத்துனர்; நல்ல சிவில் நிர்வாகம்; சிறந்த கட்டடங்கள் |
| 7. | முகம்மது | 1626 | ஆறுமவரின் மகன்; 1636-ல் ஷாஜஹானுக்குக் கப்பம் கட்டுபவரானார்; மராத்திய ஆக்கிரமிப்புத் தொடங்கியது. |
| 8. | இரண்டாம் அலி | 1656 | ஏழாமவரின் மகன்; சிவாஜியுடன் போர். |
| 9. | சிக்கந்தர் | 1673 | அவுரங்கசீப்பால் கைதாக்கப்பட்டவர். 1686-ல் வமிசம் ஒழிக்கப்பட்டது. |

**கலையும் இலக்கியமும்**

குல்பர்க்காவிலும் பீடாரிலும் உள்ள பாமினி வமிசத்தின் நினைவுச் சின்னத்தைப்பற்றி முன்பே சுருக்கமாக ஆராய்ந்துள்ளோம். ஆமது நகரில் தொன்மையான முக்கியக் கட்டடம் சிதைவுற்றிருக்கிற பதர் அரண்மனையாகும். இது வெண்கல்லால் இந்நகரை நிறுவியவரால் கட்டப்பட்டது. இந்நகரில் கட்டடக் கலைச் சிறப்புப் பெற்ற வேறு சில பொருள்களும் எஞ்சியிருக்கின்றன. காண்டேஷின் பருக்கிய அரசர்களின் தலைநகராயிருந்த

புர்கான்பூர் என்ற நகரில் இருக்கும் தலைமை மசூதி அலி கான் என்பவரால் 1588-ல் கட்டப்பட்டது. கல்லின்மேல் அழகாகச் செதுக்கப்பட்ட சிற்பங்களைக் கொண்டுள்ள சிறந்த கட்டடம் என்று இது வர்ணிக்கப்படுகிறது. ஆனால் இந்நகரிலுள்ள கட்டடங்கள் கட்டடக்கலைக்குரிய சிறப்பைச் சிறிதும் பெற்றிருக்க வில்லையென்று ஃபெர்குசன் கருதுகிறார்.

கோல்கொண்டாவிலும் பீஜப்பூரிலும் முக்கியக் கட்டடக் கலைப் பள்ளிகள் தோன்றின. இவை ஒன்றுக்கொன்று வேறுபட்டிருப்பதோடு வட இந்தியப் பாணிகளுடனும் வேறுபட்டிருக்கின்றன. கோல்கொண்டா அரணின் சுற்றுப்புறங்களில் எண்ணற்ற மசூதிகளும் அரண்மனைகளும் பழமை வாய்ந்த இதர கட்டடங்களும் அமைந்திருக்கின்றன. கோட்டைக்கு வெளியில் வடக்குத் திசையில் சுமார் அரை மைல் தூரத்தில் இருக்கும் குதுப்ஷாஹி அரசர்களின் கல்லறைகள் கருங்கல்லால் கட்டப்பட்டிருப்பதோடு தனிப்பட்ட முறையில் குறுகிய கழுத்தைக் கொண்ட விசித்திரமான கோபுரங்களையும் பெற்றிருக்கின்றன.

பீஜப்பூரின் ஆதில் ஷாஹி அரசர்களின் ஆணையின்படி கட்டப்பட்ட 'கட்டடங்கள் கருத்துமேன்மையும் கட்டப்பட்டிருப்பதில் தெளிவும் கொண்டிருக்கின்றன. இவைகளுக்கு ஈடாக இந்தியாவில் கட்டப்பட்டுள்ள கட்டடம் எதுவும் இல்லை.' முதல் சுல்தான் யூசுப் என்பவரால் தொடங்கி விடப்பட்டு, ஐந்தாம் அரசரான அலியால் செய்து முடிக்கப்பட்ட நகரத்தின் மாபெருஞ் சுவர்கள் சுற்றளவில் 6¼ மைல் நீளத்தைக் கொண்டிருக்கின்றன. அவற்றின் பெரும்பகுதி இன்னும் சிதைவுபடாமல் இருக்கின்றது.

யூசுப் (1490–1510), அலி (1558–80), இரண்டாம் இப்ராஹீம் (1580–1626), முகம்மது ஷா (1626–56) ஆகிய இந்நான்கு மன்னர்களும் பீஜப்பூரில் சிறந்த கட்டடங்களைக் கட்டினார்கள். தலைமை மசூதி சிறந்த முறையில் பொருத்தமாக அமைந்துள்ள கட்டடமாக விளங்குகிறது. இம் மசூதி அலியால் கட்டப்பட்டது. இம் மசூதி தொழுபவர்கள் 5000 பேரைக் கொள்ளும். இது இன்னும் சேதமடையாமல் இருக்கிறது. அதே அரசர் நகரின் எல்லாப் பகுதிகளும் தண்ணீர் வசதி பெறுவதற்காக என்று நீர்த் தாம்புகளைக் கட்டியதுமன்றி மிகுந்த பரப்புள்ள அரசவை மண்டபம் அல்லது தகன்மஹால் ஒன்றையும் கட்டினார். (1561). மிகச் சிறப்பாக அலங்கரிக்கப்பட்ட இரண்டாம் இப்ராஹீமின் கல்லறை ஒரு தலைசிறந்த கட்டடமாகும். இவரின் வாரிசான முகம்மதுவின் (1626-56) கல்லறை தாஜ்மஹால் கட்டப்பட்ட

காலத்திலேயே கட்டப்பட்டதாகும். அதன் குவி மாடம் உலகத்திலேயே இரண்டாவது மிகப் பெரிய குவிமாடமாகும். இக்காலக் கட்டடங்களைக் கட்டிய கலைஞர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் இந்தியர்களா அன்னியர்களா என்று சொல்லுவதற்கும் இயலாது. கட்டடப்பாணி உள்நாட்டுக் கருத்துக்களையும் வெளிநாட்டுக் கருத்துக்களையும் வெளிப்படுத்துகிறது.

ஆமது நகரிலும் பீஜப்பூரிலும் சிறந்த நூலகங்கள் இருந்ததாகத் தெரிய வருகிறது. பீஜப்பூர் நூல் நிலையத்திலிருந்து எடுக்கப்பட்ட ஒளிவிளக்கம் கொண்ட கையெழுத்துப் பிரதி ஒன்று பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலையில் உள்ளது ஃபெரிஷ்டா என்ற துணைப்பெயரைக் கொண்ட முகம்மது காசிம் எழுதிய சிறப்புமிக்க வரலாறு பீஜப்பூரின் இரண்டாம் இப்ராஹீமின் ஆணையின்கீழ் எழுதப்பட்டது. இவ்வாசிரியர் முந்திய கால பல எழுத்தாளர்களைப்பற்றிக் குறிப்பிடுகிறார். இவர்களுடைய நூல்கள் இப்பொழுது கிடைக்கவில்லை.

நீண்ட காலமாக மக்கள் நடமாட்டமின்றியும் பாலை நிலம் போன்றதாகவும் இருந்த பீஜப்பூர் நகரம் தற்காலத்தில் புத்துயிர் பெற்று விளங்குகிறது. இது பம்பாய் இராஜதானியிலுள்ள மாவட்டம் ஒன்றின் செல்வமிக்க இடமாகத் திகழ்கிறது. வாணிகச் சிறப்பைக்கொண்ட இந்நகரம் 20000 மக்கள் தொகையைக் கொண்டிருக்கிறது.

## ஆதாரங்கள்

### ஐந்து சுல்தானியங்களும் காண்டேஷும்

தலைசிறந்த ஆதாரம் ஃபெரிஷ்டா ஆவார். இவருடைய நிகழ்ச்சி உரைகளுக்கு சீவல் (மறந்துபோன பேரரசு) எழுதியுள்ள குறிப்புகளும் மீடோஸ்டெய்லரின் 'Manual of the History of India'வும் துணையாக உள்ளன. போர்ச்சுகீசியர்களோடு கொண்டிருந்த தொடர்புகளுக்காக ஃபோன்செகாவை (sketch of the City of Goa–Bombay, Thacker, 1878) நான் பயன்படுத்தியுள்ளேன். இது குடியேற்றப் பகுதியின் அரசாங்கபூர்வமான குறிப்புகளைப்பற்றிய சிறந்த நூலாகும். Indian Antiquary 1920–23-ல் T. W. ஹேய்க் எழுதியுள்ள 'அகமது நகரின் ஷாஹி அரசர்களின் வரலாறு' என்பதையும் 'தக்காணத்தின் வரலாற்றுக் கட்டடங்கள்', அலகாபாத் 1907 என்பதையும், G. யாஸ்தானியின் பீடாரின் தொல்பொருள்கள் என்பதையும் பார்க்க.

ஃபெர்குசனின் 'கிழக்கு, இந்தியக் கட்டடக் கலை' 1910 என்ற நூலிலும் அதில் மேற்கோளாகக் குறிக்கப்பட்டிருக்கும் இதர நூல்களிலும் நினைவுச்சின்னங்கள் வர்ணிக்கப்படுகின்றன. பீஜப்பூரைப்பற்றிய தகவல்கள் பெருமளவு முழுமையாக உள்ளது. அங்கே இருக்கும் கட்டடங்கள் நல்ல நிலையில்தான் இருக்கின்றன. பீஜப்பூரின் கட்டடங்களைப்பற்றிய விவரங்கள் அடங்கிய சிறந்த அட்டவணை (நகரத்தின் நிலப்படத்தோடு) Revised Lists of Antiquarian Remains in the Bombay Presidency 2nd Edn. 1897 (vol. xvi A. S. India, New Imp. Ser) என்ற நூலில் காணப்படுகிறது. 'Henry Cousen's Bijapur and its Architectural Remains, with an Historical Outline of the Adil Shahi Dynasty, Bombay Govt. Central Press, 1916 p. p. XII, 132' என்ற இந்நூல் பீஜப்பூரைப்பற்றிய எல்லா நூல்களைவிடச் சாலச் சிறந்த நூலாகும். தனிக் கட்டுரை நூலில் கசன்ஸ் நாணயங்களைப்பற்றிக் குறிப்பிடுகிறார் (பக்கங்கள் 127, 128 pl. cxv) ஐந்து சுல்தானியர்களாலும் அச்சிடப்பட்டுள்ள புலனாகியிருக்கும் எடுத்துக்காட்டுகள் மூன்று பொன் நாணயங்களையும் 200 முத்திரையிடப்பட்ட வெள்ளிக்கம்பியால் செய்யப்பட்ட 300 செப்பு நாணயங்களையும் புதுமையான லாரின்ஸ் என்ற நாணயத்தையும் கொண்டுள்ளன.

ஹைதராபாத்தின் தொல்பொருள் ஆராய்ச்சிக்குரிய பல வகைப்பட்ட விவரங்கள் ஏராளமாக வெளியிடப்படாமல் இருக்கின்றன. இதனுடைய முதல் குறிப்பேட்டில் வாரங்கலைப் பற்றிக் கவர்ச்சியான கட்டுரை ஒன்று உள்ளது.

# 3. விஜயநகர இந்துப் பேரரசு: (1336-லிருந்து 1646ஆம் ஆண்டு வரை)

## இவ்வரலாற்றின் தனிச் சிறப்பு

இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக விஜயநகர இந்துப் பேரரசின் வரலாறு முஸ்லீம் பாமினி (Bahmani) பேரரசின் வரலாற்றோடும் தக்காணத்தின் பிந்திய சுல்தானியர்களின் வரலாற்றோடும் நெருக்கமாகப் பிணைந்திருக்கிறதென்றாலும், இவ்விரண்டு வரலாறுகளையும் ஒரு நிகழ்ச்சியுரையில் சேர்ப்பது என்பது இயலாதது ஆகும். தனித்தனி வரலாறாக எழுதுவது தவிர்க்க முடியாதது. எனினும், ஓரளவு திருப்பிச் சொல்வதைத் தடுக்கமுடியாது. இஸ்லாமுக்கு எதிராக அரண்போல எழுந்து நின்ற இந்து அரசாட்சியின் வரலாறு தனிப்பட்ட சிறப்பைக் கொண்டுள்ளது. இந்திய வரலாற்றுக்கே அரிய பல விபரங் களுடன் விளங்குவதாக இக்கதையைக் குறிப்பிடலாம். தேவைக் குரிய கல்வெட்டுக்கள் அசாதரணமாகப் பல நூற்றுக்கணக்கில் குவிந்துகிடக்கின்றன. பதினைந்காம் நூற்றாண்டிலிருந்து பதினாறும் நூற்றாண்டுவரை பல ஐரோப்பிய முஸ்லீம் பயணிகள் பேரரசின் வரலாற்றுக்குரிய மரபுகளை அரசாங்க முறையின் தெளிவான வர்ணனைகளோடும், சிறப்புமிக்க தலைநகருக்குரிய புகழ்ச்சிகளோடும் குறிப்பிட்டிருக்கிறார்கள். விஜயநகரப் பேரரசின் அரசுமுறை, பழக்க வழக்கங்கள் சமயம் ஆகியவை தனிக்கவனத்திற்குரியவையாகும். ஏனெனில், இந் நாடு தெலிங்க (Telinga) அல்லது தெலுங்கு (Telugu), கன்னட (Kanarese) வகைப் பட்ட இந்துமதத்தின் அவதாரத்தோற்றமாக இருந்தது. இவ் வகை மேலும் வழக்கத்திலிருந்த வடக்கத்திய தோற்றங்களி லிருந்து மாறுபட்டிருந்தது. நம் அறிவின் மூலங்கள் கல்வெட்டுக் களிலும் வெளிநாட்டுப்பயணிகளின் குறிப்புகளிலும் மட்டும் அடங்கியிருக்கவில்லை. தக்காணத்தில் வசித்துவந்த முஸ்லீம் வரலாற்றறிஞர்கள் மதிப்புமிக்க விவரங்களை அளிக்கின்றனர். அவர்களில் முதன்மையானவர் ஃபெரிஷ்டா (Ferishta) ஆவார். நினைவுச் சின்னங்களையும் நாணயங்களையும் திறனாய்வுக் கண்ணோட் டத்தில் பரிசீலனைசெய்து இன்னும் அதிகமாக உணர்ந்துகொள்ள

முடியும். சிறப்புமிக்க கலைப்பள்ளி ஒன்று விஜயநகரில் வளர்ச்சி பெற்றது. சமஸ்கிருதம், தெலுங்கு ஆகிய இரண்டு இலக்கியங்களும் சிறப்பாக வளர்ச்சியடைந்தன.

## விஜயநகரத்தின் அயல்நாட்டுத் தொடர்புகள்

விஜயநகரப் பேரரசின் வெளிநாட்டு வரலாறு முக்கியமாகத் தக்காணத்து முஸ்லீம் வமிசங்களோடு போரிட்ட வரலாறேயாகும். இருந்தபோதிலும் பதினைந்தாம் நூற்றாண்டின் இடையிலிருந்து இரு கட்சிகளும் தங்கள் தத்துவங்களை மறந்துவிட்டுப் புனிதமற்ற தாற்காலிகக் கூட்டுறவுகளை ஏற்படுத்திக் கொண்டனர். இந்துக்களைவிட மிக சக்தி வாய்ந்தவர்களும்; சிறந்த குதிரைப் படைகளைக் கொண்டவர்களும் சிறந்த கவசங்களைத் தாங்கியவர்களுமான முஸ்லீம்கள் வெகுநாள் நீடித்த சண்டையில் இறுதியில் வெற்றிபெற்றனர். அவர்கள் 1565-ல் விஜயநகரப்பட்டினத்தை அழித்தது தெற்கத்திய இந்துப்பேரரசிற்கு உறுதியாக முற்றுப் புள்ளி இட்டது. ஆனாலும், இவ் வெற்றி உடனடியாக முஸ்லீம்களின் இராச்சியப் பகுதியை பரப்ப வில்லை. துங்கபத்ராவிற்குத் தெற்கிலிருந்த தீபகற்பம் இந்துக்களின் கையிலேயே பெருமளவு இருந்தது. எந்த மேலதிகாரியாலும் அடக்கப்படாத இந்துத் தலைவர்கள் பலரால் நெடுநாள் ஆளப்பட்டு வந்தது விஜயநகரின் வெளிநாட்டுத் தொடர்புகள் பெரும்பாலும் முஸ்லீம் சுல்தானியர்களுடன் இருந்தபோதிலும், போர்ச்சுகீசியர்களோடும் இந்துப்பேரரசு முக்கியமான தொடர்புகளைக் கொண்டிருந்தது. போர்ச்சுகீசியர்கள் முதன் முதலாக 1498-ல் மலபார் கடற்கரையில் வந்து இறங்கி, 1510ஆம் ஆண்டின் இறுதியில் கோவாவில் நிரந்தரமாகக் குடியேறினார்கள். மாபெரும் இந்து இராச்சியத்தின் அரசைப்பற்றியும் பழக்கவழக்கங்கள் குறித்தும் சிறப்பாக எழுதியதற்காக நாம் போர்ச்சுகீசியர்களுக்குக் கடமைப்பட்டுள்ளோம்.

## இராச்சியம் அல்லது பேரரசின் தோற்றம்

வாரங்கல்லின் காகதீய அரசரான பிரதாபருத்ரர் என்பவர் 1323-ல் சுல்தான் தியாஸுத்தீனின் தளபதியான உலுத்கான் என்பவரால் தோற்கடிக்கப்பட்டுப் பதவியிலிந்து விலக்கப் பட்டார். தோற்கடிக்கப்பட்ட அரசனின் கருவூலத்தின் கண்காணிப்பாளரான ஹரிஹரா, புக்கா என்ற இரண்டு சகோதரர்கள் பின்னால் கம்பிலியின் அரசவைக்கு ஓடிச்சென்று, அங்கே சம்பளத்திற்குச் சேர்ந்தார். மூன்று ஆண்டுகளுக்குப் பின் கம்பிலதேவரும் கிளர்ச்சி செய்த அகதியான கர்ஷாப் என்பவருக்கு

தஞ்சம் கொடுத்ததனல் பதவியிலிருந்து அகற்றப்பட்டார். இவருடைய இரண்டு அலுவலர்களும் அதாவது ஹரிஹராவும் புக்காவும் தில்லிக்குக் கைதிகளாகக் கொண்டுபோகப்பட்டனர்.

1328–29-ல் முகம்மது பின் துக்லக்கின் பின்வாங்குதல் தக்காணத்தில் இந்துக்கள், முக்கியமாக இந்துக்களின் தலைவரான கபாய நாயகா என்பவர் மீண்டும் எழுச்சி பெறுவதற்குக் காரண மாக அமைந்தது இவர் (கபாயநாயகா) 1336ஆம் ஆண்டுவரை கிழக்குக்கரையில் ஓர் இராச்சியத்தை உண்டாக்கி இருந்தார். அதே ஆண்டுகளில் கம்பிலியின் கவர்னரான மாலிக்முகம்மது என்பவருக்கு எதிராகக் கிளர்ச்சிகள் நடந்தன. இவர் இதை அடக்குவதற்கு தில்லியின் உதவியை நாடினர். நூனிஸ், பரணி ஆகியவர்களின் கூற்றின்படி சுல்தான் தலத்தில் செல்வாக்குப் பெற்ற கவர்னரை அமர்த்த முடிவு செய்தார். இப்பொழுது இஸ்லாமியர்களாக மதமாற்றம் செய்யப்பட்டிருந்த ஹரிஹரர் (Harihara), புக்கர் Bukkar) என்பவர்களைத் தேர்ந்தெடுத்தார். ஒருபடையுடன் இவர்கள் முன்னேறி குத்தி (Guthi) என்ற இடத் தையும் பிறகு ஆனெ கொந்தி (Anegondi) என்ற இடத்தையும் கைப்பற்றினர். 1336ஆம் ஆண்டுவரை இப்பகுதி மிக விசால மாகப் பரவி இருந்தது.[1]

மாபாரைச் (Mabar) சார்ந்த ஹசன்கான் செய்த கிளர்ச்சி 1344–45-ல் சுல்தானைத் தெற்கே வரும்படி செய்தது. ஆனல், வாரங்கல்லில் இவரும் இவருடைய படையும் கொள்ளை நோய் ஒன்றால் பாதிக்கப்பட்டனர். சுல்தான் இறந்து விட்டார் என்ற வதந்திகள் கிளர்ச்சியை உண்டாக்கின. இதனல், படையெடுப்பு கைவிடப்பட்டது. இச் செயல் மேலும் பல இந்துக்கலகங்களை விளைவித்தது. இப்பொழுது ஹரிஹரர் முஸ்லீம் ஆதிக்கத்தை ஒழிப்பதற்காக கபாநாயகரோடு (Kabanayaka) சேர்ந்துகொண் டார். சுல்தானியத்தில் நீடித்திருந்த குழப்பங்களின் விளைவாக இரு சகோதரர்களும் விஜயநகர நாட்டிற்கு வித்திட முடிந்தது. பரணி பின் வருமாறு குறிப்பிடுகிறார். துணை வசீராக இருந்த மாலிக் மக்பூல் (Malik Maqbul) தில்லிக்கு ஓடிவிட்டார். இந்துக்கள் வாரங்கல்லைக் கைப்பற்றினர். இவ்விதமாக இவ்விடம் முழுவது மாக இழக்கப்பட்டு இறுதியில் இந்துக்களின் கைக்கு வந்து சேர்ந்தது. தேவகிரி, குஜராத்து ஆகியவை மட்டுமே பத்திரமாக இருந்தன.

[1] ஹரிஹரர், புக்கர் ஆகியவர்கள் மைசூர் நாட்டைச் சேர்ந்த ஹோய்சாளா (Hoysala) அல்லது பல்லாள (Ballala) அரசர்களின் கீழ் இருந்த தலைவர்கள் என்ற கருத்திற்கு H. Heros—" Beginnings of Vijayanagar " என்ற நூலைப் பார்க்க.



(a) ராஜா மான்சிங்



(b) மேவார் அமர்சிங்கும் அவருடைய புதல்வர்களும்

### முந்திய தலைவர்கள் ஹரிஹரர், புக்கர்

கி.பி. 1336ஆம் ஆண்டு துங்கபத்திரா நதியின் தெற்குக் கரையில் நிறுவப்பட்ட விஜயநகரத்தின் மரபார்ந்த தேதியாகும். இது 1343-ல் கட்டி முடிக்கப்பட்டது. பத்து ஆண்டுகளுக்குப் பிறகு இரு சகோதரர்களும் கிழக்குக் கடலுக்கும் மேற்குக் கடலுக்கும் இடையில் உள்ள நாடு முழுவதின் மீதும் ஆதிக்க உரிமை கொண்டாடும் நிலையில் இருந்தார்கள் என்பது உறுதி.

ஹரிஹரர் இராச்சியத்தில் அமைதி ஏற்படுத்தி நாட்டை 'கிராமங்கள்', 'ஸ்தலங்கள்' என்ற புதிய உபபிரிவுகளாகப் பிரித்து ஒழுங்கு பெற அமைத்தார். ஒவ்வொரு பிரிவும் கர்ணம் என்ற அதிகாரியின் கீழ் வைக்கப்பட்டது. சாதாரணமாகப் பிராமணர்களே கர்ணங்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். காட்டு நிலங்களைச் சீர்ப்படுத்தியவர்களுக்கு வெகுமானம் அளித்தும் விவசாயிகளுக்கு எளிய உரிமைக் கட்டுப்பாடுகளை விதித்தும் ஹரிஹரர் வேளாண்மைக்கு ஊக்கமளித்தார்.

குத்தியைத் தமது அரசாங்க இருப்பிடமாகக் கொண்டு மேற்கத்திய தெலுங்கு மாவட்டங்களுக்குப் பிரதிநிதியாக இருந்த புக்கர் தம் சகோதரருடைய ஆட்சியோடு மேலும் மேலும் இணைக்கப்பட்டிருந்தார். பின்னவர் 1354–55-ல் இறந்த பிறகு இவர் பதவியேற்றார். புக்கர் 1377-ல் தாம் இறக்கும் வரை ஆட்சி புரிந்தார். இவர் தம் வாழ்க்கையின் பெரும் பகுதியை பாமினி அரசர்களோடு குறிப்பாக முகம்மது ஷாவுடன் (1358–73) போர் புரிவதில் கழித்தார்.

### இரண்டாம் ஹரிஹரர் 1377—1404

இவருடைய ஆட்சிகாலம் ஐந்தாம் பாமினி சுல்தானை இரண்டாம் முகமது ஷாவின் ஆட்சிக் காலத்தோடு ஒத்திருந்தது. இவர் ஒருவரே தம் வமிசத்தில் அமைதி நாட்டியவராவர். இதனால், ஹரிஹரர் தம் இராச்சியத்தைத் தென் இந்தியா முழுவதிலும் பரப்பி நிலைநாட்ட முடிந்தது முதன் முதலாக விஜயநகர இராச்சியத்தை ஐக்கியப்படுத்தினர். அதுவரை இது ஐந்து சகோதரர்களின் கீழ்க் கூட்டுக்குழுவாக இருந்தது. ஒன்று விட்ட சகோதரர்களான இவர்களை விலக்கித் தம் புதல்வர்களை நியமித்தார். இப்புதல்வர்களில் ஒருவரான தேவராயர் கிருஷ்ணா நதியை இராச்சியத்தின் வடகிழக்கு எல்லையாக படிப்படியாக அடைந்தார். இது கொண்டவீட்டைச்சார்ந்த ரெட்டிகளைத் துரத்தியடித்துச் செய்யப்பட்டது. மற்ற இடங்களிலும் இது பரவியது. கோவா, காரேபடான், ஆல் தாபோல் என்ற

இடங்கள் கைப்பற்றப்பட்டன. திருச்சிராப்பள்ளியும் காஞ்சியும் இராச்சியத்திற்குள் சேர்த்துக்கொள்ளப்பட்டன. இவர் பிற மதங்களுடன் பொறுமையோடு இருந்தார். எனினும், இவர் சிவன்–வீருபக்ஷன் மீது தனிப்பட்ட பற்றுக்கொண்டிருந்தார்.

### முதலாம் தேவராயர்

ஹரிஹரர் இறந்ததும் வீருபக்ஷர் முதலில் அதிகாரத்தைக் கைப்பற்றினர். ஆனல், வெகுவிரைவில் ஏற்கெனவே இளவரசாக நியமிக்கப்பட்ட அல்லது யுவராஜாவான இரண்டாம் புக்கரால் விலக்கப்பட்டார். இவரும் இரண்டு ஆண்டு ஆட்சிக்குப்பின் தேவராயரால் பதவியிலிருந்து விலக்கப்பட்டார்.

இக் குழப்பகாலத்தை உழைப்புமிக்க சுல்தான் ஃபிரோஸ் பயன்படுத்திக்கொண்டு, 1406-ல் அநேக மாவட்டங்களைக் கைப்பற்றித் தாற்காலிகமாக தலைநகருக்குள் புகுந்து, அவருடைய மகளையும் கப்பத்தையும் பெற்றார். அதேசமயத்தில் கொண்ட வீடுவின் ரெட்டிகள் தாங்கள் இரண்டாம் ஹரிஹரருக்கு இழந்த கிழக்கு மாவட்டங்களை மீண்டும் கைப்பற்றினர்கள். இவர்கள் பாமினியர்களோடு கூட்டுறவு கொண்டிருந்தார்கள் எனத் தெரிய வருகிறது. ரெட்டிகளிடையே பிரிவுகளை உண்டாக்கும் முயற்சிகள் தேவராயருக்கு மேலும் தோல்வியை அளித்து, சுல்தானை தெலுங்கானவின் மேலதிகாரியாக நிலைநாட்டின.

### இரண்டாம் தேவராயர்

1422-ல் தேவராயர் இறந்தார். இவருடைய புதல்வரான இராமச்சந்திரர் இவருக்குச் சிறிது காலத்திற்குப்பிறகு பதவி ஏற்றார். இவருக்குப்பின் விஜயர் என்பவர் பதவி ஏற்றார். இவர் 1421-ல் மேற்கு உதயகிரியில் கிளர்ச்சி ஒன்றை அடக்கியதாகத் தெரியவருகிறது. இவருடைய ஆட்சி 1422ஆம் ஆண்டிலிருந்து 1425–26ஆம் ஆண்டுவரை நீடித்திருந்தது. இக்காலத்தில் ஒரு பகுதியில் யுவராஜரான இரண்டாம் தேவராயர் நிர்வாகப் பொறுப்பில் பங்கெடுத்துக்கொண்டார்.

தம் ஆட்சியின்போது (1425-26-1446) தேவராயர் ரெட்டிகளின் அமைதியற்ற நிலங்களைக் கைப்பற்றி, கிருஷ்ணு நதியைத் தம் வடகிழக்கு எல்லையாக நிலைநாட்ட முடிந்தது. 1444-ல் இவர் இராஜமந்திரி வரையிலும் முன்னேறினர். கேரளாவில் கள்ளிக்கோட்டையைத் தவிர மற்ற எல்லாப் பகுதிகளிலும் இவர் தம் மேலாண்மையை நிலைநாட்டினர். கள்ளிக்கோட்டையின் அரசரைப்பற்றி விஜயம் புரிந்துகொண்டிருந்த அப்துல் ரஸாக் என்பவர், 'இவர் இவருடைய (தேவராயருடைய) ஆதிக்கத்தின்கீழ்

இல்லாவிடினும் அவரால் பீதியிலும் அச்சத்திலும் மூழ்கிக் கிடக்கிறார்' என்று குறிப்பிட்டிருக்கிறார். எனினும் வடக்கில் தேவ ராயர் ஃபிரோஷாவின் சகோதரரும் வாரிசுமான அகமதுஷா (1422–35) என்பவரின் படையெடுப்புக்களை தடுக்கவேண்டியிருந்தது. வாரங்கல்லின் இந்து இராச்சியம் இவரால் இறுதியில் 1425-ல் தோற்கடிக்கப்பட்டது. இந்த ஆபத்தைத் தடுப்பதற்கு இரண்டாம் தேவராயர் தம்மிடத்திலிருந்த குதிரைப்படை, வில் வீரர்கள் இவர்களின் பற்றுக்குறையை அறிந்துகொண்டு, முஸ்லிம் படைகளை மிக அதிக அளவில் வேலைக்குச் சேர்த்துக் கொண்டார்.

## வமிசத்தின் சீர்குலைவு

இரண்டாம் விஜயருக்குப் பின் 1447-ல் மல்லிகார்ஜுனர் பதவியேற்றார். இவரால் பிரபுக்களை அடக்கமுடியவில்லை. இரண்டாம் சுல்தானை அலாவுத்தீன் ஒரிசா அரசரான கபிலேசுவரர் ஆகியவர்களால் பலமாகத் தாக்கப்பட்டார். 1449-ஆம் ஆண்டுவரை கபிலேசுவரர் இராஜமந்திரியையும் கொண்டவீட்டையும் கைப்பற்றிக்கொண்டார். 1460ஆம் ஆண்டிலிருந்து வாரங்கல்லை அடக்கி ஆண்டு வந்த உரியாப் படைகள் 1463-ல் தெற்கே காஞ்சிவரை கொள்ளையிட்டனர்.

மல்லிகார்ஜுனருக்குப் பின் இவருடைய ஒன்றுவிட்ட சகோதரரான இரண்டாம் வீருபக்ஷர் 1465-ல் பதவியேற்றார். இவர் தீய பழக்கங்களில் மூழ்கியிருந்தார் என்றும், மது, மாது இவைகளைத் தவிர மற்றெதைப்பற்றியும் கவலைப்படவில்லை என்றும் நூனிஸ் இவரைப்பற்றி விவரித்திருக்கிறார். இக்காலத்து வெற்றிகள் சாளுவ நரசிம்மன் என்ற சந்திரகிரியைச் சார்ந்த பிரபு ஒருவரால் பெற்றவை ஆகும். இவர் கபிலேசுவரர் இறந்ததைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு உதயகிரியிலிருந்து கோதாவரியின் தெற்குக் கரை வரையிலும் தம் செல்வாக்கைப் பரவச் செய்திருந்தார். பின்னால் மூன்றாம் சுல்தான் முகமது இப்பகுதிகளில் பலவற்றைப் பெற்றார்.

## முதலாம் முறை உரிமையில்லாமல் கைப்பற்றுதல்

இரண்டாம் வீருபக்ஷர் 1485-ல் தம்முடைய மூத்த மகனால் கொல்லப்பட்டார். இம்மகனும் உபயோகமற்ற தம்பி ஒருவனால் கொல்லப்பட்டான். அதற்குப்பின் சாளுவ நரசிம்மர் அதிகாரத்தைக் கைப்பற்றினார் ஆனால், மிகக் கடினமாகத்தான் பலவீனமுற்றிருந்த மத்திய அதிகாரம் மீண்டும் நிலைநாட்டப்பட்டது. ஏனென்றால் பைத்தியம் பிடித்த இரண்டாம் சுல்தான் முகமது

தாக்கமுடியாதபோதிலும் யுரிய அரசரான புருஷோத்தமன் தாக்கினர். 1489ஆம் ஆண்டுவரை இவர் கோதாவரி முகத்துவாரத்தை மீண்டும் கைப்பற்றினர். அங்கிருந்து கிருஷ்ணு நதியைக் கடந்து கொண்டவீடுமீது படையெடுத்தார். உதயகிரிக்காக நடந்த சண்டை ஒன்றில் நரசிம்மர் கைதியாகப் பிடிபட்டார். இதை விலையாகக் கொடுத்து இவர் தம் சுதந்திரத்தை பெறவேண்டிய திருந்தது.

எனினும் நரசிம்மர் அரசாங்கத்தின் அதிகாரத்தை மீண்டும் நிலைநாட்டினர். ஹோனேவரிலும் பட்கலிலும், மலபாரில் மற்ற துறைமுகங்களிலும் அரண்களை எழுப்பியதும், அராபிய பாரசீகக் குதிரைகள் வர்த்தகத்தை மீண்டும் தொடங்க அனுமதித்ததும் படையைப் பலப்படுத்தியது. இவ்வர்த்தகம் கோவா, சால், தாபோல் ஆகிய நகரங்கள் இழக்கப்பட்டதனல் நிறுத்தப்பட்டிருந்தது.

## இரண்டாம் முறை உரிமையின்றிக் கைப்பற்றுதல்

நரசிம்மர் 1490–91-ல் இறந்தார். இவருக்குப்பின் இவருடைய இளமகனை இம்மாடி நரசிம்மன் (Immadi Narasimhan) அரியணையேறினர். இவர் சிறுவனுயிருந்ததனல் அரசின் பொறுப்பை ஏற்றிருந்த நரசநாய்க் என்ற துளவர் எல்லா அதிகாரத்தையும் தாமே உரிமையன்றி மேற்கொண்டதுமன்றி இளைஞனையும் அரச கைதியாக்கினர். இக்காலத்தில் இராய்ச்சூர் தோ ஆப்புக்காக (Raichur Doab) விஜயநகருக்கும் புதிதாக நிறுவப்பட்டிருந்த பீஜப்பூர் இராச்சியத்துக்குமிடையே முதன் முதலாகப் போர் தொடங்கியது. மன்னர் பேராட்சியாளர் கிளர்ச்சிகள் பலவற்றை அடக்குவதில் ஈடுபட்டிருந்தார். இருந்தும் தெற்கில் இவர் பல வெற்றிகளைப் பெற்ருர். இவர் 1503–ல் உயிர் நீத்தார்.

இவருடைய மகனும் வாரிசுமான வீர நரசிம்மன் (Vira Narasimhan) விரைவில் மன்னர் பேராட்சி என்றும் போர்வையைக் களைந்து எறிந்துவிட்டு இம்மாடி கொடுமையாக கொல்லப்படும்படி செய்தார். இவருடைய ஆட்சி (1505–9) பிரபுக்களின் கிளர்ச்சிகளை அடக்குவதிலும் ஆதில்ஷாவின் தாக்குதல்களைத் தடுப்பதிலும், மேற்குத் துறைமுகங்களின்மீது தன் ஆதிக்கத்தை மீண்டும் உறுதிப்படுத்துவதிலும் கழிந்தது.

இவருடைய மாற்ருந்தாய் மகனும் வாரிசுமான கிருஷ்ணதேவராயர் (Krishna Deva Raya), இவ்வமிசத்தில் மிகச் சிறந்தவராவார். இவர் 1509ஆம் ஆண்டிலிருந்து 1529ஆம் ஆண்டுவரை ஆட்சி புரிந்தார். இதனல் இவர் இங்கிலாந்தில் எட்டாம் ஹென்றியின் சமகாலத்தவர் ஆவார்.

தம் அரியணையேறிய ஆறு மாதத்திற்குள் இவர் பீடாரின் சுல்தான் மகமூதின் தாக்கை எதிர்த்துக் காயமுறும்படி தோற்கடித்தார். கிருஷ்ணதேவராயரின் முன்னேற்றத்தைத் தடுப்பதற்காக முயற்சி செய்த யூசப் ஆதில்கான் (Yusuf Adil Khan) தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். 1510-ல் இவர் மீண்டும் வடக்கே முன்னேறி இராய்ச்சூரை (Raichur) முற்றுகையிட்டு அங்கிருந்து குல்பர்கா (Gulberga) பீடார் ஆகியவற்றுள் நுழைந்தார்.

வடபுறம் உறுதியானபின் கிருஷ்ணதேவராயர் தென்புறம் திரும்ப முடிந்தது. அங்கே இவர் உம்மத்தூரின் (Ummathur) கிளர்ச்சியாளர்களைத் தோற்கடித்தார். இவர்களுடைய இராச்சியப் பகுதி சீரங்கப்பட்டணம் (Seringapatam) என்பதைத் தலைநகராகக் கொண்ட புதிய மாகாணமாக அமைக்கபபட்டது. அதற்குப் பின் இவர் யுரிய அரசரான பிரதாபருத்ராவைத் (Pradaparudra) தாக்கி இவரிடமிருந்து கொண்டவீடுவையும் கிருஷ்ணுவரை இருந்த நிலப்பகுதியையும் வலியக் கைப்பற்றினர். பெஜவாடாவிலிருந்து (Bezwada) இவர் மேற்குப்புறம் நோக்கிச் சென்று தெலுங்கானுவுக்குள் நுழைந்தார். அதன்பின் 1516–17-ல் கோதாவரிக்கப்பால் சென்ருர்.

இவருடைய மிக்க புகழ்ச்சிபெற்ற போர் 1520 மே மாதம் 19ஆம் தேதி நடந்தது. இதனுல் பீஜப்பூரின் இஸ்மாயில் ஆதில் ஷாவிடமிருந்து மிக்க வாதங்களுக்குக் காரணமான இராய்ச்சூர் அரணை மீண்டும் பெற முடிந்தது. இந்துக்கள் போரில் மாபெரும் வெற்றியடைந்தனர். ஆனுல், இவர்கள் தரப்பில் பதினுயிரம் பேர் கொல்லப்பட்டு இழக்கப்படும் அளவுக்குப் போர் கொடுமையாக இருந்தது. இச் சண்டை நடந்த கதையை சமகாலத்துப் போர்த்துகீசிய வரலாற்று கோப்பாளரான நூனிஸ் (Nuniz) என்பவர் மிகத் தெளிவாகக் கூறுகிருர். பெருந்தன்மையும் நல்ல வீரத்தன்மையும் பெற்றிருந்த இராயர் தம் வெற்றியை மனிதத் தன்மையுடனும் மிதமுடனும் கொண்டாடினர். பின்னுல் நடைபெற்ற படையெடுப்புகளில் இவர் தாற்காலிகமாகப் பீஜப்பூரைக் கைப்பற்றினர். பீஜப்பூர் இவருடைய படைவீரர்களால் அநேகமாக அழிக்கப்பட்டது. பெரிய கட்டடங்களைத் தகர்த்து. அடுப்புக்குப் பயன்படுத்தினர். பாமினிகளின் முந்திய தலைநகரான குல்பர்காவின் அரணை இவர் தரைமட்டமாக்கினுர். இவர் 1529-ல் உயிர் நீத்தார்.

### பேயஸ் ராயரின் தோற்றத்தைப்பற்றி அளிக்கும் வர்ணிப்பு

கிருஷ்ணதேவராயரின் உடல் தோற்றத்தைப் பற்றிப் பேயஸ் (Paes) சிறப்பாக வர்ணிக்கிருர். 'இவ்வரசர் நடுத்தர உயர மானவர்; வெண்ணிற மேனியைப் பெற்றவர்; அழகான தோற்றத் தைக் கொண்டவர்; மெலிந்தில்லாமல் சிறிது பருமனுகவே இருந் தார்; இவர் முகத்தில் அம்மைப் புள்ளிகள் இருந்தன. எவ்வளவு சிறந்த அரசராக இருக்க முடியுமோ அவ்வளவு சிறந்தவராகவும் எல்லோருக்கும் அச்சம் ஊட்டுபவராகவும் இவர் இருந்தார். இவர் பிறரை மகிழ்விக்கும் சுபாவம் படைத்தவர்; மிக்க மகிழ்ச்சி யோடு இருப்பார். இவர் அந்நியர்கட்கு நன்மதிப்பளிப்பதிலும் அவர்களை அன்புடன் வரவேற்று அன்னுர் எந்நிலையில் இருப்பவ ராயினும் அவர்களுடைய விவரங்களை அறிவதிலும் மிக்க ஆர்வம் காட்டியவராவர். இவர் மாண்புமிக்க அரசரும் நீதிமானும் ஆவார். எனினும், இவருக்குத் திடீரென்று கோபவெறி பிடிக்கும். 'கிருஷ்ணராவ் மககாவோ, அரசர்களுக்கரசர்; இந்தியாவின் மிகப்பெரிய பிரபுக்களுக்கெல்லாம் பிரபு; மூன்று கடல்களுக்கும் நிலங்களுக்கும் பிரபு' இதுதான் இவருடைய பட்டப் பெயராகும்.

### கிருஷ்ணதேவராயரின் குணவியல்பு

தக்காணத்து இடைக்கால முஸ்லிம் அல்லது இந்து இராச்சி யங்களின் இரத்தம் தோய்ந்த வரலாற்றின் அரும்பக்கங்களி லிருந்து தனிப்பட்ட தங்கள் திறமைகளுக்காக மதிப்புக்குரிய ஒரு சிலர் ஓய்வு அளிக்கின்றனர். இவர்களில் மிகச் சிறந்தவர் கிருஷ்ணதேவராயர். திறமைமிக்க வீரரான இவர் சமயப் பற்றிலும் பரந்த நோக்கத்திலும் குறைந்தவரல்லர். இவருடைய தனிப்பட்ட பற்றுதல்கள் வைஷ்ணவத்தைச் சார்ந்திருந்தாலும் இவர் இந்து மதத்தின் எல்லா பிரிவினர்களுக்கும் ஒருதரமாக மதிப்பளித்தார். தோல்வியுற்ற பகைவனுக்கு கிருஷ்ணதேவ ராயர் காட்டிய அன்பும், இவருடைய இரக்கமிக்க செயல்களும், கைப்பற்றிய நகர மக்களுக்கு அளித்த தானங்களும், இவருடைய நிலமானியத் தலைவர்களும் குடிமக்களும் இவர்மேல் பற்றுக் கொள்ளும்படி செய்த இவருடைய இராணுவத்திறனும், அந்நிய நாடுகளின் தூதர்களுக்கு இவர் எக்காலமும் அளித்த வரவேற்பும், அன்பும், கம்பீரமிக்க உடல்தோற்றமும், மகிழ்ச்சியான பார்வையும் இவரது தூய்மையையும் மதிப்புக்குரிய வாழ்க்கை யையும் தெளிவாக்கும் வணக்கத்தோடு இணக்கமாகப் பேசும் தன்மையும், இலக்கியம், சமயம் ஆகியவற்றின்மீது இவர் கொண்டிருந்த பற்றும், தன் குடி மக்களின் நலனில் காட்டிய அக்கறையும், இவைகளுக்கெல்லாம் மேலாக பிராமணர்களுக்கும்

கோயில்களுக்கும் கொடைகளாக அளித்த ஏராளமான செல்வமும் இவரைத் தென்னிந்திய அரசர்களுள் சாலச்சிறந்த அரசராக விளங்கும்படி செய்கின்றன.[1]

இருப்பினும், தாராளமாக அளிக்கப்பட்ட இவ்வறக்கொடை உழவர்களுக்கு எத்துணைத் தூரம் நன்மையளித்தது என்பது வியப்பிற்குரியது. இவருடைய காலத்தில் விஜயநகரப் பேரரசு பெரும்பாலும் சென்னை ராஜதானியின் பரப்பையும் மைசூரையும் தீபகற்பத்தின் இதர நாடுகளையும் உட்கொண்டிருந்தது.

**அச்சுதராயர்**

கிருஷ்ணதேவராயருக்குப் பின் இவருடைய சகோதரரான அச்சுதராயர் அரியணையேறினர். கீழ்த்தரமானதும் கொடுமை மிக்கதுமான குணவியல்பைப் பெற்ற இவர் வீரமற்றும் இருந்தார். பிரதாபருத்ரரும் கோல்கொண்டா அரசரும் முதலில் செய்த தாக்குதல்கள் தடுக்கப்பட்டவாயினும் இவர் வெகு விரைவில் முத்கல், (Mudgal) இராய்ச்சூர் அரண்களை இஸ்மாயில் ஆதில் கானுக்குக் கொடுக்க வேண்டியதிருந்தது. ஏனெனில் இவர் கிருஷ்ணதேவராயரின் இள மகனை சிம்மாசனத்தில் அமர்த்துவதற்கு இராமராஜர் செய்த முயற்சிகளால் தடுக்கப்பட்டார். கிருஷ்ணதேவராயரின் அமைச்சர் சாளுவதிம்மரின் மகனை இராமராஜர் சிறிது காலத்திற்கு அச்சுதராயரைத் தம் சக்திக்குட்படுத்திவைத்தார். ஆனல் கைதி தப்பித்துக்கொண்டார். இப்ராஹிம் ஆதில்ஷாவின் விலைமிக்க மத்தியஸ்தத்தின் மூலமாகத் தன் நிலையைத்தான் 1542-ல் இறக்கும்வரை பெற்றிருந்தார்.

அச்சுதராயருக்குப்பின் இவருடைய மகனை முதலாம் வெங்கடா பதவியேற்ருர். இக்குழந்தை தன்னுடைய மாமன் ஒருவனல் கொலையுண்டதும் இராமராஜர் கிருஷ்ண தேவராயரின் இள மகனை சதாசிவனுக்காக ஆதிக்கத்தைக் கைப்பற்றினர். அதிகாரத்தைக் கைப்பற்றும் செயலில் இராமராஜர் பழைய பிரபுக்கள் குழுவை அழித்து, பிராமண அதிகாரிகளை விலக்கி, அவர்களுக்குப் பதிலாகத் தன் உறவினர்களையும் கூட்டாளிகளையும் நியமித்தார். இவர் படையில் முஸ்லிம் கூறின் முக்கியத்துவத்தையும் அதிகப்படுத்தினர்.

இராமராஜர் தக்கணத்து முஸ்லிம் அரசர்களுக்கிடையில் இருந்த இடைவிடாச் சண்டைகளில் தலையிடும் கொள்கையும்

[1] Krishna Sastri—in Ann. Rep. A. S India for 1908-9, p. 186.

மேற்கொண்டார்; பெரு வெற்றியும் பெற்றுர். பீஜப்பூரின்மீது ஐக்கியத்தாக்குதல் ஒன்று செய்வதற்காக இராமராஜர் 1543-ல் ஆமத்நகருடனும் கோல்கொண்டாவுடனும் கூட்டுறவு உடன் படிக்கை ஒன்றைச் செய்துகொண்டர். பீஜப்பூர் ஆசாத்கான் என்ற திறமை வாய்ந்த அமைச்சர் ஒருவரால் அழிக்கப்படுவதி லிருந்து காப்பாற்றப்பட்டது. பதினைந்து ஆண்டுகள் கழித்து (1558-ல்) பீஜப்பூரும் விஜயநகரும் ஆமத்நகரைத் தாக்க ஒன்று சேர்ந்தன. தங்களுடைய தனிப்பட்ட சண்டைகளைக் கைவிட்டு கர்வம் கொண்ட பிற மதத்தினருக்கு எதிராக ஐக்கியப்பட வேண்டிய அவசியத்தைச் சுல்தான்களுக்கு உறுதிப்படுத்தும் அளவுக்கு பீஜப்பூரின் நிலப்பகுதி சூறையாடப்பட்டதுமன்றி இராமராஜர் தம்முடைய முஸ்லீம் கூட்டாளிகளுடன் வெளிப் படையாக அவமரியாதையுடன் நடந்துகொண்டார்.

## நான்கு சுல்தானியர்களின் கூட்டுறவு

1564-ல் ஒற்றுமை சரிவர ஏற்படுத்தப்பட்டது. அலி ஆதில் ஷா முதலில் நடுநிலைமை வகித்துப் பிறகு கூட்டாளிகள் தடுக்கப் பட்டதும் போரில் இறங்க வற்புறுத்தப்பட்டிருக்கக்கூடும் இவர்கள் அமைதியை நாடுகிறுர்கள் என்ற வதந்தியைப் பரப்பத் தோல்வி இவர்களுக்கு உதவியது. இராமராஜரின் படையில் இருந்த ஆதில் ஷாவின் தளபதிகளும் முஸ்லீம் தளபதிகளும் இந்த இடை ஓய்வு காலத்தில் இவர்கள் பக்கத்தில் வந்து சேர்ந்தனர். ஆலி ஆதில் ஷாவை இறுதிவரையிலும் நம்புவதற் கில்லை. ஏனெனில் இராமராஜர் பிடிபட்டார் என்று அறிய வந்ததும் ‘இவர் தூபக்கேடுற்ற பிற மதத்தினரின் விடுதலைக்காக’ ஹுசேன் நைஸாம் ஷாவிடம் விரைந்து சென்றுர் என்று கூறப்படுகிறது.

போரின்பொழுது இருபுறத்திலும் ஏராளமான படைகள் திரண்டன. இராஜராமரின் கீழ் இருந்தபடைகளின் எண்ணிக் கையைப் பற்றிய மதிப்பீடுகள் வேறுபடுகின்றன. இருந்த போதிலும் இவருடைய மாபெரும் படையின் எண்ணிக்கை அரை மில்லியனிலிருந்து ஒரு மில்லியன் ஆட்கள்வரை இருந்தது என்பது நிச்சயமாகும். இதைத்தவிர கணக்கற்ற யானைகளும் ஏராளமான பீரங்கிப்படையும் இருந்தன. மறுபுறத்தில் ஆமத் நகரின் சுல்தான் பலதரப்பட்ட அறுநூற்றுக்குக் குறையாத பீரங்கிகளின் வரிசை ஒன்றை களத்திற்குக் கொண்டுவந்தார். கூட்டுறவுப் படையின் எண்ணிக்கை விஜயநகரின் படைக்குப் பாதியாக இருந்தது என்று கருதப்படுகிறது.

போர் 1565ஆம் ஆண்டு, ஜனவரி 23ஆம் நாள் நடந்தது துவக்கம் இந்துக்களுக்குச் சாதகமாக இருந்தது. ஆனாலும், செப்பு நாணயங்களைத் தோட்டாக்களாகப்பயன்படுத்தி, வரிசையாக வைக்கப்பட்ட ஆமத்நகர் பீரங்கிகளைக் கொண்டு சுட்ட பொழுதும் குதிரைப்படைகளைக் கொண்டு பலமாகத் தாக்கிய பொழுதும் இந்துக்கள் மிகுதியாகத் துன்பமடைந்தனர். இராமராஜர் பிடிபட்டவுடன் இவர்கள் ஓட்டம் பிடித்தனர். ஆமத்நகர் சுல்தானின் கைகளாலேயே இராமராஜர் வெட்டுண்டார். இளவரசர்கள் ஐந்நூறு யானைகள்மீது ஏற்றப்பட்ட ஏராளமான பொக்கிஷத்துடன் நகரிலிருந்து வெளி ஓடினர். இறுமாப்புக் கொண்ட தலைநகரம் வெற்றியாளர்களின் இரக்கத்தை எதிர் பார்த்துக்கொண்டு நின்றிருந்தது. வெற்றியாளர்கள் இதை உடனடியாகக் கைப்பற்றினர்.

'கூட்டுப்படையில் இருந்த தனிப்பட்ட ஒவ்வொரு மனிதனும் பொன் ஆபரணங்கள், பொருள்கள், கூடாரங்கள், ஆயுதங்கள், குதிரைகள், அடிமைகள் இவைகளெல்லாம் பெற்றுச் செல்வந்தர் களாகுமளவுக்குக் கொள்ளை நடந்தது. சுல்தானியர்கள் தங்கள் சொந்தவேலைக்காக வெறும் யானைகளை எடுத்துக்கொண்டு மற்ற எல்லாப் பொருள்களையும் எவரெவருக்குக் கிடைத்தனவோ அவர்களிடத்திலேயே விட்டுச் சென்றனர்'.

**விஜயநகரத்தின் சிதைவு**

தலைசிறந்த நகருக்கு ஏற்பட்ட சிதைவை, அழிக்கப்பட்ட இடத்தை அறிந்திருந்த சிவெல் என்னும் ஆசிரியரின் வார்த்தை களிலேயே வருணிக்கலாம். இளவரசர்கள் தங்கள் பொக்கிஷங் களோடு ஓடும் தருவாயில் நகரம் பீதிக்குள் மூழ்கியது. ஒரு சிலரைத்தவிர மற்றவர் பின் வாங்கவோ ஓடவோ முடியவில்லை. ஏனென்றால் சுமைதாங்கும் எல்லா எருதுகளும் வண்டிகளும் படைகளைப் பின் தொடர்ந்து போருக்குச் சென்று, அங்கிருந்து திரும்பி வரவில்லை. எல்லாப் பொக்கிஷங்களைப் புதைப்பதும் இளைஞர்களை ஆயுதபாணிகளாக்குவதும் காத்திருப் பதையும் தவிர வேறெதுவும் செய்வதற்கில்லை. அடுத்த நாள் அவ்விடம் சுற்றுப்புறத்திலுள்ள கொள்ளைக்கூட்டங்கட்கும் காட்டு மனிதர்கட்கும் இரையானது. பிரிஞ்சாரிகள், லம்பாடியர்கள் குருபாக்கள் போன்றவர்கள் நலக்கேடான நகரத்தின் மீது பாய்ந்து கடைகளையும், கிடங்குகளையும் சூறையாடி ஏராளமான செல்வத்தைத் திரட்டிக்கொண்டு சென்றனர். இம் மக்கள் ஒரு நாளில் திட்டமிட்ட ஆறு தாக்குதல்களை நடத்தினார்கள் என்று கௌடோ (Couto) குறிப்பிடுகிறார்.

மூன்றும் நாள் முடிவின் ஆரம்பத்தைக் கண்டது. வெற்றி பெற்ற முஸல்மான்கள் ஓய்வு பெறுவதற்காகவும், சிற்றுண்டிக் காகவும் போர்க்களத்தில் தங்கினுர்கள். ஆனல், இப்பொழுது இவர்கள் தலைநகரை அடைந்துவிட்டனர். அப்போதிலிருந்து ஐந்துமாதகாலம் வரை விஜயநகரத்திற்கு ஓய்வு என்பதே கிடையாது. பகைவர்கள் அழிப்பதற்காக என்று வந்திருந்தனர், தங்களுடைய நோக்கத்தைத் தளர்ச்சியின்றி நிறைவேற்றினுர்கள். வரலாற்றில் எக்காலத்திலும் இவ்வளவு நேர்த்தியான நகரத் திற்குப் பேரழிவை இவ்வளவு துரிதமாக யாரும் இழைத்திருக்க முடியாது. ஒருநாள், செல்வத்தையும் உழைக்கும் மனப்பான்மை கொண்ட எண்ணற்ற மக்களையும் பெற்றுச் செழுமையின் உச்சியை அடைந்திருந்தது. அடுத்தநாள் சூறையாடப்பட்டு, சிதறடிக்கப் பட்டு வருணிப்பதற்குத் தகுதியற்ற மிருகத்தனமான படு கொலைகள், கொடுமைகள் ஆகியவற்றின் காட்சிகளில் மூழ்கியது.

ஜெருஸலேம் (Jerusalem) நகரம் அழிந்ததற்கு வருந்திய யூத தீர்க்கதரிசியான இரக்கம் தோய்ந்த வார்த்தைகளை மிகப் பொருத்தமாக இந்தியத் துயர்நிகழ்ச்சிக்குப் பயன் படுத்தலாம்.

'மக்கள் நிறைந்த நகரம் எவ்வளவு ஜனநடமாட்டமின்றித் தனிமையாக அமைந்திருக்கிறது! எப்படி விதவையைப் போல் இருக்கிறது! நாடுகளுக்கிடையில் சிறப்பாக இருந்தவரும் மாகாணங்களுக்கிடையில் இளவரசியாக இருந்தவருமான இவள் இப்போது கப்பம் செலுத்த நேரிட்டிருக்கிறது.........இளைஞர் களும் முதியவர்களும் வீதிகளில் தரையில் விழுந்து கிடக்கின்றனர்.[1]

என் கன்னிப்பெண்களும் இளைஞர்களும் வாளால் வீழ்த்தப் பட்டு விழுந்துகிடக்கின்றனர். எப்படிப் பொன் மங்கியிருக்கிறது! எப்படி மிக நேர்த்தியான பொன் மாறியிருக்கிறது! கோவில் திருமையத்தின் கற்கள் ஒவ்வொரு வீதியிலும் சிதறிக் கிடக்கின்றன.'

இராமராஜரின் சகோதரரும் பெயரளவிற்கு அரசராக இருந்த சதாசிவரோடு பெறுகொண்டாவில் தஞ்சம் புகுந்தவரு மான திருமலர் (Tirumala) போருக்குச் சில ஆண்டுகளுக்குப் பின் முறையின்றி அரச பீடத்தைக் கைப்பற்றினுர். இம் மூன்றும்முறை உரிமையின்றி பதவியைக் கைப்பற்றுதல், அதாவது நான்காம் வமிசத்தின் தொடக்கம் 1570-ல் ஆரம்பிக்கிறது எனலாம்.

[1] Lam i. I; ii. 21; iv. i.

மூன்ருவது அரசரான முதலாம் வெங்கடா என்பவர் இப்புதிய வமிசத்து சிறப்புமிக்க அரசராவர். இவர் 1585-ல் சிம்மாசனம் ஏறிஞர். இவர்தம் தலைநகரை சந்திரகிரிக்கு மாற்றிஞர்போலும். தெலுங்குப் புலவர்களையும் வைஷ்ணவ ஆசிரியர்களையும் ஆதரித்த தாக இவர் புகழ் பெற்றிருந்தார்; இவர்களுக்குப்பின் வந்தவர் களின் வரலாற்றை ஆராயவேண்டியதில்லை. இவர்கள் படிப்படி யாகத் தாழ்வடைந்து, தலத் தலைவர்களானர்கள். சந்திரகிரிக்குக் கீழ்ப்படிந்திருந்த நாயக்கர் ஒருவர் 1639-ல் சென்னைப்பட்டணம் என்ற இடத்தை ஆங்கிலேய வாணிகத்தரகரான திரு. டே (Mr. Dey) என்பவருக்கு அளித்தார்.

வமிசத்தின் கடைசிப் பிரதிநிதியான இரண்டாம் ரங்கா (Ranga II) என்பவர் இச்செயலை உறுதிப்படுத்திஞர். தக்காணத் தின் பெரும்பகுதி முஸ்லீம்கள் பீஜப்பூர், கோல்கொண்டா சுல் தானியர்களின் மேலாண்மைக்கு உட்பட்டிருந்தது. இவர்களும் 1686ஆம் ஆண்டிலும், 1687ஆம் ஆண்டிலும் அவுரங்கசீப்பால் முறியடிக்கப் பெற்றனர்.

தெற்கில் விஜயநகரப் பேரரசினிடமிருந்து பிரிந்து வந்துவிட்ட பகுதிகளில் இந்துக்கள் ஏற்படுத்திய இளவரச நாடுகளில் மிக முக்கியமானது மதுரை நாயக்கர்களின் நாடாகும். திருமலை நாயக்கர் தன் கட்டடங்களுக்காகப் பொருத்தமுறப் புகழப்படு கிருர். இக்கட்டடங்கள் திட்டமுறையில் மதிப்பையும், செயல் முறையில் பகட்டையும் வெளிப்படுத்துகின்றன.

### பதிஞன்காம் நூற்ருண்டில் நகரத்தின் நிலைமை

நகரத்தின் சிறப்பும் கட்டடங்களின் பகட்டும், கடைகளின் செல்வமும், வர்த்தகத்தின் பெருக்கமும், மக்கள் தொகையும் விஜயநகரம் ஆரம்பமாயிருந்த பதிஞன்காம் நூற்ருண்டிலிருந்து அதன் தவிர்க்க முடியாத சிதைவுவரை பலர் சாட்சி கூறுவத ஞலும், இருக்கும் கட்டடங்களை ஆராய்வதஞலும் உறுதிப்படு கின்றன. வரலாற்று ஆசிரியரான ஃபெரிஷ்டா 1378ஆம் ஆண்டி லேயே விஜய நகரம், சக்தி, செல்வம், பரப்பு ஆகியவற்றில் பாமினி அரசர்களைவிடச் சிறப்புப் பெற்றிருந்தது என்பதை ஒப்புக்கொள்ளுகிருர். அப்பொழுது கோவா தாற்காலிகமாக இராயரின் பொறுப்பில் இருந்தது. மேற்குக் கடற்கரையிலுள்ள துறைமுகங்களின் வழியாக நடந்த வாணிபத்தின் காரணமாக ஏராளமான செல்வத்தை இவருடைய தலைநகரம் பெற்றது.

இரண்டாம் புக்கர் (1399–1406) விஜயநகரத்தின் அரண்களை மேம்படுத்தி விரிவாக்கிஞர், இவருடைய மிகச் சிறந்த வேலைப்

பாடு துங்கபத்திராவில் நீர்த்தேக்கம் உண்டாகும்படி அணைக் கட்டு ஒன்றை கட்டினதாகும். இதிலிருந்து தண்ணீர் பதினைந்து மைல் நீளமான கால்வாய் ஒன்றின் வழியாக நகரத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. இக்கால்வாய் அநேக மைல் நீளமாக இருந்த உறுதியான பாறையில் வெட்டப்பட்டதாகும். ஃபிரோ ஷா பாமினிக்கும் முதலாம் தேவராயரின் மகளுக்கும் மணம் நடந்தபோது மேற்கொள்ளப்பட்ட சடங்குகளைப்பற்றிய ஃபெரிஷ்டாவின் குறிப்புக்கள் 1406-ல் தலைநகரின் சிறப்பை வெளிப்படுத்துகின்றன.

## நிக்கோலோ கோண்டி அளிக்கும் வர்ணிப்பு 1420

நிக்கோலோ கோண்டி (Nicolo Conti) என்ற இத்தாலியர் (Italian) முதன் முதலாக விஜயம் செய்தவராவர். இவருடைய குறிப்புக்கள் பத்திரப்படுத்தப்பட்டுள்ளன. இவர் இரண்டாம் தேவராயரின் ஆட்சிக் காலத்தில் சுமார் 1420-ல் விஜயநகரத்தில் இருந்தார். நகரத்தின் சுற்றளவு அறுபது மைல் என்று மதிப் பிட்ட இவர் அரண்களின் பலத்தைப் பாராட்டினர். இவைகள் கீழிருக்கும் சமவெளிகளைச் சுற்றியிருக்கும்படி மலைகளின்மேல் எழுப்பப்பட்டன. அரசர் பன்னிரண்டாயிரம் மனைவிகளைக் கொண்டு இருந்தார் என்றும், இவற்றில் இரண்டாயிரம் அல்லது மூவாயிரத்திற்குக் குறையாமல் அரசர் இறந்தபோது தங்களை எரித்துக்கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டனர் என்றும் அப்பயணி குறிப்பிடுகிருர். உண்மையில் கொடுமைமிக்க பழக்கமான சதி என்பது பேரரசில் சாதாரணமாகக் கையாளப்பட்டது. குழியில் எரித்தோ அல்லது தெலுங்கர்களிடையில் உயிருடன் நெருப்பில் மூட்டப்பட்டோ மனைவியர் பலியிடப்பட்டனர்.

## 1443-ல் அப்துர் ரெஸாக்

தைமூரின் மகனை சுல்தான் ஷாருக் என்பவர் கள்ளிக் கோட்டையின் ஸாமொரின்களுக்கு (zamorin) அனுப்பிய தூதரும் கற்றறிந்தவருமான ஹெராட்டைச் சேர்ந்த அப்துர் ரெஸாக் (Abdur Razack) என்பவர் அடுத்த பயணியாவார். இத்தூதர் கள்ளிக்கோட்டையில் தங்கியிருந்தபோது தம்மை விஜயநகர அரசர் உடனடியாக அரசவைக்கு அனுப்பிவைக்குமாறு விரும்பு கிருர் என்று தூதன் ஒருவன் செய்தியைக் கொண்டுவந்தான். அப்பொழுது ஸாமொரின் நேரடியாக இராயரின் சக்திக்குட்பட் டிராவிட்டாலும் அவருடைய ஆணையைப் புறக்கணிக்கத் துணிவு பெற்றிருக்கவில்லை. இதனல் அப்துர் ரெஸாக் கப்பலேறி விஜய நகர இராச்சியத்தின் எல்லைகளிலுள்ள மங்களூர் என்ற

இடத்திற்குச் சென்று, அங்கிருந்து நிலவழியாக தன் பயண இலக்கிற்கு இப்போது மைசூர் என்று அறியவரும் நாட்டின் வழியாக வந்து சேர்ந்தார்.

இவர் பேலூரில் (Belur) சிறப்புமிக்க கோயில் ஒன்றை மிகவும் பாராட்டினர். எங்கே மிகைபடக் கூறல் என்னும் குற்றத்தைத் தம்மேல் சுமத்தப் போகின்றனரோ என்ற அச்சத்தால் இதை இவர் வருணிக்கத் துணிவு கொள்ளவில்லை. பிட்டிகா என்ற ஹோய்சால அரசர் கி.பி. 1117-ல் கட்டிய இந்த நேர்த்தியான கோவிலை இப்பயணி பார்த்தார் போலும். இது இப்போதும் இருக்கிறது. மைசூர் தொல்பொருள் இலாகாவின் மேற்பார்வையில் உள்ளது.[1] 1443, ஏப்ரல் மாத இறுதியில் பயணி விஜயநகரத்தில் வந்து இறங்கினர். 'இதுபோன்ற நகரைப் பூமியில் கண்கள் பார்த்ததும் இல்லை. அதைப்பற்றிக் காதுகள் கேட்டதுமில்லை. ஏழு அரண் மதில்கள் ஒன்றுக்குள் மற்றொன்று இருக்கும்படியாக இது கட்டப்பட்டுள்ளது' என்று இவர் குறிப்பிடுகிருர் தம் வருணிப்பை விளக்குவதற்காகப் பயணி இதை ஹெராட்டின் அரணோடு ஒப்பிடுகிருர்.

"மற்ற கோட்டைகளுக்கு நடுவில் ஏழாம் கோட்டை அமைக்கப்பட்டுள்ளது. இது ஹெராட்டின் பெரிய சந்தையைவிடப் பத்து மடங்கு நிலத்தைப் பெற்றிருக்கிறது. இதில்தான் அரசனின் அரண்மனையும் அமைந்திருக்கிறது. வெளிக்கோட்டையின் வடக்கு வாயிலிலிருந்து தெற்கு வாயில்வரை உள்ள தூரம் இரண்டு பரசங்காக்கள் (parasangas) (சுமார் ஏழு அல்லது எட்டு மைல்) ஆக இருந்தது. அதே தூரம் கிழக்கு மேற்கு வாயில்களுக்கிடையில் இருந்தது. முதலாம் இரண்டாம் மூன்றும் சுவர்களுக்கிடையில் உழுது பயிரிடப்பட்ட நிலங்களும் தோட்டங்களும் வீடுகளும் இருந்தன. மூன்ருவது கோட்டையிலிருந்து ஏழாம் கோட்டைவரையிலும் கடைகளும் ஆவணங்களும் நெருங்கிக் கூட்டமாக இருந்தன. அரசனின் அரண்மனைக்குப் பக்கத்தில் நான்கு ஆவணங்கள் ஒன்றுக்கு எதிராக மற்றொன்று அமைந்திருந்தது. வடபுறத்தில் இராயருடைய அரண்மனையின் தலைவாயில் இருந்தது.[2] ஒவ்வோர் ஆவணத்தின்மேலும் உயர்ந்த அருவிகளும் பாய்ந்தோடிக் கொண்டிருந்தன. நாடு ஏராளமான

[1] பேலுரைத் தவிர (Belur) மற்ற எந்த இடமும் குறிப்பிடப்பட்டுள்ளது என்று நினைப்பதற்குக் காரணம் இல்லை. இது சாலைவழியாக எண்பது அல்லது தொண்ணூறு மைல் தூரத்தில் உள்ளது.

[2] இவ்வாக்கியம் சிவெல்லின் பதிப்பிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது. E & D-யில் இருக்கும் மொழி பெயர்ப்புப் பொருளற்று உள்ளது; மேற்கோளாகக் கொடுக்கப்பட்டுள்ள மீதிப்பகுதி E & D-யிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.

விளைவுகளோடு செல்லும் தெருக்களும் சிறப்புமிக்க சுரங்க வழிகளும் இருந்தன. ஆனால், இவைகளிலெல்லாம் மிக உயர்ந்திருந்தது அரசனின் அரண்மனை ஆகும். ஆவணங்கள் நீளமாகவும் அகலமாகவும் இருக்கின்றன. இதனால் மலர்களை விற்பவர்கள் தங்களுடைய கடைகளுக்கு முன்னால் உயர்ந்த நிலைமாட்டிகளை வைத்திருந்தபோதிலும் தங்கள் மலர்களை இரு மருங்குகளிலும் விற்க முடிகிறது. தனிப்பட்ட ஒவ்வொரு தொழில் அல்லது சங்கத்தில் சேர்ந்த வியாபாரிகள் தங்கள் கடைகளை ஒன்றுக்கொன்று நெருக்கமாக வைத்திருந்தார்கள் நகை வியாபாரிகள் முத்துக்களையும், வைரங்களையும், மரகதங்களையும் ஆவணத்தில் வெளிப்படையாக விற்றார்கள்.

அரசன் மாளிகை அமைந்திருந்த கவர்ச்சியான இவ்விடத்தில் பளபளப்புக் கொண்டதும் சமமாக்கப்பட்டதுமான கற்களால் கட்டப்பட்ட வாய்க்காலின் வழியாகப் பல ஓடைகளும் அருவிகளும் பாய்ந்தோடிக் கொண்டிருந்தன. நாடு ஏராளமான மக்கள் தொகையைப் பெற்றிருந்தது. அதைப்பற்றி இவ்விடத்தில் குறிப்பிடுவதற்கு இயலாது. அரசனின் கருவூலத்தில் பல அறைகள் உள்ளன. இவற்றில் உள்ள குழிகள் பொன் கட்டிகளின் குவிப்புகளால் நிறைந்திருந்தன. நாட்டிலுள்ள உயர்ந்த தாழ்ந்த மக்கள் யாவரும், கடைத் தெருக்களில் இருக்கும் சிறு கைத் தொழிலாளர்களும், ஆபரணங்களையும் பளபளக்கும் அணிகலன்களையும், காதுகளிலும், கழுத்துகளிலும், கைகளிலும், முன் கைகளிலும், விரல்களிலும் அணிந்திருப்பார்கள்.

### 1552-ல் பேயஸ் எழுதிய குறிப்பு

கிருஷ்ணதேவராயரின் ஆட்சிகாலத்தில் இராய்ச்சூர் சரணடைந்தபோது, பேரரசு தன் சிறப்பின் உச்சியையடைந்திருந்தபோது டாமிங்கோஸ் பேயஸ் என்ற போர்ச்சுகீசியர் 1522-ல் விவரங்கள் நிறைந்த வருணிப்பு ஒன்றை அளித்திருக்கிறார். ஐயமற்று உண்மையாக இருக்கும் இவருடைய குறிப்பை நாம் உறுதியுடன் ஏற்றுக்கொள்ளலாம். சிவெல் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ள இது உண்மையில் படிப்பதற்குரியதே.

### நகரத்தின் பரப்பளவு

அரண்மனை மலைக்குன்றுகள் நகரம் முழுவதையும் மறைத்திருந்ததனால் பேயஸ் நகரம் முழுவதையும் ஒரே கண்ணோட்டத்தில் பார்க்க முடியவில்லை. அதனால் அவர் நகரத்தை அளவிடுவதில் சிறிது கடினம் இருந்தது அவர் மதிப்பிட்டவரை அது ரோமாபுரியைப்போல் பெரிதாக இருந்தது. வீடுகள் எண்ணிக்

கையில் இலட்சத்திற்கு மேலாக இருந்தன. இவ்விதம் யூகிப்பது உண்மையானால் மக்கள் தொகை அரை மில்லியனுக்குக் குறைந்திருக்காது. எண்ணற்ற ஏரிகளும் நீர்ப்பாசனங்களும், பழத் தோட்டங்களும் இவரால் பாராட்டப்பட்டன. மக்கள் தொகையைப் பொறுத்தவரை அவை எண்ணற்றவையாக இருந்தன என்று மட்டும் இவர் கூறுகிறார். 'விஜயநகரம் உலகத்திலேயே எல்லா வசதிகளையும் பெற்றிருந்த நகரமாகும். ஏனென்றால் இந்நகரத்தின் அரசாங்கம் மற்ற நகரங்களின் அரசாங்கங்களைப் போலன்றி இருந்தது. மற்ற நகரங்களில் தேவைப் பொருள்களின் பற்றாக்குறை ஏற்படும். ஆனால் இந்நகரத்தில் எல்லாம் அளவின்றி இருக்கின்றன' என்று இவர் எழுதுகிறார். அரண்மனை இருந்த இடத்தின் பெரும் பகுதிக்குப் பேயஸ் அழைத்துச் செல்லப்பட்டார். அங்கே முப்பத்து நான்கு வீதிகள் இருந்தன. ஓர் அறையின் சுவர்கள் மேலிருந்து கீழ்வரை எல்லாம் தந்தத்தால் செய்யப்பட்டு இருப்பதையும் கூரைகளைத் தாங்கிக்கொண்டிருக்கும் தூண்களின் தலைகள் தந்தத்தால் செய்த ரோஜா மலர்களையும் தாமரை மலர்களையும் கொண்டிருந்ததையும் பேயஸ் கண்டார். இவைகள் இன்றும் அதிகமான சிறப்பைப் பெற முடியாத அளவிற்குச் சிறப்பாகச் செய்து முடிக்கப்பட்டிருந்தன. இதைப்போன்ற மற்றொன்று வேறெங்கும் காணமுடியாத அளவுக்கு இது செழுமையாகவும் அழகாகவும் இருந்தது.[1]

## அரசவை

அரசவைக்குரிய சடங்குகள் மிக விரிவுபட்டிருந்தன. முகலாய அரசவையில் இருந்ததுபோல் அரச ஆணைகளைச் செயலாளர்கள் மிகக் கவனமாகக் குறிப்பிட்டுக் கொண்டனர். இக்குறிப்புக்களே இவ்வாணைகள் இடப்பட்டதற்குச் சாட்சிகளாகும். பதின்மூன்று ஆண்டுகளுக்குப்பின் விஜயநகருக்கு விஜயம் செய்த நூனிஸ் என்ற மற்றொரு போர்ச்சுகீசியர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

'எழுதப்பட்ட ஆணை எதுவும் இடப்படவில்லை. தாம் செய்யும் அன்புச் செயல்களுக்கும் இடும் ஆணைகளுக்கும் அரசர் எந்தவிதமான சாசனங்களையும் அளிப்பதில்லை. ஆனால், தாம் எவருக்காவது செய்த நற்செயல் செயலாளர்களின் குறிப்பேடுகளில் எழுதப்பட்டிருக்கும். எவரொருவர் அரசரிடமிருந்து அன்புச் செயல் பெற்றாரோ அவருக்கு மன்னர் தம்முடைய

[1] Psalm xiv-8-ல் இருக்கும் தந்த அரண்மனைகளோடு இதை ஒப்பிட்டுப் பார்க்க.

அமைச்சர்கள் வைத்திருந்த தம் மோதிரங்களில் ஒன்றை மெழுகில் பதியவைத்து அம்முத்திரையை அளித்தார். இம்முத்திரைகள் ஆணைக்கடிதங்களாகப் பயன்படுத்தப்பட்டன.'

இவ்வகையில் இவ்வழக்கம் வடக்கத்திய அரசவைகளின் வழக்கத்தோடு மாறுபட்டிருந்தது. இவ்வரசவைகளில் அலுவலக நாள்முறைப் பழக்கம் கையாளப்பட்டுவந்தது. அரசர் எக்காலமும் வெண்ணிற ஆடையே உடுத்தார். அவர் தலையில் காளிசிய நாட்டின் மக்கள் அணியும் எஃகு குல்லாயைப் போன்று பின்னப்பட்டதும், சிறந்த பட்டுத் துணியால் மூடப்பட்டதுமான தொப்பியை அணிந்திருந்தார். ஆனால், பாத அணிகள் இல்லாதிருந்தார். இவருடைய ஆபரணங்கள் எல்லாவற்றையும்விட மிகச் சிறந்தவை.

### படை

அரசனிடமிருந்து ஊதியம்பெற்ற படை எண்ணிக்கையின் கவசம் தாங்கிய முப்பத்தைந்தாயிரம் குதிரை விரர்கள் உட்படச் சண்டையிடும் ஒரு மில்லியன் வீரர்களைக் கொண்டிருந்தது என்று சொல்லப்படுகிறது. ஆனால், இது நெருக்கடி காலத்தில் அழைக்கப்பட்ட மொத்தப் படையாகும். நிரந்தரப்படை இவ்வெண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கிற்கு மேற்பட்டிருக்கவில்லை போலும். 1520-ல் கிருஷ்ணதேவராயர் உண்மையில் இராய்ச்சூருக்கு எதிராக 7,03,000 காலாட்படையையும் 32,600 குதிரைப்படையையும் 551 யானைகளையும் எண்ணற்ற பணியாட்களையும் வர்த்தகர்களையும் இன்னும் மற்றவர்களையும் குவித்தார் என்று பேயஸ் உறுதியாகக் கூறுகிறார். இம்மாபெரும் படையின் திறன் இதன் எண்ணிக்கையோடு ஒத்திருக்கவில்லை. வீரர்கள் முஸ்லிம்களுக்கு அஞ்சினார்கள். முற்றுகையிடுதற்கு வேண்டிய பீரங்கிப் படை இல்லாமல் இவர்கள் இராய்ச்சூர்போன்ற ஒரு கோட்டைக்கு எதிராக எடுத்த செயல் கேலிக்குரிய அளவில் பலவீனமடைந்து இருந்தது. மனிதர்கள் உடல்நிலையைப் பொறுத்தவரை திடமாகவும் தனிப்பட்ட முறையில் திறமைமிக்கவர்களாகவும் இருந்தனர் என்று வர்ணிக்கப்பட்டுள்ளார்கள். சில சமயங்களில் இவர்கள் மிகத் துணிகரமாகச் சண்டையிட்டனர். ஆனால், ஒழுங்கமைதியுடைய படை திறனற்று இருந்தது.

### நிர்வாகம்

இராயருக்கு உறுப்பினர்கள் எண்ணிக்கையிலும் சக்தியிலும் மாறிக்கொண்டிருந்த ஆலோசனைக்குழு ஒன்று துணையாக இருந்தது. வழக்கம்போல் சில பதவிகள் மரபுரிமையாக வரும்

பதவிகளாயின; அல்லது பலபதவிகளையும் ஒருவரே மேற்கொண்டிருந்தார். இதைத் தடுப்பதற்காக கிருஷ்ணதேவராயர் மிக்க சக்திவாய்ந்த அமைச்சர்களின் ஆற்றலைத் தகர்ப்பதற்காகப் புதிய மனிதர்களை முன்னுக்குக்கொண்டு வரவேண்டும் என்றும், 'தீர்வைகளை வசூலிப்பதற்கும் மற்ற வேலைகளைச் செய்து முடிப்பதற்கும் அரசர் நியமித்த ஆட்கள் சூழ்நிலைக்கு ஏற்றவாறு நண்பர்களாகவும் பகைவர்களாகவும் இருப்பார்களாதலால்' ஒருவரிடத்திலேயே மிக்க நம்பிக்கையை வைத்தல் கூடாது என்று யோசனை கூறினர். மிகப் பெரிய அரசாங்க நிலையம் ஒன்று இருந்தது. வழக்கமாக இருந்த அரண்மனை அதிகாரிகள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

பேரரசு ஒருசில மிகப்பெரிய மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாகாணமும் பெரும்பாலும் அரச குடும்பத்தினரின்கீழ் இருந்தது. ஒவ்வொரு மாகாணமும் மேலும் பலசிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. நாயக்கர்கள்—பிரபுக்கள் அல்லது கப்பம் கட்டும் அரசர்கள்—குறிப்பிட்ட படைவீரர்களையும், நிதித்தொகையையும் அரசனுக்கு அளிக்க வேண்டிய நிபந்தனையின்பேரில் இச்சிறு பகுதிகளைப் பெற்றிருந்தார்கள். நூனிஸ் 1535ஆம் ஆண்டிற்கு உரிய விபரம் நிறைந்த குறிப்புக்களை நமக்கு அளிக்கிறர். தங்களுடைய மொத்த வருமானத்திலிருந்து பாதியை கருவூலத்திற்கு அளிக்கவேண்டும் என்றும், மற்றப் பாதியிலிருந்து அவர்களுடைய அரண்மனை, படைகள், அரசாங்கம், ஆகியவைகளுக்குத் தேவையான செலவைக் கழித்துக்கொள்ள வேண்டுமென்றும் கவர்னர்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டது என்று பேயஸ் குறிப்பிடுகிறர். அரசனுக்குக் கீழ் இருந்தபோதிலும் மாகாண கவர்னர்கள் அவர்களுடைய அரசப் பகுதியில் தங்கள் விருப்பப்படி எதையும் செய்வதற்குப் பெரிதும் உரிமை பெற்றிருந்தார்கள். அரசர் வரம்பற்ற வல்லாளராக இருந்தார். கொலை செய்து மன்னர் சட்டத்தை (தர்மத்தை) நிலைநாட்டுகிறர் என்று கிருஷ்ணதேவராயர் ஆணித்தரமாகக் கூறியதிலிருந்து சட்டமும் ஒழுங்கும் பொறுத்தவரை அரசரின் மனப்போக்கு என்னவாக இருந்தது என்று தெரியவருகிறது. சொத்துக்குரிய குற்றங்கட்கு அளிக்கப்பட்ட தண்டனைகளின் தீவிரமான கொடுமையெல்லாம் ஏழைகளிடமிருந்து செல்வந்தர்களைக் காப்பதற்கென்றே அமைந்திருந்தது.[1] நூனிஸ்

[1] Knox-An Historical Relation of the Island Ceylon in the East Indies (London—1681) யானையால் கொல்லப்படுவதைக் காட்டும் உயிர் ததும்பும் படத்தையும் ஒருவன் கழுமரத்தில் உரிக்கப்படும் படத்தையும், அபராதத்தை பலவந்தமாக வசூல் செய்த முறையைப்பற்றிய படத்தையும் இந்நூல் நமக்கு அளிக்கிறது. கடைசியாகக் குறிப்பிட்ட படம் ஒரு மனிதன் பெருங்கல் ஒன்றை முதுகின்பின்னல் வைக்கப்பட்டு ஊர்ந்து செல்ல, அவனுக்குக் கடன் கொடுத்தவன் அவன்மேல் நிற்கும் காட்சியை அளிக்கிறது

பின்வருமாறு குறிப்பிடுகிறார்; 'இவ்விராச்சியத்தில் இவர்கள் அளிக்கும் தண்டனைகள் இவைகளாகும். திருடன் ஒருவன் எதைத் திருடினாலும், அது எவ்வளவு சிறிய பொருளாக இருப் பினும் அவர்கள் உடனே ஒரு கையையும் ஒரு காலையும் வாங்கி விடுவார்கள். அவன் ஏதாவது ஒரு பெரிய திருட்டைச் செய் திருப்பானானால் கன்னத்தில் ஒரு கொக்கி மாட்டப்பட்டுத் தூக்கி விடப்படுவான். ஒரு மனிதன் கௌரவத்திற்குரிய பெண், அல்லது குமாரியிடம் அடாத முறையில் நடந்துகொண்டால் அவனுக்கும் அதே தண்டனை அளிக்கப்படும். இதேபோன்று மற்ற எந்த பலவந்தச் செயலைப் புரிந்தாலும் அதற்கும் அதே போன்ற தண்டனை அளிக்கப்பட்டது. துரோகிகளாக மாறிய பிரபுக்கள் வயிற்றில் குத்தப்பட்டு, உயிருடன் மரத்தால் செய்யப் பட்ட கழுமரத்தில் ஏற்றப்படுவர். கீழ்த்தர மக்கள் என்ன குற்றம் புரிந்தாலும் அரசர் அவர்களுடைய தலையைக் கடைத் தெருவில் வெட்டிவிடும்படி உடனே ஆணையிடுவார். இதே தண்டனை கொலைக் குற்றத்திற்கும் அளிக்கப்பட்டது. சண்டை யிட்டுக் கொல்லப்பட்டால் இவ்விதத் தண்டனை அளிக்கப்பட வில்லை.

### நிலவரி விதிப்பு

வரி விதிப்புப் பயிரிடப்படும் நன்செய், புன்செய், தோட்டம் ஆகிய நில வகைகளைப் பொறுத்து மாறிக்கொண்டிருந்தது. அச் சமயத்தில் அரசனுக்கு உகந்தபடி வரி ரொக்கமாகவோ, பண்ட மாகவோ வாங்கப்பட்டது. எவ்விதத்தில் வாங்கப்பட்டாலும் உழவர்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரி பெருஞ்சுமையாக இருந்தது; 'இவர்கள் தங்கள் பிரபுவுக்குப் பத்தில் ஒன்பது பாகம் கொடுக்கிறார்கள்' என்று நூனிஸ் குறிப்பிடுகிறார். மொத் தத்தில் இவ்விகிதம் இருந்திருக்க முடியாதுபோலும். எனினும் குறிப்பாகக் கவனிப்பவர்களுக்கு விதிப்புத் தொகை மிக அதிக மாகத் தோன்றியது என்பது உறுதி. இச்சுமையை எதிர்த்து கிராமக் கலகம் நடந்ததற்கான சான்றுகளும், பிந்திய பயணிகளின் குறிப்புகளும் நூனிஸ் குறிப்பிட்டிருப்பதை உறுதிப்படுத்து கின்றன. பிரபுக்கள் செல்வத்தில் கொழுத்திருந்தபோது பாமர மக்கள் உடுக்க ஆடையில்லாமல் குடிசைகளில் வாழ்ந்து வந்தனர் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகின்றனர்.

வில்க்ஸ் என்பவரும் பிந்திய ஆசிரியர்களும் எரிச்சலூட்டும் எண்ணற்ற தீர்வைகள் உழவர்கள்மீதும் வணிகர்கள்மீதும் விதிக் கப்பட்டன என்பதைக் குறிப்பிடுகிறார்கள். சுமைமிக்க நகரத் தீர்வைகளாலும், சாலைகளில் எண்ணற்ற சுங்கநிலையுங்கள்

இருப்பதனுலும் வணிகம் தடைப்பட்டது. 'நூற்ருண்டின் இறுதியிலும் கூடச் சமயப்பரப்பாளர்கள் இந்தியாவின் இப்பகுதியில் தீர்வைகளைப்பற்றிய எல்லையற்ற தொந்தரவுகளிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக நுழைவுச் சீட்டுக்களைப் பெறுவதற்கு வற்புறுத்தினர்.'

**கைச்சண்டையிடுதல்**

நூனிஸ் பின்வருமாறு கூறுகிருர். 'நேருக்குநேர் கைச்சண்டையிடுபவர்களுக்கு மிக மதிப்பளிக்கப்பட்டது. உயிரோடு இருப்பவர்க்கு உயிரிழந்தவருடைய நிலபுலன்கள் அளிக்கப்பட்டன. ஆனல் அமைச்சரின் அனுமதியின்றி எவரும் சண்டையில் இறங்குவதில்லை. அமைச்சர் இவ்வனுமதியை உடனே அளிப்பார்.' இவ்வழக்கம் விஜயநகரத்தில் மட்டும் மேற்கொள்ளப்படவில்லை. வாள்களை ஏந்திக் கைச்சண்டையிடுதல் மலபாரின் நாயர்களிடத்தில் அண்மைக்காலம் வரையிலும், பத்தொன்பதாம் நூற்ருண்டுவரையில் கூட இயல்பாக இருந்தது. தக்காணத்து முஸ்லீம்கள் பதினும் நூற்ருண்டின் தொடக்கத்தில் இவ்வழக்கத்தை மேற்கொண்டனர். இது ஃபெரிஷ்டாவை அச்சுறுத்தியது. இத்தீய வழக்கம் உலகத்தில் நாகரிகமுள்ள மற்றெந்த நாட்டிற்கும் தெரிந்திருக்கவில்லை என்று இவர் கூறுகிருர்.

**சட்டபூர்வமாக்கப்பட்ட விலைமகள் செயல்**

வேசித் தொழில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. தேவதாசிகள் ஒழுங்கீனமுற்றவர்கள் என்றும் நகரத்தின் சிறந்த வீதிகளில் வசித்து வந்தார்கள் என்றும் எல்லா நகரங்களிலும் இவ்விதமே இருந்தன என்றும் அவர்களுடைய வீதிகள் சிறந்த வீடுகளை வரிசையாகக் கொண்டிருந்தன என்றும் பேயஸ் நமக்கு அறிவிக்கிருர்.

இப்பொருள் பற்றி அப்துர் ரெஸாக் மேலும் சில தகவல்களை அளிக்கிருர். அவர் பின் வருமாறு எழுதுகிருர். 'நாணயச்சாலைக்கு எதிர்ப்புறத்தில் நகரத்துத் தலைப்பணியாளரின் அலுவலகம் இருக்கிறது. இதனேடு பன்னிரெண்டாயிரம் காவலர்கள் இணைக்கப்பட்டிருக்கின்றனர் என்று சொல்லப்படுகிறது. இவர்களுடைய சம்பளம் ஒரு நாளைக்குப் பன்னிரண்டாயிரம் பனமங்களுக்கு (Panamas) சமமாக இருந்தது. இத்தொகை பொது மகளிர் மனைகளிலிருந்து வந்த வருமானத்திலிருந்து வந்ததாகும்.'

மௌரிய காலத்து நகரத்தலைப் ணியாளர்களையும் ஆடலணங்குகளையும் பற்றிய அர்த்தசாஸ்திரக் குறிப்புகளையும் பாரசீகத் தூதரின் குறிப்புகளையும் ஒப்பிட்டுப்பார்ப்பது சுவை.

பயப்பதாக இருக்கும்· அக்காலத்திலும் விஜயநகரத்தில் இருந்தது போல் விலைமாதர்கள் அரசவைச் சடங்குகளில் மிக முக்கியமான பங்கெடுத்துக்கொண்டனர்.

**உணவு விஷயங்களில் தளர்ச்சி**

மரக்கறிகளைப்புசிக்கும் பிராமணர்களின் எண்ணிக்கை விஜய நகரத்தில் அதிகமென்றாலும், அதிகாரிகளால் ஊக்கமளிக்கப் பட்டிருந்தபோதிலும், பொதுமக்களின் உணவும், அரசனின் உணவும் பிராமணர் தரத்திலிருந்து தீவிரமாக வேறுபட்டிருந்தது. மாமிசம் கட்டுப்பாடின்றி உபயோகப்படுத்தப்பட்டது. கடைகளில் கிடைக்கக்கூடிய பறவைகள், இறைச்சி ஆகியவற்றின் வகைகளைப்பற்றி பேயஸ் மிக்க மகிழ்ச்சியுடன் கூறுகிறார். நாள் தோறும் எண்ணற்ற ஆடுகள் கொல்லப்பட்டன. பன்றி இறைச்சி போல் சுத்தமாகவும் கொழுப்பு நிறைந்தும் இருந்த இறைச்சியை விற்பவர்கள் ஒவ்வொரு தெருவிலும் இருந்தார்கள். பறவைகளும் வேட்டைக்குரிய விலங்குகளும் ஏராளமாகவும் மலிவாகவும் கிடைத்தன. மூன்றுவகைக் கவுதாரிகள், காடைப்பறவைகள், புறாக்கள், மாடப்புறாக்கள், நாட்டின் சாதாரணப்பறவைகள் ஆகியவைகள் உட்பட பல பறவைகளும் கோழிவகையராக்களும் முயல்களும் விற்பனைக்குக் கொண்டுவரப்பட்டன. அதே ஆசிரியர் பன்றி இறைச்சியும் விற்கப்பட்டதென்றும் இறைச்சிக் கடைக்காரர்களின் வீடுகள் இருந்த சில வீதிகளில் அவைகளைப்போல நாடெங்கும் காணமுடியாத அளவுக்கு வெள்ளை யாகவும் சுத்தமாகவும் இருந்த பன்றிகள் வளர்க்கப்பட்டுவந்தன என்றும் குறிப்பிடுகிறார்.

இவருடைய குறிப்புக்களை நூனிஸும் உறுதிப்படுத்துகிறார் இவர் பின்வருமாறு எழுதுகிறார்.

'பிசநாகாவின் (விஜய நகரத்தின்) அரசர்கள் எல்லாவகைப் பொருள்களையும் உண்கின்றனர். ஆனாலும் இவர்கள் எருதுகளின் இறைச்சியையோ பசுவின் இறைச்சியையோ உண்ணுவதில்லை. இவர்கள் இவற்றைப் பூஜிப்பதால் புறச்சமயம் (Leathenism) பின்பற்றும் நாடெங்கிலும் எருதுகளும் பசுக்களும் கொல்லப்படுவதில்லை. இவர்கள் இறைச்சி, பன்றி இறைச்சி, மான் இறைச்சி, கவுதாரிகள், முயல்கள், புறாக்கள், காடைப் பறவைகள், மற்றப் பறவைகள் முதலியனவற்றையும், எலிகள் பூனைகள், பல்லிகள் முதலியவற்றையும் உண்ணுவார்கள். இவை யெல்லாம் பிசநாக நகரின் கடையில் வெளிப்படையாக விற்கப் படும்,

வேட்டை விலங்குகள், பறவைகள் பொறுத்தவரை ஒவ்வொன்றும் உயிருடன் இருக்கும் போதே விற்கவேண்டும். இவ்விதம் செய்தால் ஒவ்வொருவரும் தான் வாங்கியது எது என அறிந்து கொள்ளமுடியும். ஆறுகளிலிருந்து வரும் ஏராளமான மீனும் அங்கு இருந்தன.'

அது இளவரசர்களையும் மக்களையும் பொறுத்தவரை வியப்புக்குரிய உணவுப்பட்டியலாகும். இவர்கள் கிருஷ்ண தேவராயர், அச்சுதராயர் காலத்தில் விஷ்ணுவின் சில தோற்றங்களின்மீது தனிப்பற்றுக்கொண்டிருந்த வைதீக இந்துக்களாவர். முதல் வமிசத்தைச் சேர்ந்த அரசர்கள் சிவனைப் பூசிக்க விரும்பினர்.

## குருதி வெறியுடைய பலியீடுகள் :

தற்போது நேபாளத்தில் இடப்படும் பலிகள்போலக் குருதி வெறியுடைய கணக்கற்ற பலிகள் வைஷ்ணவ சமயத்தின் சாதாரணச் செயல்முறைக்கு முரண்பாடாயிருந்தன. இந்துக்கள் உண்ணுவதற்காக என்று கடைகளுக்குள் கொண்டுவரப்பட்ட இறைச்சிக்குத்தேவையான ஆடுகள் எல்லாம் குறிப்பிட்ட கோயில் ஒன்றின் வாயிலில் கொல்லப்பட்டன என்று பேயஸ் கூறுகிறார். இரத்தம் அங்கிருந்த சில உருவத்திற்குப் பலியாக அளிக்கப்பட்டது. அதற்குத் தலைகளும் அளிக்கப்பட்டன. குறிப்பிட்ட ஒரு திருநாளில் இருபத்துநான்கு எருதுகளையும், நூற்றைம்பது ஆடுகளையும் வெட்டும் காட்சியை அரசர் காண்பர் என்றும் இப்போதும் நேபாளத்தில் நடைபெறுவதுபோல பெரிய அரிவாள் அல்லது தாவோ (dao) என்ற கத்தியால் விலங்கு ஒரே ஒரு வெட்டினால் வீழ்த்தப்பட்டது என்றும் அதே ஆசிரியர் கூறுகிறார். ஒன்பதுநாள் நீடித்திருந்த திருவிழாவின் கடைசி நாளில் இருநூற்றைம்பது எருமைகளும் நாலாயிரத்துஐந்நூறு ஆடுகளும் வெட்டப்பட்டன.[1] இதுபோன்ற வழக்கங்கள் விஜய நகர இந்து சமயம் ஆரியருக்குப் பொருந்தாத பல கூறுகளை உட்கொண்டிருந்தது என்பதற்கு சாட்சி அளிக்கிறது. தற்போது இழிவடைந்த சாதிகள் அல்லது முரட்டுத்தன்மை வாய்ந்த காட்டு

[1] தலைமைக்குரு வைட்ஹெட் (Bishop Whitehead) என்பவர் கொள்ளைநோய் பரவியபொழுது தெலுங்கு நாட்டில் சில வேளைகளில் ஆயிரம் ஆடுகள் பலியிடப்பட்டன என்று கூறுகிறார். (Village Deities, Madras. 1907 - பக்கம் 136 திருத்தம் செய்யப்பட்ட இரண்டாவது பதிப்பு – Oxford University Press, 1916, பக்கம் 56). அந்நூலில் குறிப்பிடப்பட்டிருக்கும் வழக்கங்கள் எல்லாம் தெலுங்கு அல்லது கன்னட வழக்கங்கள் போலும் பொதுவாகத் தற்காலத்துத் தமிழர்கள் குருதிவெறியுடைய பலியீடுகளை வெறுக்கின்றனர். கன்னடியர்கள் சிறிதும் கட்டுப்பாடின்றி இப்பொழுது பலியிடுகிறார்கள்.

இனங்கள் ஆகியவர்களைத் தவிர மற்ற எவரும் பல்லிகளையும் எலிகளையும் உண்பதில்லை.[1]

**விஜய நகரத்து அரசாங்கம் : தெலுங்கும் வெளிநாடும் :**

விஜயநகரை நிறுவியவர்கள் ஹோய்சாள அரசர்களின் பணியில் இருந்தவர்களாவர் அல்லது வாரங்கல் இராசாவின் பணியில் இருந்தவர்களாவர் என்பதைப்பற்றி ஐயப்பாடு ஏற்படலாம். ஆனால் இவர்கள் கன்னட சரிவர அழைத்தால் கர்நாட்டில் அந்நியர்கள் என்பது மட்டும் நிச்சயம். புக்கரும் அவருடைய சகோதரரும் வாரங்கல்லிலிருந்து தப்பி ஓடிவந்தவர்கள் என்று வில்க்ஸ் நம்பினர்.

புதிய அரசாங்கத்தின் இவ்விதமான தொடக்கம் தெலிங்கா (தெலுங்கு) மொழியும் நாடும் கர்நாடகத்தின் தலைநகரில் உயர் நிலை எய்தியதை உடனே விளக்குவதுமின்றி முந்திய வமிசம் அழிந்தபின் தோன்றிய குழப்ப நிலையையும் பலவீனத்தையும் சான்றுறுதி செய்கிறது அந்நியர்களால் நிறுவப்பட்ட அரசாங்கம் அந்நியர்களால் ஆதரிக்கவும் பட்டது. கானராவின் மத்தியில் ஒரு தெலிங்கா அரசவை தெலிங்கப்படை ஒன்றால் ஆதரிக்கப்பட்டது; அதே மொழியைப் பேசுகின்ற அவருடைய சந்ததியார்களை கன்னியாகுமரியிலும் எஞ்சி நிற்கின்ற கணக்கற்ற அமைப்புகளிலும் இன்றும் காணலாம். இவைகள் ரோமானிய குடியிருப்புகளை ஒத்திருந்தன. தூரப் பகுதிகளில் பெற்ற வெற்றியை உறுதிப்படுத்துவதற்கும், உள்நாட்டு மக்களைக் கீழ்ப் படுத்துவதற்கும் அவ்வப்பொழுது அனுப்பப்பட்டவைகளே இவைகளாகும். மத்திய பகுதியும் மேற்குப் பகுதியும் ஒருவேளை மறைந்துபோன வமிசத்தின் இராச்சியப்பகுதிகள் முழுவதும் தற்காலத்து மைசூர் இராச்சியத்தின் பெரும்பகுதி உட்பட எல்லாம் ஏற்கெனவே அடக்கப்பட்டன; ஆனால் வெள்ளாள குடும்பத்தின் ஒருகிளை (=ஹோய்சாளர்) 1387ஆம் ஆண்டுவரை ஒழுங்குற்ற அதிகாரத்தை தூனூர் (Toonoor) என்ற இடத்தில் செலுத்த முடிந்தது. அவ்வாண்டிலிருந்து விஜயநகர (Vijayanagar) வமிசம் அளித்த கொடைகளைக் காணுகிறோம்.

[1] எடுத்துக்காட்டாக ஒரிஸ்ஸாவிலிருந்து வந்தவர்கள் என்று சொல்லப்படுகின்றவர்களும் மைசூரில் ஏராளமாக இருப்பவர்களுமான வட்டர்கள் (Vaddas), மாடு, ஆமை தவிர மற்ற எல்லா வகை விலங்கு உணவையும் உண்பர். ஆடுகள், வெள்ளாடுகள், பன்றிகள், அணில்கள், காட்டுப் பூனைகள், பல்லிகள், எலிகள் ஆகியவற்றையும் இவர்கள் பெரும்பாலும் விரும்பினர்கள். (Ethnographic Survey of Mysore Prelim – Issue, No. XI p 10, Bangalore Government press, 1907. அரசர்கள் குருபா இனத்தை அல்லது ஜாதியைச் சேர்ந்தவர்களென்றும் சிவெல் (பக்கம் 13) கருதுகிறார். இவர்கள் முக்கியமாக ஜமக்காளம் நெய்பவர்களும் எடையர்களுமாவர். குருபருக்கு பார்க்க Ethno, Survey No. 1, 1906.

இக்கொடைகள் காவேரிக்கப்பால் தெற்கில் துர்க்காணம்பிவரை பரவியிருந்தன. முதலாம் ஹரிஹரர் வமிசத்தைச் சேர்ந்தவர்கள் சிவனைப்பின்பற்றியவர்களாவர் இவ் வமிசத்தைச் சேர்ந்த பதின்மூன்று இராசாக்கள் அல்லது ராயில்களில் கடைசியான வருக்குப்பின் 1490-ல் நரசிங்கு இராஜா பதவியேற்றார். இவர் வைஷ்ணவ சமயப்பிரிவினைச் சேர்ந்தவர் இவர் புதிய வமிசத்தை நிறுவியவர். இவருடைய பேரரசு ஐரோப்பியர் களால் நரசிங்கம் என்று அழைக்கப்பட்டிருக்கும் இப்பெயர் நடைமுறையில் இல்லாததனால் அமைந்திருக்கும் இடம் பொறுத்த வரை இது புவியியல் அறிஞர்களுக்குக் குழப்பமுண்டாக்கியது.

நரசிங்கராசர் விஜயநகத்தின் முதலாம் அரசர்போலும். இவர் தம் படையெடுப்புகளைத் திராவெடா (திராவிட, தமிழ்நாடு) வரை பரப்பி பலமான சந்திரகிரி, வெல்லூர் ஆகிய கோட்டை களையும் கட்டினார். பின்னால் குறிப்பிடப்பட்டது சிற்சில சமயங் களில் இருப்பிடமாக இருப்பதாகவும், முன்னால் குறிப்பிடப் பட்டது கருவூலத்தைப் பத்திரப்படுத்துவதற்காகவும் கட்டப் பட்டன. ஆனால், கிருஷ்ணராயில் (கிருஷ்ணதேவராயர்) சுமார் 1509ஆம் ஆண்டிலிருந்து 1515ஆம் ஆண்டுவரை இருந்த காலத்தில் முழு திராவிட நாட்டை உண்மையான அல்லது பெயரளவான கீழ்படிதலுக்குக் கொண்டு வந்தார்.

விஜயநகர அரசர்களும் பிரபுக்களும் கீழ்ப்படுத்தப்பட்ட உள்நாட்டு மக்களின் மேல் அதிகாரம் செலுத்திய அந்நியர்கள் என்ற உண்மை அரசாங்கத்தின் தீவிரத் தன்மையை விளக்கும் எனினும் தெலுங்கு அல்லது தெலிங்க மக்கள் அதிகார சக்திக்குக் கீழ்படிவதில் பெயர் பெற்றவர்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும்.[1]

## இலக்கியத்திற்கு ஆதரவு

தோற்றத்தில் இவர்களுடைய பட்டம் கன்னடமாக இருந்த போதிலும் விஜயநகர இராயர்கள் சமஸ்கிருத இலக்கியத்திற்கும் தெலுங்கு இலக்கியத்திற்கும் ஆதரவு அளித்தனர். வேதங்களின் பிரசித்திபெற்ற உறை ஆசிரியரும் கி.பி. 1387-ல் இறந்தவருமான சாயனர் (Sayanar) என்பவர் இரண்டாம் ஹரிஹரரின் ஆட்சிக் காலத்தில் முற்பகுதியில் அமைச்சராக இருந்தார் அவருடைய

[1] Wilks, reprint, voli-page 9. பால்போர் (Balfour) எழுதிய கலைக்களஞ்சி யத்தில் (Cyclopaedia) உள்ள 'தெலுங்கு' என்ற சிறந்த கட்டுரையைப் பார்க்க. இந்தக் கலைக்களஞ்சியம் கால்ட்டுவல்ஸ் (Caldwel's) என்பவரின் நூல்களை அடிப் படையாகக் கொண்டுள்ளது. வில்க்ஸ் அளிக்கும் தேதிகளுக்குச் சிறிய திருத் தங்கள் தேவையாக இருக்கின்றன.

சகோதரரான மாதவர் புக்கருக்குப் பணியாற்றினர். முதல் வமிசம் சிரிங்கேரியின் மாபெரும் மன்னராட்சியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. இரண்டாவது வமிசத்தின் தந்தையான சாளுவ நரசிம்மரின் செயலாற்றல்கள் தெலுங்குக் கவிஞர்களால் உற்சாகத்துடன் புகழப்பட்டன. தானே ஒரு கவிஞராகவும் ஆசிரியராகவும் இருந்த கிருஷ்ணதேவராயர் தெலுங்கு மொழியின் தாரளப் புரவலராக இருந்தார். இவருடைய அரசகவிஞரான அலசானி பெத்தண்ணு என்பவர் முதல்ரக ஆசிரியர் என்று கருதப்படுகிறார். அரசவையின் மரபு இராமராஜராலும் நான்காவது அல்லது அரவீடு வமிசத்தின் இதர இராயர்களாலும் பின்பற்றப்பட்டது. இராமராஜர் அவர் சகோதரர்கள் பல்திறம் வாய்ந்த அறிஞர்கள் முதலியவர்களுடைய ஆதரவின் கீழ் வைஷ்ணவ சமயத்தை உயிர்ப்பிக்கும் மாபெரும் செயல் செய்து முடிக்கப்பட்டது.

**கலையும் கட்டடக்கலையும்**

விஜய நகர அரசர்கள் தங்கள் ஆட்சியின் தொடக்கத்திலிருந்தே வலிமையான அரண்களை அமைப்பதிலும் மாபெரும் நீர்ப்பாசன வசதிகளையும் குடிநீர் வசதிகளையும் ஏற்படுத்துவதிலும் கம்பீரமான மாளிகைகள் கட்டுவதிலும், சிற்ப, ஓவியக் கலை நுணுக்கங்கள் மிகுந்த கோயில்களைக் கட்டுவதிலும் இவர்கள் சிறப்புற்றிருந்தார்கள். இவர்கள் மிகக் கடினமான பொருளை வெற்றிகரமாகப் பயன்படுத்திய தனிப்பட்ட கட்டடக் கலைப்பாணி ஒன்றைத் தோற்றுவித்தனர். சிறப்புமிக்க சிற்பிகளும், ஓவியக் கலைஞர்களும் இவர்களுக்குப் பணியாற்றினர்கள். சிற்பக்கலையின் தன்மையைக் காட்டுவதற்குப் போதுமளவு இன்றும் எஞ்சியிருக்கிறது. ஆனல் ஓவியங்கள் மறைந்துவிட்டன. போர்ச்சுகீசிய ஆசிரியர்களும், அப்துர்ரெஸாக்கும் குறித்துள்ள வருணனைகள் விஜயநகர அரசர்களின் ஊதியத்திலிருந்த ஓவியக் கலைஞர்கள் மிக உயர்தரமான திறனுற்றலைப் பெற்றிருந்தார்கள் என்பதைப் பற்றி எவ்வித ஐயப்பாட்டிற்கும் இடமளிக்கவில்லை. ஹஸாரா இராமசாமி கோயில் என வழங்கப்படும் கிருஷ்ணதேவராயரின் அரச கோவிலின் சுவர்களில் அரைகுறையாகச் செதுக்கப்பட்டுள்ள முனைப்பு ஓவியங்கள் பெரிதும் புகழப்படுகின்றன. இக்கோயில் 1513-ல் கட்டப்பட்டது. விஜயநகரில் இருந்த கட்டடங்களைப்பற்றியும் சிற்ப வேலைகளைப்பற்றியும் போதிய குறிப்பு இன்றும் தயாரிக்கப்படவில்லை.

## விஜயநகரத்தின் இராயர்கள்

| பெயர் | அரியணைக்கு ஏறியது | குறிப்புகள் |
|---|---|---|
| | கி.பி. | |
| அரச அந்தஸ்து பெருத தலைவர்கள் முதலாம் ஹரிஹரர், சங்கமரின் மகன் | 1336 | விஜயநகரம் நிறுவப்பட்டதாக வழக்கமாகக் கருதப்படும் தேதி. |
| முதலாம் புக்கர் (புஹ்கா அல்லது புக்னர்) அவருடைய சகோதரரும் மற்ற மூன்று சகோதரர்களும் சங்கமரின் புதல்வர்களும் வாரிசுரிமைக்காக வெளிப்படையாகப் போட்டியிட்டனர். | 1354 | முதலாம் புக்கர் 1377-ல் இறந்தார். |
| அரச அந்தஸ்து பெற்ற இராயர்கள். | | |
| முதலாம் வமிசம்—சங்கமரின் வழித் தோன்றல்கள். | | சிவா வீரூபக்தருக்கு வழிபாடு செய்தார்கள். |
| இரண்டாம் ஹரிஹரர் முதலாம் புக்கரின் மகன். | 1377 | |
| இரண்டாம் புக்கர், இரண்டாம் ஹரிஹரரின் மகன் வாரிசுரிமைக்குப் போட்டி | 1404 | வீருபக்கர் எனப் பெயர் கொண்ட சகோதரர் ஒருவரும் உரிமை கொண்டாடினர். |
| முதலாம் தேவராயர் | 1406 | |
| வீரவிஜயர் (வாரிசுரிமைக்குப் போட்டி) | 1422 | |
| இரண்டாம் தேவராயர் (இம்மடி பிரதாபர் அல்லது பிரௌதர் என்றும் வழங்குவர்) முதலில் வீர விஜயரோடு இணைக்கப்பட்டிருந்தவர் தனியான அரசரானார். | 1425 | பேரரசு செழுமையாகவும் பரந்தும் இருந்தது. |
| மல்லிகார்ஜுனர், இரண்டாம் தேவராயரின் மகன். | 1447 | சாளுவ நரசிம்மர் என்ற அமைச்சர் சுமார் 1455ஆம் ஆண்டிலிருந்து அதிகாரத்தில் இருந்தார். |
| வீருபாக்ஷா | 1465 | பேரரசின் அழிவு |
| பிரௌத தேவராயர் (பாதியராவ்) | 1485 | |

**விஜயநகரத்தின் இராயர்கள்—(தொடர்ச்சி)**

| பெயர் | அரியணைக்கு ஏறுதல் | குறிப்புகள் |
|---|---|---|
| இரண்டாவது அல்லது சாளுவ வமிசம். | | விஷ்ணுவை வழிபாடு செய்தவர்கள். |
| சாளுவ நரசிம்மர் | 1486 | |
| இம்மடி நரசிம்மர், தாமய்ய (தர்ம)ராயர் என்றும் பெயர் பெற்றவர். நரசிம்ம சாளுவரின் மகன். | 1492 | நரச நாயக்கரின் கையில் இருந்தது. |
| மூன்றும் அல்லது துளுவ வமிசம். | | |
| நரசநாயக்கர், வீர நரசிம்மர் என்ற தன் மகன் தனக்குப் பின் மன்னர் பேராட்சியாளராகப் பதவியேற்றூர். | 1503 | |
| வீர நரசிம்மர் இம்மடியைக் கொன்று பதவியேறுகிறூர். | | |
| கிருஷ்ணதேவராயர் | 1509 | |
| இராய்ச்சூர் போர் | 1520 | பேரரசின் உச்சநிலை. |
| அச்சுதர்; கிருஷ்ணதேவராயரின் சகோதரர். | 1529 | |
| அச்சுதரின் மகனை முதலாம் வெங்கடா பதவியேற்கிறூர். ஆனல் கொல்லப்படுகிறூர். | 1542 | |
| சதாசிவர், அச்சுதரின் மற்றெரு சகோதரரின் மகன். | 1542 | ஒழுங்கற்ற அரசர். சக்தி இராமராஜரின் கையில் இருக்கிறது. |
| தாலிக் கோட்டைப் போர். | 1565 | பேரரசு சிதறடைதல். |
| இராமராஜரின் மரணம்; குழப்பம். | 1565 | |
| நான்காவது வமிசம்; ஆரவீடு அல்லது கர்னுடம். | C 1570 | தற்போது அனந்தபூர் மாவட்டத்திலுள்ள பெறுகொண்டா தலைநகரமாக இருந்தது. |
| இரங்கா, திருமலரின் மகன் | C 1573 | |
| முதலாம் வெங்கட, ரங்காவின் சகோதரர் | 1585 | தலைநகரம் சந்திரகிரிக்கு மாற்றப்பட்டது. |
| இதர இளவரசர்கள் | | |
| இரங்கா | 1642 | தலத் தலைவர் |
| வமிசம் அநேகமாக முடிவு பெறுதல். | 1646 | இரங்காவின் கல்வெட்டுக்கள் 1684ஆம் ஆண்டுவரை நீடித்திருக்கின்றன. |

குறிப்பு : தேதிகளும் பல விபரங்களும் குறிப்பாக வாரிசுரிமைக்காக இடப்பட்ட போட்டிக்குரிய விபரங்கள் ஐயப்பாட்டுக்கு உரியவை.

| விஜயநகரம் | பாமினி | பிஜப்பூர் |
|---|---|---|
| முதலாம் ஹரிஹரர் முதலியவர்கள் 1336 | | |
| முதலாம் புக்கர் 1354 | | |
| | முதலாம் அலாவுதீன் 1347 | |
| | முதலாம் முகமது 1358 | |
| | முஹாஜித் 1378 | |
| | தாவூத் 1378 | |
| இரண்டாம் ஹரிஹரர் 1377 | இரண்டாம் முகமது 1378 | |
| | கியாஸுத்தின் 1397 | |
| | ஷம்ஸீத்தின் 1397 | |
| | ஃபிரோஸ் 1397 | |
| இரண்டாம் புக்கர் 1404 | | |
| முதலாம் தேவராயர் 1406 | | |
| வீர விஜயர் 1422 | அகமது 1422 | |
| இரண்டாம் தேவராயர் 1425 | | |
| | இரண்டாம் அலாவுதீன் 1435 | |
| மல்லிகார்சுனர் 1447 | | |
| | ஹுமாயூன் 1457 | |
| | 1461 | |
| | மூன்றும் முகமது 1463 | |
| வீரூ பாக்ஷா 1465 | | |
| பிரௌதக தேவராயர் 1485 | | |
| | மகமூத் 1482 | |
| சாளுவ நரசிம்மர் 1492 | | யூசுப் 1490 |
| வீர நரசிம்மர் 1503 | | |
| கிருஷ்ணதேவராயர் 1509 | | |
| | | இஸ்மாயில் 1510 |
| அச்சுதர் 1529 | | |
| | | மல்லூ 1534 |
| | | முதலாம் இப்ராஹிம் 1535 |

| விஜயநகரம் | | பாமினி | பிஜப்பூர் | |
|---|---|---|---|---|
| சதாசிவர் | 1542 | | அலி | 1557 |
| திருமலா | C 1570 | | | |
| இரங்கா | C 1573 | | | |
| | | | இரண்டாம் இப்ராஹிம் | 1580 |
| முதலாம் வெங்கடாவும் மற்றவர்களும் | 1585 | | | |
| | | | முகமது | 1626 |
| இரங்கா | 1642 | | | |

## ஆதாரங்கள்

பயன்படுத்தியுள்ள தலையார்ந்த ஆதாரங்களாவன. Sewell, A Forgotten Empire (Vijayanagar), லண்டன், 1900, இந் நூல் தான் போர்ச்சுகீசிய வரலாற்றுக் குறிப்புகளை அளிக்கின்றது; எச். கிருஷ்ண சாஸ்திரி (H Krishna Sastri) Rep. A. S. India for 1907-8., 1908-9., and 1911-12-ல் கல்வெட்டுகளையும் தெலுங்கு இலக்கியத்தையும் அடிப்படையாகக் கொண்டு எழுதியுள்ள மூன்று கட்டுரைகள் இத்தலைப்பைப்பற்றிய முந்திய வாதங்களைப் பின்வரும் நூல்களில் காணலாம்.—எச். எச். வில்சஸன் (H H. Wilson's) Introdution to the Descriptive Catalogue of the Mackenzie MSS. 1828, reprint 1869; வில்க்ஸ் (Wilks) Historical Sketches History of Mysoor, 1810-14 reprint 1869. மீடோஸ் டெய்லரின் (Meadows Taylor's Manual), எழுதப்பட்ட பொழுது சிறந்ததாக இருந்தது; ஆனால், இப்பொழுது காலத்துக்கொத்த வளர்ச்சியைப் பெற்றிருக்கவில்லை. நான் பின் வரும் நூல்களையும் கலந்து ஆலோசித்துள்ளேன். S. Krishnaswami Aiyangar, A little known chapter of Vijayanagar History, Madras S.P.C.K. press 1916; Rice-Mysore and Coorg from the inscriptions, London 1909; the same anthour's Mysore Gazetter, rivised ed , London 1897; A S. Reports of the Southern Circle (Madras) என்ற அறிக்கை வெளியீடுகளில் இருக்கும் பல கட்டுரைகள்; Indian Antiquary, & C.

நாணயங்கள் பின்வரும் நூல்களில் வருணிக்கப்பட்டுள்ளன. Hultzsch, Indian Antiquary—vol xx. (1891) & V. A. Smith, Catalogue Coins in I. M. vol i. Oxford 1906; (Smith) History of Five Arts (H.F.A.) என்ற நூலில் வமிசத்தின் கலை சுருக்கமாக ஆராயப்பட்டுள்ளது. புதிய கல்வெட்டுகள் இடைவிடாமல்

வெளிவருகின்றன. பல தேதிகளையும் மற்றும் பல விவரங்களையும் பற்றிய பிரச்சினைகள் முடிவு பெறாமல் இருக்கின்றன. விவரங்கள் நிறைந்த ஒரு பெரிய புத்தகம் தோன்றும் வரையில் அப் பிரச்சினைகள் முடிவு பெறமாட்டா. A. H. Longhurst, Superintendent Archaelogical Department, Southern Circle (Madras Govt. press 1917) எழுதியுள்ள சிறிய நூல் "Hampi Ruins described and illustrated". அறுபத்து ஒன்பது படங்களைக் கொண்டுள்ளது, சிறந்த முறையில் எழுதப்பட்டுள்ளது.

இத்தலைப்பைப்பற்றி வெவ்வேறு விளக்கங்களைத் தரும் அண்மைக் கால நூல்கள் பின்வருவன. H. Heras The Aravidu dynasty of Vijayanagar and Begininings of Vijayanagar., R. Sewell and S. K. Aiyangar, Historical Inscriptions of Southern India., S. K. Aiyangar, Sources of Vijayanagar History; N. V. Ramanaya—Vijayanagar–Original of the City and Empire; Vijayanagar Sexcentenary Commemoration Volume; B. A Saletore, Social and political life in the Vijayanagar Empire.

மடல் VI

# முகலாயப் பேரரசு

## 1. முகலாயப் பேரரசின் துவக்கம்; பாபர் ஹுமாயூன் சூர்வமிசம் கி.பி. 1526-56.

பாபர், சஹீருத்தீன் முகம்மது (Babur, Zahir-ud-din Muhammad) என்பவர் காபூலின் அரசரும் அவரது காலத்திய ஆசியாவின் மிகச் சிறந்த அரசருமாவார். எந்நாட்டிலும் எக்காலத்திலும் அரசர்களுக்கிடையில் மிக உயர்ந்த இடத்தைப் பெற தகுதியுற்றவர். இவருடைய உதவியைத்தான் தௌலத் கான் (Daulat Khan) என்பவர் சுல்தான் இப்ராஹீமுக்கு (Sultan Ibrahim) எதிராக நாடினர். பாபர் சிறுவனாக இருக்கும்பொழுது சிறிது காலத்திற்கு இந்தியாவரை பரவியிருந்த தைமூரியப் பேரரசின் ஒரு பகுதியை மரபுரிமையாகப் பெற்றிருந்தார். இப் பகுதிதான் சிர்தர்யாவின் (Syr Darya) மேல் சமவெளியான ஃபெர்கானா (Farghana) என்பதாகும். இதனது வருமானம் ஒரு சிறிய குதிரைப்படையை பேணும் அளவுக்கே இருந்தது. இரும்பு குல்லாய்களையும் கவசங்களையும் தாங்கிய வீரர்களை உடன் கொண்டு தனிப்பட்ட பற்றுதலாலோ தாற்காலிக சுயநலத்தாலோ தம்மோடு பிணைக்கப்பட்டிருந்த ஒரு படையைக்கொண்டு பாபர் அவரது வீரமிக்க வாழ்க்கையைத் தொடங்கினர். அரசுரிமைகளுக்காக நடந்த சண்டைகளில் இவர் சேர்ந்துகொண்டார். சாமர்கண்டை (Samarqand) மும்முறை பெற்று மும்முறை இழந்தார். ஒரு சமயம் இவர் ஓர் இராச்சியத்தின் தலைவராக இருந்து, உடனே அதற்குப்பின் மலைகளின் வழியாக மறைந்து செல்லும் நாடோடியாக சுற்றவும் நேர்ந்தது.

ஆனால் அச்சமயத்தில் பாரசீகத்தில் சபவிஸ்கள் (Safavis) மத்திய ஆசியாவில் உஸ்பெக்குகள் (Usbegs) ஆகிய இரண்டு புதிய இனங்கள் உதயமாகிக் கொண்டிருந்தன. இவ்விரண்டு இனங்களுக்குமிடையில் சிறப்புமிக்க, ஆனாலும் ஒற்றுமையற்ற தைமூரிய இளவரசர்கள் சிதறப்பட்டும் ஒடுக்கப்பட்டும் இருந்தனர். இறுதியில் பாபர் காபூல் கணவாயின் வழியாக இந்தியாவுக்குள் நுழைய நேரிட்டது. காபூலுக்குள் நுழைந்து கொண்டிருக்கும்பொழுது அவர் அர்குன் (Arghun) வமிசத்தை அவருக்கு முன்னால் துரத்திக்கொண்டு முன்னேறினர். அவர்கள் தெற்கே தள்ளப்பட்டபொழுது சிந்து நதிக்கப்பால் உள்ள மற்ற இனங்கள் அவைகளது தற்போதைய இருப்பிடங்களுக்குத் துரத்தப்பட்டன.

பாபர் 1504-ல் காபூலின் தலைவராகியதனால் இந்தியாவுடன் தொடர்பு கொண்டார். இந்தியாவின் செல்வம் இவரைப் பல படையெடுப்புகளைச் செய்யும்படி தூண்டியது. உஸ்பெக்குகளின் அமைதி குலைக்கும்படி நுழைந்தது இவரை மீண்டும் படையெடுக்கச் செய்தது. ஆனாலும் இவர் சாமர்கண்டை நம்பித்தான் இருந்தார். இவர் 1510-ல் ஷா இஸ்மாயில் ஷெய்பானி உஸ்பெக் (Shah Ismail Shaibani Usbeg) என்பவரைத் தோற்கடித்து தமது ஆசையை நிறைவேற்றிக்கொண்டார்; பாரசீக உதவியைக் கொண்டு 1511-ல் சாமர்கண்டைக் கைப்பற்றிக்கொண்டார். ஆனாலும், உதவி செய்த துணையாளனைப்பெற்று உண்மையில் இவர் தம் குடிமக்களை இழக்க நேர்ந்தது. இம் மக்கள் பாரசீக ஷாவை வெறுத்தனர். இந்து குஷ்ஷுக்கு (Hindu Kush) வடக்கில் இரண்டு ஆண்டுகளாக நம்பிக்கையுடன் சுற்றித்திரிந்து இறுதியில் இவர் மத்திய ஆசியாவைப்பற்றிய நம்பிக்கை இழந்து, இந்தியாவை நோக்கித் திரும்பினர்.

தமது அரசவையில் கூடியிருந்த நாடோடி அரசர்களுக்கு வேலைகொடுக்கும் அவசியம் பாபருக்கு ஏற்பட்டது. இதனால் அவர் 1517ஆம் ஆண்டிலும், 1519ஆம் ஆண்டிலும் ஆப்கானியப் பீடபூமியிலிருந்து இந்தியாவின் சமவெளிகளின் மீது பாய்ந்தெழுந்தார். அவையெல்லாம் வேவுபார்ப்பதற்கான முயற்சிகளாகும். பஞ்சாப் மாகாணத்தின் கவர்னரான தௌலத்கான் லோடி (Daulatkhan Lodi) சுல்தான் இப்ராஹீமின் மாமனை ஆலம்கான், ஆகியவர்களின் வேண்டுகோளின்படி பாபர் 1523-ல் பஞ்சாபின் மீது படையெடுத்தார். இது ஒரு கடுமையான படையெடுப்பாக இருக்கவேண்டித் திட்டமிடப்பட்டது. ஆனாலும், உஸ்பெக்குகள் பால்க் (Balk) என்ற இடத்தைத்தாக்கியதனால் பாபர் பின்வாங்கவேண்டியிருந்தது. இதனால் அவருடைய

இறுதியான படையெடுப்பு 1525 நவம்பர் வரை துவங்கப்படவில்லை.

### இந்தியப் படையெடுப்பு

அப்பொழுதும், ஹுமாயூனின் கீழ் இருந்த பதக் ஷானது (Badak Shan) துணையாளிகளும் துருப்புகளும் உள்பட, அவருடைய மொத்தப்படை பன்னிரண்டாயிரமாகத்தான் இருந்தது. சுல்தான் இப்ராஹிமின் இராச்சியத்தையும் ஆப்கானிய இராச்சியத்திற்கப்பால் உள்ள, பரந்த இந்து இந்தியாவையும் கைப்பற்ற இது ஒரு சிறு படையேயாகும். உண்மையில் இப்படையெடுப்பு முன் பின் பாராமல் செய்யும் செயலை ஒத்திருந்தது. அவரது படையினரில் பெரும்பாலோர் பெரும் அச்சத்திலும் பீதியிலும் மூழ்கியிருந்தனர் என்று பாபர் மறைக்காமல் குறிப்பிடுகிறார். இருந்த போதிலும் துணிகரத்தாக்குதல் வெற்றி பெற்றது.

### பானிப்பட்டுப் போர் (Battle of Panipat) 1526

போரிடும் படைகள் 1526, ஏப்ரல் 21ஆம் நாள் பானிப்பட் சமவெளியில் மோதிக்கொண்டனர். இச்சமவெளியில் இந்திய நாடு பலமுறை வெற்றியாளர்களின் பரிசாக இருந்தது. பாபர் பீரங்கிகளைத் தாங்கிய ஒருபெரும் ஆயுதப்படையைப் பெற்றிருந்தார். புதிதாகத் தயாரிக்கப்பட்ட இக்கருவி அப்பொழுது தான் துருக்கியிலும் (Turkey) ஐரோப்பாவிலும் (Europe) தோன்றி இருந்தது. ஆனால் வட இந்தியாவில் அதுவரை அது பயன்படுத்தப்படவில்லை. அதனுடைய வலிமையை ஏற்கெனவே பஜௌர் (Bajaur) முற்றுகையின்பொழுது உணரப்பட்டிருந்தது. எருதுகளால் இழுக்கப்பட்ட எழுநூறு வண்டிகள் சங்கிலிகளால் நெருக்கிக் கட்டப்பட்டுப் பகைவர்களுக்கு முன்னால் அரணைப் போல் நிற்க வைக்கப்பட்டிருந்தன.[1] வண்டிகளுக்கிடையில் குதிரைவீரர்கள் நுழைந்து தாக்குவதற்கான இடம் விடப்பட்டிருந்தது. எதிர்ப்பக்கத்தில் சுல்தான் இப்ராஹீம் நூறு யானைகளையும் ஓர் இலட்ச வீரர்களையும் கொண்ட ஒரு பெரும் கூட்டத்தைப் போர்க்களத்திற்குள் நுழைத்தார். பாபரது படை வீரர்களின் எண்ணிக்கை குறிப்பிடப்படவில்லையாயினும் அது எதிரிகளின் எண்ணிக்கையை விட நிச்சயமாக மிகக் குறைந்தே இருந்தது. ஆனாலும், ஒழுங்கின்றி முன்னேறிய, முறையின்றி தங்கிய, அல்லது ஓய்வு பெற்ற, முன்னேக்கில்லாமல் போரில் ஈடுபட்ட அனுபவமில்லாத இளைஞருமாகிய ஆப்கானிய சுல்தான்

[1] திருமதி பெவரிட்ஜ் (Mrs. Beveridge) அராபா என்ற சொல்லுக்கு பீரங்கிகள் என்ற இந்திய விளக்கத்தைப் புறக்கணிக்கிறார், ஆனாலும் இச் சொல்லை பீரங்கிகள் ஏந்திய வண்டிகள் என்று மொழிபெயர்க்கலாம்.

படை நடத்துவதில் கவனமின்றியும் இருந்தார். இளம் வயதினரா யிருந்தபோதிலும் பிறவித்தளபதியாகவும் போர் செய்வதில் தேர்ச்சிமிக்கவருமான பாபருக்கு அச் சுல்தான் நிகரல்ல. திறன் மிக்க தலைமையின் கீழ் துணிகரத் தாக்குதல்களைச் செய்யும் குதிரைப்படையைப் பயன்படுத்தும் துரிதமான சிறுபடையால் தாக்குண்டபொழுது சரிவர இணைக்கப்பெருத பெரிய இந்துப் படையின் உள்ளார்ந்த வலிமையின்மையை காலை 9½ மணி முதல் தொடங்கி மாலை வரை நடந்தபோர் விளக்கிக் காட்டுகிறது. குதிரைப்படை எதிரியின் விலாப்புரத்துக்கு விரைந்து பின்புறத் திலிருந்து அவனைத்தாக்கியது முடிவு தரும் தாக்குதலாகும். இதே போன்ற தாக்குதல் முறையை ஹைடாஸ்பென் (Hydespen) என்ற இடத்தில் நடந்த போரில் போரசுக்கு (Porus) எதிராக அலெக்ஸாண்டர் (Alexander) கையாண்டார். அதேபோன்ற விளைவுகளும் ஏற்பட்டன. சூரியன் மறையும் தருவாயில் அவரது துணிவுமிக்கபதினைந்தாயிரம் வீரர்கள் சூழ்ந்திருக்க இப்ராஹீம் போர்க்களத்தில் இறந்து கிடந்தார். "மிக்க இடரார்ந்த இந் நிகழ்ச்சி இறைவனின் கிருபையாலும் இரக்கத்தாலும் எனக்கு மிக எளிதாகியது, அரை நாளுக்குள் வலிமை மிக்க அப் படை மண்ணோடு மண்ணாயிற்று' என்று பாபர் எழுதுகிறார்.

## தில்லி, ஆக்ரா ஆகியவற்றைக் கைப்பற்றுதல்

தில்லியும் ஆக்ராவும் விரைவில் கைப்பற்றப்பட்டன. வெற்றி பெற்ற படையின் எல்லா வகுப்பினிரிடையேயும் கைப்பற்றப் பட்ட ஏராளமான கொள்ளைப் பொருள் தாராளமாக பங்கிடப் பட்டது. ஆனாலும் வெப்பம் கடுமையாக இருந்தது. தானியங் களுக்கும் புல்லுக்கும் பற்றுக்குறை ஏற்பட்டது. 'இக்காரணங் களால் பேக்குகளும், சிறந்த வீரர்களும் தைரியத்தை இழந்து இந்துஸ்தானில் இருப்பதை எதிர்த்தனர்.........' அலெக்ஸாண்டர் செய்ததுபோல, பாபரும் உணர்ச்சி ஊட்டும் ஒரு சொற் பொழிவையாற்றி அவருடைய பெருமையைத் தூண்ட முயன்றார். அவருடைய மாபெரும் முன்னவரைப் போலன்றி பாபரும் அவரது வீரர்களைப் புகழ்ச்சிதரும் பாதையில் செல்லுவதற்குத் தூண்டும் முயற்சியிலும், அந்நிய நாட்டில் அவர்களைச் சுற்றியிருந்த இன்னல்களை வெல்லும்படி செய்யும் முயற்சியிலும் வெற்றி கண்டார்.

## ராணு சங்கா (Rana Sanga)

சுல்தான் இப்ராஹீமின் அரசைவிட இன்னும் வலிமை பெற்ற ஓர் அரசை பாபர் எதிர்நோக்கிப் போரிட நேரிட்டது. இராச புதன நாடுகளில் முதன்மை தாங்கியிருந்த மீவாரின் தலைவரான

ராணு சங்காவின் கீழ் இருந்த இந்து இராச்சியம். அவரது பாட்டனர் ராணு கும்பா (Rana Kumbha) என்பவர் 1419, 1469ஆம் ஆண்டுகளுக்கிடையில், முஸ்லீம் இராச்சியமாக இருந்த மாளவத்தை சின்னபின்னமாக்கினர்; அதை மீண்டும் நிலைநாட்டக் குஜராத்து செய்த முயற்சியையும் முறியடித்தார். ராணு சங்காவைப்பற்றி ஷெக் ஸெய்ன் (Shaik Zain) என்பவர் பின் வருமாறு கூறுகிறார். 'தில்லி, குஜராத்து, மாளவம் போன்ற மாபெரும் இராச்சியங்களில் இவருக்கு நிகராக ஓர் அரசனும் இல்லை' பாபர் ராணுவுக்காகவே லோடியின் சக்தியை சிதறடிப்பார் என்றும், அதற்குப்பின், தைமூர் செய்தது போலவே பின் வாங்கிக் கொள்வார் என்றும் அவர் நம்பினர். ஆனல் பாபர் தில்லியிலேயே குடியேறியதும் ராணு அவரைத் தாக்கத் தொடங்கினர்.

பெரும்படை ஒன்றைத் தம் தலைமையின் கீழ் ராணு திரட்டினர். இப்படையில் எண்பதினயிரம் குதிரைவீரர்களும், ஐந்நூறு போர் யானைகளும் இருந்தன; நூற்றிருபது படைத் தலைவர்களும் இருந்தனர். சம நிலையற்ற போரில் ஈடுபட வேண்டியிருந்த நிலையைக் கண்டு பாபரின் சிறுபடை உணர்ச்சி தளர்ந்து நின்றது. 'பெரியவர்களிடையிலும் சிறியவர்களிடையிலும் பொதுவாக அவலமும் பீதியும் நிலைத்திருந்தன'. இந்த நம்பிக்கையற்ற நிலையை ஒழிப்பதற்காக பாபர் தன் கூடாரத்தை வலுப்படுத்தினர்; மது அருந்தும் பழக்கத்தை வெளிப்படையாக கைவிட்டு உணர்ச்சி தரும் முறையில் அவர்களுக்கு அறிவுரை கூறினர். 'எல்லாம்வல்ல இறைவன் நமக்கு அருள் பாவித்துள்ளார். இப்பொழுது இத்தகையதோர் நெருக்கடியில் நம்மை வைத்துள்ளார். நாம் போர்க்களத்தில் தோல்வியுற்ருல் உயிர்த் தியாகிகளின் மரணத்தைப்பெறுகிருேம்; உயிர் தப்பினல் நாம் வெற்றியுடன் எழுகிருேம். இந் நிலையில் நாம் இறைவனின் வழியில் செல்லாதவர்களைப் பழிவாங்குபவர்களாவோம். இதனல் நாமெல்லோரும் இப்போரில் எதிரிக்குப் புறம் காட்டமாட்டோம் என்று ஒருமுகமாக இறைவனின் திருவாய்மொழியின் மீது சூளுரைப்போம்'.[1] முன்னேறுவதற்கு ஆணையிடப்பட்டது. ஆக்ராவின் சற்று ஏறக்குறைய மேற்கிலிருந்த கான்வா (Kanwa) என்ற கிராமத்துக்கருகில் 1527 மார்ச்சு 16ஆம் நாள் போர் நிகழ்ந்தது. பானிப்பட்டு வெற்றியைப் பெறுவதற்குக் கையாளப்பட்ட சூழ்ச்சிகளெல்லாம் இங்கே மீண்டும் கையாளப்பட்டன. அதே விளைவுகளும் ஏற்பட்டன. திறன்மிக்க ராணு போர்க்களத்திலிருந்து தப்பி ஓடிவிட்டபோதிலும் இந்துப் படையின் தோல்வி முழுமை

1 Erskine, vol. ii, p 286.

யானதாகவும் முடிவாகவும் இருந்தது. ராணு 1529-ல் உயிர் நீத்தார்.

**காக்ராப்போர் (Battale of Ghagra)**

மழைகாலத்துக்குப்பின் பாபர் சந்தேரியைத் (Chanderi) தாக்குவதற்குச் சென்றார் அக்கோட்டை 'மிக்க வலிமைவாய்ந்த' பிற மதத்தவரான மெதினிராவ் (Medini Rao) என்பவரின் கையில் இருந்தது. அது 1528, ஜனவரி 29ஆம் நாள் தகர்க்கப் பட்டது. படையும் ஒழித்துக்கட்டப்பட்டது. பீஹார், வங்காளம் ஆகியவற்றின் ஆப்கானியத்தலைவர்கள் அடுத்துத் தாக்குண்டனர். அவர்கள் 1529-ல் கோக்ரா (Ghagra) நதிக்கரையோரத்தில் பாட்னுவுக்கு மேல் பக்கத்தில் அந் நதியும் கங்கையும் சந்திக்கு மிடத்தில் தோல்வியுற்றனர்.

**பாபரின் இறப்பு**

பாபர் 1530 டிஸம்பரில் உயிர் நீத்தார். பதக் ஷான் (Badakshan) ஆப்கானிஸ்தான் (Afghanistan), பஞ்சாப், தில்லி, பீஹாரின் திறந்த பள்ளத்தாக்குகள் ஆகியவையும் பியாறு (Biyana), ரான்தம்போர் (Ramthambhor), குவாலியர் (Gwalior), சந்தேரி (Chanderi) என்ற அரண்கள் சூழ்ந்திருக்கும் பகுதிவரை தெற்கே பரவி இருந்த ஆட்சிப் பகுதியும் அடங்கிய ஒரு பெரும் பேரரசை பாபர் விட்டுச் சென்றார். பேரரசின் பெரும்பாகம் இந்து நதிக்கப்பால் அமைந்திருந்தது. அதனது படைவீரர்கள் அதனுடைய எல்லைகளுக்கப்பாலிருந்து வந்தனர்; பாபரின் மீது அவர்கள் கொண்டிருந்த தனிப்பற்றுத்தான் அவர்களை ஒன்று பட்டு இருக்கும்படி செய்தது. 'ஏழு அல்லது எட்டுத் தலைவர் களைக் கொண்டு ஒழுங்கான அல்லது உறுதியான எதையும் செய்ய முடியாத ஒரு நாட்டில்' அது போன்ற தளைகள் எவ்வளவு பலமற்றிருந்தன என்பதற்கு பாபரின் வாழ்க்கைக் குறிப்பு களிலிருந்து எடுககப்பட்ட ஒரு பகுதி சான்றளிக்கிறது. குறிப் பிடப்பட்ட ஏழு அல்லது எட்டுத் தலைவர்கள் பேகம்முகளே யாவர் (Begam) ஒவ்வொரு பேகமும் ஒவ்வொரு குடும்பத்தின் கேந்திர மாவார். ஒவ்வொரு குடும்பமும் பாபரையோ அல்லது அவருடைய பிள்ளைகளையோ ஒழிக்கும் முயற்சியில் ஈடுபட் டிருந்தது. பேரரசு ஆற்றல்மிக்க நாடுகளால் சூழ்ந்திருந்தது. அதனது இந்தியப்பகுதியும் கூட சிற்றரசர்களின் நாடுகளால் சூழப்பட்டிருந்தது. மாவட்டங்கள், கொடையளிக்கப்பட்டவர்கள், குடும்பத்தலைவர்கள், அல்லது இனத்தலைவர்களின் கட்டுப்பாடற்ற ஆதிக்கத்திலிருந்ததனல் நிர்வாகம் ஒரு தன்மையற்றிருந்தது. துணிகரச் செயல்களைப் புரியும் அந்நிய குழுவின் தலைவர் என்ற

நிலையில் பாபருக்கும் சில முக்கிய பகுதிகளையே பெற்றிருக்க முடிந்தது; மற்ற இடங்களில் இந்து பாமர மக்களின் கீழ்ப் படிவான நிலையையே அவர் நம்பி இருக்கவேண்டி இருந்தது.

## பாபரின் குணவியல்பு

பாபரின் உண்மை மனிதத்தோற்றம் அவரது வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்து நமக்குப் புலனாகிறது. இவை முதலில் துருக்கி மொழியில் எழுதப்பட்டுப் பின் ஹுமாயுனாலேயே பகர்ப்பு செய்யப்பட்டன. அக்பர் இட்ட ஆணையின்படி கான்கானால் பாரசீகத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. சிறந்த ஆங்கிலப் பதிப்புகளை எர்ஸ்கின் (Erskin) லெய்டன் (Luyden) என்பவர்கள் 1826ஆம் ஆண்டிலும் பிறகு திருமதி ஏ. எஸ். பெவரிட்ஜ் (Mrs. A. S. Beveridge) என்பவரும் வெளியிட்டுள்ளனர்; மிக்க விருப் பத்திற்குரிய, துரிதமான, கலை தோய்ந்த ஆளுமையாளராக பாபர் தோற்றமளிக்கிறார். இவ்வாளுமையினாலேயே பனிக்காலத்தில் இந்து குஷ் மலையின்மேல் கரடுமுரடாகத் தம்மைப் பயன்படுத்திக் கொள்ளவும் துருக்கிய மொழியில் மிகச் சிறந்த செய்யுள்களை எழுதவும் முடிந்தது. இவரது ஆர்வம் இவரைப் பின்பற்றுபவர் களுக்கு உற்சாகமளித்தது. அவர்களோடு சேர்ந்து இவரும் இன்னல்களையும் அனுபவித்தார்; சிறந்த பூங்காக்களையோ சிறந்த மதுவையோ பாராட்டுவதனால் உண்டாகும் மகிழ்ச்சியையும் பெற்றார். இந்தியா பாபருக்கு இறுதிவரை கவர்ச்சியற்ற நாடா கவே இருந்தது. ஏராளமான செல்வத்தைக் கொண்டிருந்தனால் தான் அது மகிழ்ச்சியளித்தது. 'வெகு அண்மையில்தான் அவர்கள் எனக்கு ஒரே ஒரு முலாம் பழத்தைக் கொண்டுவந் தார்கள்; அதை அறுக்கும்பொழுது ஒரு தனிமையுணர்ச்சி என்னை மேற்கொண்டது; அதனோடு நான் எனது தாய்நாட்டிலிருந்து நாடு கடத்தப்பட்டவன் என்ற உணர்ச்சியும் என்னை மேற்கொண்டது. அந்நிலையில் அதை அருந்தும்பொழுது என்னால் கண்ணீர் விடாமல் இருக்க முடியவில்லை.'

## ஹுமாயூனின் பொறுப்பு

இராணுவ பலத்தினால் அடக்கியாளப்பட்டு வந்ததும் வலுப் படுத்தப்பட்ட சிவில் நிர்வாகமன்றியும் இருந்த ஒரு பேரரசை பாபர் விட்டுச் சென்றார். வட இந்தியாவின்மேல் ஏறக்குறைய முழு ஆதிக்கத்தைப் பெற்று, உறுதியாக அமர்ந்திருந்த ஒரு வமிசத்தை நிலைநாட்டுவதற்காக அவருடைய சந்ததியினர் நிகழ்த் திய போர்கள் 1530-ல் அவர் இறந்ததிலிருந்து 1576-ல் அக்பர் சிம்மாசனம் ஏறி இருபது ஆண்டுகள் முடியும்வரை நடந்துகொண் டிருந்தது. ஹுமாயூன் 1530-ல் இருபத்துமூன்று வயதடைந்திருந்

தார்; பதக்ஷானின் கவர்னராக பயிற்சிப் பணியாற்றிருந்தார். திறமையற்றவராக இல்லாவிடினும், பல துறைகளிலும், தேர்ச்சி பெற்ற பண்புடையவராக இருந்தபோதிலும், முழுநிறைவு பெற்ற அவரது தந்தையின் வலிமையளிக்கும் சக்தியை அவர் பெற்றிருக்க வில்லை. அவர் அவரது பிரபுக்களின் பற்றுதலை நீடித்துப் பெற முடியவில்லை. அவருடைய மற்ற சகோதரர்களின்மீது பிரபுக்கள் அவர்களுடைய கண்ணோட்டத்தைச் செலுத்தினர். சகோதரர் களின் மூத்தவரான கம்ரான் (Kamran) பாபரின் மரணத்தின் பொழுது காபூல், காந்தாரம் ஆகியவற்றின் பொறுப்பை ஏந்தி யிருந்தார்; பிறகு மிக வஞ்சகமாக பஞ்சாப்பையும் தம் உடைமை களுடன் இணைத்துக்கொண்டார். அபினி அருந்தும் பழக்கத் திற்கு அவர் அடிமையாகி இருந்தது அவருடைய தோல்வியை ஓரளவு விளக்குகிறது.

## குஜராத்துடனும் ஷேர்ஷாவுடனும் போர்

ஹுமாயூன் 1535-ல் குஜராத்தின்மீது ஒரு சிறப்புமிக்க படை யெடுப்பு நடத்தினர். வலிமை பெற்ற சாம்பனேர் (Champaner) அரணை (பரோடாவுக்கு வடகிழக்கில்) ஏணியின் உதவிகொண்டு ஏறிச் சிதறடைக்கும் குழுவைத் தோற்றுவித்துத் தம் சொந்த வலி மையை அறியச் செய்தார். இதுபோன்ற துணிகரத்தாக்குதலை நீடித்துச் செய்யமுடியவில்லை. 'ஹுமாயூன் பேரரசர் ஆக்ராவில் ஓர் ஆண்டு தங்கியிருந்து இன்பத்தில் மூழ்கியிருந்தார்' என்று அவருடைய நிகழ்ச்சிக் கோப்பாளர் குறிப்பிடுகிறார். அக் காலத்தின் இறுதியில் மாளவமும் குஜராத்தும் இவர் கைவிட்டுச் சென்றன.

அதற்கிடையில் ஷேர்ஷாசூர் (Sher Shah Sur) என வழங்கி வந்த ஆப்கானியத் தலைவர் தெற்கு பீஹாரில் அவருடைய ஆதிக் கத்தை உறுதிப்படுத்திக்கொண்டிருந்தார். ஹுமாயூன் 1537-ல் ஷேர்ஷாவை எதிர் நோக்கிச் சென்றார். ஹுமாயூன் சுனரைக் (Chunar) கைப்பற்றுவதில் நெடுங்காலத்தை செலவிட்டதனால் ஷேர்கான் கௌரையும் (Gaur) அதனது ஏராளமான செல்வத் தையும் கைப்பற்றி அதனைக் கொண்டு தப்பித்துக்கொள்ளவும் முடிந்தது. அப்பொழுதுதான் ஹுமாயூன் கௌரை நோக்கி முன்னேறிச் சென்றார். தம் தளத்திலிருந்து முன்னூற்றைம்பது மைல் தூரத்தில் உள்ள கௌரில் வீண் இன்பங்களில் இவர் மூழ்கிப் பல மாதங்களை வீணாக்கினர். பேரரசரின் சகோதரரான ஹின்டால் (Hindal) செய்திப் போக்குவரத்துப் பகுதியில் தம் தளத்தைக் கைவிட்டபொழுது ஷேர்கான் அவர் பரப்பி இருந்த வலையை மூடுவதற்கு முன்னேறிக்கொண்டு கங்கை நதியோரத்தி

லுள்ள சௌஸா (Chausa) என்ற இடத்தில் ஹுமாயூனை மிகத் தீவிரமாகத் தோற்கடித்தார். ஏறக்குறைய ஓர் ஆண்டுக்குப்பின் 1540 மே மாதத்தில் ஷேர்கான் மீண்டும் ஹுமாயூனை கானோஜுக்கு (Kanauj) எதிர்புறத்தில் இன்னும் தீவிரமாகத் தோற்கடித்தார்; அதற்குப் பின் லாகூர்வரை மொகலாயர்களைத் துரத்திக் கொண்டு சென்றார். அவ்விடத்திலும் ஹுமாயூனின் சகோதரர்கள் தமது சுயநலப் பொறாமையையே வெளிப்படுத்தினார்கள். ஹுமாயூன் வீடின்றி, முதலில் சிந்துவிலும், பிறகு மார்வாரிலும் (Marwar) இறுதியில் மீண்டும் சிந்துவிலும் சுற்றித்திரிந்துகொண்டிருந்தார். அவரது துயர்மிக்க நிலையில் அவருடைய மகனை அக்பர் உமர்காட் (Umarkot) என்ற இடத்தில் 1542 நவம்பர், 23ஆம் நாளில் பிறந்தார்.

காந்தாரத்திலிருந்த அவரது சகோதரரின் படைகளிடமிருந்து ஹுமாயூன் மயிரிழையில் தப்பித்துக்கொண்டு 1544-ல் பாரசீகத்தை அடைந்தார். ஷா தமஸ்ப் (Shah Thamasp) என்பவர் அவருக்குத் தஞ்சம் அளித்தார். ஷாவின் முன்னிலையில் தம்மை ஒரு ஷியா என்று அறிவித்துக் கொள்வது நலம் என்று அவர் கருதினார். ஆனாலும், மிக்க தயக்கத்திற்குப் பின்பும், காந்தாரம் கைப்பற்றப்பட்டால் அதை ஷாவுக்கு அளித்துவிடுவதாக வாக்குறுதி செய்ததற்குப்பின்புதான் ஷா இராணுவ உதவியளித்தார். அவ்வுதவியைக் கொண்டு 1545-ல் காந்தாரம் கைப்பற்றப்பட்டது—வஞ்சகமாக மொகலாயர் அதைத் தம் கையிலேயே வைத்துக்கொண்டிருந்தார்—அங்கிருந்து ஹுமாயூன் காபூலைத் தமது ஆதிக்கத்தில் வைத்திருந்த கம்ரானைத் தாக்கி வெற்றி பெற்றார். தகுதியற்றவருக்கு காட்டப்பட்டதும் உணர்ச்சித் ததும்புவதுமான தாராளத் தன்மையை மிருகத்தனம் வாய்ந்த கம்ரானுக்குக் காட்டியதனால் போர் மேலும் சில ஆண்டுகள் நீடித்து நடந்தது. இறுதியில் 1533-ல் பிரபுக்கள் அவரது சகோதரரைக் குருடராக்கும்படி கட்டாயப்படுத்தினர்.

## இரண்டாம் முறை ஆட்சி நடத்தலும் ஹுமாயூனின் இறப்பும்

அவருடைய சகோதரனின் எதிர்ப்பிலிருந்து மீட்சி பெற்றதும் ஹுமாயூன் இந்தியாவின்மீது படையெடுப்பு நடத்தினார். இங்கே நான்கு சூர் உரிமையாளர்கள் அரசுக்காகப் போட்டியிட்டுக் கொண்டிருந்தனர் அவர் 1555 ஜூலையில் தில்லியையும் ஆக்ராவையும் கைப்பற்றினார். இவ்விதமாக அவருடைய தந்தையின் தலைநகரங்களை அவர் மீண்டும் பெற்றார். ஆனாலும் வெல்லப்பட்ட நாடுகளை வலுப்படுத்தவோ ஒழுங்குற்ற அரசாங்கத்தை நிறுவுவதற்கோ அவரால் முடியவில்லை. அவர்

தேவைக்குரிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருக்கும்பொழுதே தில்லியிலிருந்த அவரது நூலகத்தின் படிக்கட்டிலிருந்து தற்செயலாகச் சறுக்கி வீழ்ந்ததனால் 1556 ஜனவரியில் இடர் நிறைந்த தமது உயிரை நீத்தார். இரண்டாம் முறை நடந்த இவரது ஆட்சி ஏழு மாதங்களே நீடித்திருந்தது.

## ஷெர்ஷாவின் ஆட்சி

ஹுமாயூனின் துணிகரச் செயல்கள் நிறைந்த அனுபவங்களின் சுருக்கத்தை இடைவிடாக் கதையாக எழுதுவதற்கு முடிந்தது. அவருடைய ஆப்கானியப் பகைவர்களின்மீது இப்பொழுது கவனத்தைச் செலுத்தவேண்டும்.

ஷெர்ஷாவின் பாட்டனர் சுல்தான் புகலூலின் (Sultan Buhlul) காலத்தில் அவரது ஊதியத்தில் நுழைவதற்கு எறும்புகளைப் போலவும் 'வெட்டுகிளிகளைப் போலவும்' வந்த ஆப்கானியர்களுள் ஒருவராவர். அவருடைய தந்தையின் குடும்ப நலன்களை முன்னேற்றிக்கொண்டு முதலில் பஞ்சாபிலும் பிறகு ஐந்நூறு குதிரை வீரர்களைக்கொண்டு ஜான்புரியிலுள்ள (Jaunpur) சாசாராம் (Sasaram) என்ற பர்கானாவின் (Pargana) ஜாகீர்தாராகவும் ஜமால்கான் (Jamalkhan) என்பவரின்கீழ் பணியாற்றினர். ஷேர் ஷா முதலில் 1527-ல் பாபரின் பணியிலும் பிறகு ஜலால் கான் லோஹானி (Jalal Khan Lohani) என்பவரின் பணியிலும் நுழைவதற்குமுன் அவருடைய தந்தையின் பர்கானாவை கவனித்துக்கொண்டு தேவையான நிர்வாகப் பயிற்சி பெற்றார். 1533ஆம் ஆண்டுவரை லோஹானி உடைமைகளை ஜலால்கானிடமிருந்து இவர் பறித்துக்கொண்டார். இராணுவப் படையினருக்குச் சம்பளமளிக்கும் பதவியில் நேர்மையாகப் பணியாற்றி இவர் புகழ் பெற்று வலிமைமிக்க ஒரு படையைத் திரட்டிக் கொண்டார். ஹுமாயூன் குஜராத்தில் சுறுசுறுப்பாக படையெழுச்சியில் முனைந்திருக்கும்பொழுது ஷெர்கான் வங்காளத்திலிருந்து நிலப்பகுதிகளையும் மீட்புப் பணத்தையும் பெற்றுக்கொண்டிருந்தார். பேரரசர் கிழக்குப் புறத்திற்கு அவரது கவனத்தைத் திருப்பியபொழுது காலம் மீறிவிட்டது. மொகலாயர்கள் ஓட்டம் பிடித்ததற்குப் பிறகு ஷெர்ஷா அவரது இராச்சியத்தை வலுப்படுத்திக் கொண்டார்; பஞ்சாபிலுள்ள ரோடாஸ் (Rhotas) என்ற புதிய அரணைக்கைப்பற்றி கக்கார்களை (Gakkars) அடக்கினர்; வங்காள மாகாணத்தைச் செப்பம் செய்து அதைப் பல பிரதிநிதிப் பகுதிகளாகப் பிரித்து சுதந்திரத்திற்கான முயற்சிகள் செய்வதைத் தடுத்தார்; இராசபுதனம், மாளவம், பந்தேல்கண்ட் ஆகிய பகுதிகளை அடக்குவதற்கு பலத்த முயற்சிகளை எடுத்தார்.

ஆனாலும், மத்திய இந்தியாவில் (Central India) உள்ள ரெய்சின் (Raisin) என்ற இடத்தைச் சேர்ந்த படையை வஞ்சகமாகப் படு கொலை செய்து தம்மையே இகழ்ச்சிக்குள்ளாக்கிக் கொண்டார். பந்தேல்கண்டிலுள்ள கலஞ்ஜார் (Kalanjar) என்ற இடத்தை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தபொழுது அவர் 1545-ல் கொல்லப் பட்டார்.

## ஷெர்ஷாவின் ஆட்சிமுறை

ஷெர்ஷா மதவெறியுற்ற, கொடுமைமிக்க, ஆப்கானிய கூட்டத் தின் திறமை வாய்ந்த தலைவராக மட்டுமன்றி அதற்கும் மேம்பட் டிருந்தார். இவருக்குக் கட்டடக் கலையில் சிறந்த பற்றூர்வம் இருந்தது. பீஹாரில் சாசாராம் என்ற இடத்தில் அவரே அவருக்காகக் கட்டிக்கொண்ட மேன்மை ததும்பும் கல்லறையில் அவ்வார்வத்தைத் தெளிவாகக் காணலாம். இவர் தில்லியில் ஒரு புதிய நகரத்தையும் பஞ்சாபில் ஓர் இரண்டாம் ரோட்டா ஸையும் கட்டினார். சிவில் அரசாங்க முறையிலும் அவரது திறமையும் தகுதியும் தென்பட்டன. அக்பர் விருத்தி செய்த அலாவுத்தீன் கில்ஜியினது நிறுவனங்களை ஓரளவு அடிப்படை யாகக்கொண்டு சீர்திருத்தங்களைக் கொண்டுவந்தார்.

இவர் வலிமைபெற்ற ஒரு மத்தியப் படையைக் கொண்டு அவரது அதிகாரத்தை நிலைத்துவைத்திருந்தார். அப்படை $1\frac{1}{2}$ இலட்சம் குதிரை வீரர்களையும் இருபத்தைந்தாயிரம் காலாட்படைகளையும், ஐயாயிரம் யானைகளையும் கொண்டிருந்தது. எல்லோரும் இனத்தலைவர்கள் மீதன்றி அவர்மீதே பற்றுக் கொண்டிருக்கும்படி செய்தார். அவரே வீரர்களை நியமிப் பதையும், மேற்பார்வையிடுவதையும், அவர்களுக்கு ஊதியமளிப்ப தையும் செய்து வந்தார். அதேபோல தல பிரதிநிதிகளுக்கு அல்லது படைத் தலைவர்களுக்கு எதிராக போர்வீரர் செய்யும் முறையீடுகளை அவருக்கு மிக எளிதில் கிடைக்கும்படியும் செய்தார். அரசாங்க ஊதியத்திலிருக்கும் குதிரைகளைச் சூடு போட்டு மோசடியான பட்டியல்களைத் தயாரிப்பதைத் தடுத்தார்.—இம்முறையை அக்பரும் பின்பற்றினர்—எல்லைகளிலிருந்த படை களின் சூடுக்குறிகளைச் சோதனை செய்வதற்காக 'முன்சீப்புகளை' (munsifs) நியமித்தார். நில வருமான முறையிலும் அதாவது நிலத்தின் அளவையை அடிப்படையாகக்கொண்டு வரிவிசித்தல் முறையில் அவர் அக்பரை முந்தியிருந்தார். மேலும் சிலஆண்டுகள் அவர் உயிருடன் வாழ்ந்திருப்பாரேயாயின் அக்பரின் புகழ்பெற்ற அமைச்சரான ராஜா தோடர் மல்லின் (Raja Todar Mal) புகழுக்கு நிகராக இவருடைய புகழ் இருந்திருக்கக்கூடும். தளர்ச்சியற்ற

தம் சொந்த மேற்பார்வையின்கீழ் ஒரு கரடுமுரடான நீதி வழங்கப்பட்டுவந்தது. ஏராளமான அபராதங்களை விதித்துத் தங்களுடைய எல்லைகளுக்குள் செய்யப்பட்ட குற்றங்களைக் கண்டு பிடிக்கும் பொறுப்பைக் கிராமங்களே ஏற்கும்படி செய்தார். ஒருவருடைய அந்தஸ்து அல்லது பதவியின் அடிப்படையில் எவரும் சலுகைகளை எதிர்பார்க்க முடியாது. உழவருக்கு எவ்விதமான தீங்கும் இழைக்கமுடியாது. அசோகர் (Asoka), ஹர்ஷர் (Harsha) ஆகியவர்களைப்போல ஷெர்ஷாவும் 'எப்பொழுதும், சுறுசுறுப்பாக இருத்தல் பெரியவர்களுக்கு உகந்ததாகும்' என்ற பழமொழியின் கருத்தைப் பின்பற்றினர். அவரது காலம் சமயக்கடமைகளையும் அரசாங்கக் கடமைகளையும் சார்ந்த மிகக் கடுமையான விதிகளை நிறைவேற்றுவதில் கழிந்தது. பெருஞ் சாலைகளைக் கட்டியும்; மரங்களை நட்டும், கிணறுகளை வெட்டியும் சுற்றுலா செய்பவர்கள் தங்குவதற்காக ஓய்வுபெறும் விடுதிகளைக் கட்டியும் (Sarais) மாபெரும் இந்து அரசர்களின் மேற்கோளை இவரும் பின்பற்றினர். நாணயங்களைச் சீர்திருத்தி, மேன்மையில் வேலைப்பாட்டிலும் மிக மேன்மையாக இருந்த வெள்ளி நாணயங்களையும் அச்சிட்டார். இதையெல்லாம் அவரது அமைதியற்ற ஐந்து ஆண்டு ஆட்சிக் காலத்தில் செய்து முடித்தது சிறப்பு மிக்கதாகும்.

**இஸ்லாம் ஷா; முகம்மது ஆதில் ஷா (Islam Shah; Muhammed Adil Shah)**

ஷெர்ஷா இறந்ததும் பிரபுக்கள் அவருடைய இரண்டாம் மகனை ஜலால் கானை (Jalal Khan) அரசராகத் தேர்ந்தெடுத்தனர். அவர் இஸ்லாம் ஷா என்ற பெயரைப் பெற்று சிம்மாசனம் ஏறினர். இப்பெயர் அடிக்கடி தூய்மை இழந்து சலிம் ஷா (Salim Shah) என்று எழுதப்படுகிறது; உச்சரிக்கவும் படுகிறது. அவருடைய சிறிது கால, அவலமுற்ற ஆட்சி 1553-ல் முடிவடைந்தது. அவர் அநேக சட்டங்களை வெளியிட்டாலும் அவருடைய தகப்பனாரின் திறமையை அவர் பெற்றிருக்கவில்லை. வாரிசுரிமைக்காக போர் நிகழ்ந்ததற்கும் பின் இஸ்லாம் ஷாவின் வைப்பாட்டியின் சகோதரர், முகம்மது ஆதில் ஷா (Muhammad Adil Shah) அல்லது அதலீ (Adali) என்பவர் வலிந்து சிம்மாசனத்தைக் கைப்பற்றிக்கொண்டார். திறனற்றவராக இருந்த இவர் அரசாங்கப் பொறுப்பை ஹேமு (Hemu) என்ற சாதுர்யமிக்க இந்து வாணிகர் ஒருவரிடம் ஒப்படைத்தார். ஷெர்ஷாவின் இரு மைத்துனர்கள் இறமை உரிமைக்குப் போட்டியிட்டனர். இவர்களுடைய வரலாறு அடுத்த அதிகாரத்தில் அளிக்கப்படும்.

## காலவரையறைப் பட்டியல்

| | |
|---|---|
| முதல் பானிப்பட்டு யுத்தம் ... ... ... | 21; ஏப்ரல், 1526 |
| பாபர் பாதுஷா என்று பிரகடனம் செய்யப் படுதல் ... | 27; ஏப்ரல், 1526 |
| கானுவாப் (கான்வா) போர், ராணாசங்கா வின் தோல்வி ... | மார்ச், 1527 |
| கக்ரா நதிப் (கோராப்) போர் ... ... | 1529 |
| பாபரின் இறப்பு; ஹுமாயூன் அரியணை யேறுதல் ... | டிஸம்பர், 1530 |
| வங்காளத்தில் ஹுமாயூன் ... | 1538 |
| சௌஸாவில் ஹுமாயூனின் தோல்வி ... | ஜுன், 1538 |
| கானோஜில் ஹுமாயூனின் இறுதித் தோல்வி ... | மே, 1540 |
| உமர்காட்டில் அக்பரின் பிறப்பு ... ... | 23, நவம்பர், 1542 |
| ஷெர்ஷாவின் இறப்பு; இஸ்லாம் ஷா அரியணையேறுதல் .. | 1545 |
| இஸ்லாம் ஷாவின் இறப்பு; முகம்மது ஆதில் ஷா (அதலீ) அரியணையேறுதல்; இதர வாரிசுகள் ... | 1553-4 |
| ஹுமாயூனின் மீட்சி ... ... ... | ஜுன் 1555 |
| ஹுமாயூனின் இறப்பு ... ... ... | ஜனவரி, 1556 |

## ஆதாரங்கள்

பாபரைப் பற்றிய மிக முக்கிய மூல ஆதாரம் அவர் எழுதிய நூலான வாழ்க்கை குறிப்புகளாகும் (Memoris) இதை லேடன், எர்ஸ்கின் என்பவர்கள் 1826லும் திருமதி பெவரிட்ஜ் என் பவரும் மொழி பெயர்த்துள்ளனர். 1832-ல் ஸ்டிவர்ட் (Stewart) என்பவரால் மொழி பெயர்க்கப்பட்ட ஜௌஹாரின் வாழ்க் கைக் குறிப்புகள் (Memoris of Jauhar) ஹுமாயூனின் சம காலத்துக்குரியவை. அக்பரின் சிற்றன்னையான குல்பதன் பேகம் என்பவருடைய வாழ்க்கையும் வாழ்க்கைக் குறிப்புகளும் (Life & Memoirs of Gulbadan Begam) என்ற நூலை திருமதி ஆர். ஏ. எஸ். பெவரிட்ஜ் (R.A.S.) மொழி பெயர்த்துள்ளார். (1902) பய்யஸித் பியாத் (Bayazzid Biyat) என்பவரின் வாழ்க் கைக் குறிப்புகள் (Memoirs of Bayazzid Biyat) J.A S.B.-பகுதி, (1898), பக்கம் 296-ல் நகல் செய்யப்பட்டுள்ளது. இக் காலத்துக் குரிய மற்ற முக்கிய பாரசீக ஆதாரங்களாவன: அபுல்பாஸலின் அக்பர் நாமா (Abul Fazal Akbar nama) எச். பெவரிட்ஜ் (H. Beveridge) என்பவராலும் மற்றும் பல ஆசிரியர்களாலும் எல்லியட், டௌசன் இயற்றியுள்ள IV, V தொகுதிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மேலும், ஃபெரிஷ்டா எழுதிய நூலை பிரிக்ஸ் (Briggs) என்பவர் மொழி பெயர்ப்பு செய்துள்ளார். Erskine's History of India under Babar and Humayan என்ற நூல் பெரும்பாலும் பயன் தரும் நூலாகும். Lane Poole's

Babar in Rulers of India, *1898* என்ற நூல் சிறப்பாக எழுதப்பட்டுள்ள ஒரு சிறு நூலாகும். Fernand Grenard Babar, First of the Mugals, என்ற நூல் White என்பவரும் R. Glaenzer என்பவரும் மொழி பெயர்த்து திருத்தி அமைத்தது. அந் நூலும் ஒரு சிறந்த நூலாகும். சூர் வமிசத்தின் சுருக்கம் E. Thomas-Chronicles of the Pathan Kings of Delhi (*1871*) என்ற நூலில் காணலாம். சூர் அரசர்களின் வரலாறு திறனாய்வோடு விவரமாக ஆராய வேண்டியிருக்கிறது பேராசிரியர் கே. கானுங்கோ (Professor K. Qanungo) எழுதிய ஷெர்ஷாவின் வாழ்க்கை வரலாறு (Sher Shah-A Qanungo) *1921*-ல் கல்கத்தாவில் வெளியிடப்பட்டது. J. B. O. R. S.-1934-ல் Paramatma Saran எழுதியுள்ள ஷெர்ஷா பிறந்த இடமும் தேதியும் (The Date and place of Sher Shah's birth) என்ற கட்டுரையையும் பார்க்க. இக் காலத்துக்குரிய மிக அண்மைக்கால நூல் Dr. Ishwari Prasad எழுதிய Life & Times of Humayun *1935*, என்பதாகும்.

## 2. இந்தியாவை நோக்கிய ஐரோப்பியர்களின் முந்திய கடற்பயணமும் அவர்களின் குடியேற்றங்களும். 1600ஆம் ஆண்டிலிருந்து 1708ஆம் ஆண்டுவரையில் கிழக்கிந்தியக் கம்பெனி

**முகலாயப் பேரரசும் வெளிநாட்டவர்களும்**

கடற்கரை யோரங்களில் குடியேறிய ஐரோப்பியர்களின் செல்வாக்கு இந்திய அரசியலில் பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து உணரப்பெற்று வந்தமையால், அக்பரால் நிலை நாட்டப் பெற்று அவருடைய மரணத்திற்குப்பின் ஒரு நூற்றாண்டு நிலை பெற்றிருந்த முகலாயப் பேரரசின் விரிவான வரலாற்றை ஆராயுமுன் இந்தியாவில் மேலைய நாடுகள் இடம் பெற எடுத்துக் கொண்ட முயற்சிகள் முழுவதையும் சுருக்கமாக எழுதுவது விரும்பத்தக்கதாகும்.

**இந்தியாவின்மீது அராபியர்கள் முழு உரிமை பெற்றிருத்தல் :**

கிறித்துவ சகாப்தத்தின் முதல் மூன்று நூற்றாண்டுகளில் இந்தியாவிற்கும் ரோமானிய பேரரசிற்கும் இடையில் நிலைபெற்றிருந்த நிலவழியாகவும் கடல் வழியாகவும் நடந்த வணிகம் எவ்வளவுபரவலாக இருந்ததென்பதையும் அவ்வணிகம் எவ்விதம் நான்காம் நூற்றாண்டில் நின்றதென்பதையும் ஐந்தாம், ஆறும் நூற்றாண்டில் எவ்விதம் ஓரளவு உயிர்ப்பிக்கப் பெற்றதென்பதையும் நாம் கவனித்திருக்கிறோம். ஏழாம் நூற்றாண்டில் எகிப்தையும் பாரசீகத்தையும் அராபியர்கள் கைப்பற்றியது ஐரோப்பாவிற்கும் இந்தியாவிற்குமிடையில் இருந்த நேர்முகப் போக்குவரத்தைத் திட்டவட்டமாக முடிவிற்குக் கொண்டு வந்தது. அக்காலத்திலிருந்து மேலையநாடுகளுக்குப் போய்ச் சேர்ந்த பண்டங்களெல்லாம் முஸ்லீம் வணிகர்களின் வழியாகத்தான் சென்றன. இவ்விதமாக இப்பொருள்கள் லெவென்டின் (Levant)

அங்காடிகளிலிருந்து வெனிசிற்கு மாற்றப் பெற்றன. கிழக்குப் பகுதி வர்த்தகத்தின்மீது முழு உரிமை பெற்றதனால் வெனிசு மிக்க செல்வாக்கையும் செல்வத்தையும் பெற்றது.

## ஆப்பிரிக்கக் கடற்கரையில் போர்ச்சுகீசிய புது நிலத்தேட்டம்

வெனிஸ் நகரின் செல்வத்தைக் கண்டு, பதினைந்தாம் நூற்றாண்டின், போர்ச்சுகீசிய அரசர்கள் அந்நகரின்மீது பொறாமை கொண்டு, அதன் ஆதாயமிக்க வர்த்தகத்தில் பங்குபெற தீவிர அவாக் கொண்டனர். மாலுமியெனப் பெயர்பெற்ற இளவரசர் ஹென்றி (Prince Henry, the Navigator), போர்ச்சுகலில் இருந்து இந்தியாவிற்கு நேர்முகக் கடல் வழியொன்றைக் கண்டு பிடிப்பதில் ஈடுபட்டார். 1460-ல் அவர் இறந்ததும் அவருடைய துணிவுமிக்க கப்பல் தலைவர்கள் ஆப்பிரிக்காவின் மேற்குக்கரையோரமாகப் பாயும் செனகல் (Senegal) நதியைக் கடப்பதில் வெற்றி கண்டனர். இருப்பினும் ஆப்பிரிக்காவைச் சுற்றிவரும் அருஞ்செயலைச் சாதிக்கத் தொடர்ந்து முயலவேண்டியதிருந்தது. இறுதியில் இவ்வீரச் செயலைப் பார்த்தலேமேயு டயஸ் தி நோவியாஸ் (Bartholomeu Dias de Novias) என்பார் செய்துமுடித்தார். முனைக்குத் தெற்கே நெடுந்தூரம் புயலால் துரத்தப்பட்டு இவர் இறுதியில் நன்னம்பிக்கை முனைக்கும் (Cape of Good Hope) எலிஸபெத் துறைமுகத்திற்கும் இடையில் பாதித் தொலைவில் உள்ள நிலத்தில் வந்திறங்கினார். கிழக்குக் கரையில் வடகிழக்குப் போக்கைப்பற்றி இவர் திருப்தியடைவதற்கும், நெடுங்காலமாக நாடிவந்த பாதை திறக்கப்பட்டுள்ளது என்பதைத் தாமே உறுதி செய்துகொள்ளுவதற்கும் நெடுந்தூரம் கப்பலில் சென்றார். அவர் 1488ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் (Lisbon) லிஸ்பனுக்குத் திரும்பினார்.

## வாஸ்கோடகாமா இந்தியாவை அடைதல்

பத்தாண்டிற்குப் பின் 1497ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் வாஸ்கோடகாமா நான்கு சிறிய கப்பல்களுடன் பயணம் செய்து ஆப்பிரிக்காவைச் சுற்றிவந்தார். ஜான்ஸிபாருக்கு வடக்கில் அக்கரையில் செல்வமிக்க அராபிய வணிகக் குடியேற்றங்களில் ஒன்றான மாலிந்தி (Malindi) என்ற இடத்தில், இந்தியாவிற்குக் கப்பல்களை ஓட்டிச் செல்வதற்காக அனுபவமிக்க கப்பலோட்டிகளைப் பெற்றார். 1598ஆம் ஆண்டு மே மாதம் 20ஆம் நாள் அவர் கள்ளிக்கோட்டைக்கு அருகில் வந்திறங்கினார். இந்து அரசராகிய ஜாமோரினுடைய துறைமுகம் பல நாட்டுக் கப்பல்களை வரவேற்கும் துறையாக அமைந்திருந்தது, அவருடைய செல்வச் செழிப்பிற்குக் காரணமாகும். எனவே, அவர் போர்ச்சுகீசியர்களை

வரவேற்கத் தயாராக இருந்தார். எனினும் அராபிய வணிகர்கள் தம்முடன் போட்டியிடுபர்களைத் தடுப்பதற்குத் தம்மால் இயன்றதனைத்தையும் செய்தனர். கொச்சி, கண்ணனூர் ஆகிய இடங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு வாஸ்கோடகாமா 1499ஆம் ஆண்டு ஆகஸ்டு மாத இறுதியில் லிஸ்பனை அடைந்தார்.

போர்ச்சுகீசியர் இந்நாட்டில் வந்துசேர்ந்த காலம் நல்ல காலமாகும். எகிப்தில் மாமெலூக்குகள் துருக்கியர்களின் தாக்குதலுக்கு உள்ளாக இருந்தனர். பாரசீகத்தில் ஒரு புதிய வமிசம் தன் ஆற்றலை நிலைநாட்டிக்கொண்டிருந்தது. குஜராத் மகமூத் பிகர்ஹாவின் வலிமைமிக்க பிடிக்குள்ளிருந்தாலும், வட இந்தியா மிக்க பிளவுபட்டிருந்ததுமன்றித் தக்காணத்திலும் பாமினி அரசு சிதைந்துகொண்டிருந்தது. எப்பெரு நாடும் கப்பற்படையைப் பெற்றிருக்கவில்லை; அல்லது அதுபற்றிய கருத்தும்கொண்டிருக்கவில்லை. பேரரசின் ஆணையால் தூரகிழக்கில் சீனக்கப்பற் போக்குவரத்துக் குறைந்திருந்தது. இந்தியக் கடலின் வணிகத்தைத் தம் ஆதிக்கத்திற்குள் கொண்டிருந்த அராபிய கப்பற் சொந்தக்காரர்களும் வணிகர்களும் போர்ச்சுகீசியரின் துணிவையும் ஒற்றுமையையும் எதிர்க்க முடியவில்லை.

### கள்ளிக்கோட்டையில் வர்த்தகம் முடிவடைதல்

ட காமா வெற்றியுடன் திரும்பியதும், போர்ச்சுகீசிய அரசர், பிரேசிலைக் (Brazil) கண்டு பிடித்த காப்ரால் (Cabral) என்பாரின் தலைமையின்கீழ் இன்னும் பெரியதொரு கப்பற்படையை அனுப்பிவைத்தார். அவர் அராபியர்களோடு கள்ளிக்கோட்டையில் மோதினுரெனினும், தம் பொருள்களைப் பத்திரமாக கொச்சிக்கும் கண்ணனூருக்கும் கொண்டுவந்து சேர்த்தார். போர்ச்சுகீசியர்களுக்குச் சாதகமாக அராபிய வணிகர்களை விலக்க ஜாமோரின் மறுத்தபொழுது, 1502-ல் வாஸ்கோடகாமா வர்த்தகப் பேராசையோடு (Moors) மூர்களோடு பகைமை கொண்டு தம் கண்ணிற்பட்ட அராபிய கப்பல்களின்மீது பாய்ந்து அவர்களுடன் இருந்த சச்சரவை முடித்து வைத்தார்.

### ட ஆல்மைடா (De Almeida)

முதல் பிரதிநிதியான டாம் பிரான்ஸிஸ்கோ ட ஆல்மைடா என்பவர் (1505—1509), ஜாமோரினின் பகையைக் காட்டிலும் அதிகமான ஆபத்தொன்றைச் சமாளிக்க வேண்டியிருந்தது. எகிப்தின் மாம்லூக்கிய சுல்தான் வெனிசால் தூண்டப்பட்டு, போர்ச்சுகீசியர் தம் லாபமிக்க வணிகத்தைக்கொண்டு செங்கடலில் கப்பற்படையொன்றை நிறுவி, இந்தியக் கடலில்

நுழைந்து தலையிடுவதைத் தடுக்க முயன்றார். மூர்களுக்கு எதிராகப் புனிதப்போர் நடத்துவதில் அனுபவ மிக்கவராக இருந்த ட ஆல்மைடா, இந்த ஆபத்தைத் தடுக்க, மாபெரும் கப்பற்படையொன்றோடு அனுப்பிவைக்கப்பட்டார். 1507-ல் எகிப்திய, குஜராத்தியக் கூட்டுக் கப்பற்படை ஒன்றால் போர்ச்சுகீசிய கப்பற்படையொன்று எதிர்பாராமல் தாக்குண்டு பிரதிநிதியின் மகனால் கொல்லப்பட்டாலும், ட ஆல்மைடா பகைவனை அடுத்த ஆண்டு அறவே தோற்கடித்தார். அவர் தம் வெற்றியின் சீர்மையை, 'நீங்கள் கடலில் ஆற்றல் மிக்கவர்களாக இருக்கும் வரை இந்தியாவை ஆட்சி செய்வீர்கள்; இவ்வாற்றல் இல்லையென்றால் கடற்கரையில் ஓர் அரசனைப் பெறுவதற்குக்கூட உங்களுக்கு எதுவும் உதவி செய்யாது' எனச் சுட்டிக்காட்டினார்.

### ஆல்புகர்கின் படைத் தலைமைத்திறம்

ஆல்மைடாவிற்குப் பின், கவர்னர் அந்தஸ்துப் பெற்றுப் பதவிக்கு வந்தவரான அபன்ஸோ டா ஆல்புகர்க் (Affonso de Albuquerque) மிக்க மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருந்தார். கிழக்கில் போர்ச்சுகீசியப் பேரரசு ஒன்றை நிறுவுவது அவருடைய நோக்கமாக இருந்தது. அவர் இறப்பதற்குமுன் கிழக்கு ஆப்பிரிக்காவிலும், செங்கடலுக்கப்பாலும், ஓர்முஸிலும், மலபாரிலும், மலாக்காவிலும் உள்ள தளங்களையும் இந்தியப் பெருங்கடலின் வாலகளை மூடும் எல்லாத் தளங்களையும் போர்ச்சுகீசியர்கள் பெற்று, அக்கடலில் அவர்களின் படைத் தலைமைத் திறமிக்க ஆதிக்கத்தை நிலைநாட்டும்படி செய்தார். இத்தளங்களிலிருந்து போர்ச்சுகீசியக் கப்பல்கள் வலிமையற்ற அராபியக் கப்பல்களை அச்சுறுத்திக்கொண்டிருந்தன. உள்நாட்டுக் கப்பல் போக்குவரத்துக்காக உரிமைத் திட்டமும் கப்பல் கட்டும் கேந்திரங்களின்மீது கொண்டிருந்த பிடிப்பும் நெடுங்காலமாக கடலின் மேல் போர்ச்சுகீசிய ஆதிக்கத்தை நிலைபெறச் செய்தது. செங்கடலும் பாரசீக வளைகுடாவும் போர்க்கப்பற்கள் கட்டுவதற்குத் தேவையான தேக்கு மரங்களை அளிக்கவில்லை.

### கோவாவைக் கைப்பற்றுதல்

பீஜப்பூர் சுல்தானின் இராச்சியப் பகுதிகளின் முக்கியத் துறைமுகமானதும் மாபெரும் அலெக்ஸாண்டர் காலத்திலிருந்து ஐரோப்பியரால் முதல் முதலாக நேர்முகமாக ஆளப்பட்டு வந்ததுமான கோவாவை 1510-ல் ஆல்புக்கர்க் கைப்பற்றினார். எல்லா முஸ்லீம்களும் பதவியிலிருந்து விலக்கபபட்டனர்.

மலாக்கா நறுமணப் பொருள் தீவுகள் (மணரகப் பொருள் தீவு) அல்லது மொலூக்காவிலிருந்து வந்துகொண்டிருந்த வணிகமும், சீனு, ஜப்பான் ஆகியவற்றிலிருந்து வந்த வர்த்தகமும் மலாக்கா நீரிணைப்பு வழியாகச் சென்றுகொண்டிருந்தன. மலேயாத் தீபகற்பத்தின் கரையோரத்திலிருந்த மலாக்கா நகரம், அக்காலத்தில் அதன் நல்ல, ஆனலும் ஆழமற்ற துறைமுகத்துடன் அவ்வர்த்தகத்தின் முக்கியக் கொட்டாரமாக இருந்தது. இக்காரணத்தால் 1511-ல் அதைக் கைப்பற்றியதால் எல்லையற்ற வர்த்தகத்தினமீது ஆதிக்கம் பெறமுடிந்தது. ஏனெனில், பத்தொன்பதாம் நூற்றுண்டுவரை சிங்கப்பூர் முக்கியத்துவம் பெறவில்லை, ஆல்புக்கர்க் ஒன்பதுநாள் போரிட்டு நகரிலிருந்து எதிரிகளை விரட்டினர். அது போர்ச்சுகீசியரிடம் நூற்றுமுப்பது ஆண்டு இருந்தது. 'அவர்கள் கையிலிருந்து மலாக்காவின் வர்த்தகத்தை நாம் பறித்துக்கொண்டால், கெய்ரோவும் மெக்காவும் அடியோடு அழிந்துவிடுவதன்றி, வெனிஸின் வணிகர்கள் போர்ச்சுகலுக்குச் சென்று வாங்கும் மணப்பொருள்களைத் தவிர, மற்ற எவ்வித மனப்பொருள்களையும் கொண்டுபோக முடியா'தென்ற இவரது நம்பிக்கை ஒரு சிறுகாலம்வரை பெருமளவு நிறைவேற்றப் பெற்றிருந்தது. மலாக்காவிலிருந்து இவர் மணப்பொருள் தீவுகளை நாடினர். அங்கும் வர்த்தக நிலைகளை நிறுவினர்.

## ஏடனைக் (Aden) கைப்பற்ற முயற்சி

செங்கடல் வழியாக நடைபெற்றுக்கொண்டிருந்த வர்த்தகத்தை ஒடுக்குவதற்கு ஆல்புக்கர்க் முயன்று தோல்வியுற்றூர். ஆலும் போக்குவரத்தில் ஈடுபட்டிருந்த கூட்டங்களின்மீது நடத்திய கொள்ளைகள் முன்னேறிக்கொண்டிருந்த அட்டோமனியத் துருக்கியர்களைத் தடுப்பதில் மாம்லூக்குகள் முனைந்திருந்தாலும், போர்ச்சுகீசியர் சில ஆண்டுகள் கடல்நுழை வழிகளின் மீது ஆதிக்கம் பெற்றிருக்க அனுமதித்தனர்.

## ஓர்மூஸைக் கைப்பற்றுதல்

ஆல்புக்கர்க் பாரசீக வளைகுடாவில் இன்னும் அதிகமாக வெற்றி பெற்றூர். 1515-ல் இவர் மரணமடைந்ததற்குச் சிறிது காலத்திற்குமுன் ஓர்மூஸைக்கைப்பற்றி அவ்விடத்தில் ஓர் அரணையும் கட்டினர். அச்சமயத்தில் அத்துறைமுகம் சர்வதேச வணிகக்களமாகவும் சிறப்பில் மலாக்காவிற்கு நிகராகவும் இருந்தது 1622-ல் அதைப் போர்ச்சுகீசியர்கள் தம் ஆதிக்கத்தில் வைத்திருந்தனர். அவ்வாண்டில் அவர்கள், சூரத்திலிருந்துவந்த ஆங்கிலக் கப்பல்களின் உதவியைப் பெற்ற பாரசீகப்படையொன்றால் விரட்டியடிக்கப்பட்டனர். அந்நாளிலிருந்து ஓர்முஸ்

சீர்குலைந்தது; அதன் வணிகம் அருகிலிருந்த பந்தார் அப்பாஸ் என்று வழங்கிய துறைமுகத்தைச் சென்றடைந்தது.

**இந்தியாவில் போர்ச்சுகீசியர்களின் நிர்வாகம்**

போர்ச்சுகீய மன்னர், ஆப்பிரிக்கக் கடற்கரையைக் கண்டு பிடிக்கும் முயற்சியை வலுப்படுத்தக் காரணமாக இருந்தது மன்றிப் பலத்த எதிர்ப்பையும் புறக்கணித்து வாஸ்கோடகாமாவை அனுப்பிவைத்தார். இம்முயற்சிகள் வெற்றியடைந்த போது; அரசியலையும் வர்த்தகத்தையும் தனியாக இயக்குவதற்கான பொறுப்பை மன்னர் இயல்பாகவே மேற்கொண்டார். குறிப்பாக செல்வமிக்க மாபெரும் சமய நிலையங்களின் உறுப்பினர்களுக்கும் மற்ற சமய அதிகாரிகளுக்கும் பொறுப்பாளியாக இருந்த தனிப்பட்ட அலுவலகம் ஒன்றை நிலைநாட்டியதனாலும், அதிகாரப் பிரிவினையாலும் இக்கட்டுப்பாடு தடைப்பட்டது. ஸ்பானிய நாட்டோடு ஒன்றுபட்டதனால் (1580—1560) அதிகாரிகள் மேலும் அதிகரித்தனர் எனினும் 1604-ல் நிறுவப்பட்ட கான்ஸல்ஹோ ட இந்தியா (Conselho da India) என்ற அலுவலகம் சிறந்த பணியாற்றியது. பதினேழாம் நூற்றாண்டின் நிதி நீக்கல்கள் நிருவாகத்திற்கு மேலும் குழிதோண்டின.

இந்தியாவில் அரசப் பிரதிநிதி நிருவாகத் தலைவராக இருந்தார். அவர் தம் செயலாளரையும், பிறகு மன்றம் ஒன்றையும் உடன்கொண்டு பணியாற்றினர். அவருடைய அதிகாரம் சமய அதிகாரிகளுடன் நடந்த சச்சரவுகளாலும், பதவிகளில் ஆட்களை அமர்த்துவதற்குப் பெற்றிருந்த அதிகாரத்தாலும், தன் நலனுக்காக பொருளீட்டலில் ஈடுபட்டிருந்ததாலும் சில சமயம் வலிமையற்றிருந்தது. அடுத்து முக்கியத்துவம் பெற்றவர் வேடார் டா ஃபாஸெண்டா (Vedor da Fazenda) என்பவர். அவர், வருமானத்திற்கும், கப்பற் சரக்குகளுக்கும், கப்பற் படைகளை அனுப்புவதற்கும் பொறுப்பேற்றிருந்தார். ஆப்பிரிக்காவிலிருந்து சீனாவரை இருந்த அரண்கள் வாணிகப் பேராட்களின் துணையைப் பெற்றுக் கப்பல் தலைவர்களின்கீழ் அமைந்திருந்தன. இத் தலைவர்களின் அதிகாரம் போக்குவரத்து இடையூறுகளால் பெருகிற்று. இவ்வதிகாரம் தம் தன்னலத்திற்காகவும் அடிக்கடி பயன்பட்டது. போர்ச்சுகல் கோவா ஆகியவற்றின் கட்டுப்பாடின்றி இருக்கும் நிலை அரசியல், வர்த்தக அதிகாரம் ஒரே அலுவலகத்தில் சேர்ந்திருக்கும் நிலையோடு கலந்தபொழுது நேர்மையான நிருவாகத்திற்கு எப்பொழுதும் இடராக இருந்தது.

போர்ச்சுகீசிய நகரங்களுக்கு அளிக்கப்பெற்ற சலுகைகள் பெரிய களங்களுக்கும் கொடுக்கப்பட்டன. இக்களங்கள்

நகராண்மை மன்றங்களேயும் கொண்டிருந்தன—கோவா, மகாவா போன்ற இடங்களில் இருந்ததைப் போல் சில மன்றங்கள் பெருஞ் சிறப்புப் பெற்றிருந்தன. கோவாவில் உயர்நீதிமன்றமும் மருத்துவ மனையும் இருந்தன. இவற்றை எல்லோரும் பாராட்டினர்கள். சொந்த நாட்டு நிலையங்களைப் பார்த்து அமைக்கப் பட்ட நிலையங்களில் சாண்டா காசாடா மிஸெரி கோர்டியா (Santa Casada Miseri Cordia) என்பதும் ஒன்ருகும். தியோகோ டோ கௌடோவும் அவருடைய அந்நிலைநாட்டிய சமகாலத் தவரும் வகுத்துள்ள பேரரசை, இலஞ்சம், வல்லாட்சி ஆகியவை களுக்கு ஈடாக இந்நிலையம் விதவைகளுக்கும் பெற்றேரை இழந்த குழந்தைகளுக்கும் உதவி செய்வதிலும் ஏழைகளுக்கும் வறுமையில் மூழ்கி இருப்பவர்களுக்கும் உதவியளிப்பதிலும் புரிந்த அருஞ்செயல்களை வைக்கவேண்டும்[1].

## இராணுவ கப்பற்படை வலிமை

பதினும் நூற்றுண்டின் தொடக்கத்தில் போர்ச்சுகீசிய கப்பற் படை கப்பலின் பாய்களிலும் கடலோடிகளுக்கு இன்றியமையாத தலைமுறைகளிலும் பீரங்கிகளிலும் உலகத்திலேயே தலைசிறந் திருந்தது. ஒவ்வொரு நூற்றுண்டிலும் எண்ணூறு கப்பல்கள் அனுப்பி வைக்க எடுத்த முயற்சி சிறப்புமிக்கதாகும். நெடுநாட் களாக கடும்போட்டி யெதுவும் இல்லாததனல் மதிக்க முடியாத அமைப்புக்களைக் கொண்டனவாயும் எளிதில் கையாளமுடியாதன வாக இருந்த கப்பல்கள் கட்டப்பட்டன. கடலில் ஏற்பட்ட சேதம் பீதியளிக்கும் வகையில் அதிகமாகிக் கொண்டிருந்தது. கப்பலில் ஏராளமான ஆட்கள் மாண்டனர். ஒவ்வொரு பயணத்திற்கும் புதிய கப்பலாட்களை அமர்த்தவேண்டியதிருந்தது. ஆங்கிலேயர் களும் டச்சுக்காரர்களும் பெருங்கடல் கப்பல் தொழிலைக் கற்றுக் கொண்டிருக்கும் சமயத்தில், போச்சுகீசிய கப்பல்களில் கப்ப லோட்டிகளுக்குரிய தரங்கள் சீர்குலைந்து கொண்டிருந்தனவென்று பயணிகள் அறிவிக்கின்றனர்.

போர்ச்சுகலின் தேசீயப்படை இந்தியாவின் படைக்கு ஆதாரமாக இருக்க முடியாது. போர்ச்சுகலின் மக்கள் தொகை குறைந்துகொண்டிருந்தபொழுதும், பிரேஸிலில் மேலும் ஒரு பெரிய பேரரசு நிறுவப்பட்டபொழுதும்; இந்தியாவிற்குத் தேவை யான படைகளை இந்தியாவிலேயே தேர்ந்தெடுத்து அமைக்கப்பட வேண்டியதிருந்தது. உயர்குடி அதிகாரிகளைக்கொண்ட சில படைகள் ஆண்டுதோறும் கப்பல்களில் வந்துகொண்டிருந்தன; இருந்தபோதிலும், இந்தியாவிலேயே தங்கியிருந்து இங்கேயே

[1] C. R. Boxer in Portugal and Brazil ed H. V. Livermore p. 223.

மணம் புரிந்துகொண்டவர்களையே நம்பி இருக்கவேண்டிய திருந்தது. இவ்விதமாகக் குடியேறியவர்களின் வலிமையை உணர்ந்த ஆல்புக்கர்க் கலப்பு மணங்களுக்கு ஆதரவளித்தார். பல ஆண்டுகளுக்கு முன்னமேயே கடலின்மேல் தங்கள் ஆதிக் கத்தை நிலைநாட்டிய டச்சுக்காரர்களுக்கு எதிர்ப்பு அளித்த பல அமைப்புகள் கசோடாக்களிலும் (Casodas) அவர்களுடைய அடிமைகளைப் பெற்றிருந்த திறனுக்கு சான்று கூறுகின்றன.

## சமயக் கொள்கை

வட ஆப்பிரிக்காவில் மூர்களுக்கு எதிராகப் புனிதப்போர் நடத்திக்கொண்டிருந்த போர்ச்சுகீசியர்கள் முஸ்லீம்களுக்கும் அதேபோன்ற சமய ஆர்வத்தையும் பகைமையையுமளித்தனர். ஆனாலும் அவர்களுடைய குறிக்கோள்கள் எப்பொழுதும் கலந்தே காணப்பட்டன. இந்தியாவிற்கு வந்தவுடன் வர்த்தக நோக்கம் மிக்க வலிமை பெற்றது. இதனால், போப்பாண்டவர் போர்ச்சு கீசிய மன்னரை இந்தியாவின் கிறித்துவக் கோயில்களுக்கும், சமயப் பிரசாரம் செய்யும் குழுக்களுக்கும் புரவலராக்கினரெனி னும், 1542-ல் ஜெஸுட்டுகள் வந்த பிறகுதான் பிரசாரத்திற்குரிய மாபெரும் முயற்சிகள் தொடங்கின. முகலாய அரசவையில் அவர்கள் பெற்றிருந்த செல்வாக்குப் பின்வரும் அத்தியாயங்களில் ஆராயப்படும். அதுபோன்ற முயற்சியே அக்குழு சீனாவிலும் ஜப்பானிலும் செய்தது. 1560ஆம் ஆண்டிற்குப்பின், கோவாவில் சமய ஒறுப்பு நீதிமன்றம் தன் கடுமையான தண்டனைகளுடன் செயல்படத் தொடங்கியது, ஜெஸுட்டுகளும் கடுந்துறவிகளும் செய்த அரும்பணிகள் பலவற்றை அழிக்க உதவியது.

## போர்ச்சுகீசிய வணிக முயற்சிகள்

மணப் பொருள்களின் வர்த்தகம் தான் போர்ச்சுகீசியர்களை இந்தியாவிற்கு வரும்படி தூண்டியது. முந்திய ஆண்டுகளில் அது மிக்க இலாபத்தையும் அளித்தது. ஏனெனில், அராபியத் தரகர்கள் மணப்பொருள் தீவுகளுக்கும் வெனிஸிற்கும் இடையில் ஏராளமான இலாபத்தைப் பெற்றுக்கொண்டிருந்தனர். ஆனாலும், இறுதியில் இந்தியப் பெருங்கடல், சைனாக்கடல் என்பனவற்றின் சரக்கேற்றிச் செல்லும் வர்த்தகத்தில் பங்கெடுத்துக்கொண்ட போர்ச்சுகீசியர்களும் குறிப்பாக, சில தனிப்பட்டவர்களும் ஏராள மான இலாபத்தைப் பெற்றனர். இந்நிலை பின்வருமாறு சுருக்க மாகக் கூறப்பட்டுள்ளது. 'இந்தியப் பெருங்கடலில் வர்த்தகம் நடத்திக்கொண்டிருந்த முஸ்லீம் வர்த்தகர்களின் இந்திய நெசவுத் துணிகள், பருத்தித் துணிகள்; பாரசீக அராபியக் குதிரைகள்; கிழக்கு ஆப்பிரிக்காவிலிருந்து பொன், தந்தம்;

இந்தோனேசியா, இலங்கை, மலபார் முதலியவற்றின் மணப் பொருள்கள் ஆகியவற்றின் பெரும் பகுதி வர்த்தகத்தைக் கைப் பற்றினார்கள். மேலும் சீனக்கடலிலும் இவர்கள் தம் வர்த்தகத் தைப் பரப்பினர். இங்கே இடைக்காலத்திலிருந்து அராபி யர்கள் நுழையவில்லை; நுழைந்தாலும் மிகச் சிலரே நுழைந்தனர். இவ்விடங்களின் முக்கியத் துறைமுகங்களுக்கிடையில் (எடுத்துக் காட்டாக மகாவ் (Macau) நாகசாகி, மலாக்கா, சயாம், ஓர்மூஸ், கோவா) செய்த கடற்பயணங்கள் நன்னம்பிக்கை முனையைச்சுற்றி நடந்த நெடும் பயணங்களைவிடச் சுருக்கமாகவும் எளிமையாகவும் இருந்தன. சரக்குக் கப்பல்களை ஐரோப்பாவிற்கு அனுப்புதல் போன்ற துணிகரச்செயல்களில் பணத்தையும் பொருளையும் ஈடுபடுத்தியது விரைவாகவும் உறுதியாகவும் இலாபத்தைத் தேடிக்கொடுத்தது. இந்தியா, சீனு, ஜப்பான் ஆகியவற்றில் தங்கம், வெள்ளி முதலியவற்றின் ஒப்பிட்டுணர்ந்த விலைமதிப்பு ஏறியிறங்கும் விகிதத்தில் மாறிக்கொண்டிருந்தது. கோவாவிலும் மாகாவ்விலும் இருந்த போர்ச்சுகீசியர்களை விலை மதிப்பற்ற உலோகங்களில் ஏராளமாக வர்த்தகம் புரியும் தரகர்களாக நடந்துகொண்டு மிக்க இலாபத்தைப் பெறும்படி செய்தது.[1]

### போர்ச்சுகீசியரின் சீர்குலைவு

எகிப்திலும், பாரசீகத்திலும், வடஇந்தியாவிலும் வலிமை வாய்ந்த வமிசங்கள் தோன்றியதும், கலகம் விளைக்கும் மராத்தி யர்கள் அடுத்து வசிக்க நேர்ந்ததும் இந்தியாவில் போர்ச்சு கீசியர்கள் பெற்றிருந்த தல நலனைக் குறைத்தன. ஜெஸுட் பிரசாரத்தால் எழுச்சியுற்ற அரசியல் அச்சங்களும் சமய ஒறுப்பு நீதிமன்றம் கையாண்ட கொடுமைகள்மீது கொண்ட அருவருப்பும் போர்ச்சுகீசிய ஆன்மீக அமுக்கத்திற்கு எதிர்ப்பு விளைவித்தது. பேராசை, இலஞ்சம், தன்னலம் முதலியன நிருவாகத்தை வலிமையற்றதாக்கின. ஆனுல் அம் முறைநீடித்து வேலைசெய்து செல்வத்தை உண்டாக்கியது. அச் செல்வம் இந்தியத் தீவுகளில் போர்ச்சுகீசியர்கள் எதிர்க்கமுடியாத அளவு ஏராளமான பொருள்களையும் கடுமையான வன்முறைகளையும் பெற்றிருந்த இரண்டு நாட்டவர்களான டச்சுக்காரர்களாலும் ஆங்கிலேயர் களாலும் அழிக்கப்பட்டது. அரசன் செபஸ்டியனின் வட ஆப்பிரிக்கப் படையெடுப்பின் மடமைகள், ஸ்பானியநாடு ஐரோப்பியப் போர்களில் ஈடுபடுதல், 1624ஆம் ஆண்டிற்குப்பின் டச்சுக்காரர்களிடமிருந்து பிரேசிலையும் ஆப்பிரிக்காவையும் காப்பாற்றுவதற்காக ஆட்களை பிரித்து அனுப்புதல் போன்றவை

[1] C. R. 'Boxer, Portugal and Brazil', Liver more p. 222.

ஒன்றன்பின் ஒன்ருகப் போர்ச்சுகீசியர்களின் எதிர்க்கும் திறமையைக்குறைத்தன. இந்தியத் தீவுகளுக்குப் போகும் வழியைப்பற்றிய தகவலின் முன்னறிவு, நியூபவுண்டுலாண்டுக் கப்பாலும் அல்லது வெண்கடலிலும் கடற்செலவுபற்றிப் பயின்று கொண்டிருந்த ஆங்கிலேயர்களுக்கும் டச்சுக்காரர்களுக்கும் கிடைத்தது. ஆர்கில்லாப் படையெடுப்பும் ஆர்மெடாவும் கப்பற் போக்குவரத்துமீது இருந்த முழு உரிமையை அழித்தது. எதியோபியா, அரேபியா, பாரசீகம், இந்தியா ஆகியவற்றின் படையெடுப்பு, கப்பல்தொழில், வணிகம் முதலியவற்றின் தலைவன் என்ற நிலையை போர்ச்சுகல் நிரந்தரமாகப்பெறுவதற்கு மிகச்சிறிய நாடாக இருந்தது.

## போர்ச்சுகீசியருடன் டச்சுக்காரர்களும் ஆங்கிலேயர்களும் போட்டியிடல்

டச்சுக்காரர்களும் ஆங்கிலேயர்களும் ஏறத்தாழ ஒரே சமயத்தில் கீழையநாட்டு வர்த்தகத்தின்மீது போர்ச்சுகீசியர்கள் பெற்றிருந்த முழு உரிமையில் போட்டியிட நடவடிக்கை எடுத்தனர். பதினேழாம் நூற்ருண்டின் தொடக்கத்திலிருந்து அங்குத்தோன்றியவர்களை உறுதியாகத்தடுக்கப் போர்சுச்கீசியர் களால் முடியவில்லை. ஒன்றன்பின் ஒன்ருகப் பல இந்திய நிலைகள் அவர்களை வந்தடைந்தன. கோவாவை டச்சுக் கப்பற் படைகள் அடிக்கடி முற்றுகையிட்டபோதிலும் உண்மையில் அது நடைமுறையில் பிடிபடுவதிலிருந்து தப்பியது; ஆனுலும், பதினேழாம் நூற்ருண்டில் அதை யார் பெற்றிருப்பினும் பாதக மில்லை எனக்கருதும் அளவிற்கு 1565-ல் விஜயநகரம் அழிந்த பின், இந்தியாவைப் பொறுத்தவரை, கோவாவின் சிறப்புக் குறைந்துகொண்டிருந்தது.

## டச்சு அமைப்புகள்

நெதர்லாந்தின் ஐக்கிய கிழக்கிந்தியக் கம்பெனி, போட்டி யிட்டுக்கொண்டிருந்த மாகாணக் கம்பெனிகளின் கூட்டத் திலிருந்து 1602-ல் நிறுவப்பட்டது. அது ஏராளமான பணத்தைப் பெற்றிருந்ததுமன்றி அரசாங்கத்தோடு மிக நெருக்கமாக இணைக்கப்பட்டிருந்தது. சிறிது காலம்வரை புதிய இடங்களைக் கண்டுபிடிப்பதில் முனைந்தபிறகு மலேயாவில் தலைமையிடங்கள் நிறுவப்பட்டன. அங்கிருந்துகொண்டு மணப்பொருள் தீவு களுடனும் மிளகு வியாபாரத்தைப் பெறுவதற்கான கொள்கை ஒன்று விரைவாகப் பின்பற்றப்பட்டது. இதைச் செய்வதனுல் ஜாவாவிலும் மொலுக்களிலும் வர்த்தக நிலையங்களை நிறுவி யிருந்த ஆங்கிலேயர்களை விலக்கவேண்டியதிருந்தது. அம்பாஸ்ஞ

படுகொலை இவ்வித விலக்குதல் செய்யும் முறைகளில் ஒரு நிகழ்ச்சியேயாகும்.

மலாயத் தீவுக்குழு முழுவதும் முக்கிய வர்த்தகப் பொருளாக இருந்த ஜவுளி வியாபாரத்தைத் தேடிக்கொண்டு, டச்சுக் காரர்கள் இந்தியாவிற்கு வந்தனர். இங்கு முகலாயர்களும் கோல்கொண்டாவின் அரசர்களும் மிக்க வலிமைவாய்ந்தவர் களாக இருந்தமையால் டச்சுக்காரர்கள் வன்முறையைக் கையாண்டு முழு உரிமையைப்பெற முடியவில்லை. அவர்கள் சென்னைக்கு வடக்கிலிருந்த புலிக்கட்டில் 1609-ல் குடியேறினர். பின் மசூலிப்பட்டணம், சூரத் ஆகிய இடங்களிலும் பாரசீகத் திலும் குடியேறினர். மணப்பொருள் வர்த்தகத்தின்மீது அவர்கள் கொண்டிருந்த ஆதிக்கம், கம்பெனியாளர்களின் பெருஞ் செல்வந்தர்களின்திறமை ஆகியவையெல்லாம் இப் பகுதியில் நிலைத்திருந்த வணிகத்தில் பெரும்பங்கை அவர்கள் எடுத்துக கொள்ளும்படி செய்தது. ஆனாலும் அவர்கள் தம் ஆங்கில எதிரிகளை விலக்க முடியவில்லை.

### டேனர் அமைப்புகள்

டேனர்களின் அமைப்புகளைப்பற்றிச் சிறப்பற்ற கவனத்தைச் செலுத்தலாம். டேனரின் கிழக்கிந்திய வணிகக்குழுவொன்று 1616-ல் நிறுவப்பெற்றது. நான்கு ஆண்டிற்குப்பின் (1620) கிழக்குக்கரையிலிருந்த தரங்கம்பாடியில் வர்த்தக நிலையமொன்று தோற்றுவிக்கப்பட்டது. கல்கத்தாவிற்கு அருகில் செரம்பூரி லிருந்த டேனியரின் முக்கிய அமைப்பு 1755ஆம் ஆண்டிலிருந்து தொடங்கியது. அக் காலத்தும் முக்கியமற்றிருந்த டேனர்களின் அமைப்புகள் 1845-ல் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு விற்கப்பட்டன.

பிரெஞ்சு அமைப்புகள்: பிரெஞ்சுக்காரர்கள் வெகுகாலம் கழித்தே இவ்வரங்கில் தோன்றினர். அவர்களுடைய அதிகார பூர்வமான நிலையான கிழக்கிந்திய வாணிகக்கூட்டுக்குழு என்பது 1664-ல் ஏற்பட்டது. அவர்களுடைய முக்கிய அமைப்பாக இருந்த புதுச்சேரி பத்தாண்டுகளுக்குள் நிறுவப்பட்டதாகும். இப்பொழுதும் அது மிதமான அளவில் செல்வச் செழுமையான நகரமாகும். இந்திய வர்த்தகத்தில் பெரும்பகுதியைக்கைப் பற்றிய பிரெஞ்சுக்காரர்கள் எப்பொழுதும் வெற்றிபெறவில்லை. அவர்களுடைய அமைப்புகள் தாய்நாட்டு அரசாங்கத்திடமிருந்து போதிய உறுதியான உதவியைப் பெறவில்லை. தம் இடங்களை 1954-ல் குடியரசு இந்திய அரசாங்கத்திடம் ஒப்படைத்தனர்.

தீபகற்பத்தில் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே மேலாண்மைக்காக நடந்த போர், போகப் போக இந்தியாவின் பொது வரலாற்றின் பகுதியாகக் குறிப்பிடப்படும்.

**கிழக்கிந்திய வணிகக் கூட்டுக்குழுவின் முதல் உரிமைப்பத்திரம்**

ஸ்பானிய ஆர்மெடாமீது 1588-ல் பெற்ற புகழுக்குரிய வெற்றி பிரிட்டனின் கடல் முயற்சிக்கு ஊக்கமளித்து கிழக்குக்கடல்களின் ஆதாயமுற்ற வணிகத்தில் பங்கு பற்றும் பொருட்டுத் திட்டங்களை வகுக்கவும் செய்தது. அத் திட்டங்கள் 1600ஆம் ஆண்டின் இறுதி நாளில் உறுதியான உருவத்தைப்பெற்றது. அவ்வாண்டில் எலிசபெத் அரசியார், "கிழக்கிந்தியத் தீவுகளுடன் வர்த்தகம் செய்யும் லண்டன்மா நகரின் வணிகக் குழுவின் கவர்னருக்குத் தனியுரிமை வர்த்தகத்திற்கான ஓர் உரிமைப் பத்திரமளித்தார்.

**தனிப்பயணங்கள்**

கம்பெனி நடத்திய முந்திய தனிப் பயணங்கள் மணப்பொருள்கள் விளையும் தீவுகளுக்கேயன்றி இந்தியாவிற்குச் செலுத்தப்படவில்லை. வர்த்தகக் கூட்டு குழுவைச் சேர்ந்த தனி உறுப்பினர்களின் சிறு கூட்டங்கள் ஒவ்வொரு முயற்சிக்கும் தேவையான பணத்தை அளித்து அதை நடத்தியதால் இவைகளுக்குத் தனிப் பயணங்கள் என்று பெயர் வழங்கியது. இவர்கள் கப்பல்கள் திரும்பியவுடன் அப்பயணத்தை முடித்துவிட்டுத் தமக்கிடையே இலாபத்தைப் பங்கிட்டுக்கொண்டனர், இவ்வாறு மூன்றும் முறை கடற்பயணத்தில் ஈடுபட்ட கப்பலொன்று 1608-ல் சூரத்தையடைந்தது; ஆனல் போர்ச்சுகீசியரின் செல்வாக்கு பலமாக இருந்தது. 1612-ல் காப்டன் பெஸ்ட் என்பவர் போர்ச்சுகீசிய பலாத்காரத் தாக்குதல்களை வெற்றிகரமாக முறியடித்தார். அப்பொழுதுதான் குஜராத்தின் அதிகாரிகள் ஆங்கிலேயர்களுக்குச் சூரத்துடன் வணிகம் நடத்தும் உரிமையளித்தனர். 1613ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இவ்வுரிமை பேரரசு ஆணையொன்றால் உறுதி செய்யப்பட்டது. இவ்விதமாக சூரத் கிழக்கிந்திய வணிகக் கூட்டுக் குழுவின் இராஜதானியின் இருப்பிடமாகியது. காலப்போக்கில் இது பம்பாய் இராஜதானியாக வளர்ச்சியுற்றது.

**ஆங்கிலேயர்கள் ஓர்முஸைக் கைப்பற்றுதல்**

1615-ல் ஆங்கிலேயேர்கள் மீண்டும் போர்ச்சுகீசியர்களைக் கடலில் தோற்கடித்தனர். 1622-ல் அவர்கள் பாரசீக இராணுவப்

படையின் உதவியைக்கொண்டு ஓர்முஸைக் கைப்பற்றினர். முன் மற்ற இடங்களில் டச்சுக்காரர்களின் தாக்குதல்களால் இடருக் குள்ளாகி இருந்த போர்ச்சுகீசியரை மேலும் வலிமையற்ற தாக்கினர். அப்பொழுதிலிருந்து அவர்கள் போர்ச்சுகலுக்கு அஞ்ச வேண்டிய அவசியம் இல்லை. சர் தாமஸ் ரோவின் தூதுக்குழு 1615-ல் முதலாம் ஜேம்ஸ், சர்தாமஸ்ரோவைத் தம் தூதராக ஜஹாங்கீரிடம் அனுப்பி வைத்தார். இவர் இந்தியாவில் தங்கி யிருந்த சுமார் மூன்றாண்டில் தாம் கேட்டதையெல்லாம் பெறாவிட் டாலும் தம் நாட்டிற்கான முக்கிய சலுகைகளைப் பெறுவதில் வெற்றி பெற்றார். துணிகரச் செயல்புரியும் ஆங்கிலேயர்கள் அப்பொழுது திருவிதாங்கூரில் ஆன்ஜெஹே என்ற இடம் ஒன்று உட்பட பல வணிக நிலைகளைப் பல இடங்களில் மேற்குக்கரை யோரத்தில் நிறுவினர். ஆனால் அவர்களுடைய செயல்கள் வெகு எளிமையாக அடையக்கூடிய அக்கரையோரத்தில் மட்டுமே நடை பெறவில்லை.

### வங்காளவிரிகுடாவில் பண்டகசாலைகள்

சில ஆண்டுகளுக்குமுன் அவர்கள் வங்காளவிரிகுடாவிற்குள் நுழைந்து தொழிற்சாலைகளை (வணிக நிலைகளை) நிறுவினார்கள். முதன்முதலாக 1611-ல் மசூலிப்பட்டணம் நிறுவப்பட்டது. அதற்குப்பின் ஆர்மகோவன் போன்ற மற்றவைகளும் பின் தொடர்ந்தன. ஆர்மகோவன் சுமார் 1625-ல் நிறுவப்பட்டது. இது இந்தியாவில் கோட்டையுடன் நிறுவப்பட்ட ஆங்கிலேய நிலையமாகும்.

### சென்னை அடிகோலிடப்படுதல்

தலஅதிகாரிகளின் வன்முறைகளால் மசூலிப்பட்டணம், ஆர்ம கோவன் ஆகியவற்றின் வணிகம் தடைப்பட்டது. பாண்டமுக்கும் பாரசீகத்திற்கும் ஏற்றுமதி செய்வதற்கான ஜவுளியைத் தூரத் தெற்கில் குறைந்த விலையில் பெறலாம் என்று அனுபவம் அறிவுறுத்தியது. அதனால் ஆர்மகோவின் முதல்வரான பிரான் சிஸ்டே, நட்புறவு கொண்டிருந்ததும், சீர்குலைந்துகொண்டிருந்தது மான போர்ச்சுகீசிய நிலையாகிய சாந்தோமிற்கு சிறிது வடக்கில் இருந்த நிலப்பகுதியைத் தல இந்துத் தலைவரிடமிருந்து பெற்றார். இவ்வுரிமை பின்னால் விஜயநகரின் பண்டைய கால அரசர்களின் பிரதிநிதியான சந்திரகிரி அரசரால் உறுதி செய்யப்பட்டது. அவ்வுரிமைப்படி அரண்களை அமைப்பதற்கு ஆங்கிலேயர்கள் அனுமதிக்கப்பட்டனர். வருமானத்தை அவர்களும் நாயக்கர் களும் பங்கிட்டுக் கொண்டனர். இவ்விதமாக இங்கிலாந்து தன் முதல் தனியுரிமையான சொத்தை இந்திய நிலத்தில்

பெற்றது; சென்னை மாநிலத்திற்கான கால்கோல் இடப்பெற்றது. ஓர் அரணும் விரைவில் கட்டப்பெற்று (தாய்நாட்டிலிருந்த இயக்குநர்களை அச்சத்தில் ஆழ்த்திய) செயின்ட் ஜார்ஜ் என்ற பெயரும் வழங்கப்பட்டது. இது சென்னைக்கு அதன் அரசாங்கப் பெயரான செயினட் ஜார்ஜ் கோட்டையை மாநிலத்திற்களித்தது. 1647-ல் இம்மாவட்டம் கோல்கொண்டாவிடம் சிக்கி இருந்தது. ஆனாலும் நல்வினைப் பயனாக, சேனைத் தலைவரான மீர்ஜும்லாவுடன் நல்ல தொடர்பு கொண்டிருந்ததனால் தம் இடத்தை உறுதிப்படுத்திக்கொண்டனர்.

## கல்கத்தாவைத் தோற்றுவித்தல்

1660-ல் ஷயிஷ்டகான் போர்ச்சுகீசிய அரகனீசிய கொள்ளைக்காரர்களை அழித்தது, டச்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் புதிய வணிக நிலப்பரப்பை வழங்கியது. பட்டு, வெடியுப்புப்போன்ற புதிய பொருள்கள் வங்காளத்தில் கிடைத்தன; இப்பொருள்களின் வர்த்தகம் மிக விரைவாக வளர்ந்துகொண்டிருந்தது எனினும், 1688-ல் சர் ஜோசைய்யா ஸைல்ட் அவுரங்கசீப்புடன் மூடத்தனமாக நடத்திய போரால் ஆங்கிலேயர்கள் வெளியே துரத்தப்பட்டனர். நவாப் இப்ராஹீம்கான் அவர்களை மீண்டும் வரவழைத்தபொழுது அவர்கள் முகலாய வணிகக்களமாக இருந்த ஹுக்ளியைத் தேர்ந்தெடுக்காமல், சதுப்பு நிலத்திற்குப்பின், கப்பல் தங்க வசதியான ஆழ்கடல் நீரைக்கொண்ட கல்கத்தாவைத் தேர்ந்தெடுத்தனர். சென்னையைப்போலவே இதுவும் பாதுகாப்புக் காரணத்திற்காகவே தேர்ந்தெடுக்கப்பட்டது. சென்னைக்கு நாற்றமடிக்கும் கூவமும் கல்கத்தாவிற்குப் பரந்த சேற்று நிலமும் பாதுகாப்பாக அமைந்தன. எப்பொழுதும் கம்பெனியின்மீது பற்றுக்கொண்ட மனிதராகவும், ஆனால் இரக்கமற்றவரும் திறமைமிக்கவருமாகவிருந்த ஜாப்கார்னுக் என்பவர், கல்கத்தாவை அமைப்பதிலும் அரண்களைக் கட்டுவதிலும் பிடிவாதமாக ஈடுபட்டார். 1696-ல், மூன்றாம் வில்லியம் பெயரிடப்பெற்ற வில்லியம் கோட்டை கட்டப்பட்டது. வில்லியம் கோட்டை அல்லது வங்காள மாநிலம் நிறுவப்பட்டது.

## பம்பாயைக் கைப்பற்றுதல்

பிரகான்சாவைச் சேர்ந்த காதரையின் என்பவரை இரண்டாம் சார்லஸ் மணம் செய்துகொண்டதனால் பெண்வழிச் சீரின் ஒரு பகுதியாக 1661-ல் பம்பாயைப் பெற்றார். டச்சுக்காரர்களுக்கெதிராக ஆங்கிலேயரின் உதவியைப் பெறுவதற்காக போர்ச்சுகீசியர்கள் இதை அளித்தனர். பெற்றுக்கொண்ட பகுதியின் மதிப்பை உணராத மன்னர் சில ஆண்டுகளுக்குப்பின் அத்தீவை

கிழக்கிந்திய கூட்டுக் குழுவிற்குக் கொடுத்து ஆண்டிற்குப் பத்துப் பவுன் வாடகையைப் பெற்றுக்கொண்டார்.

### கெரால்டு ஆர்க்கியர் (Gerald Argier)

முந்திய கவர்னரான கெரால்டு ஆர்கியர் (1669–77) இந்நகரின் உண்மைத் தந்தையாவார். அவர் தம் பொறுப்பில் வந்த நகரின் முக்கியத்துவத்தை எதிர்நோக்கியதுமன்றி இறைவனைத் துணை கொண்டு கட்டுவதற்குரிய நகரமென்று தெரியப்படுத்தினர். தற்காலத்திய வரலாறுகளில் ஆர்கியர் சிற்சில சமயங்களிலேயே குறிப்பிடப்பட்டிருந்தபோதிலும், அவர் இந்தியப் பேரரசைப் படைத்த மேன்மைமிக்க தந்தையர்களில் ஒருவராவார். இவர் பின்வருமாறு வருணிக்கப்பெற்றுள்ளார்; 'இவர் நல்ல வீரர், பண்புள்ளவரும் அஞ்சாத மனிதருமாவார்; ஆளுவதற்குரிய சிறப்புத்தகு பெற்ற மாண்பு மிக்க மனிதராவார்'. இவர் கூட்டுக் குழுவின் நலனையும் தன் கீழிருந்த மக்களின் நலனையும், பாதுகாப்பையும் பேணுவதைத் தம் அன்றாடக் கடமையாகக் கொண்டார். அவர் காலத்தில் பம்பாய்மீது ஆதிக்கம் பெற்றிருந்த செய்தியை 1916-ல் இவருடைய கல்லறையில் பொருத்தப்பட்ட தகடு ஒன்று கொண்டிருக்கிறது. சூரத்தின் வணிகத்தை மராத்தியர்களின் கொள்ளைகள் அழிந்தபோது மேற்கிந்தியாவில் சூரத்தன்றி பம்பாய்தான் ஆங்கிலேயர்களின் தலைநகராயிற்று. எனினும் பம்பாய் நிலப்பகுதி வாரன்ஹேஸ்டிங்ஸ் காலம்வரை சிறப்புப் பெறவில்லை. சிறப்புமிக்க இத்துறைமுகம் மேற்கு மலைத்தொடர்களின் பாதையை நடைமுறையில் இணைக்கும்வரை முழுதும் பயன்படவில்லை.

### ஐக்கியபட்டக் கூட்டுக்குழு

பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் கிழக்கிந்தியக் கூட்டுக் குழு இங்கிலாந்தின் பெருத்த எதிர்ப்பைப் பெற்றது. இதனால், 'கிழக்கிந்தியத் தீவுகளுடன் வாணிகம் நடத்தும் ஆங்கிலக் கூட்டுக்குழு' என்று பெயர்பெற்ற மாற்று நிலையம் ஒன்று தோன்றியது. பழைய கூட்டுக்குழு அழிவின் எல்லையை எட்டியது; எனினும் அதன் இயக்குநர்கள் போர்த்திறன் பெற்றிருந்தனர். 'இங்கிலாந்தில் ஒரே ஆட்சிக் காலத்தில் ஓர் அரசில் இரு கிழக்கித்தியக் கூட்டுக் குழுக்கள் இருத்தல் ஒன்றை மற்றொன்று அழிக்காதிருக்க முடியாது'தென உறுதியாகக் கூறினர்.

வெறுப்பு நிறைந்ததும் மதிப்பற்றதுமான போர்கள் இங்கிலாந்திலும் இந்தியாவிலும் நடந்தபின், 1702-ல் இணக்கம் ஒன்று ஏற்பட்டது. சிக்கலான நதிப் பிரச்சினைகள் இறுதியாக

1708-ல் கொடால்பின் (Godalphin) பிரபுவின் தீர்ப்பால் முடிவடைந்தன. இதன் விளைவாக, போட்டியிடும் குழுக்கள் இணைக்கப்பட்டு, 'கிழக்கிந்தியத் தீவுகளுடன் வணிகம் நடத்தும் இங்கிலாந்து வணிகர்களின் இணைக்கப்பெற்ற கூட்டுக்குழு'வென வழங்கப்பட்டன. இவ்விதமாக தோற்றுவிக்கப்பட்ட ஐக்கிய கூட்டுக்குழு 1757-ல் இருந்து 1858 வரைச்கும் நீடித்திருந்த நூற்றாண்டில் இந்தியாவின் ஆட்சி உரிமை பெற்ற புகழ்மிக்க கூட்டு நிறுவனமாகும்.

## போர்ச்சுகீசிய டச்சு, பிரெஞ்சுக்காரர்களின் தோல்வி

இந்திய வணிகத்தின்மீது ஆதிக்கம் பெறுவதற்கான போட்டியில் தொடக்கத்திலிருந்தே பங்கு பற்றியதால் சாதகமாண நிலையைப் பெற்றிருந்த போர்ச்சுகீசியர் போதிய அளவு தெளிவான காரணங்களால் எல்லாவற்றையும் இழந்தனர். இக்காரணங்களால் ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ளன. டச்சுக்காரர்கள் இந்தியாவுடன் மிகச் சுறுசுறுப்பான வணிகத்தை நடத்திய போதிலும், ஜாவாவைத் தம் கேந்திரமாகக்கொண்டிருந்தனர். தீவுக்குழுக்கள், நறுமணத் தீவுகள் ஆகியவற்றின் வணிகத்தில் முழு உரிமை பெற்றிருந்த இவர்கள் ஏராளமாகச் செல்வத்தைச் சேர்க்க முடிந்தது. பிரெஞ்சுக்காரர்கள் மிகக் காலந் தாழ்த்தியே களத்தில் இறங்கினர். மேலும், போதிய துணிவு காட்டாதது மன்றித் தம் தாய் நாட்டரசாங்கத்திடமிருந்து போதிய அளவு அதிகாரமும் பெறவில்லை. வந்தவர்கள் எல்லோருக்கும் எதிராக ஆங்கிலேயர், கடலில் தாம் பெற்றிருந்த உயர் நிலையைத் தொடக்கத்திலிருந்தே நிலைநாட்டினர். இங்கிலாந்தில் அவர்களுடைய வணிக விவகாரங்களை முகவர்கள் கவனித்து வந்தனர். இம்முகவர்கள் ஐயத்திற்குரிய பண்பாட்டைக் கொண்டிருந்தபோதிலும் தாய்நாட்டரசாங்கத்திடமிருந்து போதிய அதிகாரம் பெறாதிருந்த போதிலும், எப்பொழுதும் துணிகரமாகவும் விடாப்பிடியாகவும் வணிகத்தில் நாட்டங்கொண்டிருந்தனர்.

மாபெரு முகலாயர்களின் காலத்தில் பிரிட்டிஷாரின் ஆட்சிப் பகுதி, பம்பாய் நகரிலும், சென்னையிலும், மேலும் மூன்று அல்லது நான்கு இடங்களில் ஒரு சில சதுர மைல்கள் பரப்புள்ள சிறிய பகுதியாகவே இருந்தது. ஆனால் அப்பொழுதும் அவர்களுடைய கப்பற்படைத் தலைவர்களின் வலிமை அவர்களுடைய நாட்டை இந்திய அரசியலில் ஒரு முக்கிய சக்தியாக அமைத்தது. அவுரங்கசீப் மரணமடைந்த அரை நூற்றாண்டிற்குப் பின் வங்காளம் கைப்பற்றப்பட்டபொழுதும், கடலுக்கும் கங்கை நதிச் சமவெளிக்கும் தலைவர்களாக இருந்தவர்களைப் பாராளுமன்றச்

சட்டங்கூட இந்திய அரசர்களாவதைத் தடைசெய்ய முடியவில்லை.

## காலவரையறைப் பட்டியல்

| | | |
|---|---|---|
| வாஸ்கோடகாமா கள்ளிக்கோட்டை வந்தடைதல் | ... | மே மாதம், 1498 |
| போர்ச்சுகீசியர்கள் கோவாவைக் கைப்பற்றுதல் | ... | 1510 |
| ஆல்புக்கர்கின் மறைவு | ... | 1515 |
| விஜயநகரின் வீழ்ச்சியால் கோவாவின் வணிகம் தடைப்படல் | ... | 1565 |
| ஸ்பெயின், போர்ச்சுகல் ஆகிய நாடுகளின் ஒன்றிணைப்பு | ... | 1580 |
| ஸ்பானிய ஆர்மெடா தோல்வியுறல் | ... | 1588 |
| லண்டன் வணிகர்களின் கிழக்கிந்தியக் கூட்டுக் குழுவிற்கு உரிமைப் பத்திரம் அளித்தல் | ... | 31, டிசம்பர் 1600 |
| நெதர்லாண்டின் ஐக்கியக் கூட்டுக்குழு | ... | 1602 |
| ஜஹாங்கீர் அரியணையேறல் | ... | 1605 |
| மூன்றும், 'தனிப்பயணம்' சூரத்தில் காப்டன் ஹாகின்ஸ் | ... | 1608 |
| பங்கு முதலீட்டுக் குழுப் பயணங்கள் தொடங்குதல், சூரத்தில் ஆங்கிலேய நிலை நிறுவப்படுதல், போர்ச்சுகீசியர் கடலில் தோல்வியுறல் | ... | 1612 |
| சர் தாமஸ் ரோவின் தூதுக்குழு | ... | 1615–18 |
| தரங்கம்பாடியில் டேனியர்களின் குடியேற்றம் | ... | 1620 |
| ஓர்முஸை ஆங்கிலேயர்களும் பாரசீகர்களும் கைப்பற்றுதல் | ... | 1662 |
| அம்பய்னாப் படுகொலை | ... | 1623 |
| கீழ்க்கரையில் ஆங்கிலேயர்களின் முந்திய நிலைகள் | ... | 1625–34 |
| ஜஹாங்கீரின் மறைவு; ஷாஜஹான் அரியணையேறல் | ... | 1627-28 |
| சென்னையில் | ... | மே 1, 1640 |
| அவுரங்கசீப் அரியணையேறல் | ... | 1658–59 |
| பம்பாய் அளிக்கப்படுதல், இரண்டாம் சார்லஸின் உரிமைப் பத்திரம் | ... | 1661 |
| பிரெஞ்சுக் கிழக்கிந்திய வணிகக் கூட்டுக் குழு நிறுவப்பெறல் | ... | 1664 |
| பம்பாயில் கெரால்டு ஆர்கியர் | ... | 1669–77 |

| | | |
|---|---|---|
| புதுச்சேரி நிறுவப்பெறல் | ... | 1674 |
| அவுரங்கசீப்புடன் கிழக்கிந்திய வணிகக்குழு போரிடல் | ... | 1685–87 |
| கல்கத்தா நிறுவப்பெறல் | ... | 1690 |
| கிழக்கிந்தியத் தீவுகளுடன் வணிகம் நடத்தும் ஆங்கிலக் கூட்டுக்குழு | ... | 1698 |
| பழைய, புதிய வணிகக் கூட்டுக் குழுக்கள் ஐக்கியப்படுதல் | ... | 1702 |
| கொடால்பின் பிரபுவின் தீர்ப்பு; கிழக்கிந்தியத் தீவுகளுடன் வணிகம் நடத்தும் இங்கிலாந்தின் ஐக்கிய வணிகர் கூட்டுக் குழு | ... | 1708 |

## ஆதாரங்கள்

பல நூல்களை மேற்கோளாகக் குறிப்பிடலாம். இவ்வதிகாரத்தின் சுருக்கம் I. G. (*1907*)-ல் கொடுக்கப்பட்டிருப்பதை அடிப்படையாகக் கொண்டுள்ளது. Morse Stephens என்பார் ஆல்புக்கர்க் பற்றி எழுதியுள்ள (Rulers of India, 1892) நூல் மிகச் சிறந்ததாகும்; Whiteway, "The Rise of Portuguese Power in India" (Westminster, 1899), C. R. Boxer, "Portugal and Brazil", ed. H. V. Livermore. இந்நூல்களில் பயன்படக்கூடிய மதிப்பீடு ஒன்று உள்ளது. இவை முழு நூல் பட்டியலையும் பெற்றுள்ளன; (Oxford 1953). P. Kappelen, "La compagine Indes Orientales et Francois Martin, Paris, 1908, and S. P. Sen. "The French in India" (Calcutta, 1947), முந்திய பிரெஞ்சு முயற்சிகளைப்பற்றி முழு விபரத்தையும் கொடுக்கின்றன. Anderson, "The English in the Western India (Bombay: London 1854); Rawlinson, "British Beginnings in Western India", Clarendon Press, 1920, Strachey, "Keigwin's Rebellion", (Clarendon Press, 1916), முதல்தரமான சுவைமிக்க நூல்; Penny, "Fort St. George Madras, (London, 1900); Bruce, "Annals of the E. I. Company", (London, 1810).

குறிப்பிடப்பட்டுள்ள நூல்களில் எண்ணற்ற ஆத்தரங்களைக் காணலாம். இந்தியாவில் ஆங்கிலேயர்களின் தொடக்க வணிக நிலைகள்பற்றி கம்பெனி பெற்ற கடிதங்களைப் பார்க்க, (1602-1617). London, 1896–1902, Sir William Foster's English Factories in India (1618–77), (Clarendon Press, 1906–36); கம்பெனியின் உள்நாட்டு விவகாரங்கள்பற்றித் தெரிந்துகொள்ளக் கீழ்வரும் நூல்களைப் பார்க்கவும் :— Calendar of State Papers, East Indies, 1513–1634, W. N. Sainsbury; Court Minutes of East India Company, 1635–79 by Miss E. B. Sainsbury and Mr. Foster. (Clarendon Press, 1907–38) சென்னையின் தோற்றத்தைப்பற்றித் தெரிந்து கொள்ள W. Foster எழுதிய, "The founding of Fort St. George" (Eyre and Spottiswoode, 1902); H. D. Love எழுதிய Vestiges of old Madras (Murray 1913).

# 3. அக்பர் (1555-1605)

## ஹுமாயூனின் புதல்வர்கள்

ஹுமாயூன் இறக்கும்பொழுது இரண்டு புதல்வர்களை விட்டுச் சென்றார். மூத்தவரான அக்பர் பதின்மூன்று வயது அடைந்தவர்; இளையவரான முகமது ஹகீம் தம் மாற்றாந்தாய் மகனை அக்பருக்கு இரண்டு வயது இளையவர். காபூல் மாகாணம் பெயரளவில் இளைய இளவரசர் பொறுப்பில் இருந்தது. இது இந்துஸ்தானத்தின் இணைந்திருந்த பகுதியாகக் கருதப்பட்டபோதிலும் சாதாரணமாக சுதந்திர அரசாகவே நிர்வகிக்கப்பட்டு வந்தது. தம் தகப்பனாரின் மரணத்தின்பொழுது அக்பர் தம் பாதுகாப்பாளரான (guardian) பைராம்கானுடன் பாசறையில் இருந்தார். இவ்விருவரும் ஷெர்ஷாவின் மைத்துனரும் பஞ்சாபில் படை ஒன்றைத் திரட்டிக்கொண்டு தாமே முடியைப் பெறுவதற்கு முயற்சி செய்தவருமான சிக்கந்தர் சூரைத் துரத்தியடிப்பதில் ஈடுபட்டிருந்தனர்.

## அக்பர் அரியணை ஏறுதல்

ஹுமாயூனின் நோயைத் தாற்காலிகமாக மறைத்து அக்பர் அமைதியான சூழ்நிலையில் அரியணை ஏறுவதற்கான எல்லா ஏற்பாடுகளும் செய்து முடிக்கப்பட்டது. அதன் பின்னர் குருதாஸ்பூர் மாவட்டத்தைச் சேர்ந்த கலாநகரில் 1456 பிப்ரவரி பதினான்காம் நாள் அக்பர் தம் தந்தையின் வாரிசாக அரியணை ஏறினார். அரியணை ஏறிய சடங்கின்போது பயன்படுத்தப்பட்ட செங்கல் மேடையும், இருக்கையும் இன்றும் இருக்கின்றன. அவை பயபக்தியுடன் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. ஆனால் இந்துஸ்தானத்தின் அரியணைக்கு ஹுமாயூனின் மகன் வருவதற்கான உரிமையை இம்முடிசூட்டும் சடங்கு வெறுமனே பதிவு செய்தது. காலம் சென்ற அரசர் உண்மையில் இராச்சியத்தைத் தம் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டிருக்கவில்லை; ஒரு சில மாதங்களே நீடித்திருந்த அவரது இரண்டாவது ஆட்சியும் துணிகரச் செயல்

புரிபவர் ஒருவர் பெற்ற தாற்காலிக இராணுவ வெற்றி என்ற நிலையில்தான் இருந்தது. ஆகவே அவரை முழு உரிமையுள்ள முறையான அரசர் என்று கருதமுடியாது. ஹுமாயூனின் பெரும் பகைவரான ஷெர்ஷாவின் பிரதிநிதிகளும் இந்துஸ்தானத்தின் ஆதிக்கத்திற்கு அக்பரைப் போலவே உரிமை கொண்டாடிக் கொண்டிருந்தனர்.

## இரு சூர் உரிமையாளர்கள்

ஷெர்ஷாவின் மைத்துனர்களான சூர் வம்சத்தைச் சேர்ந்த இருவர் இந்துஸ்தானத்தின் ஆட்சி பீடத்திற்கு முழு உரிமை கொண்டாடினர்கள். இவ்விருவரில் முதல்வரான முஹமது ஷா ஆதில் அல்லது அதலி தாற்காலிகமாகத் தம்மை ஷெர்ஷாவின் புதல்வரும் 1554ல் இறந்தவருமான இஸ்லாம் ஷாவின் வாரிசாக நிலைநாட்டிக் கொண்டார். ஆனல் ஹுமாயூனுக்கு உயிர் துறக்கும் விபத்து நிகழும்பொழுது அவர் கீழ் மாகாணங்களுக்கு ஓய்வு பெறச் சென்றிருந்தார்; மிர்ஜாப்பூரின் அருகில் இருந்த சூனரில் தங்கியிருந்தார். ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல் ஷெர்ஷாவின் மற்ளெரு மைத்துனரான சிக்கந்தர் பஞ்சாப்பில் படை எடுக்கும் பணிகளில் ஈடுபட்டிருந்தார்.

## ஹெமு, மூன்ரும் உரிமையாளர்

அதலி என்ற அரசருக்காக வடக்குப் பகுதிகளை வெல்லு வதில் அவ்வரசரின் திறமைமிக்க இந்து அமைச்சரும் தளபதியு மான ஹெமு பொறுப்பேற்றிருந்தார். இவர் பிறப்பில் பனியா என்ற ஜாதியைச் சேர்ந்தவர். தன் தலைவருக்காக ஹெமு ஏற்கெனவே பல வெற்றிகளைப் பெற்றிருக்கிருர். குவாலியர் வழியாக வெளியேறி ஆக்ராவையும், தில்லியையும் கைப்பற் றினர். இவ்வெற்றி இவருக்குச் சாதகமான சூழ்நிலை ஏற்படுத் திற்று. பாதுகாப்பாளரான பைராம்கானல் டெல்லியைப் பாது காக்கும் பொறுப்பைப் பெற்றிருந்த தார்திபேக் தன் கடமையில் தவறியதால் அந்நகர் எதிரிகளால் கைப்பற்றப்பட்டது. இக் குற்றத்திற்காக அவர் பைராம்கானின் ஆணையின்படி தூக்கிலிடப் பட்டார். வழக்கு விசாரணை இல்லாமல் முறையின்றி இத் தண்டனை விதிக்கப்பட்டாலும் அது அவசியமானதும், நியாய மானதும் ஆகும்.

ஹெமுவால் தில்லி கைப்பற்றப்பட்டது. அச்சமயத்தில் ஹெமுவின் கீழ் வலிமையுள்ள படையும் பல யானைகளும், மிகுதி யான செல்வங்களும் இருந்தன. மேலும் அவருடைய அரசர் வெகு தொலைவில் உள்ள சூனரில் இருந்தார். ஆகவே தில்லி

அரசுக்குத் தன் அரசரான அதலியைவிடத் தாமே அதிக உரிமையுள்ளவர் என்ற முடிவுக்கு ஹெமு வந்தார். அதன்படியும் அவர் நன்கொடைகளைத் தாராளமாக அளித்து ஆப்கானியப் படைகளின் உதவியைப் பெற்று ராஜா விக்ரமஜித் அல்லது விக்ர மாதித்தியா என்ற பட்டப் பெயரைப் புனைந்துகொண்டு துணி வுடன் அரச பதவி ஏற்ருர். சிறப்புமிக்க பண்டைக் காலத்து இந்து அரசர்கள் பலர் இப்பட்டப் பெயரைப் புனைந்திருந்தனர். இவ்விதமாக ஹெமு அக்பரின் எதிராளியாஞர். ஹெமுவின் தோற்றத்தால் அதலி, சிக்கந்தர் சூர் ஆகியவர்களின் எதிர்ப்பு மங்கத் தொடங்கின.

## இரண்டாம் பானிப்பட்டுப் போர்

அக்பருடன் தானேஸ்வர் வழியாக வரலாற்றுப் புகழ்பெற்ற பானிபட்டுச் சமவெளியைப் பைராம்கான் அடைந்தார். இங்கே தான் முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் பாபர் இப்ரஹீம்கான் லோடியைத் துரத்தி அடித்துக் கொன்ருர். ஹெமு அதே இடத் திற்கு வந்து சேர்ந்தார். ஹெமு துரதிர்ஷ்டவசமாகப் போரின் தொடக்கத்திலேயே தம் படையின் பீரங்கிப் பகுதியை இழக்க நேர்ந்தது. இருப்பினும் 1500 போர் யானைகளைக்கொண்ட வலிமை மிக்க படையும், எதிரியைவிட எண்ணிக்கையில் அதிகமான காலாட் படையும் ஹெமுவின் தலைமையின்கீழ் இருந்தன.

1556ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 5ஆம் நாள் இரு படைகள் போர்க்களத்தில் சந்தித்தன. தொடக்கத்தில் ஹெமு இரு புறங் களிலும் வெற்றி பெற்ருர். எதிர் பாராமல் அம்பு ஒன்று வந்து அவருடைய கண்ணில் பாய்ந்து மயக்கமுறச் செய்திராவிடில் ஒரு வேளை அவர் போரின் இறுதியில் வெற்றியாளராய் இருந்திருப் பார். தலைவனை இழந்த படை நாலாப் பக்கமும் சிதறுண்டு ஓடிற்று. இதன் பின்னர் கீழ் அதிகாரிகளிடம் போரின் இயக் கத்தை விட்டிருந்த பைராம்கானும் அக்பரும் பின்னிருந்து முன்னுக்குக் குதிரைமேல் வந்து சேர்ந்தனர். உதவியற்று இறந்துகொண்டிருந்த ஹெமு அவர்களுக்கு முன்னல் கொண்டு வரப்பட்டான். அக்பர் தன் கையினலேயே புறச் சமயத்தவன் ஒருவனைக் கொன்று காஜி (Ghazi) என்ற பட்டத்தைப் பெற வேண்டுமென்று பைராம்கான் விரும்பினர். தன் பாதுகாப் பாளரின் ஆணைக்குக் கீழ்படிந்து அச்சிறுவனும் ஹெமுவின் கழுத்தில் தன் உடைவாளால் வெட்டினன். பக்கத்திலிருந்த வர்கள் ஹெமுவை இறுதியாகக் கொன்ருர்கள். காயமடைந்த தம் கைதியைக் கொல்ல இளைஞரான அக்பர் விரும்பவில்லை யென்று பொதுவாக ஒத்துக்கொள்ளப்படும் கருத்து பிற்காலத்து அரச சபையினரின் கற்பனையாகும்.

## பஞ்சம் (1555-1556)

1555, 1556ஆம் ஆண்டுகளில் இந்தியாவின் மேலை மாகாணங்கள் குறிப்பாக ஆக்ரா, தில்லி பகுதிகளில் மழை பெய்யாததினால் கடும் பஞ்சத்திற்குள்ளாயின. இத்துன்ப நிலை இரக்கமற்ற படைகளின் நீடித்த போர்களால் மேலும் மோசமாயிற்று. ஹெமு மக்களிடத்து இரக்கமின்றி மிருக உணர்ச்சியுடன் நடந்து கொண்டதோடு மக்களின் துன்பங்களை அசட்டை செய்பவனாகவும் இருந்தான்; ஆண்களும் பெண்களும் வறுமையால் ஒருவரை ஒருவர் தின்றுகொண்டிருந்தபொழுது தம் யானைகளுக்கு அரிசியும், சர்க்கரையும், வெண்ணெயும் கொடுத்துக் கொழுக்க வைத்தார். தமக்கு ஏற்பட்ட விதிக்கு அவர் தகுதியுடையவரே.

## சூர் வம்சத்தின் முடிவு

அஞ்சி ஓடிக்கொண்டிருந்த எதிரியை மேலும் பின் துரத்திச் சென்று ஆக்ராவையும், தில்லியையும் வெற்றியாளர்கள் கைப்பற்றினர்கள். சூர் வம்சத்தினர் இந்துஸ்தானின் இறைமைக்குக் கொண்டாடிய போலி உரிமைகள் 1557ஆம் ஆண்டில் முற்றுப் பெற்றன. சரணடைந்த சிக்கந்தர் சூர் இரக்கத்தோடு நடத்தப் பட்டுக் கிழக்கு மாகாணங்களில் ஒரு மானியமும் அவருக்கு அளிக்கப்பட்டது. அரசர் அதலி பானிப்பட்டில் ஏற்பட்ட வாளின் தீர்ப்பை மறுக்க முயற்சி செய்யவில்லை. கிழக்குப் பகுதியிலேயே இருந்து வங்காள அரசருடன் நடந்த சண்டையில் அவர் கொல்லப் பட்டார். இவ்வாருக ஹுமாயூனின் வாரிசு என்ற அக்பரின் நிலை உறுதியாக்கப்பட்டது. எனினும் தம் தந்தையார் தம்முடைய முதல் ஆட்சி காலத்தில் பெற்றிருந்த நிலையை அக்பர் மீண்டும் பெறுவதற்முன் கடுமையான போர்கள் செய்யவேண்டிய நிலை வந்தது.

## மீண்டும் கைப்பற்றுதலில் முன்னேற்றம் (1558-60)

1558–60ஆம் ஆண்டுக் காலத்தில், மத்திய இந்தியாவில் வலிமைமிக்க அரணை குவாலியரையம் இராஜபுதனத்தின் வடக்குப் பகுதியின் திறவுகோலான ஆஜ்மீரையும், கிழக்கில் ஜான்பூர் மாகாணத்தையும் கைப்பற்றியதனல் இந்துஸ்தானத்தில் மொகலாய இராச்சியப் பகுதிகள் மீண்டும் மீட்கப் பெருவதில் முன்னேற்றம் அடைந்தது. இராஜபுத்திரர்களின் ரேந்தம்பூர் கோட்டையைத் தாக்கும் முயற்சி தற்போதைக்கு தோல்வியுற்ற போதிலும் சில ஆண்டுகளுக்குப்பின் வெற்றிகரமாக அம் முயற்சி மீண்டும் தொடங்கப்பட்டது. தன் பாதுகாப்பாளர் பைராம் கானைப் பதவியிலிருந்து விலக்குவதிலும் கான் ஆட்சிப்

பொறுப்பை மேற்கொள்ளுவதிலும் அக்பர் ஈடுபட்டிருந்ததால் மாளவத்தைக் கைப்பற்றும் முயற்சி தள்ளிப்போடப்பட்டது.

**பைராம்கானைப் பதவியிலிருந்து விலக்குதல்**

1560ஆம் தொடக்கத்தில் தன் பதினெட்டாம் வயதில் இளவரசர் பைராம்கானின் பாதுகாப்பை வெறுக்கத் தொடங்கினர். பைராம்கான் திறமை மிகுந்தவராகவும் மற்றவர்களுடைய உணர்ச்சிகளைப் பொருட்படுத்தாது, அதிகாரத்தைக் கையாளும் தன்மையைக் கொண்டவருமாவர். அக்பர் இயற்கையாகவே பொறுமை அற்றவர். அவருடைய தாயார் அமிதாபானு பேகமும், செவிலித் தாய்களின் தலைவியான மாஹம் அனஹாவும் அவளுடைய மகனை ஆதம்கானும், அவளுடைய உறவினரும், தில்லியில் கவர்னராக இருந்த சிஹாபுதீனும் அக்பரின் இயல்பான பொறுமையின்மையை மேலும் தூண்டிவிட்டனர். இவர்கள் எல்லோரும் தம் சொந்தக் காரணங்களால் பைராம்கானை வெறுத்தனர். 1560ஆம் ஆண்டில் இளவேனிற்காலத்தில் தம் பாதுகாப்பாளரை அக்பர் பதவியிலிருந்து விலக்கிவிட்டுத் தாமே அரசாங்கத்தின் பொறுப்பை ஏற்றுக்கொள்ளத் தம் கருத்தை வெளியிட்டார். சிறிது தயக்கத்திற்குப் பின் பைராம்கான் அரச ஆணைகளுக்குக் கீழ்ப்படிந்தார். ஆணையின்படி மெக்காவுக்கும் செல்லத் தயாரானர். நன்றி கொன்றவரும், திடீரென்று பதவி ஏறியவருமான பீர் முகமது என்பவர் தம்மை மெக்காவுக்கு அனுப்புவதற்கு அவசரப்படுத்தியதால் கோபமடைந்த பைராம்கான் பீர்முகமதுவுடன் கலகம் செய்தார். கலகமும் அரை மனத்துடன் செய்யப்பட்டதாகும். இருப்பினும் பைராம்கான் பஞ்சாபில் தோற்கடிக்கப்பட்டுக் கீழ்ப்படிந்தார். தம்முடைய பாதுகாப்பாளருடன் பெருந்தன்மையுடன் அக்பர் நடந்துகொண்டு அவர் மெக்கா செல்வதற்கு எல்லா சடங்குகளுடனும் மரியாதை செய்வித்து, மெக்காவிற்கு வழியனுப்பினர். பைராம்கான் குஜராத்திலிருக்கும் பாதனை (Patan) அடைந்ததும் அங்கே இவருடைய எதிரி ஒருவரால் 1561 ஜனவரி மாதத்தில் கொல்லப்பட்டார். அவருடைய இளைய மகன் அப்துர்ரஹீம் காப்பாற்றப்பட்டார். பின்னல் பேரரசின் முதல் பிரபுவாகவும் அப்துர்ரஹீம் ஆனர். மன்னரின் பாதுகாப்பாளருக்கு எதிராக ஏற்பட்ட சூழ்ச்சி அவரை அழிக்க விரும்பிய அரசவை தன்னலக்குழு ஒன்றால் ஏற்படுத்தப்பட்டதாகும். இக் குழுவினர் வைதீக முஸ்லீம்களால் ஆதரிக்கப்பட்டனர். பைராம்கான் ஷியா என்பதனுலும் அவர் சேக்கதாய் என்பவரை சதர்-உஸ்-சுதர் என்ற பதவிக்குத் தேர்ந்தெடுத்ததினுலும் வைதீகர்கள் மனம் புழுங்கினர்கள். அந்தப்புர ஆதிக்கத்தின் கீழ் இருந்த அக்பர் அந்தச் சமயத்தில் நாட்டு

நடவடிக்கைகளில் எவ்வித அக்கறையுமின்றி இருந்தார். பைராம் கானின் விஷயத்தில் அக்பர் தம் இச்சைப்படி நடந்துகொண்டது அவரது தாராள மனப்பான்மையை வெளிப்படுத்துகின்றது. பைராம்கானின் குற்றங்கள் உண்மையாகவே அக்பரால் மன்னிக்கப்படுதற்குத் தகுதியுடையவை. தம் தந்தையைப் போன்றே அக்பரும் தம்முடைய அரச பதவிக்கு இத் துருக்கியரான பைராம் கானின் நன்றியுணர்வுக்குக் கடமைப்பட்டிருக்கின்றார்.

## அந்தப்புர அரசாட்சி (1560-1562)

அக்பரின் வாழ்க்கையில் அந்த இரண்டு ஆண்டுகள் பெருமையற்ற ஆண்டுகளாகும். அவருடைய வாழ்க்கை வரலாற்றறிஞர் மீண்டும் மீண்டும் குறிப்பிடுவதுபோல இளம் மன்னர் 'திரைக்குப் பின் இருந்ததோடு', விளையாட்டைத் தவிர மற்றெதிலும் கருத்தைச் செலுத்தவில்லை. இராச்சிய நடவடிக்கைகளில் அவர் எவ்வித அக்கறையும் காட்டவில்லை. எத்தீய செயலுக்கும் அஞ்சாத பெண்டிர்கள் ஆதாம்கான், பீர் முகமது பொல்லாத மனிதர்களின் துணையால் திறமையற்ற ஆட்சி நடத்திவந்தனர். ஆதாம்கான், பீர்முகமது ஆகியவர்களின் பொறுப்பில் விடப்பட்ட மாளவப் படையெடுப்பு ஈவு இரக்கமின்றிக் கொடுமையாக நடத்தப்பட்டது. அவர்கள் கைப்பற்றிய கொள்ளைப் பொருள்களை வாங்குவதில் அக்பர் கடுமையாக நடந்துகொண்டாலும் அப் படையெடுப்பின் கொடுமையை அக்பர் ஆட்சேபிக்கவில்லை. இராஜபுதனத்திலிருந்த மிர்தா (மெர்தா) என்ற அரண் 1562-ல் கைப்பற்றப்பட்டது.

## அக்பர் விடுதலை பெறுதல்

இழிந்த பாதுகாப்பிலிருந்து 1562 மே மாதத்தில் அக்பர் விடுதலை பெற்றார். முந்திய நவம்பர் மாதத்து சாம்ஸ்வுதீன் அத்காகான் என்பவரை அக்பர் முதலமைச்சராக நியமித்ததை மாஹம் அனகாவும் அவளுடைய சகாக்களும் விரும்பவில்லை. ஆதிக்கம் தங்கள் கையிலிருந்து நழுவிவிடும் என்று அவர்கள் அஞ்சினார்கள். ஒரு நாள் இரவு முதலமைச்சர் தம் அறையில் ஏதோ ஒரு பணியில் ஈடுபட்டுக் கொண்டிருந்தபொழுது ஆதாம்கான் அவ்வறையில் நுழைந்து அவரைக் குத்திக் கொன்றார். ஒலி கேட்ட அக்பர் தம் அறையிலிருந்து வெளியே வந்தார். அவரையும் ஆதாம்கான் கொல்ல முயன்றார். ஆனால் மயிரிழையில் அக்பர் தப்பினார். தம்முடைய வலிமைமிக்க கையினால் அத் துரோகியைத் தாக்கி வீழ்த்தினார். அவன் ஞாயிலிலிருந்து (Battlements) உருட்டித் தள்ளப்பட்டான். இவ்விதமாக ஆதாம்கான் தான் செய்த குற்றத்திற்குத் தகுந்த தண்டனை பெற்றான். காண்டேஷ்

படையெடுப்பின்பொழுது பீர்முகமதுவும் அவ்வாண்டிலேயே இறந்தான்—'அநாதைகள், வலுவற்றவர்கள், சிறையிலடைக்கப் பட்டவர்கள் முதலியோரின் சாபங்களே அவனைக் கொன்றன'. இக்காலத்திலிருந்து அக்பர் ஒரு சுதந்திர மனிதரானார். இருப் பினும் தன் அரைப் பைத்தியத் தாய் மாமன் காஜா முஅஜ்ஜம் (Khwaja Muazzam) என்ற அரக்கன் விலக்கப்பட்ட பின்னரே அக்பர் முழு விடுதலை அடைந்தார் (1564). அடுத்த நாற்பத்தோர் ஆண்டுகள் தம் ஆட்சியின் கொள்கைகள் எல்லாம் அக்பரின் கொள்கைகளாகவே இருந்தன.

**சீர்திருத்தங்கள்**

பாபருக்கும் ஹுமாயூனுக்கும் கீழ்ப்படிந்திருந்த சிறிய நாடான ஆம்பர் நாட்டு அரசர் ராஜா பீஹாரிமால் (Raja Biharmal) 1555-ல் அக்பருக்கு அறிமுகப்படுத்தப்பட்டு அக்பரால் சிறப்பாக வரவேற்கப்பட்டார். 1561-ல் ராஜா பீஹாரிமால் ஆஜ்மீரின் ஜாஹீர்தாரரால் தாக்கப்பட்டு ஒடுக்கப்பட்டார். அவருடைய மகனும் பிணையாகக் (hostage) கொண்டு செல்லப்பட்டான். அக்பரின் ஆணைதான் ராஜா பீஹாரிமாலை முழுமையாக அழிவதி லிருந்து தடுத்தது. தம் நிலையை வலிமைப் படுத்திக்கொள்ள நினைத்த ராஜா தம் மகளை அக்பருக்கு மணம் செய்துவைக்க முன் வந்தார். சாம்பர் என்ற இடத்தில் அக்பர் அவ்விளவரசியை மணம் புரிந்துகொண்டார். இவ்விளவரசியே பேரரசர் ஜஹாங் கீரின் தாய் ஆவாள். பீஹாரிமாலின் சுவீகாரப் பேரரான மான் சிங்கை அக்பர் பணியில் அமர்த்திக்கொண்டார். அதே ஆண்டில் தோடர்மால் என்பவரும் பேரரசின் வருமானத் துறையில் பணி புரிய நுழைந்தார். இராஜபுத்திரர்களோடு செய்துகொண்ட திருமண உறவும் அவர்களை அரசாங்கப் பதவிகளில் நியமித்ததும் அக்பரை இந்துக்களுக்கும், முஸ்லீம்களுக்கும் அரசராக இருக்கும் சிறப்பான நிலைமைக்கு அவரை உயர்த்திற்று. பின்வரும் காலங் களிலும் மற்ற இராஜபுத்திர இளவரசிகளுடனும் திருமணங்கள் நடந்தன. இச்சமயத்தில் (1562-64) அக்பர் அநேக முக்கிய மாறுதல்கள் செய்தார். மதுராவில் யாத்ரீகர்களின்மீது இருந்த தீர்வைகளைத் தவிர்த்தார். போர்க் கைதிகளை அடிமைகளாக ஆக்குவதை தடுத்து ஃபிரோசா துக்ளக்கின் கொள்கையை மாற்றி யமைத்தார். மேலும் அபூல்பாஸலின் கூற்றின்படி அக்பர் முஸ்லீம் அல்லாதாரின்மீது விதிக்கப்பட்டிருந்த ஜெஸியா அல்லது தலைவரியையும் நீக்கினார். (1575ஆம் ஆண்டில் ஜெஸியா வரி விதிக்கப்பட்டதென்றும் அது 1579ஆம் ஆண்டில் நீக்கப்பட்டது என்றும் பதோனி குறிப்பிடுகின்றார்). இச்சீர்திருத்தங்களெல் லாம் அக்பராலேயே செய்யுப்பட்டவை, சமயத்துறையில் அபூல்

பாஸல் போன்றவர்களின் செல்வாக்குக்குக்கீழ் வருவதற்கு முன்னமேயே இச்சீர்திருத்தங்கள் அக்பரால் செய்யப்பட்டன.

## அக்பரின் பேரவா

பேராசை மிக்கவர்களில் ஒருவரும், அதிகாரத்தையும் செல்வத்தையும் பெரிதும் விரும்பியவரும், தம் சிம்மாசனத்திற்கு அருகில் எவ்வித எதிரியும் நெருங்க விரும்பாதவருமான அக்பர் இந்தியாவில் வடமேற்குப் பகுதியையும், மத்திய பகுதியையும் வெல்லும் முயற்சியில் இப்பொழுது ஈடுபட்டிருந்தார். இப்பகுதிகளை வென்றபின்னர் மேற்கு, கிழக்கு, தெற்கு ஆகிய பகுதிகளையும் கைப்பற்றுவதில் அக்பர் முனைந்தார். இவருடைய படையெடுப்புகள் ஆக்கிரமிப்புச் செயல்களேயாகும். தம் அரசுக்குச் சுற்றியுள்ள எல்லா நாடுகளின் சுதந்திரத்தையும் அழித்து இந்தியா முழுவதும் தன்னிகரில்லாத தலைவனாக மிளிரவேண்டுமென்பதே அக்பருடைய பேரவாவாகும். 1601, ஜனவரித் திங்கள் அஷிர்கார் (Asirgarh) என்ற வலிமைமிக்க கோட்டையைக் கைப்பற்றும்வரைக்கும் அக்பர் இக் கொள்கையை மனவுறுதியுடனும் விடாமுயற்சியுடனும் பின்பற்றினர். இப்படையெடுப்பே இவருடைய இறுதிப் படையெடுப்பேயாகும். இவ்வாண்டு முதல் 1605ஆம் ஆண்டில் இவர் இறக்கும் வரைக்கும் தன்னை மீறிய சூழ்நிலைகள் அக்பர் படையெடுப்புகள் நிகழ்த்துவதைத் தடுத்தன.

காராவின் கவர்னரான முதலாம் ஆஸப்கான் என்ற மாபெரும் பிரபு கோண்டுவானவின் சுதந்திரத்தை அழிக்க அக்பரைத் தூண்டினர். இத்தூண்டுதலினல் அக்பர் தன் படையெடுப்பு வாழ்க்கையைத் தொடங்கினர். தற்காலத்து மத்தியப் பிரதேசத்தின் வடக்குப் பகுதியே அக்கால கோண்டுவானவாக அமைந்திருந்தது. அக்காலத்தில் பெருங்கோப்பெண்டு, ராணி துர்காவதி என்பவர் கோண்டுவானவை ஆண்டு வந்தார். தலைசிறந்த இளவரசியான இவரது ஆட்சி முறையில் எவ்வித குறையும் காணப்படவில்லை. போரில் ராணி துர்காவதி கொல்லப்பட்டார்; அவரது நாடும் கைப்பற்றப்பட்டது; பல நூற்றாண்டுகளாகச் சேர்த்து வைக்கப்பட்டிருந்த செல்வங்களும் கொள்ளையிடப்பட்டன. மற்ற நாடுகளை வென்று அப்பகுதி மக்களுக்கு நன்மைகள் செய்வதற்காகவே அக்பர் படையெடுப்புகளை நிகழ்த்தினர் என்ற அர்த்தமற்ற பிதற்றலை அக்பரை இச்சகம் பேசுவோர் எழுதியுள்ளனர். ஆனல் அக்பரே இப்பொருள்பற்றி ஒருபொழுதும் பேசவில்லை. அண்டை நாடுகள் சுதந்திரம் தனக்கு ஒரு பெரும் இழுக்கு என்று அக்பர் கருதியதை அவர் மறைத்து வைக்கவுமில்லை, அவரே பின்வருமாறு கூறியுள்ளார். "ஓர்

அரசன் படையெடுப்பதை எப்பொழுதும் கருத்தில் கொண்டிருக்க வேண்டும்; இல்லையேல் அவனுடைய அண்டை நாடுகள் அவனுக்கு எதிராக கிளர்ச்சி செய்யத் தொடங்கிவிடும். மக்களுக்குத் தொடர்ந்து பயிற்சி அளித்துக்கொண்டிருக்க வேண்டும். இல்லையேல் படைவீரர்கள் பயிற்சி பெருததினல் இன்பக் கேளிக்கைகளில் ஈடுபட்டு விடுவார்கள்''. இக் கொள்கைகளைத் தம் ஆட்சி காலம் முழுவதும் அக்பர் உறுதியாகக் கடைப்பிடித்து வந்தார்.

**கிளர்ச்சிகள்**

இந்துஸ்தானம் அல்லது மேலை இந்தியாவில் பேரரசின் நிர்வாகத்தை வலிமையுள்ளதாக ஆக்குவதற்குத் தொடக்கத்தில் தலை சிறந்த அரண்களைக் கைப்பற்றுவது இன்றியமையாததாகும். குவாலியர் சுனர், மிர்தார் ஆகிய அரண்கள் அக்பரின் ஆட்சியின் தொடக்கத்திலேயே கைப்பற்றப்பட்டன. அவைகளுக்கு அடுத்து இராசபுதனத்தின் மேவாரின் சிசோந்திய ராணுவின் இராச்சியப் பகுதியில் இருந்த சித்தூர் தாக்கப்பட்டது. இப்பகுதி உதையப் பூர் என்று சிறப்பாக வழங்கி வந்தது. பாதுஷாவின் பல பேராசைத் திட்டங்கள் அக்காலத்து எழுந்த பல கிளர்ச்சிகளினல் சில காலம் தடைப்பட்டன. கிழக்கு மாகாணங்களில் உஸ்பெக் இன அதிகாரிகளின் தலைமையின்கீழ் அக் கிளர்ச்சிகள் ஏற்பட்டன. அவ் வுஸ்பெக் அதிகாரிகள் அக்பரின் பர்ரசீக முறைகளை வெறுத்தார்கள். கம்ரானின் மகன் சிம்மாசனத்திற்கு வருவதை அவர்கள் விரும்பினர்கள். கம்ரானின் மகன் போலி உரிமையாளனகப் பயன்படுத்துவதைத் தடுத்து நாட்டின் நலனைப் பாதுகாக்க அவனை இரகசியமாகத் தூக்கிலிடுவதற்கு 1565-ல் அக்பர் ஆணையிட வேண்டியிருந்தது. மொகலாய வம்சத்தின் வரலாற்றை இரத்தக் கறைபடும்படிச் செய்யப்பட்ட கொலைகளில் இக்கொலை முதலாவதாகும். கான்ஜமானும் மற்ற உஸ்பெக் தலைவர்களும் நடத்திய கிளர்ச்சிகள் 1567ஆம் ஆண்டில் முற்றுப் பெற்றது. இதன் பின்னர் அக்பர் எத்தடையுமின்றி சித்தூர் முற்றுகைக்குத் தன் முழுக் கவனத்தையும் செலுத்தினர். இராஜபுத்திர இனத்தவர்களின் தலைவராகவும் விடுதலையுடனும் ராணு சித்தூரை ஆண்டு வந்ததை அக்பர் விரும்பவில்லை. சித்தூர் இராஜபுத்திர குடும்பத்தினர் முகலாய அரசர்களுடன் எக்காலத்திலும் திருமண உறவு கொண்டிருக்கவில்லை. 1567-ல் சித்தூரை ஆண்டுகொண்டிருந்த ராணு உதையசிங் ஒரு கோழை; சிறப்புமிக்க தன் மரபுக்குத் தகுதியற்றவன். இருப்பினும் அவருடைய திறமையற்ற தன்மை தன்னுடைய இனத்தவரைக் காக்கும்பொருட்டு வலிமையான பாதுகாப்பை நிறுவுவதற்குத் தடை செய்யவில்லை,

## சித்தூர் முற்றுகை

அக்பர் ஆட்சியில் மிகச் சிறந்த, உணர்ச்சி ஊட்டுகிற ராணுவச் செயலான சித்தூர் முற்றுகை 1567ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் இருபதாம் நாளிலிருந்து 1568 பிப்ரவரி 23ஆம் நாள்வரை நீடித்திருந்தது. முற்றுகையின் போது வீரமற்ற ராணு வீற்றிருக்கவேண்டிய இடத்தில் தாம் அமர்ந்துகொண்டு கோட்டையைச் சிறப்பாகப் பாதுகாத்த ஜெய்மால் என்ற தலைவரை அக்பர் கொன்றிரா விட்டால் முற்றுகை மேலும், பலகாலம் நீடித்திருக்கும். தம்முடைய தலைவரை இழந்த படைவீரர்கள் நம்பிக்கை இழந்தனர். இகழ்ச்சியிலிருந்து காப்பாற்றப்படும் பொருட்டுப் பெண்கள் உடன்கட்டை ஏற்றப்பட்டனர். ஜவ்கார் என வழங்கப்பட்டு வந்த இச் சடங்கு ராஜபுத்திரர்களால் தங்களுடைய பேராபத்துக் காலத்தின்பொழுது கையாளப்பட்டு வந்தது. கோட்டையில் இருந்த வீரர்கள் முகலாயர்களின் ஆட்களுக்கு இரையாகி மடிந்தனர். கடுமையான எதிர்ப்பால் கோபமடைந்த அக்பர் நாட்டின் பாதுகாப்புக்குப் பணியாற்றி 30 ஆயிரம் இராசபுத்திர மக்களை இரக்கமில்லாது கொன்றார்.

அரண் வாயில்கள் அவற்றின் முளைகளிலிருந்து (Linges) அகற்றப்பட்டு ஆக்ராவுக்குக் கொண்டு செல்லப்பட்டன. மிகப் பெரிய மத்தளங்களும் பிரமாண்டமான மெழுகு விளக்குகளும் வெற்றியாளர்களால் கைப்பற்றப்பட்டன. இப் பெரிய மத்தளங்கள் இளவரசர்கள் போவதையும் வருவதையும் பல மைல் சுற்றுப் புறங்களின் உள்ள மக்களுக்கு அறிவிப்பதற்காக இவை ராஜபுத்திரர்களால் பயன்படுத்தப்பட்டிருந்தன. மிகப்பெரிய மெழுகு விளக்கும் காளி அன்னைக்கு ஒளி அளிப்பதற்காக அவர்களால் பயன்படுத்தப்பட்டிருந்தது. இப்பொழுது அவ் விளக்கு முகலாயர்களின் மண்டபங்களை அலங்கரிக்கக் கொண்டு செல்லப் பட்டது. சித்தூர் பாழடைந்த நிலையில் விட்டுச் செல்லப்பட்டது. இதனால் பதினெட்டாம் நூற்றாண்டின் சித்தூர் புலிகளும் இதர காட்டு விலங்குகளும் நடமாடும் இடமாகியது. சமீப காலத்தில் அந்த நகரம் ஓரளவு புனர் வாழ்வு பெற்றிருந்தது. கீழ் நகரம் செழிப்புடனிருப்பதோடு ஒரு இரயில் நிலையத்தையும் பெற்றிருக்கின்றது.

## இராசபுதனத்தின் விதி

சித்தூர் வீழ்ச்சிக்குப் பின்னர் ராந்தம்போரின் (Rantham bhor) வீழ்ச்சி ஏற்பட்டது. சித்தூர் வீழ்ச்சியடைந்ததனால் அக்பர் இராசபுதனம் முழுவதின் மீதும் இறைமைத் தலைமையைப்

பெருவிடினும் அவர் அப் பகுதியின் தலைவரானர் மேவார் மக்களை அடிபணியும்படி செய்ய அக்பரால் முடியவில்லை. தம் ஆட்சியின் பெரும் பகுதிக்காலம் அவ்வப்பொழுது அவர்களுடன் அக்பர் போரிடவேண்டியிருந்தது. ஆனலும் மொகலாயர் தம் அண்டைப்புற இராசபுதன நாட்டின்மேல் ஆதிக்கம் செலுத்தினர் என்பதில் ஐயமில்லை. இராசபுதன இளவரசர்களில் பலர் பேரரசின் ஊதியம் பெறும் அதிகாரிகளாக நியமனம் பெறுவதில் திருப்திகொண்டனர். பலர் தங்களுடைய மகளிர்களை பேரரசர்களுக்கு மணம் புரிந்து வைத்தனர். இராசபுதனம் அல்லது ராஜஸ்தானம் மொகலாய சுபா அல்லது மாகாணமாகக் கருதப் பட்டது. இதனுடைய தலைநகரம் அஜ்மீராகும். இராசபுத்திர இனங்களின் திறன்மிக்க வீரர்கள் பெரும்பாலும் பாதுஷாவின் நன்றிமிக்க வீரர்கள் ஆனர்கள்.

ராந்தம்போர் கைப்பற்றப்பட்ட ஆண்டிலேயே (1569) யமுனை நதிக்குத் தெற்கில் பண்டேல் கண்டில் உள்ள வலிமைமிக்க கோட்டையான கலஞ்சார் கோட்டையின் தலைவாயில்களும் திறந்து விடப்பட்டன.

இவ்விதமாக அக்பர் தம் விருப்பங்களை மற்றத் திக்குகளில் பூர்த்தி செய்துகொள்வதற்காகவும் தம் படையெடுப்புகளை மேற்கில் அராபியக்கடல் வரைக்கும் கிழக்கில் வங்காளவிரிகுடா வரையிலும் பரப்பவும் சுதந்திரம் பெற்றிருந்தார்.

### அக்பரின் கலைப் பற்று

போர், படையெடுப்பு ஆகியவற்றில் மட்டுமே அக்பர் திருப்தி கொள்ளவில்லை. கலை ஆர்வம் உள்ளவராகவும் அவர் இருந்தார். இதனல் தம் ஆட்சியின் ஏழாம் ஆண்டிலேயே இந்தியாவின் மிகச் சிறந்த இசைக்கலைஞரான தான்சென் (Tansen) என்பவரின் பணிகளைப் பெறுவதற்கு அக்பர் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார். அவர் எக்காலத்திலும் இசைக்கலையின் சிறந்த ஆர்வம் கொண்டிருந்தார். கலையின் ஒவ்வொரு தோற்றமும் அக்பரைக் கவர்ந்தது. இளமையிலேயே அக்பர் புகழ்பெற்ற இரு கலைஞர்களிடமிருந்து ஓவியக்கலை சித்திரக்கலை ஆகிய கலைகளின் அடிப்படை நுணுக்கங்களைக் கற்றறிந்திருந்தார். சித்தூர் வீரர்கள் ஜெய்மால் (Jaimal); பட்டா (Patta) ஆகியவர்களின் சிலைகள் செதுக்கப்பெற்று ஆக்ரா கோட்டையின் வாயிலில் உள்ள கல் யானைகளின் மேல் வைக்கப்பட்டிருந்தன. இவ்விதம் செய்து அவர்களின் வீரத்தின் நினைவை அக்பர் கொண்டாடினர்.

### கட்டடங்கள்

கட்டடங்கள் கட்டுவதில் அக்பர் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். கட்டடக்கலையில் பற்றுக்கொண்டவராகவும் விளங்கினர். ஆக்ரா அரணின் சுவர்கள் வலிமைமிக்க கற்களைக் கொண்ட சுவர்களை கட்டுவது 1565-ல் தொடங்கப்பட்டது. வங்காள குஜராத்திய கட்டடக்கலைத் திட்டங்களை மாதிரியாகக் கொண்டு நூற்றுக்கணக்கான கட்டடங்கள் தம்முடைய நாட்டு எல்லைக்குள் கட்டப்பட்டன. இக் கட்டடங்களுள் பல ஷாஜஹானின் காலத்தில் இடித்துத் தரை மட்டமாக்கப் பட்டன. அக் கட்டடங்கள் வேறுபட்ட சுவைத்திறன்களைக் கொண்டிருந்தன. ஆக்ராவிற்கு இருபத்து மூன்று மைல் மேற்கில் இருந்த அரண்மனை நகரமான பத்பூர் சிக்ரி 1671-ல் துவக்கப்பட்டு ஆறு அல்லது ஏழு ஆண்டுகளில் கட்டி முடிக்கப்பட்டது.

### அக்பரின் பிள்ளைகள்

ஆக்ராவில் தங்கி வாழ்ந்து கொண்டிருந்தபொழுது தமது இரண்டு குழந்தைகளை இழக்கும் அவலநிலை அக்பருக்கு ஏற்பட்டது. அதனால் அவ்விடம் தீவினையுற்ற இடம் என்று அக்பர் கருதத் தொடங்கினர். சிக்ரி என்ற இடத்தில் பாறைகளுக்கிடையில் வாழ்ந்துவந்த ஷேக் சலீம் ஷிஷ்தி (Shaik Salim Chishti) என்ற புகழ்பெற்ற ஒரு முஸ்லீம் துறவி பேரரசருக்கு மூன்று பிள்ளைகள் பிறப்பார்கள் என்று உறுதிமொழி கொடுத்தார். இம் மூன்று பிள்ளைகளும் உயிர்பிழைத்திருந்தனர். அவ் வருவதுரைத்தல் நிறைவேற்றம் பெற்றது. 1569, ஆகஸ்டில் மூத்த மகன் பிறந்தான். ஷேக் சலீம் ஷிஷ்தியின் ஆசியால் பிறந்ததனல் அத் துறவியைச் சிறப்பிப்பதற்காக அக் குழந்தைக்கு சலீம் என்ற பெயர் சூட்டப்பட்டது. அக் குழந்தை தான் வருங் காலத்தில் பேரரசர் ஜஹாங்கீர் என்று விளங்கியது. இரண்டாம் இளவரசரான மூரத் (Murad) 1570-ல் பிறந்தார். இவர் தமது தந்தை மரணமடைவதற்கு ஆறு ஆண்டுகளுக்கு முன்பே குடியின் விளைவால் உயிரிழந்தார். மூன்றும் மகனை தானியல் (Daniyal) தம்முடைய சகோதரர் இறந்த நான்கு ஆண்டுக்குப்பின்னர் அதே கதியை அடைந்தார்.

### பத்பூர் சிக்ரி (Fathpur-Sikri)

துறவியின் சுற்றுப்புறம் தமக்கு நல்வினை ஊட்டும் என்று நம்பி, ஷேய்க் பயன்படுத்துவதற்கென்று ஒரு பெரிய மசூதியையும் அக் காலத்துக்கு இன்றியமையாதவை எனக் கருதப்பட்ட வசதிகளையும், கலைத்திறனின் எல்லாப் பொருள்களாலும் அலங்கரிக்கப்

பட்டதுமான அரசன் தங்குவதற்கான ஓர் அரண்மனையையும் இல்லத்தையும் அதன் பக்கத்தில் பேரரசர் கட்ட முடிவுசெய்தார்.

1573-ல் குஜராத் கைப்பற்றப்பட்டபின் அப் புதிய நகரம் பத்தாபாத் அல்லது பத்துபூர், 'வெற்றிநகர்' என்று பெயரிடப் பட்டது. இப் பெயரைப்போன்ற மற்ற இடங்களை இந் நகரிலிருந்து வேறுபடுத்துவதற்கு இந்நகரம் வழக்கமாக பத்பூர் சிக்ரி என்று வழங்கிவருகிறது. மாபெரும் மசூதி இன்றும் குறை பாடின்றியே உள்ளது. மிக முக்கியமான அரண்மனைக் கட்டடங்கள் பலமிக்க கவனத்துடன் தற்போது பாதுகாக்கப் பட்டு, அநேகமாக சிதைவுறுமலேயே இருக்கின்றன. இக் கட்டடங்கள் அப் பகுதியில் கிடைக்கும் சிவப்பு மணல் கற்களால் கட்டப்பட்டவை. இச் சிவப்பு மணல் கல் கட்டடத்திற்கு வலிமை தருபவை. பல்வேறு நாட்டைச் சேர்ந்த கலைஞர்கள் வரவழைக்கப் பட்டுக் கட்டடங்கள் செதுக்குகளோடும் சுவர் ஓவியங்களோடும் அலங்கரிக்கப்பட்டன. பெரும்பாலான செதுக்குகள் சிதைவுறு மல் தப்பித்துக்கொண்டன; எனினும், ஓவியங்களின் ஒரு சிலப் பகுதிகளே அழியாது இருக்கின்றன.

பத்பூர்சிக்ரி பதினைந்து ஆண்டுகளே பேரரசின் தலைநகராக இருந்தது. அதன் பின்னர் இந் நகரிலிருந்து அக்பர் வட புறத்துக்கு சென்றுர். 1601ஆம் ஆண்டில் ஒருமுறையே இந் நகரத்திற்குத் தாம் செல்லும் வழியில் வந்துசென்றுர். 1575–6-ல் கட்டப்பட்ட புலந்ததர்வாசா அல்லது மசூதியின் மிகப் பெரிய வழியில் முக்கியமான மிகப் புதிய கட்டடம் ஆகும். இது ஒரு வேளை குஜராத் வெற்றியை நினைவு கொண்டாடுவதற்காகக் கட்டப்பட்ட வெற்றி வளைவாக இருக்கலாம்.

**குஜராத் :**

மாளவத்திற்கும் அராபியக் கடலுக்கும் இடையே உள்ள குஜராத் என வழங்கிவந்த செழிப்பு மிக்க மாகாணம் சிறிது காலம்வரையே ஹுமாயூனின் கையில் இருந்தது. நீண்ட காலத் திற்கு முன்னிருந்தே கில்ஜிகள், முகமதுபின் துக்ளக் ஆகியவர் களின் காலத்தில் குஜராத் மாகாணம் டெல்லி சுல்தானியத்தின் ஆதிக்கத்தின்கீழ் இருந்தது. இதனுல் இம் மாகாணத்தை மீண்டும் பெறுவதற்கு அக்பர் முழுமையான உரிமைகளைக் கொண்டாடினுர். அம் மாகாணம் தான் பெற்றிருந்த செல்வத் திற்காகவே ஆக்ரமிப்பை வரவழைத்தது. அச் சமயத்தில்தான் அம் மாகாணத்தின் அரசாங்கமும் குழப்பத்துக்கு உள்ளாகியது. அப் பகுதித் தலைவர் ஒருவர் அக்பர் தலையிடவேண்டும் என்று கேட்டுக்கொண்டிருந்தார்.

## குஜராத் படையெடுப்பு

படையெடுப்பு 1572 ஜூலை மாதம் ஆரம்பமானது. ஒரு முற்றுகைக்குப் பின்னர் சூரத் பிடிக்கப்பட்டது. சன்னலில் நடந்த கடுமையான சண்டை ஒன்றில் அக்பருடைய வீரமும் வலிமையும் சிறப்பாக நிரூபிக்கப்பட்டன.[1]

இப்பொழுது இவரை பேரரசர் என்று அழைக்கலாம். இப் பேரரசர் அடுத்த ஏப்ரல் மாதத்தில் வீடு திரும்பும்பொழுது புதிதாக கைப்பற்றப்பட்ட இம் மாகாணம் தம் நாட்டோடு இணைக்கப்பட்டுள்ளது என்றும் தம் அதிகாரிகளின் கையில் அதை பத்திரமாக விட்டுவிடலாம் என்றும் இவர் கருதினர். ஆனால் இவர் பத்பூர் சிக்ரியை அடைந்தவுடனே, தம் கலகம் செய்யும் ஒன்றுவிட்ட சகோதரர்களின் தலைமையின்கீழ் விருஜ் ஜாக்கள் என்று வழங்கி வந்தவர்களும் முந்தியே தமக்கு மிக்க இடையூறு கொடுத்தவர்களுமான இவர்களின் கலகத்தையும் இக்தியார்—உல்-முஸ்க் என்ற பிரபுவினல் நடந்த கலகத்தையும் அக்பர் கேள்விப்பட்டார். அப்பொழுது 31 வயதடைந்த அசாதாரண உடல், மன சக்திகளைத் தடையின்றிக் கையாளும் நிலையிலிருந்த அக்பர் அக் கலகங்களை சமாளிப்பதற்கு வீறுகொண்டு எழுந்தார். புதிய படையெடுப்புக்கென்று மிகுந்த வேகத்துடன் ஒவ்வொன்றையும் தானே கவனித்து எச் செலவுக்கும் தயங்காது ஒரு படையை அக்பர் திரட்டினர். எல்லோரையும்விட தானே முதலில் கிளம்புவதற்கு தயாராகி விடுவதாக அறியப்படுத்தி அவ்வாக்கையும் காப் பாற்றினர். பாதுகாவலர்களின் சிறு குழு ஒன்றை முன் னரே அனுப்பிவைத்து மூவாயிரம் குதிரை வீரர்களைக் கொண்டு ஆகஸ்டு 23ஆம் தேதி தம் தலைநகரைவிட்டுப் புயல் வேகத்தில் ராஜபுதனத்தைக் கடந்துசென்று அக்பர் ஆமதா பாத்தின் புற எல்லைகளை அடைந்தார். இவ்விதமாக இவர் 600 மைல் தூரத்தை மொத்தத்தில் பதினெரு நாட்களில்—ஒன்பது நாட்கள் பிரயாணத்தில் கடந்தார். இது பொறுமையின் சிறப்பு மிக்க அருஞ் செயலாகும். தன் சிறிய படையைக்கொண்டு இருப தாயிரம் வீரர்களைக்கொண்ட எதிரியுடன் ஆமதாபாத்திற்கு அருகில் 1573 செப்டம்பர் மாதம் 2ஆம் நாள் போரிட்டு நிலையான வெற்றியைப் பேரரசர் பெற்ருர். அக்டோபர் மாதம் 4ஆம் தேதி தம் தலைநகருக்கு அவர் திரும்பினர். அப்பொழுது குஜராத் நிச்சயமாக பேரரசின் பகுதியாக இருந்தது. அம் மாகாணம்

[1] பம்பாயில் கெயிரா மாவட்டத்தில் தாஸ்ரா என்ற இடத்துக்கு அருகில் உள்ளது.

பின்னுல் பலமுறை சூரையாடப்பட்டதெனினும் 1758-ல் ஆமதா பாத்தை மராட்டியர்கள் கைப்பற்றும்வரை பேரரசின் மேலாண்மை நின்று நிலேத்தது.

## குஜராத்தைக்கைப்பற்றுதல் ஒரு யுகமாகும்

அக்பரின் வரலாற்றில் குஜராத்தைக்கைப்பற்றுதல் ஒரு முக்கிய யுகமாகும். குஜராத்தைத் தன் நாட்டோடு இணேத்தது, சூரத், இதர மேற்குத்துறைமுகங்கள் ஆகியவற்றின் வழியாக நடந்துகொண்டிருந்த வாணிகத்திஞல் கடலேப் பயன்படுத்தும் உரிமை அளித்தது. இதனுல் நாட்டின் நிலப்பகுதியும் வருமான மும் அதிகரித்தன.

ஆகவே அரசர் பெற்ற வெகுமதிகளில் குஜராத் மாகாணம் முக்கிய வெகுமதியாக ஆயிற்று. அக்பர் இப்பொழுது முதல் முறையாகக் கடலேப் பார்த்தார். போர்ச்சுகீசியருடன் நேர்முகத் தொடர்பு கொண்டார். இவ்விதமாக அவருடைய மனத்தில் பணியாற்றப் புதிய கூறுகள் நுழைக்கப்பட்டன. அம் மாகாணம் திறன்மிக்க நிதியாளரான இராஜா தோடர்மாலுக்குப் பயிற்சி மைதானமானது. இவருடைய முன்னேற்றக் கொள்கைகளேக் கொண்ட வருமானத் திட்டம் முதன் முதலில் குஜராத்தில் நுழைக்கப்பட்டது.[1]

## சீர்திருத்தங்கள்

படையெடுப்பின் முடிவு அக்பருக்கும் அவருடைய ஆலோசகர் களுக்கும் பல நிர்வாகச் சீர்திருத்தங்களே நுழைப்பதற்கு வாய்ப்பு அளித்தது.

அதிகாரிகள் அல்லது மான்சப்தாரிகள் தொடர்ந்து புரிந்து கொண்டிருந்த மோசடிகளே ஒடுக்க அரசாங்கம் பெரும் முயற்சி எடுத்தது. இவர்கள் ஒவ்வொருவரும் குறிப்பிட்ட எண்ணிக்கை உள்ள குதிரை வீரர்களே அரசாங்கத்திற்கு அளிக்கக் கடமைப் பட்டிருந்தனர். 'சூடுபோடும் முறை' என்று வழங்கப்பட்டு வந்த சாதனமே முக்கியமாகக் கையாளப்பட்டு வந்தது. இம் முறை அலாவுத்தீன் கில்ஜி, ஷெர்ஷா ஆகியவர்களின் வழி காட்டும் முறைகளே அடிப்படையாகக் கொண்டிருந்தது. அரசாங்கப் பணியில் இருக்கும் ஒவ்வொரு குதிரையும் சூடு

[1] திட்டம் என்ற சொல் Settlement) தனித்துறைப் பொருளில் பந்தோபஸ்த் என்ற பாரசீக சொல்லின் மொழி பெயர்ப்பாகும். நிலவருமானம் அல்லது மன்னனின் நிலம், அதாவது பயிரிடப்பட்ட நிலத்தின் விளேபொருளில் அரசாங்கத்தின் பங்கு அல்லது அதற்கு சமமான ரொக்கம் என்பதின் மதிப் பீட்டுக்கு இன்றியமையாத முறைகளே அது உட்கொண்டிருக்கிறது.

இடப்படுவதற்குரிய விரிவான சட்டங்கள் வகுக்கப்பட்டிருந்தன. இதனால் குதிரைகளை மோசடியாகத் திரட்டுவது மிகவும் கடினமாகியது. இதனால் தங்களுடைய நலன்கள் பாதிக்கப்பட்ட சில செல்வாக்குப் பெற்றவர்கள் இம்முறைக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். இதனால் இம்முறை ஓரளவே வெற்றிபெற்றது.

ஜாகீர்தார்கள் அல்லது வருவாய் ஒப்படைப்பைப்பெற்றவர்களுடைய வலிமையைக் குறைக்கவும், ஜாகீர்களை அரச நிலங்களாக (கல்சா) மாற்றி, அதாவது பேரரசின் இராச்சியப் பகுதியை வசதியான பிரிவுகளாகப் பிரித்து ஊதியம் பெறும் அதிகாரிகளின் நேர்முக நிர்வாகத்தின் கீழ் அவைகளை வைத்து, மன்னனுடைய அதிகாரத்தை அதிகப்படுத்தவும் அக்பர் முயன்றார். ஃபிரோஸ் தூக்ளக் தம் அதிகாரிகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாவட்டத்தை ஊதியமாக அளிக்கும் முறையைக் கையாண்டார். வரி வசூல் செய்ய உரிமை பெற்றவர்கள் இம்மாவட்டங்களிலிருந்து அரசாங்கத்திற்கு வரவேண்டிய நிலவருமானத்தையும் தீர்வைகளையும் தாங்களே வசூல் செய்துகொண்டார்கள். அம்முறை தல பிரமுகர்களின் வலிமையை அதிகப்படுத்துகிறது என்பதையும் அவர்களை கிளர்ச்சி செய்யத் தூண்டும் போக்கை கொண்டது என்பதையும் அதே சமயத்தில் மத்திய அரசாங்கத்தின் நிதிக் கொள்கைக்கு கேடு விளைவிக்கும் என்பதையும் அக்பர் தெளிவர அறிந்துகொண்டார். இவர் பணத்தை விரும்பியதுமன்றித் தம் வருமானத்தை அதிகரிப்பதிலும் கருத்தாய் இருந்தார். இதனால் இவர் ஜாகீர்கள் அல்லது மானியங்களை ஒப்படைக்கும் வழக்கத்தைக் கூடியவரையிலும் கைவிட்டுத் திட்டமான ஊதியங்களைப் பெறும் அதிகாரிகளை நியமிப்பதையே விரும்பினார்.

இதன் விளைவாக பணிமுறை அதிகரித்தது. அது அரசாங்கத்தின் திறன் படைத்த கருவியாக வேண்டுமென்றால் பணித்துறை ஆட்சி அல்லது படிப்படியாக அமைந்திருந்த நாட்டு அதிகாரிகளின் பணிமுறை ஒன்றை ஏற்படுத்த வேண்டியிருந்தது. அதன்படியே அக்பர் முன்னரே இருந்த மன்சப்தார்களின் முறையை ஒழுங்குபடுத்தி, அவற்றை முப்பத்து மூன்று தரங்களாகப் பிரித்து அமைத்தார். இவருடைய ஏற்பாடுகள் பின்னால் வர்ணிக்கப்படும். மேல் குறிப்பிட்டுள்ள நிர்வாக, நிதிமுறைகள் எல்லாம் 1573-ல் குஜராத்தைக் கைப்பற்றியதற்கும் 1575-ல் வங்காளத்தின்மீது படையெடுப்பு நடத்தியதற்குமிடையில் கிடைத்த காலத்தில்தான் உருவாக்கப்பட்டிருந்தன. ஒழுங்கு சட்டங்களெல்லாம் பின்வரும் ஆண்டுகளில் மேலும் சீராக்கப்பட்டன.

**வங்காளத்தைக் கைப்பற்றுதல்**

தம்முடைய பேரரசைக் கிழக்கு திக்கில் பரப்புவதற்கு, வங்காளம் நெடுங்காலத்திற்குமுன் தில்லி சுல்தானியத்தின் ஆதிக்கத்தின்கீழ் இருந்தது என்பதைத் தவிர வங்காளத்தை வெல்லுவதற்கு அக்பருக்கு வேறொரு சாக்கும் தேவைப்படவில்லை. வங்காளத்தில் இருந்த இள வயதான ஆப்கானிய அரசர் தாவூத்கானின் துடுக்கு அக்பரை அத்துணிகரச் செயலை மேற்கொள்ளும்படி வற்புறுத்தியது. அக்பரை வெளிப்படையாக எதிர்த்தும் தான் பேரரசரைவிட மிக்க வலிமை பெற்றவர் என்றும் தாவூத்கான் தன்னைப்பற்றியே கருதிக்கொண்டார். தாவூத்கானின் தந்தை சுலைமான் காரணி (Sulaiman Kararani) பாதுஷாவின் திறமையை ஒழுங்குற ஏற்றுக்கொள்வதில் கவனமாயிருந்தார். 1574-ல் செருக்குமிக்க இளவரசனைத் தண்டிக்க அக்பர் நடவடிக்கைகள் எடுத்தார். ஆறுகளின் வழியாக பயணம் செய்து, இந்துக்களின் படையெடுப்புகளைத் தடை செய்யும் மழைக்காலம் ஓங்கியிருக்கும் சமயத்தில் தாவூத்தை பாட்னுவிலிருந்த ஹாஜிப்பூரிலிருந்தும் அக்பர் துரத்தி அடித்தார். ஆனால் மாஸிடோனியாவைச் (Macedonia) சார்ந்த அலெக்சாண்டர் பருவநிலைகளை எவ்வாறு புறக்கணித்திருந்தாரோ அவ்வாறும் அக்பரும் பருவநிலைகளைப் புறக்கணித்திருந்தார். தம் அதிகாரிகளின் விருப்பத்திற்கு மாறாக தம் படையெடுப்பை உடனே மாற்றுமாறு அக்பர் வற்புறுத்தினர். அவரே பத்பூர்சிக்ரிக்கு திரும்பிவிட்டார். பாலாசூர் (Balasore) மாவட்டத்திலுள்ள துக்கோரியி (Tukaroi) என்ற இடத்தில் தாவூத் 1575-ல் தோற்கடிக்கப்பட்டார். தாவூத்துக்கு எளிய நிபந்தனைகளை அளித்து, அவரை மீண்டும் வலிமை பெறும்படி செய்த தளபதியான வயதான முனீம்கான் தவருக தயவு காட்டாதிருந்திருப்பாராயின் போர் முடிவானதாக இருந்திருக்கும், முடிவும் அடைந்திருக்கும். இதனல் மேலும் ஒரு படையெடுப்பு நடத்தவேண்டியிருந்தது. ராஜ்மஹாலுக்கு அருகில் நடந்த சண்டையொன்றில்தான் தாவூத் இறுதியாக 1576 ஜூலை மாதத்தில் முறியடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். அந்நாளிலிருந்து வங்காளம் தன் சுதந்திரத்தை இழந்தது.

1592ஆம் ஆண்டுவரை ஒரிஸ்ஸா இணைக்கப்படவில்லை.

**ராணு பிரதாப்சிங்கின் தோல்வி**

வங்காளம் 1576-ல் இணைக்கப்பட்டது. அதே ஆண்டில் ஆம்பரைச் சார்ந்த குன்வார் மான்சிங் (Kunwar Mansingh of Ambur) இவருடைய சுவீகாரச் சகோதரியைப் பேரரசர் மணம்

புரிந்திருந்தார்—உதயசிங் என்ற கோழையின் மகனை மேவாரின் வீரமிக்க ராணு பிரதாப்சிங்கை மிகக் கடுமையாகத் தோற்கடித்தார். கோல்குண்டா (Golkunda) நகரின் அருகில் ஆல்திகாட் (Haltighat) கணவாயின் வாயிலில் நடந்த இச்சண்டை வேறுபாடின்றி இவ்விரு பெயர்களாலும் வழங்கிவருகிறது. தொலைவிலுள்ள அரண்களில் ராணு அடைக்கலம் புகுமாறு விரட்டியடிக்கப்பட்டார். இவருடைய இராச்சியத்தின் அரண்கள் பேரரசவாதிகளின் கையில் சிக்கின. ஆனால் 1597ஆம் ஆண்டில் தாம் இறப்பதற்குமுன் தாம் இழந்த அரண்களில் பலவற்றை அவர் மீண்டும் பெற்ருர். அஜ்மீர், சித்தூர், மந்தல்கர் ஆகிய அரண்கள் எக்காலத்தும் பாதுஷாவின் அதிகாரிகளுடைய பொறுப்பிலேயே இருந்தன.

**1576-ல் பேரரசு**

தாம் அரியணையேறிய 20 ஆண்டுகளுக்குப் பிறகு 1576-ல் அக்பர் வங்காளத்தைக் கைப்பற்றினர். இக்கைப்பற்றுதல் அக்பரைப் பல ஆண்டுகளாகத் தமது ஆதிக்கத்துக்குட்படாதிருந்த சிந்துநதிப் போக்கின்கீழ்ப்பகுதியில் இருந்த (சிந்துவைத் தவிர) இந்து, கங்கை நதிப் பள்ளத்தாக்குகள் உள்பட இந்துஸ்தான் முழுவதற்கும் தலைவராக்கியது. இவ்விதமாக, அராபிய கடலிலிருந்து வங்காளவிரிகுடாவரையிலும் இமயமலையிலிருந்து நர்மதை வரையிலும் பரவியிருந்த இந்தியாவின் மதிப்புமிக்க பகுதிகளுக்கும் அரை சுதந்திரம் பெற்றிருந்த காபூல் மாகாணத்திற்கும் இவர் மேலதிகாரியானர். இவரது ஆட்சியின்கீழ் இருந்த இராச்சியப் பகுதிகள் மிகுதியான மக்கட் தொகை, செழிப்பான நிலம், ஏராளமான உற்பத்திப் பொருள்கள், பரந்த உள்நாட்டு, கடல் கடந்த வாணிபம் ஆகியவற்றையெல்லாம் உட்கொண்டு அக்காலத்திலும் உலகத்திலிருந்த மற்ற பேரரசுகளையெல்லாம் செல்வத்தில் மிஞ்சியிருந்தது. காஷ்மீர், ஒரிஸ்ஸா, சிந்து, காந்தாரம், காண்டேஷ், தக்காணத்தின் ஒரு பகுதி, முழுமையாகவே இணைக்கப்பட்டிருந்த காபூல் மாகாணம் ஆகிய பகுதிகளெல்லாம் அவருடைய பேரரசோடு பின்னல் இணைக்கப்பட்டன. பேரரசின் முக்கிய பாகங்களெல்லாம் ஏற்கெனவே இணைக்கப்பட்டிருந்ததனல் பின்னல் நடந்த அவ்விணைப்புகளெல்லாம் சுமார் இருபது ஆண்டுகளாக படிப்படியாக முயன்று பெறப்பட்டு ஒன்ருக்கப்பட்டிருந்த நெருக்கமான பேரரசை முழுமையாக்கியது.

**"தொழு இல்லம்" The "House of Worship".**

1575ஆம் ஆண்டிலிருந்து போர்க்களத்தில் படைகளுக்குத் தலைமை தாங்கும் பொறுப்பைத் தம்முடைய நம்பிக்கையான

மான்சிங், தோடர்மால், அப்துர் ரஹீம்போன்ற அதிகாரிகளிடம் அக்பர் ஒப்படைத்தார். பூனுவிலிருந்து திரும்பிய அவ்வாண்டின் தொடக்கத்தில் பத்பூர் சிக்ரியிருந்த அரண்மனைத் தோட்டங்களில் மசூதிக்கு அருகில் தம் கவனத்தைக் கவர்ந்த சமய, சமய நெறிப் பிரச்சினைகளை விவாதிப்பதற்கு விவாத மண்டலமாகப் பயன்படுத்துவதற்காகத் 'தொழுகை இல்லம்' (இபாதத் கானு) என வழங்கப்பட்ட அழகான கட்டடம் ஒன்றைக் கட்டுவதில் அக்பர் முனைந்தார். 1578 அல்லது 1579ஆம் ஆண்டுவரை முதல் மூன்று ஆண்டுகளில் முஸ்லீம் சமய நெறியின் பல்வேறு கருத்துக்கள்பற்றியே விவாதங்கள் நடைபெற்றன. அப்பொழுதே அவ்விவாதங்கள் சில வேளைகளில் வெறுப்புமிக்கவையாயிருந்தன. 1579ஆம் ஆண்டிலிருந்து 1582ஆம் ஆண்டில் விவாதங்கள் முடிவடைந்தபொழுது, பிற சமயப் பிரதிநிதிகளும் அனுமதிக்கப்பட்டனர்; விவாதிப்பவர்கள் அரண்மனையில் அந்தரங்க அறைகளில் கூடினர். 'தொழுகை இல்லம்' இருந்த இடம் அறவே மறக்கப்பட்டது, மிகப் பெரிதாகவும் அதிகமாக அலங்கரிக்கப்பட்டதுமான அக்கட்டடத்தின் ஓர் அடையாளமும்கூட காணப்படவில்லை. தமக்குத் தேவையற்றுப் போனபொழுது ஒருவேளை அக்கட்டடத்தை அக்பர் இடித்துவிட்டிருக்கக்கூடும்.

## மேலும் சீர்திருத்தங்கள்

1575, 1576ஆம் ஆண்டுகளில் பேரரசர் முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளவையோடு மேலும் பல நிர்வாகச் சீர்திருத்தத்தில் பெரிதும் கவனம் செலுத்தினர். பதிவு இலாகா ஒழுங்குற அமைக்கப்பட்டது; பத்பூர் சிக்ரியில் பதிவு அறை ஒன்றும் கட்டப்பட்டது. மன்சாப்தார்களைத் தரப்படுத்துவது மேலும் ஒழுங்காக்கப்பட்டது. பழம்மாகாணங்களைச் செயற்கை மாவட்டங்களாகப் பிரித்து, ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் கால் மில்லியன் ரூபாய் நிலவருமானம் தரும்படியான திட்டம் ஒன்று வகுக்கப்பட்டது. ஆனால் அத்திட்டம் நிறைவேறவில்லை. விரைவில் அரசாங்க 'பர்கானு'க்கள் என வழங்கிவந்த ஏற்றுக்கொள்ளப்பட்ட உட்கோட்டங்களைப் பயன்படுத்தும் முறை மீண்டும் கையாளத் தொடங்கப்பட்டது.

நாணயச்சாலை 1577–8-ல் திருத்தி அமைக்கப்பட்டு, அப்துர் சமத் என்ற புகழ் பெற்ற கலைஞரின் பொறுப்பில் அது விடப்பட்டது. இருபது ஆண்டுகளுக்குமுன் அக்பரின் சித்திரக்கலை ஆசிரியராக இவர் இருந்தவர். நாணயச்சாலை சிறப்பாக நடத்தப்பட்ட இலாகாவாக இருந்தது. அக்பரின் நாணயங்கள் எண்ணிக்கையில் ஏராளமாகவும் தரத்தில் மிகச் சிறப்பாகவும் இருந்தன.

## ஜெஸூட் பாதிரிமார்களின் முதல் பிரசங்கக் குழு

*1572-ல் முதன்முதலாக ஐரோப்பியக் கிறித்தவர்களை அக்பர் நேர்முகமாக அறிந்துகொண்டார். அவ்வாண்டில் இவர் சில போர்ச்சுகீசிய வாணிகர்களை காம்பேயில் சந்தித்தார். அடுத்த ஆண்டில் 1573-ல் சூரத்தில் அயல்நாட்டவரரோடு தம் தொடர்பை மேலும் விரிவுபடுத்தினர். கோவாவில் இருந்த பிரதிநிதியின் தூதரான அந்தோனியோ காப்ராலுடன் அமைதி உடன்படிக்கை செய்துகொண்டார். வங்காளத்தில் மத குருக்களின் தலைவராக இருந்த தந்தை ஜூலியன் பெரைராவிடமிருந்தும் இதர மூலங்களிலிருந்தும் 1576, 1577 ஆண்டுகளில் பேரரசர் கிறித்தவ மதத்தைப்பற்றிய தம் அரைகுறையான அறிவைப் பெற்ருர்; ஆனல் அவ்வறிவு மேலும் திருத்தமான தகவலைப் பெறுதற்கான அவா கொள்ளும் அளவுக்கே இருந்தது. 1578-ல் மீண்டும் தலைநகருக்கு விஜயம் செய்த அந்தோனியோ காப்ரல் பேரரசரின் வினக்களுக்கு விடையளிக்கத் தகுதியற்றவராயிருந்ததால் தம் சந்தேகங்களை நிவர்த்தி செய்து தம் அளவற்ற ஆர்வத்தைத் திருப்தி செய்வதற்கு கோவாவிலிருந்து சமயநெறி நிபுணர்களைப் பெற அக்பர் முடிவு செய்தார். அதன்படியே, 1579-செப்டம்பர் மாதத்தில் அக்பர் சுபிட்சேசுத் தத்துவங்களில் போதனையளிக்கத் தகுதி பெற்றக் கற்றறிந்த இரண்டு பாதிரிகளைத் தம்மிடம் அனுப்பிவைக்குமாறு மன்ருடிக் கேட்டுக்கொண்டு ஒரு கடிதம் ஒன்றை எழுதினர். தாம் எதிர்பார்க்கும் விருந்தாளிக்கு மதிப்புமிக்க வரவேற்பும் சிறந்த பாதுகாப்பும் அளிப்பதாக அக்பர் உறுதியளித்தார்.*

*கோவாவிலிருந்த கோயில் அதிகாரிகள் அக்பரின் அழைப்பை உற்சாகத்துடன் ஏற்றுக்கொண்டார்கள். இவ்வழைப்பு, பேரரசரையும் அவருடைய அரசவையையும், நாட்டு மக்களையும் கிறித்தவ சமயத்திற்கு மாற்றம் செய்வதற்கான எதிர்கால வாய்ப்பை அளிப்பதுபோலிருந்தது.*

*சமயப் பரப்பாளராகத் தந்தை ரூடோல்போ அக்வாவியா தந்தை அந்தோனியோ மான்சரேட்டு என்ற இருவர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஜெஸூட்டுகள் அல்லது ஏசு குழுவின் உறுப்பினர்களான இவ்விருவரும் பல வகைகளில் தங்கள் பணிகளுக்கு உயர் தகுதி பெற்றுச் சிறப்பு மிக்கவர்கள். அக்வாவியா கடுந்துறவு வாழ்க்கையை மேற்கொண்டு மேன்மையுற்றவர். மிகுந்த கல்விமானன மான்சரேட் பிரசாரக் குழுவின் வரலாற்றை எழுதுவதற்குப் பணிக்கப்பட்டிருந்தார்; சிறந்த லத்தீன் கட்டுரை ஒன்றை எழுதி அவ்வாணையை நிறைவேற்றினர். இக்கட்டுரை அக்பர்*

ஆட்சிக் காலத்திற்குரிய முக்கிய ஆதாரங்களுள் ஒன்றாகத் திகழ்கிறது. பாதிரிகள் தாமன், சூரத் ஆகிய இடங்களிலிருந்து காண்டேஷ், காடுகள் நிறைந்த பில் நாடு, மாளவம், குவாலியர், தோல்பூர் முதலிய நாடுகளின் வழியாக 1580 பிப்ரவரி மாதம் 8ஆம் நாள் பத்பூர் சிக்ரிக்கு வந்து சேர்ந்தனர். அங்கு அவர்கள் விசேட மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டனர். பேரரசின் பத்து வயது இரண்டாம் மகன் இளவரசர் மூரத் போர்ச்சுகீசிய மொழியிலும் கிறித்துவ தத்துவங்களிலும் போதனை பெறுவதற்காகத் தந்தை மான்சரேட்டிடம் ஒப்படைக்கப்பட்டார்.

## 'தவறுபடாக் கொள்கையின் ஆணை' (The Infallibility Decree)

*1573*-ல் அக்பர் குஜராத்திலிருந்து வெற்றியுடன் திரும்பிய பொழுது, ஓரளவு சமயத்தை மறுக்கும் கோட்பாடுடையவராக இருந்தாலும், கற்றறிந்த ஷேக் முபாரக் என்ற முஸ்லீம் சமய நெறியாளர் ஒருவர் இவரைச் சந்தித்து, பாதுஷா அரசியல் தலைவராகவும் ஆன்மீகத் தலைவராகவும் ஆகலாம்—உண்மையில் போப்பாண்டவராகவும் அரசராகவும் ஆகலாம்—என்ற கருத்தை வெளிப்படுத்தினார். 1592-ல் சமய நெறியாளரின் யோசனையை செயல் முறையில் உருவாக்க அக்பரால் முடிந்தது. ஷேக் முபாரக் ஒழுங்குற்ற பத்திரம் ஒன்றை தயாரித்தார். 'தவறு படாக் கொள்கையின் ஆணை' என்று திட்டமாக வழங்கப்பெறக் கூடிய இப்பத்திரம், முஸ்லீம் மதத்திற்குரிய பிரச்சினை எதுவாயினும் குரான் கொள்கைக்குகந்தவாறு தீர்ப்புக்கூற பேரரசருக்கு அதிகாரமளிக்கப்பட்டது. இச் செயல் 'இறைவனின் புகழுக்காகவும், இஸ்லாமைப் பரப்புவதற்காகவும்' எடுக்கப்பட்டது என்று கூறப்பட்டது. அது மற்றெந்தச் சமயத்துடனும் தொடர்பு கொண்டிருக்கவில்லை. இவ்வாணையை உலேமாக்கள் அல்லது தெய்வத் தன்மை உணர்ந்த முஸ்லீம் அறிஞர்கள் ஏற்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். தொழுகை இல்லத்தில் முஸ்லீம்களுக்கிடையில் நடைபெற்றுக்கொண்டிருந்த விவாதங்களை இவ்வாணை அவசியமற்றதாக ஆக்கியது. இதனால் இவ்விவாதங்களும் முடிவடைந்தன.

அந்த ஆண்டின் (1579) தொடக்கத்தில் வழக்கமான மதகுருவை விலக்கிவிட்டு தானே பீடத்தின் மீதேறி ஷேக் முபாரக்கின் மகன் ஃபெய்ஸியால் ஆக்கப்பட்ட செய்யுளை அக்பர் உரக்கப்படித்து, சமயப்பற்றுக்கொண்ட மக்களைத் திடுக்கிடச் செய்து, அவர்களுடைய மனம் புண்படும்படி நடந்து கொண்டார். அதே சமயத்தில் மெக்காவின் நபிநாயகத்தின் சமயத்தில் நம்பிக்கை இழந்துவிட்டதாகச் சில அறிகுறிகளை வெளிப்படுத்தினார்.

ஜெஸுட்டுகள் 1580ஆம் ஆண்டின் தொடக்கத்தில் கடற்கரைப் பகுதியிலிருந்து வந்தபொழுது பேரரசர் வெளிப்படையாக நடக்கும் தொழுகைகளில் முகம்மதுவின் பெயரைக் கூறுவதைத் தடை செய்துள்ளார் என்று அறிவிக்கப்பட்டனர்.

**முஸ்லீம்கள் பீதியடைந்து கிளர்ச்சி செய்தல்**

தன்னிடத்து வந்த ஜெஸுட்டுகளுக்கு அரசர் காட்டிய தீவிர ஆதரவு, இஸ்லாமில் அவருக்கிருந்த நம்பிக்கையின்மை; கிறித்தவர்கள், அரசின் ஆதரவு பெற்றிருந்த பார்சிகள், சமணர்கள் ஆகியோர்களின் சடங்குகளை அவர் ஓரளவு பின்பற்றியது ஆகிய செயல்கள் தம்முடைய முஸ்லீம் குடிகளை பீதியடையச் செய்தன. இதனால் பல முக்கிய அரசியல் விளைவுகளும் உண்டாயின.

**வங்காளக் கிளர்ச்சி**

பிறப்பில் ஆப்கானியர்களான வங்காள, பீகார் முஸ்லீம் பிரபுக்கள் அக்பரின் போக்கில் பெரிதும் பீதியடைந்தனர். அப்போக்கு முஸ்லீம் சமயத்தின்மேல் செய்யப்பட்ட தாக்குதல் என்று காரணத்துடனேயே கருதப்பட்டது. அக்பரின் நிர்வாக நடவடிக்கைகளாலும், பீஹாரில் கொடைகளை மீண்டும் அரசாங்கமே திருப்பிப் பெற்றுக்கொண்டதாலும், பீஹார், வங்காளம் ஆகியவைகளுக்கு இருந்த தனிச் சம்பளத்தைக் குறைத்ததாலும், குதிரைகளுக்குச் சூடிடும் சட்டங்களை அதிகாரிகள் கடுமையாக வற்புறுத்தியதாலும், அவர்கள் மிகுந்த வெறுப்படைந்தார்கள்; இக் காரணங்களுக்காகக் கிளர்ச்சி செய்யவும் அவர்கள் முடிவு செய்தனர். அக்பருக்கு எதிராக எடுக்கப்பட்ட இக்கிளர்ச்சிகள் சட்டத்திற்குட்பட்டதாகும் என்று கான்பூரின் காஜியும் (Qazi) உறுதிப்படுத்தி மிகத் துணிவான தீர்ப்பு ஒன்றை வெளியிட்டார். அவ்வரச துரோகச் செயலுக்காக அவர் தம் உயிரை இழக்கவேண்டியதாயிற்று.

1580, ஜனவரி மாதம் கிளர்ச்சி தொடங்கி ஐந்து ஆண்டுகள் வரை நீடித்தது. கிளர்ச்சியாளர்கள் அக்பரை அகற்றித் தங்கள் இயக்கத்திற்கு ஆதரவாக பஞ்சாப்பின் மீது படையெடுத்த அக்பருடைய மாற்றாந்தாய் மகனும் வைதீகப் பற்றுடையவருமான காபூலின் முகம்மது ஹகீமை அரசனாக அமர்த்த எண்ணினார்கள். ஆனால் வங்காளக் கிளர்ச்சியாளர்கள் தங்களுடைய கூட்டாளியிடமிருந்து பலநூறு மைல் தொலைவிலிருந்தார்கள். தம் அதிகாரிகளின் மூலமாக இக் கிளர்ச்சிக்காரர்களை ஒடுக்கி விடலாம் என்று அக்பர் நினைத்தார். இவருடைய எண்ணம் வெற்றியில் முடிந்தது; அதிகாரிகள் கலகக்காரர்களை வெற்றியுடன் ஒடுக்கினார்கள்,

### காபூல் படையெடுப்பு

காபூலில் தோன்றிய பேராபத்தைத் தாமே சமாளிப்ப தென்று அக்பர் முடிவு செய்தார். மிகுந்த கவனத்துடன் மிகப் பெரிய படையொன்றை அக்பர் திரட்டிக் கொண்டு 1581, பிப்ர வரியில் தலை நகரிலிருந்து புறப்பட்டார். வலிமையற்றவனும் குடி காரனுமான முகம்மது ஹகீம் அக்பரின் படையை எதிர்த்து நிற்காது பஞ்சாபிலிருந்து ஓட்டம் பிடித்தான். அக்பர் ஆகஸ்ட் மாதத்தில் காபூலுக்குள் நுழைந்தார். இவருடைய சகோதரர் இவருக்குத் தென்படவில்லை. பேரரசர் டிசம்பர் மாதம் நலத் துடன் தலைநகர் திரும்பினர். முகம்மது ஹகீம் காபூல் அரசராக இருக்க அக்பர் அனுமதித்தார். ஹகீம் 1585-ல் தாம் குடியால் இறக்கும் வரைக்கும் காபூல் அரசராக இருந்தார். இறப்பிற்குப் பின் அவருடைய இராச்சியப் பகுதி பாதுஷாவின் நேர்முக ஆட்சியின் கீழ்க் கொண்டுவரப்பட்டது.

### ஒரு நெருக்கடியான ஆண்டு

தம் ஆட்சியின் தொடக்கக்காலத்தைப்போன்று 1581ஆம் ஆண்டும் அக்பருக்கு நெருக்கடியான காலமாகும். பிப்ரவரி மாதத்தில் பத்பூர் சிக்ரியிலிருந்து தாம் சென்றவுடன் செல்வாக்கு மிக்க முஸ்லீம்கள் அனைவரும் அக்பருக்கு எதிராக இருந்தனர். சூழ்ச்சித்திறமிக்க வஞ்சகர்கள் இவரைச் சூழ்ந்துகொண்டார்கள். கீழ் மாகாணங்கள் கிளர்ச்சியாளர்களின் பிடிப்பில் இருந்தன. முகம்மது ஹகீமிடம் தோற்றிருந்தால் உயிர் உட்பட எல்லா வற்றையும் அக்பர் இழக்க நேர்ந்திருக்கும். அக்பர் வாய்ப்புகளை இழக்க விரும்பவில்லை. தம் நிதி அமைச்சரான காஜா ஷா மன் சூரை தூக்கிலிட்டு, இப்படுகொலையால் வஞ்சகர்களை அக்பர் ஒடுக்கினர், அமைச்சன் கொல்லப்படவேண்டியவனே. தம் வலிமையால் தம் சகோதரனையும் அக்பர் அச்சுறுத்தி அடிபணிய வைத்தார். காபூல் படையெடுப்பைப்பற்றி இளவரசர் முரத்தின் ஆசிரியரான தந்தை மான்சரேட் எழுதிய விபரம் நிறைந்த குறிப்புக்கிட்டியது நம் நல்வினைப்பயனே. அத் தந்தை தம் மாணவருடனும் பேரரசருடனும் காபூலுக்கே சென்றிருந்தார்.

அக்பர் வீடு திரும்பியதும் அவர் ஒரு பெரும் அச்சத்திலிருந்து விடுபட்டார் என்பதை அவருடைய போக்குக் காட்டிற்று. 1582ஆம் ஆண்டிலிருந்து அவரை எதிர்க்க யாரும் துணியவில்லை. தாம் விரும்பியதை இவரால் செய்யமுடிந்தது. இருபது ஆண்டு களுக்குப்பின் தாம் இறக்கும் வரைக்கும் இச் சுதந்திரத்தை அக்பர் அனுபவித்தார்.

## தெய்வ நம்பிக்கை (The Din Ilahi)

முஸ்லீம் சமயத்தின்மீது தமக்கிருந்த அருவருப்பையும் விருப்பமின்மையையும் வெளிப்படையாகக் காண்பித்தும், தமக்குச் சொந்தமான அரசியல் கொள்கை ஒன்றைப் பிரகடனப் படுத்தியும் தாம் பெற்ற சுதந்திரத்தைத் தம் நன்மைக்காக அக்பர் பயன்படுத்திக்கொண்டார். இக்கொள்கையைப் பின்பற்று பவர்கள் இஸ்லாமைத் துறக்கவேண்டியிருந்தது. 'தெய்வீக ஒரே தெய்வக் கொள்கை' (Tanhid Ilahi) அல்லது 'தெய்வீகச் சமயம்' (Din Ilahi) என்று பெயரிடப்பட்ட இப் புதிய சமயம் தெய்வீக ஊக்கம்பெற்ற தீர்க்கதரிசி என்ற நிலைக்கு முகம்மது நபியைக் கொண்டாடுவதை அறவே புறக்கணித்ததுமின்றி, அவருக்குப்பதிலாக இச் சமயம் அக்பரை அந்நிலையில் அமர்த் தியது. 1574ஆம் ஆண்டு அரசவையில் அறிமுகம் செய்துவைக்கப் பட்ட அபுல்பாஸலான ஷேக் முபராக்கின் இளைய மகன் இப் புதிய சமயத்தின் உயர்திரு குமாரரானர். அதனோடு கேலிக் குரிய சமயத் தொடக்கச் சடங்குகளின் மேடைச் செயலாட்சி யாளருமானர். தன்னலமிக்க அரசவையாளர்கள் பலர் அக்பரின் சீடர்களென்று கூறிக்கொண்டு உறுதிகள் (vows) வற்புறுத்திய படி இவருக்காகத் தங்கள் உயிர், சொத்து, மதிப்பு, சமயம் ஆகியவற்றையெல்லாம் சரணடைவதாக பாவனை செய்து கொண் டிருந்தனர். ஆனல் சமயம் என்று கூறப்பட்ட இதைப் பின்பற்று பவர்கள் எப்பொழுதும் மிகச் சிலராகவே இருந்தனர். உண்மையில் எவராவது இச் சமயத்தில் நம்பிக்கை வைத்திருந் தனரா என்பது ஐயத்திற்குரியதாகும். கல்வி அறிவும் ஆழ்ந்த சிந்தனை அறிவும் ஒருங்கே வாய்ந்த அபுல் பாஸல் இச் சமயத்தைத் தழுவுமளவுக்கு அறிவற்றிருக்கவில்லை. ஆனாலும், இவர் அரசரின் அந்தரங்க காரியதரிசி, ஆலோசகர் என்ற முறையில் பாசாங்குக் காரராக நடந்துகொண்டு அதனல் பெரிதும் இலாபம் பெறு மளவுக்கு மிக இழிவாக நடந்துகொண்டார். பல சமயங்களி லிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகள் சேர்ந்து அமைந்த நற்றண்புத் தொகுதியான சமயம் ஒன்றை ஏற்படுத்துவதாகக் கூறிக்கொண்டு அக்பர் செய்த குறும்புச் செயல் அதனுடைய தகுதிக்கதிகமாக ஐரோப்பிய வரலாற்றிஞர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது.

## அக்பர் இஸ்லாமைப் புறக்கணித்தல்

1582ஆம் ஆண்டில் புதிய சமயம் சபையில் பிரகடனஞ் செய்யப்பட்டதிலிருந்து, உண்மையில் அதற்கு முன்னிருந்தே, அக்பர் ஒரு முஸ்லீமாக இல்லை. எனினும் இவர் சில சமயங்களில்

அம் மதத்திற்குரிய செயல்களை, கொள்கைகளைக் கையாளு வதற்காக எனச் செய்தார். 1582ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தாம் முஸ்லீம் அல்லவென்றும் கலிமா அல்லது முஸ்லீம் சமயத்தின் வாய்பாட்டை எவ்விதத்திலும் தாம் பொருட்படுத்த வில்லையென்றும் மான்சரேட்டிடத்தில் மிகத் தெளிவாகக் கூறினர். அவ்வாண்டிலும் அதற்கடுத்த ஆண்டுகளிலும் இஸ்லாமை வெளிப்படையாக எதிர்த்து, பார்சீ, இந்து சமண ஆசிரியர்களிடமிருந்து கற்றறிந்த பழக்கங்களைப் பின்பற்ற வற்புறுத்தும் ஆணைகள் பலவற்றை அக்பர் வெளியிட்டார். இச் சமய குருமார்களை மிகுந்த ஆர்வமுடனும் அன்புடனும் வரவேற்று மிக்க கவனத்துடன் அவர்கள் சொல்வனவற்றைக்கேட்டார். கிறித்தவர்கள், இந்துக்கள், சமணர்கள், பார்சிகள் எல்லோரும் அக்பர் தங்கள் தங்கள் சமயத்தவர் என்று சொல்லும்படி நடந்து கொண்டார். ஆனல் எந்தத்தத்துவமும் இவருடைய இதயத்தைத் தொடவில்லை. இவர் எச்சமயத்தவர் என்று சொல்லமுடியாத நிலையில் வாழ்ந்து உயிர் நீத்தார். தாம் மரணப் படுக்கையில் இருக்கும்பொழுது அக்பர் இஸ்லாம் சமயத்தை ஏற்ருர் என்று கூறும் ஆசிரியர் கருத்து தவருனதாகும்.

**விசித்திரபாணியில் அமைந்த கட்டளைகள் (fantastic ordinance):**

இஸ்லாமைத்தாக்கும் குறிக்கோளையும் மற்றவர்களுடன் சேர்ந்து அச் சமயத்தைச் சார்ந்தவர்களைத் துன்புறுத்தும் நோக்கத்தைக் கொண்டதும் எல்லா சமயங்களுக்கும் பொறை வழங்கும் தத்துவத்திற்கு மாறுபட்ட சட்டங்களில் சில பின்வருமாறு: எந்தக் குழந்தைக்கும் முகம்மது என்ற பெயர் வழங்கக் கூடாது. குழந்தைகளுக்கு ஏற்கெனவே அப் பெயர் வைக்கப் பட்டிருந்தால் அதை நீக்கவேண்டும். புதிய மசூதிகள் கட்டப் படுவதற்கும் பழையவைகளைப் புதுப்பிப்பதற்கும் தடை விதிக்கப் பட்டது. கீழே விழுந்து வணங்கும் முறை இதுவரைக்கும் கடவுளுக்குரியதாக இருந்தது; அது இப்பொழுது அரசருக்குரிய தாக ஆக்கப்பட்டது. இம்முறை சிஜ்தா என்று வழங்கப்பட்டது. அராபியமொழி கற்பது, முஸ்லீம் சமயச்சட்டம் கற்பது, அல்லது குரானைப்பற்றிய விளக்க உரைகள் கற்றல் ஆகியவற்றிற்குத் தடை விதிக்கப்பட்டது.

மாட்டு இறைச்சி, வெள்ளைப்பூண்டு, வெங்காயம் ஆகிய உணவுப் பொருள்கள் உண்ணப்படக்கூடாது என்று தடை விதிக்கப்பட்டு, இந்துக்களின் கொள்கைகள் வலியுறுத்தப் பட்டன,

இறைச்சி சாப்பிடுவதைத் தடை செய்து சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. இது பெரும்பாலும் சமணர்களின் செல்வாக்கின் விளைவாகும். பதோனி குறிப்பிடுவதுபோல் இந்துத் துறவறக் கொள்கையும் இதில் பங்கு கொண்டிருக்கலாம்.

சூரியன், தீ, ஒளி; ஆகியவற்றை வழிபடுவதும் அரசவையில் சிறு சிறு சடங்குகளைக் கையாளுவதும் முக்கியமாக பார்சீகள் போதனைகளின் விளைவாகும். மொத்தத்தில் அக்பரின் வாழ்க்கைமுறை, முஸ்லீம் முறையிலிருந்து விலகி, சௌராஸ்டிரிய அல்லது பார்சி முறையில் இந்து தர்மக் கொள்கையை நெருங்குவதாக இருந்தது.

**அக்பரின் துணிச்சல்**

1581-ல் தன் சகோதரரைத் தோற்கடித்ததும், பீஹார், வங்காளக் கிளர்ச்சிகளை வெற்றியுடன் அடக்கியதும், தம் கொள்கைகளை எதிர்த்தவர்கள் அடைந்த கதியும் அக்பரின் புகழைப் பெருக்கிற்று. இது மேற்குறிப்பிட்ட விநோதச் செயல்களைப் புரியும்படி இவரைத் தூண்டிற்று. அதே சமயத்தில் கொல்லப்படுவதிலிருந்தும் வெறுக்கப்படுவதிலிருந்தும் இவரால் தப்பித்துக்கொள்ள முடிந்தது. இவருடைய துணிகரமிக்க பேரரசக் கொள்கைக்குத் தேவையான படை வலிமை அல்லது படை அச்சம் (threat of force) ஆம்பர் (ஜெய்பூர்), மார்வார் (ஜோத்பூர்) முதலிய இராச்சியங்களின் படைகளிடமிருந்து வந்தது. ஆனாலும் அக்பர் இந்து ஆதரவையே முழுக்க முழுக்க நம்பிக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை. இவருடைய நடவடிக்கைகளை விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் பல முஸ்லீம் பிரபுக்கள் இவருக்கு இறுதிவரை பணியாற்றி வந்தனர்.

**நாற்பது ஆண்டுப் போரின் விளைவு :**

சமயத்தில் இவருடைய தாறுமாறான போக்கு எதுவாயிருப்பினும் அக்பர் உலகத்துக்குரிய தம் பேரவாக்களை எப்பொழுதும் மறந்துவிடவில்லை. கங்கையும் யமுனையும் சேருமிடத்தில் 1583-ல் அலகாபாத் கோட்டையைக் கட்டிப் போர்முக்கியத்துவம் பெற்ற இடம் ஒன்றை ஏற்படுத்தினார். மூன்று ஆண்டுகளுக்குப்பின்னர் 1586-ல் காஷ்மீர் நாட்டுச் சுல்தான் இந்துஸ்தானின் ஆதிக்கத்திற்கு முழுமையாகக் கீழ்ப்படியவில்லை என்ற காரணத்திற்காக காஷ்மீரத்தின்மீது போர் தொடுத்தும், இழிவு மிக்க வஞ்சகச் செயல்புரிந்தும் அந்நாட்டை அக்பர் கைப்பற்றினார். இதே போன்று தெற்கு சிந்துவும் 1590-ல் இணைக்கப்பட்டது. 1594-ல் மக்ரன் கடற்கரைப் பகுதியுடன் பலூசிஸ்தான் பேரரசுடன்

சேர்க்கப்பட்டது. ஓர் ஆண்டிற்குப்பின் காண்டஹாரை அதனுடைய பாரசீக கவர்னர் சரணடைந்தார்.

இங்ஙனம், 1596-ல் நர்மதைக்கு வடக்கிலிருந்த எல்லாப் பகுதியும், பரந்த காபூல், கஜினி, காண்டஹார் நிலப் பகுதிகளும் அவைகளைச் சார்ந்த நிலப்பகுதிகளும் அக்பரின் மேலாண்மைக்குக் கீழ்ப்படிந்தன. எல்லைகளிலும் மலைகளிலு மிருந்த சில இனங்களைத் தவிர, பரந்த இராச்சியப் பகுதியில் எந்த மனிதனும் தன்னைச் சுதந்திர மனிதனுக அழைத்துக் கொள்ளத் துணிவு பெற்றிருக்கவில்லை. வடமேற்கு எல்லைப் பகுதியிலிருந்த யூசப்புகளும், அவர்களுடன் தொடர்பு கொண்டிருந்த இனங்களும் 1586-ல் சில காலம்வரை கைபர் கணவாயை அடைப்பதிலும் அக்பரின் படை ஒன்றைத் தோற் கடிப்பதிலும் இவருடைய நெருங்கிய நண்பர் ராஜா பீர்பல்லைக் கொல்லுவதிலும் அவர்கள் வெற்றிபெற்றனர். பேரரசர் அது போன்ற சிறிய இராணுவத் தோல்விகளைப் பொருட்படுத்த வில்லை; நாற்பது ஆண்டுகளாக நடத்திய போர்களால் பெற்ற இலாபங்களைக்கண்டு அக்பர் பெருமிதம் கொண்டிருக்கலாம்.

## பேரவாமிக்க செயல்முறை ஏற்பாடுகள்

அக்பரின் பேராசைக்கு நர்மதை நதியும் இந்திய ஆப்கானிய எல்லைகளும் குறுக்கிடவில்லை. இவர் ஆக்ஸஸுக்கு அப்பால் மத்திய ஆசியாவிலிருந்த தம்முடைய மூதாதையோர்களின் தொன்றுதொட்ட இராச்சியங்களை மீண்டும் பெறுவதற்கும், தக்காணத்தின் சுல்தானியங்களைத் தம் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வரவும் உறுதியாக எண்ணமிட்டுக்கொண்டிருந்தார். அதோடு இவர் தம் குஜராத் மாகாணத்திலிருந்து போர்ச்சுகீசி யரை விரட்டி ஓட்டவும் விரும்பினர். இச் செயலை அவர் கப்பற் படையின் உதவி இல்லாமலேயே செய்துமுடிக்க முடியும் என்று பெருமையாக நினைத்துக்கொண்டார். ஆனல் இவர் டிரானஸ் யாக்சானுவைத் தாக்கும் முயற்சி எடுக்கவேயில்லை. போர்ச்சு கீசிய அமைப்புக்களின்மீது இவர் செய்த தாக்குதல்களும் அறவே முறிந்தன. இவை தக்காணத்தின்மீது நடத்திய குறுகிய தாக்குதல்களும் எதிர்பார்த்ததற்கும் மிகக் குறைந்த அளவே இருந்தன. தக்காணத்துப் படையெடுப்பைப்பற்றி விவரிப்பதற்கு முன் அக்பர் கிருத்துவ மதத்துடனும் குறிப்பாக ஜெஸூட் சொற் பொழிவாளர்களுடனும் கொண்டிருந்த தொடர்பைப்பற்றி மீண்டும் கூறுவது பொருத்தமாகும்.

## அக்பரும் ஜெஸுட்டுகளும்

அக்வாவியா, மான்ஸரேட் ஆகியவர்களின் தலைமையின்கீழ் வந்த முதலாம் ஜெஸுட் சொற்பொழிவுக் குழுவின் பணி அக்வாவியா பின்வாங்கியவுடன் 1583-ல் முடிவடைந்தது. 'அக்பர் மதம் மாறிவிடுவார்' என்று கோவாவில் போர்ச்சுகீசியர்கள் கொண்டிருந்த ஆசைகளெல்லாம் வீணாயின. பிறகு பேரரசின் வேண்டுகோளின்படி இரண்டாம் சொற்பொழிவுக் குழு ஒன்று அனுப்பி வைக்கப்பட்டது. ஆனால் இதுவும் பணியேதும் செய்யாமல் 1592-ல் திரும்பவேண்டியிருந்தது. அடுத்து மிக அழுத்தமான வேண்டுகோளின்படி மூன்றாம் குழு ஒன்று அனுப்பப்பட்டது. இது 1595-ல் லாகூரை அடைந்து, அங்கேயே நிலையாக ஓரளவுக்கு நிலைத்துவிட்டது. லாகூரில்தான் அப்பொழுது அரசவை இருந்தது. இக்குழுவினால் ஏற்பட்ட விளைவுகள் அரசியலையும் பாதித்தன. தந்தைகள் ஜேரோம் சேவியரும், எமானுவல் பின்ஹீரோவும் இக்குழுவின் முக்கிய உறுப்பினர்களாவர். இவர்களின் கடிதங்களில் பல அச்சிடப்பட்டுள்ளன. அவைகள் அக்பரின் பிற்கால ஆட்சிக்குரிய சிறந்த ஆதாரங்கள் ஆகும். அரசனையோ, பிரபுக்களையோ, மற்ற எவரையோ தம் சமயத்திற்கு மாற்ற இக்குழுவினரால் முடியவில்லை என்றாலும், மக்களை மதமாற்றம் செய்யும் உரிமைகளை அக்பரிடமிருந்து பெறுவதில் வெற்றி பெற்றார்கள். அதனோடு சிறப்பான சலுகைகளும் பெற்றார்கள். அக்பரும் அவருடைய புதல்வர் ஜஹாங்கீரும் கன்னி மேரியிடமும் கிறித்துவ உருவங்களிடமும் நன்மதிப்பும் கொண்டிருந்தார்கள். கிறித்துவ சமய குருமார்கள்மீது அக்பர் மிக அதிகமாக கவனத்தை செலுத்தியது, முக்கியமாகப் போர்ச்சுகீசிய இராணுவ உதவியைப் பெறுவதற்கேயன்றி, சமய ஆர்வத்தினால் அல்ல என்பது தெளிவாகிறது. அக்பர் தம் பீரங்கிகளால் அசிர்ஹார் அரணைத் தகர்க்க முடியவில்லை; அதை முற்றுகை இடுவதற்காக இவர் 1600ஆம் ஆண்டில் வெளி நாட்டவரிடம் மிகச் சிறந்த பீரங்கிகளைக் கடனாகப் பெற, சிறந்த முயற்சிகளைச் செய்து கொண்டிருந்தார். அதே சமயத்தில் மதத்தில் சிறிதும் கவனம் செலுத்தாது தன் தந்தைக்கெதிராகக் கிளர்ச்சி செய்வதற்காகத் திட்டமிட்டுக்கொண்டிருந்த இளவரசர் வெளிநாட்டவர்களுடைய உதவியைப் பெறத் தன் தந்தையைப்போல முயற்சி செய்து கொண்டிருந்தார். அக்பர் 1601-ல் சமய போதனை பெறுவதற்காக என்று, பாவனையின்றி இறுதிக்குழு ஒன்றைக் கோவாவுக்கு அனுப்பினார். ஆனால் இவருடைய குறிக்கோளைத் திட்டவட்டமாகப் புரிந்துகொண்ட வஞ்சகமிக்க கோவா அதிகாரிகளால் திருப்தியடையவில்லை. ஜெஸுட்டுகள் நாட்டுப்பற்றுமிக்க அரசியலைச் சமய ஆர்வத்தோடு கலந்துகொண்டு போர்ச்சுகீசிய

அரசாங்கத்தின் அதிகாரபூர்வமற்ற முகவர்களாக (agents) அல்லது ஸ்பானிய அரசர்களுடைய முகவர்களாக நடந்துகொண்டனர்; போர்ச்சுகல் அப்பொழுது ஸ்பானிய நாட்டுடன் இணைந்திருந்தது.[1] ஜெஸூட்டுகளின் செல்வாக்கு மிக அதிகமாக இருந்தது என்பது வாணிகச் சலுகைகள் பெற விரும்பி அக்பரை அணுகிய ஜான்மில்டன்ஹால் என்ற ஆங்கிலேயரின் அறிக்கை உறுதிப்படுத்துகிறது.

## பஞ்சம்

இந்திய பஞ்சங்களின் நீண்ட பட்டியலில் மிகக் கடுமையான பஞ்சம் ஒன்று 1595–98ஆம் ஆண்டுவரை, மூன்று அல்லது நான்கு ஆண்டு காலமாக இந்துஸ்தானம் முழுவதையும் அல்லது இந்தியாவையும் காஷ்மீரையும் சூறையாடியது. இக்கொடுமையான பஞ்சத்தைப்பற்றி வரலாற்று ஆசிரியர்கள் மிகச் சாதாரணமாகக் குறிப்பிடுகிறார்கள். முக்கியத்துவம் பெறாத ஓர் ஆசிரியர் பின் வருமாறு ஒரு சில வார்த்தைகளில் குறிப்பிடுவதுதான் இதைப் பற்றிய முழுமையான வர்ணிப்பாகும். 'ஒருவகைப்பட்ட கொள்ளை நோய் இக்காலத்துக் கொடுமைகளை அதிகப்படுத்தி, வீடுகளையும் நகரங்களையும் மக்கள் நடமாட்டம் இல்லாமல் செய்தது. குக்கிராமங்களையும் அந்நிலைக்குக் கொண்டுவந்து விட்டது. தானியப் பற்றாக்குறையாலும் பசிக் கொடுமையாலும் மனிதர்கள் தங்கள் இனத்தவர்களையே தின்றார்கள். சாலைகளிலும் வீதிகளிலும் பிணங்கள் குவிந்து கிடந்தன. அவைகளை அகற்றுவதற்கு எவ்விதமான உதவியும் பெறமுடியவில்லை' சாதாரண நிவாரண நடவடிக்கைகள் சில எடுக்கப்பட்டன. ஆனாலும் பழமொழியாக விளங்கிவந்த அக்பரின் நல்வினையும்கூட நீண்ட காலமாக மழை பெய்யாததால் ஏற்பட்ட விளைவுகளைத் தடுப்பதற்கோ, நிவர்த்திப்பதற்கோ முடியவில்லை.

## தக்காணப் படையெடுப்பு

1590-ல் தபதி பள்ளத்தாக்கில் இருந்த காண்டேஷ் அரசர்களையும் இன்னும் தூரத்தில் இருந்த ஆமத் நகர் (பீரார் உள்பட), கோல்கொண்டா, பீஜப்பூர் ஆகியவற்றின் சுல்தான்களையும், தம்முடைய இறைமையை அவர்கள் ஏற்றுக்கொள்வதற்காகவும், கப்பம் கட்டுவதற்கு இணங்க வைப்பதற்காகவும் தூதுக்குழுக்களை அக்பர் அனுப்பி வைத்தார். அக்பருடைய மரணத்துக்குப் பின்னும் சில ஆண்டுகள் வரை விடுதலையுடன் நீடித்திருந்த

[1] போர்ச்சுகல், ஸ்பெயின் ஆகிய அரசுகள் 1580-ல் இணைந்து இவ்விணைப்பு 1640ஆண்டுவரை நீடித்திருந்தது.



(a) குவாத்-உல்-இஸ்லாம் மசூதி, டில்லி,



(b) மோத்-கி-மஸ்தித், டில்லி.

புகைப்படம் 20



(a) புராணகுவிலாவில் உள்ள குவிலா அயி-குணு மசூதி, டில்லி.



(b) ஜாமி மசூதி–வாசல் முற்றத்தின் தோற்றம், டில்லி.

பீடார் சிற்றரசைப்பற்றி அக்பர் கவலை கொள்ளவில்லை. கீழ்ப் படிவதாக வாக்களித்த காண்டேஷைத் தவிர மற்ற இடங்களில் பேரரசத்தூதர்கள் உறுதியான வெற்றி எதையும் பெறவில்லை. மற்ற இராச்சியங்கள் அக்பரின் வற்புறுத்தலிலிருந்து தந்திர மாகவும் தப்பித்துக்கொண்டனர்.

1593-ல் தொடங்கிய இராணுவ நடவடிக்கைகள் இருதரப் பிலும் இருந்த உள்நாட்டுக் கலகங்களால் தடையுற்றன. பேரரசின் தளபதிகளான இளவரசர் மூரத்தும், அப்துர் ரகீம் கானிகானும் ஒத்து நடக்கமுடியவில்லை. அதே சமயத்தில் தக்காண நாடுகளும் தொடர்ந்து தமக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தன.

சாந்துபீபீ என்று வழங்கப்பட்ட, திறமைமிக்க இளவரசி, 30 ஆண்டுகளுக்கு முன் கோண்டுவானாவில் இராணி துர்க்காவதி காட்டியதற்குச் சமமான வீரத்தை அகமது நகரைக் காப்பதில் காட்டினாள். எனினும், 1596-ல் உடன்படிக்கை ஒன்றிற்கு இணங்கும்படி வற்புறுத்தப்பட்டாள். இதன்படி பீரார் மாகாணம் பேரரசர்க்கு ஒப்படைக்கப்பட்டது. மீண்டும் மூண்ட போர் சாந்துபீபீயின் மரணத்துடனும், அகமது நகரின் வீழ்ச்சியுடனும் 1600, ஆகஸ்டு மாதத்தில் முடிவுற்றது.

### அக்பர் தெற்கே வருதல்

அதற்கிடையில் காண்டேஷின் சுல்தானான மீரான் பகதூர் ஷா தாம் கீழ்ப்படிந்ததற்கு வருந்தித் தம் அசிர்கார் கோட்டையின் வலிமையை நம்பி, மீண்டும் போர் செய்ய முடிவு செய்தார். இவ்வரண், பக்கம் மாறிய போர்ச்சுகீசிய பீரங்கி வீரர்களால் பாதுகாக்கப்பட்டு வந்தது. உஸ்பெக்குகளின் படையெடுப்புக்கு அஞ்சிய அக்பர் பஞ்சாபில் 13 ஆண்டுகள் தங்கியிருக்கவேண்டி யிருந்தது. ஆனால் டிரான்சாக்சியானாவின் வலிமை மிக்க அரச ரான அப்துல்லாகான் உஸ்பெக் 1598ஆம் ஆண்டின் தொடக் கத்தில் உயிர் நீத்தவுடன் அக்கவலையிலிருந்து அக்பர் விடுதலை பெற்றார். தம் சொந்த மேற்பார்வை இன்றித் தக்காணப் படை யெடுப்பை நடத்துவது பயனற்றதாகும் என்று அக்பர் உணர்ந் தார். அதன்படியே இவர் 1598ஆம் ஆண்டின் இறுதியில் லாகூரி லிருந்து ஆக்ராவிற்கு அணிவகுத்துச் சென்று, அடுத்த ஆண்டில் ஜூலை மாதத்தில் மீண்டும் தெற்கு நோக்கிப் புறப்பட்டார். ஆஜ்மீரையும் தலைநகரையும் இளவரசர் ஸலீமின் பொறுப்பில் விடுத்ததோடு அவரிடம் அக்பர் மேவார் ராணாவைக் கீழ்ப்படியச் செய்யும் முயற்சியில் ஈடுபடுமாறு ஆணையிட்டார். ஆனால்

கிளர்ச்சி செய்வதற்காக முன்பேயே திட்டமிட்டிருந்த இளவரசர் தம் தந்தையின் ஆணைகளைப் புறக்கணித்தார். இதனால் ராணு நிம்மதியாக இருந்தார்.

இதற்கிடையில் இளவரசர் முரத் மயக்க வெறி அதிர்ச்சியினால் (Delirium Tremens) 1599, மே மாதத்தில் மாண்டார். ஆகையால் ஸலீமிற்குப் போட்டியாக இருந்த ஒருவர் அகற்றப் பட்டார். குடிகாரனான தானியலைத் (Danyial) தவிர மற்ற எந்தப் போட்டியாளரும் இப்பொழுது இல்லை.

அக்பர் 1599ஆம் ஆண்டின் இடையில் நர்மதையைக் கடந்து, காண்டேஷின் தலைநகரான புர்ஹான்பூரை எதிர்ப்பின்றிக் கைப் பற்றினர். இதற்குப் பின் இவர் அசிர்காரை முற்றுகையிட்டு அதைத் தாக்க நடவடிக்கைகள் எடுத்தார். அசிர்கார் புர்கான் பூரிலிருந்து ஒருசில மைல் தொலைவிலேயே இருந்தது. அதை எதிரியின் கையில் விட்டுவைக்கக்கூடாது. உலகத்து அரண் களில் மிக உறுதியான கோட்டைகளுள் அக்கோட்டையும் ஒன்று தலால் பாதுகாப்பவர்கள் பல ஆண்டுகளாக நின்று போர் செய்வ தற்காகப் போதிய அளவு நீர், உணவுப் பொருள்கள், பீரங்கிகள், வெடிமருந்துகள் முதலியவற்றை அவ்வரண் பெற்றிருந்தது.

## அசிர்கார் முற்றுகை

தான் மேற்கொண்டிருக்கின்ற பணி தன் இராணுவ சக்திகளுக்கு அப்பால் இருக்கிறது என்பதைப் பேரரசர் வெகு விரைவில் கண்டுகொண்டார். இவருடைய பீரங்கிகளால் சுவர் களைத் தகர்க்க முடியவில்லை. போர்ச்சுகீசியப் பீரங்கிகளைப் பெறுவதில் இவர் தோல்வி அடைந்தார். முற்றுகை 1600 ஏப்ரலி லிருந்து டிசம்பர்வரை 8 மாதங்கள் நடந்தபின் அக்பர் வஞ்சக முறையைக் கையாள முடிவு செய்தார். பகதூர்ஷாவைப் பாது காப்புடன் திருப்பி அனுப்பிவைப்பதாகத் தன் தலையின்மீதே சத்தியம் செய்து, அக்பர் அவரை மிக வஞ்சகமாகத் தன் பாச றைக்குப் பேச்சுவார்த்தை நடத்த வரும்படி செய்தார். விரைவில் முடித்துவிடவேண்டும் என்று நினைத்த அக்பர் வெட்கமின்றித் தன் உறுதிமொழியைப் புறக்கணித்துப் பகதூர்ஷாவைப் பாச றையில் கைது செய்தார். இந்திய வழக்கப்படி, தன் தலைவனை இழந்துவிட்டால் அரணை, இராணுவப்படை ஒப்படைத்துவிடும் என்று அக்பர் நம்பினர். ஆனாலும், பகதூர் ஆப்பிரிக்க நாட்டைச் சேர்ந்த தன் தளபதியான யாக்கூத்திற்குச் சரணடைவதற்கான எல்லா ஆணைகளையும் புறக்கணிக்கும்படி ஏற்கெனவே கட்டளை யிட்டிருந்தார். 1601, ஜனவரி 17ஆம் தேதிவரை முற்றுகை

நீடித்தது. அந்நாளில் 'பொற்சாவி'களால் அல்லது வேறுவித மாகச் சொல்லவேண்டும் என்றால் அதிகாரிகளுக்கு ஏராளமான பணம் கையூட்டாக அளித்ததால் காண்டேஷ் கோட்டையின் வாயில் திறக்கப்பட்டது. அக்பரால் காண்டேஷில் தங்கியிருக்க முடியவில்லை. இளவரசர் ஸலீம் புரட்சியை முன்பேயே தொடங்கி விட்டதால் அரசர் தலைநகருக்கு உடனேயே திரும்பவேண்டியது இன்றியமையாததாயிற்று. கையூட்டினாலும், வஞ்சகத்தினாலும் வெல்லப்பட்ட அசீர்கார் அக்பரின் கடைசி வெற்றியாகும். இது வரை அக்பரைத் தொடர்ந்துவந்த இவருடைய 'நல்வினை' இப்பொழுது இவரைத் தொடரவில்லை. இவருடைய வாழ்க் கையின் எஞ்சிய நாட்கள், பல பிரார்த்தனைகளின் விளைவாகப் பிறந்த மூத்த மகனின் வஞ்சகத்தாலும், இளவரசர் தானியலின் இழிந்த மரணத்தாலும், இன்னும் பிற துயரங்களாலும் துன்பம் நிறைந்ததாய் இருந்தது.

## மூன்று புதிய மாகாணங்கள்

புதிதாக இணைக்கப்பட்ட இராச்சியப் பகுதிகளின் நிர்வா கத்தை ஒழுங்காக அமைப்பதில் பேரரசர் மிக விரைந்து ஈடு பட்டார். இப்பகுதிகள் மூன்று சுபாக்களாக அல்லது மாகாணங் களாக ஒழுங்குற அமைக்கப்பட்டன. அவைகள் அகமதுநகர், பீரார், காண்டேஷ் என்பவைகளாகும். ஆனால் அகமதுநகர் பெயரளவில் மட்டுமின்றி நடைமுறையிலும் சுபாவாக விளங்கிற்று. ஏன் என்றால் இவ்விராச்சியத்தின் பெரும்பகுதி தல அரச குடும் பத்தினர் ஒருவரிடத்தில் இருந்து வந்தது. இளவரசர் தானியல் தெற்கு மேற்கு இந்தியப் படைகளின் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டார். அப்பகுதிகள் மாளவம், குஜராத் உட்பட மூன்று புதிய சுபாக்களைக் கொண்டிருந்தன. 1601, ஆகஸ்டு மாதம் 23ஆம் தேதி அக்பர் ஆக்ரா வந்தடைந்தார்.

## இளவரசர் ஸலீம் கீழ்ப்படிதல்

இளவரசர் ஸலீம் அலகாபாத்தில் அரசரைப்போல் அரசவையை அமைத்துக்கொண்டு தொடர்ந்து வெளிப்படை யாகக் கிளர்ச்சி செய்துகொண்டிருந்தார். அவர் 1602-ல் 'பீர்சிங்கபண்டேலா என்ற கொள்ளைக்காரத் தலைவனைக் கூலி யாளாக வைத்து, அக்பரின் நம்பிக்கையான நண்பரும், ஆலோச கருமான அபுல் பாஸலைக் கொலை செய்தது அக்பரின் உணர்ச் சியை மிகுதியாகப் புண்படுத்தியது. தாற்காலிகமானதும். உண்மையில்லாததுமான உடன்பாடு தந்தைக்கும் தமையனுக்கும் இடையில் 1603-ல் சலீமா பேகத்தால் ஏற்படுத்தப்பட்டது.

1604, ஏப்ரல் மாதத்தில் தானியல் மரணம் அடையும்வரை இவ்விருவருக்கும் உண்மையான உடன்பாடு ஏற்படவே இல்லை. தன் சகோதரன் முரத்தைப்போன்றே தானியலும் குடியின் தீய விளைவுகளால் மரணம் அடைந்தார். அப்பொழுது, அக்பரின் மக்களில் சலீம் ஒருவரே உயிர் வாழ்கின்றவர் ஆதலால், அக்பர் அவருடன் ஒற்றுமைக்கான ஏற்பாடுகளைச் செய்துகொள்ள மிக ஆவலாய் இருந்தார். வாரிசாக வரக்கூடிய வேறொருவர் சலீமின் மகன் இளவரசர் குஸ்ரு ஆவர். இவர் பலராலும் விரும்பப்பட்டவரும் நட்புக்கு உரியவருமான இளைஞர் ஆவர். இவருடைய வாரிசு உரிமைகளை இராஜாமான்சிங்கும், அஜீஸ் கோகாவும் ஆதரித்தனர்.

1604, நவம்பர் மாதத்தில் சலீம் அரசவைக்கு வர வற்புறுத்தலின்பேரில் இணங்கினார். இவர் வர மறுத்துவிட்டால் தன் மகன் குஸ்ருவை மன்னரின் வாரிசாகப் பிரகடனப்படுத்திவிடுவார்களோ என்று அஞ்சியதால்தான் அப்படி இசைந்தார். அக்பர் இவரை உளமார்ந்து வரவேற்பதுபோல் நடித்து வரவேற்றார். அவரைத் திடீரென்று உள்ளறை ஒன்றிற்கு இழுத்துச் சென்று முகத்தில் சரமாரியாக அறைந்து சிகிச்சை பெற வேண்டிய பைத்தியக்காரன் ஒருவனை நடத்துவதுபோல, அவரைக் குளிக்கும் அறையில் சிறையடைத்து ஒரு மருத்துவரிடமும் இரு பணியாட்களிடமும் சலீமை அக்பர் ஒப்படைத்தார். சிறிது காலத்திற்குப்பின். அக்பர் தம் மகனை விடுதலை செய்தார். சலீம் சிறையில் அடைக்கப்பட்டிருந்த கால அளவு பலவகையாகக் குறிக்கப்படுகிறது. சலீமை மீண்டும் அக்பர் ஆதரவளித்து தானியல் நியமிக்கப்பட்டிருந்த மாகாணங்களுக்குப் பிரதிநிதியாக நியமித்தார். மன்னனுக்குப் பின் வாரிசாக வரவேண்டியவர் என்று உறுதியான நிலையில் ஆக்ராவில் தங்கவும் அனுமதித்தார். தன் தந்தை; தன்னைக் கொடுமையாக நடத்தினதால் இளவரசர் சலீம் அடங்கி, தந்தைக்கு மீண்டும் தொந்தரவு கொடுக்கவில்லை.

**அக்பரின் மரணம்**

1605, செப்டம்பர் மாதத்தில் அக்பர், பேதியுடனே, சீதபேதியுடனே நோய்வாய்ப்பட்டார். மருத்துவ நிபுணர்கள் நோயைக் குணப்படுத்துவதில் தோல்வியுற்றனர். தம் மரணப் படுக்கையில் பேசமுடியாத நிலையில் சலீமை அழைத்துத் தெளிவான சைகைகளால் தமக்குப்பின் அவர்தான் அரியணைக்கு வரவேண்டும் என்று தாம் விரும்புவதாக அக்பர் அறிவித்தார்.

பேரரசர் அக்டோபர் 17ஆம் நாள் வியாழக்கிழமை நடு இரவுக்குப் பின் அதிகாலை (O. S.=27 N. S, முஸ்லீம் கணக்குப்படி,

புதன்கிழமை இரவு) அமைதியாக உயிர் நீத்தார். எரிச்சல் ஊட்டும் விஷம் மறைமுகமாக இடப்பட்டிருந்தால் ஏற்படும்




அறிகுறிகள் அக்பரின் உயிரைப் பறித்த நோயின் அறிகுறிகளுக்கு ஒத்திருந்தன. ஆனாலும், இவர் இயற்கை மரணம் அடைந்தாரா,

இல்லையா என்ற பிரச்சினைக்கு உறுதியான தீர்ப்பளிக்கப் போதிய சான்று இல்லை. ஆக்ராவின் அருகிலுள்ள சிக்கந்தராவில் தாம் கட்ட ஆரம்பித்த கல்லறையில் அக்பர் அடக்கம் செய்யப்பட்டுள்ளார். இக்கல்லறையை, இவருக்குப்பின் வந்தவர் புதிய திட்டத்தின்படி செய்து முடித்தார். சவ அடக்கம் விரைவில் செய்து முடிக்கப்பட்டது; பலர் அடக்கத்திற்குரிய சடங்குகளில் சேர்ந்துகொள்ளவும் இல்லை. 'எவரிடத்திலிருந்து நல்லதை எதிர்பார்க்கவில்லையோ. தீமைகளைக் கண்டு அஞ்சவில்லையோ அவர்களிடத்து உலகம் இவ்விதமாகத்தான் நடந்து கொள்கிறது. இதுதான் அரசர் அக்பரின் வாழ்க்கை, ஆட்சி ஆகியவற்றின் முடிவு' என்று ஜோரிக் என்ற சிறந்த ஜெஸுட் வரலாற்றறிஞர் குறிப்பிடுகிறார்.

**அக்பர் கல்லறையின் சிதைவு**

ஆனாலும் தீவினைப் பயனால் இவர் அமைதியாக இருக்கவிடப் படவில்லை. ஔரங்கசீப் தக்காணத்தில் இருந்தபொழுது கல்லறையின் சுற்றுப்புறங்களில் இருந்த ஜாட் என்ற இனத்தவர்கள் கிளர்ந்து, 1691ஆம் ஆண்டில் அக்பரின் கல்லறையைத் தாக்கி, மிகப் பெரிய வெண்கல வாயில்களை உடைத்து, விலைமிகுந்த அணிகலன்களைக் கைப்பற்றினார்கள். தங்களால் எடுத்துச் செல்லமுடியாத எல்லாவற்றையும் அழித்தனர். தங்களைக் கொடுமைப் படுத்திய முகலாயர்களின்மேல் அவர்கள் கொண்டிருந்த சீற்றம் அவர்களை மேலும் அதிர்ச்சி தரும் இழிந்த செயல் ஒன்றைச் செய்யும்படி தூண்டியது. 'அக்பரின் எலும்புகளை வெளியில் எடுத்து, அவற்றைத் தீயிட்டு எரித்தனர்'.

**சலீமின் வாரிசுரிமை**

இளவரசர் சலீமை ஒதுக்கிவிட்டு அவருடைய மகனை குஸ்ருவை அரியணையில் அமர்த்த இராஜா மான்சிங்கும், அஜீஸ் கோக்காவும் செய்த முயற்சிகள் இராஜபுத்திரர்கள் அளித்த எதிர்ப்பினால் தோல்வியுற்றதும் இளவரசர் சலீம் எதிர்ப்பில்லாமல் தன் தந்தையின் பதவிக்கு வந்தார்.

**அக்பரின் தனிப்பட்ட பண்பு நலன்கள்**

அக்பர் நடுத்தர உயரமுடையவர். அவருடைய உயரம் 5 அடி 7 அங்குலமாக இருக்கலாம். திடமான உடலையும், பெருவலியையும் கொண்டவர். இவைகளைப் பயன்படுத்துவதில் இன்பம் கண்டவர். நிறம் மாநிறம். குரல் கம்பீரமானது. இவருடைய ஒவ்வோர் அங்குலத் தோற்றத்திலும் அரச உருவம் மிளிர்ந்தது. கூர்மையாகக் கவனிப்பவர்களை இவருடைய கண்கள் கவர்ந்தன.

இவைகள் 'சூரிய ஒளியில் ஒளிரும் கடலைப்போல் இருந்தன' என்று ஜெஸுட் நண்பர் ஒருவர் வர்ணிக்கிறார். இயற்கையாகவே கோபகுணம் உடையவராக இருப்பினும் அதைச் சாதாரணமாக அடக்கும் தன்மையைப் பெற்றவராவார். ஆனால் ஆதம்கானைக் கீழே தள்ளிக் கொன்றபொழுதும், விளக்கு ஏற்றுபவன் பணியாற்ற வேண்டிய சமயத்தில் உறங்கிவிட்டதனால் அவனைக் கோட்டை மதில்களிலிருந்து எறிந்த சமயத்திலும் அக்பருடைய கோபம் பொங்கி எழுந்து கடுஞ்சீற்றமாகியது. இவருடைய உணர்ச்சிப் புயல்கள் எவ்விதம் திடீரென்று எழுந்தனவோ அவ்விதமே தங்களுக்குப் பின்னால் வெறுப்பை விட்டுச் செல்லாமல் திடீரென்று மறைந்துவிடும். அவருடைய நடத்தைப் போற்றத் தகுந்ததாக இருந்தது. எளிய மக்களிடம் இவர் காட்டிய இரக்க உணர்வு எல்லோருடைய இதயங்களையும் கொள்ளை கொண்டது. பர்தோலி (Bardoli) குறிப்பிடுவதுபோல இவர் பெரியவர்களோடு பெரியவராகவும், தாழ்ந்தவர்களோடு தாழ்ந்தவராகவும் நடந்துகொண்டார். இவர் உண்மையாக நீதி செலுத்த விரும்பினார். அக்காலத்துக்குரிய கடுமையான முறையில் தம் திறனுக்குகந்தபடி தம்முடைய தீர்ப்புகளை மிக அவசரமாகக் கொண்டு வராது, முன் எச்சரிக்கையுடன் நீதி செலுத்தினார். கொடுமைக்காகவே கொடுமை செய்தல் இவர்க்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை. நமக்கு அதிர்ச்சி தருகின்ற வகையில் அவருடைய தண்டனைகளில் சில மிகக் கொடுமையாக இருந்தன.

அறிவாற்றலைப் பொறுத்தவரையில் இவர் எல்லையற்ற அறியும் ஆர்வத்தைப் பெற்றிருந்ததும் அன்றி, பலதிறப் பயிற்சி பெற்ற சிறப்பான அறிவையும் பெற்றிருந்தார். இவர்க்குச் செய்யத் தெரியாதது ஒன்றும் இல்லை என்று மக்கள் கூறினர். மரத்திலோ உலோகத்திலோ பொருள்களைத் தம் கையாலேயே செய்வதைப் பெரிதும் விரும்பினார். பீரங்கிகளைத் தயாரிப்பதிலும், துப்பாக்கிகளைச் செய்வதிலும் இவர் தனிப்பட்ட கவனத்தைச் செலுத்தினார். இவருடைய பொறித்துறைச் சுவைகளும், மிக உன்னிப்பாகக் கவனிக்கும் பழக்கங்களும், நிர்வாக இலாக்காக்களின் விவரங்களைச் சிறப்பாகத் தெரிந்துகொள்ளும் அறிவை ஏற்படுத்திற்று. இச்சிறப்புடன் பரந்த நோக்கமும் இவரிடத்து மிளிர்ந்தது. ஒவ்வோர் இலாக்காவும்—தன்னுடைய மிகப் பெரிய வீட்டைப் பற்றியதாக இருந்தாலும் பேரரசின் அரசாங்கத்திற்குரியதாக இருந்தாலும்—இவருடைய விழிப்பான கவனத்திற்கு உட்பட்டிருந்தது. எவ்விதத் துன்பத்தை மேற்கொள்ளவும் இவர் தயாராகவே இருந்தார். தொடர்ந்து மூன்றுமணி நேரத்திற்குமேல் தூங்குவதில்லை. களைப்பே அறியாதவர்போல்காட்சி அளிப்பார்.

### சீரான கல்வியற்ற நிலைமை

இள வயதில் கல்வி கற்பதற்கு இவர் மறுத்து வந்ததாலும், தொடர்ந்துவந்த ஆசிரியர்கள்பால் வெறுப்புக் கொண்டதாலும் தம் வாழ்நாள் முடியும்வரை ஒரு சொல்லையேனும் படிக்கவோ, தம் பெயரையாவது எழுதவோ இவர்க்கு முடியாமற் போயிற்று. இருப்பினும் ஒழுங்கற்ற முறையில் சிறப்பாகக் கற்றறிந்ததோடு, பல பொருள்களைப்பற்றி ஆழமாகவும் அறிந்திருந்தார். வரலாறு, சமயநெறி, செய்யுள் ஆகிய நூல்களைப் பிறர் தமக்குப் படித்துக் காட்டப் பெரிதும் இவர் விரும்பினர். ஒருவர் கண்களின் மூல மாகப் படித்து அறிவதைவிட தமது சிறப்பான நினைவாற்றலினல் தம் காதுகள் மூலமாகக் கேட்டு அக்பர் அறிந்தவைகள் மிகுதியாக இருந்தன. இவர் சொல்லக் கேட்போர் இவர் ஒழுங்குறப் படிக்காதவர் என்பதை நம்பமாட்டார்கள். இலக்கியம், புலன்களுக்கு எட்டாத நுண்கருத்துக்கள் ஆகியவைகளைப்பற்றிய விவாதங் களில் மிகத் தீவிரமாகப் பங்கெடுத்துக்கொள்ள முடியும். மற்ற சமயங்களின் சிறப்புகளைப்பற்றி விவாதிப்பதில் இவர் எல்லை யற்ற ஆர்வம் கொண்டிருந்தார், மற்ற சமயக் கருத்துக்களையும் விருப்பு வெறுப்பின்றிச் சிறப்பான முறையில் ஆராயும் தன்மை பெற்றிருந்தார்.

### சமய வரலாறு

சுன்னி முஸ்லீமாக அக்பர் வளர்க்கப் பெற்றவர். தம்முடைய ஆட்சியின் தொடக்கத்தில் பிற சமயத்தவரைத் துன்புறுத்தியவ ராக அவரே ஒப்புக்கொள்கிருர். ஃபெய்ஸி, அபுல்பாசல் ஆகியவர் களின் தந்தையான சேய்கு முபாரக் என்பவர் தூக்கிலிடப்படு வதிலிருந்து மயிரிழையில் தப்பினர்; தம் இளமைக் காலத்திலும் கூட முழு வைதிகப் பற்றுடையவராக அக்பர் இருக்கவில்லை என் பதில் ஓரளவு உண்மை இருக்கக்கூடும். இவர்களில் பாரசீக சூஃபி அனுபூதியாளர்களின் நூல்களை இவர்க்கு அறிமுகப்படுத்தி வைத்தார். இளவயதிலேயே இந்துத் துறவிகளுடன் கூடியிருப் பதை இவர் பெரிதும் விரும்பினர். இவர்களுடைய கற்பனை எண்ணங்கள் சூஃபிகளின் எண்ணங்கட்கு ஒத்திருந்தன. தம் வாழ்க்கை முழுவதும் ஓர் அனுபூதியாளராகவே அக்பர் இருந் தார். அறிய முடியாத இறைவனுடன் பல வேளைகளில் நேர்முக மாக ஒன்றுபட்டதாக இவர் உணர்ந்திருக்கிருர். இவர் ஒரு வகைப்பட்ட வலிப்பு நோயால் துன்புற்ருர். இவரை இடை விடாமல் துன்புறுத்திக்கொண்டிருந்ததும், பல்வகைப்பட்ட பொழுது போக்குகளில் இடைவிடாமல் ஈடுபட்டு நிவாரணம் பெறும்படிக்கட்டாயப் படுத்தியதுமான சோர்வு உட்பட இந்நோய்

இவருடைய விசித்திரமான தனித் தன்மைகளுக்கு, உடல் சார்ந்த காரணமாகும் எனக் கருதலாம்.

இவருடைய சமய வரலாற்றை மூன்று பிரிவுக் காலங்களாகப் பகுக்கலாம். 1575ஆம் ஆண்டு அல்லது குறிப்பாக 1578ஆம் ஆண்டுவரை ஸுன்னி மதப் பிரிவில் பற்றுமிக்க முஸ்லீமாக இருந்தார். அப்பிரிவின் முறையான சடங்குகளை ஒழுங்காகப் பின்பற்றினர். மசூதிகளைக் கட்டுவதில் மிகுந்த ஆர்வம் கொண்டவராக இருந்தார். முனிவர்களின் கல்லறைகளுக்கு இவர் இடைவிடாமல் சென்று வந்தார். இவர் இறுதியாகக் கட்டிய மசூதிக் கட்டடம் பதேபூர் சிக்ரியில் 1575–1576-ல் நிறுவப்பட்ட புனிதமான புலந்த் தர்வாஸா அல்லது மிக உயரமான வாயிலாகும். 1578ஆம் ஆண்டுவரை வெளிப்படையாக நடந்த தொழுகைகளில் இவர் தொடர்ந்து கலந்துகொண்டார். ஆஜ்மீரில் உள்ள கல்லறைக்கு இறுதி முறையாக 1579-ல் இவர் புண்ணியப் பயணம் செய்தார். உலகத்தின் கண்ணுக்குத் தென்பட்ட இவருடைய உறுதியான வைதிகப்பற்று ஸூபி அனுபூதி நெறியில் இவர் ஆர்வம் கொண்டிருந்ததனுல் குறைந்துவிடவில்லை. இவ்வனுபூதி அறிவை இவர் புனித சட்டத்தைக் கற்றறிந்த பல அறிஞர்களுடன் பங்கிட்டுக் கொண்டார்.

1579ஆம் ஆண்டு புனித பீடத்தின் மேலேறி, தவறுப்படாக் கொள்கையின் ஆணையை (Infallibility Decree) இவர் வெளியிட்டார். அவ்வாண்டிலிருந்து இஸ்லாமில் இவருடைய நம்பிக்கை குறைந்தும் உறுதியற்றும் இருந்தது. 1582ஆம் ஆண்டில், காபூலிலிருந்து வெற்றியுடன் திரும்பியபின் அந் நம்பிக்கை அறவே மறைந்துவிட்டது. பிறகு இவர் பேரரசு முழுவதற்கும் பொருத்தமான புதிய சமயம் ஒன்றை உண்டாக்கும் பயனற்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டார். இதன் மூலமாக இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்ருக இணைந்து ஒரே கடவுளை வழிபடவேண்டும் என்று விரும்பியதோடு பாதுஷாவை பூமியில் இறைவனின் தளபதியாகவும் இறைவனுடைய கொள்கைகளுக்கு விளக்கம் கூறுபவராகவும் உறுதிப் படுத்தப்பட்டது.

இளம் பிராயத்தில் ஸூபி கருத்துக்களில் இவர் செலுத்திய சிந்தனைகளாலும், நாட்டு மக்களிடை பரந்திருந்த வேறுபட்ட சமயங்களாலும் அக்பரின் சமயக்கருத்துக்களில் படிப்படியாக மாறுதல்கள் தோன்றின. இம்மாறுதல்கள் ஷேக்முபாரக்கின் யோசனைகளாலும் பின்னுல் ஷேக்கின் புதல்வர்களான ஃபெய்ஸி, அபுல்பாஸல் எள்பவர்களுடன் சுமார் 1572ஆம் ஆண்டிலிருந்து அக்பர் அந்தரங்கமாக் கொண்டிருந்த தொடர்பினுலும் மேலும்

அதிகமாயின. அவர்களுடைய போதனைகளுடன் வேறு பலவும் காரணங்களாக இருந்தன சமணர்கள், பாரசீகர்கள், பலவகை இந்துக்கள், கிறித்துவர்கள் யாவரும் பேரரசரின் கருத்துக்களை மாற்றுவதில் பங்கெடுத்துக்கொண்டதுமன்றி, இவருடைய கொள்கையின் போக்கையும் நிர்ணயித்தனர்.[1]

## கொள்கையிலும் நடைமுறையிலும் சமயப் பொறை

அபுல்பாசல், அக்பர் ஆகிய இருவர்களின் உறுதியான கொள்கை எல்லாச் சமயங்கட்கும் சுதந்திரம் அளித்தல் ஆகும் (சுல்-ஹி-குல்). தம் ஆட்சியின் பிற்பகுதியில் அக்கொள்கை இந்துக்கள், கிறித்துவர்கள், சமணர்கள், பார்சிகள் ஆகியவர்களைப் பொறுத்தவரை முழுமையாகக் கையாளப்பட்டது. இவர்கள் எல்லோரும் ஆன்மீக உரிமை, வெளிப்படையாகத் தொழும் உரிமை ஆகிய இரண்டையும் கட்டுப்பாடின்றி அனுபவித்தனர். ஆனல் முஸ்லீம்களைப் பொறுத்தவரை இச்சமயப் பொறைக் கொள்கை கையாளப்படவில்லை. இவர்கள் எரிச்சல் ஊட்டும் துன்பத்திற்கு உள்ளாக்கப்பட்டனர். தாம் பெருமையாகப் பேசிக்கொள்ளும் இக்கொள்கையைச் சரிவரக் கடைப்பிடிக்காதது அக்பருடைய குணத்தில் இருந்த ஒரு முக்கியக் கறை ஆகும்.

## இந்துக்களை நடத்திய முறை

தம் இந்துக் குடிமக்களுடன் அக்பர் கையாண்ட புதிய கொள்கை சமயத் தொடர்பு, அக்பர் கொண்டிருந்த விருப்பங்களாலோ, நம்பிக்கைகளாலோ நிர்ணயிக்கப்படவில்லை. தம்முடைய இளவயதிலேயே பாதுஷா குடிகளிடத்து ஒருதலைச் சார்பற்று நடந்துகொண்டு, எல்லா மதத்தினரையும் சமமாகக் கருத வேண்டும் என்ற அரசியல் தேவையை இவர் உணர்ந்திருந்தார். இந்து இளவரசிகளை இவர் மணம் புரிந்துகொண்டது, புனித இடங்களில் வசூலிக்கப்பட்ட தீர்வைகள் ஒழிக்கப்பட்டது, இந்துக்கள் உடனடியாகப் பதவியில் நியமிக்கப்பட்டது போன்ற நடவடிக்கைகள் எல்லாம் இவர் உண்மை முஸ்லீமாக இருக்கும் பொழுதே எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் ஆகும். ஒரு முஸ்லிம் அரசர் இந்து அரசர்களின் புதல்விகளை மணம்புரிந்துகொள்வது புதுமையல்ல. தக்காணத்துச் சுல்தான்கள் பலர் இதுபோன்ற திருமணங்களைச் செய்துகொண்டிருந்தனர்; இது டெல்லிக்குத் தெரியாதது அல்ல. ஆனல் அக்பர் வேறு உணர்வின் அடிப்

[1] புத்த சமயத்து அறிஞர்களை அக்பரோ அபுல்பாசலோ சந்திக்கும் வாய்ப்புப் பெறவில்லை. புத்தசமயத்தவர்கள் சமய விவாதங்களில் கலந்து கொண்டார்கள் என்று பல நூல்களில் குறிப்பிடப்பட்டிருப்பது தவருனதாகும்.

படையில் இத்திருமணங்களைப் புரிந்துகொண்டதோடு, இந்து ஆண் உறவினர்களையும் அரச குடும்பத்தின் உறுப்பினர்களாக ஏற்றுக்கொண்டார். ஆம்பர், மார்வார் அல்லது பிகானிர் இள வரசர்கள் இஸ்லாம் சமயத்தைத் தழுவுமாறு எவ்விதத்திலும் வற்புறுத்தப்படவில்லை. மிக உயர்ந்த இராணுவப் பதவிகளிலும், பொறுப்புமிக்க நிர்வாகப் பதவிகளிலும் எவ்விதக் கட்டுப்பாடு மின்றி இவர்கள் நியமிக்கப்பட்டார்கள். இப்புதிய கொள்கைக்கு அக்பரேதான் காரணம்; அபுல் பாசலோ மற்ற எவரோ அல்ல. அக்பருடைய ஆட்சி காலத்திலும் இவருடைய மகனது ஆட்சி காலத்திலும் இக்கொள்கை, மிக்க வலிமை வாய்ந்த ஆதரவை அரசுக்கு அளித்ததும் அன்றி, இவருடைய பேரரான ஷாஜஹான் ஆட்சி காலத்திலும், பேரன் மகன் ஔரங்கசீப்பின் ஆட்சி காலத் திலும் தொடர்ந்து பலன் அளித்துக்கொண்டிருந்தது. ஆனல் ஔரங்கசீப்பின் இந்துக்களைக் கொடுமைப்படுத்தும் தவருன கொள்கை, படிப்படியாக இராஜபுத்திரச் சிற்றரசர்களை எதிரிக ளாக்கிப் பேரரசின் சிதைவுக்குப் பெருமளவு காரணமாக இருந்தது. இச்சிதைவு இவருடைய மரணத்திற்குப்பின் முழுமை யாக ஏற்பட்டது.

முஸ்லீம் பட்டங்களைப் பெற்றும், முஸ்லீம்களின் சடங்குகள் படி அடக்கம் செய்யப்பட்டு வந்த இந்து இராணிகள் முஸ்லீம் வாழ்க்கை முறைகளை ஓரளவு மேற்கொண்டிருக்கலாம். ஆனலும், அவர்கள் அரண்மனைக்குள் தங்கள் சமயச் சடங்குகளைப் பின்பற்று வதற்கு அனுமதி பெற்றிருந்தனர் என்பதற்கு அக்காலப் படங்கள் சான்றளிக்கின்றன. உண்மையில் அவர்களுடைய தொடர்பினல் அக்பருடைய சமயக் கருத்துக்களும் செயல் முறைகளும் சிறிதள வேனும் பாதித்திருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை.

### நிர்வாகம்

அரசாங்க ஒழுங்கமைப்பு அக்பரால் பெருமளவு முன் னேற்றம் அடைந்தது. அக்பர்தான் முகலாயப் பேரரசின் உண்மையான தந்தை ஆவர். பாதுஷாவின் கட்டுப்பாடற்ற அதிகாரம் அல்லது சர்வாதிகாரம் மாருது உறுதியாக நின்றது. அரசாங்கத்தின் திறம் பெருமளவு மேன்மை தங்கிய அரசரின் குணத்தைச் சார்ந்திருந்தது. இவர் வசீரின் ஆதிக்கத்தை ஒடுக்கி அவருடைய கடமைகளைத் துறைத் தலைவர்களுக்குப் பிரித்துக் கொடுத்தார். அந்தஸ்து, இனம், மதம் ஆகியவற்றின் அடிப் படையில், தம் பெரிய அதிகாரிகளை மாற்றவோ, பதவியிலிருந்து

[1] History of Fine Arts பக் 332,

நீக்கவோ அக்பர் செய்யவில்லை. சீரான துறைகள் ஏற்படுத்தப் பட்டு, அவற்றின் சட்டதிட்டங்களும் எழுதப்பட்டு அவைகள் அரசரின் திடீர் விருப்பங்களைச் சார்ந்திருக்காது, அச்சட்ட திட்டங்களின் எல்லைக்குள் கட்டுப்பாடின்றிப் பணியாற்றும்படி இவர் செய்தார்.

இராஜா தோடர்மாலின் உதவி கொண்டு நிலவரியை மதிப் பிடுவதற்கும், வசூலிப்பதற்குமான முன்னேற்ற திட்டம் ஒன்றை இவர் நிறுவினார். இராஜா தோடர்மால்பேரரசின் அதிகாரிகளுள் மிக்க திறன் வாய்ந்தவரும் நேர்மை மிக்கவரும் ஆவர் என்பது என் கருத்து.

நிர்வாகம் இராணுவ முறைகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டிருந்தது சுபேதார் அல்லது சிபாசாலார் என்று வழங்கி வந்த மாகாண கவர்னர் தம்முடைய மேலதிகாரியின் அரசவை மாதிரியாகக் கொண்ட அரசவை ஒன்றை வைத்திருந் தார்; தம் பதவியில் தாம் இருந்தவரை அநேகமாக எல்லா அதிகாரங்களையும் பெற்றிருந்தார். திரும்ப அழைக்கப்படும் நிபந்தனைக்குட்பட்டிருந்த இவர் கட்டுப்பாடற்ற சர்வாதிகாரி யாக இருந்தார். எல்லா நிர்வாக, இராணுவ அதிகாரிகள்— இக்கடமைகள் ஒன்றுக்கொன்று மாற்றிக்கொள்ளபட்டன.— பாரசீகத்தில் இருந்ததுபோல மன்சப்தார்கள் என்று வழங்கப் பட்டனர் இச் சொல்லுக்கு 'பதவி ஏற்று இருப்பவர்' என்பதே பொருளாகும். மன்சப்தார்கள் முப்பத்துமூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தார்கள். ஒவ்வொரு பிரிவின் ஒவ்வொரு உறுப் பினரும் குறிப்பிட்ட எண்ணிக்கையில் குதிரைகளைப் பேரரசப் படைக்கு அளிக்கவேண்டும். மிக உயர்ந்த வகுப்பினர்களான ஏழாயிரத்திலிருந்து பத்தாயிரம்வரை இருந்த வீரர்களின் தளபதிகள் பதவிகள் சாதாரணமாக இளவரசர்களுக்கு என்று ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தன. மற்ற மன்சப்புகள் பத்திலிருந்து ஐயாயிரம்வரை இருந்தன. தரப்படுத்துவதற்காகப் பயன்படுத்த எண்ணிக்கைகள் உண்மையாய் இருந்த எண்களுடன் ஒத்திருக்க வில்லை. 1580ஆம் ஆண்டுக்கு முன்னர் (1) ஒழுங்கற்ற தரங் களுக்குச் சமமான படைகளை மன்சப்தார்களிடமிருந்து பெற அக்பர் முயற்சி செய்தார். ஆனால் இதுவும் குதிரைகளுக்கு சூட்டுக்குறியிடும் முறைகளைப்போல அதிகாரிகளின் தன்னலமிக்க எதிர்ப்பினால் ஓரளவு முறிந்தது. ஆட்சியின் இறுதியில் இரட்டை அந்தஸ்துக்கள் கையாளப்பட்டன. ஒரு கூறு சாத் அல்லது தனிப்பட்ட அந்தஸ்து என வழங்கப்பட்டுப் பேரரசின் பணித் துறையில் அவ்வதிகாரியின் அந்தஸ்தைக் குறித்தது. மற்றொன்று

சுவர் (Suwar) என்று வழங்கப்பட்டு எந்த அளவுப் படையை உண்மையில் அளிக்கவேண்டும் என்பதைக் குறித்தது. ஊதியத் திட்டம் அதிகாரி தன் சாத் (Zat) அந்தஸ்திற்கு ஏற்றவாறு உயர்ந்த சுவர் அந்தஸ்தைப் பெற ஊக்கமளிக்கப்படும் வகையில் அமைக்கப்பட்டிருந்தது. ஒழுங்கற்ற நிலையான படை மிகச் சிறிதாகவே இருந்தது பேரரசப் படையின் பெரும்பகுதி இராஜாக்களும் மன்சப்தார்களும் அளித்த படைகளைக்கொண் டிருந்தது. ஒவ்வொரு படையும் அதன் தலைவனின்கீழ் இருந்தது.

ஒவ்வோர் உயர் அதிகாரியும் பொது நிர்வாக, நீதிமுறை குறிப்பாகக் குற்ற வழக்குகளில் அதிகாரங்களைச் செலுத்தினர். சிவில் சச்சரவுகள் சாதாரணமாக காசிக்களின் (Qazis) பொறுப் பில் குர்ஆனின் சட்டப்படி முடிவு செய்யப்பட்டிருந்தன. காசிக்கள் நீதிமுறைப் பணித்துறையை ஏற்படுத்தினர்கள், ஒவ்வொரு கவர்னரோ அதிகாரத்தில் இருந்தவரோ பேரரசின் வெறுப்பைப் பெறும் நிபந்தனைக்குட்பட்டுத் தாம் விரும்பியதைச் செய்யலாம். இவர்களைத் தவிர ஒழுங்கான நீதி பணித்துறை இருந்ததில்லை. எந்தவிதச் சட்டத் தொகுப்பும் கிடையாது; எழுதப்பட்ட தீர்ப்புகளும் அளிக்கப் பெறவில்லை. சாட்சிகளையோ பிரமாணங்களையோ பொருட்படுத்தாது தங்களது சொந்தக் கூரிய அறிவையும் மனித இயல்பைப்பற்றிய அறிவையும், அதிகமாக நம்புமாறு அதிகாரிகள் ஆணையிடப்பட்டிருந்தனர்; தங்களுடைய யுக்தத்தின்படியே (Discretion) மரண தண்டனையும் விதிக்கப் பட்டது. இது எந்த முறையிலும் மேற்கொள்ளப்படலாம்.

## வருமானத் திட்டம்

ஷெர்ஷாவின் மேற்கோளைப் பின்பற்றி இராசாதோடர்மால் பேரரசின் பல பகுதிகளில் முன்னேற்றம் வாய்ந்த நிலவரித் திட்டம் அல்லது மதிப்பீட்டை அமலில் கொண்டுவந்தார். நிலங்கள் சரிவர அளக்கப்படுதல் நிலத்தின் தன்மை—புதிதாகப் பண்படுத்தப்பட்ட தரிசு நிலமா அல்லது உழுது பண்படுத்தப் பட்ட பழைய நிலமா—நிலத்தில் பயிரிடப்பட்டுள்ள பயிர்கள், சராசரி விலை ஆகியவைகளின் அடிப்படையில் இத்திட்டம் கொண்டுவரப்பட்டது. இங்ஙனம் இவர் பேரரச வருமானத்தை அதிகரித்து விவசாயிகளுக்கு ஓரளவுப் பாதுகாப்பு அளித்தார். முடிந்தவரையில் தனிப்பட்ட குடியானவனிடமிருந்து நேர்முகமாக வரி வசூலிக்கப்பட்டது. தற்போதைய தனித்துறை மொழியில் இதை அரசுக் குடிமுறை (ரயத்துவாரி—Ryotwari) என்று அழைப்பர். வரிகளை ரொக்கமாக வசூலிக்கப்படுவதை அக்பர் விரும்பினர். இந்துப் புராணங்களில் குறிப்பிட்டிருப்பதுபோல

மொத்த விளைச்சலில் $\frac{1}{6}$ பங்கை வரியாக எடுக்காது $\frac{1}{3}$ பங்கை வரியாக அக்பர் வசூலித்தார். ஆனால் எண்ணற்ற தீர்வைகள் தடுக்கப்பட்டதன் விளைவாகக் குடியானவர்கள் நஷ்ட ஈடு பெறுவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் அவைகளைத் தவிர்ப்பதற்கான கட்டளைகள் எவ்வளவிற்குப் பின்பற்றப்பட்டன என்று நாம் அறியோம்; அதுவுமன்றி அக்பர் காலத்தில் தோடர் மாலின் வருவாய்த்திட்டம் செயல்முறையில் எவ்விதம் இருந்தது என்பதைப்பற்றிய விவரங்களும் நம்மிடம் கிடையாது. பேரரசுப் படைகளினால் போதிய அளவு அமைதியான சூழ்நிலை ஏற்படுத்தப் பட்டதனால் ஓரளவு வேளாண்மைத் துறையிலும் முன்னேற்றம் ஏற்பட்டிருக்க வேண்டும். உண்மையில் வாணிகம் மிகச் சிறந்ததாக நடைபெற்றது; சாதாரண காலங்களில் உணவுப் பொருள்கள் மிகக் குறைந்த விலையில் கிடைத்தன.

### பஞ்சங்கள்

இருப்பினும் பஞ்சங்கள் ஏற்பட்டிருந்தன. பல பஞ்சங்களைப் பற்றி நாம் கேள்விப்படுகிறோம். ஆட்சியின் தொடக்கத்தில் 1555–56-ல் தோன்றிய பஞ்சம் மிக்க கடினமானதாகும். அக்பரின் படையெடுப்பு வாழ்க்கை ஏறக்குறைய முடிவடைந்துகொண்டிருக்கும் சமயத்தில் 1595–98-ல் மற்றொரு பஞ்சம் தோன்றியிருந்தது இந்தியாவில் தோன்றிய பஞ்சங்களின் நீண்ட பட்டியலில் உள்ள பஞ்சம் எல்லாவற்றையும்விட மிகக் கொடுமை வாய்ந்ததாகும். அது மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் நீடித்தது; கடுமையான விளைவுகளை ஏற்படுத்தியிருக்க வேண்டும். ஆனால் அவைகளைப்பற்றிய குறிப்பேடு எதுவும் இல்லை.

### அக்பரின் நண்பர்கள்

தம்முடைய தொடக்க ஆட்சி காலத்திற்குப் பின்னர் இந்துக்களிடமிருந்தும் முஸ்லீம்களிடமிருந்தும் அக்பர் தம் நண்பர்களையும் உயர் அதிகாரிகளையும் தேர்ந்தெடுத்தார். இவர்களில் இந்துக்களே மிகுதியானவர்கள்.

ஃபெய்சி, அபுல்பாசல் என்ற இரு சகோதரர்கள் இவருடைய நெருங்கிய நண்பர்களாவர். இவர்கள் ஷேக்முவாரக் என்பவரின் மைந்தர்கள் ஆவர். ஃபெய்சி செல்வத்தையோ, பதவியையோ ஒரு சிறிதேனும் பொருட்படுத்தாது, முழுமையாக இலக்கியப் பணியில் தோய்ந்திருந்தார். அபுல்பாசல் மிகுதியாகக் கற்றறிந்தவரும் சளைப்படையாமல் உழைப்பவரும் தலைசிறந்த அறிவாற்றலை கொண்டவருமான ஒரு மனிதராவர். அவர் அறிஞர், ஆசிரியர், அரசவையாளர், உலக விவகாரங்களில் ஈடுபட்டவர்

என்ற முறைகளில் தமக்கு வயதில் இளையவரும், தம் சம காலத்த வருமான ஃபிரான்சிஸ் பேக்கனை ஒத்திருந்தார். அவர் பல ஆண்டுகளாக அக்பருடைய அந்தரங்க செயலாளராகவும் ஆலோசகராகவும் இருந்தார். அவரை ஜெஸ்யூட்டுகள் 'அரசரின் ஜோனதன்' என்று அழைத்தார்கள்.

ஆம்பரின் பகவன்தாஸின் மைத்துனரும், சுவீகார மகனுமான இராஜாமான்சிங் அக்பரின் சிறந்த தளபதிகளிலும் கவர்னர்களிலும் ஒருவராவர். அவர் கீழ் மாகாணங்களை மிக்க 'தந்திரத்துடனும், நீதியுடனும்' ஆட்சி புரிந்தார் எனக் கருதப்படுகிறார்.

இராஜாதோடர்மால் உயர் குடியில் பிறந்திருக்காவிடினும் தம் தகுதியாலும் திறமையாலும் பேரரசப் பணித் துறையின் உச்சியை அடைந்தார். அவர் போர்க்களத்தில் சிறந்த தளபதியாக இருந்ததோடு நிகரற்ற வரி நிபுணராகவும் இருந்தார். அவர் பேராசைப் பிடித்தவரல்லர். அபுல்பாசலைத் தவிர அவரே பணித்துறையில் மிக்க திறன் வாய்ந்தவராவர்.

இன்னும் குறிப்பிடத்தக்க பலர் ஆட்சியின் வரலாற்றைச் சிறப்பிக்கின்றனர். ஜெஸ்யூட் பாதிரிமார்கள் குறிப்பாக அக்வாவிவ மான்ஸராட், ஜெரோம் சேவியர் போன்றவர்கள் அக்பரின் நெருங்கிய நண்பர்களின் பட்டியலில் சேர்க்கப்பட வேண்டியவர்கள். அரசியல் காரணங்களுக்கன்றி அக்பர் அவர்களை உண்மையிலேயே விரும்பினார்.

## இலக்கியமும் கலையும்

நீண்ட வளமான வெற்றியுள்ள அக்பரின் ஆட்சி இலக்கியத்தையும் கலையையும் வளர்த்தது. சிறப்புமிக்க அவையில் இவைகளுக்கு மிகுதியான தேவையும் இருந்தது. இக்கலைகள் அக்பரிடமிருந்து அறிவுக் கூர்மையான ஆதரவைப் பெற்றன. அபுல்பாசல் நிசாமுத்தீன், பதௌனி போன்ற பலரால் பாரசீகமொழியில் முக்கியமான வரலாறுகள் இயற்றப்பட்டன. ஏழு ஆண்டுகளாக முயற்சி செய்து அதன் விளைவாக அபுல்பாசல் இயற்றிய 'எய்னி அக்பாரி' (Aini Akbari) அல்லது 'அக்பரின் நிலையங்கள்' (Institutes of Akbar) என்ற நூல் பேரரசைப் பற்றிய சிறப்பான மதிப்பீட்டை அளிக்கிறது. பாரசீக மொழியில் எழுதும் கவிஞர்கள் அல்லது செய்யுள் இயற்றுபவர்களில் பெய்ஸி என்பவர் மிகச் சிறந்தவர் என்று கருதப்பட்டவராவர். ஆனால் அக்காலத்து மிகச் சிறந்த ஆசிரியரான துளசிதாஸ் என்ற இந்திக் கவிஞர் அக்பருக்கு நேரடியாகத் தெரிந்தவராகத் தெரியவில்லை.

அவருடைய மிக உன்னதமான நூலான இந்தி இராமாயணம் அல்லது 'இராம்சரித்மான்ஸ்' (Ramcharitmanas) மேலை இந்தியாவில் எல்லா இந்துக்களுக்கும் தெரிந்திருக்கிறது.

எக்காலத்தும் நீடித்திருந்த மிகப்பழமை வாய்ந்த இந்திய ஓவியக் கலையைப்பற்றிய மேற்கோள்கள் ஏழாம் நூற்றாண்டிற்கும் பதினாரும் நூற்றாண்டிற்கும் மிகக் குறைவாகவே இருந்தபோதிலும் அக்கலை அக்பரால் ஒரு புதிய வழியில் செல்லும் இந்துக் கலைஞர்களை பாரசீக முறைகளைக் கற்றுப் பாரசீகப் பாணியைப் பின்பற்றுமாறு அக்பர் தூண்டினார். பாரசீகக் கலையைப்போல் செய்த கலைப்பணிகள் எல்லாம் முழுமையாக வெற்றிபெறவில்லை. ஆனாலும் இந்திய பாரசீகப் பாணி ஒன்று படிப்படியாக வளர்ச்சி பெற்றது. வண்ணங்கள் தீட்டப்பட்ட சிறப்பு வாய்ந்த சித்திரங்கள் ஏராளமாக இப்பாணியில் உண்டாயின. முகலாயக் காலத்திய உருவப் படங்கள் நன்மதிப்புப் பெறுவதற்குரியவையாக இருந்ததோடு, ஷாஜஹானின் ஆட்சிகாலத்தில் மிக உயர்ந்த முழுமை நிலையையும் அடைந்திருந்தது. அக்பர் காலத்திய கலை செப்பமற்றதாகவும் மாற்றம் அற்றதாகவும் மாபெரு முகலாயரான அக்பர் (Akbar the Great Mogul) என்ற நூலின் முகப்புப் படம் முதன் முதலான இந்தியப் பாரசீக ஓவியக் கலையின் படிவமாக அமைந்துள்ளது. இப்பாணி 1557 அல்லது 1558ஆம் ஆண்டிலிருந்து தொடங்கியதாகும். இதற்கடுத்துத் தற்போதும் கிடைக்கக்கூடிய மாதிரிச் சான்றுகள் பதேபூர் சிக்ரியில் உள்ள சுவர் ஓவியத் துண்டுகளாகும். இவைகள் சுமார் 1570-ல் செய்து முடிக்கப்பெற்றதாகும். பழமை வாய்ந்த இந்து ஓவியங்களில் பெரும்பாலானவைகள் சுவர்களில் சுவரோவியங்களாகவோ, வர்ணம் தீட்டப்பட்ட சித்திரங்களாகவோ, இவ்விரு முறைகளின் கலப்பாகவோ பயன்படுத்தப்பட்டன என்று தெரிய வருகிறது. இவைகளெல்லாம் கட்டடங்கள் சிதைவடைந்தபொழுதோ, அழிக்கப்பட்டபொழுதோ இழக்கப்பட்டன.

அக்பர் ஆட்சி காலத்தின் கட்டடக்கலை இந்துமுஸ்லீம் பாணிகள் மகிழ்ச்சி தரும் முறையில் கலந்திருக்கும் தன்மையை சிறப்புக் கூறுகக் கொண்டிருந்தது. அக்பருடைய தனிப்பட்ட உணர்ச்சிகளும் திட நம்பிக்கைகளும் கல்லின் வாயிலாக வெளிப்படுகின்றன. உண்மையில் அபுல்பாசல் சிறப்பான முறையில் பின்வருமாறு கூறுகிறார். 'மகிமை தாங்கிய மன்னர் சிறந்த கட்டடங்களைக் கட்ட திட்டமிடுகிறார். தம்முடைய மனத்திலும் இதயத்திலும் இருக்கும் எண்ணங்களுக்குக் களிமண்ணினாலும் கற்களினாலும் செய்யப்பட்ட ஆடைகளை உடுத்துகிறார்'. பதேபூர்

சிக்ரியில் அக்பருடைய கட்டடக்கலை சிறப்பின் தொகுப்பைக் காணலாம். ஆனல் அக்பர் காலத்துக்குரிய குறிப்பிடத்தக்க வேறு கட்டடங்கள் மற்ற இடங்களில் அமைந்துள்ளன.

## காலவரையறைப் பட்டியல்

முக்கிய தேதிகள் மட்டும்

| | | |
|---|---|---|
| ஹுமாயூனின் இறப்பு | ... | ஜனவரி 1556 |
| அக்பர் அரியணையேறல் | ... | பிப்ரவரி 1556 |
| இரண்டாம் பானிப்பட்டுச் சண்டை; பஞ்சம் | ... | நவம்பர் 1556 |
| பைராம்கான் விலக்கப்படுதல் | ... | 1560 |
| ஆதாம்கானின் மரண தண்டனை | ... | 1562 |
| உஷ்பெக் கிளர்ச்சிகள் | ... | 1565–7 |
| சித்தூர் வீழ்ச்சி | ... | 1568 |
| பத்பூர்-சிக்ரி கட்டப்படுதல் | ... | 1569–76 |
| குஜராத்தை வெல்லுதல் | ... | 1572–3 |
| நிர்வாகச் சீர்திருத்தங்கள் | ... | 1573-4 |
| வங்காளத்தை வெல்லுதல்; கோகுண்டா அல்லது ஹால்டிகட்டில் ராணு பிரதாப் தோற்கடிக்கப்படுதல் | ... | 1576 |
| 'தவறுபடா ஆணை' | ... | 1579 |
| முதல் ஜெஸுட் குழு; வங்காளக் கிளர்ச்சி | ... | 1580 |
| காபூலுக்கு வெற்றிப்படையெடுப்பு | ... | 1581 |
| தீன் இலாஹீ அறிவிக்கப்படுதல் | ... | 1582 |
| முகம்மது அகீமின் இறப்பு; காபூல் இணைதல் | | 1585 |
| காஷ்மீர் இணைக்கப்படுதல் | ... | 1686 |
| இரண்டாம் ஜெஸுட் குழு | ... | 1590 |
| தெற்குச் சிந்து இணைக்கப்படுதல் | ... | 1590 |
| ஒரிஸா இணைக்கப்படுதல் | ... | 1592 |
| பலுஜிஸ்தானமும் மக்ரானும் இணைக்கப் படுதல் | ... | 1594 |
| காந்தாரத்தை இணைத்தல்; மூன்ரும் ஜெஸுட் குழு | ... | 1595 |
| பஞ்சம் | ... | 1595-1598 |
| பீரார் இணைக்கப்படுதல் | ... | 1596 |
| ஆமத்நகரின் வீழ்ச்சி | ... | 1601 |
| இளவரசர் சலீம் கிளர்ந்தெழுதல் | ... | 1601–4 |
| இளவரசர் சலீம் சிறை பிடிக்கப்படுதல் | ... | நவம்பர் 1604 |
| அக்பரின் மறைவு | ... | அக்டோபர் 1605 |

## ஆதாரங்கள்

சமகால முக்கிய ஆதாரங்கள் மூன்று வகைப்படும். அவையாவன (1) அய்னி-அக்பாரி (Aini-Akbari)—அபுல்பாசலால் எழுதப் பட்டது. இந்நூல் பேரரசைப் பற்றியும் பேரரச முறையைப் பற்றியும் நுணுக்க விவரமாராய்கிறது. இதை புலோச்மன், ஜார்ரெட் என்பவர்கள் (Blochmann & Jarret) மொழி பெயர்த்து உரை விளக்கங்களையும் எழுதியுள்ளார்கள். கல்கத்தா—1873, 1891, 1896, பகுதி I டி. ஸி. ஃபிலோட் (1939) (D. C. Philott) என்பவராலும் பகுதி III சர் ஜாதுநாத் சர்க்கா ராலும் (1948) திருத்தி எழுதப்பட்டுள்ளது. (ii) பாரசீக மொழியில் எழுதப்பட்ட மூன்று வரலாறுகள் அவையாவன— (1) அக்பர் நாமா (Akbarnama;–அபுல்பாசலால் எழுதப்பட்டது. ஹெச். பெவரிட்ஜ் (H. Beveridge) என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது பகுதி i கல்கத்தா 1907—பகுதி ii கல்கத்தா 1912; பகுதி iii கல்கத்தா 1939 (2) தபகாத்-இ-அக்பரி (Tabakat-i-Akbari) நைஸாமுத்தீன் என்பவரால் (Nizamuddin) எழுதப்பட்டது; F & D–பகுதி V-ல் டௌசன் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. (3) முன்தகப்-உத்-தவாரிக் (Muntakhab-ut-Tawarikh) அப்துல் காதர் படௌனி (Abd-ul-Qadir Badauni) என்பவரால் எழுதப்பட்டது; லோ (Lowe) என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது; கவெல் (Cowell) என்பவரால் திருத்தம் செய்யப்பட்டுள்ளது. கல்கத்தா 1884; (iii) பல ஜெஸூட் ஆசிரியர்களின் குறிப்புகள். சர். இ. மக்லாகன் (Sir E Maclagan) எழுதிய "தி ஜெஸூட்ஸ் அண்ட் தி கிரேட் மொகல் (The Jesuits and the Great Mogul) (1932) எழுதிய நூல் பயனுள்ளது. தந்தை அன்டோனியோ மான்சர்ரேட், எஸ். ஜே-1582 எழுதிய லத்தீன் நூலான "மங்கோலிகா லெகஷனின் கம்மென்டேரியஸ் (Mongolicae Legationis Commentarius) என்ற நூல் மிக முக்கியமான நூலாகும். இதை ஹெச். ஹாஸ்டென் (H. Hosten) என்பவர் இயற்றியுள்ளார்; கல்கத்தா (1914).

இந்நூல்களைப்பற்றிய முழு விவரங்களையும் சிறிய ஆதாரங்களைப் பற்றியும் ஆசிரியரின் நூலான அக்பர், தி கிரேட் மொகல் (V. A. Smith-Akbar the Great Moghul 1543-1675 A. V. Clarendon press—1917) என்ற நூலில் காணலாம். இக் காலத்தில் பொருளாதார நிலையைப்பற்றி டப்ளியூ. ஹெச். மூர்லாண்டு எழுதிய இந்தியா அட் தி டெத் ஆப் அக்பர் (W. H. Moreland. India at the death of Akbar—London 1902) என்ற நூலில் காணலாம். மொகலாயர்களைப்பற்றி மேலும் பொது நூல்களாவன: இப்னெ ஹசன் எழுதிய தி சென்ட்ரல் ஸ்டரக்சர் ஆப் தி மொகல் என்பவர் (Ibn Hasan the central strucutre of the Moghul Empire 1936) பரமாத்மா சாரன் எழுதிய தி பிராவின்சியல் கவர்ன்மென்ட் ஆப் தி மொகல்ஸ் (Paramata Saranm, The Provincial Government of the Mughals) (1941).

# 4. ஜஹாங்கீர் (Jahangir)

## ஜஹாங்கீர் அரியணையேறுதல்

அவருடைய தந்தை உயிர்நீத்த ஒரு வாரத்திற்குப்பின் 1605, நவம்பர் 3ஆம் நாள் ஜஹாங்கீர் முடிசூட்டிக் கொண்டார். இவர் நூருத்தின் முகம்மது ஜஹாங்கீர் பாதுஷா காஸி (Nur-ud-din Muhammad Jahangir Padusha Ghazi) என்ற பட்டப் பெயரைப் புனைந்துகொண்டார். முதலாம் பெயர் 'மதத்தின் ஒளி' என்றும், மூன்றும் பெயர் 'உலகத்தைக் காப்பவர்' என்றும் பொருள்படும். சிம்மாசனம் ஏறும்பொழுது இவர் புனிதமான இரண்டு வாக்குறுதிகளை அளித்தார். ஒன்று தாம் முஸ்லீம் மதத்தைக் காப்பாற்றுவதற்கான உறுதியாகும். மற்றொன்று, குஸ்ருவின் உரிமைகளை ஆதரித்தவர்களுக்கு எவ்வித தீங்கும் இழைப்பதில்லை என்பதாகும். இவ்விரண்டு வாக்குறுதிகளும் நேர்மையாகவே பின்பற்றப்பட்டன. ஜெஸுயிட் பாதிரிகளுடன் இவர் மேற்கொண்டிருந்த போக்கு முஸ்லீம்களுக்கு மகிழ்ச்சிக்குள்ளாக்கியது. இவர் அப்பாதிரிகளைப் பார்த்திராதவாறே நடந்துகொண்டார். அதே காலத்தில் ராஜாமன்சிங் உள்பட குஸ்ருவின் ஆதரவாளர்களின் நன்மதிப்பையும் பதவிகளையும் பெற்றனர். சீர்திருத்தம் செய்யும் நோக்கத்துடன் இவர் பல ஆணைகளை விதித்தார். அவற்றுள் மிக முக்கியமானது சரக்குகளை ஏற்றி இறக்குவதற்கான தீர்வைகளையும் (transit duties) சுங்கத்தீர்வைகளையும் தவிர்த்ததாகும். ஆனாலும், சர் ஹென்றி எலியட் (Sir Henry Eliot) என்பவரின் கருத்தின்படி இவ்வாணைகள் செயல்முறையில் நிறைவேற்கப்படவில்லை.

## இளவரசர் குஸ்ருவின் கிளர்ச்சி

இளவரசர் குஸ்ரு வியக்கத்தக்க முறையில் மக்கள் விருப்பத்தைப் பெற்றவராவார். இவர் பதவிக்கு வரவேண்டும் என்று பலர் விரும்பினர். ஆகையினால், ஒரு காலத்தில் கிட்டியிருக்கக்கூடிய சிம்மாசனத்தை மீண்டும் பெறலாம் என்று இவர்

விரும்பினர். ஒரு கூற்றின்படி தந்தை முன் எச்சரிக்கையாக எங்கே இவரைக் குருடாக்கிவிடப் போகிருரோ என்று அச்சம் இவருக்கு வந்தது. பேரவாவினாலோ, அச்சத்தினாலோ, அல்லது இவ்விரண்டு நோக்கங்களினாலோ ஆக்ராவின் அரணிலிருந்து 1606, ஏப்ரல் 4ஆம் நாள் இவர் வெளியேறி; ஏராளமான படை வீரர்களையும் திரட்டிக்கொண்டு பாதுகாவலுடன் வந்து கொண்டிருந்த செல்வத்தை கைப்பற்றினர்; பணத்துடன் பாஞ்சாபிற்கு விரைந்தார். பேரரசர் எதையும் பொருட்படுத்தாமல் குஸ்ருவை மிக விரைவாக விரட்டிக் கொண்டு சென்றார். ஆக்ராவிலிருந்து தப்பி ஓடி மூன்று வாரங்களுக்குப்பின் ஏப்ரல், 27ஆம் நாள் கைது செய்யப்பட்டார். இவ்வித ஆர்வத்தை மீண்டும் கொண்டிராத ஜஹாங்கீர் லாகூருக்கு அருகில் இருந்த பூங்காவில் தமது பாசறையை அமைத்து அச்சமூட்டும்படி பழி வாங்குவதில் ஈடுபட்டார்.

குஸ்ருவின் முக்கிய ஆதரவாளர்களுள் இருவர் ஈரத் தோலில் மூடப்பட்டு மிகக் கொடூரமான சித்திரவதைக்குட்படுத்தப் பட்டார்கள். ஒருவர் எருமைத் தோலிலும், மற்றவர் கழுதைத் தோலிலும் மூடப்பட்டு அந்நிலையில் அக்கால மரபின்படி நகரம் முழுவதும் சுற்றிச் செலுத்தப்பட்டனர். ஒருவர் மாண்டார்; மயிரிழையில் தப்பிய மற்றவர் மன்னிக்கப்பட்டார். இளவரசனை ஆதரித்தவர்களுள் இருநூறு அல்லது முன்னூறு பேர் மே 7ஆம் நாள் மரத்தில் தொங்கவிடப்பட்டுக் கொல்லப்பட்டனர்; சாலையில் இரு புறத்திலும் நிறுவப்பட்டிருந்த கழுமரங்களில் ஏற்றப் பட்டனர். சிறப்பாக அலங்கரிக்கப்பட்ட யானையின் மேல் வீரர்களுக்கு நடுவில் ஜஹாங்கீர் சென்றுகொண்டிருந்தார். அலங்காரமற்ற யானைக்குட்டியின்மேல் இவருடைய துயரில் மூழ்கியிருந்த மகன் ஏறிக்கொண்டு பின்தொடர, நெளிந்துகொண்டிருந்த பலியாட்களின் பெயர்களைப் பறைசாற்றிக்கொண்டு மாபத்கான் பின் சென்று கொண்டிருந்தார்.[1]

## குரு அர்ஜுன் (Guru Arjun)

தந்தைக்கு முன் துயருற்று குஸ்ரு ஓடிக்கொண்டிருந்தார். தாராதரன் (Tarataran) என்ற இடத்தில் தங்கியிருந்த அர்ஜுன் என்ற சீக்கிய மதக்குருவின் உதவியை நாடினர். அம் முனிவர்

[1]. தேதி, திரு எச். பெவிரிட்ஸ் குறிப்பிடும் தேதியாகும். மாபத்கான் (சமானுபேக்) பற்றி விவரம் டி லெயட்டியில் (de Lact) குறிப்பிடப்பட்டுள்ளது. பலியாட்களின் எண்ணிக்கையைப்பற்றி ஆசிரியர்கள் கருத்து வேறுபாடு கொண்டுள்ளனர். மிகக் குறைவான எண், இருநூறை டு ஜார்விக் (Du Jarvic) என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

நாடோடிக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுத்தார். அவர் இரக்க உணர்ச்சிக்கு வசப்பட்டிருந்தது அவர் இச் செயலைப் புரிவதற்குக் காரணமாகும் என்று சிலர் கருதுகின்றனர். இச் செய்தி பேரரசுக்கு எட்டியவுடன் குருவை வரும்படி ஆணையிட்டார். அவருடைய அமைதி ததும்பும் விடையைக் கேட்டபின் பேரரசர் அவருக்கு இரண்டு இலட்சம் ரூபாய் அபராதம் விதித்தார். குரு ஒரு காசையும்கூடக் கொடுக்க மறுத்துவிட்டார். இதனால் ஐந்து நாள்வரை சித்திரவதைக்குள்ளாக்கப்பட்டு 1606, ஜூனில் மதக் குரு கொல்லப்பட்டார். இத் தண்டனை ஒரு சமயத் துன்புறுத்த லாகும்; மேலும், இராச துரோகத்திற்காகவும் கீழ்ப்படியா குற்றத்திற்காகவும் விதிக்கப்பட்டதாகும் என்பது குறிப்பிடத் தக்கது.[1] இரண்டாம் முறை முயற்சி செய்தும் சிம்மாசனத்தைப் பெற முடியாத இளவரசர் பார்வையை இழக்க நேர்ந்தது; எனினும், அறவே பார்வையை இழந்து விடவில்லை. ஒரு கண்ணின் பார்வையை இவர் ஓரளவு திரும்பப்பெற முடிந்தது. பேரரசின் மகன், இளவரசர் பார்வீஸ் (Parviz) வாரிசுரிமை யாளராக ஏற்றுக்கொள்ளப்பட்டார்.

## பொது மக்கள் குஸ்ருவுக்குக் காட்டிய அன்பு

இளவரசரின் சிறைவாழ்க்கை தளர்ச்சியுற்றபொழுது (கிட்டத் தட்ட 1616-ல்). சர். தாமஸ் ரோவும் அவருடைய தனி மதக்குரு வான டெர்ரியும் (Terry) அவ்வப்பொழுது குஸ்ருவைச் சந்தித் தனர். அவருடைய தந்தையுடன் பெரும் காவலுடன் அவர் சென்று கொண்டிருப்பார்.

‘இளவரசர் என்ற நிலையில் (டெர்ரி எழுதுகிறார்): அவர் கவரும் தோற்றத்தையும் அழகான நடையையும் கொண்ட பண்பு மிக்க மனிதராவார். டைடஸ்ஸைப் (Titus) பற்றி சுடோனியஸ் (Sutonius) குறிப்பிட்டது போல அவர் சுவைமிக்க காதலனும் மக்களின் அன்பும் பெருமகிழ்ச்சியுமாவர்; முப்பத்து ஐந்து வயதினர்.[2] அவர் ஒரே மனையாளுடன் வாழ்நாளைக் கழித்தார். எவ்வித இன்னலையும் பொருட்படுத்தாமல் இவருடன் வாழ்ந்து வந்தார். இதனால், அவருடைய சமயம் பல மனைவிகளைக்

[1] சீக்கியரின் கருத்துப்படி இக் கதையின் முழு விவரங்களை மகாலிப் எழுதிய ‘சீக்கிய மதம்’, என்ற நூலில் காண்க. (Macaulibbe—The Sikh Religion-1909 vol ii. pp. 84-100).

[2] இவர் கி.பி. 1587, ஆகஸ்டில் (ஹி.பி. 995) பிறந்ததனால் தனி மதகுரு கணக்கிட்டதைவிட இளையவராகவே இருந்தார். காபி கான் (Khabi Khan) இவர் இரண்டு ஆண்டுக்குப் பின் தான் பிறந்தார் என்று கூறுகிறார்; அவர் அளிக்கும் தேதி உண்மையாகவும் இருக்கக்கூடும்.

கொண்டிருக்க அனுமதித்த போதிலும் அவர் அவளையன்றி மற்ற எவளையும் விரும்பவில்லை.'

யாவராலும் நேசிக்கப்பட்ட இளவரசர் மரணமடைந்ததற்குப் பின் யாவரும் அவரைத் தியாக மரணமடைந்த முனிவர் என்று கருதினர் என்று முண்டி (Mundy) கூறுகிறார். அலகாபாத்துக் கருகில் குஸ்ருபூங்காவுக்கு இவர் உடலை தூக்கிக்கொண்டு சென்ற பொழுது தூக்கிச்செல்பவர்கள் வழியில் நின்ற இடத்திலெல்லாம் ஒவ்வொரு கல்லறை கட்டப்பட்டது; நினைவுச்சின்னமும் அதற்குள் நாட்டப்பட்டது. அதைச் சுற்றி ஒரு பூங்காவும் அமைந்திருந்தது. ஒரு அல்லது இரு துறவிகள் அதற்கு நீர் வார்த்தனர். வெறும் நிழலாகவே இருந்தபோதிலும் இந்திய வரலாற்றில் துயருற்ற வரும் கவர்ச்சிமிக்கவருமான ஆண்மையாளர்களில் இவர் ஒருவராவர்.

**ஷேர் ஆப்கான்** (Sher Afghan)

*1607*-ல் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி ஜஹாங்கீருக்கும் நூர்ஜஹானுக்கும் (Nurjahan) திருமணம் நடைபெறுவதில் முடிந்தது. அத்திருமணத்துக்குப்பின் நூர்ஜஹான் சிம்மாசனத்திற்குப்பின் இருந்து ஒரு சக்தியாகவும் செயல்முறையில் இந்துஸ்தானத்தின் ஆட்சி முதல்வியுமானாள். இவளுடைய சொந்தப் பெயர் மெஹருன்னிஸா (Mehrunninsa) என்பதாகும். அக்பர் பணித்துறையில் சேர்ந்திருந்த பாரசீக அகதி ஒருவரின் மகளாவாள். ஆலி கூலி (Ali Quli) என்பவருக்கு மனைவியானாள். ஜஹாங்கீர் பட்டத்துக்கு வந்தபின் ஆலி கூலி வங்காளத்தைச் சேர்ந்த பர்த்வான் (Burdwan) என்ற ஜாகீரைப் பெற்றார். வங்காளத்தில் ஆப்கானிய கிளர்ச்சியாளர்களுக்கு உடந்தையாக இருந்தார் என்று சந்தேகிக்கப்பட்டார். அவரைப் பதவியிலிருந்து விலக்கி அரசவைக்குக் கொண்டுவருமாறு பேரரசர் தம் மாற்றாந்தாயின் மகனை குத்புத்தீன் கோகாவுக்கு (Kutbuadin Koka) ஆணையிட்டார். இக் கட்டளையை நிறைவேற்றும் பொழுது நடந்த சண்டையில் இவரும் ஷேர்கானும் கொலையுண்டனர். அப் பெண் அரசவைக்குக் கொண்டுவரப்பட்டாள், சலீமா பேகத்தின் (Salima Begum) பணியாளானாள். *1611*-ல் பேரரசரின் கவனத்தைக் கவர்ந்து அவருக்கு மனைவியுமானாள். அதிலிருந்து பேரரசரின் மீது கட்டுப்பாடற்ற செல்வாக்குப்பெற்று அச் செல்வாக்கை அவளுடைய உறவினரின் முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்திக் கொண்டாள். இவளுடைய தந்தை இதிமத்-உத்-தௌலா (Itimad-ud-daulah) என்ற பட்டப் பெயரையும் சகோதரன் ஆஸப்கான் (Asafkhan) என்ற பட்டப் பெயரையும் பெற்று அரசவையில்

முதன்மையான பிரமுகர்களானார்கள். மற்றச் சுற்றத்தாரும் சிறந்தமுறையில் முன்னேற்றமடைந்தனர். இவள் தனக்கும் ஷேர்கானுக்கும் பிறந்த மகளை ஜஹாங்கீரின் கடைசி மகனை ஷாரியர்ருக்கு (Shahriyar) மணம் புரிந்து வைத்தாள். ஆஸிப் கானின் மகளை இளவரசர் குர்ரம் மணம் புரிந்து கொண்டதன் விளைவாக அக் குடும்பம் மேலும் வலிவு பெற்றது. நூர்மஹால் (Nur Mahal) (Light of the Palace-அரண்மனை ஒளி) என்ற அவனுடைய பட்டப் பெயர் நுஸ்ருத்தின் ஜஹாங்கீர் (Nusruddin Jahangir) என்ற பேரரசப் பட்டத்தை மறைத்துக் குறிக்கும்படி நூர்ஜஹான் (Nurjahan) (Light of the World-உலகத்தின் ஒளி) என்று மாற்றி வைக்கப்பட்டது. பல ஆண்டுகளாக பேரரசின் பொறுப்பை இவளே மேற்கொண்டிருந்தாள். அரண்மனையில் தனிப்பட்டவர்களின் முறையீடுகளையும் கேட்டாள். தன் பெயர் கொண்ட நாணயங்களையும் அச்சிட்டாள்.

### ஜெஸுட்டுகளுக்குச் சலுகைகள் அளித்தல் :

ஜஹாங்கீருக்கும் ஜெஸுட் பாதிரி மார்களுக்கு மிடையில் தாற்காலிகமாக ஏற்பட்டிருந்த நட்புப் பிரிவு 1606-ல் முடிவடைந்தது. அவ்வாண்டில் இவருடைய நட்பாதரவை அவர்கள் மீண்டும் பெற்றனர். லாகூரிலிருந்த இடமகன்ற, வன்மைமிக்க இவர்களுடைய கோயிலையும் கொல்லீஜியம் (Collegium) அல்லது பாதிரிகள் விடுதியையும் இடையூறுகளுக்குப்பின் தங்கள் கையிலேயே வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். ஆக்ராவில் 1606-ல் சுமார் இருபது பெயரீட்டு விழாக்களில் (babtisms) கிறித்துவப் பெயர்கள் சூட்டப்பட்டன. ஜஹாங்கீர் காபூலுக்குச் சென்று கொண்டிருக்கும்பொழுது 'நற் செய்தியின்' (Gospels) பாரசீக மொழிபெயர்ப்பு ஒன்றைப் பெற்றுக்கொண்டார். ஐரோப்பாவில் இருப்பது போலவே வெளிப்படையாகத் தங்கள் செயல்களையாற்றிக் கொள்ளுமாறு அவர்களுக்கு அனுமதியளித்தார். பேரரசர் ஆக்ராவுக்குத் திரும்பியபொழுது அவருடன் இரு பாதிரிகளையும் அழைத்துக் கொண்டுவந்தார். அவர்களுள் ஒருவரை லாகூரிலிருந்த திருச்சபையைக் கவனிக்கும் பொருட்டு அவ்விடத்திலேயே விட்டுவந்தார். திருச்சபை ஊர்வலங்கள் முழுக் கத்தோலிக்கச் சடங்குகளுடன் அனுமதிக்கப்பட்டன. கோவில் செலவுகளுக்கும், மதமாற்றம் செய்யப்பட்டவர்களின் உதவிக்காகவும் கருவூலத்திலிருந்து உதவிப் பணம் அளிக்கப்பட்டது. ஜஹாங்கீர் ஆட்சியின் ஆரம்பத்தில் இஸ்லாமியத்துக்குக் காட்டிய ஆர்வம் படிப்படியாக குறைந்து கொண்டே வந்தது. தந்தை நடந்த பாதையில் தாமும் நடக்கப்போவதாக இவர்

வெளிப்படையாக அறிவித்தார். இவருடைய பன்னிரண்டு மனைவிகளில் ஏழுபேர் இந்துக்களாவர்.

## கிறித்துவ உருவப் படங்கள்

பேரரசரைச் சமயமாற்றம் செய்வதற்காகவே ஜெஸூட்டு களின் முயற்சிகள் எடுக்கப்பட்டவையாகும். இவருடைய போக்கு இவரைக் கிறித்துவராக்கலாம் என்ற நம்பிக்கையை அவர்களுக்கு ஊட்டியது. பழைய, புதிய ஏற்பாடுகள் (Old & New Testaments), கிறித்துவத் திருமுறைத் தொகுதியிலிருந்து பிரித்துத் தொகுக்கப்பட்ட ஏடுகள் (Apoerypha) முனிவர்களின் வாழ்க்கைகள் (Lives of Saimts) போன்ற சமய நூல்களைச் சார்ந்த சமயத் தலைப்புக்களைக் கொண்ட படங்கள் இவர் கவனத்தைக் கவர்ந்தன. தீக்கை செய்விக்கும் ஜான் (John the Baptist) அந்தோனி முனிவர், (Saint Anthony) சியன்னவைச் சேர்ந்த பெர்னடின் முனிவர் (St. Bernardin of Siena) ஆகியவர்களுடைய உருவப் படங்கள் ஆக்ராவிலிருந்த இவர் சிம்மாசனத்தை-அலங்கரித்தன. அரண்மனையில் பல மண்டபங்களும், அறைகளும், அரசவைகளும் அவ்விதமே அலங்கரிக்கப்பட்டிருந்தன. ஜஹாங்கீர் ஒரு கிறித்தவராகிவிட்டார் என்று மக்களில் பெரும்பாலோர் நம்பியதிலும், அவர் மத மாற்றம் செய்துகொள்ளக்கூடும் என்று ஜெஸூட்டுகள் நம்பிக்கை கொண்டதிலும் எவ்வித வியப்பும் இல்லை. இவர் கிறித்தவ மதத்தைத் தழுவிக் கொள்வதற்குத் தடையாக நிற்கும். இடையூறுகளுள் பல பெண்களை மணந்துகொள்ளும் வழக்கமும் ஒன்றாகும் என்று அவர்கள் உணர்ந்திருந்தனர். ஒரு மனையாளைத் தவிர மற்ற எல்லாரையும் புறக்கணித்தல் இவருடைய கடமையாகும் என்று இவர்கள் வற்புறுத்த முயன்றனர். ஆனால் அம் முயற்சிகள் இவரிடத்தில் பலிக்கவில்லை.

## கோவாவுக்குத் தூதுகோஷ்டி அனுப்புதல்

இவருடைய தந்தையைப்போலவே இவரும் ஸ்பானிய அரசருக்கும் (King of Spain) போப்புக்கும் (Pope) ஒரு தூது குழுவை அனுப்ப விரும்பினர்; ஆனால் தூதுகுழுவை கோவாவின் அரசப் பிரதிநிதியிடமே அனுப்பமுடிந்தது. பேரரசின் ஆப்த நண்பரும் திறமைமிக்க அறுவை மருத்துவரும் போட்டிப் பந்தய ஈடுபாட்டாளருமான முகர்ரப்கான் (Muqarrab Khan) என்பவர் தூதராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஜஹாங்கீரின் தனி விருப்பப்படி அவருக்குத் துணையாகத் தந்தை பின்ஹேராவும் (Father Pinheiro) சென்றார். அப்பொழுது லாகூரில் அமைந்திருந்த அரசவையிலிருந்து இவர்கள் 1507 செப்டம்பரில் புறப்பட்டு 1608 ஏப்ரலில் காம்பேவை (Combay) அடைந்தனர். அந்த இடத்துக்கு அரசப்

பிரதிநிதியாக நியமிக்கப்பட்டனர். அங்கே அதுவரை வந்து சேராததனுல் தூதர்கள் அவர்களுடைய அறிமுகத் தாள்களைச் சமர்ப்பிக்க முடியவில்லை. உண்மையில் அப்பிரதிநிதி வந்து பதவி ஏற்கவில்லையாதலால் போர்ச்சுகீசியரின் இந்திய அரசாங்கப் பொறுப்பு 1609, மே 27ஆம் நாள் வரை மெனிஸஸ் (Meneges) என்ற இடத்தில் தலைமைக்குரு (Archbishop) விடம் இருந்து வந்தது. அந்நாளில் டான் ஆண்டிரியாஸ் ஹர்டதாஸ் டமென்டோஸா (Don Andreas Hartodas de Mendosa) என்பவர் பொறுப்பேற்று அவ்வாண்டு செப்டம்பர் 5ஆம் நாள்வரை பதவியிலிருந்தார்.

### காப்டன் வில்லியம் ஹாகின்ஸ் (Captain William Hawkins)

அதற்குள் காப்டன் வில்லியம் ஹாகின்ஸ் என்பவர் 1608, ஆகஸ்டில் ஹெக்டர் என்ற கப்பலில் சூரத்துக்கு வந்துசேர்ந்தார். இங்கிலாந்தின் அரசர் முதலாம் ஜேம்ஸ் (James I) வாணிகத்துக்காகத் தேவையான வசதிகளை விரும்பி ஜஹாங்கீருக்கு எழுதிய கடிதம் ஒன்றையும் இத்தூதர் கொண்டு வந்தார். தந்தை பின்ஹேராவும் மற்றப் போர்ச்சுகீசியர்களும் அளித்த கடும் எதிர்ப்பையும் புறக்கணித்து ஹாகின்ஸ் ஜஹாங்கீரின் அரசவைக்கு வந்து சேர்ந்தார். இவர் மொழிபெயர்ப்பாளர்களின் உதவியின்றியே பேரரசரிடம் துருக்கி மொழியில் பேசினுர். நானூறு படைவீரர்களுக்குத் தலைவரானுர். (Mansabdar) இப்பதவியில் அவருக்கு முப்பதினுயிரம் ரூபாய் சம்பளம் அளிக்கப்பட்டது. இத்தொகை இவர் பெற்றதேயில்லை என்று கூறப்படுகிறது.) முபாரக்ஷா (Mubarak Shah) என்ற அர்மீனியக் கிறித்தவரின் மகளையும் அவர் மணம் புரிந்துகொண்டார்.

### போர்ச்சுகீசியருடன் பகைமை

ஹாகின்ஸும் இதர ஆங்கிலேயேர்களும் பெற்ற சலுகைகள் போர்ச்சுகீசிய வர்த்தக உரிமைகளுக்குத் தீங்கிழைக்கும் எனக் கருதிய கோவாவின் புதிய வைஸ்ராயான மென்டோசா பேரரசர் அவ்வித சலுகைகளை அளித்தது ஒரு பகைமைச் செயலாகும் என்று பாவித்து ஜஹாங்கீருடன் அவர் போர் நிலையில் இருப்பதாகவும் அறியப்படுத்தினுர். பேரரசருடைய தூதரையும் வரவேற்க மறுத்துவிட்டார். முன்பின் யோசிக்காமல் செய்த அச்செயல் கடற்கரையோரப் பகுதிகளிலிருந்த வர்த்தகர்களுக்குத் தொல்லை கொடுத்தது; ஜஹாங்கீரையும் திணர வைத்தது. ஆகையால், ஆங்கிலேயர்களுக்கு அளித்த சலுகைகளைப் பேரரசர் ரத்து செய்தார். கோவாவிற்குச் சென்றிருந்த தந்தை பின்ஹேராவை

அரசப்பிரதிநிதி அதிகாரம் பெற்ற தூதராகவும் நியமித்தார். போரும் நின்றது. ஆங்கிலேயக் கப்பல்கள் சூரத்துக்குள் வர அனுமதிக்கப்படவில்லை.

போர்ச்சுகீசிய சூழ்ச்சிகளும் பேரரசரின் நிலையற்ற கொள்கையும் ஹாக்கின்சைத் திணறவைத்தன; 1611-ல் அரசவையை விட்டுச் சென்றார். அவர் பெற்ற அனுபவங்களைப்பற்றி அவர் கவர்ச்சிமிக்க குறிப்புகளை எழுதியுள்ளார். பர்சாஸ் (Purchas) என்பவரின் முயற்சியால் இவை பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டுள்ளன. அவற்றின் சில பகுதிகள் இங்கே மேற்கோள்களாகக் கொடுக்கப்படும்.

**வங்காளமும் தக்காணமும்**

உஸ்மான்கான் (Usmankhan) என்பவரின் கிளர்ச்சி அக்பர் காலத்திலிருந்தே துவங்கி இருந்தது. இந்து அரசர்களும் நிலக்கிழார்களும் புரிந்த செயல்கள் அதை மேலும் வலுப்படுத்தியது. கிளர்ச்சியாளர் கடும்போரில் காயமுற்று இறந்ததற்குப் பின் கிளர்ச்சியும் முடிவடைந்தது. ஜஹாங்கீரின் ஒப்புர விளக்கக் கொள்கை இஸ்லாம்கானின் வெற்றியை நீடித்துப் பயனளிக்கச் செய்தது. 'நூர்ருத்தீன் காஸி அவர்களுடைய குற்றங்களை மன்னித்துவிட்டார். வள்ளல் தன்மையால் அவர்களைத் தம்முடன் இணைத்துக்கொண்டார். ஆகையால், அவர் எடுத்துக்கொண்ட முயற்சி மாபெரும் உமராவின் (Grand Umara) கருத்தில் அவர்களை உயர்த்தியது; பேரரசருடன் இருப்பதற்கு அவர்கள் தகுதியுற்றவர்களாவர் என்று கருதப்பட்டனர்'.[1] ஆட்சியின் துவக்கத்திலிருந்து தக்காணத்துப் போர்கள் அறவே நின்றுவிடவில்லை. உரமற்ற ஒரு போர் குறிப்பிடத்தக்க விளைவு எதையு விளைவிக்காது ஆமத்நகர் படையோடு நடந்துகொண்டிருந்தது. அப்பொழுது ஆமத்நகர் மாலிக் ஆம்பர் (Malik Amber) என்ற திறமைமிக்க அபிஸினியர் ஒருவனது பொறுப்பில் ஆளப்பட்டு வந்தது. ஏற்கெனவே அரசவைக்குத் திருப்பியழைக்கப்பட்டிருந்த கான்கானன் (Khan Khanan) அப்துர் ரஹீம் (Abdur Rahim) பேரரச தளபதிகளுக்கிடையில் உண்டான சச்சரவுகளை அடக்குவதற்கு அனுப்பி வைக்கப்பட்டார். ஆனாலும், ஜஹாங்கீர் தக்காணத்தில் நிகழ்ந்த படையெழுச்சிகளின்மீது உறுதியான கட்டுப்பாட்டை நிலைநாட்ட முடியவில்லை.

[1] 'Makhzam-I-Abghana' by Ni'mat-ullah, Ira, B, Dorn in History of the Abghans.

## கடலில் ஆங்கிலேயர்களின் வெற்றி

அதே ஆண்டில் (1612) பிரிட்டனின் கப்பற்படைகள் இந்திய அரசியலில் நுழைந்தது அவ்வாண்டின் சிறப்பு அம்சமாகும். காப்டன் பெஸ்ட் (Captain Best) என்பவரின் தலைமையின்கீழ் டிராகன் (Dragon) என்ற ஓர் ஆங்கிலேயக் கப்பல், பார்ச்சாஸின் (Purchas) குறிப்பின்படி 'ஓஸியாண்டெர்' என்ற ஒரு சிறு கப்பலினை (அதைக் கப்பல் என்று திட்டவட்டமாகச் சொல்ல முடியாது; அதை நான் 'பினைச்சே' (Pinasse) என்றுதான் அழைப்பேன்) துணையாகக்கொண்டு நான்கு பெருங் கப்பல்களையும் இருபத்தைந்து அல்லது இருபத்தாறு பீரங்கிகளைக் கொண்ட ஒரு போர்ச்சுகீசிய படையுடன் போர் புரிந்து வெற்றி பெற்றது. "சர்தார் சாந் (Sardar Chan') ஆங்கிலேயர் பெற்ற வெற்றியைப் பற்ற வெற்றியைப்பற்றி கூறினபொழுது கடலில் போர்ச்சுகீசியருக்கு எவரும் நிகர் இல்லை என்று கருதியிருந்த மாபெரும் மொகலாயரை மிக்க வியப்புக்குள்ளாக்கியது" என்பது குறிப்பிடத்தக்கதாகும். மொகலாயப் பேரரசின் கப்பல் பலம் எப்பொழுதும் நலிந்தேயிருந்தது.

## போர்ச்சுகீசியர்களுடன் நிகழ்ந்த போர்கள்

மொகலாய அரசாங்கத்தின் நலிந்த நிலைக்கு எதிராகப் போர்ச்சுக்கீசியர்கள் அவர்களுடைய கடல் பலத்தைப் பயன் படுத்திக்கொண்டு நான்கு பேரரசக் கப்பல்களையும் கைப்பற்றி, பல முஸ்லீம்களை சிறையிலடைத்து, கப்பற் பொருளைக் கொள்ளை யடித்தனர் (1613). இந்த அட்டூழியம் பேரரசருக்கு மிக்க அருவருப்பூட்டியது. இதற்குப் பழிவாங்குமாறு முகர்ரம்கானுக் குக் கட்டளையிட்டார். முகர்ரம்கான் அப்பொழுது சூரத்தின் பொறுப்பை மேற்கொண்டிருந்தவராவார். கொள்ளையிடப்பட்ட முதன்மைக் கப்பல் ரெமீயூ (Remew) என்று வழங்கப்பட்ட தென்றும், அதில் மூன்று மில்லியன் மதிப்புள்ள பொருளும் மாபெரும் முகலாயருக்காக இரண்டு பெண்களும் கொண்டுவரப் பட்டனர் என்றும் ஆங்கிலேயே மூலங்களிலிருந்து நமக்கு அறிய வருகிறது. ஜஹாங்கீரின் அன்னைக்கு இப்பொருள்களின்மீது அதிக ஆசை இருந்ததால் அவற்றை வாங்குவதற்கு நிறையப் பொருள் செலவழித்தார்.

போர்ச்சுகீசியர் நடத்திய கப்பற் கொள்ளைகள் பேரரசுடன் போர் விளைவித்தன. பேரரசின் அதிகாரிகள் டாமனைத் (Daman) தாக்கினர்கள். மொகலாய ஆட்சிப் பகுதியில் வசித்துவந்த ஏறக்குறைய எல்லாப் போர்ச்சுகீசியர்களையும் ஜெரோம் ஸேவியர் (Father Jerome Xavier) என்ற பாதிரியையும் சிறை

பிடித்தனர். அப்பாதிரியை முபாரக்கானிடம் அனுப்பி அவருடைய விருப்பப்படி பாதிரிக்குத் தண்டனை கொடுக்கக் கூறினர். கிறித்துவ மதத்தை வெளிப்படையாகப் பின்பற்றுவதற்குத் தடை விதிக்கப்பட்டது; திருக்கோயில்களும் மூடப்பட்டன. 1615ஆம் ஆண்டின் துவக்கத்திலும் போர்ச்சுகீசியர்கள் அரசனாலும் மக்களாலும் வெறுக்கப்பட்டு வந்தனர். அவ்வாண்டில் வில்லியம் எட்வர்ட்ஸ் (William Edwards) என்பவர் முதலாம் ஜேம்ஸிடமிருந்து ஜஹாங்கீருக்கு ஒரு கடிதத்தைக் கொண்டுவந்தார். அவர் ஒழுங்கான தூதராக ஏற்றுக்கொள்ளப்படாவினும் ஜஹாங்கீர் அவரைச் சிறப்பாக வரவேற்றார். ஆங்கிலேயர்களை போர்ச்சுகீசியர்களுக்கு எதிராகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று பேரரசர் இப்பொழுது உணர்ந்திருந்தார். டையூவைக் (Diu) கைப்பற்ற எவ்வளவு படை தேவையாயிருக்கும் என்று ஜஹாங்கீர் ஹாகின்ஸைக் கேட்டபொழுது அதைப் பாழாக்க இருபதினாயிரம் காலாட்படையும் பதினான்கு பிரிட்டிஷ் கப்பல்களும் போதுமானவையாகும் என்று அவரிடத்திலிருந்து பதில் வந்தது.

### மேவார் கீழ்ப்படிதல்

மேவாருடன் (Mewar) நடந்தபோர் மாபத்கான் (Mahabat Khan), அப்துல்லாகான் (Abdu lah Khan) ஃபிரோஸ் ஜங் (Firoz Jung) ஆகியோர் பெற்ற வெற்றிகளால் மேலும் முற்றியது. ராணா அமர்சிங்கையும்ம் (Rana Amar Singh) அவருடைய மகனையும் இளவரசர் துணிகர இராசபுத்திரர்களைப் பின் துரத்திச் சென்று இறுதியில் அவர்களை அழித்தார். அக்பராலும் பெறமுடியாதிருந்த ஒரு வெற்றியை தாம் பெற்றதனால் ஜஹாங்கீர் அளவு கடந்து மகிழ்ச்சி அடைந்தார். இதனால் இவர் ஆற்றல் மிக்க பகைவர்களைத் தக்க முறையில் சிறப்பித்து, அவர் அடைந்த தோல்வியால் ஏற்பட்ட இகழ்ச்சியை மறைக்க விரும்பினர். சிறிது காலத்துக்குப் பிறகு ஆஜ்மீரிலுள்ள சிற்பிகளை வரவழைத்து, ராணாவுக்கும் அவருடைய மகனுக்கும் அவர்களுடைய உருவங்களைச் சலவைக் கல்லில் செதுக்க ஆணையிட்டார். உருவச் சிலைகள் உருவாகிய பிறகு அவைகளை ஆக்ராவுக்கு எடுத்துச் சென்றனர். அச்சிலைகள் பூங்காவிலுள்ள அரசர் காட்சியளிக்கும் சாரளத்தின்கீழ் (audience window) (ஜரோகா-Jharokha) வைத்தனர். முகலாயர் படைக்கு மேவார் ஆயிரம் குதிரைகள் கொண்ட படையை அனுப்புமாறு ஆணையிடப்பட்டது. கரண் (Karan) ஐயாயிரம் பேர் கொண்ட படைக்குத் தளபதியாக அளிக்கப்பட்ட கௌரவத்தை ஏற்றுக்கொள்ள நேர்ந்தது. ஆனாலும் முகலாய அரசவைக்கு ராணா நேரில் வரவேண்டிய அவசியம் இல்லை என்ற சலுகை அளிக்கப்பட்டது. எந்த சீசோடியா (Sisodia) மணப்பெண்ணும் முகலாய அந்தப்புரத்தை அலங்கரிக்கவில்லை,

அவ்வாண்டில், ஜூலை மாதத்தில் (1614) ராஜாமான்சிங் தக்காணத்தில் உயிர் நீத்தார். அவருடைய பெண்களில் அறுபதுக்குக் குறையாமல் உடன்கட்டையேறினர்.

## கொள்ளை நோய்

1616ஆம் ஆண்டின் துவக்கத்தில் ஜஹாங்கீரின் பத்தாண்டு ஆட்சியின் இறுதியில் பஞ்சாபில் நெறிக்கட்டுச் சார்ந்த ஒரு கொள்ளை நோய் பஞ்சாபில் தோன்றியது. அதுபோன்ற நோய் இந்தியாவில் தோன்றியதே இல்லை. 1896-ல் பம்பாயில் இந் நோய் மீண்டும் தோன்றியபொழுது காட்டிய குறிகளையே அப் பொழுதும் இது காட்டியது. இது முதலில் எலிகளையும் சுண் டெலிகளையும் பாதித்தது. ஏராளமான மக்கள், குறிப்பாக இந்துக்கள் இறந்தனர். வட இந்தியாவிலும் மேற்கிந்தியாவிலும் பெரும்பாலும் ஒவ்வொரு வட்டாரத்திலும் இந்நோய் பரவி யிருந்தது; எட்டு ஆண்டுகள் நீடித்திருந்தது. 1619-ல் இது ஆக்ராவில் தலைவிரித்தாடிக்கொண்டிருந்தபொழுது இருபத்து மூன்று மைலுக்கப்பால் இருந்த பத்பூர் சிக்ரி தப்பித்துக் கொண்டது. அதே போன்ற நோய் 1703–லும் 1704-லும் தக்கா ணத்தில் தோன்றியது.[1]

## சர் தாமஸ் ரோவின் தூதுக் குழு

இங்கிலாந்துக்கும் கீழ்நாடுகளுக்குமிடையில் புதிதாக நடந்து கொண்டிருந்த வாணிகத்தின் வளர்ச்சிக்கும் போர்ச்சுகீசிய போலிப் பகட்டுகளை ஒடுக்குவதற்கும் ஹாக்கின்ஸ் எட்வர்ட் ஆகியவர்களின் தலைமையின்கீழ் தூதுகோஷ்டிகள் அனுப்பி வைக்கப்பட்டன. இவை ஒழுங்குமுறை சாராத தூதுக்குழுக்க ளாகும். இவற்றைப் பின் தொடர்ந்து சர் தாமஸ் ரோவின் (Sir Thomas Roe) ஒழுங்குற அமைக்கப்பட்ட தூதுக்குழு ஒன்று அனுப்பிவைக்கப்பட்டது. அவர் முதலாம் ஜேம்ஸிடமிருந்து சான்றிதழோடு ஜஹாங்கீரிடம் அனுப்பிவைக்கப்பட்ட தூத ராவர். அவர் நல்ல கல்வியைப் பெற்றிருந்த உயர் குடிமகனுவார்; பண்பட்ட அரசவையினர்; தேர்ச்சி பெற்ற அரசியல் விரகர். தமக்கு அளிக்கப்பட்ட பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கு தகுதி யுற்றவராகவும் இருந்தார். ஆங்கிலேய வர்க்கத்துக்குப் பாது காப்பு அளிப்பதற்கான உடன்படிக்கை செய்துகொள்வது அப் பொறுப்பாகும். 1615 செப்டம்பரில் ரோ சூரத்தில் அல்லது

[1] Imperial Gazetteer of India (1907) Vol. iv-p 475. தக்காணத்தில் தோன்றிய கொள்ளை நோயைப்பற்றி Shoria Mogor Vol. p. 27 என்ற நூலைப் பார்க்க.

சுவால்லி சாலேயில் (Swally Road) வந்திறங்கினர்; அப்பொழுது முதலில் அஜ்மீரிலிருந்த ஜஹாங்கீரின் அரசவைக்கு விரைந்தார். அவருடன் கொண்டுவந்த தனி மதக்குரு அப்பொழுது இறந்துவிட்டதனல் தூதர் சூரத்திலிருந்த ஆங்கிலேய பாதிரியான எட்வர்ட் டெர்ரி என்பரை வரவழைத்து அப்பதவியில் நியமித்தார். டெர்ரி என்பவர் 1616-ல் வந்த கப்பற்படையில் தனிமதகுருவாக பணியாற்றியவராவர். இவர் தாம் அடைந்த அனுபவங்களே எல்லாம் சிறப்பாக குறிப்புட்டிருக்கிருர். இக்குறிப்புகளுக்காக உலகம் அவருக்கு கடமைப்பட்டுள்ளது- அவைகள் தாமஸ் ரோவின் குறிப்புகளேவிட மிகச் சிறந்தவையாகும். தனிமதகுரு கூர்ந்து கவனிப்பராவர்; இந்தியாவின் மக்களிடம், அவர்கள் இந்துக்களாயினும் முஸ்லீம்களாயினும், பரிவிரக்கம் காட்டினர். சதியும் வஞ்சகமும் லஞ்ச ஊழலும் நிரம்பியிருந்த அரசவையில் எங்ஙனம் அரசாங்கம் நடைபெற்று வந்தது என்பதை உண்மையில் ரோவின் குறிப்புச்சுவடு (Journal) அறிவிக்கிறது. வெறியூட்டும் மதுக்களேயும் அபினியையும் அருந்தும் பழக்கத்தில் மூழ்கியிருந்த ஜஹாங்கீர், சுயநலத்திற்காகத் திட்டமிட்டுக்கொண்டிருந்த இராணியின் தந்திரங்கள், அவளுடைய சகோதரன் ஆசப்கானுடைய கொள்கையற்ற நிலே, இளவரசர் குர்ரமின் (ஷாஜஹான்) நழுவு திறத்தையும் எதிர்க்கச் சக்தியற்றவராயிருந்தார். அத்தூதர் இளவரசரைப்பற்றி அளிக்கும் எழுத்தோவியம் நினைவிற் கொள்ளத்தக்கதாகும். 'இவ்வாறு அமைதியான, வீறமைதி கொண்ட, புன்முறுவல் செய்யாத முகத்தை நான் கண்டதே இல்லே. மனிதர்களேப்பற்றிய மதிப்பையோ மாறுபாட்டையோ, இவரது முகம் காட்டவில்லே. ஆனல் எல்லாவற்றிலும் ஏளனத்தையும் வரம்புமீறிய இறுமாப்பையும் இவரது முகம் காட்டியது என்று அவர் கூறுகிருர்.

## இளவரசர்கள் குஸ்ருவும் குர்ரமும்

இளவரசர் குஸ்ருவின் சிறந்த பண்புகளுக்கும் பொது மக்கள் அவரை விரும்பும் நிலேக்கும் தனி மதகுரு அளிக்கும் சான்றுரையை ரோ வலியுறுத்துகிருர். இருந்தும், நூர்ஜஹான் ஆஸப்கான் ஆகியவர்களின் தனி மறைவு காப்பமைதியோடு இவரது சகோதரர் இளவரசர் குர்ரம் என்பவரால் இவரது உயிர் இடையருது அச்சுறுத்தப்பட்டது. உண்மைகளே அறிந்து கொள்வதற்கு உகந்த சூழ்நிலேயில் இருந்த அத்தூதர் 'மூத்த சகோதரரான சுல்தான் குஸ்ரு எல்லாருடைய விருப்பத்தையும் மதிப்பையும் (யாவரும் அவரைப் பெற்று வணங்கினர்) பெற்று இருந்தார் அவரது மேன்மையான செயல்களுக்கு அவரை நியாயமுறவே புகழ்கிருர்கள் என்று கூறுகிருர்.

மற்றொரு ஏட்டுரைப்பகுதியில் அவரது தீர்ப்பை விரிவு படுத்தும் முறையில் அவர் பின் வருமாறு குறிப்பிடுகிறார்.

'சுல்தான் குஸ்ரு அவரது உரிமையை நிலைநாட்டுவதில் வெற்றிபெற்றால் இவ்விராச்சியம் கிறித்தவர்களுக்குத் தெய்வமனை யாக இருக்கும். அவர் அவர்களை நேசிக்கிறார், அவர்களுக்கு நன் மதிப்பு அளிக்கிறார்; கல்வி, பேராண்மை, போரினால் விளையும் ஒழுங்கு ஆகியவற்றை அவர் விரும்புகிறவர்; தகாத விருப்பத்தை வெறுக்கிறவர். உயர்குடி மக்களும் தம்முன்னோரும் கையாண்ட மிகக் கேவலமான எடுக்கல் பழக்கத்தைக் கவனித்து அறிந்து கொள்பவர். ஆனால், மற்றவர் வெற்றி பெற்றால் நமக்குப் பெரு நஷ்டம் ஏற்படும். ஏனென்றால், அவர் மூடநம்பிக்கையில் மிக்க ஆர்வத்தைக் காட்டுபவர்; கிறித்தவர்களை வெறுக்கிறவர்; இறு மாப்புக்கொண்டவர்; சூழ்ச்சித் திறனாளி; வஞ்சகர்; முரட்டுத்தன மான கொடுங்கோலாட்சியாளர்.'[1]

அந் நிகழ்ச்சி கூர்மதிவாய்ந்த தூதருடைய மனோபாவத்தின் உண்மை நிலையையும், ஷா ஜஹானது குணவியல்பைப்பற்றி அவர் கொண்டிருந்த மதிப்பீட்டின் பழுதுபடா நிலையையும் மெய்ப்பிக் கிறது. ஷா ஜஹானின் குணாதிசயங்கள் பொறுத்தவரை தற்கால வரலாற்றறிஞர்கள் தவறாக எண்ணங்களையே கொண்டுள்ளனர்

ரோ 1619-ல் தாய் நாட்டுக்குத் திரும்பினார் ஒழுங்குற அமைந்த ஓர் உடன்படிக்கையைச் செய்து கொள்வதில் வெற்றி காணவில்லையெனினும் அவரது நாட்டவர்களுக்காக ஏராளமான சலுகைகளைப் பெற்றுக் கிழக்கிந்திய வாணிகக் குழுவின் வாணி கத்தை உறுதிப்படுத்தினார்.

## தக்காணத்துப் போர்

தக்காணத்துடன் நடந்து கொண்டிருந்த ஆக்கிரமிப்புப் போர் ஆட்சிக்காலம் முழுவதும் நடந்து கொண்டே இருந்தது. அங்கே ஆமத்நகரின் திறமைமிக்க அபிஸினிய அமைச்சரான மாலிக் ஆம்பர் (Malik Amber) என்பவர் பேரரசினர்களின் தலையார்ந்த பகைவராக இருந்தார். போரினால் உறுதியான பயன் எதுவும் ஏற்படவில்லை. கான் கானான அப்துர் ரஹீம் அவருடன் சேர்ந் திருந்தார் என்று நம்புவதற்குப் போதிய காரணங்கள் உள்ளன. ஆமத் நகரில் உள்ள அரண் 1616-ல் சரணடைந்தது. இளவரசர் குர்ரம் ஒரு போலி வெற்றியையும் பெற்றார். இதற்குப் பரிசாக

[1] எழுத்துக் கூட்டுரு தற்கால வழக்குக்கேற்றதாக்கப்பட்டுள்ளது, நிறுத்துக் குறியீடு பழையபடியே அமைக்கப்பட்டுள்ளது.

இவருக்கு ஷா ஜஹான் என்ற பட்டப்பெயரும் முப்பதினுயிரம் வீரர்களையும் இருபதினுயிரம் குதிரை வீரர்களையும் கொண்ட படையின் ஆணைப்பொறுப்பும் ஏராளமான ஊதியத்துடன் (Mansab) அளிக்கப்பட்டன. மாலிக் ஆம்பர் 1626ஆம் ஆண்டு வரை உயிருடன் இருந்து அவ்வாண்டில் அவருடைய முதிய வயதில் இறந்தார்.

### கங்ரா சரணடைதல்

கங்ரா (Kangra) அரண் 1620 நவம்பரில் ஜஹாங்கீருக்குச் சரணடைந்தது. இது அக்பரையும் எதிர்த்து நின்ற வலிமை மிக்க அரணுகும். இதனின் சரண் ஜஹாாங்கீரது ஆட்சியின் சிறப்பு மிக்க இராணுவ சாதனையாகும்; அவருடைய தகப்பனுரையும் திணரவைத்த ஓர் அரண் அவருடைய அதிகாரி ஒருவரால் அடக்கப்பட்டது, ஜஹாங்கீருக்கு மிக்க பெருமையை அளித்தது. சிறிது காலத்திற்குப்பின் பேரரசர் வெல்லப்பட்ட பகுதிக்குச் சென்று அந்த இடத்தில் ஒரு மசூதி கட்டியும், அரணின் எல்லைகளுக்குள் ஒரு காளையைப் பலியிட்டு முறையே முஸ்லீம்களுக்கு மகிழ்ச்சியும் இந்துக்களுக்கு அருவருப்பும் தந்தார். அக்காலத்தில் வெல்லப்பட்ட சிறு பகுதிகளில் கொக்காரக் குர்தாவும் (Khokhara Khurda) ஒன்று இதில் வைரச்சுரங்கங்கள் இருந்தன. இவ் வெற்றிகளெல்லாம் ஒரிஸ்ஸாவின் எல்லையைக் கோல்கொண்டா எல்லை வரையிலும், காஷ்மீர் எல்லைகளில் கிஷ்ட்வார் (Kisntwar) வரையிலும் பரவச் செய்தன.

### இளவரசர் குஸ்ரூ கொல்லப்படுதல்

இளவரசர் குஸ்ருவின் துன்பம் நிறைந்த வாழ்க்கை 1622, ஜனவரியில் துயர முடிவடைந்தது. சுமார் ஆறு ஆண்டுகளுக்கு முன் 1616-ல் ஜஹாங்கீர் அவருடைய மகனை பற்றுடைய் இந்துவான அனி ராயின் (Ani Rai) பொறுப்பிலிருந்து அவருடைய மகனின் கடும் பகைவரான ஆஸப்கானிடம் மாற்றினுர். பிறகு ஆஸப் கான் நூர்ஜஹான் ஆகியோர்களின் தூண்டுதலினுல் கைதி அவருடைய சகோதரரான இளவரசர் குர்ரமிடம் ஒப்படைக்கப்பட்டார். தடுத்திருக்க முடியாத நிகழ்ச்சி 1622ஆம் ஆண்டின் துவக்கத்தில் நடந்தேறியது. 'குஸ்ரூ வயிற்றுவலி வியாதியால் (குலாஞ்) மாதத்தின் 8ஆம் நாளில் (? 20) இறந்து விட்டார் என்றும் இறைவன் அடியை அடைந்துவிட்டார் என்றும் அறிவிக்கும் ஓர் அறிக்கை குர்ரமிடமிருந்து வந்துள்ளது' என்பதை மட்டும் கூறி ஜஹாங்கீர் அவருடைய மகனின் மரணத்தைப் பற்றி மற்றெந்த குறிப்புரையுமின்றி வருத்தத்தை தெரிவித்துக்கொள்ளாமலே எழுதுகிறுர்.

## காந்தாரத்தின் இழப்பு

பாரசீகத்தின் (Persia) ஆற்றல்மிக்க அரசரான ஷா அப்பாஸ் (Shah Abbas) மீண்டும் 1622-ஜூன் மாதத்தில் காந்தாரத்தைக் (Gandhar) கைப்பற்றினர். அந்த இடத்தைச் சுயமாகவே கைவிட்டுவிடும்படி அவர் ஜஹாங்கீரை வீணுகத் தூண்டிக் கொண்டிருந்தார். அவர் செய்த முயற்சிகள் முடிவடைந்ததால் அந்த இடத்தை எவ்வித இடையூறுமின்றி அவர் பலவந்தமாகக் கைப்பற்றினர். இப் பேரிழப்பு ஜஹாங்கீரின் அமைதியைக் குலேத்தது. ஜஹாங்கீர் அந்நகரை மீண்டும் தம் வசமாக்க ஒரு பெரிய படையெடுப்பை நடத்தத் திட்டமிட்டார். அப்படையின் பொறுப்பை ஷா ஜஹானிடம் ஒப்படைக்க விரும்பினர் ஆனல், அத்தருவாயில் பேரரசர் உடல் நலமற்று இருந்தார். பாரசீக எல்லேக்குச் சென்று தமது சிம்மாசன உரிமைக்குத் தீங்கு இழைத்துக் கொள்ளக்கூடாது என்று ஷா ஜஹானும் முடிவு செய்திருந்தார்.

## ஷாஜஹானின் கிளர்ச்சி

தந்தையின் ஆணைக்குக் கீழ்ப்படியாமல் ஷாஜஹான் வெளிப்படையாகக் கிளர்ச்சி செய்தார். அப்பொழுது இளவரசர் (Stariyar) காந்தாரப் படையெடுப்புக்குப் பொறுப்பு ஏற்கும்படி நியமிக்கப்பட்டார் ஆனலும் இதனல் ஒரு பயனும் ஏற்படவில்லே. அரசாங்கத்தின் ஆற்றல் எல்லாம் கிளர்ச்சியை ஒடுக்குவதில் ஈடுபட்டிருந்தது. அக்பர் காலத்திலிருந்தே திரட்டப்பட்டு வந்த பொன், வெள்ளி நாணயங்கள் நிறைந்த பெரும் பொக்கிஷத்தை ஆக்ராவிலிருந்து லாகூருக்குப் பாதுகாப்புடன் கொண்டு வர திட்டமிடப்பட்டது. ஆனல், ஷாஜஹான் அதைத் தாக்கப் போவதாகத் தம் எண்ணத்தை வெளிப்படுத்தியவுடன் அத்திட்டம் கைவிடப்பட்டது. மானக்கேடுற்ற தந்தை ஒரு காலத்தில் மிக்க செல்லப்பிள்ளேயாக இருந்த தம் மகனின் நன்றிக்கேட்டை நினேத்து மனம் நொந்து புலம்பிப் பின்வருமாறு கூறிய பொழுது நம் அனுதாபத்துக்குரியதாகும். என்னுடைய துயரங்களேப்பற்றி நான் என்ன கூறவேண்டியிருக்கிறது? (கடமையை நிறைவேற்றத் தவறிய மகனுக்கு எதிராக வேதனேயிலும், பலவீனத்திலும், என் உடல்நலனுக்கு ஒத்துக்கொள்ளாத வெயிலிலும், சுறுசுறுப்புடன் நான் குதிரைமேல்ஏறி அணிவகுத்துச் செல்லவேண்டியிருக்கிறது,' ஆனலும் அவருடைய பெரும்பாரத்தைத் தாங்குவதற்கான ஆற்றலேத் தமக்கு அளித்ததற்கு அவர் இறைவனுக்கு நன்றி செலுத்தினர். கிளர்ச்சியாளர் காந்தாரத்தின் மீட்பை ஒத்திப்போடும்படி செய்தும், அங்ஙனம் செய்து, தம் இராச்சியத்திற்கே தீங்கிழைத்துவிட்டார் என்பதையும் ஜஹாங்கீர் குறிப்பாக

நினைத்து மனம் நொந்தார். பல பிரபுக்கள் இராச்சியத்திற்குத் துரோகம் செய்ததற்காகக் கொல்லப்பட்டனர். ஷாஜஹானின் மூத்த சகோதரரான சுல்தான் பார்வீஸ் (Parviz) என்பவர் பேரரசரின் வாரிசாக நியமிக்கப்பட்டார். ஜஹாங்கீர் நியாயமுறையே வெறுப்புக்கொண்டார். ஏனென்றால், எழுபது வயதடைந்த முதியவரான கான்கானுர் அப்துல்ரஹீம், பேரரசரால் சிறப்பாக மதிக்கப்பட்டிருந்தும், துரோகிகளுடன் சேர்ந்து கொண்டார்.

தில்லிக்குத் தெற்கில் பொலாச்பூர் (Bolachpur) என்ற இடத்தில் 1623-ல் நடந்த போரில் ஷாஜஹான் முக்கியமாக நம்பியிருந்த இராஜா பிக்ரம்ஜித் என்ற பிராமணர் மரணமடைந்தார். இதனால், மாபத்கானின் தலைமையில் இருந்த பேரரசரின் படை கிளர்ச்சியாளர்களை முறியடித்தது. ஷாஜஹான் மாளவத்தின் வழியாகத் தக்காணத்துக்கும் அங்கிருந்து தெலுங்கானவைக் கடந்து வங்காளத்துக்கும் துரத்தப்பட்டார். அவர் அம் மாகாணத்தையும், பீஹாரையும் கைப்பற்றினர். மாபத்கான் கிளர்ச்சியாளரை மற்றொருமுறை தோற்கடித்து மீண்டும் தக்காணத்திற்குத் துரத்தினர். அங்கே அவருடைய பழைய பகைவரான மாலிக் ஆம்பருடனும் தெற்கிலிருந்த மற்ற அரசர்களுடனும் நட்புறவு செய்து கொள்ள இளவரசர் முயன்றார். மகனுக்கும் தகப்பனுக்குமிடையில் 1625-ல் ஒருவகைப்பட்ட இணக்கம் ஏற்பட்டது. ஷாஜஹான் ரோட்டாஸ்ஸயும் (Rhotas) ஆசிர்கர்ரையும் (Asirgarh) சரணடைந்து அவருடைய மூத்த மகனை தாரா ஷுகோவையும் (Dara Shikoh) மூன்றும் மகனை அவுரங்கசீப்பையும் (Aurangazeb) பிணையாக அரசவைக்கு அனுப்பிவைத்தார். அவர் அங்கு நேரில் வரவில்லை. இராசபுதனத்திலோ தக்காணத்திலோ வசித்துவந்தார்.

**மாபத்கான்** (Mahabatkhan)

அடுத்த ஆண்டில் (1626) வியப்பூட்டும் நிகழ்ச்சிகள் நடந்தேறின. பேரரசின் பிரமுகர்களில் ஒருவரும் ஷாஜஹானைப் பின் துரத்துவதில் மிகச் சுறுசுறுப்பாக முனைந்திருந்தவருமான மாபத்கான் நூர்ஜஹானின் பகைமையால் அழிவடைந்து விடுவதற்கான பேராபத்துக்குட்பட்டிருந்தார். இதனால் ஐயாயிரம் இராஜபுதன படை வீரர்களுடன் பேரரசரின் பாசறையை நோக்கி வட பகுதிக்குச் சென்றார். ஜஹாங்கீரும் அவருடைய வாழ்க்கைத் துணைவியும் காபூலுக்குச் சென்று கொண்டிருக்கும் வழியில் ஜீலம் (Jhelum) நதிக்கரையில்

கூடாரத்தைப் பரப்பி இருந்தனர். அவர்கள் அங்கிருந்து பின்னணிப் பாதுகாவற்படையுடன் நதியைக் கடந்து செல்லும் தருவாயில் மாபத்கான் தம்முடைய இராஜபுதன வீரர்களுடன் அவர்களைச் சூழ்ந்துகொண்டார்; பேரரசனைச் சிறைப்படுத்தினர். நூர்ஜஹான் காவலில் வைக்கப்படாததனல், நதியைக் கடந்து தப்பி ஓடிவிட்டாள். பேரரசரை வன்முறையால் மீட்கும் முயற்சி முறிவடைந்ததனல் அவள் தந்திரத்தை கையாண்டு தன் குறிக் கோளை நிறைவேற்றிக் கொண்டாள். வெகு விரைவில் ஷாஜஹானுடன் சேர்ந்துகொண்டாள். அப்பொழுது ஷாஜஹான் பலமாக நெருக்கப்பட்டுப் பாரசீகத்திற்குத் தப்பியோடத் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். இருந்தபோதிலும், தம் குடிகார சகோதரனும் சிம்மாசனத்திற்காகத் தமக்கு எதிராகக் கடும் போட்டியிடும் பகைவருமான பர்ர்வீஸ் அக்டோபரில் புர்ஹான்பூரில் இறந்தார். இந் நிகழ்ச்சி ஷாஜஹானுக்கு அதிக உற்சாகம் அளித்தது.[1] பார்வீஸ் மிக அதிகமாக குடித்துக் கொண்டிருந்தார் என்பதைத்தவிர அவரது தனிப்பட்ட மற்ற எந்த குணவியல்பும் ஏடுகளில் குறிக்கப் பட்டிருக்கவில்லை.

## ஜஹாங்கீரின் இறப்பு

ஜஹாங்கீர் பல ஆண்டுகளாக உடல்நலமின்றி இருந்தார். ஆனாலும் சிறிதுகால நோய்க்குப்பின் உயிர் நீத்தார். காஷ்மீரி லிருந்து திரும்பிக்கொண்டிருந்த அவர் அப்பொழுது காஷ்மீரத் துக்குச் செல்லும் சாலையில் மலையடியோரத்தில் பீம்பர் (Bhimbar) என்ற இடத்துக்கு அருகில் இருந்த சிங்கிஸ் ஹட்லி (Chingiz Hatli) என்ற கிராமத்தில் தங்கியிருந்தார். அவர் 1627, நவம்பரில் இறந்தார். ஆனாலும் அவருடைய வாரிசான ஷாஜஹான் அடுத்த பிப்ரவரி மாதம்வரை சிம்மாசனம் ஏற முடியவில்லை. இதற்குக் காரணங்கள் அடுத்த அதிகாரத்தில் ஆராயப்படும்.

## ஜஹாங்கீரின் ஆளுமை

முன்னல் குறிப்பிட்டதிலிருந்து ஜஹாங்கீரின் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த முக்கிய அரசியல் நிகழ்ச்சிகள் ஒரு சிலவே யாகும் என்று தெரியவருகிறது. பேரரசின் இராணுவ பலம் 1605-ல் அக்பர் மரணமடைந்தபொழுது இருந்ததைவிட இப் பொழுது 1627-ல் மேலும் குறைந்திருந்தது என்பதில் ஐய்யப்பாடு

[1] நெடுங்காலத்துக்குப்பின் அவருடைய தந்தை அவருடைய இரு சகோதரர் களையும் கொன்றதாக அவுரங்கசீப் ஒரு கடிதத்தில் அவர்மீது குற்றம் சாட்டி ஞர். ''உங்களுக்கு எத்தீங்கும் இழைக்க நினைத்திராத உங்களுடைய இரு சகோதரர்களான குஸ்ருவையும், பார்வீஸையும், நீர் சிம்மாசனம் ஏறுவதற்கு முன் கொன்றதைப்பற்றி நீர் இப்பொழுது என்ன நினைக்கிறீர்?'' (Sarkar-History Vol. iii, p. 155).

இருக்கமுடியாது. அக்பர் விதித்த முறைகளின்படியே பொது வாக நிர்வாகம் நடத்தப்பட்டு வந்தது. ஜஹாங்கீரின் ஆட்சி அவருடைய தந்தையினது ஆட்சிகள் நீடிப்பே என்று கருதலாம். புகழ்பெற்ற தந்தையின் ஆட்சியோடு ஒப்பிட்டுப் பார்க்குங்கால் ஜஹாங்கீரின் ஆட்சி அவருடைய சொந்தக் குறைபாடுகளினுல் சிறிதளவு மோசமாகவே இருந்தது. இவர் இயற்கையாகவே பெற்றிருந்த திறமைகள் பல இவரது அளவுமீறி குடிக்கும் பழக் கத்திஞல் அழிவடைந்தன. இப்பழக்கம் இவருக்கு இயல்பாகவே அமைந்திருந்த கோபத்துக்கு செயற்கை மூர்க்கத்தை அளித்தது. கோப நிலையில், குறிப்பாகத் தம் சிம்மாசனத்தின் தற்காப்பு அச்சுறுத்தப்பட்டால், பேய்த்தன்மை வாய்ந்த கொடுமைகளை இழைத்துவிடுவார். அதுபோன்ற நிலையில் இவர் மனிதர்களை உயிருடன் தோலுரித்தார், கழுவேற்றினுர்; யானைகளைக்கொண்டு கிழித்தெறிந்தார்; அல்லது மற்ற வகைகளில் சித்திரவதை செய்து அவர்களைக் கொன்ருர். இதுபோன்ற கொடுமைகள் ஹாக்கின்ஸ், ரோ ஆகியவர்களுக்கு வெறுப்பூட்டின. அரசத் ‘துரோகம்' பிரச்சினை எழாவிடினும் இவருடைய உணர்ச்சி வசப்பட்ட கட்டற்ற மனப்பாங்கு இவரைச் சில வேளைகளில் அதிர்ச்சி தரும் கொடுமைகளை இழைக்கும்படி தூண்டியது. இவர் கபடமின்றிப் பின்வரும் நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிருர்.

“22ஆம் தேதி அன்று நாள் சுடும் தூரத்தில் ஒரு கொம்பு மானை நெருங்கியபொழுது ஒரு மாளிகைப் பணியாளும் இரண்டு கையாள்களும் திடிரென்று தோன்றியதனுல் கொம்புமான் தப்பி ஓடிவிட்டது. ஒருவரும் இதுபோன்ற செயலை மீண்டும் செய்யா வண்ணம் நான் கோப வெறியில் அவ்விடத்திலேயே அப் பணி யாளைக் கொல்லும்படி, கையாள்களை பின் தொடைத்தசை நார்களை வெட்டிக் கழுதைளின்மேல் ஏற்றிப் பாசறையைச் சுற்றிக் கொண்டு வரும்படியும் அவர்களுக்கு கட்டளையிட்டேன்.

அதற்குப் பிறகு நான் குதிரை மேலேறி மீண்டும் வேட்டையில் முனைந்து பருந்துகளையும் வல்லூறுகளையும் வேட்டையாடி இருப் பிடத்திற்கு வந்து சேர்ந்தேன்”.

ஜஹாங்கீரின் உண்மையான ‘வாழ்க்கைக் குறிப்புகளை (Memoirs) அவரே அவருடைய கையினுல் எழுதியிருக்கக் கூடும்; அல்லது அவர் கூற ஓர் எழுத்தர் எழுதியிருக்கக் கூடும். அவ ருடைய ஆட்சியின் பத்தொன்பது ஆண்டுகளைப்பற்றிக் கூறும் அவை உயிரோட்டமுடைய, வியக்கத்தக்க ஒரு எழுத்தோவி யத்தை அளிக்கின்றன. இவற்றில் இளமென்மையும், கொடுமை யும், நீதியும், கட்டற்ற மனப்பாங்கும், தூய்மைப்பாடும், மிருகத்

தன்மையும், நல்ல எண்ணப் போக்கும் சிறு குறும்புத்தனமும் வியக்கத்தக்க முறையில் கலந்துள்ளன. டெர்ரி பின்வருமாறு கூறுவது உண்மையேயாகும் : 'அவ்வரசனின் போக்குப் பொறுத்தவரை அது புறக்கோடிகளை எட்டி இருந்தது என்று எனக்குத் தென்படுகிறது. ஏனென்றால், அவர் சில வேளைகளில் மிருகத்தனமான கொடுமையுடன் நடந்துகொண்டார். மற்ற வேளைகளில் அளவுமீறி நீதியுடனும் பண்பார்ந்த முறையிலும் நடந்துகொண்டார். 'ஒரு பேரனை இழந்ததற்காக இவர் கடுப்பான வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார். இரக்கமிக்க சிறுசிறு தானதருமங்களைச் செய்து அடிக்கடி மகிழ்ச்சியுற்றார். இவர் எழுதிய இலக்கிய ஏடுகளில் இயற்கைப் பொருள்களைப்பற்றிய கூரிய குறிப்புரைகள் நிரம்பிக் கிடக்கின்றன. கிட்டத்தட்ட ஒவ்வொரு கோடைகாலத்திலும் இவர் காஷ்மீருக்குச் சென்று,, அந்நாட்டுப் பகுதியைப் பற்றிய சிறந்த வருணிப்புகளை எழுதுவதுமன்றி மகிழ்ச்சி தரும் பள்ளத்தாக்கில் காணமுடியாத பறவைகள், விலங்குகள் ஆகியவற்றைப்பற்றிய ஒரு பட்டியலையும் உன்னிப்பாகத் தயாரித்தார். சிறந்த இயற்கைக் காட்சிகளைக் காதலித்தார். நீர்வீழ்ச்சி ஒன்றைப்பார்த்து மெய்மறந்து மகிழ்ச்சியுறுவார். ஒருவர் அவருடைய பார்வையை எடுக்காமலே பார்த்துகொண்டே இருக்கும் அளவுக்கு தாக் (dhak) அல்லது பலாஸ் (palas) என்ற மரத்தின் சிவப்புப் பூங்கொத்து அழகு வாய்ந்ததாக இருக்கிறது என்று இவர் கருதினர். காஷ்மீர் காட்டுப் பூக்களைப் பார்த்து இன்பத்தில் மூழ்கினர்.

இவர் ஓவிய, சித்திரக்கலைகளில் திறமைமிக்க சுவைத்திறவல்லுனராவார்; கலைஞர்களின் தாராள புரவலருமாவார். அவரே ஓவியங்களைத் தீட்டுவதில் ஓரளவு திறன் பெற்றிருந்தார். ஆக்ராவின் அரண்மனைச் சுவர்களின் அணியான உருவரைப் படங்களில் சிலவற்றை அவரே வரைந்திருந்தார். இசையையும் பாடல்களையும் பாராட்டினர். கட்டடக்கலையில் நுட்பமான விருப்பார்வம் பெற்றிருந்தார். அக்பரது கல்லறையின் தனிப்பட்ட அமைப்பு இவருடைய கருத்தின்படி தயாரிக்கப்பட்டதாகும்.

அவருடைய நீதி விருப்பத்தின்பேரில் ஜஹாங்கீர் குறிப்பாக இறுமாப்புக்கொண்டிருந்தார். அக் குணவியல்பிற்காக அவர் பெற்ற புகழ் இந்தியாவில் நீடித்து நிலைத்திருக்கிறது. மிக்க செல்வாக்குடைய கொலையாளி ஒருவனின்மீது அவரே விதித்த தூக்குத் தண்டனையைப்பற்றிக் கூறும்பொழுது அவர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: 'இதுபோன்ற விஷயங்களில் நான்

இளவரசர்கள், அமீர்கள் என்று கருதி அவர்களுக்குள் ஒரு சார்பாக நடந்துகொள்வதிலிருந்து - இறைவன் என்னைக் காப்பாற்றுவாராக'.

இவர் விதித்த அச்சமூட்டும் தண்டனைகள் பாரபட்சமின்றி அளிக்கப்பட்டனவாகும்.

**சமயம்**

இவருடைய சமயத்தை வரையறுப்பது எளிதன்று. ஆர்ந் தமர்ந்த சிந்தனையாளரான சர். தாமஸ்ரோ இவரை நாஸ்திகர் என்று வெளிப்படையாகக் கண்டித்தார். ஆனல் அத் தீர்ப்பு முல்லா அகமதுவின் (Mullah Ahmad) தீர்ப்பைப் போலவே, சமயப்பொறையற்ற நிலையில் வாழ்ந்து வந்தவர்களுடைய கருத்து எதிரலையும் அதனல் அவர்கள் சமயப்பொறையின்மீது கொண்டிருந்த சந்தேகத்தையுமே குறிப்பதாகும். இவர் எந்தத் திரு வெளிப்பாட்டையும் வெளிப்படையாக ஒப்புக்கொள்ளவில்லை யாயினும் அல்லது உறுதியான ஒரு மதத்தில் பற்றுக் கொண்டிருக்கவில்லையாயினும் இவர் உண்மையாகவே கடவுளின்மீது நம்பிக்கை கொண்டவராவார். இவர் கிறித்துவ சிலை உருவங்களுக்கும் சடங்குகளுக்கும் காட்டிய விசித்திரமான ஒருபுடைச் சார்பும் ஜெஸுட் பாதிரிகளுடன் கொண்டிருந்த மிக நெருங்கிய தொடர்பும் திருக்கோயிலின் தத்துவங்களை ஏற்றுக்கொள்ளும்படி இவரைத் தூண்டவில்லை. போர்ச்சுகீசிய ஆதரவையும் வர்த்தகத்தையும் பெறுவது போன்ற முக்கிய அரசியல் காரணங்களுக்காக இவர் பாதிரிகளுக்கு நட்பாதரவு அளித்திருக்கக்கூடும். கோவாவுடன் போர் நடவடிக்கைகள் துவங்கிய உடன் கிறித்துவக் கோயில்கள் மூடப்பட்டன. ஒருவருடைய மதத்திற்காக அவரைத் துன்புறுத்த இவருக்கு ஒரு சிறிதேனும் விருப்பம் இல்லை. அவருடைய தகப்பனரது பெருமளவு பாராட்டுதலைப் பெற்றிருந்த குஜராத்தில் சமணர்களின்மீது இவர் கடுமையான ஆணைகளை விதித்தார் என்பது உண்மையே! ஆனல், எக் காரணத்தினலோ இவர் அவர்களை ஆட்சியை எதிர்ப்பவர்களென்று கருதியதனல் இவர் அங்ஙனம் செய்தார்.

தத்துவஞானத்தைப்பெற்ற துறவிகள், இந்துக்களாயினும், முஸ்லீம்களாயினும், அவர்களோடு இவர் உரையாட விரும்பினர். இந்துப் பழக்க வழக்கங்களையும் ஸொராஸ்டிரிய (Zoroastrian) சமயச் சடங்குகளையும் தமது தந்தை பின்பற்றியதுபோல இவர் பின்பற்றவில்லை. ஏற்பமைதியற்ற கோட்பாட்டினைக்கொண்ட முஸ்லீம் ரூபிகள் போதித்த அல்லது குறிப்பிட்ட இந்து முனிவர்கள் கற்பித்த அதேபோன்ற சமயக் கோட்பாட்டினை

ஒத்த தெளிவற்ற இயற்கைச் சமயம் இவருடைய தனிப்பட்ட சமயமாக இருந்திருக்கக்கூடும். 'தகவற்ற சமயம்' என்று இவர் சாதாரண இந்து சமயத்தைப்பற்றிக் கூறினர். அவருடைய சம காலத்தவர்களான இங்கிலாந்தின் முதலாம் ஜேம்ஸ், பாரசீகத் தின் ஷா அப்பாஸ் (Shah Abbas) ஆகியவர்களைப்போல ஜஹாங்கீரும் புகையிலை கெடுதிவிளைவிக்கும் வெறி மயக்கப் பொருள் என்று கருதி அதைப் பயன்படுத்துவதைத் தடை செய்தார்.

ஜஹாங்கீரின் கவர்ச்சிமிக்க ஆளுமையைப்பற்றி உரையாடு வதற்கான மூலப்பொருள் அதைப்பற்றி எளிதாக விரித்து எழுதக் கூடிய அளவுக்கு நிறைந்திருக்கிறது. ஏற்கெனவே குறிப்பிடப் பட்டுள்ளது வாசகர்களுக்கு அளவு மீறியதாக இருக்கக்கூடும்.

**அரசவை**

அரசவைக்குரிய சடங்குமுறை ஏறக்குறைய அக்பரின் காலத்தில் இருந்ததுபோலவே இருந்தது. ஜஹாங்கீர் நாள் ஒன்றுக்கு மூன்றுமுறை காட்சியளித்தார். சூரிய உதயத்தின் பொழுது கிழக்கு நோக்கியிருந்த மாடிமுகப்பில் காட்சியளிப்பார். தெற்கு நோக்கியிருந்த மாடிமுகப்பில் நண்பகலிலும் மூன்ருவ தாக, மேற்கு நோக்கியிருந்த மாடிமுகப்பில் சூரியன் மறையும் பொழுது காட்சியளிப்பார். ஒவ்வொரு சமயத்திலும் விண்ணப் பங்களை வாங்கி, அவருடைய கருத்தின்படி நீதிவழங்கினர். மற்ற இராச்சிய விஷயங்கள் மாலை ஏழு மணிக்கும் ஒன்பது மணிக்குமிடையில் குசுல்கான (Ghusulkhana) அல்லது குளிக்கும் அறை என்று வழங்கிய முறையீட்டு மண்டபத்தில் ஆராயப் பட்டன. அவ்விடத்திற்குத் தனி உரிமை பெற்றவர்களே அனுமதிக்கப்பட்டனர். ரோவும் டெர்ரியும் அதுபோன்ற கூட்டங் களில் அடிக்கடி கலந்துகொண்டனர். மாலை வேளை முடிவு பெறு வதற்கு முன்னல் ஜஹாங்கீர் அடிக்கடி வெறிக்கக் குடித்திருப்பார். மட்டுமீறிய இவரது குடிப்பழக்கத்தைப்பற்றி நிகழ்ச்சிகள் பல குறிக்கப்பட்டுள்ளன.

பாரசீக வழக்கத்தை யொத்துப் புத்தாண்டு விழாக்களும், இவர் பிறந்த நாளில் பொன்போன்ற விலை உயர்ந்த பொருள் களுக்கு நிகராக அரசனைச் சூரிய சந்திர பஞ்சாங்கத்தின்படி ஒழுங்குற நிறுத்தி எடைபோடும் முறையும் பின்பற்றப்பட்டது.

அரசவையினர்கள் பிரபுக்கள் ஆகியவர்களின் சுயநல, உயர் இன்ப வாழ்க்கையும் பணப் பகுட்டங்களும் அக்பர் காலத்தி லிருந்து அதிகமாகிக் கொண்டிருந்தன. இவையெல்லாம்

நாட்டின் செல்வங்களை மிகக் கடுமையாக இறைப்புச் செய்தன. சில விஷயங்களைப் புறக்கணித்து விட்டாலும், உயர்தர அதிகாரி களின் ஊதியம் இழிவு தரும் வகையில் வரம்பு மீறியதாக இருந்தது மிகச்சிறிய பதவியைப் பெற்றிருந்த ஹாகின்ஸ் ஓர் ஆண்டுக்குப் பதினாயிரம் ரூபாய் ஊதியமாகப் பெற்றார். அந்த காலத்தில் அத்தொகை மூவாயிரம் பவுண்டு ஸ்டெர்லிங் (Pound Sterling) மதிப்பைப் பெற்றிருந்தது. எனினும், வருமான ஒப்படைப்பிலிருந்து வரக்கூடிய மொத்தமான தொகைக்கும் பெறக்கூடிய தொகைக்குமிடையில் மிகப்பெரிய வேறுபாடு இருந்தது. என்பதை குறிக்கவேண்டியிருக்கிறது. இதிலிருந்து ஹாகின்ஸ் மிக அருவருப்பான அனுபவத்தைப் பெற்றிருந்தார். இருந்தபோதிலும், பேரரசின் எல்லைகளுக்கப்பாலிருந்து தகுதி பெற்றவர்களைக் கவருவதற்கு வெகுமானங்கள் போதுமா யிருந்தன. மேலும், ஒரு பிரபுவின் மரணத்தின்பொழுது அவருடைய சொத்தை மன்னன் மீண்டும் பெற்றதனால் ஏராள மான தொகைகள் திரும்பிப்பெறப்பட்டன. உயர்தரப் பிரபுக் களுக்கு அளிக்கப்பட்ட ஏராளமானத் தொகைகளோடு ஒப் பிட்டுப் பார்ப்போமானால் தற்கால அரசப்பிரதிநிதியின் ஊதியம் ஒரு சிறு தொகையேயாகும். குறிப்பிடுவதற்குத் தகுதிபெற்ற தொகை எதுவும் கல்விக்காகவோ, பொதுபணிகளுக்காகவோ செலவழிக்கப்படவில்லை. இறைமை பெற்ற அரசருடைய புகழுக் காகவோ அவருடைய முக்கிய அரசவையினர்களின் புகழுக் காகவோ தான் ஏராளமான பணம் செலவழிக்கப்பட்டது.

நிர்வாகத்தின் மீது நிலைத்திருந்த மத்திய ஆதிக்கம் ஜஹாங் கீரின் காலத்தில் அவருடைய தகப்பனாரின் காலத்தில் இருந்ததை விட குறைந்தே இருந்தது. வருமான இலாகாவில் ஜாகீர்களை ஊதியமாக அளிக்கும் முறை வளர்ச்சி பெற்றது. பேரரசு ஆதிக்கம் சில வேளைகளில் நகரங்களுக்கப்பாலும் முக்கிய செய்தி போக்குவரத்துப் பகுதிகளுக்கப்பாலும் பரவி இருக்கவில்லை என்று ஆங்கிலேய குறிப்பேடுகளிலிருந்து தெரிய வருகிறது. இடங்களுக்கிடையில் தூரங்கள் அதிகமாக இருந்ததனால் மாகாண அதிகாரிகளின் கொடுங்கோலாட்சியை அடக்குவது மிகக் கடினமாக இருந்தபோதிலும், ஹாக்கின்ஸின் குறிப்பின்படி அதுபோன்ற குறும்புத்தனம் கண்டுபிடிக்கப்பட்டால் மிகக் கடுமை யாக அடக்கப்பட்டது. இக் கூற்றை மற்றக் குறிப்பேடுகளும் வலியுறுத்துகின்றன.

## இலக்கியமும், கலையும்

இலக்கியம், குறிப்பாகப் பாரசீக மொழி, ஊக்கமளிக்கப் பட்டது. ஜஹாங்கீரே மிகச் சிறப்பாக எழுதக்கூடியவராவார்

அவரது 'வாழ்க்கைக் குறிப்புகளைத்' தவிர, தகுதியுற்ற பல வரலாற்று நூல்களையும் அவர் எழுதியுள்ளார். ஃபர்ஹாங்கி—ஜஹாங்கீரி (Farhang-i-Jahangiri) என வழங்கிவந்த மதிப்புமிக்க அகராதி ஒன்றை எழுதி முடிப்பதற்கு அவர் தம் ஆதரவை அளித்தார். ஏற்கெனவே குறிப்பிட்டது போல கலை ஜாஹங்கீரின் கவனத்தைக் கவர்ந்தது. இத்தலைப்பைப்பற்றிய குறிப்புகள் அவருடைய நூலில் நிறைந்துள்ளன. இவற்றை எல்லாம் ஒன்று திரட்டி ஆராய்வது விரும்பத்தக்கதாகும். 'காலத்தின் வியப்பு' (Wonder of the Age) என்ற பட்டப்பெயருடன் விளங்கி வந்த நாதி ருஸ் ஸமனும் (Nadir-us-Zaman), அதேபோன்ற பட்டப் பெயரைப் புனைந்திருந்த ஆசிரியர் (Master or Ustad) மன்சூரும் (Mansur) அந்த ஆட்சிக்காலத்தின் மிகச் சிறப்பு வாய்ந்த ஓவியக் கலைஞர்களாவர். இவ்விருவருடைய நடப்பு நூல்களும் அவர்களை ஆதரித்தவர் அவர்களுக்கு அளித்த உணர்ச்சி மிக்க புகழ் தகுதியுற்றதே என்பதை நிரூபிக்கின்றன. இதிமதுத்தௌலாவின் கல்லறை, சிகந்தராவிலுள்ள அக்பரின் கல்லறை, லாகூரிலுள்ள ஜஹாங்கீரின் கல்லறை ஆகியவையெல்லாம் பேரரசின் கலைநய உணர்வுக்கும் கட்டடக்கலைஞர்களின் திறனுக்கும் சான்றளிக்கின்றன.

## காலவரையறைப் பட்டியல்

| | |
|---|---|
| அக்பரின் இறப்பு ... | அக்டோபர், 17ஆம் நாள், 1605 |
| ஜஹாங்கீரின் முடி சூட்டல் ... | அக்டோபர், 24ஆம் நாள், 1605 |
| குஸ்ருவின் கிளர்ச்சி ... | ஞாயிறு ஏப்ரல், 6ஆம் நாள், 1606 |
| குஸ்ருவைச் சிறைப்பிடித்தல்... | ஞாயிறு, ஏப்ரல், 27ஆம் நாள், 1606 |
| கோவாவுக்குத் தூது குழு ... | 1607–9 |
| அரசவையில் ஹாகின்ஸ் ... | 1608–11 |
| நூர்ஜஹானுடன் திருமணம் ... | மே, 1611 |
| வங்காளத்தில் உஸ்மான்கானின் கிளர்ச்சி முடிவடைதல் ... | 1612 |
| கோவாவைச் சேர்ந்த போர்ச்சுகீசியர்கள் நான்கு கப்பல்களைக் கைப்பற்றுதல் ... | 1613 |
| ராணா அமர்சிங்கும் கரணும் கீழ்ப்படிதல் ... | 1614 |
| சர். தாமஸ்ரோவின் தூதுக்குழு ... | 1615–18 |
| புபோனிக் கொள்ளை நோய் (8 ஆண்டு நீடித்திருந்தது.) ... | 1616 |
| கங்ரா வெல்லப்படுதல் ... | நவம்பர், 1620 |
| குஸ்ருவின் இறப்பு ... | ஜனவரி. 1622 |
| பாரசீகர்களுக்கு காந்தாரத்தை இழத்தல் ... | ஜூன், 1622 |

| | |
|---|---|
| இளவரசர் குர்ரமின் (ஷாஜஹானின்) கிளர்ச்சி ... | 1622 |
| ஷாஜஹான் தோற்கடிக்கப்பட்டு விரட்டப் படுதல் ... | 1623, 1624 |
| ஷாஜஹான் கீழ்ப்படிதல் ... | 1625 |
| மாபத்கான் ஜாஹாங்கீரைச் சிறை பிடித்தல் ... | 1626 |
| சுல்தான் பார்வீஸின் இறப்பு ... | அக்டோபர், 1626 |
| ஜஹாங்கீரின் இறப்பு | அக்டோபர், 28ஆம் நாள். 1627 |

## ஆதாரங்கள்

ஜஹாங்கீரின் உண்மை வாழ்க்கைக் குறிப்புகள் (R.A.S 1904, 1914) (Memoirs) இரண்டு தொகுதிகளாக. Rogers, Beveridge என்பவர்களால் இயற்றப்பட்டுள்ளது. இது அவருடைய ஆட்சியின் பத்தொன்பது ஆண்டுகளைப்பற்றி குறிப்பிடுகிறது. இந் நூல் அக்காலத்திற்குத் தலைமை ஆதாரமாகும். Elliot, Donson இயற்றியுள்ள நூலின் ஆறும் தொகுதியில் மற்ற முக்கியப் பாரசீக வரலாறுகள் விவரிக்கப்பட்டுள்ளன. Gladuwin History of Hindostan, Reign of Jahangir (எல்லாம் வெளியிடப் பட்டுள்ளன. கல்கத்தா, 1788) என்ற நூல் ஒரு சிறந்த நூலாகும். இது அக்பர் காலத்தில் பேரரசர் இளவரசர் சலீமாக இருக்கும்பொழுது அவரது வாழ்க்கையைப் பற்றி அறிந்து கொள்வதற்குப் பயன்படுகிறது.

ஐரோப்பிய ஆதாரங்கள் ஏராளமாகவும் விளக்க மிக்கனவாகவும் உள்ளன. மிக முக்கியமானதும், ஆனால் எவருக்கும் தெரியாதிருப்பதுமான நூல் Du Jarric—Thesaurus Rerwn Indicarum, Vol. iii. 1616—Book I. Chapter 16-23 included, to the end of 1609. ஹாக்கின்ஸின் குறிப்புகளும் முக்கியத்துவம் பெறாத பல பயணிகளும் விட்டுச் சென்ற குறிப்புகளை Puchas, எழுதிய Pilgrims (ed. Maclehose, 1905 or in other reprints), என்ற நூலிலும். Foster எழுதிய Early Travels in India. 1583-1619 (Oxford University Press 1921) என்ற நூலிலும் காணலாம். சர். தாமஸ் ரோவின் (Sir Thamas Roe) Embassy என்ற நூல் Foster என்பவரால் சிறப்பாக இயற்றப் பட்டுள்ளது. (Haklvyt Society, 1899, 2 vols). சர். தாமஸ் ரோவின் தனிமதக்குருவின் டெர்ரியின் (Terry) குறிப்புகளைப் பற்றி A voyage to East India, London 1777 என்ற நூலில் மறு பதிப்பில் காணலாம். Peter Mundy என்பவரின் The Travels என்ற நூல் (vol. ii ed. Temple, Haklvyt Society 1914) ஜஹாங்கீரின் மரணத்திற்குப்பின் 1630ஆம் ஆண்டுவரையுள்ள வரலாற்றை அளிக்கிறது. நாட்டின் நிலைமையைப் பற்றி உண்மையான பல குறிப்புகளையும் கொண்டுள்ளது. President van Den Broecke (1629) என்பவர் எழுதியுள்ள நிகழ்ச்சி வரலாறு முழுமையாகவும் உள்ளது; பொதுவாக உண்மையாகவும்

இருக்கிறது. இது ஒரு தொடர் வரலாற்றிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டு De Laet என்பவரின் நூலில் அச்சடிக்கப் பட்டுள்ளது. (1631) மேலும் சில உண்மைகளை கிழக்கு இந்தியா கம்பெனியின் அச்சடிக்கப்பட்ட குறிப்பிட்ட தொகுதிகள், ஜஹாங்கீரின் இந்தியா (Jahangir), Dutch of F. Pelsaert by W. H. Moreland & P. Geye, Voyage of Thomas Best ed. by Sir. W. Fosteg, ஆகிய நூல்களிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன. இந்துக் கருத்தின்படி Tod இராஜபுதன படையெழுச்சிகளைப் பற்றிய வரலாற்றை எழுதியுள்ளார். Beni Prasad-History of Jahangir 1922. என்ற நூல் முழுப்புத்தகப் பட்டியலைக் கொண்டுள்ளது. நாணயங்களைப் பற்றி British Museum (பிரிட்டனின் தொல் பொருள் காட்சி சாலை) Indian Museum (இந்தியாவின் தொல் பொருள் காட்சி சாலை) Lahore Museum (லாகூர் தொல் பொருள் காட்சிசாலை) இவைகளின் அதிகாரப்பூர்வமான வெளியீடுகளில், காணலாம். ஆட்சிக்காலத்து கலையைப் பற்றி பெர்குஸன் (Ferquson) எழுதியுள்ளார். History of Fine Arts (1911), E. W. Smith எழுதிய Akbaris Tomb (Allahabad, 1909). P. Brown என்பவர் எழுதிய Indian Painting under the Mughals (Oxford 1924) தொல் பொருள் இலாகாவின் பல வெளியீடுகள் ஆகியவற்றில் இதைப்பற்றிக் காணலாம்.

# 5. ஷாஜஹான் (Shahjahan)

## ஷாஜஹானும் வாரிசுரிமைப் போரும்:

**முகலாயப் பேரரசின் உச்ச நிலை வாரிசுரிமைப் போட்டி: கொலைகள்:**

1627ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் காஷ்மீரத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருக்கையில், ஜஹாங்கீர் மரணமடைந்த பொழுது அவரது புதல்வர்களிருவர் உயிருடன் இருந்தனர். மூத்தவரான இளவரசர் குர்ரம், அல்லது ஷாஜஹான் அப்பொழுது தக்காணத்தில் மிக்க தொலைவில் இருந்ததால் பல வாரங்களாகியும் அவரால் இந்துஸ்தானத்திற்கு வரமுடியவில்லை. இளைய மகனான இளவரசர் ஷாரியர்; அரசாங்க இருப்பிடமாகிய ஆக்ராவில் இருந்தமையால் இவருடன் போட்டியிட்டவரைவிட இவர் அனுகூலமான நிலையைப்பெற்றிருந்தார். இளவரசர்கள் இருவரும் அரியணைக்கு உரிமை கொண்டாடினர். ஒருவர் மற்றொருவருக்கு விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. நூர்ஜஹானுக்கும் அவருடைய முன்னாள் கணவரான ஷெர் ஆப்கனுக்கும் பிறந்த மகளை மணம் புரிந்து கொண்டிருந்த ஷாரியர், தம் மாமியாரைச் சந்திப்பதற்கு லாகூருக்கு விரைந்து சென்று பேரரசப்பதவியை மேற்கொண்டார். நூர்ஜஹானின் சகோதரரான ஆஸப்கானின் மகளை ஷாஜாஹன் மணந்து கொண்டிருந்தார். ஆஸப்கான், தன் மருமகன் பட்டத்துக்கு வரவேண்டுமென்று விரும்பினார். அக் குறிக்கோளை நிறைவேற்ற ஷாஜஹானின் இளையமைந்தர்களைத் தம்முடன் சேர்த்துக்கொண்டு புலாதி (Bulathi) என்ற புனைப்பெயர் கொண்டவரும் நல்வினைப் பயனற்ற இளவரசர் குஸ்ருவின் மகனாகிய தவார் பக்ஷைத் (Dawar Baksh) தம் விருப்பத்திற்கு மாறாக (இடைக்காலப்பாதுஷாவாக நிறுத்தினார். 'உண்மையில் இவர் ஒரு பலி ஆடு' என்பது வரலாற்றாசிரியரின் கருத்தாகும். தன் முட்டாள்தனத்திற்காக நாஷுதானி (Nashudani) அல்லது ஒன்றுக்கும் உதவாதவரென்ற ஏளனமான சாட்டுப் பெயர் பெற்ற ஷாரியர் ஆஸாப்கானுக்கு எதிராகச் சண்டையிடத் தகுதியற்றவராக இருந்தார். உடனே அவர்

குருடாக்கப்பட்டார். வேறு வகையில் திறமிக்கவரும், இரக்கமற்றவருமான ஷாஜஹான், தக்காணத்தில் உள்ள ஜுனாரிலிருந்து எவ்வளவு வேகமாகச் செல்லமுடியுமோ அவ்வளவு வேகமாகச் சென்று தன் ஒன்றுவிட்ட கிளை மரபினரான ஆண் உறவினரையெல்லாம் தூக்கிலிடும்படி ஆணையிட்டார். அடாத இவ்வாணை முழுத்தீர்க்கமாக நிறைவேற்றப்பட்டது. ஐரோப்பியப் பயணிகளின் குறிப்புகளின்படி, இதன் விளைவாகப் பெயரளவில் பேரரசராக இருந்த தாவார் பக்ஷ் பாரசீகத்திற்குத் தப்பியோட அனுமதிக்கப்பட்டார் அங்கே அவர் ஷாவினிடமிருந்து ஓய்வுச் சம்பளம் பெறுபவராக வாழ்ந்து வந்தார். மற்ற எல்லா ஆண் உறவினர்களும் ஏதோ ஒரு விதத்தில் கொல்லப்பட்டனர். இக் கொலைகள் திட்டமாகச் செய்து முடிக்கப்பட்டன என்பதில் எவ்வித ஐயப்பாடுமில்லை. டாவெர்னியர் நேர்மையோடு குறிப்பிட்டது போல், இரக்கமின்றிச் செய்யப்பட்ட இக் கொலைகள் ஷாஜஹானின் புகழுக்கு மாசு கற்பித்தன. மெத்தனமான நடைகளால் இவரை மேற்கொண்ட ஊழ்வினைக்காக இவர் மீது இரக்கம் காட்டத்தேவையில்லை.

### கான்ஜஹான் லோடியும் பந்தேலர்களும் நடத்திய கிளர்ச்சிகள்

எதையும் செய்யத்துணிந்த இராஜா பீர் சிங் (Raja Bir Singh) ஜஹாங்கீரின் கையாளாவார். இவருடைய உடைமைகளை ஆராய்வதற்கான மிரட்டல்களைக் கண்டு அஞ்சிய இவரது மகனும் பந்தேலர்களின் தலைவருமான ஜுகார்சிங் (Juhar Singh) 1628-ல் கிளர்ந்தெழுந்தார். இவர் கீழ்ப்படியும்படி வற்புறுத்தப்பட்டார். கிளர்ச்சிக்காகத் தம் ஏராளமான பணத்தையும் நிலங்களையும் கொடுக்கும்படி வற்புறுத்தப்பட்டார். தக்காணத்தில் தனிச்சிறப்புடன் இவர் பல ஆண்டுகள் பணியாற்றினர். ஆனாலும் இங்கு அவருக்கு உயர் பதவியும் இராஜா என்ற பட்டமும் அளிக்கப்பட்டது. இவருடைய பேராசையைத் தூண்டியது. நிறுத்துவதற்கு அல்லது குறைந்தது கொள்ளைப் பொருளையாவது தம்மோடு பங்கிட்டுக் கொள்வதற்காக ஷாஜஹான் இட்ட ஆணையைப் புறக்கணித்து அண்டையிலிருந்த சுராகரின் (Churagarh) சிற்றரசரைத் தோற்கடித்து, அவரை வஞ்சமாகக் கொன்ருர். அதன்பின் பேரரசப் படைகள் அவரைத் தோற்கடித்து, காண்ட் இனத்தவர்களால் காட்டிக்கொடுக்கப்படும்வரை பின் தொடர்ந்தன. ஓர்ச்சா (Orchha) இடையருத சூறைக்குள்ளாயிற்று.

சக்தி வாய்ந்த ஆப்கானியரும் தக்காணத்தின் கவர்னருமான கான்ஜஹான் லோடி செய்த கிளர்ச்சி இன்னும் தீவிரமானதாகும். இவர் தாவார் பக்ஷை ஆதரித்து மாண்டுவைக் கைப்பற்றவும் முயன்ருர். ஆனாலும் ஷாஜஹான் அரியணையேறிய

பிறகு இவர் மன்னிக்கப்பட்டுத் தம் தக்காணத்துப் பதவியில் உறுதி செய்யப்பட்டார். இருந்தபோதிலும் முன்தான் நைஸாம் ஷாயிக்கு விற்றுவிட்ட பல்காட் (Balaghat) என்ற பகுதியை இவரால் மீட்கமுடியவில்லை. இதனால் இவர் அரசவைக்குத் திரும்ப அழைக்கப்பட்டார். ஷாஜஹான் எழுத்துமூலமாக உறுதியளித்தபோதிலும் இவர் தம் இடரில்லா நிலைக்காக அஞ்சி அங்கிருந்து ஆமத் நகருக்கு ஓடிவிட்டார். நீண்ட, ஆனாலும் விழிப் பாகத் திட்டமிடப்பட்டத் தாக்குதலுக்குப் பின் பஞ்சாப் ஆப்கானியர்களிடமிருந்து துண்டிக்கப்பட்டுத் தக்காணத்தி லிருந்து விரட்டியடிக்கப்பட்டு சிஹோண்டா (Sihonda) என்ற இடத்தில் 1631-ல் கொல்லப்பட்டார்.

**மயில் சிம்மாசனம்**

ஷாஜஹான் அணிமணிகளைச் சேர்ப்பதில் பற்றுக்கொண் டவர். இதனால் வீறுர்ந்த மாட்சிமையை அரசவையில் வெளிப் படுத்துவதில் வியத்தகு மகிழ்ச்சிக் கொண்டிருந்தார். 1628-ல் முறையாக முடிசூட்டப்பட்டவுடன் இவர் மற்றெந்த அரசனின் சிம்மாசனத்தையும்விட விலையிலும் அழகொளியிலும் மிகச் சிறந்த சிம்மாசனமொன்றை நிறுவித் தம்மைப் பெருமைபடுத்திக் கொள்ள விரும்பினர். பேரரச அணிமணியறையில் இருந்த ஏராளமான சேமிப்புக் குவியல்கள், கிடைப்பதற்கு அருமையான இரத்தினங்களை அளவின்றி வாங்கியதனல் அதிகமான கூட்டுச் சேமிப்புப் போன்றவை இப்புகழ் பெற்ற மயிலாசனத்தை அலங் கரிக்கப் பயன்படுத்தப் பெற்றன. இம்மயிலாசனம் ஏழாண்டு காலத்தில் (1628-35) பேபதல்கான் (Bebadal Khan) என்பவரின் மேற்பார்வையில் அமைக்கப்பட்டது. தங்கக் கால்களைக் கொண்ட கட்டிலைப்போன்ற உருவில் இம்மயிலாசனமிருந்தது. பளபளப் பான மேல் விதானத்தைப் பன்னிரண்டு மரகதத் தூண்கள் தாங்கி நின்றன. ஒவ்வொரு தூணும் இரத்தினங்களால் இழைக்கப் பெற்ற இரண்டு மயில்களைத் தாங்கி நின்றது. வைரங்கள், இரத் தினங்கள், மாணிக்கங்கள், முத்துக்கள் ஆகியவற்றால் ஆக்கப் பெற்ற மரமொன்று ஒவ்வோர் இணைப் பறவைகளுக்கு இடையில் இருந்தது. குறைந்தது ஒரு நூறு லட்சம் அல்லது பத்து மில்லி யன் ரூபாய் விலை மதிப்புப் பெற்ற இவ்வொளி வண்ணமார்ந்த அமைப்பு 1739ஆம் ஆண்டுவரை பயன்பாட்டில் இருந்தது. அவ் வாண்டில் இது நாதிர்ஷாவால் (Nadir Shah) பாரசீகத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது.

## 1630–32-ல் தோன்றிய பஞ்சம்

ஷாஜஹானின் ஆட்சிபற்றிய நட்பப்பு விவரிப்புகள் பலவற்றில் சிறப்பிடம் பெற்றிருக்கும் வரம்புமீறிய செலவும் நிகரற்ற பகட்டும்; கண்ணுக்குப் புலப்படாத ஆழ்துயர் நிலையாகிய அவலப் பின்னணியைக் கொண்டிருந்தது. தக்காணத்தில் சுல்தானியர்களுக்கு எதிராகத் தொடங்கிய ஆக்கிரமிப்புத் திட்டங்களை நிறைவேற்றும் நோக்கத்தோடு பேரரசர் சாந்தேஷில் புர்ஹான்பூர் என்னுமிடத்தில் பாசறை அமைத்துக்கொண்டு தங்கியிருந்தார். அப்பொழுது இவரது ஆட்சியில் நான்காவது ஐந்தாவதாண்டில் (*1630–32*) திகைக்க வைக்கும் பஞ்சமொன்று மிகக் கடுமையான விளைவுகளுடன் தக்காணத்தையும் குஜராத்தையும் பாழ்படுத்தியது.[1] அதிகாரபூவமான வரலாற்றறிஞரான அப்துல்ஹமீத் (Abdul Hameed), தம் போன்ற எழுத்தாளர்கள் அடிக்கடி கையாண்ட வழக்கத்திற்கு மாருக இப்பெருந்துயரின் கடுமையை மறைக்க எவ்விதத்திலும் முயலவில்லை. இக்கொடுமையை வருத்தந்தரும் விபரங்களுடன் அப்படியப்படியே விவரிக்கின்ருர்.

'இவ்விரு நாடுகளின் (தக்காணமும் குஜராத்தும்) குடிமக்கள் கொடுந்துயருக்குள்ளாயினர்; ஒரு துண்டு ரொட்டிக்கு உயிரை விற்க முன்வந்தனர்; ஆனல் அதை விலை கொடுத்து வாங்குவாரில்லை. ஓர் அப்பத்திற்கு அந்தஸ்தை விற்க முன்வந்தனர்; ஆனல் அதை எவரும் பொருள்படுத்தவில்லை. இறுதியில் மனிதர்கள் ஒருவரையொருவர் விழுங்கத் தொடங்கும் அளவிற்கு வறுமை உச்ச நிலையையடைந்தது; மகனின் இறைச்சியேயன்றி அவனுடைய அன்பை விரும்பவில்லை. மடிந்தவர்களின் எண்ணிக்கை சாலைகளில் தடையாக இருந்தது. கொடிய துன்பங்களால் உயிர் நீங்காது. நடமாட சக்திபெற்றிருந்தவர்கள் மற்ற நாடுகளின் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் போய்ச் சேர்ந்தனர். செழிப்பிற்கும் வளத்திற்கும் பெயர்பெற்றிருந்த அந்நாடுகள் இப்பொழுது விளைவாக்கத்தின் சின்னங்களைப் பெற்றிருக்கவில்லை.'

பஞ்சமும் அதன் விளைவாகிய கொள்ளை நோயும் தலைவிரித்தாடிக்கொண்டிருந்த சமயத்தில் ஆங்கிலப் பயணியும் வணிகருமான பீடர் முண்டி (Peter Mundy) வணிக நோக்கத்தோடு சூரத்திலிருந்து ஆக்ராவிற்கும் பாட்னவிற்கும் சென்று திரும்பிக்கொண்டிருந்தார். இவர் எழுதி வைத்துள்ள அப்பட்டமான, பகட்டில்லாக் குறிப்புகள் இக்கொடிய நிகழ்ச்சியின் விபரங்களை

[1] இப் பஞ்சம் பாரசீகத்திற்கும் இந்தியாவின் பல பகுதிகளுக்கும் பரவியது.

முழுமையாகவும் தெளிவாகவும் வரைகின்றன. இருபத்தோர் ஆங்கில வணிகர்களில் பதினேழு பேரை இக்கொடிய நோய் சூரத்தில் தனக்கிரையாக்கிக் கொண்டது. சூரத்திற்கும் பர்ஹன்பூருக்கும் இடையிலான சாலையின் பெரும் பகுதியில் நெடுந்தூரம்வரை பிணங்கள் அடர்த்தியாகச் சிதறிக் கிடந்தமையால் ஒரு சிறிய கூடாரம் அமைப்பதற்குக்கூட முண்டிக்கு இடம் கிடைக்கவில்லை. நகரங்களில், 'இறந்தவர்களை ஆண், பெண் வேறுபாடின்றி எல்லா வயதினரையும் நிருவாணமாகக் கால்களைப் பற்றி இழுத்துச் சாலையோரங்களில் அப்படி அப்படியே விட்டு விட்டமையால் பாதிவழி மூடப்பட்டிருந்தது'. இதேசமயத்தில் பர்ஹன்பூரில் ஷாஜஹானுடைய பாசறையில் எல்லாவிதமான உணவுப் பொருள்களும் நிறைந்திருந்தன.

முண்டி என்பார் பார்த்தவரையில் அரசாங்கமோ, உணர்ச்சியற்ற பேராசை பிடித்த இந்துஸ்தானிய வியாபாரிகளோ துன்பப்படும் மக்களுக்கு எவ்வித உதவியும் அளிக்கவில்லை. ஆனால் பாத்ஷா நாமாவின் (Badsha Nama) ஆசிரியரின் குறிப்பின்படி பேரரசர் சில கஞ்சித் தொட்டிகளைத் திறந்து வைத்தார்; இருபது வாரங்களுக்குப் போதுமான ஒன்றரை இலட்சம் ரூபாய் நன்கொடை வழங்கினார்; நிலவரியிலிருந்து பதினொன்றில் ஒரு பங்கைத் தள்ளுபடி செய்தார். அரசருக்குச் சொந்தமான நிலங்களுக்கு 'நல்லறிவும் பரந்த மனப்பான்மையுமுடைய பேரரசர்' அளித்த வரித்தள்ளுபடி எழுபது இலட்சத்திற்கு சமமான தொகையாகும். ஜாகீர்தார்களும், அதிகாரம் பெற்றவர்களும், இதேபோன்றே வரிக்குறைப்புகளைச் செய்யுமாறு எதிர்பார்க்கப்பட்டனர். ஷாஜஹானின் தண்ணளி, கனிவான அன்புபற்றிய வரலாற்றாசிரியரின் பாராட்டை மெய்ப்பிக்கச் சான்றுகளில்லை. பதினொன்றில் ஒரு பங்கு தள்ளுபடி செய்யப்பட்டதென்பலிருந்து பத்துப் பங்கு வசூலிக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டதெனத் தெரிய வருகிறது மிகக் கொடுமையான நிலைக்குக் கொண்டு வரப்பட்டதும், விளைச்சல் சின்னங்களையே பெற்றிருந்த நாட்டு மக்களால் இச்சுமையைப் பொறுக்க முடியவில்லை. வரி வசூலிப்பதற்கு எடுத்துக்கொண்ட முயற்சிகள் எந்த அளவிற்கு வெற்றி பெற்றனவென்பதை நமக்குக் கூறவில்லை. வழக்கம்போல் பாரசீக ஆதாரங்கள் இப்பஞ்சத்தின் விளைவுகள்பற்றித் தெளிவாகக் கூறவில்லை. இருந்தபோதிலும், ஆங்கிலேயர்களும் டச்சுக்காரர்களும் பஞ்சத்தால் வணிகத்திற்கும் வணிகப் பயணிகளுக்கும் நீண்டகாலமாக நீடித்திருந்த அமைதியற்ற நிலைபற்றிக் குறிப்பிடுகின்றனர். அரசாங்கத்தின் வரித்தண்டல்கள் மீட்சியைக் கடுமையாகப் பாதித்தனவென்று இவர்கள் குறிப்பிடுகின்றனர்.

## மும்தாஜ்மஹாலின் வாழ்க்கையும் மரணமும்

அர்ஜுமந்பானோ பேகம் (Arjumand Bano Begam) என வழங்கப் பெற்றவரும், நவாப் அலியபேகம் (Nawab Aliya Begam) அல்லது மற்றொரு வகையில் மும்தாஜ் மஹால் (Mumtaz Mahal) 'அரண்மனையின் அணிமணி', என்ற பட்டத்தைப் பெற்றவருமான ஒரு மங்கையுடன் நடந்தேறிய ஷாஜஹானின் திருமணம், பேரரசின் பிரபுக்களுக்குள் மிக்க ஆற்றல் வாய்ந்தவரும் செல்வந்தரும் அவளது தந்தையுமான ஆஸப்கான் ஷாஜஹானின் வினை முதலுடன் இணைக்கப்படுவதற்கும் இதனால் அவரது சகோதரியும், காலஞ்சென்ற ஜஹாங்கீரின் மனைவியும், ஷாரியரின் மாமியாரும் ஆட்சி உரிமை பெற்றிருந்த பேரரசியுமான நூர்ஜஹானுடன் பகைமை ஏற்படுதற்கும் முதன்மையான காரணமாக இருந்தது எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இளவரசன் குர்ரம் (ஷாஜஹான்) இருபது வயதடைந்திருந்தபொழுது 1612ஆம் ஆண்டில் நடந்த திருமணம் வெற்றியார்ந்ததாக இருந்தது. இதுபோன்ற நிலை, ஒரே சமயத்தில் பலதாரத் திருமண முறையுள்ள குடும்பங்களில் காணப்படுவது அரிதாகும். முன்னுளைய மனைவியின் வழியாக இளவரசருக்கு இரண்டு குழந்தைகள் இருந்தன. இவர்களைத் தவிர மீதமிருந்த பதினான்கு குழந்தைகளில், எட்டுப் புதல்வர்களும் ஆறு புதல்விகளும், 1613ஆம் ஆண்டிற்கும் 63ஆம் ஆண்டிற்கும் இடையில் மும்தாஜ் மஹாலுக்குப் பிறந்தவைகளாகும். கணவனும் மனைவியும் ஒருவர் மற்றவர்மீது மிக்க பற்றுக் கொண்டவர்களாக இருந்தனர். ஷாஜஹானின் பிந்திய காலத்தை இகழ்ச்சிக்குள்ளாக்கிய அவரது இழிகாமச் செயல்கள்பற்றி அவரது வாழ்நாளில் எவரும் கேட்டதில்லை. 1658-ல் அரசுரிமைக்காகப் போட்டியிட்ட நான்கு புதல்வர்களும், ஜஹானரா, (Jahanara), ரோஷன் ராய் (Roshan Rai or Roshanar) என்ற இரு புதல்வீகளும் இவரது குழந்தைகளே. ஜஹானரா தாரா ஷிகோவையும், ரோஷனரா அவுரங்கசீபையும் ஆதரித்தனர்.

1631ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் புர்ஹான்பூரில் மும்தாஜ் மஹால் பிள்ளை பெறும் காலத்தில் தம் முப்பத்தொன்பதாம் வயதில் உயிர் நீத்தாள். இவளுடைய உடல் தாற்காலிகமாக அவ்விடத்தில் அடக்கம் செய்யப்பட்டு ஆறு மாதத்திற்குப் பின் துயரம் கொண்டிருந்த இவளுடைய கணவன் தக்காணத்திலிருந்து வெளியேறியபொழுது, ஆக்ராவிற்குக் கொண்டுசெல்லப் பெற்றது; இங்கே தாஜ்ஜின் தோட்டங்களில் கல்லறை ஒன்றில் தாற்காலிகமாக வைக்கப்பட்டிருந்தது. தாஜ் என்பது ஷாஜஹான் அவளுக்காக 1632-ல் கட்டத்தொடங்கிய நிகரற்ற நினைவுச் சின்னமாகும்.

மும்தாஜ்மஹாலின் தனிப்பட்ட குணநலப் பண்புகள் ஒரு சிறிதே தெரிந்துள்ளது. தன் கணவனின் திரிந்தலையும் அன்பைப் பல ஆண்டுகளாகப் பெற்றிருக்கும் அளவிற்கு உலகத்தில் மற்றெந்தப் பெண்மணியும் பெற்றிராத நினைவுச் சின்னத்தைப் பெறத் தகுதி பெறும் அளவிற்கு இவள் தனிச் சிறப்புற்குறிய அழகைப் பெற்றிருந்திருக்கவேண்டும். பேரரச குடும்பத்தின் பெண்கள் பலர் இருந்ததுபோல் இவளும் பற்றுடைய முஸ்லீமாக இருந்தாள்போலும்.

**ஹுக்ளியில் போர்ச்சுகீசியர்**

வங்காளத்திலிருந்து சட்கோன் (Satgoan) என்ற இடத்திற்குச் சிறிது தூரத்தில் நதிக்கரையோரத்தில் 1579-ல் பேரரச ஆணையின் பாதுகாப்போடு குடியேறிய போர்ச்சுகீசிய வணிகர்கள் திடமான கட்டடங்களை அமைத்துத் தங்கள் நிலையைப் படிப்படியாக வலிமைப்படுத்திக் கொண்டனர். இதனால் வர்த்தகம் சட்கோனிலிருந்து புதிய துறைமுகத்திற்கு இடம் பெயர்ந்தது. இப்புதிய துறைமுகம் ஹுக்ளி (Hugli)[1] என பெயர் பெற்றது. உப்புத் தயாரிப்பில் அவர்கள் தனியுரிமை பெற்றிருந்தனர். அழையாது நுழைந்த இவர்கள் தங்கள் ஆற்றல்களை வர்த்தகத்திற்கு மட்டும் ஈடுபடுத்தி யிருப்பார்களானால், மாகாண சுங்கவருமானத்திற்கு இவர்கள் தீங்கிழைத்த போதிலும் ஒரு வேளை இவர்கள் அமைதியோடு இருந்திருக்கலாம். இவர்கள் தம் சொந்தச் சுங்க சாவடியொன்றை நிறுவியதோடு குறிப்பாகப் புகையிலைமீது வரி விதிப்பதில் மிகக் கண்டிப்பாக இருந்தனர். இப்பொருள் பதினேழாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் நுழைந்ததிலிருந்து மிக முக்கிய வர்த்தகப் பொருளாகியது. முற்றுகையிடுவதிலோ கப்பற்படை பற்றியவைகளிலோ திறமையற்றிருந்த முகலாய அதிகாரிகள் அந்நியர்களோடு போரிடுவதைவிட வருவாயை இழப்பதில் விருப்பம் காட்டினர். இவ்வந்நியர்கள் படைக்கலன் தரித்தவர்களாகவும் கப்பல்களின் செயலாட்சி நிபுணர்களாகவுமிருந்தனர். ஆனால் இறுமாப்பு மிக்க போர்ச்சுகீசியர்கள் வணிகர்களாக இருந்துகொண்டு பணத்தை அமைதியாகச் சம்பாதிப்பதில் விருப்பம் காட்டவில்லை. அவர்கள் கொடுமை வாய்ந்த அடிமை வணிகத்தில் ஈடுபட்டிருந்தனர். இந்துக் குழந்தைகளாயினும் முஸ்லீம் குழந்தைகளாயினும் இவர்கள் தொடர்ந்து விலைக்கு

[1] இப் பெயர் பழைய பதிவுகளில் 'ஓகோலிம்' என்று எழுதப்பட்டிருக்கிறது. இது 'ஓ கோ'லிம் அல்லது 'கோலிம்' என்பதின் சிதைவாக இருக்கலாம். இது 'கிடங்கு அல்லது பண்டகசாலை' யெனப் பொருள்படும் ஓ 'O'') என்னும் எழுத்து போர்ச்சுகீசிய மொழியில் திட்டவட்டமாகக் குறிப்பிடும் சார்படையாகும். (Hosten. id Bengal ''Past and Prevent''s Vol. x (1915) pp. 89-90).

வாங்கினர் அல்லது கைப்பற்றினர். இவர்களை கிறித்தவர்களாகப் பேணிவளர்த்தனர். மும்தாஜ் மஹாலுக்குச் சொந்தமான இரண்டு அடிமைப் பெண்களைத் தடுத்து நிறுத்தி சினமூட்டுமளவிற்கு இவர்கள் மடத்துணிச்சல் பெற்றிருந்தனர்.[1] போர்ச்சுகீசியரின் அடாச்செயல்கள் ஷாஜஹான் அரியணையேறுவதற்கு முன்னரே இவர் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டன. அரசுரிமை பெற்றபின் இவர் காசிம்கான் (Kasim Khan) என்பவரை வங்காள கவர்னராக நியமித்து, அந்நியர்களை வேரோடொழிக்கக் கட்டளையிட்டார். தேவையான ஏற்பாடுகளை 1631-ல் தொடங்கி; அடுத்த ஆண்டிலும் தொடர்ந்து செய்தனர்.

### ஹூக்ளியை முற்றுகையிட்டுக் கைப்பற்றுதல், 1632

*1632ஆம் ஆண்டு ஜூன் மாதம் 24ஆம் தேதியில் தொடங்கிய ஹூக்ளி முற்றுகை மூன்று மாதங்களுக்குப்பின் அவ்விடம் கைப்பற்றப்பட்டதோடு முடிவடைந்தது. மிகப்பெரிய அரண் என்று தவறாக வருணிக்கப்பட்ட இந்நகரம் கங்கை நதிக்கரையில் சமவெளியை நோக்கி எல்லாப் பக்கங்களிலும் காப்பற்றிருந்தது. இதற்குச் சுவரும் மண்மேடும் இல்லை. மண்ணரண் மட்டுமே இருந்தது; எவ்விதப் பயனையும் வலிமையையும் பெற்றிராத இதை இவர்கள் வெகு எளிதாக இடித்துத் தள்ளினர். பீரங்கியை இயக்கும் கலையிலும் கப்பற்செயலாட்சியிலும் ஐரோப்பியர் பெற்றிருந்த திறமையைக் கண்டு வங்காள கவர்னர் அஞ்சியதால், வலிமையற்றிருந்த இக்குடியிருப்பைத் தாக்க இவர் மாபெரும் படையொன்றைத் திரட்டினார். இப்படை ஒன்றரை இலட்சம் பேர்களைக் கொண்டதென்று சொல்லப்பட்டது. முன்னூறு ஐரோப்பியர்களும் அறுநூறு அல்லது எழுநூறு உள்நாட்டு கிறித்துவர்களுமே போர்ச்சுகீசிய வீரர்களாவார். இச்சிறு படை சரியாக மூன்றுமாதம், செப்டம்பர் மாதம் 24ஆம் தேதிவரை எதிர்த்து நின்றது. அப்பொழுது மக்கள் கப்பலேறி நதியைக் கடக்க முயன்றனர். பல கப்பல்கள் கைவிடப்பட்டன. ஆனாலும் ஒரு சில கப்பல்கள் சௌகார் தீவை (Saugar Island) அடைந்தன. அங்கே எஞ்சியிருந்தவர்களில் பலரைக் கொள்ளைநோய் பீடித்து அழித்தது. போர்ச்சுகீசியர்களில் கிட்டத்தட்ட ஆயிரம் பேர் மடிந்தனர். நானூருக்கு மேற்பட்டவர்களை கைது செய்து ஆக்ராவிற்குக் கொண்டு சென்றனர். அங்கே இஸ்லாமைத் தழுவாதவர்கள் கடுமையான நிலையில் சிறைப்படுதல் அல்லது அடிமையாதல் ஆகியவைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. கிறித்தவர்களை ஒறுத்தல் 1635ஆம் ஆண்டு டிசம்பர்*

[1] 'Filles' என்பதைச் சில சமயங்களில் தவறாக 'daughters' என்று மொழி பெயர்த்திருக்கின்றனர்.

மாதம்வரை நீடித்திருந்தது. அக்காலத்திற்குப்பின் அது படிப் படியாக மறைந்து வந்தது. போர்ச்சுகீயர்கள் மீண்டும் ஹூக்ளியில் இடம்பெற அனுமதிக்கப்பட்டனர். ஆனால் அந்நகரம் தன் முந்திய செழிப்பைப் பெறவில்லை. நேரில் கண்ட விரிவான கதையை ஸ்பானிய துறவியான மார்னிக்கு (Marnique) என்பவரும் ஏசுக் குழுவைச் சேர்ந்த தந்தை ஜான் காப்ரால் (Father John Cabral) என்பவரும் கூறுகின்றனர். காப்ரால் முழுக் குறிப்பை 1633-ல் எழுதினர்.

அரச குடும்பத்தையும் முகலாய இந்தியாவையும் மதமாற்றம் செய்வதற்குரிய ஆர்வ நம்பிக்கைகளை ஷாஜஹானின் செயல் தணித்தது. இந்நம்பிக்கைள் அக்பர், ஜஹாங்கீர், ஆகியவர்களின் நடவடிக்கைகளால் உறுதி பெற்றன.

## இந்துக் கோயில்களை அழித்தல்

ஹூக்ளியின் அடிமை வியாபாரிகளை எதிர்த்து நடத்திய நியாயமற்ற போரின் தொடர்ச்சியாகக் கிறித்துவர்களை உறுதியாகத் துன்புறுத்திய ஷாஜஹானுக்கு ஊக்கமளித்த வரம்புமீறிய முஸ்லீம் ஆர்வம் அதே ஆண்டில் (1632) இந்துக்களின்மீது கடுமையான நடவடிக்கை எடுக்கத் தூண்டியது. இந்துக்களும் கிறித்துவர்களைப்போல், தொடர்ச்சியாக இல்லையெனினும், சாதாரணமாக அக்பரிடமிருந்து பெற்ற அதே சமயச் சலுகையை ஜஹாங்கீரிடமிருந்து பெற்றனர். புதிய கோயில்கள் கட்டுவதை ஜஹாங்கீர் எதிர்க்கவில்லை; ஏனெனில் அவ்வாறு செய்தல் கண்டிப்பான முஸ்லிம் சட்டத்திற்கு முரணாகும். இப்பொழுது இப்பழக்கத்தை நிறுத்த ஷாஜஹான் முடிவு செய்து வாரணாசியிலும் தன் பேரரசில் கட்டத் தொடங்கிய கோயில்களை இடித்துத் தள்ளவேண்டுமென்று கட்டளையிட்டார். வாரணாசி மாவட்டத்தின் எழுபத்தாறு கோயில்கள் இடிக்கப்பட்டன என்ற தகவல் அலகாபாத்திலிருந்து வந்தது. பேரரசின் மற்ற பாகங்களில் நடந்த அழிவுகளைப்பற்றிய குறிப்பு எதுவும் வைத்துக் காக்கப்படவில்லை. ஆனாலும் பாழாக்கப்பட்டது மிக அதிகமாகவே இருந்திருக்க வேண்டும். ஷாஜஹானின் தக்காணச் சுல்தானியங்களாகிய ஆமத்நகர், பீஜப்பூர், கோல்கொண்டா என்ற நாடுகளைக் கைப்பற்றி இணைப்பதற்காக 1631-ல் இராணுவ நடவடிக்கையில் ஈடுபட்டிருந்தபொழுது பஞ்சம் ஏற்பட்டதென்பதையும் இவருடைய மனைவி இறந்தார் என்பதையும் ஏற்கெனவே பார்த்துள்ளோம். பின் இவர் ஆக்ராவிற்குத் திரும்பினர். ஷாஜஹானின் ஆட்சியின் முற்பகுதியில் தக்காணத்திற்கான

பேரரசரின் திட்டங்கள், இராணுவ நடவடிக்கைகள் ஆகியவற்றின் தொடர்பான சுருக்கத்தை இங்கு அளித்தல் நலமாகும்.

தக்காண அரசுகளை அடக்கும் உறுதியான நோக்கம் கொண்டிருந்த அக்பருடைய கொள்கை ஓர் அளவு வெற்றி பெற்றது; ஏனெனில், காந்தேஷ் முழுவதையும், ஆமத்நகரின் எல்லைக்குட்பட்ட ஒரு பகுதியையும் அப்பொழுது ஆமத்நகரைச் சாந்திருந்த பீராரையும் 1600-க்கும் 1605-க்கும் இடையில் அக்பர் இணைத்தார். ஆனால் மாலிக் ஆம்பர் என்ற திறமைவாய்ந்த அபிசீனிய அமைச்சர் ஒருவர் புதிய சுல்தானின் சார்பில் ஆட்சி செய்யப்பட்டுவந்த இராச்சியத்தின் பெரும் பகுதியை விடாது தக்கவைத்திருப்பதிலோ மீட்பதிலோ வெற்றி கொண்டார். கோல்கொண்டாவும் பீஜப்பூரும் உண்மைச் சுதந்திரத்தைப் பெற்றிருந்தது மன்றி, விஜயநகர இந்துப் பேரரசு 1565-ல் வீழ்ச்சியடைந்த பிறகு தெற்கில் ஏராளமான நிலப் பகுதிகளை இவர் கைப்பற்றினர். அக்பரின் குறிக்கோளை மேற்கொண்டிருந்த ஜஹாங்கீர் தக்காணத்தை அடக்குவதில் பெரு வெற்றி காணவில்லை. 1627-ல் தம் தந்தை இறந்தபொழுது தக்காணத்தில் தங்கியிருந்த ஷாஜஹான் இயன்ற விரைவில் படையெடுப்பிற்குரிய குடும்ப நோக்கங்களை உயிர்ப்பித்து, அவைகளை நிறைவேற்றச் சிறந்த நடவடிக்கைகளை எடுத்தார்.

## முந்திய இராணுவ நடவடிக்கைகள்

ஆமத்நகரைச் சேர்ந்த பெரண்டா (Peranda) என்னும் அரணின் முற்றுகையைப் பேரரசவாதிகள் கைவிடவேண்டியது வந்தது. ஆமத்நகரின் அமைச்சரும், 1626-ல் முதிர்ந்த வயதில் உயிர் நீத்த மாலிக் ஆம்பரின் மகனுமான ஃபத்கான், (Fath Khan) பேரரசுடன் தொடர்பு கொண்டு தம்மை பாதுகாத்துக்கொள்வதற்காகத் தம் மேலதிகாரியான நைஸாம் ஷாவையே (Nizam Shah) பிடித்துச் சிறை வைத்திருப்பதாக ஷாஜஹானுக்கு அறிவித்தார். கைதியைக் கொல்லுமாறு பேரரசர் எழுத்தாணையிட்டார். பத்கான் ஆணையை நிறைவேற்றி, அரசு குடும்பத்தைச் சேர்ந்த உஸேன்ஷா என்ற சிறுவனை அரியணையேற்றினர். பீஜப்பூர் சுல்தானை முகம்மது அதில்கான் (Muhammad Adil Khan) சுதந்திரம் விரும்பியதால் கீழ்ப்படியாதவரென ஷாஜஹான் கருதினர். எனவே அவரை அடக்கும்படி ஆஸப்கானுக்குக் கட்டளையிட்டார். கீழ்ப்படிய மறுத்தால் அவருடைய நாட்டை எவ்வளவு கைப்பற்ற முடியுமே அவ்வளவு கைப்பற்றி எஞ்சிய பகுதியைப் பாழ்படுத்துமாறு கட்டளையிட்டார். பேரரசுப் படைகள் 1631-ல் பீஜப்பூரை முற்றுகையிட்டன. ஆனல் நாட்டுப்புறப் பகுதிகள் ஓரளவு

பீஜப்பூர் மக்களினுலும் ஓரளவு படையெடுப்பாளர்களினுலும் தற்காப்பிற்காகப் பாழாக்கப்பட்டமையால் போதிய உணவுப் பொருள்கள் வந்து சேராததால் படைகள் பின் வாங்கவேண்டியிருந்தன. 'அவர்கள் எச்சாலேயில் சென்ருலும் மக்களைக் கொன்றனர்; சிறைப்படுத்தினர். இருபுறங்களிலுமிருந்த நிலங்களைச் சூறையாடினர். நாட்டுப் பகுதிகளில் நுழைந்து வெறிகொள்ளும் வரை இதுபோன்ற கொள்ளைகளையும் அழித்தலையும் செய்து கொண்டிருந்தனர். நாட்டின் வளமிக்க பகுதி பாதிக்கப்பட்டு பாழடைந்தது'. இரக்கமற்ற இப்போர் பீஜப்பூர் அரசாங்கத்தாலோ, மக்களாலோ ஏற்படவில்லை. பேரரசரின் பேரவாவையும் செல்வத்திற்கான இச்சையையும் தணிப்பதற்காகவே வேண்டுமென்று இது தொடங்கப்பட்டதாகும்.

## ஆமத்நகர இராச்சியத்தின் முடிவு

ஷாஜஹான் இராணுவ நடவடிக்கைகளை எடுத்து முடித்தபின் ஆக்ராவிற்குத் திரும்பினர். இங்கே, தாஜ்ஜைத் திட்டமிடுவதிலும் கட்டுவதிலும் இவர் ஈடுபட்டிருந்தார். கான்காணுனை மாபத்கானைக் காந்தாரம், தக்காணம் ஆகியவற்றின் அரசப் பிரதிநிதியாக இவர் நியமித்தார்.

மாலிக் ஆம்பரின் மகன் ஃபத்கான் தன் மேலதிகாரியுடன் எங்ஙனம் பற்றற்று இருந்தாரோ அங்ஙனமே ஷாஜஹானுடன் இருந்தார். தன் தகப்பனுரால் வலுப்படுத்தப்பட்ட தௌலதாபாத் அரணை இவர் 1631-ல் பேரரசப் படையின் தாக்குதலிலிருந்து காப்பாற்றினர். ஆனுலும், வெடிமருந்துக் கிடங்கொன்று வெடித்ததும், படைகளுக்கிடையே நோய் பரவியதும் இவர் சரணடைவதற்குப் போதுமானவைகளாய் இருந்தன. இவர் பேரரசப் பணித்துறையில் சேர்த்துக்கொள்ளப்பட்டுத் தாராளமான ஊதியமும் அளிக்கப்பட்டார். இவரால் ஆமத்நகரின் சிம்மாசனத்தில் இளவரசர் ஆயுள்காலம்வரை சிறை வைக்கப்பட்டிருந்தார், நைஸாம்ஷாஹிகளின் இராச்சியமும் முடிவு பெற்றது. (கி.பி. 1632: ஹிபி: 1042).

அடுத்த ஆகஸ்டில் (1633) பேரரசர் பஞ்சாப்புக்கும் காஷ்மீருக்கும் சென்ருர். பரேன்தாவைக் கைப்பற்றுவதில் இளவரசர் ஷுஜா (Shuja) தோல்வியுற்ருர். கான்காணுனை மாபத்கானும் உயிர் நீத்தார்.

## 1635-36-ல் எடுத்த இராணுவ நடவடிக்கை

தக்காணத்திய நாடுகளை குறிப்பாகப் பீஜபூரை அடக்குவதற்காக ஷாஜஹான் தம் திட்டங்களை 1635-ல் புதுப்பித்தார். இவர்

களுக்கு பீஜப்பூரின் செல்வச் சிறப்புடைய அதில் ஷாயி (Adil Shahi) வமிசத்தின் சுதந்திரப் போக்கு நிலையான குற்றமாகத் தென்பட்டது. ஷாஜி அல்லது ஸாஹு என்ற மராட்டியத் தலைவரின் இராணுவச் செயலால் சிறிது சிக்கல் ஏற்பட்டது. இவர் நைஸாம்ஷாஹி வமிசத்தைச் சேர்ந்த மற்றொரு சிறுவனை ஆமத் நகரின் பெயரளவு சுல்தானுக அமர்த்தினர். ஷாஜியைப்பற்றி, குறிப்பாக சிவாஜியின் புகழ்பெற்ற தந்தை என்ற முறையில் நாம் மீண்டும் பார்ப்போம். ஷாஜஹான் ஆட்சியின் முந்திய ஆண்டுகளில் அல்லது கிட்டத்தட்ட 1630ஆம் ஆண்டிலிருந்து 1635ஆம் ஆண்டுவரை மராட்டியர் முகலாய வரலாற்றில் தோன்றத் தொடங்கினர்.

கோல்கொண்டா, பீஜப்பூர் சுல்தான்களுக்குப் பேரரசர் எழுத்துருவில் ஆணையிட்டு, தன் மேலாண்மைக்கு இணங்கும்படியும், கப்பங்களை ஒழுங்காகச் செலுத்தும்படியும், ஷாஜிக்கும் ஆமத் நகரைச் சார்ந்த அவருடைய சகாக்களுக்கும் உதவியளிக்கக் கூடாது என்றும் வற்புறுத்தினர். கோல்கொண்டாவின் அரசர் (ஹைதராபாத்) முகலாயரின் ஆதிக்கத்தை எதிர்க்க முடியாமல் எல்லாக் கோரிக்கைகளுக்கும் மிகத் தாழ்மையுடன் இணங்கினர். ஷாஜஹானின் பெயரிலேயே குத்பாவையும் படித்து, நாணயங்களையும் அச்சிட்டார்.

பீஜப்பூரின் ஆதில்ஷா அந்த அளவிற்குக் கீழ்ப்படியவில்லை; இணங்கியதாகப் பாவனை செய்து கொள்ள விரும்பினுலும், பேரரச ஆதிகத்தை எதிர்க்க மன உறுதி கொண்டிருந்தார். இரக்கமற்ற தன் கொள்கையை ஷாஜஹான் நீண்டகாலம் பின்பற்றினர். 'பீஜப்பூர் இராச்சியப் பகுதிகளில் இயன்ற மட்டும் கொலையும் கொள்ளையுமடிக்கப் பேரரசு ஆணையிட்டது.' மூன்று படைகள் மகிழ்ச்சியற்ற சுல்தானின் நாட்டை நெருங்கி, வேறுபாடின்றியும் இரக்கமின்றியும் எரித்தன; கொள்ளையடித்தன; அடிமைப்படுத்தின; படுகொலை செய்தன. எடுத்துக்காட்டாக ஒரு கிராமத்தில் இரண்டாயிரம் பேர்கள் கொல்லப்பட்டனர்; மற்றொரு இடத்தில் ஆண்களும் பெண்களுமாக இரண்டாயிரம் பேர் அடிமைகளாக விற்கப்பட்டனர். போர்க் கைதிகளை அடிமைப்படுத்தக்கூடாது என்று அக்பர் ஆணையிட்டிருந்தார். இது அவர் காலத்தில் பின்பற்றப்பட்டது. நெடுங்காலமாக மறக்கப்பட்டிருந்ததுமன்றி, சந்தேகத்துக்குரிய இவ்வாணை இரக்கமற்ற தன் பேரனை எவ்விதத்திலும் தடைசெய்யவில்லை.

**பீஜப்பூருடன் உடன்படிக்கை, 1636**

சுற்றுப்புற நிலப்பகுதிகளில் வெள்ள நீரைப் பாய்ச்சும் வெறி கொண்ட சூழ்ச்சிமுறையால் தலைநகரம் காப்பாற்றப்பட்ட போதிலும், தாக்கும் படைகளை எதிர்த்து இராச்சியம் முழுவதையும் காப்பாற்றுவதென்பது இயலாததாக இருந்தது. கோல்கொண்டாவின் மீது விதிக்கப்பட்டிருந்த நிபந்தனைகளை விடச் சிறிதளவே குறைந்திருந்த நிபந்தனைகளுக்கு ஆதில்ஷா கீழ்ப்படியும்படி கட்டாயப்படுத்தப்பட்டார். அவ்வுடன்படிக்கை, 1636ஆம் ஆண்டு மே மாதம் ஆறும் நாள் ஷாஜஹானுல் செல்திறமளிக்கப்பட்டது. சுல்தான் பேரரசிற்குக் கீழ்ப்படிய வேண்டுமென்றும், இருபது இலட்சம் ரூபாயை அமைதித் தொகையாகக் கொடுக்க வேண்டுமென்றும், பேரரசின் சிற்றரசாக இருந்த கோல்கொண்டாவின் எல்லையை மதிக்க வேண்டுமென்றும், பகை நடவடிக்கைகளில் ஷாஜிக்கு உதவியளிக்கக்கூடாதென்றும் கோரியது. ஆமத் நகர இராச்சியம் முழுதும் அழிக்கப்பட்டது; அதன் இராச்சியப் பகுதிகளை ஷாஜஹானும் ஆதில்ஷாவும் தமக்குள் பங்கிட்டுக்கொண்டனர். இடைவிடாமல் ஆண்டுதோறும் செலுத்தவேண்டியிருந்த கப்பத்தைப் பேரரசர் கோராததால் ஆதில்ஷாவின் சுதந்திரம் ஒருவகையில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இச்சலுகை உறுதியின்றி பெயரளவிற்கே இருந்தது.

**அவுரங்கசீப் தக்காணத்தின் அரசப்பிரதிநிதியாக நியமனம் பெறல்**

இவ்விதமாகச் செய்து முடிக்கப்பெற்ற ஏற்பாடு இருபதாண்டு செயற்பாட்டிலிருந்தது. அமைதி ஏற்பட்டதைத் தொடர்ந்து இளைஞரான இளவரசர் அவுரங்கசீப் (1636ஆம் ஆண்டு ஜூலை மாதம் 14ஆம் நாள்) தக்காணத்தின் அரசப் பிரதிநிதியாக நியமனம் பெற்றார். அப்பொழுது அவருக்கு வயது கிட்டத்தட்ட பதினெட்டாயிருந்தது. அவரது பொறுப்பில் நான்கு மாகாணங்கள் இருந்தன. அதாவது: (1) தப்தி (Tapti) சமவெளியில் இருந்த காந்தேஷ்; தலைநகர்-புர்ஹான்பூர்; அரண்-ஆசிர்கர். (2) காந்தேஷுக்குத் தென்கிழக்கில் இருந்ததும் தற்போது மத்தியப் பிரதேசத்துடன் சேர்க்கப்பட்டிருப்பதுமான பேரார் (பீரார்); தலைநகரம்-எலிச்பூர் (இலிச்பூர், அரண்-காவில்கர் (Gawilgarh); (3) தெலிங்கானா அல்லது தெலுங்கு நாடு; காடுகளையும் மலைகளையும் உட்கொண்டிருந்த, சரியாக வரையறுக்கப்பட்டிராத பகுதியாகும்; தலைநகரம்-நான்தெர் (Nander); அரண்-காந்தாரம்; இரண்டும் ஹைதராபாத்திலுள்ளன. (4) மறைந்துபோன ஆமத்நகர இராச்சியத்தின் பேரரசு பகுதி

உள்பட தௌலாதாபாத்; தலைநகரம்—அவுரங்காபாத் (முன்னுளில் கிர்கி), தௌலாதாபாத்திற்கு சில மைல் தூரத்தில் உள்ளது. இது பல முக்கிய அரண்களுள் முதன்மையானதென்று கருதப் பட்டு வந்தது.




இந்த நான்கு மாகாணங்களிலும் அறுபத்துநான்கு அரண் களிருந்தன. அவற்றுள் பல ஷாஜி அல்லது மற்ற பகைவர்களிட மிருந்தன. இவற்றின் மொத்த வருமானம் ஐந்து கோடி அல்லது ஐம்பது மில்லியன் ரூபாய் என்றும் மதிப்பிடப்பட்டிருந்தது. அவுரங்கசீப் தன் இராணுவ, சிவில் செலவுகளனைத்தையும் இதில் கழித்துக்கொள்ளவேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது.

## அவுரங்கசீப் அரசப் பிரதிநிதியாகப் பணியாற்றல், 1636–44

இவ்விதம் அரசப்பிரதிநிதியின் பெரும்பகுதி காலத்தை எடுத்துக்கொண்ட சண்டைகளையும் முற்றுகைகளையும் பின் தொடரவேண்டியதில்லை. அவுரங்கசீப் இவற்றில் தன் காலத் தின் பெரும்பகுதியைக் கழித்தார். இவர் நாசிக்குக்கு (Nasik) அருகில் இருந்த குன்றுகளில் அமைந்திருந்த பக்லானு (Baglana) என்ற சிறிய நாட்டை இணைத்துக்கொண்டார். ஷாஜி கீழ்ப் படிந்து, குறிப்பிட்ட சில அரண்களை விட்டுக்கொடுத்தார். பாரசீக அரச குடும்பத்தின் இளைய பிரிவினைச் சார்ந்த பிரபுவான

ஷா நவாஸ் கான் (Shah Navaz Khan) என்பவரின் மகளான தில்ராஸ் பானு பேகம் (Dilraz Bana Begam) என்பவளை மணம் புரிந்து கொள்வதற்காக அவுரங்கசீப் 1637-ல் ஆக்ராவிற்குச் சென்றார். இவள் மூன்று புதல்விகளுக்கும் இளவரசர்கள் ஆஸம் (Azam), அக்பர் என்ற இரு புதல்வர்களுக்கும் தாயானாள்.

அவுரங்கசீப் முதல் முறையாக தக்காணத்தின் அரசப் பிரதிநிதியாக இருந்தபோது இவரை எதிர்நோக்கிய இன்னல்கள் பலவாகும். நிதிப்பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் நாடு இருந்தது. தம் தகப்பனார் தம்மீது நம்பிக்கை யற்றிருந்தமையால் அரசப் பிரதிநிதி தொடர்ந்து தொல்லைகளுக் குள்ளானார். அத் தந்தையார் தம் மூத்த மகனும் அவுரங்கசீப்பின் ஆயுள் பகைவனுமாகிய தாரா ஷுக்கோவின் (Dara Shikoh) செல்வாக்கிற்கு உட்பட்டிருந்தார். புகழ் வாய்ந்த, எதிர்பாராத நிகழ்ச்சியொன்று அவுரங்கசீப்பின் மாகாண ஆட்சியின் முதல் பதவிக்காலம் முடிவு பெறுவதுடன் தொடர்பு கொண்டுள்ளது. ஷாஜஹானின் செல்வ மகளான இளவரசி ஜகனாரா (Jahanara) 1644ஆம் ஆண்டு மார்ச் மாதம் 26ஆம் நாள் ஆக்ராவில் உள்ள அரண்மனையில் அவளுடைய இலேசான அரைப் பாவாடையைக் கொழு விளக்கின் தீப்பற்றிக்கொண்டதனால் மிகப் பயங்கரமான தீப்புண்கள் ஏற்பட்டன. நோயாளியைப் பார்ப்பதற்காக அவுரங்கசீப் மே மாதத்தில் ஆக்ராவிற்கு வந்தார். இவர் வந்திறங்கிய மூன்று வாரத்திற்குப்பின் தம் அதிகாரத்தை விட்டு விலகிச் சில காலம்வரைத் தனிப்பட்ட வாழ்க்கையை மேற் கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டார். பதவியிலிருந்து இவர் தாற்காலிகமாக விலகியது பொதுவாகத் தவருகப் புரிந்து கொள்ளப்பட்டதுமன்றி, மத ஆர்வத்தின் மறைவான வெளிப் படுத்தலாகுமென்றும் கருதப்படுகிறது. குறிப்பிடப்படாத காரணத்தால் இவர் தம் தந்தையின் வெறுப்பிற்குள்ளானார். முறைப்படி தண்டனையை எதிர்பார்த்து ராஜிநாமா செய்தார். கடிதங்கள் ஒன்றில் தம் உயிர் அச்சுறுத்தப்பட்டதென்றும் குறிப் பிடுகிறார். தம்முடன் நடந்துகொண்ட முறையைத் தாம் எதிர்த்ததும், தம்மை எதிர்த்த சகோதரனின் சூழ்ச்சிகளும் தாம் கட்டாய மாக ஓய்வுபெற வேண்டியதற்குக் காரணங்களாகுமெனத் தெளி வாகிறது.

எட்டரை மாதங்கள் வேலையின்றி இருந்தபின் இவர், இடர் நிறைந்த குஜராத் மாகாண அரசாங்கப் பிரதிநிதியாக நியமிக்கப் பட்டார். (1646, பிப்ரவரி மாதம் 16ஆம் நாள் பேரரசருக்குத் திருப்தியளிக்கும் வகையில் இவர் நிருவாகம் செய்தார்;) 1647,



(a) ஹுமாயூனின் கல்லறை



(b) தாஜ்மஹால்-நதிப்புறத்திலிருந்து

புகைப்படம் 22



(a) ஆக்ரா கோட்டை-மோத்தி மசூதி (முத்து மசூதி)



(b) மாலிக் முகிஸ் மசூதியின் உட்புறம்

ஜனவரியில் பால்க் (Balk) பதக்ஷான் (Badakshan) இவற்றின் கவர்னராக இவ்விடர் நிறைந்த பதவிக்கு மாற்றப்பட்டார்.

**காந்தாரம்**

போர்த்திற நடவடிக்கைக்குப் பயன்படத்தக்க இடமாக இருந்ததாலும், இந்தியாவிற்கும் பாரசீகத்திற்குமிடையில் நில வர்த்தகப் பாதையில் முதன்மை அங்காடியாக இருந்ததாலும் காந்தாரம் முக்கியத்துவம் பெற்றிருந்தது. இந் நகரை ஹுமாயூன் சில ஆண்டுகாலம் வைத்திருந்தார். பின் இந் நகர், பாரசீக ஷாக்களுக்கும் இந்திய பாதுஷாக்களுக்குமிடையில் சர்ச்சைக்குரிய ஒரு பொருளாக இருந்து வந்தது. அக்பரின் இளமைப் பருவத்தில் அதை பாரசீகர்கள் மீட்டனர். ஆனல் அதனுடைய கவர்னரின் நம்பிக்கைத் துரோகத்தால் ஷா, அந்நகரை 1595ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இழந்தார். அக் கவர்னர் அந் நகரை அக்பரின் அலுவலர் ஒருவருக்குக் காட்டிக் கொடுத்தார். ஜஹாங்கீரின் ஆட்சிக் காலமாகிய 1622-ல்[1] மாபெரும் ஷா அப்பாஸ் அவ்விடத்தை மீண்டும் பெற்ருர். 1638ஆம் ஆண்டுவரை பாரசீகம் அதை வசப்படுத்தி வைத் திருந்தது. அவ்வாண்டில் நிருவாக விசாரணைக்கு அஞ்சிய அலிமர்த்தன்கான் அந் நகரை ஷாஜஹானின் பிரதிநிதியொருவருக்குக் காட்டிக்கொடுத்தார். தாற்காலிகமாக, துரோகிக்கு ஓர் இட்ச ரூபாயும், பின் ஷாஜஹானின் கீழ் இலாபம் தரும் பதவியும் அளிக்கப்பட்டது. காந்தாரத்தைப் பெற்றதற்கு ஷாஜஹான் பெரு முக்கியத்துவம் அளித்தார். அந் நகரை அடுத்திருந்த சிற்றரச நாடுகளையும் வலுப்படுத்துவதற்கு இவர் ஏராளமான தொகை செலவிட்டார். 1618ஆம் ஆண்டின் இலையுதிர் காலத்தில் காந்தாரத்தைத் தாக்குவதற்குப் பாரசீகர்களின் முன்னேற்பாடுகளைப்பற்றிக் கேள்விப்பட்டார்; ஆனலும் இளவேனிற் காலம்வரை வலிமையூட்டும் பொருட்களைப் போதுமான அளவு அனுப்புவதைத் தள்ளிப்போடுவதற்கு இணங்க வற்புறுத்தப்பட்டார். ஆனல் அதற்குள் காலதாமதமாகி விட்டது.

**முகலாயர்களின் மத்திய ஆசியக் கொள்கை**

தன் தந்தையையும் பாட்டனரையும் போலவே ஷாஜஹானும் மலைப்பகுதியான பதக்ஷானின் மேலும், தொலைவில் இந்து குஷ்ஷுக்கும் (Hindu Kush) ஆக்ஸ் நதிக்கும் இடையில் இருந்த பால்க் (Balk) மாகாணத்தின் மேலும் முழு ஆதிக்கம் பெற

[1] Raverty, ஆகஸ்ட் 1622 என்று இவ்வாட்சிக் காலத்தைக் கூறுகிருர் சர்கார் (Sarkar) 1623 என்று கருதுகிருர்.

விரும்பினர். இந்துகுஷ், ஆக்ஸஸ் நதிக்கரையிலிருந்து 1622ஆம் ஆண்டிலும் 1629ஆம் ஆண்டிலும் உஸ்பெக்குகள் காபூலைக் கைப்பற்றுவதற்கு முயன்றனர். தம் குடும்பப் புகழ் முன் பரவியிருந்த நாடுகளிலெல்லாம் தம் ஆதிக்கத்தைப் பரப்புவதற்கும் டிரான்சோக்ஸியானாவையும் (Transoxiana) சாமர்கண்ட் என்ற அதன் தலை நகரையும் இந்துஸ்தானத்தின் செங்கோலின் கீழ்க் கொண்டு வர முகலாயர்கள் கனவு கண்டு கொண்டிருந்தனர். உஸ்பெக் அரச குடும்பத்தில் நடந்த பதவி நீக்கங்களும், கிளர்ச்சிகளும் ஷாஜஹானைத் தலையிடும்படி வேண்டிக்கொள்வதற்குக் காரணமாக இருந்தன. 1646ஆம் ஆண்டு ஜூலை மாத அளவில் இளவரசர் முரத்தும் அலிமர்த்தன்கானும் பதக்ஷானையும் பால்க்கையும் தம் வசப்படுத்திக் கொண்டனர்.

ஆனால் இளவரசர் அந் நாட்டை வெறுத்தார்; தம் நாடு திரும்ப விரும்பினர். ஆக்ஸஸ் நதிக்கரை பாதுகாக்கப்படாததனால் உஸ்பெக்குகள் திரண்டனர். இருதரப்பும் நெருங்கி மோதிக் கைகலப்புற்ற சண்டைகளில் (Pitched Ushbs) உஸ்பெக்குகளின்மீது அவுரங்கசீப் தெளிவான வெற்றிகளைப்பெற்று நிலைமையை மீட்டார். ஆனால் அவருடைய அதிகாரிகள் அது போன்ற கரடுமுரடான பகுதியில் சண்டை செய்ய விரும்பவில்லை. உஸ்பெக் அரசரும் பாரசீகத்திலிருந்து உதவி பெற்றார். இதனால் 1647-ல் பேரரசப் படைகள் பால்க்கை காலி செய்ய வற்புறுத்தப் பட்டனர். திரும்பிவரும் சமயத்தில் கணவாய்களில் அவர்கள் சுமார் ஐயாயிரம் பேரை இழந்தனர்.

### காந்தாரத்தை முற்றுகையிடல்: முதல் முற்றுகை 1649

பால்க்கில் தோல்வியுற்றபின் அவுரங்கசீப் மூல்தான் மாகாணத்தின் கவர்னர் பதவிக்கு மாற்றப்பட்டார். சரிவரத் திட்டமிடப்படாத பால்க் படையெடுப்பைத் தோற்கடித்தனால் துணிவடைந்த உஸ்பெக்குகளின் அச்சுறுத்தும்படையெடுப்பைத் தடுப்பதற்காகப் பேரரசுப் படைகள் லாகூருக்கும் காபூலுக்கும் முன்னேறின. இது போன்ற பயமுறுத்தல்கள் 1585ஆம் ஆண்டிலிருந்து 1598ஆம் ஆண்டுவரை பதின்மூன்று ஆண்டுகளாக அக்பரை வடமேற்கு எல்லையில் தங்கி இருக்கச் செய்தனவென்பதை வாசகர்கள் நினைவில் கொண்டிருக்கலாம். அவுரங்கசீப் மூல்தானில் சிறிது காலம் தங்கியிருந்தார். காந்தாரத்தின் மீது எடுப்பதாக இருந்த பாரசீக நடவடிக்கைகளைப் பற்றிய தகவல் எட்டியவுடன் பேரரசர் படைக்கு உதவும் பொறுப்பை அவுரங்கசீப்பிடம் ஒப்படைக்க முடிவு செய்தார். இளவரசர் துரிதமான தாயரிப்புகளைச் செய்தார்; ஆனால் காலம் தாழ்த்தி வந்ததனால்,

அவர் வந்தடைவதற்கு நெடுங்காலத்திற்கு முந்தியே பகைவன் நகரைக் கைப்பற்றினன். தௌலத்கான் என்ற தளபதியின் செயலின்மையும் திறமையின்மையும் கட்டுப்பாட்டுடன் சரணடைதலுக்கு (1649 பிப்ரவரி 11ஆம் நாள்) காரணமாயிருந்தன. தாம் கைப்பற்றியதை உறுதிப்படுத்திக் கொள்வதற்கு முந்தியே காந்தாரத்தை மீட்கும்படி அவுரங்கசீப் ஆணையிடப்பட்டார். இவர், பிரதமமந்திரியான சாதுல்லாகானின் கீழிருந்த படையோடு தன் படையைச் சேர்த்துக் கொண்டு மே மாதத்தில் நகரைத் தாக்கினர்; ஆனல் பயனெதுவும் ஏற்படவில்லை. சுற்றித்திரியும் தன்மையுடைய இப்படை உதவிப்படையாக அமைக்கப்பட்டிருந்ததால், பெரும்பீரங்கிகளைப் பெற்றிருததால் முற்றுகையிடுவதற்குரிய தகுதியற்றிருந்தது; அதே சமயத்தில் பாரசீகர்கள் இராணுவத்திறமையில் உயர் நிலை அடைந்திருந்தார்கள், செப்டம்பர் மாதம் 5ஆம் நாள் முற்றுகையிடப்பட்டது. தளபதியாகத் தோல்வியடைந்ததனல் உண்டான மதிப்பிழப்பை அவுரங்கசீப் இரண்டாம் முறையாகப் பொறுத்துக் கொள்ள வேண்டியிருந்தது. அர்கந்தாப் (Arghandab) மலைத்தொடரில் இருந்த ஷாமீர் என்ற இடத்தில் பாரசீகர்களின் மீது அவுரங்கசீப் ஆகஸ்ட்மாதத்தில் பெற்ற வெற்றி காந்தாரத்தைக் கைப்பற்றுவதில் அடைந்த தோல்வியை மறைத்தது. ஆடம்பரமாக மகிழ்ச்சிக் கொண்டாட்டங்களை நிகழ்த்த இது இந்திய அரசவைக்கு ஒரு வாய்ப்பளித்தது.

### காந்தாரம்: இரண்டாம் முற்றுகை, 1652

காந்தாரத்தை மீண்டும் கைப்பற்றுவதற்கான நடவடிக்கைகளைக் கைவிட ஷாஜஹானுக்கு விருப்பமில்லை. இதற்கு அவர் உயர் முக்கியத்துவம் அளித்தார். நகரைத் தாக்குவதற்கான முற்றுகைப் பயிற்சியும் ஏராளமான வெடிமருந்துச் சேமிப்புகளையும் பெற்ற மாபெரும் படையொன்றினைத்திரட்டுவதிலும் இவரும் மூல்தானிலிருந்து திரும்பிய அவுரங்கசீப்பும் அடுத்த மூன்று ஆண்டுகளைக் கழித்தனர். அவுரங்கசீப் பெயரளவிற்குத் தளபதியாக இருந்தார்; ஆனல் இராணுவச் செயல் பற்றிய பொறுப்புப் பிரதமமந்திரியான சாதுல்லாவிடமிருந்தது. இவர் காபூலிலிருந்து ஷாஜஹான் விடுத்த ஆணைகளின் படி செயலாற்ற வேண்டியிருந்தது. செயல்படக்கூடிய உடைப்பு ஒன்று ஏற்படும் வரை மேற் சென்று மோதலாகாதென்ற கண்டிப்பான ஆணையை பேரரசிடமிருந்து இவர்கள் பெற்றிருந்தார்கள். அதுபோன்ற உடைப்பைச் செய்வதற்கான இவர்களுடைய முயற்சிகளெல்லாம் தோல்வியுற்றன. இதற்குக்காரணம் இந்தியப் பீரங்கிப்படையின் திறமையின்மையும் பாரசீகர்களின் சிறப்புத்

திறமையுமேயாகும். ஜுலை மாதத்தின் ஆரம்பத்தில் முற்றுகையைக் கைவிடும்படி ஆணையிடுவதற்கு ஷாஜஹான் வற்புறுத்தப் பட்டார். தோல்வியின் கசப்பை அவுரங்கசீப் மீண்டும் அனுபவிக்கவேண்டியதிருந்தது. இவருடைய தோல்வி, இவரது தீவினைப்பயனேயன்றித் தம் சொந்தக் குறையாக இல்லாவிடினும், தம் ஆற்றலின் மீது தம் தந்தை கொண்டிருந்த நம்பிக்கையை அறவே அழித்தது.

**காந்தாரத்தின் மூன்றும் முற்றுகை, 1653**

பேரரசின் விருப்பத்திற்குரியவரும் சிறிது காலத்திற்குப்பின் ஷா புலந்த இக்பால் (Shah Buland Iqbal) அல்லது 'உயர்ந்த நல்வினையின் அரசர்' என்ற பட்டப்பெயரால் பாராட்டப்பட்ட வருமான இளவரசர் தாராஷுகோ, வெறுப்புமிக்க தம் சகோதரரின் தோல்விக்கு வெகு விரைவில் மாற்றீடு செய்வதாகத் தற்பெருமை பேசிக்கொண்டிருந்தார். சுமார் மூன்றுமாதகால அளவில் பெரு முயற்சிகளின் விளைவாகப் புதிய படையொன்றும் முற்றுகைச் சாதனத் தொகுதியொன்றும் திரட்டப்பட்டது ஆனால், மூத்த இளவரசரின் 'உயர்ந்த நல்வினை' அவருக்கு உதவியளிக்கவில்லை. ஐந்து மாதகாலம் நீடித்திருந்த இராணுவ நடவடிக்கைகளுக்குப்பின் அவரும் தம் தோல்வியை ஒப்புக் கொண்டு 1653ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் முற்றுகையைக் கலைக்க வேண்டியதிருந்தது.

காந்தாரத்தைப் பெறுவதற்கு முகலாய வமிசம் மீண்டும் முயலவில்லை. இந்தியா திரட்டக்கூடிய சிறப்புமிக்க படைகள் மீண்டும் மீண்டும் தோல்வியுற்றது பாரசீக இராணுவ மதிப்பைத் திட்டவட்டமாக வலுப்படுத்தியது.

**முற்றுகைக்கான செலவு: பேரரச வருமானம்:**

நம்பத்தக்க மதிப்பீடுகள், காந்தாரத்தின் மீது மும்முறை நடத்திய முற்றுகையின் செலவைப் பன்னிரண்டு கோடி அல்லது நூற்றிருபது மில்லியன் ரூபாய் என்று கணக்கிடுகின்றன. இது பேரரசின் வருமானத்தின் பாதிக்கு மேலாகும். அவ் வருமானம் 1648-ல் இருபத்திரண்டு கோடி அல்லது இருநூற்றிருபது மில்லியன் ரூபாய் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. ஷாஜஹானின் ஆட்சிக்காலத்தில் ஒரு ரூபாயின் மதிப்பு ஆங்கிலச் செலாவணியின் படி இரண்டு ஷில்லிங் மூன்று பென்ஸ் என்று வழக்கமாகக் கொள்ளப்பட்டது; எனவே, பேரரச வருமானம் $24\frac{3}{4}$ மில்லியன் பவுண்டு ஸ்டர்லிங் அல்லது முழு எண்ணில் கிட்டத்தட்ட 24 மில்லியன் எனக் கணக்கிடலாம்.

### சித்தூர் அரண் தாக்கப்படுதல்

இராணு ஜகத்சிங் (Rana Jagat Singh), ஜஹாங்கீர் விதித்த தடையை மீறி, துணிச்சலாகக் கட்டிய சித்தூரின் புதிய அரண்களை அழித்து, பாரசீகரிடமிருந்து பெற்ற முனைப்பான தோல்விக்கு ஷாஜஹான் மலிவான ஈட்டைப் பெற்றார். ஆட்சிபுரிந்து கொண்டிருந்த ராணுவின் கீழ்ப்படிதல் வன்முறையால் பெறப்பட்டது. அரணின் சுவர்களை இடிக்க இரண்டுவார வேலை போதுமானதாயிருந்தது.

### அவுரங்கசீப் மீண்டும் தக்காணத்திற்கு அனுப்பப்படுதல்

பால்க் படையெடுப்பு, காந்தாரத்தின் முதலாம் இரண்டாம் முற்றுகைகளின் பேரிழப்பில் முடிவடைந்ததனால் அவுரங்கசீப் வடமேற்குப் பகுதிகளில் வெற்றிகரமான தளபதியாக விளங்கவில்லை. அரசவையில் தம் தகப்பனாரும் அண்ணனும் பகைவர்களாக இருந்தமையால் அங்கும் இவரால் இருக்க முடியவில்லை. இதனால் இவரைத் தூரத்தில் எங்காவது வைக்கவேண்டியிருந்தது. தக்காணத்தின் பொறுப்பை மீண்டும் ஏற்குமாறு பேரரசர் இவரை வற்புறுத்தினர். காந்தாரத்திலிருந்து திரும்பியவுடன் தக்காணத்திற்கு மீண்டும் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டார். ஆண்டின் இறுதியில், தௌலாதாபாத் அரணிலாவது சுற்றுப்புற நகரமான அவுரங்காபாத்திலாவது அமைந்திருந்த தன் அதிகார பூர்வமான தலைநகரில் நிலையாகத் தங்கினர்.

1658-ல் வாரிசுரிமைப் போர் தொடங்கும் வரை ஷாஜஹான் ஆட்சி காலத்திற்குரிய முக்கிய நிகழ்ச்சிகள் தக்காணத்தில் அவுரங்கசீப்பின் நடவடிக்கைகளோடு முதன்மையாகத் தொடர்பு கொண்டிருந்தன.

நிருவாகத்திற்குரிய இன்னல்கள் தக்காணத்தில் அரசப் பிரதிநிதியாகப் பணியாற்றிய முதல் பதவி காலத்தில் அவுரங்கசீப்பைத் துன்புறுத்திய நிதி, நிருவாக இடையூறுகள் இரண்டாவது பதவிகாலத்தில் மேலும் மும்முரமாகத் துன்புறுத்தின. தொடர்ந்துவந்த, திறமையற்ற, அடிக்கடி மாற்றப்பட்ட அதிகாரிகளால் நாடு ஆளப்பட்டு வந்தது. போரினாலும் பெரும் பஞ்சத்தாலும் ஏற்பட்ட சேதத்தை நிவர்த்திக்காமல், இவர்கள் பயிரிடுவதற்கான பரப்பைக் குறைக்கும்படியும் கிராமங்களை விட்டு வெளியேறும்படியும் குடிமக்களை மிகக் கொடுமையாக அடக்கினர். நிலவருமானத்தின் பெயரளவு மதிப்பீடு போன்ற எதையும் வசூலிக்க முடியவில்லையாதலால் பேரரசக் கருவூலமும் மாகாண வருவாயும் பாதிக்கப்பட்டன.

அதே சமயத்தில் தம்மையும் தம்முடைய படைகளையும் பேண ஒதுக்கிவைக்கப்பட்ட மாவட்டங்களிலிருந்து நிலவருவாயைப் பெற்றுத் தம்முடைய கடமைப் பொறுப்புகளை ஏற்று நடத்த முடியாத நிலையில் ஜாகீர்தார்கள் இருந்தனர். அவர்கள் தம் இடர்க்கால நிதியிலிருந்து ஏராளமான தொகையை எடுக்க வேண்டியதிருந்தது. பண உதவிக்காகத் தம் தந்தையிடம் விடுத்த வேண்டுகோள்களெல்லாம் முற்றிலும் மறுக்கப்பட்டன, அல்லது தயக்கத்தோடு நிறைவேற்றப்பட்டன. விவசாயத்தை உயிர்ப்பிக்கவும், வருமானத்தை மேம்படுத்தவும் தம்மால் இயன்றதனைத்தையும் செய்தார். இருந்தபோதிலும், பல ஆண்டுகளாக நீடித்திருந்த ஒழுங்கற்ற அரசாங்கத்தின் விளைவுகளை வெகு எளிதில் நிவர்த்திக்க முடியவில்லை. மிக்க முன்னேற்றத்தைக் கொண்டு வந்தபோதிலும் வாரிசுரிமைப் போர் தொடங்கிய சமயத்தில் செய்யவேண்டியது ஏராளமாக இருந்தது.

**முர்ஷித் குலிகானின் 'ஏற்பாடு'**

முர்ஷித்குலிகான் என்ற மிக்க திறமை வாய்ந்த அதிகாரியின் சேவையைப் பெற்றிருந்ததில் அவுரங்கசீப் நல்வினை செய்தவராவார். அரசிறைக்காகத் தக்காணம், 'பைன்காட்' (Painghat) அல்லது 'பள்ளப்பகுதி நிலங்கள்' என்றும், பாலாகாட் (Balaghat) அல்லது மேட்டு நிலங்கள் என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டது. பைன்காட் என்ற பகுதி காந்தேஷ் அல்லது தப்தி சமவெளியையும் பீராரின் ஒரு பகுதியையும் கொண்டிருந்தது. 'பாலாகாட்' என்ற பகுதியில் அரசப் பிரதிநிதியின் ஆதிக்கத்திலிருந்த மற்றப்பகுதிகள் அடங்கி இருந்தன. முன் அலிமர்த்தன் கான் என்பவரின் தோழமைக் குழுவில் சேர்ந்திருந்த முர்ஷித் குலிக்கான் என்ற பாரசீகர், மேட்டு நிலங்களின் திவானாக அவுரங்கசீப்புடன் தக்காணத்திற்கு வந்தார்; 1656ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தக்காணம் முழுவதற்கும் முதலமைச்சராகப் பதவி உயர்த்தப்பட்டார். அக் காலத்திற்கு முன் நில வருவாய் பற்றிய செயலாட்சி பெரிதும் ஒழுங்குமுறையின்றி இருந்தது. நில அளவீடு அல்லது மதிப்பீடு இல்லாமல் ஒவ்வொருவராலும் பயிரிடப்பட்ட நிலத்தின் மீது சிறுதீர்வை ஒன்றை விதித்ததினால் அரசாங்கக் கோரிக்கையின் மதிப்பீடு கரடுமுரடாகவே இருந்தது. தோடர்மாலின் நில அளவு, வருமான மதிப்பீட்டு முறையை அல்லது ஏற்பாட்டை முர்ஷித்குலிக்கான் இயன்றவரை தக்காணத்தில் நுழைத்தார்; ஆனால் தலத்துக்குரிய விலக்குகளையும், அதிக முறைப்படி அமைந்த திட்டம் செயல் முறையில் நடைபெறுதிருக்கும் பொழுது உழுது பண்படுத்துவதற்குரிய ஒவ்வொரு நிலத்திலிருந்து மொத்தத் தொகையொன்றைப் பெறும் பழைய

வழக்கத்தைப் போற்றுவதற்கும் போதிய அறிவுத்திறம் பெற்றிருந்தார். தீர்வைகளைப் பண்டப் பொருளாக அளிப்பதையும் பல முறைகளைப் பின் பற்றித் தானியங்களை வகைப்படுத்துவதையும் இவர் விரும்பினர். விவசாயத்தை உயிர்ப்பிக்கக் குடியானவர்களுக்கு ரொக்க முன்பணம் தடையின்றி அளிக்கப்பட்டது; இதனல் பல நல்ல விளைவுகள் ஏற்பட்டன. அவுரங்காபாத்தின் அருகில் வன் பாலை நிலம் எதுவும் கிடையாதென்று நுணுகிக் காணும் தகுதிபெற்ற ஒருவர் 1658-ல் குறிப்பிட்டார்.

தாராஷுகோவின் பகைமையும் அதனல் ஷாஜஹான் மன வேறுபாடு கொள்ளுதலும் நிருவாகத்தின் இக்கட்டுகளை மேலும் சிக்கலாக்கின. தக்காணத்தைத் தன் மகன் ஷுஜாவிற்கு அளிக்கும் அளவிற்குப் பேரரசர் அவுரங்கசீப்பின் மீது வெறுப்புக் கொண்டிருந்தார்; ஆனல், ஷுஜா வங்காளத்திலிருந்து மாற்றம் பெறுவதற்கு இணங்கவில்லை.

## அவுரங்கசீப்பின் ஆக்ரமிப்புக் கொள்கை

அவுரங்கசீப் தம் கவனத்தை உள்நாட்டு நிருவாகப் பிரச்சினையோடு மட்டும் நிறுத்திக் கொள்ளவில்லை. இவர் பேரவாக் கொண்ட ஆக்கிரமிப்பு மிக்க அரசராவார்; தம் வமிசத்தின் மரபாகக் கொண்டிருந்த கொள்கையை நிறைவேற்றுவதில் தனி மதகுரு டெரி (Chaplain Terry) குறிப்பிடுவது போல், 'குட்டையொன்றின் ஈட்டி மீனைப்போல்' நடிப்பதற்கும் இவர் ஆர்வம் கொண்டிருந்தார். கோல்கொண்டா, பீஜப்பூர் சுல்தானியங்களின் சுதந்திரத்தை அழித்து அவ்விராச்சியங்களின் ஏராளமான செல்வங்களையும் மூலப் பொருள்களையும் தனக்கும் தன்னை ஆதரிப்பவர்களுக்கும் பரிமாறிக்கொள்வது இவரது முக்கிய குறிக்கோளாகும். ஷியா மதப்பிரிவைச் சேர்ந்தவர்களும் இந்துஸ்தானின் பாதுஷாவிடமன்றிப் பாரசீக ஷாவிடம் கூட்டுறவும் பாதுகாப்பும் எதிர்பார்த்த கோல்கொண்டா பீஜப்பூர் சுல்தானியர்களோடு போர்புரிவதில், குருட்டுப் பிடிவாத சுன்னி முஸ்லீம் என்ற முறையில், பேரரசரும் அவருடைய மகனும் மிக்க மகிழ்ச்சி கொண்டனர். ஆக்கிரமிப்புப் போர்கள் இரக்கமின்றி நடத்தப்பட்டன; இறுதியில் சுல்தானியர்கள் அரியணையிலிருந்து விலக்கப்பட்டபொழுது வெற்றியாளர்களிடமிருந்து எவ்விதப் பெருந்தன்மையான செயலையும் பெறவில்லை. இவ்விரு இராச்சியங்களும் தம் சுதந்திரத்தைப் பாதுகாத்தது, 'குறும்புத்தனம் நிறைந்த கீழ்ப்படியாமையாகு'மென்று அரசவை வரலாற்றினர்களால் வருணிக்கப்படுகிறது.

படையெடுப்பிற்கான சாக்குபோக்குகளுக்கு எப்பொழுதுமே குறைவில்லை. 1636ஆம் ஆண்டிலிருந்து கோல்கொண்டா கப்பம் செலுத்தும் நாடாக உறுதி பெற்றது. நிலுவைகள் செலுத்த வேண்டியிருந்தன. குறிப்பிட்ட கப்பத்தை ஆண்டு தோறும் செலுத்தவேண்டுமென்று கேட்கப்படாத அளவிற்கு பீஜப்பூர் சுல்தானியரின் மதிப்புணர்ச்சி இஸ்ஸத் (Izzat) மதிக்கப் பட்டபோதிலும், ஒவ்வோர் ஆண்டும் நன்கொடைகள் செலுத்த வேண்டுமென்று அவரிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டது. இதனால் இவருடைய நிலைக்கும் கோல்கொண்டாவின் நிலைக்குமிருந்த வேறுபாடு பெயரளவிற்கு மட்டுமே இருந்தது. எதைக் கொடுக்க முடியாமல் இருக்க முடியுமோ அதை பீஜப்பூர் கொடுக்கவில்லை. சுல்தான்களின் மீது வெறுப்புக் கொள்வதற்கான மற்ற காரணங் களும் கண்டுபிடிக்கபட்டன.

சிறிது காலத்திற்குபின் இந்துஸ்தானத்தின் மீதும் தக்காணத்து இராச்சியங்கள் மீதும் அவுரங்கசீப் எடுத்துக் கொண்ட முக்கிய நடவடிக்கைகளில் மிர்ஜும்லா உதவியாக இருந்தார். இவர் பாரசீக வெற்றி வேட்டையாளரும் ஆர்திஸ் தானிலிருந்து (Ardistan) வந்த வணிகருமாவர். பதினைந்தாம் நூற்றாண்டில் பாமினி சுல்தானின் கீழ் இருந்த மமூத் கவான் (Mahamud Gawan) என்பவரைப் போல், இவர் தேர்ச்சி பெற்ற வர்த்தகராகத் தொடங்கி மிகவிரைவில் தன்னை அப்துல்லா குதுப் ஷா (Abdulla Qutb Shah) பிரதம மந்திரி என்ற முறையில் கோல் கொண்டா அல்லது ஹைதாரபாத்தின் உண்மையான தலைவ ராக்கிக் கொண்டார். குதுப் ஷாவின் பணியாட்களின் தலைவர் என்ற தலை நிலையோடு திருப்தியடையாமல் விஜயநகர வமிசத் தின் பிரதிநிதியான சந்தரகிரி (Chandragiri) இராசாவின் ஆட்சிக் குட்பட்டிருந்த கர்னடிக் (Karnatic) அல்லது கன்னடிக இராசியத் தைத் தாக்கி அதை இணைத்துக்கொண்டு உண்மையாக்ச் சுதந்திரம் பெற்ற நாடாக இருந்த இராச்சியத்தைத் தனக்குரிய தென நிலை நாட்டிக்கொண்டார். மிர்ஜும்லாவின் இராச்சியம் சுமார் முந்நூறு மைல் நீளமும் ஐம்பது மைல் அகலமுமிருந்தது, நாற்பது இலட்சம் ரூபாய் வருமானம் அளித்தது; ஐரோப்பியப் பீரங்கிப்படைவீரர்களின் கீழ், சிறப்பு வாய்ந்த மிகப் பெரிய பீரங்கிப்படை ஒன்றையும் வைத்துப்பேணியது.

மிர்ஜும்லா பெற்ற அரைச் சுதந்திர நிலை பெயரளவுத் தலைவ ரான குதுப்ஷாவின் பொறுமையைக் கிளறிவிட்டது. அவர் அளவு மீறி ஆற்றல்பெற்ற பணியாளைத் தன் கீழ்க் கொண்டுவர முயன்றார்; பீஜப்பூர்; பாரசீகம் ஆகியவற்றுடனும் ஷாஜஹான்

அவுரங்கசீப் ஆகியவர்களுடனும் மறை சூழ்ச்சிகளைச் செய்து தம்மையே காத்துக்கொண்டார்; இறுதியில் முகலாயப் பணித் துறையுடன் தம்மை இணைத்துக்கொண்டு ஷாஜஹானிடமிருந்து உயர் பதவியைப் பெற்றுக் கொண்டார். இங்ஙனம் இவர் குதுப் ஷாவிற்குத் துரோகியானார்.

## அவுரங்கசீப்பின் நம்பிக்கைத் துரோகமான கொள்கை

துயருற்ற, திறமையற்ற அம் மன்னன் மீது அவுரங்கசீப் போரைச் சுமத்தினர். இவர் அம் மன்னரை அழிக்க மன உறுதி கொண்டிருந்தார். இவருடைய குறிக்கோள், தம் மூத்த மகனை இளவரசர் முகம்மது சுல்தானுக்கு தம் கையினாலேயே எழுதி இட்ட கட்டளைகளிலிருந்து வெளிப்படையாகத் தெரியவருகிறது.

அவையாவன: குது புல் முல்க் (Qutb-ul-Mulk) ஒரு கோழை, அநேகமாக எதிர்க்கமாட்டான். அவன் கோல்கொண்டாவிற்குத் தப்பியோடிவிடாமல், உன்னுடைய படைப்பிரிவு ஒன்றைக் காவலாக நிறுத்திவை. ஆனல் அதைச் செய்வதற்கு முன் விழிப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தூதனைக் கீழ்க்கண்டவாறு சொல்லும்படி அவனிடம் அனுப்பிவை.

'நீ என்னைச் சந்திப்பாய் என்றும் வேளாண்மைப் பண்புடன் உன்னுடன் தங்கும்படி என்னைக் கோருவாய் என்றும் நெடுங்காலமாக எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். ஆனல், நீ அவ்விதம் செய்யாததனல் நானே உன்னிடம் வந்திருக்கிறேன்.'[1] இத் தூதுரையைக் கொடுத்தவுடன் திடீரென்று அவனைத் தாக்கு; உன்னல் முடியுமானல் அவனுடைய தலையை வெட்டி வீழ்த்து. (கழுத்தின் மேலிருக்கும் தலையின் சுமையை இலேசாக்கு). சூழ்ச்சி நயமும், செயல் விரைவும் இத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான சிறந்த கருவிகளாகும்.[2]

ஒரு முஸ்லீம் அரசருக்கு எதிராக அவுரங்கசீப்பும் இவருடைய தந்தையும் செய்த நன்றிக் கொலை இதுபோன்றதாகும். அம் முஸ்லீம் அரசரின் குற்றம் அவருடைய சுதந்திரமாகும். இளவரசர் முகம்மதுசுல்தான் இப்பொழுது ஹைதராபாத்திற்குள் நுழைந்தார். கொடுமைகளை இழைக்கக்கூடாது என்று இட்ட கட்டளையை பொருட்படுத்தாது இவருடைய படைவீரர்களால் இது சூறையாடப்பட்டது. தம் படைகளின் ஒழுங்கற்ற

[1] Adab, 187-b; in Sarkar, History, Vol I p. 230.
[2] Adub. 187 b, in Sarkar History Vol. I Page. 230.

செயல்களைச் சாதகமாகப் பயன் படுத்திக் கொள்வதில் பின் வாங்காத இளவரசரும் அவர் தந்தையும் மதிப்புமிக்க கையெழுத்துப் பிரதிகள் அடங்கிய நூலகம் உள்படப் பல விலையுயர்ந்த பொருள்களைத் தங்களுக்குரியவையாக்கிக் கொண்டனர். இருந்த போதிலும் ஹைதராபாத் வளமிக்கதாக இருந்ததினால் மற்றொரு தாக்குதலைத் தூண்டுவிக்கும் அளவிற்கு இன்னும் செல்வம் தேங்கி நின்றது. இதற்கிடையில் அரசர் சில மைல்களுக்கப்பால் இருந்த கோல்கொண்டா அரணில் இருந்து கொண்டார்.

### கோல்கொண்டாவின் முற்றுகை அமைதி

1656ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் அவுரங்கசீப் கோல் கொண்டாவின் முற்றுகையைத் தொடங்கினார். வலிமை வாய்ந்த இடங்களை முற்றுகையிடும்போது முகலாயத் தளபதிகள் செய்ததுபோல் இவர் மெதுவாகவே முன்னேறினார். இராச்சியம் முழுவதையும் இணைத்துக்கொள்வதற்கு முடிவு செய்திருந்ததினால் அமைதிக்குரிய எல்லாத் திட்டங்களையும் இவர் புறக்கணித்தார். இவ்விராச்சியத்தின் செல்வத்தை இவர் பெற விரும்பினார். இருந்தபோதிலும் ஷாஜஹானைத் தான் உணர்ந்திருந்த காரணத்தினால் மேலும் இணங்கிப்போகத் தயாராக இருந்தார். குறிப்பிட்ட நிபந்தனைகளின்படி சுல்தானின் அமைதித் திட்டங்களுக்கு இணங்கி அவரை அறவே மன்னித்து விடுவதாகவும் வாக்குறுதியளித்தார். மேலும் சாதகமான நிபந்தனைகளைப் பெறுவதற்காக அவுரங்கசீப் அக் கடிதத்தை அனுப்பாது தாமே வைத்துக் கொண்டார். இதைப்பற்றிப் பேரரசரிடம் குறிப்பிட்டபொழுது இவர் தம் மகனின் செயலுக்கு ஒப்புதல் அளித்தார். போரை நிறுத்தச் சிறிது காலத்திற்குப்பின் இளவரசர் தாராஷுகோவாலும் இளவரசி ஜகானாராவாலும் (Jahanara) ஷாஜஹான் வற்புறுத்தப்பட்டார். மார்ச்சு மாதம் 30ஆம் தேதியன்று முற்றுகையைக் கலைப்பதற்கு அவுரங்கசீப் கட்டளையிட்டார். ஒரு மாவட்டத்தையும் பெருந்தொகையையும் ஈட்டுப் பணமாகக் கொடுப்பதற்கு குதுப்ஷா ஒப்புக்கொண்டார். அவுரங்கசீப் புடன் செய்துகொண்ட மறைமுக உடன்படிக்கையின்படி சுல்தான், இளவரசர் முகம்மது சுல்தானை, தன் வாரிசாக்க வாக்களித்தார்.

### மிர்ஜும்லா பிரதம மந்திரியாதல்.

ஆற்றல்மிக்க படையுடன் அவுரங்கசீப்பின் பாசறைக்கு வந்து சேர்ந்த மிர்ஜும்லா, அண்மையில் உயிர்நீத்த அல்லாமி சாதுல்லா கானை (Allami Sadullah Khan) அடுத்துப் பேரரசின் பிரதம மந்திரியாக இப்பொழுது நியமனம் செய்யப்பட்டார். காலஞ்சென்ற

அமைச்சர், தம் இராணுவச் செயல்களில் துரதிர்ஷ்டமுடைய வராக இருந்தபோதிலும் இந்தியா அறிந்திருந்த முஸ்லீம் நிருவாகிகளில் ஒருவராவார் என்று பாராட்டப்பெற்றிருக்கிறார்.

மாபெரும் விஜயநகர வமிசத்தின் பிரதிநிதியான சந்திரகிரி ராஜா தம்மை முஸ்லீமாக ஆக்கிக்கொள்வதற்கும் இணங்கிப் பேரரசரின் பாதுகாப்பைப்பெற முயன்றார். ஆனால் அவரது முயற்சிகள் முற்றிலும் முறிவுற்றன. அவர் பீஜப்பூர், கோல் கொண்டா போன்ற நாடுகளிடமும் மிர்ஜும்லாவிடமும் சிக்கிக் கொண்டார்.

## சென்னை தோற்றுவிக்கப்படுதல்

*1639*ஆம் ஆண்டின் முற்பகுதியில் ஆங்கில வர்த்தகர் ஒரு வருக்கு சென்னையை அளித்தது அச் சமயத்தில் கவனிக்கப்படா விடினும், இது ஷாஜஹான் ஆட்சியின் முக்கிய நிகழ்ச்சியாகும். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிப் பரப்புச் சார்ந்த கைப்பற்றுதல் களின் தொடக்கத்தை இது குறிப்பிடுகிறது.

## பீஜப்பூருடன் போர்

தம் இராச்சியங்களைக் கிழக்கிலும், தெற்கிலும், மேற்கிலும் பரப்புவதற்காகப் பீஜப்பூரின் சுல்தான் அல்லது அரசர் *1636*-ல் ஏற்பட்ட உடன்பாடு அளித்த பாதுகாப்பை சாதகமாகப் பயன் படுத்திக்கொண்டார். *1649*ஆம் ஆண்டின் முடிவில் இப்பொழுது தென் ஆர்க்காடு மாவட்டத்திலிருக்கும் ஜின்ஜி (Jingi) அல்லது சென்ஜி என்ற வலிமை வாய்ந்த அரணை அவரிடம் விட்டது. இவர் கோவாவைச் சேர்ந்த போர்ச்சுகீசியர்களுக்கு எதிராகக் குறிப் பிட்ட ஓரளவு வெற்றிபெற்றார். சுல்தான் முகம்மது ஆதில்ஷா (*1626–56*) தீபகற்பத்திற்கப்பால் கடலிலிருந்து கடல்வரை பரவி யிருந்த இராச்சியத்தை ஆட்சி செய்தார். மாட்சிமைமிக்க அரச வையை நிறுவினார்; அதற்குமுன் அடைந்திராத செல்வ நிலைக்கும் வலிமைக்கும் தம் நாட்டை உயர்த்தினார். நற்பெயர் பெற்ற அவ்வரசர் *1656*ஆம் ஆண்டு நவம்பர் மாதம் *4*ஆம் தேதி உயிர் நீத்தார். தம் ஒரே மகனை பதினெட்டு வயது இளைஞன் பட்டத்திற்கு வந்தமையால் உள் நாட்டுக் குழப்பங்கள் ஏற்பட்டன. இவைகள் முகலாய வமிசத்தின் பேராசையை நிறைவேற்றிக் கொள்வதற்கான வாய்ப்பை அளித்தன. தான் சரியெனக் கருதியபடி நடந்துகொள்ளப் பேரரசர் தம் பிரதி நிதிக்கு உரிமையளித்தார். வாய்ப்புக் கிடைத்தவுடன் அவுரங்க சீப் துரோகியான மீர்ஜும்லாவின் உதவியுடன் பீஜப்பூர் இராச் சியத்தின்மீது படையெடுத்தார். வீரத்தோடு எதிர்த்து நின்ற

பீடார் 1657ஆம் ஆண்டு மே மாதம் வீழ்ச்சியடைந்தது. மாபத்கானும் அவுரங்கசீப்பும் பீஜப்பூர் நாட்டை மிகக் கொடுமையாகச் சூறையாடினார்கள். ஆகஸ்டு மாதம் முதல் தேதியன்று கல்யாணி (Kalyani) வீழ்ச்சியடைந்தது.

இராச்சியம் முழுவதும் கைப்பற்றப்பட இருக்கும் தருவாயில் தாராவின் தூண்டுதலால் ஷாஜஹான் தலையிட்டு அமைதி உடன்படிக்கை யொன்றைச் செயற்படுத்தினார். அதன்படி சுல்தான் பீடார், கல்யாணி, பரேந்தா என்ற இடங்களையும் மேலும் சில இடங்களையும் சரணடையவும் பெரிய ஈட்டுப் பணத்தைக் கொடுப்பதற்கும் இசைந்தார். தக்காணத்தில் அவுரங்கசீப் மேற்கொண்ட நடவடிக்கைகள், ஒரு முறைக்குமேல் குறிப்பிடப்பட்டுள்ள ஷாஜி பான்ஸ்லேயின் (Shaji Bhonsle) மகனும் மராத்தியத் தலைவருமான சிவாஜி என்ற இளைஞனின் துணிகரக் கொள்ளைகளைத் தடுப்பதற்காக எடுக்கப்பட்டனவாகும். ஷாஜஹானின் பயங்கர நோய் 1657ஆம் ஆண்டு செப்டம்பர் மாத முதற்பகுதியில் தொடங்கியது. வாரிசுரிமைப் போரில் முடிவடைந்தது. தக்காணத்தின் மீதும் மீண்டும் படையெடுக்க வேண்டுமென்ற எண்ணத்திற்கு இது முற்றுப்புள்ளி வைத்தது. இதனால் சுமார் முப்பதாண்டுக்காலம் சுல்தானியங்கள் ஓய்வு பெற்றன.

### வாரிசுரிமைக்குப் போட்டி

சகாதிய முகலாய மேலதிகாரியின் மூத்த மகன் தன் தந்தைக்குப்பின் சிம்மாசனத்திற்கு வருவதற்கான முன்னுரிமை பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட போதிலும், அவருடைய முழு உரிமை போட்டியின்றித் தன் நிலையை அடைவதற்குப் போதிய அளவு நிலைநாட்டப்படவில்லை. ஹுமாயூன், அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆகியவர்களெல்லாம் தம் நெருங்கிய உறவினர்களின் போட்டியைச் சமாளிக்க வேண்டியிருந்தது. தமக்குப்பின் தம் மூத்த மகனை தாராஷுகோ பதவிக்கு வரவேண்டுமென்று ஷாஜஹான் விரும்பினார்; அவ் விருப்பத்தை நிறைவேற்றச் செயல்முறையில் எல்லா நடவடிக்கைகளையும் எடுத்தார்; நிகரற்ற பட்டங்களையும் சிறப்புகளையும், செல்வத்தையும் மிக அதிகமாக விரும்பிய மூத்த மகனுக்கு வரையாது கொடுத்தார். இம் மூத்த இளவரசர் எப்பொழுதும் பேரரசரின் அருகிலேயே தங்கியிருக்கும்படி வற்புறுத்தப்பட்டார். ஷாஜஹானுக்கு வயதாகிக் கொண்டிருந்த பொழுது பேரரச உரிமைகளைக் கையாளவும் அனுமதிக்கப்பட்டார். எல்லோரும் மூத்த மகனுக்களித்த நட்பாதரவை மறைக்க முடியாத பொறுமையுடன் கவனித்தனர்

மூன்று பேரும் அவருடைய வாரிசுரிமைக்கு எதிர்ப்பளிக்க முடிவு செய்தனர். ஒவ்வொருவரும் தாம் உரிமை பெறுவதற்குத் தகுதி பெற்றவர் எனக் கருதினர்; தம் தந்தை இறந்த பிறகு நடக்க வேண்டிய போர் தவிர்க்க முடியாத ஒரு போர் என்று கருதினர். இப்போருக்காக ஒவ்வொருவரும் தம் வாழ்க்கையையும் மற்றெதையும் துணிந்து ஈடுபடுத்துவதற்குத் தயாராயினர். இந்நான்கு பேரும் அர்ஜுமந்த்பானு பேகம் என்ற தாயின் மக்கள் என்ற உண்மை அவர்களுடைய பேரவாவிற்குத் தடையாக இருக்கவில்லை. ‘அரசருக்கு எவரும் உறவினர் அல்லர்’ என்ற தைரிய முதுரையை இவர்கள் ஏற்றுக் கொண்டனர். போட்டியில் கலந்து கொள்ளாதிருந்தால் எச் சகோதரனின் உயிரையும் தம்மில் ஒருவர் சிம்மாசனத்தில் உறுதியாக அமர்ந்தபிறகு காக்க முடியாதென்பதையும் அவர்கள் உணர்ந்திருந்தார்கள் வாரிசுரிமைக் கப்பால் போர் இறுதிவரை நடத்தப்படவேண்டும், தகத்யா தக்தா (Takht ya Takhta) இதை ‘சிம்மாசனம் அல்லது பிணப் பெட்டி’ என மொழிபெயர்க்கலாம் என்பது தவிர்க்க முடியாத குறிக்கோளாகும்.

வாரிசுரிமைப்போரின் நீண்ட வரலாறு பாரசீக மொழியிலும், பிரெஞ்சு ஆங்கில மொழிகளிலும், சமகாலத்து ஆசிரியர்களாலும் தெளிவாக வருணிக்கப்பட்டுள்ளது. அவர்களுடைய குறிப்புகள் பேராசியர் சர்க்கார் அவர்களின் நூலில் ஆராய்ச்சித் திறனுடன் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. அன்னரது நூலின் இரண்டாம் தொகுதி இத் தலைப்பிற்காக ஒதுக்கப்பட்டுள்ளது. இங்கு துயர் நிறைந்த அந் நிகழ்ச்சிகளின் முக்கியக் கூறுகளை விவரித்துக் கூறும் சுருக்கத்தையன்றி மற்றெதையும் அளிப்பது செயல் முறையில் இயலாததாகும்.

### ஷாஜஹானின் மைந்தர்கள்

தாரா ஷிகோ (Dara Shikoh), ஷுஜா (Shuja), அவுரங்கசீப் (Aurangazeb), மூரத் பக்ஷ் (Murad Baksh) ஆகியவர்கள் ஷாஜஹானின் நான்கு புதல்வர்களாவர். 1657-ல் இவர்களெல்லாம் முழுப்பருவமடைந்த மனிதர்களாவர். இவர்களுடைய வயது முறையே நாற்பத்துமூன்று, நாற்பத்தொன்று, முப்பத்து மூன்று, சுமார் முப்பத்தொன்றாகும் பெருமளவில் சிவில், இராணுவ விவகாரங்களில் மிக்க அனுபவம் பெற்றிருந்தனர். தம் தந்தையுடன் தங்கி வாழ்ந்த மூத்தவர் பஞ்சாப்பிற்கும் வட மேற்கிலுள்ள மற்ற மாகாணங்களுக்கும் அரசப் பிரதிநிதியாக இருந்தார். இவற்றை இவர்தம் ஆட்பேர்களால் ஆட்சி செய்து வந்தார். ஷுஜா பெரிய இராச்சியப் பகுதிகளான வங்காளத்

த்தையும் ஒரிசாவையும் ஆட்சி செய்து வந்தார். அவுரங்கசீப் தக்காணத்தை ஆண்டுவந்தார்; மூரத்பக்ஷ் குஜராத்தையும் மேற்குப்பகுதியையும் ஆண்டு வந்தார். இங்ஙனம் இந் நான்கு இளவரசர்களும் மண்டலங்களில் அரைச் சுதந்திர அரசாங்கங்களைக் கொண்டியங்கிவந்தனர். ஒவ்வொரு பகுதியும் ஆற்றல் மிக்க இராச்சியமாக இருந்தது; தம் அரசனுக்கு ஏராளமான ரொக்கப் பணத்தையும், பல்லாயிரக்கணக்கான ஆயுத வீரர்களையும் அளிக்கமுடிந்தது. ஆக்ரா அரணின் நிலவறைகளில் குவித்து வைக்கப்பட்டிருந்த மிகப் பெரிய செல்வச் சேமிப்புக் குகையை வெற்றியாளர் பெறுவதாக இருந்தது. எல்லா இளவரசர்களும் வீரருக்குரிய வீராண்மையைப் பெற்றிருந்தனர். இதை அவுரங்கசீப்பும் மூரத் பக்ஷும் முனைப்பாக வெளிப்படுத்தினர். ஏராளமான பகைவர்களைப் படைத்துக் கொண்டிருந்த தாரா ஷிகோவின் கடுஞ்சினமும் பொறுக்க முடியாத அகந்தையும் அவரது இயற்கைத் திறமைகளை அழித்தன. இணங்கிப் போகிற மனிதரும், தளபதியாக ஓரளவு திறன் பெற்றிருந்தவருமான ஷூஜா சிற்றின்பங்களாலும், தக்க சமயத்தில் செயலாற்றாததாலும் அவரைத்திறமையற்றவராக்கியது. மூரத் பக்ஷ் உணர்ச்சி வசப்பட்டவரும் தன் மூப்புள்ளவரும், கொடுங்கோலருமாவார்; திறமை வாய்ந்தவர்களுள் மிக்க திறமை வாய்ந்தவர்; ஆனால் இவர் குடிகாரர், ஒழுக்கங் கெட்டவர், அறிவற்றறவர். அவுரங்கசீப்பின் குணவியல்பின் ஒழுங்கான திட்ட உருவரையை வரையத் தேவையில்லை. பழிபாவங்களுக்கஞ்சாத சதியாளராகவும் பரபரப்பற்ற அரசியல் வாதியாகவும் இவர் பெற்றிருந்த நிறைவான திறமை தொடருரையில் தெளிவாகத் தென்படுகிறது. பால்கிலும் காந்தாரத்திலும் இவர் அடைந்த தோல்விகள், படைத்தலைவனுக்குரிய திறமையை இழிவு படுத்தியதாகக் கருதப்பட்டாலும், இவரது அசைக்க முடியாத தன்னடக்க அமைதி வாரிசுரிமைப் போரின் காலத்தில் மிக நெருக்கடியான நிலையிலிருந்து இவரை வெற்றியுடன் வெளிவரும்படி செய்தது. எவ்விலையைக் கொடுத்தும் எக் கருவியைப் பயன்படுத்தியும் சிம்மாசனத்தைப் பெறுவதற்கான இவரது அசைக்க முடியாத உறுதி இவரை முன்னேறும்படி செய்து வெற்றியளித்தது.

**சமயப் பகைமை**

தாராஷுகோவின் வைதீகப் பற்றற்ற தன்மை போரின் ஒரு முக்கியக் கூறுகும். அவ்விளவரசர், சுன்னி (Sunni) சமயச் சடங்குகளைப் பின்பற்றும் ஹன்பி (Hanbi) வகுப்பைச் சார்ந்த உறுதியான முஸ்லீம் என்றும், இருந்த போதிலும் சூபிகளின் (Sufi) இயல்வனயாவும் இறையுருவே என்னும் கோட்பாட்டினைக் கொண்ட

அநுபூதி நெறியை (Pantheistic) தனக்குள் மிக ஆழமாகப் பதிய வைத்துக்கொண்டிருந்தார். இந்து தத்துவ ஞானிகளுடனும் இவர் தொடர்பு கொண்டு உபநிடதங்களின் பாரசீக மொழி பெயர்ப்பு ஒன்றை இயற்றுவதில் பங்கெடுத்துக் கொள்ளும் அளவிற்கும் சென்றார். உபநிடதங்கள் குர்ரானின் (Quran) முந்திய திருவெளிப்பாட்டும் என்றும் இவர் அறிவுறுத்தினர்.[1] இவர் கிறித்துவ சமயத்தைத் தழுவும் அளவிற்கு வந்துகொண்டிருந்தார் என்று சிலர் கருதும்படி இவர் தந்தை புஸியோ (Fr. Buseo) என்பவருடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார் இஸ்லாமிடம் அவ்வித மனப்பேதம் கொண்டிருந்தது அவுரங்கசீப்பிற்கு வெறுப்புண்டாக்கியது. இவருடைய ஆன்மீகக் குணவியல்மீது எத்தீர்ப்பைக் கொண்டாலும் இவர் உண்மையில் ஒரு வைதீகப்பற்றுடைய சுன்னி முஸ்லீமாவார். இவர் தம் மூத்த சகோதரன் தொல்லை தரும் சமய நம்பிக்கையற்றவர் என்றும் சாவதற்கே தகுதிபெற்றவர் என்றும் கருதினர். ஷியா மதத்தைப்பின்பற்றிய ஷுஜாவும் அதுபோன்ற சமயத்தை மறைமுகமாகப் பின் பற்றினரென்று கூறப்பட்டவரான முரத் பக்ஷும் தாரா ஷுக்கோவின் தளர்ச்சியுற்ற கருத்துக்களுக்கு எதிர்ப்புக் காட்டுவதில் அவுரங்கசீப்புடன் ஒன்றுபட்டிருந்தார். சமயவெறியைத் தூண்டிவிடுவோர் தம் நலன்களை முன்னேற்றிக் கொள்வதில் மகிழ்ச்சி பெற்றனர். இராஜபுத்திரர்கள் தாரா ஷுகோவின் முக்கிய ஆதாரவாளர்களாவர்; மார்வார் (Marwar), ஜோத்பூரியைச் (Jodhpur) சார்ந்த ஜஸ்வந்சிங் மானக்கேடான முறையில் வஞ்சகம் புரியாது நடந்துகொண்டிருந்திருப்பாராயின் மூத்த இளவரசர் ஒருவேளை வெற்றி பெற்றிருக்கக்கூடும்.

### அவுரங்கசீப்பின் கிளர்ச்சி

1657ஆம் ஆண்டின் இலையுதிர் காலத்தில் கணக்கற்ற சூழ்ச்சிகளும் மறு சூழ்ச்சிகளும் நடந்துகொண்டிருந்தன. ஓரளவு உடல் நலம் பெற்றிருந்த ஷாஜஹான் தன் மூத்த மகனின் வாரிசுரிமையை நிலைநாட்டுவதற்கும் முடிந்தால் உள்நாட்டுப் போரைத் தவிர்ப்பதற்கும் முயன்றார். அவுரங்கசீப் காலத்திற்கேற்ப எப்பொழுதும் நடந்துகொண்டு வெளிப்படையாகக் கிளர்ச்சி செய்யும் பொறுப்பிலிருந்து தப்பித்துக்கொள்ளப் பாடுபட்டார். தக்காணத்தில் தான் பெற்ற இராணுவ வெற்றிகளின் பலன்களைப் பெறுவதற்கு இவர் ஆசைப்பட்டார்; ஆனாலும் அம்முயற்சியில்

[1] இவர் இயற்றிய நூல்களின் பட்டியலுக்காக 'Dara Shikoh as an author' (T. P. H. S. Vol II pp. 21 33) என்ற கட்டுரையைப் பார்க்க; Blochman in T.A.S.B. Part I 1870, pp. 273-79 ஷுகோ (Shikoh) ஷிகோ (Shikoh) என்ற இரு பெயர்களும் சரியானவைகளே,

தோல்வியுற்று வடக்கில் தம் தந்தையுடனும் சகோதரர்களுடனும் நடைபெற்றுக்கொண்டிருந்த போரில் தம் முழு கவனத்தையும் செலுத்துமாறு வற்புறுத்தப்பட்டார். ஷுஜாவும் முரத்பக்ஷும் பேரரசிற்குரிய பட்டங்களை மேற்கொண்டும் தங்கள் பெயரிலேயே நாணயங்களை அச்சிட்டும் இவரை நிர்ப்பந்தப் படுத்தினார்கள். தம் தந்தையின் உடல்நலனற்ற நிலைபற்றிய தகவல் எட்டியவுடன் முதல் முதலாக ஷுஜா அப்பொழுது வங்காளத்தின் தலைநகரான ராஜ்மஹால் (Rajmahal) என்ற இடத்தில் 1657ஆம் ஆண்டின் இலையுதிர் காலத்தில் தமக்குத் தாமே முடிசூட்டிக்கொண்டார். தம் கூட்டுறவினரான அவுரங்கசீப்பின் யோசனையையும் புறக் கணித்து, முரத்பக்ஷ் டிசம்பர் மாதம் 5ஆம் நாள் அதேபோன்ற செயலில் ஈடுபட்டார். அவுரங்கசீப் மிக்க விழிப்புடன் நடந்து கொள்ள விரும்பினார். அக்டோபர் மாத இறுதியில் முன்னெச் சரிக்கையாக நர்பதாவில் போய்க்கொண்டிருந்த படகுகளையெல் லாம் கைப்பற்றி, தக்காணத்தில் நிகழ்ந்துகொண்டிருந்த நிகழ்ச்சி களைப்பற்றித் தம் தகப்பனுருக்கும் தமையனுக்கும் மறைத்து வைத்ததுமன்றி இந்துஸ்தானத்திற்குச் செல்வதற்கான வழிகளை வகுத்துக்கொண்டார். டிசம்பர் மாதத்தின் பிற்பகுதியில் மிர்ஜும்லாவை அரசவைக்கு வரும்படி கடுமையாகக் கட்டளையிட் டார். தம் கூட்டாளியைச் சிறைப்படுத்தி அவருடைய சொத் தைப் பறித்துக்கொண்டு அவுரங்கசீப் அச்செயலைத் தடுத்தார். ஒருவேளை மிர்ஜும்லா தாம் சிறைப்படுவதற்கு உடந்தையாக யிருந்திருப்பார் எனச் சூழ்நிலைகள் காட்டுகின்றன. நிச்சயமாக அவர் அதற்காகக் கோபங் கொள்ளவில்லை; விடுதலை பெற்றதும் தம் கூட்டாளிகளுக்கு நீடித்து உதவியளிக்கப் பின்வாங்கவு மில்லை. அவுரங்கசீப் இங்ஙனம் ஒரு கிளர்ச்சிக்காரர் ஆனதால் காலத்திற்கேற்ப நடந்துகொள்ளும் கொள்கையை நீடித்துப்பின் பற்ற முடியவில்லை. மிர்ஜும்லாவின் சிறப்பு வாய்ந்த பீரங்கிப் படை மிக்க பயனுள்ளதாக இருந்தது 1658ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அவுரங்கசீப் பட்டங்களையும் உயர்பதவிகளையும் அளித்துப் பேரரச உரிமைகளைக் கொண்டாடினார், அவர் ஏப்ரல் மாதம் 3ஆம் தேதியன்று நர்மதையை எதிர்ப்பின்றிக் கடந்து உஜ்ஜெய்னின் (Ujjain) சுற்றுப்புறத்திலுள்ள மாளவத்தில் இருந்த முரத்தின் படைகளுடன் சேர்ந்துகொண்டார். அச்சம யத்தில் அவுரங்கசீப்பிற்கும் முரத் பக்ஷிற்கும் ஏற்பட்ட உடன் படிக்கையின்படி பேரரசு துண்டாடப்பட்டு, முரத் பஞ்சாப், காபூல், காஷ்மீர் சிந்து ஆகியவற்றையும் அவுரங்கசீப் மீதமிருப்ப தையும் பெறவேண்டுமென்றிருந்தது. இவ்வுடன்படிக்கை மதிப் பார்வத்துடன் எழுதப்பட்டிருந்தது. ஷுஜாவுக்காக எதுவும் ஒதுக்கப்படவில்லை. தாம் முரத்பக்ஷையே பேரரசராக்க

விரும்பியதாக அவுரங்கசீப் சிறிது காலத்திற்குப்பின் நடித்துக் கொண்டிருந்தார்போலும். ஆனாலும் போர் தொடங்கியபொழுது பிரிவினைக் கொள்கை முறையாக ஒப்புக்கொள்ளப்பட்டது.

## தார்மத்போர் (Dharmat), 1658 ஏப்ரல் மாதம் பதினைந்தாம் நாள்

கிளர்ச்சி செய்யும் தம் மைந்தர்களைக் கூடுமானால் கொல்லாமல் விடுவிக்க வேண்டுமென்று ஷாஜஹான் ஆணையிட்டிருந்தமையால் ஆட்சி புரியும் அரசவமிசத்தைச் சேர்ந்த இளவரசர்களை எதிர்ப்பதற்கான தளபதிகளைத் தேர்ந்தெடுப்பதில் இவர் மிக்க இன்னலை அனுபவிக்கவேண்டியிருந்தது. தார்மத்தில் பேரரசப் படைக்குத் தலைமை தாங்குவதற்காகத் தாரா ஷுகோவின் மூத்த மகனை சுலைமான் ஷிகோ கிடைக்கக்கூடியவராக இருந்தார். ஷுஜாவை எதிர்க்க இவர் அனுப்பப்பட்டார். மார்வாரில் ராஜா ஜஸ்வந்த்சிங்கும் காசிம்கானும் அவுரங்கசீப்பையும் மூரத்தையும் நிறுத்துவதற்கான பொறுப்பை ஆற்றும்படி வற்புறுத்தப்பட்டார்கள். எண்ணிக்கையில் கிட்டத்தட்ட சமமாக இருந்த உஜ்ஜெய்னுக்குத் தென்மேற்கில் 'பதினான்கு மைலுக்கப்பாலுள்ள தார்மத் என்ற இடத்தில் 1658ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதினைந்தாம் நாள் எதிர்ப்படைகள் திரண்டதனால் பேரரசப் படைகள் அறவே முறியடிக்கப்பட்டன. பிளவுபட்ட படைகளும், இராசபுத்திரர்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையில் இருந்த பொறாமை உணர்ச்சியும், ஓரளவு சரியான களத்தைத் தேர்ந்தெடுக்காததும், ராஜா தவறான சூழ்ச்சிகளை மேற்கொண்டதும் இவரின் பேரழிவிற்குக் காரணங்களாயிருந்தன. தன் தலைவரின் செயல் நோக்கிற்கு காசிம்கான் சரியாக உதவவில்லை. வீரமிக்க இராசபுத்திர இனங்கள் பெருஞ் சேதமடைந்தன.

## சமுகர் போர், 1658 (Battle of Samugarh) மே மாதம் 29ஆம் தேதி

கிளர்ச்சி இளவரசர்கள் முன்னேறிக் கைவிடப்பட்டிருந்த கடவுத்துறை வழியாகச் சாம்பல் நதியைக் கடந்தனர். சிறப்பு மிக்க ஆற்றல் வாய்ந்த படையொன்றுக்கு ஆக்ராவில் இருந்து தலைமை தாங்கினார். கிளர்ச்சிக்காரர்களை ஆக்ரா அரணுக்கு எட்டுமைல் தூரத்திலிருந்த சமூகர் அல்லது சம்பூகர் என்ற இடத்தில் பேரரசப் படை சந்தித்தது. கடுமையாகக் கோடை வெயிலில் மே மாதம் 29ஆம் நாள் நடந்த போராட்டம் விசையாற்றலுடன் நடந்தது. இராசபுத்திரர்கள் சரிவர நடத்தப்படவில்லையாயினும் மீண்டும் தங்களின் மரபுப்படி வீரத்துடன் போர் புரிந்தனர். சரிசமமான ஆற்றலை அவுரங்கசீப்பும் மூரத்பக்ஷும் வெளிப்படுத்தினர். இளைய இளவரசருக்கு முகத்தில் மூன்று காயங்கள் ஏற்பட்டன. அவருடைய யானையின் அம்பாரிமீது

அம்புகள் சராமாரியாகப் பாய்ந்தன. பேரரசப் படைகள் மிகக் கடினமான இடருக்குள்ளாயின. எதிர்ப் பீரங்கிகள் தாராஷுகோவின் யானையின்மீதே கண்ணும் கருத்துமாய் இருந்ததால் அது நெருங்கி வந்துகொண்டிருக்கும் பேராபத்துக்குட்பட்டிருந்தது. இதனால், ஏற்கெனவே அரசராக நியமிக்கப்பட்டிருந்தவர் யானையிலிருந்து இறங்கிக் குதிரைமேல் ஏறிக்கொள்ள வேண்டியிருந்தது. அச்செயல் போரின் போக்கை முடிவு செய்தது. காலியாக இருந்த அம்பாரியைக் கண்ட இவரின் எஞ்சிய படைகள் கலைந்தன. தம்மைச் சேர்ந்த சிலருடன் தாராஷுகோ ஆக்ராவிற்கு ஓட்டம் பிடித்தார். அவருடைய பாசறையும் பீரங்கிகளும் அவர் வைத்திருந்த பொருள்கள் அனைத்தும் வெற்றியாளர்களிடம் சிக்கின. அவருடைய தோல்விக்குக் காரணமான அவர் யானைமீதிருந்து இறங்கியது, அவர் தளபதிகளில் ஒருவரான கலிலுல்லாகான் என்பவரின் வஞ்சகமான யோசனைதான் என்று சில குறிப்புகள் கூறுகின்றன. ஆனாலும் பேரரசத் தளபதி செய்த சூழ்ச்சித் தவறுகள் பேரழிவை விளக்கப் போதுமானவை. இப்போர் வாரிசுரிமைப் போரை முடிவு செய்தது. அப்பொழுது இழந்த இலக்கை (குறிக்கோளை) மீண்டும் பெறத் தாராஷுகோவோ, அவருடைய மகன் சுலைமான் ஷுகோவோ ஷுஜாவோ, மூரத்பக்ஷோ பின் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. போரின் ஒவ்வொரு கட்டத்திலும் அவுரங்கசீப்பே இளவரசர்களுள் மிக்க திறமை வாய்ந்தவராகத் தென்பட்டார். இரண்டாண்டுவரை நீடித்திருந்த இப்போர் 1660ஆம் ஆண்டு மே மாதம்வரை முடிவடையவில்லை. அந்நாளில் ஷுஜா தம் துயர்மிக்க வாழ்க்கை முடிவை அடைந்தார்.

### ஷாஜஹான், மூரத்பக்ஷ் ஆகியவர்களின் முடிவு

அவுரங்கசீப் காலத்தை வீணாக்கவில்லை. ஆக்ரா அரணை அதனுடைய செல்வங்களுடன் இவர் ஜூன் மாதம் 5ஆம் நாள் கைப்பற்றி, தம் தகப்பனாரை ஆயுள் கைதியாக சிறைவைத்தார் தந்தையும் மகனும் பின் சந்திக்கவே இல்லை வெளிப்படையாகக் கிளர்ச்சி செய்ய மூரத்பக்ஷ் துணிச்சலுடன் முயன்றார்; ரூப்நகரில் பாசறையை அமைத்துத் தங்கி இருந்தபொழுது ஜூன் மாதம் 25ஆம் தேதி பழிபாவங்களுக்கஞ்சாத தம் சகோதரனின் வலையில் வீழும் அளவிற்கு மூடத்தனமாக இவர் நடந்துகொண்டார். இவர் முதலில் தில்லியிலுள்ள சலீம்கரிலும் (Salimgarh) பிறகு குவாலியரிலும் சிறைவைக்கப்பட்டு, 1661-ல் பின் குறிப்பிடப்பட்ட இடத்தில் தூக்கிலிடப்பட்டார். தம் பலியாட்களைக் கூடுமானால் சட்டமுறைப்படி கொல்லுவதை இங்கிலாந்தின் எட்டாம் ஹென்றி பின்பற்றியதைப்போல் தாமும் செய்ய விரும்பிய அவுரங்கசீப்,

1657-ல் குஜராத்தில் மூரத்பக்ஷால் கொல்லப்பட்ட அலி நகி (Ali Naghi) என்ற பிரதம மந்திரியின் ஒரு மகனைக் குரானின் சட்டப்படி பழிக்குப்பழி வாங்கிக்கொள்ளும்படி தூண்டினர். காசி (Qazi) ஒருவரால் விசாரிக்கப்பட்டு மரண தண்டனை பெறத் தகுதி பெற்றவர் என்று அறிவித்துச் சிறையிலேயே கொல்லப் பட்டார்.

## ஷுஜா, இளவரசர் முகம்மது சுல்தான் ஆகியவர்களின் கதி

ஐரோப்பிய மன்னர்கள் கொண்டாடிய முடிசூட்டு விழா விற்குச் சமமான ஒரு வகை விழாவை அவுரங்கசீப் ஜூலை மாதம் 21ஆம் தேதி கொண்டாடினாலும், தம்முடைய பெயரை 'குத்பா' (Kutba) ஆணைத் தொழுகையில் சேர்ப்பதிலிருந்தும் நாணயங்களை அச்சிடுவதிலிருந்தும் இவர் விலகி நின்றார். தம் சக்திகளையெல் லாம் தாராஷுகோவைப் பின் தொடர்ந்து செல்வதில் ஈடுபடுத் தினார். தாராஷுகோ தில்லி. லாகூர் வழியாக மூல்தான்வரை அவுரங்கசீப்பால் துரத்தப்பட்டார். 1658, பிப்ரவரி மாதத்தில் வாரணசிக்கு அருகிலிருந்த பஹதூர்பூர் என்ற இடத்தில் சுலை மான் ஷுகோ, ஷுஜாவைத் தோற்கடித்தார், இருந்தபோதிலும் தம் தந்தைக்கு உதவியளிக்க முடியாத அளவிற்கு இவர் தொலை வில் இருந்தார். ஆயுதப் படையில் வலிமை பெற்றிருந்தவரும் பெரும் கப்பற்படையைப் பெற்றிருந்தவருமான ஷுஜா தம் தோல்வியிலிருந்து மீட்சி பெற்று இலையுதிர் காலத்தில் வெற்றிக் கான உயர் நம்பிக்கைகளைப் பெற்றிருந்தார். ஆனாலும் ஃபதேபூர் மாவட்டத்திலிருந்த காஜ்வா Khajwah) என்ற இடத்தில் 1659, ஜனவரி மாதம் 7ஆம் நாள் இவருடைய படையொன்று அவுரங்க சீப்பின் தலைமையில் வந்த படையால் விரட்டியடிக்கப்பட்டது. தம் பகைவரைத் தோற்கடிப்பதற்கான வாய்ப்பை ஷுஜா மீண்டும் பெறவில்லை. இவருடைய படைக்கு ஐந்து பங்கு பெரியதாயிருந்த படை ஒன்றுடன் மிர்ஜும்லா 1660, மே மாதத்தில் இரக்கமின்றி இளவரசரைப் பின் தொடர்ந்து வங்கா ளத்தைக் கடந்து டாக்காவுக்கும் அங்கிருந்து அரகான் எல்லைக்கும் துரத்தினர். இவரும் இவருடைய குடும்பத்தினரும் அரகானியர் களால் படுகொலை செய்யப்பட்டனர். ஆனால் உண்மையான விபரங்கள் தெரியவில்லை; ஷுஜா இன்னும் உயிருடன் இருக்கிறார் என்ற வதந்திகள் பல ஆண்டு நடமாடிக் கொண்டிருந்தன.

அவுரங்கசீப்பின் மூத்த மகனான இளவரசர் முகம்மது சுல் தான் மீர்ஜும்லாவுடனான நட்பை முறித்துக்கொண்டு, சிறிது காலம் மூடத்தனமாக ஷுஜாவுடன் சேர்ந்துகொண்டு அவ ருடைய மகளை மணந்துகொண்டார். இதற்காக இவருக்கு ஆயுள்

தண்டனை கொடுக்கப்பட்டது. பின் 1676 அல்லது 1677 இவர் மறைமுகமாக தூக்கிலிடப்பட்டார்.

### தாராஷுகோவின் மைந்தர் கதி

சுலைமான் ஷுகோ, 1658, ஆகஸ்ட் மாதத்தில் கர்வால் (Garhwal) குன்றுப் பகுதிகளில் தஞ்சம் புகுமாறு வற்புறுத்தப் பட்டு, ஸ்ரீநகர் இளவரசரின் நாட்டில் அன்புடன் வரவேற்கப் பட்டார். இந்நாட்டைக் காஷ்மீரில் இதே பேரைக் கொண்ட நகரோடு குழப்பிக் கொள்ளக்கூடாது. துரத்தப்பட்ட தம் விருந் தாளியுடன் அரசர் நேர்மைமிக்க பற்றுடன் நடந்துகொண்டார். அதனால் அவருடைய மகன் பேரரசு நெருக்கத்திற்கு இணங்கி 1660-ல் டிசம்பர் மாதத்தில் இளவரசரைக் காட்டிக் கொடுத்து விட்டார். மிக்க அழகான அவ்விளவரசர் சங்கிலியால் பிணைக்கப் பட்டுத் தம் சிறியதந்தை முன் கொண்டு வரப்பட்டார். கைதிக்கு மெதுவாகப் பயனளிக்கும் விஷம் கொடுக்கப்பட்டது. அல்லது அபின் கசகசாச் செடிகளின் மலர்ச்சாறு கொடுக்கப்பட்டது. கைதி துன்புறுத்தப்படமாட்டார் என்று சிற்றப்பன் மதிப்பார்வத் துடன் வாக்குறுதியளித்தார். ஆனால் இவ்வாக்குறுதி மதிக்கப் படவில்லை. சிறைச்சாலையில் சுலைமான் ஷுகோவின் உடலும் உள்ளமும் நாள்தோறும் படிப்படியாக சீர்குலைக்கப்பட்டன. அவருடைய சிறைக் காவலர்கள் அவரை 1662-ல் மே மாதத்தில் கொன்றனர்.

இவருடைய தம்பியான சிபிர் ஷுகோ (Sipir Shiko) உயி ருடன் வாழவிடப்பட்டு, சில ஆண்டுகளுக்குப்பின் அவுரங்கசீப் பின் மூன்றும் மகளான தம் ஒன்றுவிட்ட சகோதரியை மணந்து கொண்டார். அதேபோன்று முரத்பக்ஷின் மகனும் நடத்தப் பட்டார். இவர் பேரரசின் ஐந்தாவது மகளை மணந்துகொண் டார். அவுரங்கசீப், தம் சிம்மாசனத்தைப் பெறுவதற்காக எவ் விதக் கொடுமையையும் இழைப்பதிலிருந்து பின் வாங்காவிடினும், வேறுபாடற்ற, தேவையற்ற, இரத்தம் சிந்துவதை விரும்பவில்லை. தம் அதிகாரம் தம் உடன் பிறந்தவர்களின் மைந்தர்களால் பாதிக்கப்படமாட்டாது என்பதை உறுதி செய்து கொண்டதும் இளைஞர்களை வாழவிட இவர் விரும்பினர். இவர்களால் வந்த ஆபத்துக்கள் தம் மைந்தர்களிடமிருந்து வந்தவையாகும்.

### தாராஷுகோ ஓடிப்போதலும் முறியடிக்கப்படுதலும்

தாராஷுகோவின் துயரார்ந்த கதையை இன்னும் சொல்லி முடிக்கவேண்டியிருக்கிறது. நாம் இவரை 1657, செப்டம்பரில் முல்தானில் விட்டு வந்தோம். அப்பொழுது அவுரங்கசீப்

ஷுஜாவை ஒழிக்கவேண்டியிருந்தது; அதே சமயத்தில் இவருடைய அதிகாரிகள் சோர்வில்லா ஆற்றலுடன் தாராஷுகோவைப் பின் தொடர்ந்தனர். எந்த முயற்சியிலும் இளவரசர் வெற்றிபெற முடியாதென்பது உறுதியாயிற்று. இளவரசர் நாளுக்குநாள் குறைந்துகொண்டு வந்த படையுடன் சிந்து நதி வழியாக ஓடிக்கொண்டிருந்தார். பக்கார் (Bakkhar) என்ற உறுதியான அரணிலும் இவர் தங்கவில்லை. அவ்விடத்தில் இவருடைய நன்றிமிக்க பேடி ஒருவன் இவர் செல்வங்களையும் பெண்களில் சிலரையும் காத்து வந்தான். அத்தறுவாயில், நேர்மையற்ற சந்தேகங்களுக்காளாகிய இவர் பற்றுமிக்க தம் தலைவர்களுள் ஒருவரான தாவூத்கானைப் பதவியிலிருந்து நீக்கினர். நன்றிகெட்ட தம் தலைவரைக் கைவிடவேண்டிக் கட்டாயப் படுத்தப்பட்ட தாவுத்ககன் அவுரங்கசீப்பின் ஊழியத்தில் புகுந்தார். அவுரங்கசீப் இவரை வரவேற்று உயர்பதவியில் அமர்த்தினர்.

மிக்க தயக்கத்துடன் தாராஷுகோ சிவான் (Sihwan) என்ற இடுக்கு வழிக்குள் புகுந்து தட்டா (Thatta) என்ற இடத்திற்கு வந்து சேர்ந்தார். அங்கிருந்து துரத்தப்பட்ட இவர் சிந்து நதி முகத்துவாரத்தையும் பயங்கர ரண் (Rana) பகுதியைக் கடந்து கட்சை (Cutch) அடைந்தார. இங்கே இவர் மிக்க அன்புடன் வரவேற்கப்பெற்றுர். அதனால் அங்கே தங்கியிருக்க இவருக்கு துணிவில்லாததால் கத்தியவார், குஜராத் ஆகியவற்றுள் நுழையத் தொடங்கினர். ஆமதாபாத்தின் கவர்னரான ஷாநவாஸ் கான் (Shah Nawaz Khan) இவருக்கு நண்பரானர். நகரத்தின் வாயில்களை இவருக்காகத் திறந்து இவர் சூரத்தைக் கைப்பற்றும்படி செய்தார். அந்நிலையில் தீவினைப்பயன்களுக்குள்ளான இளவரசர், மாபெரும் படையொன்றைத் திரட்டியிருந்தால் வெற்றி பெற்றிருக்கக்கூடும். தக்காணத்திலிருந்து விலகிச் செல்லவேண்டுமென்று ஆலோசகர்கள் அளித்த அறிவுரையை இவர் பின்பற்றியிருப்பாரேயானல் இவர் தம் சகோதரர்களுக்கு பயங்கரப் போட்டியாளராகியிருப்பார். தீவினைப் பயனுக, ஷுஜா மார்வாரின் வஞ்சக அரசரான ஜஸ்வந்த்சிங்குடன் கூட்டுறவு செய்து கொள்ளலாம் என்ற ஏமாற்றும் விருப்பங்கள், இராசபுத்திரர்களின் உதவியை நம்பி ஆஜ்மீருக்கு முன்னேற இவரை ஊக்குவித்தன. தம் குறிக்கோள் ஷாஜஹானை விடுதலை செய்வதேயன்றித் தாமே அரசபதவியை ஏற்பதற்கன்று என்று அறிவித்தார். இளவரசரின் தலைமையின்கீழ் தம் ரத்தர்களைக் (Rathors) கொண்டுவந்து நிறுத்துவதாக ஜஸ்வந்த்சிங் வாக்களித்தார்; ஆனல் அவுரங்கசீப்பின் தீநெறி ஏய்ப்புகளுக்கும் தங்கத்திற்கும்

மயங்கித் தாம் (ஜஸ்த்வந்த்சிங்) கொடுத்த வாக்குறுதியை மீறி நடந்தார்.

எதிர்பார்த்த ரத்தர் (Rathors) படையுமின்றிச் சண்டை செய்ய வற்புறுத்தப்பட்டபொழுது தாராஷுகோ ஆஜ்மீருக்குத் தெற்கில் தெராய் (Deorai) கணவாயில், சிறப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுதியான இடத்தில் தம்மை வலிதாக்கிக்கொண்டு நிலையைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார் போர் மூன்று நாட்களாக, 1659, ஏப்ரல் மாதம் 12–14ஆம் நாட்கள் வரை, மிக மும்முரமாக நடந்தது. இளவரசர் தப்பியோட வேண்டியிருந்தது. பேரரச ஊழியத்தில் இருந்த மலை வீரர்கள் இவருடைய நிலையை மாற்றினர்.

### இளவரசர் காட்டிக் கொடுக்கப்படுதல்

மகிழ்ச்சியற்ற தாராஷுகோ மீண்டும் ஓட ஆரம்பித்தார் இராஜபுதத்தின் குறுக்கே விரைந்து மீண்டு இவர் கட்சை அடைந்து மறுபடியும் நீரற்ற ரன்னைக் கடந்து சென்று காந்தாரத்தை அடைந்து பாரசீகத்தில் அடைக்கலம் புகலாம் என்ற நம்பிக்கையுடன் சிந்துக்குள் நுழைந்தார். மிக மூடத்தனமாகவும் மிக அவசரமான கண்டிப்புகளைப் புறக்கணித்தும் போலன் கணவாய்க்குக் கிழக்கில் எட்டுமைல் தூரத்திலிருந்த இடமான தாதரின் (Dador) தலைவரான ஜீவன்கான் பற்றற்ற ஆப்கானியரிடம் தம்மை ஒப்படைத்தார். வஞ்சகமிக்க ஒப்புநர் உடனே தம் விருந்தினரை ஜூன் 9ஆம் தேதியன்று காட்டிக் கொடுத்துவிட்டார். தம் இழிவுச் செயலின் பரிசை இத் துரோகி நீண்டு அனுபவிக்கவில்லை என்பது ஓரளவு திருப்தியளிப்பதாகும். அவனும் அவனுடைய கூட்டாளிகளும் அவுரங்கசீப்பின் கட்டளைப்படி சிர் ஹிந்துக்கு அருகிலுள்ள மைதானத்தில் கல்லால் அடிக்கப்பட்டு கொல்லப்பட்டனர். அப்பிணங்களைக் காண்பதில் மிக்க மகிழ்ச்சியுற்ற மானூக்கி (Manucci) தன்னுடன் இருந்த முஸ்லீம்கள் 'ஜீவன்கானின் உடலின்மீது ஆயிரம் சாபங்களையிட்டனர்'. என்று குறிப்பிடுகிறார். அரச குடும்பத்தினர் எவரையும் கொன்றவர்களை அவுரங்கசீப் விழிப்புடன் அழித்தார் என்று அதே ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார்.

### நதிராபேகத்தின் மரணம்

இச்சமயத்தில் தாரா ஷுகோவின் ஒன்றுவிட்ட சகோதரியும், தம் இளம் வயதிலிருந்தே தமக்கு மனைவியுமானவளுமான, தம் மைந்தர்களின் தாயுமானவளுமான நதிராபேகத்தின் மறைவினால் இவர் தம் புத்தி சுவாதீனத்தை இழந்தது இவரது விடாப்பிடி

மூடத்தனத்திற்கு ஒரு காரணமாகும், தம்முடைய பயங்கரச் சுற்றுப்பயணங்களிலும், வெய்யிலிலும், பசியிலும், தாகத்திலும், எவ்வகையான துயரிலும் அன்பு நிறைந்த அம் மாது தன் கணவருக்குத் துணை நின்றார். அவர்கள் தாதரை அணுகிக் கொண்டிருக்கும் போது அவர் மிகச் சோர்வுற்று வலிமை குன்றிக்காணப் பட்டார். ஜீவன்கானின் விருந்தோம்பலை நம்பியபொழுது தான் இருப்பது அல்லது இறப்பது என்பதைப்பற்றி இளவரசன் ஒரு சிறிதேனும் கவலைப்படவில்லை. 'மரணம் அவருடைய கண்களில் சித்திரமாக நின்றது ; எங்கும் அவர் அழிவையே கண்டார். அறிவிழந்த இவர் தம் விவகாரங்களைப் பற்றிப் பொருட்படுத்தவே இல்லை.'

பல பெண்களை மணம் புரிந்து கொள்ளும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தாலும், பல பெண்களுடன் தடையின்றித் தொடர்பு கொண்டிருந்தாலும், மனைவிக்குரிய காதல் உணர்ச்சியைத் தீவிரமாக உணரும் தன்மையைத் தைமூரிய இளவரசர்கள் அடிக்கடி வெளிப்படுத்தினர். அக்பரின் விசித்திரத்தன்மை அதுபோன்ற ஆழ்ந்த உணர்ச்சியால் அமைதி குலைந்ததாகத் தெரியவில்லை. பெண்களிடம் அவர் கொண்டிருந்தபோக்கு பெரும்பாலும் நெப்போலியனின் போக்கைப் போன்றதாகும். ஆனால் ஒரு மனைவியைக் காதலிப்பதன் அருமையை ஜஹாங்கீர், ஷாஜஹான், தாரா ஷுகோ ஆகியவர்களும், அவுரங்கசீப்புங்கூட உணர்ந்திருந்தனர். இந்திய அலுவலக நூலகத்தில் (India Office Library) உள்ள படத் தொகுப்பு ஒன்று தாராஷுகோவின் துயரார்ந்த காதலுக்கு நினைவுச் சின்னமாகும். அதில் தன் கையாலேயே எழுதப்பட்ட எழுத்துப் பொறிப்பு ஒன்று அமைந்துள்ளது. 'இப்படத் தொகுப்பு பேரரசர் ஷாஜஹானின் மகனை இளவரசர் முகம்மது தாரா ஷுகோ 1051ஆம் ஆண்டில் (கி.பி. 1641–42) தன்னுடைய மிக நெருங்கிய நண்பருக்குக் கொடுத்த அன்பளிப்பாகும்.'[1]

### தாராஷுகோவைக் காட்டிக் கொடுத்தல்

இவ்வரலாற்றின் மீதிப் பகுதியை விரைவில் சொல்லி முடிக்கலாம். கைது செய்யப்பட்ட இளவரசர், இரு மகளிரோடும் சிபிர் ஷீகோ என்ற பதினன்கு வயதினையடைந்த சிறுவனை தன் இரண்டாம் மகனேடும் பகதூர்கான் என்பவரிடம் ஒப்படைக்கப்பட்டார். இவர்களைப் பகதூர்கான் தில்லிக்கு அழைத்து வந்தார். தம் சகோதரரைப் பிச்சைக்காரரைப்போல் உடுத்தி, அழுக்கடைந்த சிறிய பெண் யானையின் மீது இருத்தி தில்லியின்

[1] History of Fine Arts Page 458. Plates CXIX, CXX, CXXI.

வீதிகளில் சுற்றிக் கொணர்ந்து அவுரங்கசீப் தம் வெறுப்பை ஆற்றிக்கொண்டார். பிரான்குவா பெர்னியர் (Francois Berneir) என்ற சுற்றித்திரியும் ஃபிரெஞ்சு மருத்துவர் இத்துயர்மிக்க ஊர்வலத்தை நேரில் கண்டார்.

"மிகப்பெரிய அங்காடியின் நடுவில், நகரின் மிக்க நெருக்க மான பகுதிகள் ஒன்றில், குதிரையேறி, இரு வேலையாட்களுடனும், மிக நெருங்கிய நண்பர்களுடனும் நான் நின்றுகொண்டேன்; ஒவ்வொரு பகுதியிலிருந்தும்வரும் துயரமிக்க காதைத்துளைக்கும் கதறலை நான் கேட்டேன்; இளகிய மனமுடைய இந்திய மக்கள் ஏதோ ஒரு பேரிடர் தமக்கே ஏற்பட்டுவிட்டதுபோல் ஆண்களும் பெண்களும், குழந்தைகளும் புலம்பினர். துயரமிக்க தாராஷூ கோவிற்கருகில் கியோன்கான் (ஜீவன்கான்) குதிரைமேல் ஏறி வந்து கொண்டிருந்தான்; துரோகி முன் சென்றுகொண்டிருக்கும் பொழுது, வசை மொழிகளையும் வெறுப்பு நிறைந்த கூற்றுகளையும் வெளியிட்டது காதை அறவே செவிடாக்கியது. இகழ்ச்சிக்குரிய பட்டானியனின்மீது துறவிகளும் பல ஏழை மக்களும் கற்களை வீசினதை நான் பார்த்தேன்; ஆனாலும் ஒரு சிறிய சலனமும் ஏற்படவில்லை. அன்பிற்குரியவரும் இளகிய மனமுடையவரு மான தாராவை விடுதலை செய்ய எவரும் தம் வாளை உருவவில்லை", என்று அவர் குறிப்பிடுகிறார்.

## அவரைத் தூக்கிலிடல்

கைதியின் வாழ்க்கையை முடிவுசெய்ய சபை யொன்று கூடியது. அவர் இரத்தம் சிந்தவேண்டுமென்று அவருடைய சகோதரியான ரோஷனரா ஆரவாரம் செய்தாள். இயற்கைக்கு மாறாக இவள் வாதாடியதைச் சபையினர் பலர் ஆதரித்தனர். பெர்னியரின் புரவலரான தானிஷ்மந்கான் ஒருவர்தாம் மரண தண்டனையை எதிர்த்தார். சட்ட முறைப்படி செய்து முடிப்பதற் கான அவுரங்கசீப்பின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு அரசவை சமய நெறி வல்லவர்கள் தாராஷூகோ சமயப் பற்றற்ற வர் என முடிவு செய்து அவருக்கு மரண தண்டனை விதித்தனர். துரோகியான ஜீவன்கானுக்கு எதிராக ஆகஸ்டு மாதம் 30ஆம் தேதியன்று பொதுமக்கள் செய்த கலகம் ஒன்று தூக்கிலிடுவதை மேலும் தாமதிக்கக்கூடாது என அவுரங்கசீப்பை முடிவு செய்யத் தூண்டியது. அன்று இரவு மிருகத்தன்மை கொண்ட கொலை பாதகர்கள் தாராஷூகோவின் அரவணைப்பிலிருந்து சிபிர்ஷூ கோவை அகற்றிவிட்டு, வன்முறையான கைகலப்பிற்குப் பின் தாராஷூகோவின் தலையை வெட்டி வீழ்த்தினர். வீதிகளின் வழியே பிணம் மீண்டும் கொண்டு செல்லப்பட்டு ஹுமாயூனின்

கல்லறையின் கவின்மாடத்தூபியின் கீழிருந்த கல்லறை ஒன்றில் எவ்வித சமயச் சடங்குமின்றி அடக்கம் செய்யப்பட்டது.

## ஷாஜஹானின் சிறைப்பட்ட நிலையும் இறப்பும்

இதற்கிடையில் மிக்க விழிப்புடன் ஷாஜஹான் ஆக்ரா அரணில் சிறையில் அடைக்கப்பட்டுக் கொடுமை மிக்க அலி ஒருவன் தனிப் பொறுப்பில் வைக்கப்பட்டிருந்தார். பிடிபட்ட மன்னரைச் சிறிதுசிறிதாக இகழ்ச்சிகளுக்குள்ளாக்கி இயற்கைக்கு மாருகத் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டிருந்தான். சித்திரவதை செய்யக்கூடிய இதுபோன்ற மதிப்பிழப்புகள் இழைத்தமையும், அரணுக்குள் சிறைப்பட்ட நிலையும் தவிரக் கைதிக்கு உடலை ஒறுக்கும் இன்னல்கள் தரப்படவில்லை. காம மிக்க சுவைகளைத் தணிப்பதற்காகப் பெண் பணியாட்கள் அமர்த்தப்பட்டனர்; அவருடைய மகள் ஜஹானராவும் தம் தந்தையின் விருப்பங்களைக் கவனிக்கும் பொருட்டு அனுமதிக்கப் பெற்றிருந்தாள். 1666ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 22ஆம் நாள் வரை ஷாஜஹான் உயிரோடிருந்தார். அந் நாளில் தம் எழுபத்துநான்காம் வயதில் இவர் இயற்கையான மரணமடைந்தார். இவருடைய வாழ்நாளின் இறுதியில் உலக விவகாரங்களிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டும் சமயப் பயிற்சிகளில் தம் காலத்தைச் செலவிட்டுக்கொண்டும் இவர் மிக்க பற்றற்றவரானர்.

## ஷாஜஹானின் குண வியல்பு

தற்போதைய வரலாற்றறிஞருள் பலர், குறிப்பாக எலிபின்ஸ்டனைத் தவிர, வரம்புமீறிய உகந்த கண்ணேட்டத்தில் ஷாஜஹானை ஆராய்கின்றனர். இவருடைய அரசவையின் மாட்சிமை, இவருடைய பேரரசின் பரப்பு, செல்வம், இவரது ஆட்சிக் காலத்தில் நிலவிய ஓரளவு அமைதி, தாஜ் என்னும் இவருடைய தலைசிறந்த கட்டடக்கலைப் படைப்பின் நிகரற்ற அழகு ஆகியவைகள் எல்லாம் கலந்த இவரது வாழ்க்கை வரலாற்றறிஞர்களின் கண்களைக் கூசும்படி செய்தன. இவர்களுள் பலர் இவருடைய குற்றங்கள் பலவற்றைப்பற்றிக் குறைத்துப் பேசியும் இவர் பெற்றிருந்த பண்புகளைப் பெரியன வாக்கியும் உள்ளனர். மகன் என்ற முறையில் இவர் தம் கடமைகளை ஒழுங்காகச் செய்து முடிக்கவில்லை; பல ஆண்டு கிளர்ச்சி செய்து கொண்டிருந்தார். தாம் அரசுரிமை பெறுவதற்காகத் தம் மூத்த சகோதரன் குஸ்ருவுடன் தொடங்கி ஆண் இளைய உறவினர்களையெல்லாம் பூண்டோடழித்தார். தந்தை என்ற முறையில் இவர், முதல் மகனுக்கு எல்லைமீறிய ஒருதலைச்

சார்பினைத் தந்ததுமின்றித் தம் குடும்பத்தை அடக்கியாளும் ஆற்றலின்றி இருந்தார். தம் பதினறு குழந்தைகளுக்குத் தாயான மும்தாஜ்மஹாலின் மேல் தாம் கொண்டிருந்த முனைப் பான காதல் மனிதன் என்ற முறையில் இவர் பெற்றிருந்த குண வியல்பு ஒளிமிக்ககூறாகும். அவளுடைய வாழ்நாளில் இவர் தம் உணர்ச்சிகளை அடக்கி வைத்திருந்தார் போலும்; ஆனாலும் அவள் இவர் ஆட்சியின் தொடக்கத்திலேயே மரண மடைந்தாள் (1631). அதற்குப்பின் இவர் தம் வாழ்நாளில் மீதமிருந்த முப்பத்தைந்து ஆண்டுகளிலும் எல்லையற்ற இழி காமத்தால் தன்னையே இழிவு படுத்திக்கொண்டார் என்பதில் ஐயமில்லை. இராணுவத் தலைவராக இவர் திறமை பெற்றிருக்கவில்லை. காந்தாரத்தின் இழப்பும், அம் முக்கிய இடத்தை மீட்பதில் மும்முறை பெற்ற தோல்வியும் இவருடைய படையின் ஒழுங்கு, ஆணை ஆகியவற்றின் திருப்தியற்ற நிலையை உறுதிப்படுத்துகின்றன.

### ஷாஜஹானின் நீதி

இவரின் நீதி என்று சொல்லிக்கொள்ளப்பட்டதை இச்சகம் பேசுபவர்கள் வானளாவப் புகழ்ந்துள்ளனர். ஆனால் உறுதி யான நிகழ்ச்சிகளை ஆராய்வதில் அது கரடுமுரடாக இருந்தது என்பது தெளிவாகும். இழைக்கப்பட்ட அதிர்ச்சி தரும் தண்டனைகளை நேரில் காண்பதில் ஷாஜஹானும் தம் தந்தையைப் போலவே பயங்கர மகிழ்ச்சியடைந்தார். திருடர்கள் மன்னிக்கப் படவில்லையாம்.

### நிருவாகம்

பேரரசர் காட்டிய கடுமையை இவரது மாகாணப்பிரதிநிதி களும் பின்பற்றினர். வேறு பாடின்றிப் படுகொலை செய்யும் கொள்கையை மேற்கொண்டு குற்றங்களை ஒழிக்கும் முயற்சியால் திருப்தி கொண்டிருந்த இம் மாகாணப் பிரதிநிதிகள் அவற்றின் காரணங்களை ஆராயக் கனவிலும் நினைக்கவில்லை. கருத்தில் கொள்ளக்கூடிய, நுணுகிக் காண்பவர்களுள், மிக்க எழுச்சி யூட்டாதவரும் உண்மையைக் கூறுபவருமான பீடர் முண்டி (Peter Mundy), ஷாஜஹானின் ஆட்சியின் தொடக்கத்தில் 1630ஆம் ஆண்டிலிருந்து 1633ஆம் ஆண்டுவரை பாட்னுவுக்குச் சென்று திரும்பியபொழுது பாட்னுவின் சுற்றுப்புறம் பாதுகாப்பற்றி ருந்தது என்பதை உணர்ந்தார். ஏனென்றால், 'இந்நாடு, மற்றப் பகுதிகளைப் போலக் கிளர்ச்சியாளர்களாலும் திருடர்களாலும் நிறைந்திருந்தது.' பொதுவாக, 'பெரிய நகரங்களுக்கருகில் கணக் கற்ற' திருடர் கோபுரங்கள் (Chor-minars) அல்லது குற்றம் செய் தவர்களெனக் கருதப்பெற்றவர்களுடைய தலைகள் பொருத்தப்

பட்டிருந்த கல் தச்சுவேலைப்பாடமைந்த தூண்கள் காணப்பட்டன. கான்பூர் மாவட்டக்தில் ஓர் இடத்தில் அதுபோன்ற இருநூறு தூண்களைச் சுற்றிப்பயணி கண்டார். சில மாதங்களுக்குப்பின் இவர் திரும்பியபொழுது மேலும் அறுபது தூண்கள் சேர்க்கப் பட்டிருந்தன. சிறிது காலத்திலிலேயே அச்சிறு பகுதிக்குள் குறைந்தது எட்டாயிரம் பேர் படுகொலையுண்டனர் என்பது இவ் விருநூற்று அறுபது தூண்கள் குறிக்கின்றன.

இருந்தபோதிலும், ஜஹாங்கீரின் ஆட்சிக்காலத்தின் பிந்திய ஆண்டுகளில் அழிகேடடைந்து கொண்டிருந்த மன்சப்தாரி முறை யின் இயங்கு திறத்தைப் புதுப்பிக்கும் முயற்சியில் ஷாஜஹான் வெற்றிகண்டார். பிரபுக்களின் மன்சப்புகள் (Mansubs) எண்ணிக் கையில் அதிகமாவதைத் தடுக்க முடியாவிடினும், இவர்கள் பெற்ற ஊதியங்களை இவர் குறைத்தார்; படையின் குறிப்பிட்ட, உறுதி யான, பொறுப்புப்பங்கை அவர்களிடமிருந்து வலிந்து பெற்றார்.

**நாட்டின் நிலை**

நிருவாகத்தின் கடுமைக்கு மற்றப்பயணிகளும் சான்று கூறு கின்றனர். ஷாஜஹானின் ஆட்சிக் காலத்தின் இறுதியிலும் இவருக்குபின் வந்தவரின் ஆட்சிக்காலத்தின் முற்பகுதியிலும் பேரரசைச் சுற்றி பார்த்தவரும், அதில் தங்கியிருந்தவருமான பெர்னியர் (Berneir) சிறந்த பயிற்சி பெற்ற ஆழ்ந்து நோக்குகின்ற வராவார். ஆசியாவில் கற்றறிந்தவர்களுள் சாலச் சிறந்தவர் என்று பாரட்டப்பெற்ற அரசவைபிரபுவின் ஊதியத்தில் இவர் இருந்தார். மாணவன் என்ற முறையில் தாம் காண்பதில் மிக ஆழ்ந்த கருத்தை பெர்னியர் கொண்டிருந்தாலும் ஷாஜஹானுக் கும் அவுரங்கசீப்புக்கும் சார்பாகவோ எதிராகவோ இருக்கும் நிலையிலிருந்து இவர் விடுதலை பெற்றிருந்தார். முகலாயவமிசம் முடிவாக நிலை நாட்டபெற்று, ஈடு இணையற்ற செல்வவளம் பெற்று, அந்நிய ஆக்கிரமிப்புகளால் அமைதி குலையாது இருந்த காலமான முகலாய ஆட்சியின் ஒளிமிக்க காலத்துக்குரிய நாட்டின் உண்மை நிலையை இவர் எடுத்துக் காட்டுகிறார். இவரது நம்பிக்கையற்ற குறிப்புகள் குறிப்பாக மேல் மாகாணங்களை பற்றியவையாகுமெனத் தென்படுகின்றன. வங்காளத்தின் நில வளமும் வணிகமும் இவரது உணர்ச்சி மிக்க பாராட்டுதலைத் தூண்டின.

பெர்னியருடைய அவலக் கருத்து பதிவுகளை கீழ்க்கண்ட கட்டுரைபகுதிகள் சுற்றுபயணியின் அவலக் கருத்து பதிவிற்கு மேற்கோளாக அளிக்கலாம். தல அரசர்களின் கொடுங்

கோலாட்சியைப்பற்றிக் கூறிவிட்டு இவர் பின்வருமாறு வலியுறுத்திக் கூறுகிறார்.

வாழ்க்கைக்குத் தேவையானவற்றைக் குடியானவர்கள், கைவினைஞர்கள் ஆகியவர்களிடமிருந்து பறித்து, ஆழ்துயர் நிலையாலும் சோர்வாலும் இறக்கும் அளவிற்கு இவர்களுடைய கொடுங்கோலாட்சி கொடுமையானதாயிருந்தது. இக் கொடுங்கோலாட்சியின் விளைவாகத் துயருற்ற குடிமக்கள் குழந்தைகளை பெறவேயில்லை; அல்லது பெற்றிருந்தாலும் வறுமையின் கொடுமைகளைத் தாங்கிக் கொள்வதற்கும் இளமையில் இறப்பதற்குமே பிறந்தார்கள். இறுதியில் கனிவாக நடத்தபடலாம் என்ற நம்பிக்கையில் குடியானவர் தம் துயரமிக்க வீடுகளிலிருந்து அண்மையில் உள்ள அரசை நாடும்படி இக் கொடுங்கோலாட்சி வற்புறுத்தியது. அல்லது இவர்களை படையில் சேரும்படி செய்தது; இங்கே இவன் படைவீரனொருவனின் ஏவலாளனுனன். கட்டாயத்தின் பேரிலன்றி நிலம் பண்படுத்தப்படவில்லையாதலாலும் பள்ளங்களையும் கால்வாய்களையும் நீர்பாய்ச்சுவதற்காக பழுதுபார்ப்பதற்குத் தகுதி பெற்றவர்களையும் விரும்புகிறவர்களையும் காண முடியாததாலும், நாட்டின் நிலம் மோசமாக பண்படுத்தபட்டிருக்கிறது; பண்படுத்தப்படாத பெரும் பகுதி நீர்ப்பாசன வசதி இல்லாமையால் பயிரிடப்படாமல் கிடந்தது. புதிய வீடுகள் கட்டுவதற்கோ இடிந்து கொண்டிருக்கும் வீடுகளை பழுதுபார்ப்பதற்கோ மனிதர்கள் இல்லாததனுல் வீடுகளும் பாழடைந்த நிலையில் விட்டு வைக்கப் பட்டுள்ளன. (பக்கம் 226).

மிகப் பெரிய அரசவை ஒன்றின் பகட்டைப் பேணச் செலவுகளையும், குடிமக்களை அடக்கி ஆளுவதற்காகப் பேணப்பட்ட இராணுவத்தின் சம்பளத்தைக் கொடுக்கவும் ஏராளமான தொகைகளைச் செலவிட வேண்டியிருந்ததால் நாடு பாழாக்கப்பட்டிருக்கிறது. அடிக்கடி மக்களின் துயர்களை எடுத்துக் கூறுவது இயலாததாகும். மற்றவர்களுடைய நலனுக்காகப் பாடுபடக் குண்டாந்தடியாலும் சாட்டையாலும் குடிமக்கள் வற்புறுத்தப்பட்டனர். எல்லாவகைக் கொடூர நடத்தைகளால் வெறுப்புற்று இவர்கள் நடத்தும் கிளர்ச்சியோ, சண்டையோ இராணுவப் படையால் தடுக்கப்பட்டது. (பக்கம் 230).

இவ்வாறு அழிவும் பாழ்நிலையும் நாடெங்கும் பரவி நின்றன (பக்கம் 231).

இக் கவர்னர்களையும் திமரியாத்துகளையும் (Timariots) [ஜாகீர் தார்கள்], நிலவரியை வசூலிக்கப் பொறுப் பேற்றவர்களையும்

பற்றிக் கூறும் பொழுது பாரசீகர் ஒருவர் இவர்களை 'மணலி லிருந்து எண்ணெய் எடுப்பவர்கள்'. என்று பொருத்தமாக வருணிக்கிறார். பெண்கள், குழந்தைகள், அடிமைகள் உள்பட இவர்களுடைய அரக்கியர்களைப் பேண எவ்விதவருமானமும் போதவில்லை (பக்கம் 256.)

அரசாங்கத்தின் எல்லைமீறிய கோரிக்கைகளின் இது போன்ற வருணிப்பு அவுரங்கசீப் விடுத்த அரசாணைகளில் (Farmans) வலியுறுத்தப்படுகின்றது. இவைகளை சர்க்கார் என் பவர் 'முகலாய இந்தியாவைப் பற்றிய ஆராய்ச்சிகள்' (Studies in Mughal India) என்ற தம் நூலில் மொழி பெயர்த்துள்ளார். இது போன்ற அழிவும் கொடுங்கோலாட்சியும் 1644ஆம் ஆண்டிலிருந்து 1653ஆம் ஆண்டுவரை அவுரங்கசீப்பின் முதல் அரசப்பிரதிநிதிப் பதவிக்காலத்திற்கும் இரண்டாம் அரசப் பிரதிநிதி காலத்திற்கு மிடையிலிருந்த இடைக்காலத்தில் தக்காணத்தின் தலைவிதியாக இருந்தது. அக்காலத்து இரக்கமற்ற கவர்னரான கானிதௌரான் (Khan-i-Dauran) என்பவர் இறந்தபொழுது அவருடைய மரணம் தெய்வீக மீட்பு என்று கொண்டாடப்பெற்றது.

## முகலாயப் பேரரசின் உச்ச நிலை

ஷாஜஹானின் தனிப்பட்ட குணவியல்பைப்பற்றியோ, நிர்வா கத்தின் தகுதியைப்பற்றியோ எக்கருத்துக் கொள்ளப்பட்டாலும், இவருடைய ஆட்சிக் காலத்தில் முகலாயப் பேரரசும் வமிசமும் உச்சநிலை அடைந்திருந்தன என்பதில் சந்தேகம் இல்லை. முப்ப தாண்டு காலத்தில் (1628–58) பேரரசின் அதிகாரம் தீவிரமாக எதிர்க்கப்பட வில்லை. நாடும் அந்நியர்களால் தாக்கப்படவில்லை. காந்தாரத்தின் இழப்பும் அதை மீட்க மும்முறை செய்த முயற் சியின் தோல்வியும், இராணுவத் தகுதியற்றமையை வலியுறுத்திய போதிலும், பாரசீகர்களின் கர்வத்தை வளர்த்தபோதிலும், அந்நிகழ்ச்சிகள் இந்துஸ்தானத்தின்மீது எவ்வித பலனையும் விளை விக்கவில்லை. இந்தியாவில் பேரரசப் பொறுப்பைத் தாங்குவ தற்கு இராணுவப் படையின் வலிமை போதுமானதாக இருந்தது.

## கலை

கட்டடக்கலைத் துறையிலும் கலையின் மற்றத் தோற்றங் களிலும் முகலாய காலத்தின் மிக்க சிறப்பு வாய்ந்த வேலைப் பாடுகள் ஷாஜஹானின் ஆட்சிக் காலத்தைச் சார்ந்தவை என்ப தற்கு எவ்வித எதிர்ப்பும் இருக்கமுடியாது. தூய்மைக் கோட் பாட்டினை மேற்கொண்டிருந்த அவுரங்கசீப் இவற்றையெல்லாம்

பொருட்படுத்தவில்லை. ஒன்று அல்லது இரண்டைத் தவிர இவருடைய மற்ற கட்டடங்கள் எல்லாம் குறிப்பிடத்தக்கனவல்லாதன. இவர் காலத்து ஓவியங்களும் சித்திரங்களும் பொதுவாக அழிகேட்டினைக் காட்டுகின்றன. ஷாஜஹானின் கலைஞர்களுள் பலர் அவருக்குப்பின் அவரது மகனுடைய ஆட்சியில் தொடர்ந்து வாழ்ந்தார்கள். அவர்கள் அவ்வாட்சில் செய்து முடித்த படைப்புகள் அவர்களுடைய முந்திய படைப்புகளிலிருந்து மாறுபட்டிருக்கவில்லை; இருந்தபோதிலும். பொதுவாகச் சொல்லப்போனால் அவுரங்கசீப்பின் அரசவையின் நிலை கலைக்கு உகந்ததாக இல்லை.

**இந்திய பாரசீக கட்டட கலை**

ஹுமாயூனின் உன்னதமான கல்லறையுடன் தொடங்கி பத்பூர்சிக்ரி, சிகந்தாரா, இதிமத்துல்லாவின் கல்லறை (1628), ஆகியவையும், லாகூரிலும் மற்ற இடங்களிலுமிருந்த மேன்மை வாய்ந்த பல கட்டடங்களையும் உட்கொண்டிருந்த அக்பர், ஜஹாங்கீர் ஆகியவர்களின் கட்டடக்கலை பெரு நற்பண்புகளைப் பெற்றுள்ளது. பொதுவாக ஷாஜஹானின் கட்டடக்கலையைவிட இது கணிசமானதாகவும் வீரியமிக்கதாயுமுள்ளது. பெண்பாலுக்குரிய கவர்ச்சியுடன் விளங்கும் தாஜ்ஜை அதற்கு முந்தியும் பிந்தியும் இருந்த கட்டடங்களைவிட அதிகமாக உலகம் போற்றுகிறது.

இந்நூலில் குறிப்பிட்ட கட்டடங்களின் வருணிப்பையோ திறனாய்வுகளையோ அளிக்க இயலாது. பொதுவாக ஷாஜஹானின் கட்டடங்கள் அழகினாலும் தாராளமாகப் பயன்படுத்தப் பட்ட விலையுயர்ந்த அலங்கரிப்புகளாலுமேயன்றி வலிமையினால் சிறப்புப் பெற்றிருக்கவில்லையென்று கூறலாம். அக்பரும் ஜஹாங்கீரும் விரும்பிய சிவப்பு கல்லைவிடச் சலவைக்கல்லே அதிகமாக விரும்பப்பட்டது.

அ. காஷ்மீர் ஜாமி மசூதி.
ஆ. பீஜப்பூரி—இப்ராஹிம் ரௌஸா மசூதி.
அ. ஜான்புரி—அடாலதேவி மசூதி.
ஆ. வங்காளம்—பாராசோனா மசூதி.

அக்பர், ஜஹாங்கீர் ஆகியவர்களின் கட்டடங்களில் மூலைப் பாக இருக்கும் இந்துக்கூறுகள் முற்றிலும் விடப்படவில்லையானாலும் பெருமளவு குறைக்கப்பட்டுவிட்டன.

ஷாஜஹானாபாத் என வழங்கிய புது தில்லி நகரம் அதன் புகட்டான மாளிகையுடன் கட்டத் தொடங்கிய பத்தாண்டிற்குப்



(a) ஷா ஹலேதான் மசூதி, காஷ்மீர்



(b) இப்ரஹீம் ரவுசா மசூதி, பிகாபூர்

புகைப்படம் 24



(a) அதாளா தேவி மசூதி, ஜோன்பூர்



(b) பாரா யோஞ மசூதி, வங்காளம்

பின் 1648-ல் அரசவையினருக்கு இடமளிக்கத் தொடங்கியது 1632-ல் தொடங்கப்பட்ட தாஜ் அதனுடைய துணைக் கட்டடங் களுடன் இருபது ஆண்டிற்குப்பின் 1653ஆம் ஆண்டிலேயே கட்டி முடிக்கப்பட்டது. ஆனால் நடுக்கல்லறை °1643ஆம் ஆண்டி லேயே தயாராகிவிட்டது. ஆக்ராவில் உள்ள அழகான முத்து மசூதி (Pearl Mosque) (Moti Masjid) மோதி மஸ்ஜித் 1653-ல் கட்டி முடிக்கப்பெற்றது. அதே ஆண்டில் தாஜ்ஜின் துணைக் கட்டடங் களும் கட்டி முடிக்கப்பெற்றன. இதனால் பதினேழாம் நூற்றாண் டின் மத்திய காலத்தை இந்திய பாரசீகக் கட்டடக்கலை மேம் பாட்டின் உச்சநிலைக் காலம் எனக் கொள்ளலாம்.

## சித்திரமும் ஓவியமும்

அதே சமயத்தில சித்திர ஓவியக் கலைகளும் உச்ச நிலையை அடைந்திருந்தன. அக்பர் காலத்தில் வழக்கில் இருந்த வளர்ச்சி யடையாத சித்திர வேலைப்பாடுகள் இப்பொழுது வழக்கொழிந்து விட்டன. ஷாஜஹானின் கலைஞர்கள் பெரும்பாலும் இந்து மர புக்கள், ஐரோப்பிய சித்திர ஆய்வுகள் ஆகிய இரண்டின் மறை வாற்றலுக்குட்பட்டனர். ஓரளவு நிழற்படுத்தல் புகுத்தப்பட்டது வண்ணம் குறைத்துப் பயன்படுத்துவது விரும்பப்பட்டது. கலை ஞரில் பலர் நுண்காட்சித் திறனிலும் கைவண்ணத்திலும் ஈடு இணையற்று விளங்கினர். ஓர் அணிலின் ஒற்றை மயிர்த்தூரிகைச் சிலரால் சிறப்பாகப் பயன்படுத்த முடிந்தது. ஷாஜஹானின் காலத்திற்கு முன்னும் பின்னும் வழக்கில் இருந்த சித்திரங்களைப் போல் இவர் காலத்துச் சித்திரங்கள் விரைப்பின்றி நிறைவுடைய கவர்ச்சியும் வியத்தகு உயிரோவியமாகவும் இருந்தன.

## இந்துக் கட்டடக் கலை

அக்பர், ஜஹாங்கீர் ஆகியவர் புதிய இந்துக் கோயில்கள் கட்டத் தடையின்றி அனுமதி வழங்கினர்அல்லது ஊக்கம் அளித்தனர். இவை மிகப் பெரியன வாகவும் இருந்தன; இவை அதிக விலையில் கட்டப்பெற்றன. எடுத்துக்காட்டாக, அபுல் பாஸலைக் கொலை செய்த இராஜாபீர்சிங் (Raja Pir Singh) 'இந்தியாவின் மதிப்பேறிய கட்டடங்களுள் ஒன்றான'' மதுராவில் உள்ள கேசவ தேவா கோவிலைக் கட்டுவதில் முப்பத்திமூன்று இலட்சம் ரூபாய் வீண் செலவு செய்ய அனுமதிக்கப்பட்டார். 1669-ல் அக்கட்டடத்தை அவுரங்கசீப் முற்றிலும் அழித்து அவ்விடத்தில் மசூதியொன்றைக் கட்டினார். புதிய கோயில்களைக் கட்டுவதற்கு 1632-ல் ஷாஜஹான் தடை விதித்திருந்தார். நான் அறிந்தவரையில் சமய சார்பற்ற முக்கிய

இந்துக் கட்டடமெதுவும் அவர் ஆட்சிக் காலத்தில் தோன்றவில்லை.

**இலக்கியம்**

பாரசீக மொழியில் எழுதப்பட்டிருந்த இலக்கியத்தின் பெருமதிப்பு வாய்ந்த பகுதி, வரலாறுகத் தொடர்ந்திருந்து வந்தது. எலியட்டும் டௌசனும் (Elliot and Dowson) அல்லது சர்க்கார் (Sarkar) குறிப்பிட்டுள்ள நூல்களில் அப்துல் ஹமீது எழுதிய பாத்ஷா நாமா (Badshah Nama) காபிகான் (Khafi Khan or Muhammad Hashim of Khwaf)[1] எழுதிய முன் தகபுல் லுபாப் (Muntakuhab-ul-Lubab) என்ற நூலும் குறிப்பிடத்தக்கவையாகும்.

கணக்கற்ற இந்திக் கவிஞர்களில் எவரும் செல்வாக்கிலாவது சிறப்பிலாவது துளசிதாஸிற்கு நிகராகமாட்டார். 1662-ல் எழுதி முடிக்கப்பெற்ற சத்சாய் (Satsai) என்ற நூலின் புனைத்திறம் வல்ல ஆசிரியரான பிஹாரிலால் (Bihari Lal) என்பவர் மிகச் சிறந்தவர்.

## காலவரையறைப் பட்டியல்

| | | |
|---|---|---|
| ஜஹாங்கீரின் மறைவு | ... | அக் 28, 1627 |
| ஷாஜஹான் அரியணை ஏறல் | ... | பிப்ரவரி 1628 |
| குஜராத்திலும் தக்காணத்திலும் பஞ்சம் | ... | 1630-32 |
| கான்ஜஹான் லோடியின் அழித்தல் | ... | 1631 |
| மும்தாஜ்மஹாலின் மறைவு | ... | 17 ஜூன் 1631 |
| ஹுக்ளியின் முற்றுகை | 24 ஜூன் 24 செப். | 1632 |
| புதிய இந்துக் கோயில்களை அழித்தல் | ... | 1632 |
| ஆமத்நகர் இராச்சியத்தின் முடிவு | ... | 1636 |
| கோல்கொண்டாவுடனும் பீஜப்பூருடனும் உடன்படிக்கை | ... | 1636 |
| அவுரங்கசீப் தக்காணத்தின் அரசப் பிரதிநிதியாக அமர்த்தப்படல் | ... | ஜூலை 1636 |
| அவுரங்கசீப், தாராஷுகோ ஆகியவர்களின் திருமணங்கள் | ... | 1637 |
| காந்தாரத்தைக் கைப்பற்றுதல் | ... | 1638 |
| டே என்பவருக்கு மதராஸ் நகரில் இடம் வழங்கப்படுதல் | ... | 1639 |

[1] அதுதான் 'காபி' என்பதின் உண்மைப் பொருள். காப் என்பது குரேசானிலுள்ளது.

| | | |
|---|---|---|
| இளவரசி ஜஹனாராவிற்கு விபத்தும், அவுரங்கசீப் தற்காலிகமாகச் செல்வாக் கிழத்தலும் | ... | 1644 |
| பதக்ஷான். பல்க் போர்கள் | ... | 1645-47 |
| ஆக்ராவிலிருந்து தில்லிக்கு (ஷாஜஹானாபாத்) தலைநகர் மாற்றம் | ... | 1648 |
| பாரசீகர்களால் காந்தாரம் கைப்பற்றப் படல், அவுரங்கசீப்பின் முதல் முற்றுகை | ... | 1649 |
| அவுரங்கசீப்பின் இரண்டாவது முற்றுகை | ... | 1652 |
| காந்தாரத்தின் மூன்றாவது முற்றுகை தாராஷுகோ | ... | 1653 |
| அவுரங்கசீப் மறுபடியும் தக்காணத்தில் அமர்த்தப்படல் | ... | 1653 |
| சித்தூர் அரண் சுவர்களைத் தகர்த்தல் | ... | 1654 |
| மூர்ஷித் குலிகான் தக்காண திவானாக அமர்த்தப்படுதல்; அவுரங்கசீப் கோல் கொண்டாவை முற்றுகையிடல்; சாதுல்லாகானின் மரணமும், மிர்ஜும்லா பிரதமராக அமர்த்தப்படலும், பீஜப்பூரின் முகம்மது அதில்ஷாவின் மரணம் | ... | 1656 |
| பீஜப்பூரின் தாக்குதல் | ... | 1657 |

## அரசுரிமைப் போர்

| | | |
|---|---|---|
| ஷாஜஹான் நோயுறல் | ... | செப். 1657 |
| பகாதுர்பூர் போர், ஷுஜாவின் தோல்வி | ... | பெப். 1658 |
| தார்மத் போர், ஜஸ்வன்சிங்கின் தோல்வி | ... | 15 ஏப்ரல் 1658 |
| சமுகர் போர், தாராஷுகோவின் தோல்வி | ... | 29 மே 1658 |
| ஷாஜஹானும் முராத்பக்ஷும் சிறைப்படல் | ... | ஜுன் 1658 |
| அவுரங்கசீப்பின் முறணையா அரியணை யேற்றம் | ... | 21 ஜுலை 1658 |
| காஜ்வாப் போர், ஷுஜாவின் தோல்வி | ... | 5 ஜனவரி 1659 |
| தியோராப் போர், தாராவின் தோல்வி | ... | 12-14 ஏப். 1659 |
| அவுரங்கசீப்பின் முறையான அரியணை யேற்றம் | ... | ஜுன் 1659 |
| தாராஷுகோ தூக்கிலிடப்படுதல் | ... | ஆகஸ்ட் 1659 |
| ஷுஜாவின் மரணம் | ... | மே 1660 |
| சுலைமான்ஷுகோ காட்டிக் கொடுக்கப் படுதல் | ... | டிசம்பர் 1660 |

## ஆதாரங்கள்

ஷாஜஹானின் வாழ்க்கை வரலாற்றை Banarsi P. Saksaena என்பவர் "History of Shah Jahan of Delhi", என்ற நூலை எழுதி

யுள்ளார், இந் நூல் முழு நூல் பட்டியலுடன் 1832-ல் அலகாபாத்தில் வெளியாகிறது. "Dara Shukuh" பற்றிய ஆய்வை K. R Qanungo என்பார் எழுதியுள்ளார், நூலின் இரண்டாம் பதிப்பு 1952-ல் கல்கத்தாவில் வெளியாயிற்று. "History of Aurangazeb" (நான்கு தொகுதிகள்) என்ற நூலில், அவுரங்கசீப்பின் வாழ்க்கை வரலாற்றுடன் தொடர்பு கொண்ட நிகழ்ச்சிகளை பேராசிரியர் Jadunath Sarkar என்பார் திறனாய்வு செய்துள்ளார். (கல்கத்தா, 1912–19), முதன்மையான பாரசீக ஆதாரங்களின் மொழி பெயர்ப்பிற்கு எலியட் & தவ்சன் (Elliot and Dowson) என்பாரின் ஏழாம் தொகுதியைப் பார்க்க. பயன்படுத்தப்பட்ட ஐரோப்பிய ஆதாரங்களில் பெர்னியரின் பயணங்களும் (Travels of Bernier) அடங்கும். Constable & Smith-தும் மொழி பெயர்த்துப் பதிப்பித்தனர் (O. V. P. 1914). Olearius-ஐ Davies மொழி பெயர்த்தார் (London, 1669); மனுக்கி (Manucci) ஐ இர்வின் (Irvine) மொழி பெயர்த்தார், (London, Murray, 1907–1908); "Travels of Sebastian Manrique" என்ற நூலை C. E. Nuord and H. Hosten என்பவர்கள் பதிப்பித்து Hakluyt Soc. 1926–27-ல் வெளியிட்டது. Mundy மொழி பெயர்ப்பு Temple தொகுதி இரண்டும் மூன்றும், (Hakluyt Society, 1914–1919); "History of the Portuguese in Bengal", என்ற நூலை J. J. A. Campos என்பவர் எழுதினர் (கல்கத்தா, 1919); Tavernier; மொழி பெயர்ப்பும் பதிப்பும், V. Ball என்பார் (London, Macmillan, 1889).

கீழ்காணும் நூல்களும் பயன்படுத்தப்பட்டன. De Laet, "De Imperio Maogni Mogolis. Sive India Vera"; "Fragmentum Historiae Indicae" by President Van Den Broecke (Elzevir, 1631), இவைகளை Hoyland and Banerjee யும் மொழி பெயர்த்துப் பதிப்பித்துள்ளனர் (1928,); Hosten, 'A week of the Bandel Convent, Hugli,' in " Bengal past and Present, Vol x. (Calcutta); Journal of the Panjab Historical Society (Lahore and Calcutta); Sir C. Lyall என்பாரின் "Bihari Lal" பற்றிய கட்டுரை (Encycl Brit); W. H. Moreland, "From Akbar to Aurangazeb", Abdul Aziz, Mansabdari System and the Mogul Army.

இவ்வாட்சி காலத்திய கலை பற்றிய ஆய்வு H. F. A.-ல் உள்ளது. பிரிட்டிஷ், இந்திய மியூசிய (B.M., I.M.) வெளியீடுகளிலும் லாகூர், இன்னும் மற்ற வெளியீடுகளிலும் நாணயங்கள் பற்றிய வருணிப்புகளைப் பார்க்க.

Epigraphia Indo Moslemica என்ற Horowitz வெளியீட்டில் வெளியிடப்பட்டுள்ள கல்வெட்டுக்கள் தரப்பட்டுள்ளன (Calcutta, 1912).

# அவுரங்கசீப் ஆலம்கீர் (Aurangazb Alangir) 1658–1707.

## அவுரங்கசீப் இரண்டாம் முறை முடிசூடல்

அவுரங்கசீப்பின் தந்தை, சகோதரர்கள், மைத்துனர்கள் ஆகியவர்களின் கதியைப்பற்றி முந்திய அதிகாரத்தில் குறிப் பிட்டிருக்கிறோம். எனினும், இவர் பேரரசக்குரிய தகுதியையும் பட்டங்களையும் ஒழுங்குற மேற்கொண்டதற்குப் பிறகு 1659-இலும் 1060-இலும் சில நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. இவர் 1659 மே மாதத்தில் மீண்டும் தில்லியில் நுழைந்தார்; ஜுன் மாதத்தில் முழு சடங்குகளுடன் இரண்டாம் முறை முடிசூட்டிக்கொண்டார். இவருடைய பெயர் குத்பாவில் (Kutba) சேர்க்கப்பட்டது. இவருடைய பெயரில் நாணயங்களும் அச்சிடப்பட்டன. (ஹி.பி. 1069) இவர் ஆலம்கீர் என்ற பட்டப் பெயரையும் புனைந்து கொண்டார்; இப் பட்டத்துடன்தான் முஸ்லீம் ஆசிரியர்களின் நூல்களில் விளங்குகிறார். அவுரங்கசீப் என்ற இவரது முந்திய பட்டப் பெயர் ஆங்கிலத்தில் பழக்கத்தில் இருப்பதனால் அதையே இந் நூலிலும் பயன்படுத்துகிறோம்.

அக்பர் பின்பற்றிய இலாஹி (Ilahi) சகாப்தத்தை இடை யறுத்து, முஸ்லீம்களின் சந்திரகால அட்டவணையைக் கடைப் பிடித்து அதனால் செயல்விளைந்த வசதிக்கேடுகளைப் பொருட் படுத்தாது இவர் முஸ்லீம் பழக்க வழக்கங்களுக்கு மரியாதை செலுத்தினர்.

## பெயரளவுக்குத் தீர்வைகளைத் தள்ளிக்கொடுத்தல்

புதிதாக சிம்மாசனம் ஏறிய மற்றப்பல அரசர்களைப் போலவே இவரும் இவரது குடிமக்களின் நல்லெண்ணத்தைப் பெற கொடுமை வாய்ந்த தீர்வைகளை ஒழித்தார். பஞ்சத்தின் கொடுமையினால் இவை மேலும் கொடுமை வாய்ந்தனவாக

இருந்தன.[1] பலவகைப்பட்ட எண்பது வரிகளையும் தீர்வைகளையும் தவிர்த்தார்; அவற்றின் வசூலிப்பைத் தடுப்பதற்கான கடும் ஆணைகளை விதித்தார். ஆனாலும் ஒன்று அல்லது இரண்டு விலக்குகளுடன் மற்ற எல்லாத் தீர்வைகள் பொறுத்தவரையிலும் 'அரசாணை நிறைவேற்றப்படவில்லை' என்றும் தடையிடப்பட்ட தீர்வைகளை தங்களுடைய நலனுக்காகவே தல அதிகாரிகள் தொடர்ந்து வசூலித்தனர் என்றும் அவ்வாட்சி காலத்துக்குரிய சிறந்த வரலாற்றறிஞர் தெளிவாகக் குறிப்பிடுகிறார். காபிகான் (Khabi Khan) முகம்மது ஷாவின் (Muhammad Shah) ஆட்சி காலத்தில் எழுதும்பொழுது தல அதிகாரிகளும் நிலக் கிழார்களும் சரக்குகளை ஏற்றி இறக்குவதற்கான தீர்வைகளை வலிந்து பெற்றதனால் பொருள்களைக் கொண்டு செல்லும்பொழுது அவர்களது உற்பத்தி விலைகளைவிட இரட்டை மடங்குக்கு மேம்பட்டே அப் பொருள்களின்மீது தீர்வைகளைச் செலுத்த வேண்டியிருந்தது.

### மிர்ஜும்லாவின் அஸ்ஸாமியப் போர் 1661–3

அவுரங்கசீப் மிர்ஜும்லாவுடன் (Mir Jumla) கொண்டிருந்த நட்புறவு அவர் தமது பகைவர்களின்மீது பெற்ற வெற்றிக்குப் பெருமளவும் காரணமாக இருந்தது. அவுரங்கசீப் அரியணையேறிய பிறகு மிர்ஜும்லா ஷுஜாவைப் (Shuja) பின் துரத்திச் சென்று, அவரது துயர்மிக்க முடிவுக்கு அவரைக் கொண்டு வந்ததன்மூலம் மேலும் பேரரசருக்குச் சிறந்த பணியாற்றினார். தலைநகரில் மிர்ஜும்லா இருப்பதை விரும்பாத அவுரங்கசீப் மிக்க தொலைவிலிருந்த வங்காளத்தின் கவர்னராகவே அவரை நியமித்ததில் பேரரசர் பெருமகிழ்ச்சி அடைந்தார். கௌஹதியின் (Gowhati) தலைநகரான முகலாய காம்ரூபாவை (Mughal Kamrup) கூச்பிஹாரின் (Cooch Behar) சிற்றரச ராஜாவின் படைகளும் ஆஹம்முகளும் (Ahmos) வாரிசுரிமைப் போரின் காலத்தில் தாக்கினர். ஆஹம்முகள் இறுதியில் வெற்றி பெற்றனர். கூச்பீஹார் வெகுவிரைவில் கைப்பற்றப்பட்டது. ராஜா ஓடிவிட்டார்; 1661-ல் அவ்விராச்சியம் இணைத்துக் கொள்ளப்பட்டது. அதன் பிறகு கப்பல்களின் மிகப் பெரிய தொகுதி ஒன்றுடன் படை பிரம்புத்திரா பள்ளத்தாக்கை நோக்கி முன்னேறிக்கொண்டு அரண்களைக் கைப்பற்றி ஆஹம்முகளின் கப்பற்படையை அழித்தது. படை 1662 மார்ச்சு மாதத்தில் மழை காலம் ஆரம்பமாவதற்கு முன்பே கர்கோன் (Garhgaon) என்ற தலைநகருக்குள் நுழைந்துவிட்டது.

[1] சாம்வத் 1717—கி.பி. 1660–1-ல் மாளவத்தில் தோன்றிய பஞ்சத்தின் கொடுமைகளைப்பற்றிய குறிப்புகளை Tod (vol I p. 310) எழுதிய நூலில் பார்க்க.

முகலாயர்கள் ஏராளமான பொருள்களைக் கொள்ளையடித்தனர். ஆனாலும் ஆஹம்முகளின் அரசர் தப்பி ஓடிவிட்டார். அதனால் மிர்ஜும்லா மழை காலத்திலும் அவ்விடத்திலேயே தங்க நேர்ந்தது. முகலாயர்கள் வெள்ளத்தினால் மற்றப் பகுதிகளிலிருந்து ஒதுக்கப்பட்ட போதிலும் ஆஹம்முகளால் துன்புறுத்தப்பட்ட போதிலும் கொள்ளை நோயால் பாதிக்கப்பட்ட போதிலும் மிர்ஜும்லாவின் சிறப்பு மிக்க தலைமையின்கீழ் உறுதியுடன் தங்கள் இடங்களில் நின்றனர். தாக்குதல் மீண்டும் அக்டோபரில் தொடங்கியது. மிகக் கடுமையாகத் துரத்தப்பட்டதனால் ராஜா ஏராளமான தங்கம், வெள்ளி, யானைகள், ஆட்சிப் பகுதிகள் ஆகியவைகளெல்லாம் அடங்கிய ஒருபெரும் அபராதத்தைச் செலுத்தி அமைதியை விலைக்கு வாங்க நேரிட்டது. பேரரச அந்தப்புரத்துக்காக ஒரு இளவரசியும் பல பிணைகளும் ஒப்படைக்கப்பட்டன.

முகலாயர்கள் எவ்வளவு விழிப்புடன் முன்னேறினார்களோ அவ்வளவு விழிப்புடன் அவர்கள் பின்னும் வாங்கினார்கள். ஆனாலும் மிர்ஜும்லா பல இன்னல்களையும் அனுபவித்து டாக்காவை (Dacca) அடைவதற்குமுன் 1663 ஏப்ரல் 10ஆம் நாள் உயிர் நீத்தார்.

ஆம்பரின் (Amber) உளநிறைவற்ற ராஜா ராம்சிங் (Raja Ram Singh) நான்கு ஆண்டு காலமே பிடித்துவைத்திருந்த ஆட்சிப் பகுதியை இழந்தார். கௌஹாதியும் 1681-ல் இழக்கப்பட்டது. ஷாயிஸ்டகான் (Shayista Khan) 1664-ல் கூச்பீஹாரின் ராஜாவை மீண்டும் பதவியில் நியமித்தார். இருந்தபோதிலும் இராச்சியத்தின் பெரும்பகுதி நிரந்தரமாக இணைக்கப்பட்டது.

**வங்காளத்தில் ஷாயிஸ்டகான்**

அவுரங்கசீப்பின் தாய்மாமன் ஷாயிஸ்டகான் (Shayista Khan) என்பவர் மிர்ஜும்லாவுக்குப் பிறகு வங்காளக் கவர்னராக பதவியேற்றார். கீழ்வரும் நிகழ்ச்சிகளின் விளைவாக அவர் தக்காணத்திலிருந்து மாற்றப்பெற்றார். மூன்று ஆண்டுகளாக (1667-1680) நீடித்திருந்த இடைக்காலத்தை விலக்கிவிட்டால் ஏறக்குறைய முப்பது ஆண்டுகாலமாக ஷாயிஸ்டகான் வங்காளத்தில் தொடர்ந்து ஆட்சிபுரிந்து வந்தார்; 1694-ல் ஆக்ராவில் உயிர் நீத்தார். அப்பொழுது அவருக்கு வயது தொண்ணூறுக்கு மேற்பட்டிருக்கும். பிரமபுத்திரா முகத்துவாரத்தின் நீர்வழிகளைத் தாக்கிக் கொண்டிருந்த போர்ச்சுகீசிய கடல் கொள்ளைக் காரர்களை ஷாயிஸ்டகான் அவரது ஆட்சியின் துவக்கத்தில்

அவ்விடங்களிலிருந்து விரட்டியடித்தார். அரகானின் (Arakan) சிட்டகாங்க் (Chittagang) மாவட்டத்தை ஒப்படைக்குமாறும் வற்புறுத்தினார் (1666).

## தக்காணம் இடை ஒய்வு உறல்

ஷாஜஹான் 1657-ல் கடுமையாக நோய்வாய்ப்பட்டிருப்பதை அவுரங்கசீப் அறிந்தபொழுது அவர் தக்காணத்தின் அரசப்பிரதிநிதியாக இருந்துகொண்டு பீஜப்பூர், கோல்கொண்டா ஆகிய சுல்தானியங்களை அழிக்கும் நிலையில் இருந்தார். அவர் அவற்றின் அழிவை மிகுந்த ஆர்வத்துடன் விரும்பினார். நிகழப் போகும் வாரிசுரிமைப் போர் துன்புற்ற அந்நாடுகளுக்கு ஓர் இடைக்கால ஓய்வை அளித்து அதனால் அவைகளது வாழ்க்கை முப்பது ஆண்டுகாலம் நீடித்திருந்தது. ஆனாலும், அதற்கிடையில் ஷாஜி பான்ஸ்லே (Shaji Bhonsle) என்பவரின் மகன் சிவாஜி (Shivaji) என்ற இளமராட்டியத் தலைவர் நடத்திய படையெடுப்புகளால் பீஜப்பூர் பல இழப்பிடர்களை அனுபவிக்க நேரிட்டது. ஷாஜி பான்ஸ்லே என்பவர் முதலில் ஆமத் நகரின் அரசாங்கத்தின் கீழ்ப் பணியாற்றிய அதிகாரியாவார். நைஸாம்ஷாஹி இராச்சியம் பேரரசுடன் இணைக்கப்படுவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே அவர் தம்மை பீஜப்பூருக்கு மாற்றிக் கொண்டார்.

## சிவாஜியின் முந்திய வாழ்க்கை

சிவாஜி (Shivaji) 1627-ல் பிறந்தார்; சிறுவனாய் இருக்கும் பொழுது கொள்ளைக்காரத் தலைவராக பீஜப்பூர் இராச்சியப் பகுதியில் அவரது படையெழுச்சிகளைத் துவக்கினார். அவருடைய தந்தைக்குத் தெரியாமலேயே தமது வழியிலேயே சென்றார். அத் தந்தையின் ஜாகீரில்தான் ஒழுங்கற்ற அந் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இருந்தபோதிலும் அவருடைய கட்டுக்கடங்கா மகனைத் தூண்டுவித்தவர் என்ற சந்தேகத்துக்கு அவர் ஆளானார். அதனால் அவர் பீஜப்பூரில் நான்கு ஆண்டு சிறைவாசம் செய்யவேண்டி நேர்ந்தது. அவர் தமது உயிரையும் இழக்கும் ஆபத்துக்குட்பட்டிருந்தார். துணிகர இளைஞர், தமது பத்தொன்பதாவது வயதிலேயே டோர்னா (Torna) என்ற மலைக் கோட்டையைக் கைப்பற்றித் தமது முக்கிய வெற்றியைப் பெற்றார். டோர்னா பூனாவுக்குத் (Poona) தென்மேற்கில் இருபது மைலுக்கப்பால் உள்ளது. மேற்கு மலைத்தொடரில் (Western Ghats) மாவிலீகள் (Mawalis) என்று வழங்கிவந்த மலைவாசிகளைத் தம்கீழ்த் திரட்டினார். அம் மலைவாசிகள் 'நடை நயங்கெட்ட போதிய முன்னேற்றமடையாத மதிநுட்பமற்ற இனத்தினர்'

என்று வருணிக்கப்பட்டுள்ளனர். இருந்தபோதிலும், அவர்கள் வலிமையும் துணிவும் பெற்றவர்களாகவும் தமது புதிய தலைவரின் மீது மிகுந்த பற்றுக்கொண்டவர்களாகவும் இருந்தனர். தமது கரம்பு நாட்டின் ஒவ்வொரு பாதையையும் பாறையையும் அறிந்திருந்தனர். அவர்களுடைய முஸ்லீம் பகைவர்களின் இராணுவ முறைகளுக்கெதிராக தமது காட்டுத்துறை அறிவை அவர்கள் பயன்படுத்திக்கொண்டனர். ஒவ்வொரு அரணும் இளந்தலைவருக்கு அடிபணிந்தது. அவரே சில அரண்களையும் கட்டினார். பிறகு அவர் கொங்கான் (Konkan) நாட்டின்மீது தமது கவனத்தைச் செலுத்தினார். இது கடலுக்கும் மலைச் சிகரங்களுக்குமிடையில் உள்ள செழிப்பான மேட்டுப்பள்ள நிலப் பகுதியாகும். அப் பிரதேசத்திலிருந்த கல்யாண் (Kalyan) என்னும் முக்கிய நகரை அவருடைய அலுவலர் ஒருவர் கைப் பற்றினார். சிவாஜி 1655-ல் ஜாவியின் (Jaoli) ராஜா கிளர்ச்சியில் தம்முடன் சேர மறுத்துவிட்டதால் அவரை வஞ்சகமாகக் கொன்றார்.

## அப்ஸல்கானும் அவருடைய படையும் முடிவுபெறல்

1645-ல் வெளியான ஒரு பீஜப்பூரிய அரசாணையின்படி 'சிவாஜிராஜா ஷாவுக்குத் துரோகியானார்'. ஆனாலும் முகம்மது ஷா (Muhammad Shah) 1646ஆம் ஆண்டிலிருந்து உடல் நலமற்று இருந்ததனாலும் கர்னாடகத்தில் (Carnatic) தொல்லைகளுக்குட் பட்டிருந்ததாலும் தமது கவனத்தை மற்றத் திசைகளில் செலுத்த நேர்ந்தது. இருந்தபோதிலும் அவுரங்கசீப் சிம்மாசனத்தைப் பெறுவதற்கான முயற்சிகளில் இன்னும் ஈடுபட்டிருக்கும்பொழுது அவர்கள் 1659-ல் துணிச்சல்மிக்க கிளர்ச்சியாளரை அடக்குவதற் கான காலம் நெருங்கிவிட்டதென்று கருதினர். மலைப் பீரங்கி களையும் பத்தாயிரம் போர் வீரர்களையும் பெற்றிருந்த பெரும் படை ஒன்று திரட்டப்பட்டது. முதிர்ந்த, அனுபவம் பெற்ற அப்ஸல்கான் (Afzal Khan) என்பவர் அதற்குத் தலைமை தாங் கினார். பகைவரைக் களத்தில் சந்திக்க சக்தியற்றிருந்த சிவாஜி ஒரு பிராமணத் தூதரை அப்ஸல்கானிடம் அனுப்பி பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினார். பிராமணரும் சிவாஜியும் அப்ஸல்கானைப் பேட்டியளிக்கும்படி பசப்பித்தூண்டி மராட்டியர் களுக்கு எவ்வித ஆபத்தும் நேரிடா வண்ணம் அவரை அப் பொழுது கொல்வதற்கான நடவடிக்கைகளை எடுத்தார்கள். அப்ஸல்கான் அச் சதியில் மிக எளிதில் சிக்கினார். இவர் இரு அதிகாரிகள் மட்டும் உடன்வர பர்தாப்கருக்கு (Partabgarh) மிக அருகில் முன்னேறி சிவாஜியைச் சந்தித்தார். சிவாஜியும் இரு துணைவர்களையே தம்முடன் அழைத்து வந்திருந்தார்.

அப்ஸல்கான் வழக்கமான முறையில் சிவாஜியைத் தழுவிய பொழுது அவரது இடது கரத்தில் மறைத்து வைத்திருந்த 'புலி நகம்' (tiger's claw) என்ற பயங்கர ஆயுதத்தால் சிவாஜி அப்ஸல் கானின் வயிற்றில் குத்தினர். அதைத் தொடர்ந்து கையில் மறைத்து வைத்திருந்த குறுகிய வாளால் குத்தினர். இவ் வஞ்சகத் தாக்குதல் முற்றிலும் வெற்றிபெற்றது. சாம்பாஜி காவ்ஜி (Sambhaji Kavji) என்பவர் இறந்து கொண்டிருந்த கானின் தலையை வெட்டி வீழ்த்தினர். சுற்றுப்புறக்காடுகளில் மறைந்துகிடந்த மராட்டியர்கள் திடீர்தாக்குதலைச் செய்து முகலாயப் படையை அழித்தனர். ஏராளமான கொள்ளைப் பொருள்களுடன் சிறந்த நான்காயிரம் குதிரைகளும் கைப்பற்றப் பட்டன. இவை மிக்க மகிழ்ச்சியுடன் வரவேற்கப்பட்டன.[1]

**ஷாயிஸ்டகான்** (Shayista Khan)

பீஜப்பூர் பேரிழப்பிலிருந்து மீட்சிபெறுவதற்குச் சிறிதளவே வெற்றிபெற்றது. வல்லமைமிக்க முகலாயர்களைத்தாக்க சிவாஜி தடையின்றி இருந்தார். அவுரங்கசீப் வடக்கில் நேரிலேயே விவகாரங்களைக் கவனிப்பதில் பெரும்பாலும் முனைந்திருந்த போதிலும் தமது தாய் மாமனர் ஷாயிஸ்டகானைத் தக்காணத் துக்கு 1660-ல் அனுப்பவேண்டி நேரிட்டது. புதிய தளபதி முதல் முதலாகச் சில முக்கிய வெற்றிகளைப்பெற்றார்; ஆனாலும், விரை வாக நடமாட்டம் செய்துகொண்டிருந்த பகைவனுடன் நெருங்கி மோதல் செய்ய முடியவில்லை. முன் எச்சரிக்கையான நடவடிக் கைகளை மழை காலத்தின்பொழுது எடுத்து ஷாயிஸ்டகான் ஓய்வுபெற பூனவுக்குச் (Poona) சென்றுவிட்டார். அந் நடவடிக் கைகள் அவரை எதிரியின் தாக்குதலிலிருந்து பாதுகாக்க போது மானவை என்று அவர் கருதினர். ஆனாலும் அவர் சூழ்ச்சிமிக்க மராட்டியருக்கு நிகரற்றவராகவே இருந்தார். சிவாஜி நம்பத் தக்க ஒருசில துணைவர்களை உடன் கொண்டு ஷாயிஸ்டகானின் இருப்பிடத்துக்குள் நுழைந்துவிட்டார். இங்ஙனம் நுழைந்த தற்கு ஒருவேளை ஜஸ்வாந்து உடந்தையாக இருந்திருக்கக்கூடும். ஷாயிஸ்டகான் மரணத்திலிருந்து மயிரிழையில் தப்பினர்; ஒரு மகனையும் மூன்று விரல்களையுமே அவர் இழக்க நேர்ந்தது. இகழ்ச்சிக்குள்ளாகிய தளபதி தம்மை அழைத்துக்கொள்ளுமாறு கோரினர்; கோரிக்கையும் நிறைவேற்றப்பட்டது. ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல் அவர் வங்காளத்துக்கு அனுப்பப்பட்டார். சூரத் (Surat) 1664-ல் மிகக் கடுமையாகச் சூறையாடப்பட்டது.

[1] விவரங்களுக்காக நான் Sarkar's Shivaji and his times Calcutta 1919 என்ற நூலையும், S. N. Sen's Siva Chhatrapati 1920 என்ற நூலையும் Grant Duff என்ற ஆசிரியரையும் பின்பற்றுகிறேன்.

## இளவரசர் முஅஸ்ஸமும் ராஜா ஜெய்சிங்கும் (Prince Muazzam and Raja Jaisingh)

ஷாயிஸ்டகானுக்குப் பிறகு அவருடைய பதவியில் அவுரங்க சீப் தமது மகன் இளவரசர் முஅஸ்ஸம் (Muazzam) என்பவரை நியமித்து ஜெய்பூரின் ராஜா ஜெய்சிங் என்பவரை (Raja Jaisingh of Jaipur) படைத் துணைவராக அமர்த்தினர். ஜெய்சிங் சூழ்ச்சித் திற நயத்தை கையாண்டும் மிக முக்கியமான அரணை புரந்தரைக் (Purandhar) கைப்பற்றியும் சிவாஜியை 1655 ஜூன் மாதத்தில் உடன்படிக்கை செய்து கொள்ளுமாறு வற்புறுத்தினர். அதன் படி சிவாஜி இருபத்துமூன்று அரண்களையும் பரந்த நிலங்களையும் கைவிட்டார்; தாம் முகலாயரின் அடிமை என்ற நிலையை ஏற்றுக் கொண்டார்; ஐயாயிரம் குதிரை வீரர்களைக்கொண்ட ஒரு படையை அனுப்புவதற்கும் இணங்கினர். சிவாஜியுடன் பெரும் பாலும் நட்பு தொடர்பையே கொண்டிருந்த ராஜா பிறகு அவரை 1560-ல் பேரரசரிடம் சரணடைய வற்புறுத்தினர். சிவாஜி ஜெய் சிங்கின் பாதுகாப்பில் அரசவைக்குச் சென்றார். அவுரங்கசீப் அவரை ஆக்ராவில் வரவேற்றார். ஆனாலும், சிவாஜி அரசவை மென்னய ஒழுங்குமுறையைப் பின்பற்ற மறுத்து விட்டதுமின்றி தம்மை இறமைபெற்ற இளவரசருகக் கருதாது ஐயாயிம் வீரர் களின் படைத் தலைவர் என்றே கருதி நடத்தியதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார். அதனல் அவர் சிறையடைக்கப்பட்டார்; ஆனாலும் ஜெய்சிங்கின் மகன் ராம்சிங்க் (Ram Sing) என்பவரின் உதவியைபபெற்று தப்பிக்கொண்டு பல துணிகர அனுபவங் களுக்குட்பட்டு 1666 டிசம்பரில் தமது நாட்டிற்கு பத்திரமாக வந்து சேர்ந்தார். இவரது இராமை ஒன்பது மாதகாலம் நீடித்திருந்தது.[1]

ராஜா ஜெய்சிங் தக்காணத்தில் இருக்கும்பொழுதே அவரு டைய மகன் கிராத்சிங் (Kirat Singh) என்பவரால் விஷமிடப் பட்டு 1567-ல் உயிர் நீத்தார். அவுரங்கசீப்பே அச் செயலை புரியும்படி அம் மகனை தூண்டி இருக்கக்கூடும். அவுரங்கசீப் ராஜாவின் மரணத்தை வெளிப்படையாகக் கொண்டாடினர்.

[1] சில ஆசிரியர்களின் கருத்துப்படி அவுரங்கசீப் சிவாஜியை தில்லியில் வர வேற்றார். ஆனாலும் ஆக்ரா என்பது உண்மையில் சரியாகும். இந்தியா ஆபீஸ் (Indian office) நூலகத்திலுள்ள தாரீகி மராத்தா (Tarikh-i-Maratha) கையெழுத்துப்பிரதி. சகீருத்தீன் பாருகிஃ Zahirundden Faruki) என்பவர் எழுதிய நூல் வெளியிடப்படாத கட்டுரையிலிருந்து நான் அறிந்ததன்படி, சிவாஜி மிக்க இறுமாப்புடன் நடந்து கொண்டார் என்றும், வணங்க மறுத்து விட்டார் என்றும் அரண்மனையின் சுகவிளை ஞரை அடித்தாரென்றும் உண்மையில் பேரரசருக்கு எதிரில் உட்கார்ந்துகொண்டார் என்றும் குறிப்பிடுகிறது. இந் நிகழ்ச்சியைப் பற்றிய மற்றக் குறிப்புகளும் உள்ளன. அவருக்கு அளித்த அரசவைப் பேட்டியில் அவமதிக்கப்பட்டதாக சிவாஜி உண்மையிலேயே கருதினர்.

அவருடைய முதன்மை இந்து அதிகாரியின் இறப்பு அவரது துன்புறுத்தும் கொள்கையைப் பின்பற்ற மேலும் வாய்ப்பு அளித்திருக்கிறது என்று அவுரங்கசீப் கருதினார். அதுபோன்ற வாய்ப்பை அவர் பயன்படுத்திக்கொண்டு மதுராவிலுள்ள (Mathura) பெரிய கோயிலைப் பாழாக்கினார்.

## இளவரசர் முஅஸ்ஸமும் ராஜா ஜஸ்வந்த்சிங்கும் (Prince Muazzam and Raja Jaswant Singh)

ஜெய்சிங்கின் பதவியில் மார்வாரின் (ஜோத்புரி) ராஜா ஜஸ்வந்த் சிங் என்பவர் (Raja Jaswant Singh of Marwar) (Jodhpur) அமர்த்தப்பட்டார். அவர் ஏற்கெனவே தக்காணத்தில் பணியாற்றியவராவார். அவரது பதவியேறல் பேரரசினரின் நிலையில் யாதொரு முன்னேற்றத்தையும் விளைவிக்கவில்லை. ராஜாவும் அவருடைய உடனுழைப்பாளரான இளவரசர் முஅஸ்ஸமும் சிவாஜியினிடமிருந்து ஏராளமான பணத்தைப் பெற்று வேண்டுமென்றே உறுதியான நடவடிக்கைகளை எடுக்கவில்லை. அவ்விருவரும் சிவாஜிக்கு ராஜா என்ற பட்டப் பெயரையும் அளிக்குமாறு 1667-ல் அவுரங்கசீப்பை வற்புறுத்தினர்.[1] மராட்டிய இராச்சியம் தொடர்ந்து வளர்ந்து கொண்டே வந்தது. புதிதாக அமர்த்தப் பட்ட ராஜாவும் 1668, 1669 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் தமது உள்நாட்டு அரசாங்கத்தை ஒழுங்காக அமைத்துக்கொள்வதற்கான வாய்ப்பைப் பெற்றிருந்தார். மும்முரமான படையெடுப்புகள் மீண்டும் 1670-ல் துவக்கப்பட்டன. அவ்வாண்டில் டிஸம்பர் மாதத்தில் சிவாஜியின் அதிகாரிகள் காண்டேஷின் (Khandesh) சில பகுதிகளின் தல அதிகாரிகளிடமிருந்து எழுதப் பட்ட வாக்குறுதிகளை வலிந்து பெற்றனர். அவற்றின்படி அவ்வதிகாரிகள் சிவாஜிக்கோ அவருடைய பிரதிநிதிகளுக்கோ அரசாங்கத்துக்குரிய ஆண்டு வருமானத்தில் கால் பங்கு கொடுக்கவேண்டும். 'சிவாஜி அதற்கு ஒழுங்காக பற்றுச் சீட்டுகளையும் கொடுப்பதாக வாக்குறுதி அளித்தார். அதுபோன்ற பற்றுச்சீட்டுக்கள் சூறையாடப்படுவதிலிருந்து விலக்குக் கொடுப்பதுமன்றி அவர்களுக்குப் பாதுகாப்பும் அளிக்கும். இதனால், முகலாயர்களுக்கு நேரடியாகக் கீழ்படிந்திருந்த ஒரு மாகாணத்தின்மீது விதிக்கப்பட்ட மராட்டியத் தீர்வையான சௌத் (chauth) இக்காலத்திலிருந்துதான் துவங்கியது என்றே கொள்ளலாம்.[2] அச்ச வரிக்கு அந்த இகழ்ச்சிக்குரிய கீழ்ப்படிதல் அவரது ஆட்சியின் துவக்கத்திலிருந்தே

[1] Grant Duff—ed. 1826 Vol I p 220.

[2] Grant Duff p. 249.

அவுரங்கசீப்பின் அரசாங்கம் எவ்வளவு வலிமையற்றிருந்தது என்பதற்கு உறுதியான சான்றாகும். உண்மையில் அவரது அரை நூற்றாண்டு ஆட்சிக் காலத்தில் அவருடைய நிர்வாகம் எங்குமே வெற்றியாக நடைபெறவில்லை. அவ்வாண்டின் அக்டோபர் மாதத்தில் சிவாஜி சூரத்தை நிதானமாக மூன்று நாட்கள்வரை மீண்டும் சூறையாடினார். ஆனாலும், ஐரோப்பிய வர்த்தக நிலையங்களுக்கு இதனால் தீங்கிழைக்கப்படவில்லை.

## ஜாட்டுகளின் கிளர்ச்சிகள் (Jat Revolutions)

தலைநகருக்கருகில் கடுமையான, அமைதியற்ற நிலை ஏற்பட்டது. மதுரா மாவட்டத்திலிருந்த ஜாட் விவசாயிகள் கோகுலா (Gokula) என்பவரின் கீழ் 1669 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் கிளர்ச்சி செய்தனர்; பேரரச பாதுகாவலன் (faujdar) ஒருவனையும் கொன்றனர். அக்காவலர் அவுரங்கசீப் பின்பற்றிய துன்புறுத்தும் கொள்கையை நிறைவேற்றியவரான பற்றுமிக்க முஸ்லீமாவார். பெரும்போர் நிகழ்ந்தது; அதில் கிளர்ச்சியாளர்கள் ஐயாயிரம் ஆட்களையும், பேரரச கட்சியினர் நாலாயிரம் ஆட்களையும் இழந்தனர். அடுத்த ஆண்டில் எடுக்கப்பட்ட பல நடவடிக்கைகள் அமைதியை மீண்டும் நிலைநாட்டின. ஆனாலும் 1681-இலும் 1688-இலும் மீண்டும் தொல்லைகள் ஆரம்பமாயின. பின் குறிப்பிடப்பட்ட ஆண்டிலிருந்து ஆட்சிமுடிவுக் காலம்வரை அவை நீடித்திருந்தன.[1] பேரரசின் முன்னோரான அக்பரின் கல்லறையை கொள்ளையிட்டு அவருடைய எலும்புகளை எரித்து தமது பகைவரான பேரரசருக்கு இழைக்கக்கூடிய மிகப் பெரிய அவமதிப்பை கிளர்ச்சியாளர்கள் 1691-ல் எங்ஙனம் இழைத்தனர் என்பதை நாம் ஏற்கெனவே பார்த்துள்ளோம். அதுபோன்ற நிகழ்ச்சிகள் ஆக்ராவுக்கருகில் நிகழ்ந்ததால் தக்காணத்தின்மீது அரசாங்கம் பெற்றிருந்த பிடிப்பு வலிமையற்றிருந்தது என்பதில் வியப்பொன்றுமில்லை.

## சத்நாமிகளின் கிளர்ச்சி : Satnami Insurrection

சத்நாமி என வழங்கப்பட்ட இந்து மதப்பிரிவினையைப் பின்பற்றுபவர்கள் செய்த கிளர்ச்சியைப் பற்றி இங்கே பொருத்தமுறக் குறிப்பிடலாம். இது கி. பி. 1672-ல் ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டில் நிகழ்ந்தது.[2] காபிகான் இவர்களை 'வெறுப்பு

[1] Professor J. Sarkar in Modern Review—April 1916. p. p. 383-392.

[2] எலிபின்ஸ்டன் சத்நராமி (Satnarami) என்று பெயரைத் தவறாக குறிப்பிடுகிறார். அவரது நூலின் ஐந்தாம் பதிப்பின் எல்லைக்கோடுயடுத்த பகுதியில் காலம் 1676ஆம் ஆண்டு எனத் தவறாகக் குறிக்கப்பட்டுள்ளது. சத்நாமி என்ற சொல்லுக்கு உண்மைப்பெயரை அதாவது இறைவனை வழிபடுபவர்கள் என்று பொருளாகும்.

மிக்க, இரத்தம் சிந்தும் கிளர்ச்சிக் குழுவினர், பொற் கொல்லர் கள் தச்சர்கள்' என்று வருணித்துள்ளார். தற்சமயம் பாடியாலா (Patiala) மாவட்டத்திலுள்ள நர்நால் (Narnal) என்னும் நகரில் இவர்கள் தங்களது தலைமைக் காரியாலயத்தை அமைத்திருந் தனர். ஐயாயிரம் கிளர்ச்சியாளர்கள் நர்நாலைக் கைப்பற்றினர். அவர்களைச் சாந்தப்படுத்த எடுத்த முயற்சிகள் வீணானதால் அவர்கள் இன்னும் மூர்க்கத்தனமாகப் போரிட்டனர். முந்திய சில சிறிய வெற்றிகளுக்குப்பிறகு அவர்கள் முறியடிக்கப்பட்டனர். அவர்களில் பெரும்பாலோர் கொலையுண்டனர்; ஒரு சிலரே வாளுக்குத் தப்பினர்.

### ஆப்கானியர்களும் சீக்கியர்களும்

ஏறக்குறைய அதே காலத்தில் ஆப்கானிய இனங்களுக்கு எதிராக எடுத்த இடர்மிக்க இராணுவ நடவடிக்கைகளில் பேரரசப் படைகள் முனைந்திருந்தன. ஆண்டுதோறும் இனக் குழுத்தலைவர்களுக்கு ஏராளமான பண உதவி அளித்த போதிலும், 1667-ல் பஞ்ஷீர் நதியின் (Panjishir river) மேற் பகுதிவரை ஷம்ஷெர்கான் என்பவர் (Shamsher Khan) நடத்திய தைப் போன்ற கொள்ளைகள் நடத்தப்பட்டபோதிலும், முதலில் யூசுப்ஸைகளும் (Yusuf Zais) பிறகு அப்ரிடிகளும் (Afridis) கிளர்ந் தெழுந்தனர். முன்னவர்கள் காபூலின் கவர்னரான முகம்மது அமீன்கானை (Muhammad Amin Khan) 1672-ல் அலிமஸ்ஜித் (Ali Masjld) என்ற இடத்திலும் பின்னவர்கள் ஷுஜாத்கானின் படைகளை 1674-ல் கரபா (Karapa) என்ற இடத்திலும் முறியடித் தனர். இத் தோல்விகளால் அவுரங்கசீப் பெஷாவருக்கு நேரில் வர நேர்ந்தது. இவர் அவ்விடத்திலிருந்துகொண்டு ஒன்றரை ஆண்டு காலமாக இராணுவத் தூதராக நடவடிக்கைகளை மேற் பார்வையிட்டு வந்தார். அமீர்கானை காபூலின் கவர்னராக நியமித்து (1677-98) அவுரங்கசீப் ஓர் அளவான அமைதியை நெடுங்காலமாக நிலை நாட்டினார். சீக்கியரின் ஒன்பதாம் குருவான தேஜ்பகதூர் (Tegh Bahadur) இஸ்லாம் மதத்தைத் தழுவ மறுத்ததனல் 1675-ல் தூக்கிலிடப்பட்டார்.

### சிவாஜியின் முடிசூடல்

சிவாஜியின் தொடர்ந்து வெற்றிபெறுதல் அவுரங்கசீப் அவருக்கு அளித்த பெயரளவில் ராஜாவினது அந்தஸ்த்தை விட மேலான அந்தஸ்தைப் பெற அவரைத் தூண்டியது. மேலதி காரியின் பேராளாக அன்றி அவரது சொந்த உரிமையிலேயே ஒரு சுதந்திர அரசனாக அவரை உயர்த்திக் கொள்ள சிவாஜி விரும்பினார். அவரது பேரவாவை நிறைவேற்றுவதற்காக அவர்

ராஜ்கர் (Rajgarh) என்ற அரணில் 1674-ல் முழுச் சடங்குகளுடன் சிம்மாசனம் ஏறினர்; அவரது முடிசூட்டல் காலத்திலிருந்து ஆரம்பமாகும் ஒரு புதிய சகாப்தத்தையும் நிலை நாட்டினர்.[1]

## சிவாஜியின் தெற்குப் படையெடுப்புகள்

'அவரது வாழ் நாளில் எடுத்த மிக முக்கியப் படையெடுப்பு' என்று கிராண்ட்டப் (Grant Duff) வருணித்துள்ள நடவடிக்கைகளை சிவாஜி 1676-ல் திட்டமிட்டார்; அதற்கான நடவடிக்கைகளையும் எடுத்தார். பீஜப்பூர் அரசாங்கத்தின் கீழ் அவருடைய தந்தையின் ஆதிக்கத்தில் இருந்தவையும் அவ்வமயம் அவருடைய தம்பியான விநாயக்ஜி (Vynaakji) வெங்காஜி (Venkajee) என்பவரின் கையில் இருந்ததுமான தெற்கு ஜாகீர்களை மீண்டும் பெறுதல் சிவாஜியின் குறிக்கோளாகும். சிவாஜி ஆற்றல் வாய்ந்த ஒரு படைக்குத் தலைமை தாங்கி கோல்கொண்டாவுக்கு (ஹைதராபாத்) விஜயம் செய்தார். அங்கே அவர் சுல்தானை தமக்கு நண்பனுக்கிக் கொண்டு ஓர் ஆயுதம் தாங்கிய படையைத் தமக்குக் கடன் கொடுக்கும்படி அவரை வற்புறுத்தினர். அவர் தெற்கில் முன்னேறி வட தென்னுற் காட்டில் (South Arcot) செஞ்சி அரணுடன் (Jingi) (ஜிஞ்ஜி Gingee) வெல்லூரையும் (Vellore) மற்ற முக்கிய இடங்களையும் கைப் பற்றினர். அவருடைய சகோதரரைத் தஞ்சாவூர் (Tanjore) சிற்றரச நாட்டில் அரை பாகத்தை அவருக்கு சரணடைக்குமாறு வற்புறுத்தினர். அவரது வீட்டுக்குத் திரும்பும்பொழுது அவர் பெல்லாரியைக் (Bellary) கைப்பற்றிச் சிறிது காலத்துக்குப்பின் அவரது பழைய பகைவரான பீஜப்பூர் சுல்தானுடன் ஒப்பந்தம் செய்துகொண்டார்; இவ்விதமாக 'அவ்விராச்சியத்தை மொகலாயப் படைகளின் தொல்லைகளிலிருந்து விடுதலை செய்தார். அவுரங்கசீப் வடமேற்கு எல்லையை ஆப்கானிய இனக்குழுக்களுடன் 1678ஆம் ஆண்டுவரை நீடித்து நடந்த போர்களில் முனைந்திருந்தது மராட்டியத் தலைவரின் வெற்றிக்குப் பெருமளவு காரணமிருந்தது. அவ்வாண்டில் பேரரசர் அவ்வினங்களுடன் உடன்படிக்கை செய்துகொண்டார்.

சர்க்கார் (Sarkar) பின்வருமாறு நியாயமுற குறிப்பிடுகிருர்.

'பேரரசின் பொது நிதிகளுக்கும் பெருந்தீங்கிழைத்த ஆப்கானியப் போரின் அரசியல் விளைவு மேலும் தீங்குற்றதாயிருந்தது. கரம்பான பாழ்நாட்டில் (இராச புதனத்தில்) பேரரசினர்களுக்குக் கிடைக்கும் வெற்றிகளை பெறக்கூடிய போர்

[1] நேரில் பார்த்த ஆக்சிண்டன் (Oxinden) என்பவரின் குறிப்பைக்காண்க. இது ஃபிரையர் (Fryer) எழுதிய "A New Account" என்ற நூலில் சேர்க்கப் பட்டுள்ளது. Vol. I p. 193-210.

வீரர்களாக ஆப்கானியர்கள் இருந்தபோதிலும் அப்போர் நிகழ விருக்கும் இராஜபுதனப் போரில் ஆப்கானியர்களைப் பயன் படுத்த முடியாதபடி செய்தது. மேலும் வடமேற்கு எல்லைப் பகுதியில் போரிட முகலாயத் துரும்புகளை தக்காணத்திலிருந்து காலி செய்து சென்றதனால் அது சிவாஜியின் மேலிருந்த அழுத் தலுக்கு நிவாரணம் அளித்தது.'

## சிவாஜியின் சாவு

சிவாஜி ராய்கரில் அவரது ஐம்பத்து மூன்றும் வயதில் சிறிது கால உடல்நலக்கேட்டுக்குப் பிறகு உயிர் நீத்தார். அதனால் அவரது வெற்றி மிக்க வாழ்க்கை முடிவடைந்தது. அவரது சாவு சிறிது காலம்வரை மறைத்து வைக்கப்பட்டிருந்தது. அது ஒரு வேளை 1680 ஏப்ரல் 5ஆம் நாள் ஏற்பட்டிருக்கக் கூடும்.[1] நிகழ்ச்சிகளின் வரலாற்றைப் பின் தொடர்வதற்குமுன் சிவாஜி யின் நிறுவனங்களைப்பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிட்டு அவர் காலத்திற்குரிய வரலாற்றில் முதன்மை பங்குபெற்ற ஒரு புதிய நாட்டை நிலை நாட்டுவதற்கு உதவிய அவரது குறைவியல்புகளை ஆராய்வதும் விரும்பத்தக்கதாகும்.

## மராட்டிய நாடு

மகாராஷ்டிர (Maharashtra) அல்லது மராட்டா நாட்டில் மராட்டிய மொழி பேசப்படுகின்றது. எலிபின்ஸ்டன் இந்த நாட்டு எல்லைகளைப்பற்றிக் கூறுகின்றபொழுது நர்மதாவுக்குத் (Narmada) தெற்கேயுள்ள மலைத்தொடருக்கும் கோவாவின் அருகே தொடர்ந்து செல்லுகின்ற விந்திய மலைத்தொடருக்கும் (சாத்புரா) நடுவேயுள்ள நாடென்றும் கடற்கரையோரமாக பீடாரிலிருந்து சந்தாவிலுள்ள (Chanda) வார்தா (Wardha) வரை யிலும் பரவியுள்ளதென்றும் கூறுகின்றார். அதாவது கிழக்கே நர்மதாவரையிலும், மேற்கே கடற்கரை வரையிலும் பரவி யிருந்தது.

மேற்கு மலைத்தொடர் (Western Ghats) இந் நாட்டில் இருப்பது சிறப்பான அம்சமாகும். இந்த மலைகளின் அமைப்பு

[1] கிராண்ட் டப், ஓர்ம் (Orme) ஆகியவர்கள் அது ஏப்ரல் 5ஆம் நாள் ஏற்பட்டது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இந்து முறைப்படி அது 1602 சாகா சகாப்தத்தில் ருத்ரா ஆண்டில் செய்தி 15ஆம் நாள் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதன்படி அந்த நாள் ஞாயிற்றுக்கிழமையாக வருகிறது என்று மான்கர் (Mankar) நிர்ணயம் செய்கிறார். வரலாற்றின்படி பார்த்தால் அந்த நாள் திங்கட்கிழமையாகவும் 1680 ஏப்ரல் மாதம் 5ஆம் நாளாகவும் வருகிறது. ஃபிரையர் (Fryer) என்பவர் அந்த நாள் ஜூன் முதல் தேதி என்று வரையறுக்கிறார். ஆனால் குருக் (Crooke) இர்வின் (Irvine) கண்டுபிடித்த அவருடைய காலத்து ஆதாரங்களை வைத்துக்கொண்டு அந்த நாள் ஏப்ரல் 17ம் நாள் என்று கணக்கிடுகிறார்.

அங்குப்பாதுகாப்பிற்கும் கோட்டை கொத்தளங்களை இயற்கை யாகவே அமைத்துக்கொள்வதற்கும் வசதியாக இருக்கின்றது. பல அரசர்களால் இங்கு அமைக்கப்பட்ட கோட்டைகள் மிகவும் பலமுள்ளனவாகவும் எதிரிகள் தாக்கமுடியாதனவாகவும் உள்ளன. இங்குள்ள மலைகளின் உச்சிகளிலும் தண்ணீர் வசதி இருக்கின்றது.

**மராட்டியர்**

வரலாற்றின் துவக்கத்தில் இவர்கள் சிறந்து விளங்கவில்லை. மகாராஷ்டிரத்திலுள்ள பிராமணர்கள் மிகவும் கூர்மையான அறிவுடையவர்களாவர். அந்த இனத்திலிருந்து தான் பீஷ்வாக் களும் (Peshwas) வருகின்றனர். கொங்கன் (Konkan) என்ற பகுதி மலைத்தொடர் ஓரத்திற்கும் கடற்கரையோரத்திற்கு மிடையேயுள்ள குறுகிய குன்றுகள் அடங்கிய நாடாகும். மனு (Manu) தர்ம சாஸ்திரத்தின்படி பெரும்பான்மையான மக்களைச் சூத்ரர்கள் (Sudras) என்றே அழைக்கலாம். எலிபின்ஸ் டன் இவர்களைப்பற்றிக் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

'மராட்டியர்கள் வரலாற்றிலே ஒரு நாட்டை ஏற்படுத்த முடிய வில்லையெனினும் அவர்களிடமிருந்த சிறப்பான சில பண்புகளால் அவர்கள் ஒன்றுகவே கூடிவாழ்ந்தனர். கானரா (Kanara) தெலிங்கானு ஆகியவை மராட்டியருக்குத் தெற்கேயுள்ள பகுதி களாகும். மராட்டாவிலுள்ள பெரும்பான்மையான மக்கள் இந்துஸ்தானத்திலுள்ள கீழ்மக்களைப் போலவே இருந்தனர். ஆனாலும் அவர்களைக் கானராவிலும் தெலிங்கானுவிலும் உள்ள கீழ் மக்களுடன் ஒப்பிட்டுக் கூறவும் முடியாது. அவர்கள் பலமுள்ள, குட்டையான மக்களாக இருந்தபோதிலும் பார்வைக்கு அழகாக இருக்கின்றனர். சுறு சுறுப்பும் விடாமுயற்சியும் கொண்டவர்களாக இவர்கள் இருக்கின்றனர் இராசபுத்திரர் களைப்போல இவர்களுக்குப் பெருமையும் புகழும் இல்லை யெனினும் அவர்களுக்கு இருந்த சோம்பேறித்தனமும் அறிவின் மையும் இவர்களிடம் காணமுடியாது இராசபுத்திரவீரன் தன் னுடைய குலத்திற்கு மாசுபடியாதவரைக்கும் எந்தக் காரியத் தையும் செய்யத்துணிவான்; ஆனல் விளைவைப்பற்றிக் கவலைப் படுவதில்லை. ஆனல் மராட்டியனே விளைவைப் பற்றித்தான் அதிகமாகக் கவலைப்படுகின்றுன்; ஆனல் முடிவு எப்படி ஏற்படுத்துவது என்பதைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. அவனுக்கு வேண்டியது அவன் விரும்பிய காரியத்தைச் செய்ய வேண்டியதே என்பதாகும்; அதற்காக எல்லா யுக்திகளையும் மேற்கொள்வான்; இன்பங்களைத் துறப்பான்; அவனைப்பற்றியும்

கவலைப்படமாட்டான்; ஆனால் புகழை எய்துவதற்கோ உயிரைத் தியாகம் செய்யவோ அல்லது அவனுடைய நலனை விட்டுக் கொடுக்கவோ முன்வரமாட்டான். இந்த இரண்டு நாட்டின் தோற்றங்களும் இவர்களுடைய குணவியல்புக்கு ஏற்ற மாறியிருக்கின்றன. சாதாரண இராசபுத்திரனிடம் ஒரு பெருந் தன்மை காணப்படுகிறது. ஆனால் பெயர் பெற்ற மராட்டியரிடமும் ஓர் அருவருப்புத் தன்மை காணப்படுகிறது.

ஓர் இராசபுத்திரன் போரிடுவதற்குத் தகுதியானவன். ஆனால் ஒரு மராட்டியனே ஒரு கடுமையான எதிரியானவன்; ஏனெனில், அவனுக்கு வேண்டிய முடிவைப்பெற எந்த துணிச்சலான காரியத்தையும் செய்யத் துணிச்சல், தந்திரம், விடாமுயற்சி, சுறுசுறுப்பு ஆகியவற்றைப் பயன்படுத்தத் தயங்கமாட்டான். மேற்கூறிய குணங்கள் பெரும்பாலும் போர் வீரர்களைத் தான் பொதுவாகக் குறிக்கும். இன்னும் இவர்களைப்பற்றிய கெட்ட இயல்புகளையும் குறிப்பிடலாம். சாதாரண மக்கள் கடும் உழைப்பையும் சிக்கனத்தையும் அமைதியையும் பெற்றவர்களாக இருந்த போதிலும் மராட்டியர்களுக்கே உரியதான தந்திரமும் நாணயமற்ற தன்மையும் உடைவர்களாக இருந்தனர்.

அவர்களுடைய தலைவர்கள் பரம்பரையாகப் பதவி வகித்து வந்த கிராம அதிகாரிகளின் அல்லது ஜில்லா அதிகாரிகளின் குடும்பங்களோடு தொடர்புற்றவர்களாவர். அத் தலைவர்கள் நீண்ட காலமாகவே ஆமத்நகர் பீஜப்பூர் அரசாங்கங்களில் பணியாற்றி வந்தவர்களாவர். அவர்களில் பெரும்பான்மையோர் சூத்திரர் வகுப்பைச் சார்ந்தவர்கள் ஒரு சிலர் அவர்களுடைய உடலில் இராசபுத்திர இரத்தம் ஓடுகின்றது என்று கூறிக்கொண்டு பெருமை தேடினர்.'

**சிவாஜியின் சூழல்**

சிவாஜி இப்பேர்ப்பட்ட நாட்டில் வந்தவராவர். அம் மக்களின் நல்ல பண்புகள், கெட்ட இயல்புகள் ஆகியவற்றில் இவரும் பங்கு பெறுகின்றார். அவருடைய தந்தையான ஷாஜி பான்ஸ்லே (Bhonsle) குடும்பத்தைச் சார்ந்தவராவர். எலிபின்ஸ்டன் கூறிய மராட்டியத் தலைவர்களைப் போலவே இவரும் ஒருவராவர். ஆமத்நகர் அரசாங்கத்திலிருந்து பீஜப்பூர் அரசாங்கத்தில் பணியாற்றினார். சிவாஜியின் அன்னை ஜீஜிபாய் (Jiji Bai) சிறிது மேம்பட்ட குடும்பத்திலிருந்து வந்தவள். இந்து மதத்தில் அசையாத நம்பிக்கை வைத்திருந்தாள்; கதைகளைக் கூறி மகனுக்கு அறிவுரை கூறினாள்; பிராமணர்கள், பசுக்கள் ஜாதி ஆகிய இந்து மதக் கொள்கைகளில் சிவாஜிக்குப் பற்றுதலை ஏற்படுத்திக்

கொடுத்தாள். இராமதாஸ் துக்காராம் ஆகிய மராத்திய கவிஞர்களுடன் அவர் நெருங்கிய தொடர்பு வைத்திருந்தார். அதன் காரணமாக அவருக்கு பக்தியும் வளர்ச்சியுற்றது. இராம தாஸ் அவருக்கு ஆசிரியராகவும் ஞானியாகவும் நண்பராகவும் இருந்தார். ஆனால் துக்காராம் அவருடைய அரசவைக்கு வர மறுத்துவிட்டார். ஆனால் இந்து மதத்திலுள்ள சில நுண்ணிய கருத்துக்களை அவர் சிவாஜிக்கு உணர்த்தினர்.

'உலகில் ஒரே உண்மை இருக்கின்றது; எல்லா மக்களிடத்தும் ஒரே ஆன்மா இருக்கின்றது. அவ்வான்மாவிடத்தில் உன் நம்பிக்கையை வை இராமதாஸ் என்ற கண்ணாடியின் மூலம் உன்னையே பார். ஓ இளவரசனே, முதலில் இதைச் செய்; நீயும் உலகத்திலுள்ளவர்களும் ஆசீர்வதிக்கப்படுவர், உன்னுடைய புகழ் உலகெங்கும் பரவும்' என்று துக்காராம் கூறினர்.

அனுபவமுள்ள இராமதாஸ் அரச குடும்பத்தில் உதித்த அவருடைய சீடருக்கு அரசனின் சில கடமைகளைப் பற்றி அவர் அறிந்த உண்மைகளைக் கூறினர்.

'தேவர்களும், பசுக்களும், பிராமணர்களும் சமயவுணர்ச்சியும் ஆகிய இவற்றைப் பாதுகாக்கவேண்டும். அதற்காகவே கடவுள் உன்னைப் படைத்திருக்கிறர். மதத்தைக் காப்பாற்ற உன்னைத் தவிர உலகில் வேறுயாரும் இல்லை. சமயவுணர்ச்சியின் எச்சத் தைக் காப்பாற்றி இருக்கிறய்.........

சமயவுணர்ச்சி ஒழிந்ததென்றால் வாழ்வதைவிட சாவதே மேலானது; சமயவுணர்ச்சி அழிந்தபிறகு ஏன் வாழ வேண்டும். எல்லா மராட்டியர்களையும் ஒன்று கூட்டு; மதத்தை மீண்டும் தழைக்க வை. சுவர்க்கத்திலிருக்கும் நம்முன்னேர்கள் ஆசி கூறுவர்.[1]

'வஞ்சகம் அறவே ஒழிக்கப்படவேண்டும்' என்ற சமய ஆர்வக் கருத்தைக்கொண்ட கவிஞர் அப்ஸல்கானை வஞ்சகமாகக் கொன்றவரை பாராட்டுவது வியப்புக்குரியதாகும். ஆனாலும், சிவாஜியும் அவர் போற்றிய அன்னையும் உள்பட எல்லா மராட்டியர்களும் தங்களை ஆதரிக்கும் குலதேவதை தங்களைத் துன்புறுத்துபவனை எவ்வித வஞ்சக முறையையும் மேற்கொண்டு கொல்ல அனுமதித்தது என்று ஏகமனத்துடன் நம்பினர். இந் நம்பிக்கை நேர்மை வாய்ந்த திறனாய்வாளர்களின் மனச் சாட்சிக்கு அதிர்ச்சி விளைவிக்கும். அப்ஸல்கான் சிவாஜியைக் கொல்லத்

[1] Rawlinson—Shivaj, the Maratha, 1915. pp. 113-22,

திட்டமிட்டுத் தம் விதியையே விலைக்கு வாங்கினார் என்று சில மராட்டிய நூல்களில் குறிப்பிடப்பெற்றுள்ளது உறுதியான உண்மைகளுக்கு மாறாகும். முஸ்லீம் தளபதியின் படைவீரர்கள் வழியிலிருந்து விலக்கப்பட்டிருந்தனர்; சந்திப்பு நடைபெறும் இடத்தைச் சூழ்ந்திருந்த காட்டில் தம்முடைய தலைவரின் சைகையை எதிர்பார்த்துக் கொண்டு கணக்கற்ற மராட்டியர்கள் மறைந்து நின்று கொண்டிருந்தனர்.

சிவாஜி இந்து மதத்தின் மேல் வைத்திருந்த பற்று, அவர் கையாண்ட தனிவகைப்பட்ட போர் முறை அல்லது அவரது அமைப்பாண்மைத் திறம் ஆகியவை அவர் மக்கள் மீது நிலை நாட்டி இருந்த ஆதிக்கத்துக்குக் காரணங்களாகும். முகலாயப் படைகளை எதிர்க்க அவருடைய கீழ்த்தர நாட்டினருக்கு ஊக்க மூட்டிய தேசிய உணர்ச்சியைத் தட்டி எழுப்புவதற்கு அவருடைய சமய ஆர்வம் தான் மிக்க ஆற்றல் வாய்ந்த காரணமாகும் என்று மிக உறுதியாகக் கூறலாம்.

### சிவாஜியின் சிறப்புப் பண்புகள்

'அரசர் இறைவனின் அவதாரம். இதுபோன்ற வீரர் பிறந்ததுமில்லை; பிறக்கப்போவதுமில்லை' என்று அந்நாட்டவர்களுள் ஒருவர் மிக்க பெருமையுடன் கூறுகிறார்.

முன்னால் குறிப்பிட்டுள்ள குறிப்புகள் அவரது வாழ்க்கையின் முற்பகுதியில் ஒரு கொள்ளைத் தலைவன் என்ற முறையிலும் பிந்திய நாட்களில் இராச்சியத்தைப் பொறுப்புடன் ஆளும் அரசர் என்ற முறையிலும் சிவாஜி கொண்டிருந்த செல்வாக்கையும் அவரது முனைப்பான வெற்றிகளையும் விளக்குகின்றன. ஆனாலும் அவை எல்லா விவரங்களையும் கொடுக்கவில்லை. அவருடைய காலத்திலும் சூழ்நிலைகளிலும் அவர் மேற்கொண்டிருந்த பதவியில் எவரிடமும் எதிர்பார்க்க முடியாத சிறப்புப் பண்புகளை சிவாஜி பெற்றிருந்தார்; அவற்றைச் செயலும் படுத்தினார்.

சிறப்புமிக்க அப்பண்புகளைப் பற்றிய நிறைவுற்ற குறிப்பை காபிகான் என்ற முஸ்லீம் வரலாற்றறிஞரின் ஏட்டுப்பகுதிகளில் காண்பது வியப்புக்குரியதாகும். ஏனென்றால் அவ்வறிஞர் சிவாஜியை 'நெறிகெட்டவர்', 'பேயின் மூர்க்க மகன்' 'மோசடியின் தந்தை' என்று வருணிப்பவராவார். இருந்த போதிலும் காபிகான் பின் வருவதை எழுதி அவரையும் சிவாஜியையும் சிறப்பித்துக் கொள்ளுகிறார்.

'வஞ்சகமிக்க, மதிப்பற்ற இம்மனிதனை நல்வினை தழுவியதால் இவருடைய படைகள் அதிகமாயின. இவருடைய ஆற்றல் நாள் தோறும் அதிகமாகிக் கொண்டிருந்தது. இவர் புதிய அரண்களை அமைத்தார். அவரது ஆட்சிப் பகுதிகளை ஒழுங்காக அமைத்துக் கொள்வதிலும் பீஜப்பூரின் ஆட்சிப் பகுதிகளைக் கொள்ளையடிப் பதிலும் ஈடுபட்டார். தூரத் துறைமுகங்களிலிருந்து வரும் வாணிகக் கூட்டங்களைத் தாக்கிப் பொருள்களையும் பெண்களையும் அவர் கைப்பற்றிக்கொண்டார். அவரது கூட்டாளிகள் எவ்விடத் தைச் சூறையாடினாலும் அவர்கள் மசூதிகளுக்கும் வேத புத்தகத் துக்கும் மற்றவர்களுடைய பெண்டிர்களுக்கும் தீங்கிழைக்கக் கூடாது என்று ஆணையிட்டிருந்தார். திருக்குர்ரான் அவருடைய கைக்கு எட்டியபொழுது அதை மிக்க வணக்கத்துடன் எடுத்து அவருடைய முஸல்மான் கூட்டாளிகளிடம் ஒப்படைத்தார். அவருடைய ஆட்கள் எந்த இந்து அல்லது முகம்மதியனின் பெண் களையும் சிறைபிடித்து விட்டால், அப்பெண்களுக்கு நண்பர்கள் இல்லையெனில் அவர்களுடைய உறவினர்கள் அவர்களை விடுதலை செய்ய மீட்புப் பணத்துடன் வரும்வரை அவர்களை அவர் தமது கண்காணிப்பிலேயே வைத்திருந்தார். ஒரு பெண் அடிமைப் பெண் என்று அவர் உணர்ந்தபொழுது அவள் தமக்கே உரிய சொத்து எனக் கருதி அவர் அவளை அவரிடத்திலேயே வைத்துக் கொள்வார். ஓரிடம் சூறையாடப்பட்டால் அவ்விடத்தைச் சேர்ந்த ஏழை மக்களின் சொத்து, செப்புக்காசு, பித்தளை, செப்புப் பாத்திரங்கள் எல்லாம் அவற்றை கண்டு பிடித்தவருக்கே உரியவையாகும் என்றும் நாணயங்களாக அச்சிடப்பட்டதும் படாததுமான தங்கம், வெள்ளி முதலியனவும் இரத்தினங்கள், விலையுயர்ந்த பொருள்கள், அணிமணிகள், ஆகியவையும் மற்றப் பொருள்களும் அவற்றைக் கண்டுபிடித்தவர்களுக்குச் சேரா தென்றும் அவற்றை எவ்விதத்திலும் பாழாக்காது அதிகாரி களிடம் ஒப்படைக்கவேண்டுமென்றும் அவ்வதிகாரிகள் அவற்றை சிவாஜியின் அரசாங்கத்தினிடம் ஒப்படைக்க வேண்டுமென்றும் அவர் ஆணை பிறப்பித்தார்.'

இவருடைய படையை பெண்கள் பின் தொடர்ந்து செல்ல வில்லையாதலால் அது அக்காலத்திய மற்ற இந்தியப் படை களோடும் வெல்லெஸ்லியின் (Wellesly) காலத்திய ஆங்கில-இந்தியப் (Anglo-Indian) படைகளோடும் வேறுபட்டிருந்தது. 'எவ்வீரனும் தன்னுடைய மனைவியையோ, வைப்பாட்டியையோ, விலைமாதரையோ தன்னுடன் அழைத்துச் செல்லக்கூடாது; இவ்வாணையை மீறி நடக்கிற எவனும் கொல்லப்படுவான்.'

ஒழுங்கு மிகக் கடுமையாக வற்புறுத்தப்பட்டது. கீழ்ப்படியாத தற்கும் கடமையை நிறைவேற்றத் தவறியதற்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டது.

## படை அமைப்பு

முதலில் காலாட்படை மட்டுமே நல்லவிதமாக அமைக்கப் பட்டிருந்தது. அது பல அணிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு அணியிலும் பத்து போர் வீரர்கள் வீதம் ஒவ்வொரு அதிகாரியிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. நாயக் (Nayak) ஜும்லாதார் (Jumladar) ஹஸாரி (Hajari) என்ற அதிகாரிகள் அழைக்கப் பட்டனர். குதிரைப்படையிலும் இருபத்தைந்து பேர் கொண்ட பல அணிகள் ஹவல்தார் (Havaldar) ஜும்லாதார், ஹஸாரி என்ற அதிகாரிகளின் மேற்பார்வையில் இயங்கி வந்தன. படைத் தளபதியை சார்னோபாத் (Sarnobat) அல்லது சேனாதிபதி என்று அழைத்தனர். குதிரைப்படையை உருவாக்கியபொழுது அதற்கென்று தனியாக ஒரு தளபதியையும் நியமித்தனர். குதிரைப்படை வீரர்களில் 'பர்கீஸ்' (Bargis) என்ற பகுதிகள் அரசாங்கம் தந்த குதிரைகளையே பயன்படுத்தினர்; 'சில்லாதார் கள்' என்று அழைக்கப்படுபவர்கள் அவர்களே குதிரைகளையும் கொண்டு வந்தனர். சில்லாதார்கள் சிவாஜியின் கட்டுப்பாட்டில் இல்லை. நாளடைவில், இப்போர் வீரர்கள் தொகை மிகவும் குறைந்து விட்டது. ஜாகீர் முறையை சிவாஜி விரும்பவில்லை. அவருடைய அதிகாரிகளை அவர் சம்பளம் கொடுத்தே நியமித்துக் கொண்டார்.

கோட்டைகளை அவர் மிகவும் எச்சரிக்கையாகவே பாதுகாத்து வந்தார். அங்குப் பணியாற்றும் அதிகாரிகள் இலஞ்சம் வாங்காமல் பாதுகாத்தார். சிவாஜியின் ஆட்சியில் இக்கோட்டைகள் தாம் மிகவும் முக்கியமாகக் கருதப்பட்டன. அதனால் அவைகளை நல்ல முறையில் அவர் பாதுகாத்து வந்தார். சிவாஜியின் படை வீரர்களுக்கு ஒழுங்காகப்பயிற்சி அளிக்க முடியவில்லையென்றாலும் அப்பொழுதுள்ள அவருடைய எதிரிகளின் படைகளைவிடத் தாம் குறைந்து விடவில்லை. அவருடைய படைவீரர்கள் எளிமையாகவும் விரைவாகவும் முன் னேறுகிறவர்களாகவும் காணப்பட்டனர். இக் குறைகளே அவருடையே படையின் மிகச் சிறப்பான அம்சங்களாகும். மழை காலத்தில் மராட்டியப்படை வெளியேற முடியாத நிலை இருந்ததால் அப்பொழுதெல்லாம் போர் முகாம்களிலேயே இருந் தனர், படையெடுப்பெல்லாம் இந்து மரபின்படி வழக்கமாக

தசரா காலத்தில்தான் ஏற்படும்; அதாவது அக்டோபர் மாதத்தில் வழக்கமாக ஆரம்பித்து ஏப்ரல் வரையில் நீடிக்கும்.

அவர் ஒரு சுமாரான கடற் படையை கலாபாவில் வைத்திருந்தார். ஜின்ஜிராவைச் (Jingira) சார்ந்த ஸிதி (Sidi) அல்லது அபீஸீனிய கடற்கொள்ளைக்காரர்களைத் தடுக்கவும் அதே சமயத்தில் வளமிக்க முகலாய கப்பல்களைக் கொள்ளையடிக்கவும் அக் கப்பற்படை பயன்படுத்தப்பட்டது.

## உள்நாட்டு ஆட்சி

மராட்டிய அரசன் வருமானத்தின் ஒரு பகுதி சாதாரண கொள்ளைகளால் சேர்க்கப்பட்டதாகும். மற்ற பெரும்பான்மையான வருமானம் அருகிலுள்ள மற்ற அரசர்களின் ஆதிக்கத்திலிருந்த பகுதிகள் கொள்ளைகளிலிருந்து பாதுகாப்பு பெறுவதற்காக மராட்டிய அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்டதாகும். கொள்ளையடிப்பதற்கென்றே படையை அவர்கள் நன்ருக அமைத்திருந்தனர். இவர்களுடைய நேரடியான ஆதிக்கத்திற்குள் சிலப் பகுதிகளைக் கொண்டுவர வேண்டுமென்பது அவர்களது நோக்கமல்ல. இவ்வித கொள்ளைப் பொருள்களை சௌத் (chauth) அல்லது நான்கில் ஒரு பகுதி என்று இவர்கள் அழைத்தனர். இந்த நான்கில் ஒரு பகுதியாவது வரையறுக்கப்பட்ட நில வருமானத்திலிருந்து கணக்கிடப்படுவதாகும். கொள்ளைகள் ஏற்படாமல் இருப்பதற்காக மராட்டியர்கள் அளிக்கும் பாதுகாப்புக்கு இந்த நான்கில் ஒரு பகுதி வருமானத்தை அவர்கள் பெறுகின்றனர். 1670 முதற்கொண்டே இம்முறை பின்பற்றப்பட்டு வந்தது. காண்டேஷ் இராச்சியத்தில் ஒரு பகுதி மொகலாயப் பேரரசரிடம் இருந்தபோதிலும் அந்த அரசாங்கம் சௌத் கப்பத்தை மராட்டியர்களுக்கு கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. சில சமயங்களில் அதிகப்படியாக பத்தில் ஒரு பங்கையும் அவர்கள் பெற்றனர். அதை அவர்கள் சர்தேஷ் முகி (Sardeshmukh) என்றழைத்தனர். இவ்விதமாக வசூலிப்பதையே பெரும்பாலும் மராட்டிய அரசர் விரும்பினர். ஏனெனில் போர் வீரர்களிடம் சொள்ளை அடிக்கும் பொறுப்பை விட்டுவிட்டால் அரசாங்கத்திற்கு அப்பொருள்கள் கிடைக்குமென்று உறுதியாகக் கூறமுடியாது. இவைகளைப்பற்றிய விவரங்கள் பிராமண மராட்டிய கணக்குப்பிள்ளைத் தவிர யாருக்குமே சரியாகத் தெரியாது. வேண்டுமென்றே அவ்விதமான சிக்கல்களை ஏற்படுத்திவிட்டனர். கணக்கும் மற்ற எழுத்து வேலைகளெல்லாம் பிராமணர்களிடம் தான் ஒப்படைக்கப்பட்டிருந்தன. போர் செய்கின்ற மராட்டி

யர்கள் இவைகளைப்பற்றியெல்லாம் தெரிந்துகொள்ள சிறிதும் விரும்பவில்லை.

சிவாஜியுங்கூட எழுதவோ அல்லது படிக்கவோ கற்றுக் கொள்ள மறுத்துவிட்டார். இவ்விதமான வேலைகளெல்லாம் ஒரு போர்வீரர்களுக்கு ஏற்றதல்ல என்று அவர்கள் கருதினர்.

1680-ல் சிவாஜி இறக்கும்பொழுது அவருடைய நேரடியான ஆட்சியிலிருந்த நிலப்பகுதி மிகவும் சிறியதாகும். மேற்கு மலைத் தொடரும் கல்யாண் பகுதிக்கு இடையேயுள்ள கோங்கன் பகுதியும், (இப்பொழுது தானா ஜில்லாவில் உள்ளது) கோவாவும், அதனுடன் மலைக்குக் கிழக்குப் பகுதியில் உள்ள சில ஜில்லாக் களையும் கொண்டதாகவே அவருடைய நிலப்பகுதி பரவி யிருந்தது. அதாவது கிழக்கு மேற்காக அந்நிலப்பகுதி ஒரு நூறு மைல் நீளமுள்ளதாகத்தான் இருந்தது. தெற்கிலுள்ள சில பகுதிகளில் அவருடைய சகோரதரரான வெங்காஜிக்கு ஆட்சி பொறுப்பு இருந்தது. அப்பகுதிகளெல்லாம் சரிவர வரையறுக்கப் படாமல் அங்கும் இங்குமாக சிதறியிருக்தன. சிவாஜியின் நேரடியான ஆதிக்கத்திலுள்ள பகுதிகளில் மட்டுமே அவருடைய ஆட்சிமுறை அமைந்திருந்தது.

### அரசாங்கம்

ராஜாதான் அவ்வரசாங்கத்தை இயக்கி வந்தார். அவருக்கு உதவியாக எட்டு அமைச்சர்கள் இருந்தனர். அவர்களில் முக்கிய மானவர் பீஷ்வா என்றழைக்கப்பட்டார். மற்ற அமைச்சர்களிடம் நிதித்துறை, வெளிநாட்டுத்துறை போன்ற மற்றப் பொறுப்புகள் ஒப்படைக்கப்பெற்றிருந்தன. இந்து மதத்தைப்பற்றியும் மற்ற பல இந்து மரபுகளையும், சட்டதிட்டங்களையும் ஜோதிடத்தையும் பரிசீலனை செய்ய ஒரு சாஸ்திரியுங்கூட நியமிக்கப்படடிருந்தார். இந்து வார்த்தைகளைப் பயன்படுத்தினாலும் மொகலாய ஆட்சி முறையைத்தான் அதிகமாகப் பின்பற்றினர். பொதுவாக இந்த எட்டு அமைச்சர்களும் இராணுவ காரியங்களிலேதான் அதிகமாக ஈடுபட்டிருந்தனர். அப்பொழுதெல்லாம் தலைநகரில் அவருக்குப் பதிலாக அவருடைய பிரதிநிதிகள் ஆட்சிப் பொறுப்பைக் கவனித்து வந்தனர். ஒவ்வொரு ஜில்லா அதிகாரிக்கும் எட்டு உதவி அதிகாரிகள் அவருக்கு உதவி செய்ய நியமிக்கப்பட் டனர். கடிதம் எழுதுதல், கணக்குப் பார்த்தல், நிதி அலுவலகங் களைக் கவனித்துக் கொள்ளுதல் ஆகிய வேலைகளை அவர்கள் செய்தனர்.

சிவில் தகராறுகள் ஏற்படுமெனில் அவைகள் இந்து மரபின் படி பஞ்சாயத்து மூலமாகவோ அல்லது அண்மையிலுள்ள பெருங்குடி மக்கள் மூலமாகவோ தீர்த்துக்கொள்ளப்பட்டன,

**வருமானம்**

சிவாஜியின் முன்னேய ஆசிரியராக இருந்த தாதாஜிகோன் தேவ் (Dadaji Kondeve) என்பவர் வகுத்த வருமான முறையை அடிப்படையாக வைத்துத்தான் அவர்கள் பின்பற்றினர். பொதுப்படையாக நிலச்சாகுபடியின்மீது வரி விதிப்பதை நிறுத்திவிட்டு விளைச்சல்களின் ஐந்தில் இரண்டு பகுதியை மட்டுமே அரசாங்கம் வரியாக வசூலித்தது ஆனல் அவருடைய ஜில்லாக்களில் அடிக்கடி போர்கள் ஏற்பட்டதால் மிகவும் பாதிக்கப்பட்டன. சிவாஜிக்கு இவற்றையெல்லாம் கவனித்து ஒழுங்கு படுத்தப் போதிய அவகாசம் கிடைக்கவில்லை.

1673-ல் அப்பொழுது அப்பகுதிகளில் சுற்றுப் பிரயாணம் செய்த டாக்டர் பிரையர் (Dr. Fryer) என்பவர் அரசாங்கம் சரிவர இயங்கவில்லை என்று எழுதுகிறார். அவர் கோவாவிலிருந்து எழுதுவதாவது: இப்பொழுது இரத்தினகிரி ஜில்லாவிலுள்ள வெங்குர்லா (Vengurla) சிவாஜியின் மிகவும் கொடுமையான ஆட்சிக்குட்பட்டிருந்ததென்றும்; மராட்டியர்கள் அண்மையில் கைப்பற்றிய வடகனராவில் உள்ள கார்வார் (Karwar) என்ற துறைமுகப்பட்டணத்தைப்பற்றி அவர் குறிப்பிடுவதாவது,

'அப் பகுதியினுள்ள மக்கள் மிகவும் துயருற்றிருந்தனர். அவர்களுடைய குறைகளைக் கேட்பதற்கும் துயரமாக இருந்தது. அவர்களெல்லாம் சிவாஜியிடம் அடிமைகளைப் போலவே மிகவும் பொறுமையுடன் இருந்தனர். ஜில்லா அதிகாரிகள் அல்லது குட்டித் தலைவர்களாக 'தேசாய்கள்' (Dasais) முன்பிருந்த நிலத்தின் விலையைக் காட்டிலும் இரட்டிப்பு விலை கூறி நிலங்களை அம்மக்கள் வாங்கியே தீரவேண்டுமென்று கட்டாயப்படுத்தினர். அவர்கள் கூறுகின்ற மிகவும் கடுமையான நிபந்தனைகளுக்கு அவர்கள் ஒப்புக்கொள்ளாவிடில் அதுவும் அவர்கள் பணக்காரர்களாக இருந்துவிட்டால் அவர்களைக் கைதியாக்கி சிறைச்சாலைக்கு அனுப்பி வைத்தனர். அங்கே அவர்களுக்குப் பல கொடுமைகளை இழைத்து சாகவடித்து விடுகின்றனர். அவர்களுடைய பணத்தை எங்கே வைத்திருக்கிறார்கள் என்று சொல்லாவிடில், அவர்கள் பல சித்ரவதைகளுக்கு உட்பட்டுச் சாகும் வரையிலும் பல கொடுமைகளை அனுபவிக்க நேர்ந்தது. இதைப்போலவே பல பிராமணர்களையும் கூட, அவர்களுடைய சதையைக் கத்தியால்

பிய்த்தெறிந்தும், பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பிகளால் அவர்களுக்குச் சூடு வைத்தும் பல கொடுமைகளுக்குள்ளாக்கினர். அவர்களுடைய மரபின்படி பிராமணர்களை அடிப்பது பாவம் என்பதையும் அவர்கள் பொருட்படுத்தவில்லை. இவ்விதமான கொடிய நிலைதான் இந்தியா முழுவதுமே இருந்தது. அரசர்கள் அவர்களுடைய கவர்னர்களைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டால் அவர்களுடைய சொத்துக்களையும் நிலங்களையும் பறிமுதல் செய்து கொடுமைப் படுத்தினர். பிறகு மீண்டும் சில சமயங்களில் அவர்களையே பதவியில் நியமித்தனர். இந்த முறையைப் பின்பற்றித்தான் தேசாய்களும் குன்பிகளும் (Kunbis) குடியானவர்களைப் பெரிய மீன் சிறிய மீனை விழுங்குவதைப்போலவே இரையாக்கினர். அவர்களையெல்லாம் நிலம் மூலமாகவும், கடல் மூலமாகவும் கொண்டுவந்து அவர்களையும் அவர்களது குடும்பத்தாரையும் மீளாத அடிமை முறைக்குள்ளாக்கினர். ஆனால் பீஜப்பூர் அரசருடைய ஆட்சியில் வரிகளெல்லாம் அவ்வளவு அதிகமாக இல்லை. மக்களும்கூட மகிழ்ச்சியுடன் காணப்பட்டனர்.[1]

### கொள்ளையடிக்கும் அரசு

*1664*-ல் சூரத்தின்மீது முதன் முறையாகக் கொள்ளையடிக்கும்பொழுது, ஒரு முகாமில் சிவாஜி உட்கார்ந்துகொண்டு, சொத்துக்களை ஒளித்து வைத்திருப்பவர்களின் தலைகளை வெட்டச் சொல்லியும் கைகளை வெட்டச் சொல்லியும் உத்தரவிட்டுக்கொண்டிருப்பதை ஸ்மித்(Simth) என்ற, ஆங்கிலேயர்கள் கண்களால் பார்த்துக் கூறுகிறார். நேரே இக்காட்சியைப் பார்த்த அவருடைய கூற்றை மிகப்படுத்திக் கூறிவிட்டார் என்று கூறுவதில் எவ்விதமான பொருளும் இல்லை.[2] வழக்கமாக இந்தியக் கொள்ளைக்காரர்கள் கொள்ளையடிக்கும்பொழுது எப்படி நடந்துகொள்வார்களோ அப்படியே சிவாஜியும் கொள்ளையில் ஈடுபடும்பொழுது நடந்துகொள்கிறார். ஆனால் அவர் புரிந்த கொடுமைகளெல்லாம் அவருடைய சில தரும காரியங்களால் மறைக்கப்பட்டுவிட்டன. அவருடைய இந்த தரும சிந்தனைக்குக் காரணம் துக்காராமின் அறிவுரைகளே. இந்துக்கள் அதிகாரத்தைப் போற்றுகின்ற பழக்கத்தை உடையவர்கள். சிவாஜியின் வெற்றிகளும் மக்களிடையே அவரைப்பற்றி மேலான அபிப்பிராயத்தை ஏற்படுத்திவிட்டன.

[1] (A New Account-ed- Crooke, Vol ii p 3.—புதிய பதிப்பு)

[2] ராலின்சன் (Rawlinson) பக்கம் *98* பார்க்க. இந்தக் கூற்றை கிராண்ட் டப் (Vol-I—பக்கம் *199*) மேற்கோளாகக் கூறுகிறார். இது கிழக்கிந்தியக் கம்பெனியின் குறிப்புகளிலிருந்து எடுக்கப் பெற்றது. (Times history **Supplement—20 March, 15 May 1919.)**

மேலும் அவர் பெற்ற வெற்றிகளுடன் அவருடைய அதிகப்படி யான பக்தி சிந்தனையும் பிராமணர்களிடம் பக்தி சிரத்தையுடன் சன்மானங்களை வழங்குவதும் பசுக்களுக்குப் பாதுகாப்பு அளித்தல் போன்ற சில குணங்களும் சேர்ந்திருந்ததால் அந்த வெற்றி வீரன் கடவுளின் அவதாரமே என்று மக்கள் அவரைப் போற்றி வணங்கினர். இவ்விதமான சில பண்புகள் அவரிடம் இருந்த காரணத்தால் மட்டும் அவர் ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவரென்பதையும் இந்துக்கள், முஸ்லீம்கள் ஆகிய ஒன்றுமறி யாத பாமர மக்களுக்கு அவர் இழைத்த கொடுமைகளையும்—ஆகிய இந்த உண்மைகளை மறைத்துவிட முடியாது. இவைகளெல்லாம் அவருடைய சொந்த காலம் கருதி மக்களுக்கு இழைத்த கொடுமைகளாகும் சிவாஜியினுடைய காலத்தில் யாரும் எந்த நல்ல காரியத்தையும் செய்யவில்லை; அல்லது இந்தியாவிற்குப் பயனுள்ளபடி எதையும் செய்யவில்லை. மேலே கூறிய சில இந்துக்களின் உணர்ச்சிகளை மட்டும் அவர்கள் திருப்தி செய்தனர்.

## வரலாற்றுக்குத் தடை

தக்காணத்திலிருந்து, இப்பொழுது இந்துஸ்தானத்தில் அவுரங்கசீப் என்ன செய்துகொண்டிருக்கிறார் என்பதைப் பார்ப்போம். ஏற்கெனவே சில நிகழ்ச்சிகளைப்பற்றிக் குறிப்பிட் டிருந்தோம். அவருடைய 'பதினோராவது' ஆட்சியாண்டில் (1668–9) அதிகார பூர்வமாக நிகழ்ச்சிகளைச் சேகரிப்பதையும், மற்றும் தனிப்பட்டவர்கள் வரலாறுகளை எழுதி வெளியிடுவதையும் தடை செய்து, ஒரு மடத்தனமான உத்தரவைப் பிறப்பித்தார். இதன் நோக்கம், அவுரங்கசீப்பின் அளவுக்கு மீறிய அடக்கமான குணம் என்றுதான் ஊகிக்கப்படுகிறது. இந்த உத்தரவினால் வரலாற்று நிகழ்ச்சிகளை எழுதி வந்த காபிகானுக்குப் (Khabi Khan) பெரிய சிக்கல் ஏற்பட்டுவிட்டது. நாற்பதாண்டு காலத்து நிகழ்ச்சிகளைப் பின்னர் வறையரை செய்வதில் அவருக்குப் பல கஷ்டங்கள் ஏற்பட்டன. அவருடைய பதினோராவது ஆட்சி யாண்டிலிருந்து இருபத்து ஏழாவது ஆட்சி ஆண்டுவரையிலும் நிகழ்ச்சிகளை வரையறுப்பதில் பல சிக்கல்கள் ஏற்பட்டன.

ஆனால் இந்தச் சமயத்தில் ஐரோப்பியப் பிரயாணிகள் எழுதிவைத்த குறிப்புகளும் மற்றும் நவீனகாலத்து ஆராய்ச்சி களும் ஓரளவிற்குத்தான் அக்காலத்து வரலாற்றை நிர்ணயம் செய்யப் பயனுள்ளதாக அமைகின்றது. அதனால் காபிகான் எழுதிவைக்காத குறை நிறைவேற்றப் படுகின்றதென்றாலும் திட்டவட்டமாகவும் காலவாரியுமானதுமான நிகழ்ச்சிகள் குறிப்

பிடாமல் விட்டுப்போனதாய் சில சந்தேகங்கள் எழத்தான் செய்கின்றன.

## அவுரங்கசீப் ஒரு தூய்மையாளர்

அவுரங்கசீப் ஒரு முஸ்லீம் தூய்மையாளர் என்று கூறலாம். சுன்னி இஸ்லாமிய மதக்கோட்பாடுகளுக்குட்பட்ட பேரரசாக அவருடைய நாடு இருக்கவேண்டுமென்று அவர் விரும்பினார். முதல் கலிபாக்கள் Khalifs) வரையறுத்த மரபுகளின்படியும் ஒழுங்கின்படியும் அவருடைய நாடு ஆட்சி வசப்படவேண்டுமென்று விரும்பினார். அப்படிப் பின்பற்றுவதால் அரசாங்கத்திற்கு ஏற்படக்கூடிய அபாயங்களையும், நிதிவருவாய் நஷ்டத்தையும்கூட அவர் பொருட்படுத்தவில்லை. அதனால் மட்டுமே அவருடைய கொள்கைகளை விட்டுக்கொடுக்க அவர் விரும்பவில்லை. அவருடைய மனச் சாட்சியின்படியே அவர் நடக்க விரும்பினார். அவருடைய இம் மதப்பற்றும் மத உணர்ச்சிகளும் வெறும் போலித்தனமானவையென்றும், வெளிவேடமென்றும் சில ஆசிரியர்கள் கூறுவதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. ஒரு நாட்டை ஆட்சி செய்கின்ற பொறுப்பு என்னதான் மனித வர்க்கத்திற்கே அருவருப்புடையதாக இருந்தபோதிலும் அப்பொறுப்பிலிருந்து அவர் விலகவில்லை. ஆனால் மதத்தைப் பொறுத்தவரையிலும் அவர் உண்மையுள்ளவராகவும் கடைசி வரையிலும் அதன்படியே வாழ்ந்தும் வந்திருக்கின்றார். மனிதர்கள் பின்பற்றவேண்டிய சில தருமங்களெல்லாம் ஆட்சி முறைக்கு ஒவ்வாதவை என்று மற்றப் பல எதேச்சாதிகாரிகள் கொண்டிருந்த கருத்துக்களைத்தான் இவரும் பின்பற்றினார். அவருடைய தந்தையை நடத்திய விதமும் மற்றும் அவருடைய சகோதரர்களுக்கு அளித்த தண்டனைகளைப்பற்றியும் அவர் சிறிதும் கவலை கொள்ளவில்லை என்றும், ஆனால் அவருடைய மனச்சாட்சி தெளிவாகவே இருந்ததென்றும் கூறலாம். நாட்டின் பாதுகாப்பிற்காகவும், அவருடைய அதிகாரத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்காகவும் அவர் சில இரக்கமற்ற கொடுமைகளையும் இழைக்கத்தவறவில்லை. அவ்விதமான செயல்கள் அவருடைய சமயக் கருத்துக்களை எவ்விதத்திலும் பாதித்ததாகத் தெரியவில்லை.

## கோயில்களை அழித்தல்

அவர் அரியணையில் வீற்றிருந்து பத்து ஆண்டுகள் ஆன பிறகு 1669-ல் அவருடைய நிலை உறுதியாகிவிட்டது என்பதை நன்கறிந்துகொண்டார். அதே சமயத்தில் ராஜா ஜெய்சிங்கும் இறந்துவிடவே முன்பு ஆட்சி செய்ததைக்காட்டிலும் இப்பொழுது

தம் விருப்பப்படி எவ்விதத் தடையுமின்றி ஆட்சி செய்ய முற்பட்டார். ஒரு நம்பத்தகுந்த ஆசிரியர் எழுதிய குறிப்பிலிருந்து அவுரங்கசீப்பிற்கு 18 ஏப்ரல் 1669-ல் (சுல்க்கதா, 17, ஹிஜிரி 1079) அவருடைய மாகாணங்களான தத்தா (Thattah) முல்தான், வாரணசி, குறிப்பாக வாரணசி மாகாணத்திலிருந்த பிராமணர்கள் வெளிப்படையாக இந்து மதப் பிரசாரம் செய்வதாகவும் வெளி நாடுகளிலிருந்து கல்வி கற்க வந்த முஸ்லீம் மாணவர்களையும் தாக்கிப் பேசுவதாகவும் செய்திகள் கிடைத்தனவென்று தெரிய வருகிறது. இந்து விக்கிரக ஆராதனைப் பிரசாரங்கள் இவ்வளவு வெளிப்படையாக நடப்பதென்பது அவுரங்கசீப்பிற்கு இழிவாகத் தோன்றின. அதனால் எவ்வித தங்கு தடையின்றி இந்துப் பள்ளிகளையும் கோயில்களையும் அழித்துவிடும்படி மாகாண கவர்னர்களுக்கு அவுரங்கசீப் உத்தரவிட்டார். தவிர, இந்து விக்கிரக ஆராதனைகளையும் அவர்களுடைய பிரசாரங்களையும் தடை செய்யும்படி உத்தரவிட்டார். இந்தப் பேரரசரின் உத்தரவுகள் வெளியிடப்பட்டு ஐந்து மாதம் கழித்து வாரணசியிலுள்ள பிசாநாதர் கோயிலை (Bishanath) அழித்துவிட்டதாக அவருடைய அதிகாரிகள் அறிவித்தனர்.

சிறிது காலம் கழித்து (ஹிஜிரி 1080—ரம்சானில்) இந்தியாவிலுள்ள மிகப் பழம்பெருமை வாய்ந்த மதுராவில் உள்ள கேசவ தேவாலயத்தைத் (Keshava Deva Temple) தரைமட்டமாக்கி விட்டதாக வந்த செய்தி கேட்டுத் திருப்தி அடைந்தார். அதற்கு அண்மையில் நிறைய பொருட் செலவில் ஒரு பெரிய மசூதி நிர்மாணிக்கப்பட்டது. இதைப்பற்றி (வரலாற்றாசிரியர்) எழுதுவதாவது: இஸ்லாமிய மதத்தை அருளிய இறைவன் புகழ் ஓங்குக! அவருடைய அருளால், மிகவும் பாடுபட்டு, போலித் தேவர்களை அழித்து ஒரு வெற்றிகரமான சாதனையைப் புரிந்தோம்! உண்மையான மதத்தை ஆதரிப்பதைக்கண்டு அங்குள்ள அரசர்களின் ஆணவம் அடங்கியது. விக்கிரகங்களைப் போலவே அவர்களுடைய முகங்களும் பீதி அடைந்து சுவரைப்பார்த்துத் திரும்பிக்கொண்டன; விலையுயர்ந்த ஆபரணங்கள் அணிந்த விக்கிரகங்களைக் கோயில்களிலிருந்து அப்புறப்படுத்தி, ஆக்ராவிற்கு எடுத்துச் சென்றனர். அங்குள்ள நவாப் பேகம் சாஹியின் (Nawab Begam Sahi) மசூதியில் உள்ள படிகளின் அடியில் அவைகள் வைக்கப்பட்டன. அங்கே உண்மையான மதத்தை நம்புகிறவர்களின் காலடி படாமல் பத்திரமாக இருக்கும். மதுரா என்ற பெயரை மாற்றி அதற்கு இஸ்லாம்பாத் என்ற பெயரைச் சூட்டினர். அரசாங்க பத்திரங்களிலும் இப் புதுப்பெயரே

குறிக்கப்பட்டது. மக்களும் அவ்விதமே அழைத்தனர்.[1] இவ்வித மான செய்கைகளின் விளைவுகளை அவர் அறிந்து கொள்ளாமல் இல்லை. அவர் வேண்டுமென்றே அரசர்களின் ஆதரவையும் அவர்களின் நம்பிக்கையையும் இழந்துவிட்டார். அவருடைய சமயக் கொள்கையைப் பின்பற்றுவதில் ஏற்பட்ட மகிழ்ச்சியைக் காட்டிலும் அரசர்களின் ஆதரவை இழந்ததை அவர் பெருட் படுத்தவில்லை.

### இராசபுத்திர போரின் துவக்கம்

மார்வாரைச் சார்ந்த ராஜா ஜஸ்வந்த் சிங் (ஜோத்புரி) தக்கா ணத்தில் தோல்வியடைந்த பிறகு அவரை இழிவு படுத்தும் நோக்கத்துடன் சிந்து நதிக்கு மேற்கேயுள்ளதும், கைபர் கணவாயின் முகப்பில் உள்ளதுமான ஜாம் ரட் என்ற ஒரு சிறிய இடத் திற்குத் தளபதியாக அனுப்பினர். அந்த இடத்தை இந்துக்கள் அறவே வெறுத்தனர். 1478-இறுதியில் அவர் அந்தப் பகுதியி லேயே இறந்துவிட்டார். அவருடைய மறைவுக்குப் பிறகு, மேலும் இந்து ராஜாக்களையும் இந்துக்களையும் தடையில்லாமல் இழிவு படுத்துவதற்கு அவுரங்கசீப்பிற்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. ஜஸ்வந்த்சிங் இறந்த பிறகு அவருடை மனைவிக்கு இரண்டு புத்திரர்கள் லாகூரில் பிறந்தனர். ஒருவன் இறந்து விட்டான; மற்றொருவனை தில்லிக்குக் கொண்டு வந்தனர். அவனுடைய அன்னையிடமிருந்து பிரித்து, அவனை அந்தப்புரத் துக்கு அனுப்பும்படி அவுரங்கசீப் உத்தரவிட்டார். இந்தக் குழந்தையான அஜீத்சிங்கை (Ajit Singh) காப்பாற்றுவதற்காக பல இராசபுத்திரர்களும் போராடித் தியாகம் செய்தனர். துர்கதாஸ் (Durgadas) இந்தக் குழந்தையைக் காப்பாற்றிக் கடத்தி விட்டார். பிறகு அந்தக் குழந்தையின் அன்னை மீவார் அரச னிடம் (உதயபூர்) பாதுகாப்புக் கோரவே, அவ்வரசனும் புகலிடம் கொடுத்தார். அப்பொழுது அரசனுக இருந்தவர் ராணு ராஜ்சிங் என்பவராவர். அதற்குப் பிறகு மீவார் மார்வார் ஆகிய இராச புத்திர அரசர்களுக்கும் பேரரசருக்கும் போர் நிகழ்ந்தது. இந்தப் போரில் ஆம்பர் (ஜெயப்பூர்) அரசன் மட்டும் பேரரசனின் பக்கமே சேர்ந்துகொண்டார். 1479 துவக்கத்தில் அவுரங்கசீப்

[1] கோயில்களை அழித்த நாட்களைத் திட்டவட்டமாக மாசிர்-இ ஆலம்கிரி (Masir-i-Alangiri) (E & D) பாகம் vii பக்கம் 183-ல் குறித்துள்ளனர். அவுரங்கசீப்பின் மசூதி, ஆலம்கிரியின் மசூதி, வாரணசியிலுள்ள ஒரு சிறப்பான கட்டடமாகும். 1669-ல் சைவ விஸ்வேஸ்வரா ஆலயம் அழிக்கப்பட்ட இடத்தில் இந்த மசூதி நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆலயத்தைத்தான் ஒரு முஸ்லீம் ஆசிரியர் தவறுதலாக விசாநாத் கோயில் என்று குறிப்பிடுகிறார். இஸ்லாமாபாத் என்ற பெயரும் வழக்கிழந்துவிட்டது. கேசவ தேவர் கோயிலைப் பற்றி கிரவ்ஸ் எழுதிய மதுரா, அலகாபாத் 1883-பார்க்கவும்.

ஆஜ்மீருக்குச் சென்று, அங்கே இரண்டு ஆண்டுகள் வரையிலும் (செப்டம்பர் 1681) தங்கியிருந்தார்.

### ஜெஸ்ஸியா வரியை மீண்டும் விதித்தல்

ஜஸ்வந்த் சிங் இறந்த உடனே அவுரங்கசீப் ஜெஸ்ஸியா வரியை துணிச்சலுடன் முஸ்லீம் அல்லாதவர்கள்மீது விதித்தார். ஜெஸ்ஸியா என்பது முஸ்லீம்கள் அல்லாதவர்கள்மீது விதிக்கப் பட்ட ஆள் வரியாகும். அக்பர் இவ்வரியை அவருடைய ஆட்சியின் துவக்கத்திலேயே ரத்து செய்திருந்தார். அவுரங்கசீப் இவ்வரியை விதிப்பதற்கான நோக்கங்கள் விக்கிர ஆராதனை செய்பவர்களைத் தடுத்தும் இஸ்லாமிய நாட்டிற்கும், இஸ்லாமிய மதத்தை நம்பாதவர்களுக்கும் உள்ள சலுகைகளை எடுத்துக்காட் டலும் ஆம் என்று காபிகான் (Kafi Khan) கூறுகிறார்.

மிகவும் பெருந்தன்மையான முறையில் இவ்வரியைக் கண்டித்து நீண்டதொரு மனு பேரரசனுக்கு அனுப்பப்பட்டது. அந்த மனுவை முழுவதும் இங்குக்கூற முடியாவிடினும் அதிலுள்ள சில குறிப்புகளை இங்கே கூறுகின்றோம்.

அக்பர்; ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆகிய அரசர்களின் சமயப் பொறையைக் குறிப்பிட்டு இந்த மனுவை எழுதியவர் கூறுவ தாவது:

“உங்களுடைய முன்னோர்களின் நல்லெண்ணம் அவ்விதமாக இருந்தது. இவ்விதமாக தாராளமான கொள்கைகளைப்பின்பற்றிய போதிலும், அவ்வப்பொழுது அவர்கள் படையெடுத்து நாடுகளைக் கைப்பற்றியும் நிலைமையை சீர்திருத்தியும் வந்திருக்கின்றனர். அவர்கள் பல நாடுகளையும் கோட்டைகளையும் கைப்பற்றி கீழ் படியச் செய்திருக்கின்றனர். ஆனால் உங்களுடைய ஆட்சி காலத் திலோ, பல அரசர்கள் பேரரசிடமிருந்து விலகிவிட்டனர். தவிர மற்றப் பல பகுதிகளும் தொடர்ந்து விலகிக்கொள்ளும் நிலைமை இருக்கிறது. பல கொடுமைகளும் அழிவும் பரந்த அளவில் எங்கும் காணப்படுகின்றன. உங்களுடைய குடிமக்களின் உரிமைகள் பறிபோய்விட்டன; உங்களுடைய பேரரசில் உள்ள ஒவ்வொரு மாகாணத்திலும் வறுமை தாண்டவமாடுகிறது; மக்கள் சிதறி ஓடுகின்றனர்; பலவிதமான இடையூறுகள் நிகழ்ந்தவண்ண மிருக்கின்றன.

நீங்கள் நம்பிக்கை வைத்திருக்கும் புனிதமான நூல்களி லிருந்தே, எல்லா மனித குலத்திற்கும் கடவுள் ஒன்றே என்ற உண்மையைப் புரிந்திருக்க வேண்டும். முஸ்லீம்களுக்கு மட்டும்

தனிக் கடவுள் ஒருவர் இல்லை. விக்கிரக ஆராதனை செய்பவர்களும் முஸ்லீம்களும் கடவுள் முன்பு ஒரே விதமாகத்தான் இருக்கின்றனர். நிற வேற்றுமை அவருடைய படைப்பினால் ஏற்பட்டதாகும். அவர் தாம் நம்மையெல்லாம் வாழ வைக்கின்றவர். உங்களுடைய ஆலயங்களிலும் அவருடைய பெயரில்தான்பிரார்த்தனைகள் நடக்கின்றன. அவ்வாலயங்களில் மணியோசை எழுப்பிக் கடவுளின் நாமங்களை அழைத்தபோதிலும் கடவுளையே போற்றுகிறீர்கள். மற்றவர்களின் மதக் கோட்பாடுகளையோ அல்லது அவர்கள் மரபுகளையோ அழிக்க முற்படுவதால் கடவுளின் கருணையைப் பெறமுடியாது. நாம் ஒரு சித்திரத்தை அழித்தால் அந்த ஓவியனின் கோபத்திற்குத்தான் ஆளாகிறோம். 'கடவுளின் படைப்புகளைத் திருத்தவோ, மாற்றவோ வேண்டா'' என்று ஒரு கவிஞன் எழுதியதை நான் குறிப்பிட விரும்புகிறேன்.

சுருக்கமாகக் கூறவேண்டுமெனில் இந்துக்கள்மீது விதிக்கப்பட்ட இந்த வரி நியாயமானதல்ல; நல்ல கொள்கைக்கு இது முரண்பட்டதாகும்; இந்த வரி நாட்டிலே வறுமையை ஏற்படுத்திவிடும்; தவிர இந்துஸ்தானத்தின் சட்டங்களில் தலையிடுவதும் மாற்றங்களை ஏற்படுத்துவதுமாகும்.[1]

அவுரங்கசீப்பின் ஆரம்பகாலத்தில் சரியான ஆட்சி இல்லாததால் விளைந்த பொதுப்படையான துயரத்தை இக்கடிதம் எடுத்துக்காட்டுகின்றது. பலபோர்களினால் இராசபுதனத்தில் அதிகமான கொடுமைகள் ஏற்பட்டன. மொகலாயப்படையெடுப்புகளைத் தடுக்க ராணா அங்கே பல நாச வேலைகளைச் செய்து

[1] இந்தக் கடிதத்தை எழுதியவர் ராணா ராஜ்சிங் என்று டாட் (Tod) அபிப்பிராயப்படுகிறார். பேராசியர் சர்க்கார் இக்கடிதத்தை எழுதியவர் சிவாஜியாக இருக்கலாம் என்று நம்புகிறார். (Modern Review—Mahabad-1908—பக்கம் 21) இதற்கு அவர் ஆதாரமாகக் கூறுவது R. A. S. MS. No. 71. இக்கடிதத்தை எழுதியவர் சிவாஜியின் பிராமண ஆலோசகரான நில பிரபு முன்ஷி என்று கருதப்படுகிறார். சிவாஜிக்கு எழுதப்படிக்கத் தெரியாததலால் அவரால் இப்பேர்ப்பட்ட கடிதத்தை உருவாக்கியிருக்க முடியாது.

ஸ்டுவார்ட் (Stewart என்பரின் கருத்தின்படி (பக்கம் 308) வங்காளத்தில் ஜெஸ்ஸியா வரி சொத்தின் மதிப்பீட்டில் ஆயிரத்திற்கு 6½ சதவிகிதம் வசூலிக்கப்பட்டது. கிறித்தவர்கள் இதைத் தவிர அவர்களுடைய வியாபாரத்திற்காக 1½ சதவிகிதம் அதிகமாகவே கொடுத்தனர். நோயாளிகளும் முடவர்களும் குருடர்களும் இவ்வரி அளிப்பதிலிருந்து விலக்கப்பட்டனர். கிறித்துவர்கள் மீது வரி விதிக்கப்படுவதைப்பற்றி ஸ்டுவார்டின் மேற்கோளாவது 'மூன்று ஐரோப்பிய கம்பெனிகளும் இந்த ஜெஸ்ஸியா வரியை அளிக்க மறுத்துவிட்டன. அதனால் அவுரங்கசீப் இவ்வரி விதிப்பிலிருந்து அக்கம்பெனிகளுச்கு விதிவிலக்களித்தார். ஆனால் ஐரோப்பிய பொருள்களின்மீது ஏற்கெனவே 2 சதவிசுதம் உள்ளதை 3½ சதவிகிதமாக உயர்த்திவிட்டார்; ஏற்கெனவே ஒரு தனி சாஸன உரிமையின்படி இவர்க்ள் 2 சதவிதம் மட்டுமே அளித்துவந்தனர் ஸ்டார்க்சி-கெய்க்வின் கலகம்:பக்கம் 45) (Stratchy-Keigwin' Rebellion, p. 45)

விட்டார். மிஞ்சியிருந்ததையும் முகலாயப் படைகள் அழித்து விட்டன.

பல கோயில்கள் அழிக்கப்பட்டன. உதாரணமாக மே 1679-ல் கான்ஜஹான் பகதூர் ஜோதிபுரியிலுள்ள பல கோயில் களைத் தரைமட்டமாக்கி, அங்கிருந்து பல வண்டிகளில் விக்கிரகங் களைக் கொண்டு வந்ததற்காக அவரை அவுரங்கசீப் அதிகமாகப் போற்றினர். 1679–80-ல் நிகழ்ந்த படையெடுப்புகளில் இராச புதனத்திலுள்ள அநேக கோயில்களுக்குச் சேதங்கள் பல ஏற் பட்டன.

உதயப்பூரிலும் அதற்கு அண்மையிலும் 123 கோயில்களும் அதே இராச்சியத்திலுள்ள சித்தூரில் 63 கோயில்களும் அழிக்கப் பட்டன. ஆம்பர் (ஜெய்ப்பூர்) பேரரசனுடன் நட்புறவு கொண் டிருந்தபோதிலும் அங்கேயும் அதேவிதமான கொடுமைகள்தான் விளைவிக்கப்பட்டன. அப்பகுதியில் உள்ள 66 கோயில்கள் அழிந்தன. மற்றப் பகுதிகளில் நேர்ந்த அழிவுகளைப்பற்றி சர்க் கார், எழுதிய வரலாற்றில் காணலாம். இந்த அழிவு புதிதாகக் கட்டப்பட்ட கோயில்களுக்கு மட்டும் ஏற்பட்டதல்ல.

அவுரங்கசீப்பின் வயது வந்த மூன்று பிள்ளைகளும் முஅஸ்ஸம் ஆஸம். அக்பர் ஆகிய இம்மூன்று இளவரசர்களும் இராசபுதன போர்களில் ஈடுபட்டிருந்தனர். ஆனல் அவர்களுடைய படை யெடுப்புகள் வெற்றி பெறவில்லை. பல போர்களில் அவர்கள் முறியடிக்கப்பட்டனர். மார்வார் (ஜோத்புரி) 1679 கடைசியில் பேரரசுடன் இணைக்கப்பட்டது. ஆனல் அப்பகுதியை முற்றிலும் கைப்பற்ற முடியவில்லை. இன்னும் முப்பது ஆண்டுகளுக்கு அங்கே போர் நீடித்து நடந்து வந்திருக்கிறது.

### இளவரசர் அக்பரின் கலகம்

இளவரசர் அக்பர் அவுரங்கசீப்பின் செல்லக் குழந்தை என்று கருதப்பட்டபோதிலும் அவரையும் அவர் மிகவும் கடிந்து கொண்டதால், அவர் இராசபுத்திரர்களின் உதவியைக்கொண்டு தமக்கென்று ஒரு பேரரசை நிறுவிக்கொள்ளும் எண்ணத்துடன் 1681 முதல் நாளன்று எதிரிகளுடன் சேர்ந்துகொண்டார். அவுரங்கசீப் 1681 ஜனவரி ஆரம்பத்தில் மகனுக்கு இதைக் கண் டித்து ஒரு கடிதம் எழுதினர். அதற்கு மிகவும் வெளிப்படை யாகவே இளவரசர் ஆட்சேபித்துப் பதில் கடிதம் எழுதினர். அவுரங்கசீப் மிரட்டியும் ஆசை வார்த்தைகளைக் காட்டியும், ஏப்படியாவது அக்பரை தம் வசம் இழுக்க முயன்ருர். அந்தச்

சமயத்தில்தான் அவர் இராசபுதனத்தின்மீது எவ்விதமான அபிப்பிராயம் கொண்டிருந்தார் என்பதை அவர் வெளியிட்டார் :

'மனித குலத்தில் காணப்படும் சாத்தான்கள்... ...மிருகங்களைப்போல பார்வையுடையவர்கள்; மிருகங்களைப்போல நெஞ்சம் உடையவர்கள், மிகவும் கெட்ட இராசபுத்திரர்கள்.'

தந்தையின் இக்கூற்றை அக்பர் நிராகரித்துக் கூறியதாவது :

'தந்தையின் சொத்துக்கு எல்லாப் பிள்ளைகளுக்கும் சமமான உரிமைகள் உண்டு........ உண்மையில் இக்கலகத்திற்கு ஆசானாகவும், வழிகாட்டியாகவும் இருப்பவர் (தந்தையை எதிர்த்து மகன் கலகம் செய்வது) பேரரசரே. மற்றவர்கள் தங்களுடைய வழியையே பின்பற்றுகின்றனர். தங்களைப் பின்பற்றித் தாங்கள் சென்ற பாதையிலேயே செல்லின், அப்பாதையை எப்படி அதிர்ஷ்ட மற்ற பாதை என்று கூறலாம்?'

எப்படி அக்பர் இராஜபுத்திரர்களின் உதவியைக்கொண்டு இந்துஸ்தானத்தைக் கைப்பற்றினர் என்பதை நினைவுறுத்தி, மேலும் அவர் எழுதியதாவது :

இராஜபுத்திரர்கள் தின்ற உப்புக்குத் துரோகம் நினைக்கவில்லை. அவர்கள் இன்னும் விசுவாசமுள்ளவர்களாகவே இருக்கின்றனர். தவிர, அவர்களுடைய எசமானர்களின் பிள்ளைகளுக்கு எவ்விதத் தியாகங்களையும் செய்ய அவர்கள் தயாராக இருக்கின்றனர். ஏற்கெனவே மூன்று ஆண்டு காலமாக அவர்கள் மகத்தான தியாகங்களைப் புரிந்திருக்கின்றனர். அதனால்தான் இந்தியாவின் பேரரசரும் அவருடைய வலிமைமிக்க பிள்ளைகளும் திறமையான அமைச்சர்களும், மற்றும் பல பிரபுக்களும் அவர்களைப் பகைத்துக் கொள்ளும் பணியில் ஈடுபட்டுள்ளனர் போலும்! இருந்தபோதிலும், போராட்டத்திற்கு இதுதான் துவக்கமாக இருக்கிறது.

இளவரசன் தொடர்ந்து அரசாங்கத்தின் கொடுமைகளைப் பற்றியும், தக்காணத்திலும், மற்ற மாகாணங்களிலும் உள்ள துயர நிலையைப்பற்றியும், அதிகாரிகளின் ஊழல்களைப்பற்றியும், எழுதுகிறார்.

'அதிகாரிகளும், மற்றும் கணக்குப்பிள்ளைகளும் இப்பொழுது விவசாயம் செய்யத் தொடங்கிவிட்டனர். பெரிய வேலைகளை நிறையத் தங்கம் கொடுத்து விலைக்கு வாங்குகிறார்கள்,

ஒவ்வொருவனும் உண்ட வீட்டிற்கே துரோகம் செய்கிறவனுக் இருக்கிறான்.'

மேலும் அவருடைய தந்தையை அக்பர் மிகவும் கண்டித்து, இந்த உலகத்தை விட்டு விலகி 'உள்ளத்திற்கே சாந்தியைத் தேடிக்கொள்ளவேண்டும்' என்ற ஐரிஷ் (Irish) பழமொழியில் கூறுகிறார். அதைப் பற்றி ஒரு கவிதை புனைந்து கூறுவதாவது:

'நீ என்ன நல்லதை உன் தந்தைக்குச் செய்தாய்?
உன் மகனிடம் எதை எப்படி எதிர்பார்க்கிறாய்?
மனித குலத்திற்கே நீ அறிவாற்றுகிறாய்!
பிறருக்கு நீ போதிப்பதை உனக்கும் போதித்துக் கொள்!

உன்னையே திருத்திக்கொள்ளாவிடில்,
மற்றவர்களுக்கு அறிவுரை அளிப்பதையாவது நிறுத்திக் கொள்!

அக்பர் காரசாரமாக எழுதியதால் மட்டுமே தந்திரசாலியான அவுரங்கசீப்பை மடக்கிவிட முடியவில்லை. அவுரங்கசீப் படையில்லாது தவித்து நின்ற ஒரு நல்ல வாய்ப்பைப் பயன் படுத்திக் கொள்ள அக்பர் தவறி விட்டார். அந்தச் சமயத்தில் அவர் பல கேளிக்கைகளில் ஈடுபட்டிருந்தார். அவுரங்கசீப்பின் மீது அவர் படையெடுத்துச் சென்றபொழுது அவுரங்கசீப்பிற்கு உதவிப் படைகள் வந்து சேர்ந்துவிட்டன. தவிர, இராசபுத்திரர்களும் அப்பொழுது அவரைக்கைவிட்டனர். வேறு வழியின்றி அக்பர் தக்காணத்திற்கு விரைந்து சென்றார். அவருடன் ராஜ் (Raj) ஜின் உண்மையான ஊழியராகப் பணியாற்றிய துர்கதாஸ் என்பவரும், மற்றும் சில விசுவாசமுள்ள ஊழியர்களுமே இருந்தனர். 1680-ல் சிவாஜி இறந்துவிடவே அவருடைய மகனை ராஜா சாம்பாஜி தான் அப்பொழுது அவருக்கு அடைக்கலம் கொடுத்தது; ஆனால் விரைவில் அவர் இந்தியாவைவிட்டு வெளியேறிப் பாரசீகத்திற்குச் சென்றுவிட்டார். அங்கிருந்து கொண்டே தந்தையின் மீது அவர் எடுத்த நடவடிக்கைகள் பயன் அளிக்கவில்லை. 1704-ல் வேறு நாட்டிலேயே அவர் இறந்து விட்டார்.[1]

மீவாருடன் செய்துவந்த போர் 1681-ல் ஒரு உடன்படிக்கையுடன் முடிவுற்றது. அதன்படி, மீவார் அரசர் கொடுக்க வேண்டிய ஜெஸ்ஸியாவுக்குப் பதிலாக ஒரு நிலப்பகுதியை

[1] சரியான தேதிக்கு E & D பாகம் VII பக்கம் 196; சர்க்கார் எழுதிய வரலாறு ஆகிய நூல்களைப் பார்க்கவும். பீல் (Beall) என்பவரும் மற்றவர்களும் தவறுதலாக 1706 என்று கூறுகிறார்கள். அக்பர் எழுதிய கடிதத்தின் சில மேற்கோள்கள், Modern Review January 1915 பக்கங்கள் 44, 48-ல் சர்க்கார் எழுதிய கட்டுரையிலிருந்து எடுக்கப்பெற்றவையாகும்.

பேரரசனுக்கு அளித்துவிட்டார். தவிர இந்த அருவருப்பான வரியும் அப் பகுதியில் ரத்தாகியது. ஆனால் மீவாருடன் தொடர்ந்து முப்பதாண்டு காலம் வரையிலும் போர் நீடித்து 1709-ல் தான் முடிவடைந்தது. அவுரங்கசீப்பிற்குப் பிறகு பட்டம் எய்திய பகதூர் ஷா, ஜஸ்வந்த்சிங்கின் மகனை அஜித்சிங்கை மார்வார் அரசனாக முடிவாக ஏற்றுக்கொண்டார்.

அவுரங்கசீப் எப்போதுமே சில இராசபுத்திரர்களிடமிருந்து சேவைகளைப் பெற்றுக்கொண்டிருந்த போதிலும் அவருடைய அர்த்தமற்ற மதவெறியின் காரணமாக இந்த இரண்டு இராச புத்திர இராச்சியங்களின் ஆதரவை இழந்துவிட்டார். அவுரங்க சீப்பின் முன்னோர்கள் காலத்தில் அவர்கள் நல்ல சேவைகளை அளித்திருக்கிறார்கள்.

### அவுரங்கசீப் தக்காணத்திற்குச் செல்லுதல்

தக்காணத்தில் அக்பர் இருப்பதால் பல அபாயங்கள் நிகழும் என்று ஊகித்து, அவுரங்கசீப் தக்காணத்திற்கு நேரடியாகவே 1681-ல் சென்றார். நீண்டகாலமாகவே நிறைவேற்றப்படாது காலங்கடத்தி வந்த சுல்தானியப் பகுதிகளைக் கைப்பற்றுதலும், வளர்ந்து வந்த மராட்டியர்களின் ஆதிக்கத்தைத் தடுப்பதும், அவர் தக்காணத்திற்குச் செல்லக் காரணங்களாக இருந்தன. சிவாஜியின் மரணமும் அவருக்கு ஒரு நல்ல வாய்ப்பு அளித்தது. பெர்னியர் (Bernier) கூறுவதைப்போல, ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் முகலாய தளபதிகள் தக்காணத்தில் போரை நீடிப்பதற்காக பல வழிகளைப் பின்பற்ற அவர்கள் தயங்கவில்லை. அப்படிச் செய்வ தால் அவர்களுக்குப் பணமும் புகழும் கிடைத்தன. இந்துஸ் தானத்தில் உள்ள சிப்பாய்களுக்குத் தக்காணம்தான் சோறும் ஆதரவும் அளித்து வருகிறதென்று பொதுப்படையாகப் பேசப் பட்டது. ஃபிரையர் (Fryer) என்பவரும் இவ்விதமாகத்தான் கூறுகிறார். ‘அவுரங்கசீப்பின் கொள்கை தோல்வியுற்றதற்குக் காரணமே இந்த சிப்பாய்களும் பெரிய அமீர்களும் (Ombrahs) சோம்பேறித்தனமாக இருப்பதும் சம்பளம் பெற்றுக்கொண்டு இருப்பதும் தான்—‘இராணுவத்தினருக்குச் சோறு அளிப்பது’ என்று அவர் அபிப்பிராயப்படுகிறார். பேரரசன் செப்டம்பர் 1681-ல் அஜ்மீரை விட்டுப் புறப்பட்டு, 1681 நவம்பர் மாதத்தில் புரான்பூர் வந்து சேர்ந்தார். அடுத்த ஆண்டில் அவர் அவுரங்கா பாத்திற்குச் சென்றார். 1683-ல் ஆமத்நகரில் முகாமிட்டார். அங்கிருந்து 1685-ல் சோலாப்பூருக்குப் (Sholapur) படை யெடுத்துச் சென்றார்.

இந்த ஆண்டுகளில் இளவரசன் அக்பரை சிறைப்படுத்தும் முயற்சிகள் பயனளிக்கவில்லை. சில சமயங்களில் மராட்டியர் களுடன் சிறு போர்களையும் நடத்தினர். 1685-ல் மராட்டியர் களுக்கு தோல்வி ஏற்படவே, கோல்கொண்டா மீது அவர் படை யெடுக்க முடிவு செய்தார். இப்படையெடுப்பின் பொறுப்பை இளவரசன் முஅஸ்ஸாமிடம் அவர் கொடுத்திருந்தார். ஆனல், இளவரசன் எதிரியுடன் சமாதானம் செய்துகொண்டார். அதிகாரபூர்வமாக இந்தச் சமாதானத்தை ஒப்புக்கொண்ட போதிலும் பேரரசர் மறைமுகமாக இதை ஏற்றுக்கொள்ளவில்லை.

## பீஜப்பூர் சரணடைதல்

அக்டோபர் 1686-ல் பீஜப்பூரின் மீது தொடுத்த படை யெடுப்பு நின்றது. அந்நகரம் சரணடைந்தது. அந்த நகரத்தின் இளம் அரசரான சிகந்தர் ஆயுள்கைதியாக்கப்பட்டார். ஆதில் ஷாஹி பரம்பரையும் முடிவுற்றது. அதனுடைய சுதந்திரம் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு பறிபோனது. அவர் சிறை யிலேயே இறந்துவிட்டார். அவருடைய சாவு விஷம் கொடுக்கப் பட்டதால் ஏற்பட்டது என்று கூறப்படுகிறது. இது வழக்கமான முறை போலும்! இந்த அழகான நகரம் நீண்டகாலமாகவே பொலிவிழந்து கிடந்தது. சமீபத்தில் தான் அதனுடைய பழைய செழிப்பைச் சிறிதளவு பெற்றது. சில அம்சங்களில் பீஜப்பூரில் உள்ள கட்டடங்கள் மொகலாயக் கட்டடங்களை அழகில் மிஞ்சுகின்றன.

## கோல்கொண்டாவைக் கைப்பற்றுதல்

கோல்கொண்டா அல்லது ஹைதராபாத் அரசரான அபு-இ-ஹசன் (Abu-i-Hasan) அவுரங்கசீப்பின் பிரத்தியோகக் கோபத் திற்கு ஆளானர், ஏனெனில் அவர் பிராமண அமைச்சர்களை வேலைக்கு அமர்த்தியிருந்தார் என்றும் சாம்பாஜிக்குப் பண உதவி செய்தாரென்றும் காரணங்கள் கூறப்பட்டன. அவருடைய சொந்த வாழ்க்கை ஊழல் மிகுந்திருந்ததாலும், அவுரங்கசீப்பிற்கு அவர்மீது வெறுப்பு ஏற்பட்டிருந்ததென்றும் கூறப்படுகிறது. கோல்கொண்டா கோட்டையின்மீது இறுதி யாகத் தாக்குதல் 1687-ல் நிகழ்ந்த பொழுது அவ்வரசர் அவருடைய பல தீய பழக்கங்களை விட்டுவிட்டு மிகவும் போற்றத் தக்க முறையில் அக்கோட்டையைப் பாதுகாத்தார். அவருக்கு உதவியாக அப்துல்ரசாக் என்ற போர்வீரர் மிகவும் திறமை யாகப் போரிட்டார். அவுரங்கசீப்பும் அவருடைய தளபதிகளும் இக் கோட்டையைக் கைப்பற்றக் குண்டுவீசுதல் கன்னி வைத்தல், கோட்டைமீது ஏறுதல் என்ற பல வழிகளைப் பின்பற்றியும் அவர்

களால் அக் கோட்டையைக் கைப்பற்ற முடியவில்லை. அவர்களுடைய படையினருக்கு அளவு கடந்த சேதங்கள் ஏற்பட்டன. அக்பர் காலத்தில் நிகழ்ந்த அசீர்கார் கோட்டை முற்றுகையைப் போல, இந்தக் கோட்டையும் நீண்டகால முற்றுகையைத்தாங்க நிறைய உணவுப் பொருள்களை சேகரித்து வைத்திருந்தது. அதனால் வேறுவழியின்றி அவருடைய முன்னோர் பின்பற்றிய இலஞ்ச முறையைப் பின்பற்றினார். ஓர் அதிகாரிக்கு இலஞ்சம் கொடுத்துக் கோட்டையின் வாயில் ஒன்றைத் திறந்து விடும்படி செய்தார். அந்த அதிகாரியும் காட்டிக் கொடுத்து விட்டான். அப்துல்ரசாக் இறுதிவரையிலும் வீரமாய்ப் போராடியே கீழே விழுந்தார். அவருடைய உடலில் எழுபது காயங்கள் அப்பொழுது ஏற்பட்டிருந்தன. அவருடைய வீரத்தையும் விசுவாசத்தையும் பாராட்டி அவுரங்கசீப் ஒரு நல்ல வைத்தியரிடம் அவருடைய காயங்களை ஆற்றும் பொறுப்பை விட்டுவைத்தார். அப்துல் ரசாக் பிழைத்துக்கொண்டதுமின்றி ஓராண்டு கழித்து விருப்பமின்றியே பேரரசில் ஒரு பதவியையும் ஏற்றுக்கொண்டார்.

சிறைபடுத்தப்பட்ட அரசரை மிகவும் மரியாதையாகவே நடத்தி அவருக்குத் தகுந்த வாழ்க்கைப் பணத்தையும் கொடுத்துத் தௌலதாபாத் கோட்டையிலேயே இருக்கும்படி அவுரங்கசீப் உத்தரவிட்டார் என்று காபிகான் கூறுகிறார். அக்டோபர் 1687-ல் கோல்கொண்டா வீழ்ச்சியுற்றபிறகு குதுப் ஷாஹி (Qutb Shahi) அரச பரம்பரையின் வரலாறும் முற்றுப் பெற்றது.

## படையெடுப்பு விவேகமற்ற கொள்கை

முப்பதாண்டு காலமாக சுல்தானியப் பகுதிகளைக் கைப்பற்ற எடுத்துக்கொண்ட முயற்சிகள் இப்பொழுதுதான் அவருக்கு வெற்றி அளித்தன. தக்காணத்தில் உள்ள முஸ்லீம் அரசுகளை அவர் அழித்துவிட்டது, விவேகமற்ற செயலாகும் என்று எல்லா வரலாற்றாசிரியர்களும் ஒருமுகமாகக் கூறுகின்றனர். அவர் இப் பகுதிகளை அழித்துவிட்டதால் அங்குள்ள படை வீரர்கள் வேறு வழியின்றி நாட்டைக் கொள்ளையடிக்க முற்பட்டுவிட்டனர். மராட்டிய தலைவர்களுக்கும் அப் பகுதியில் இதுகாறும் இருந்து வந்த பயம் நீங்கிவிட்டது. மராட்டியர்களை அவுரங்கசீப் அதிகமாக வெறுத்தார் என்பது தெரிந்ததே. ஆனால் அவர்களுடைய பலத்தை அவர் இன்னும் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை.

### ராஜா சாம்பாஜியைத் தூக்கு மேடைக்கு அனுப்புதல்

1689-ல் அவருடைய படைகள் சிவாஜியின் வாரிசான சாம்பாஜியையும் அவருடைய பிராமண அமைச்சரான கலுஷாவையும் சங்கமேஸ்வர் என்ற இடத்தில் சிறைப்பிடித்தார். அரசர் அவருக்குச் சொந்தமான கோட்டைகளை விட்டுவிட்டால் அவருடைய உயிருக்கு ஆபத்திருக்காது என்று ஒரு சந்தர்ப்பம் அளித்தபொழுது மொகலாய அதிகாரிகளை சாம்பாஜி மிகக் கடுமையாகப் பேசிவிட்டார். அதனால் கோபமடைந்த அவுரங்கசீப் சாம்பாஜியையும், அவருடைய அமைச்சரையும் மற்றும் அவர்களைச் சார்ந்த பத்து அல்லது பன்னிரண்டு பேர்களையும் மிகவும் கொடுமையான முறையில் கொல்ல உத்தர விட்டார். அவர்களுடைய நாக்குகள் பிடுங்கப்பெற்றன; மற்றும் பல கொடுமைகள் இழைக்கப்பெற்று, அவர்கள் கொல்லப் பட்டனர். அவுரங்கசீப்பே இக் கொடுமைகளை இழைக்கும்படி உத்தரவிட்டார். இக் கொடுமைகள் அவர் மனத்தைவிட்டு நீங்கவில்லை. ராய்கார் கோட்டை வீழ்ச்சியுற்ற பொழுது சாம்பாஜியின் மகனை ஏழு வயது கொண்ட சிவாஜி, ஆனால் சாஹு (Shahu) என்று வழக்கமாக அழைக்கப்படுபவன் சிறைப் படுத்தப்பட்டான். ஆனால் அவனைக் கொல்லவில்லை. அவனை அரண்மனையிலேயே வளர்த்துப் பிறகு 700-க்கு மன்சப்தாராக நியமித்தார்.

### மொகலாயர் ஆட்சி மேலும் விரிவடைதல்

சாம்பாஜியை சிறைப்படுத்திக் கொலை செய்துவிட்டதால் மராட்டியர்கள் வீழ்ச்சியுறுவர் என்ற நம்பிக்கை மேலும் அதிகரித்தது. பேரரசருக்கு உண்மையிலேயே இந்தப் படையெடுப்பில் சிறிது வெற்றி ஏற்பட்டது. 1691-ல் தெற்கிலுள்ள தூரப் பகுதிகளாக தஞ்சாவூரிலும், திருச்சியிலும், மொகலாயர்கள் கப்பம் வசூலித்தனர். மொகலாயர் ஆட்சி அந்த ஆண்டில் தான் மிகவும் விரிவடைந்ததாகக் கொள்ளவேண்டும்.

### முஅஸ்ஸம் இளவரசனைக் கைது செய்தல்

அவுரங்கசீப்பின் மூத்த மகனை முஅஸ்ஸம் இளவரசர் அல்லது ஷா ஆலம், கோல்கொண்டா பீஜப்பூர் சுல்தான்களிடம் கருணை காட்டினாரென்றும் அவருடைய தந்தை இந்த அரசுகளை அழித்ததை அவர் கண்டித்தாரென்று கூறப்படுகிறது. தவிர அவருடைய தந்தையின் எதிரிகளுடன் அவர் தொடர்பு வைத்துக் கொண்டார். பீஜப்பூர்மீது மொகலாயர்கள் முற்றுகை செய்த பொழுது அவர்களுக்கு இளவரசன் பொருள்களை அளித்து உதவி

செய்தாரென்றும் அவர்மீது குற்றம் சாட்டப்பட்டு மார்ச் 1687-ல் கைது செய்யப்பட்டார். அவர் சிறைக் கைதியாக முதலில் வைக்கப்பட்டபொழுது அவர் மிகவும் கொடுமையாக நடத்தப்பட்டார். பிறகுதான் கொடுமைகள் சிறிது தளர்த்தப்பட்டன. ஏழாண்டு வரையிலும் சிறைத் தண்டனையை அனுபவித்து அவர் ஏப்ரல் 1694-ல் விடுதலைச் செய்யப்பட்டார். பிறகு அவர் காபூலில் கவர்னராக நியமிக்கப்பட்டார். அவர் சிறையில் அடைபட்டிருந்தபொழுது அவருடைய அடுத்த சகோதரரான இளவரசன் ஆஸம் மொகலாயப் பேரரசனுக அவருடைய தந்தை தம்மை தேர்ந்தெடுக்கப் போவதாக முழு நம்பிக்கையுடன் இருந்தார்; அதனால் முஅஸ்ஸமின் விடுதலை அவருக்குப் பெரிய ஏமாற்றத்தை அளித்தது. அவரை விடுதலை செய்ததும் வயோதிகப் பேரரசின் தந்திரமாக இருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது. அவர் எதிர்பார்த்தபடியே இளவரசன் அக்பர் மணிமகுடத்தைக் கைப்பற்ற 12,000 பாரசீக குதிரை வீரர்களுடன் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார். ஆனுல் ஷாஆலமின் (இளவரசன் முஅஸ்ஸாம்) வலிமைமிக்க படை முன்பு அவருடைய படை ஒன்றும் செய்ய முடியாததால் அவர் பின்வாங்கிவிட்டார்.

## வீணன படையெடுப்பு

சாம்பாஜி இறந்தவுடனே அவருடைய சகோதரரான ராஜாராம் (Rajaram) தெற்கிலுள்ள செஞ்சிக்குச் சென்று அங்கிருந்து மராட்டிய அரசாங்கத்தை நடத்தி வந்தார். 1700-ல் அவரும் இறந்துவிடவே, அவருடைய மனைவி தாராபாய் என்ற திறமை மிக்க பெண், அவருடைய பிரதிநிதியாக முன்னின்று மராட்டிய அரசாங்கத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தாள். அவள் ஆட்சி செய்தபொழுது மொகலாயர்களுக்கு நிம்மதியே இல்லை. அவள் தலைநகரை சதாராவுக்கு (Satara) மாற்றிக் கொண்டாள்.

தொடர்ந்து மூன்று மராட்டிய அரசர்கள் இறந்துவிடவே மராட்டியர்கள் வலிமை சீர்குலைந்து விட்டனர் என்று இயற்கையாகவே மொகலாயர்கள் நம்பினர். ஆனுல் அவர்கள் எதிர்பார்த்தது நடக்கவில்லை. மத்திய அரசாங்கம் சிறிது வலிமை குறைந்து விட்டது என்பது உண்மையேயெனினும் பல ஜாகிர்களை அளித்துப் பணம் பெற்றுக்கொண்டதால், மத்திய அரசாங்கம் நிதியிலிருந்து அதிகமாகச் செலவாகவில்லை. ஆனுல் எதிரிகளை எதிர்த்துப் போராடும் வலிமை குறையாமல் தொடர்ந்து நீடிக்கப் பெற்றது. 1698 முதற்கொண்டே அவுரங்கசீப் அப்பகுதிகளில் மேற்கொண்ட படையெடுப்பு நிகழ்ந்துவிட்டதுமன்றி, தோல்வியுற்றது. அவுரங்கசீப்பின் உடல் வலிமை குறையவில்லை

யெனினும் அவருடைய அதகாரிகளை அவரால் கட்டுப்படுத்த முடியவில்லை. அவருடைய அதிகாரிகள் பணத்தையும், காலத்தையும் வீணாக விரயம் செய்து வந்தனர்.

பிரதம அமைச்சர் அஸாத்கானின் மகனை சுல்பிர்கான் திறமைமிக்க மொகலாய தளபதியாக இருந்தபோதிலும் வேண்டுமென்றே செஞ்சிக் கோட்டை முற்றுகையை ஏழாண்டு காலம் நீட்டித்தார். தவிர வேண்டுமென்றே ராஜாராம் தப்பித்துக் கொள்ளவும் விட்டுவிட்டார். அப்பொழுது அவுரங்கசீப் இறந்து விட்டாரென்று ஒரு வதந்தி கிளம்பியது. அவுரங்கசீப்பின் செல்லக் குமாரனை இளவரசர் கம்பக்ஷ் இச்செய்தியைக் கேள்வியுற்று எதிரியுடன் தொடர்பு வைத்துக்கொண்டதுமன்றி அவருடனேயே சேர்ந்துகொள்ளவும் திட்டமிட்டார். ஆனால் சுல்பிகர்கான் (Zulfigar Khan) அவரைக் கைது செய்து அவுரங்கசீப்பிடம் அனுப்பிவைத்தார். ஆனால் சுல்பிகர்கான் இப்படிச் செய்ததை அவுரங்கசீப் தனிப்பட்ட முறையில் சிறிதும் விரும்பவில்லை.[1] பிளேக் காலரா போன்ற தொத்து வியாதிகள் தக்காணத்தில் எட்டு ஆண்டுகள் வரையிலும் நீடித்தன. பல முறைகள் வெள்ளம் மொகலாயப் படைகளுக்குச் சேதத்தை விளைவித்தது. அப்பொழுதெல்லாம் அவர்கள் போர் செய்வதை நிறுத்தியிருந்தனர். வடக்குக் கொங்கானில் மட்டுமே முத்தபர்கான் (Mutabar Khan) ஓரளவிற்கு நிரந்தரமாக வெற்றிபெற்றார்.

அவுரங்கசீப் மட்டும் பிடிவாதமாக சில தளபதிகளிடமிருந்து ஒவ்வொரு கோட்டையாக விலை கொடுத்து வாங்கிக்கொண்டு வந்தார்: அவ்விதமாக விலை கொடுத்துப் பெற்ற கோட்டைகளைப் பற்றி காபிகான் ஒரு பட்டியல் கொடுக்கிறார். ஓரிரண்டு கோட்டைகளை மட்டுமே போரிட்டு வெற்றி பெற்றதாகவும் கூறுகிறார். மிக நீண்ட காலமாக அவர் வாழ்ந்துவிட்டார். அவருடைய இறுதிக்காலத்தில் அவருடைய அறிவு மழுங்கிவிட்டதென்றாலும் பழைய தந்திர குணத்தை மட்டும் இன்னும் விட்டுவிடவில்லை. இப்பொழுது அவரால் சரியாக நிர்வாகம் செய்ய முடியவில்லை.[2]

[1] கம்பக்ஷ் இளவரசனின் துரோகத்தைப்பற்றி பில்லிமாரியா (Bilimoria) வெளியிட்ட கடிதம் CLXXIV பார்க்கவும், கெமிலிகேரரி (Gemelli Caeri) இவரை சிகந்தர் என்று தவறாகக் கூறுகிறார். பீஜப்பூரின் மாஜி அரசனின் பெயருடன் இவரது பெயரையும் சேர்த்துவிட்டார்.

[2] சூழ்ச்சிகளைப் பின்பற்றாமல் யாரும் சரியாக ஆட்சி செய்ய முடியாது......... சூழ்ச்சியோடு இணைந்ததோர் அரசாங்கம் எப்பொழுதும் நிலைபெற்றிருக்கும். இக்கலையில் வல்லமை பெற்றவர் எப்பொழுதுமே அரசனாக இருக்க முடியும். ,.. ... சூழ்ச்சியை குற்றம் என்று கூறுவது குர்ரானுக்கும் முரண்பட்டதாக இருப்பதாகும். (சர்க்கார்–எழுதிய அனெக்டோட்ஸ் ஆப் அவுரங்கசீப்– பக்கம்96) (Sarka–Anecdotes of Aurangazeb p. 96).

அவருடைய தந்தையின் குணம் மிகவும் மாறிவிட்டதாகவும் அவருடைய உணர்ச்சிகள் இயற்கையாகவே இல்லையென்றும் இளவரசர் ஆஸம் கவனித்து வருவதை காபிகான் கூறுகிறார். அவுரங்கசீப் எப்பொழுதும் யாரையும் நம்பியதில்லை. எல்லா அரசாங்கப் பொறுப்புகளையும் அவரே நேரில் கவனித்து வந்திருக்கிறார். பொதுவாகப் பல பகுதிகளிலுள்ள அரசாங்க விவகாரங்கள் முற்றிலும் அவருடைய கவனத்திலிருந்து விலகிவந்தன. அவர் சேர்த்துவைத்திருந்த எண்ணற்ற நிதி இப்பொழுது வீணாக விரயமாகிவருகிறது.[1]

இவ்விதமாக தந்திரமிக்க இந்த எதேச்சாதிகாரி அவருடைய கடைசி இருபத்தாறு ஆண்டுகளை வீணாக்கினார். தக்காணத்திலிருந்து அவர் திரும்பவே இல்லை. தக்காணம் அவருடைய புகழுக்கும் உடலுக்கும் கல்லறையாகிவிட்டது.

**டாக்டர் கெமிலி-கோரியின் வருணனை (Dr. Gamelli Careri)**

அப்பொழுது இந்தியாவிற்கு வந்த பல ஐரோப்பியப் பிரயாணிகள் அவுரங்கசீப்பைப்பற்றி எழுதியிருக்கிறார்கள். அவர்களுள் டாக்டர் கெமிலி கோரி அவுரங்கசீப்பின் போர் முகாம்களையும், அரண்மனை வாழ்க்கையையும் பற்றி எழுதிய குறிப்பு மிகவும் சிறப்பானதாகக் கருதப்படுகிறது. அவர் இத்தாலியில் வழக்கறிஞராவார். அவர் எழுதிய குறிப்பு 1695 துவக்கத்தில் தக்காணத்தில் எழுதப்பட்டதாகும். அவுரங்கசீப் அப்பொழுது மார்ச், ஏப்ரல் மாதங்களில் கல்கலா அல்லது கல்கலி (Galgala or Galgali) என்ற இடத்தில் முகாமிட்டிருந்தார் அந்த இடம் கிருஷ்ணா நதிக்கரையின் வடகரையில் முதோல் (Mudhol) என்ற நகரத்திலிருந்து பதினான்கு மைல் தூரம் உள்ளது.[2]

அரசருடைய போர் முகாம்கள் மட்டும் மூன்று மைல் தூரம் அமைந்திருந்தன. எல்லா முகாம்களும் முப்பது மைல் பரப்பில் அமைந்துள்ளன என்று கூறலாம். அவைகளில் இருந்த மக்கள் தொகை சுமார் ஐந்து இலட்சம் பேர் என்று மதிப்பிடப்படுகிறது. தனியாக 250 கடைகளும் இருந்தன. அங்கே எல்லாப் பொருள்களும் மிக விலையுயர்ந்த பொருள்களும்கூட விற்கப்பட்டன.

[1] கடிதம் CL XIII (பில்லிமோரியா)—தக்காணப் போர்ச் செலவுகளுக்கு, வட இந்தியாவிலுள்ள அரசாங்க நிதியிலிருந்துதான் தரப்படுகிறதென்று அவுரங்கசீப் கூறுகிறார்.

[2] **Sarkar, Anecdotes (p. 52).**

அரசவை கூடுவதற்கு முன்னராகவே இவருக்குக் காலைப் பத்து மணிக்கு அரசரைச் சந்திக்கும் வாய்ப்புக்கிடைத்தது. அரசர் இவரை மிகவும் மரியாதையாக வரவேற்று, அவருடைய பிரயாணங்களைப்பற்றி விசாரித்தார். ஹங்கேரியில் (Hungary) துருக்கியர்கள் போரிட்டுக்கொண்டிருந்த சண்டையைப்பற்றியும் விசாரித்தார். அப்பொழுது அரசனுக்கு எண்பது வயதாகிறது. வயோதிகப் பருவத்தின் சாயல் அவரிடத்திலே காணப்பட்டு, கூனியிருந்தார். கைத்தடியின் உதவியால் சாய்ந்திருந்தார். எனினும் கண்ணுடியை உபயோகிக்காமலேயே உத்தரவுகளை எழுதிக்கொண்டிருந்தார். அவருடைய உருவம் மிகவும் சிறியதாக இருந்தது. ஆனல் அவருடைய மூக்கு மிகவும் பெரிதாக இருந்தது. பருத்தித் துணியால் செய்யப்பட்டிருந்த கோட்டும் தலைப்பாகையும் அவர் அணிந்திருந்தார். அவருடைய இடுப்புப் பட்டை சில்க் துணியால் செய்யப்பட்டிருந்தது. ஆனல் அவருடைய உடைகள் மிகவும் சாதாரணமாகவே இருந்தன. ஆனல், அவருடைய தலையை அலங்கரித்த துணி தங்கப் பட்டையால் செய்யப்பட்டிருந்தது. அதில் ஒரு பெரிய மரகதக் கல்லும் அதைச் சுற்றிலும் சிறிய கற்களும் பதிக்கப்பெற்றிருந்தன. அவர் மிகவும் சிக்கனமான பழக்க வழக்கங்களை உடையவர் என்று முஸ்லீம் குறிப்புகளை இந்தப் பிரயாணியும் உறுதி செய்கிருர். அவர் சிறிது நேரம் தான் தூங்குகிருர், பல மணிகளை பிரார்த்தனைக்காகச் செலவிடுகிருர். அவர் சைவ உணவையே விரும்புகிருர். அடிக்கடி உபவாசம் இருக்கிருர். இந்த வயதில் உடம்பை எப்படி வைத்துக் கொள்ளுகிருர் என்று அவருடைய பணியாட்களே மிகவும் ஆச்சரியப்படுகின்றனர்.

முகலாய அரசவையில் எவ்விதமாக ஆடம்பரங்களுடன் அரசர் பொதுமக்களுக்கு பேட்டியளிப்பாரோ அதைப்போலவே போர் முகாமிலும் செய்தார். அவரைப் போலச் சிக்கனமாக வாழவேண்டுமென்று மற்றவர்களை அவர் கட்டாயப்படுத்தவில்லை. அதே சமயத்தில் அரசனைச் சுற்றியுள்ள ஆடம்பரங்களை வழக்கமாக நடப்பதைப் போலவே அனுமதித்தார். அவைகளில் எதையும் அவர் குறைக்கவில்லை. அரசனுடைய உரிமைகளைப் பாதுகாப்பதில் அவர் மிகவும் பொறுமையுடன் பாதுகாத்து வந்தார் என்பதை அவருடைய கடிதங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அரசருக்குரிய மரியாதையை மற்றவர்கள் செலுத்துவதில் யாரும் பிசகாதவாறு மிகவும் கவனத்துடன் பார்த்துக்கொண்டார்.

**அவுரங்கசீப்பின் மரணம்**

அவருடைய கடைசி வெற்றி 1705-ல் பெறப்பட்டதாகும். இது ஒரு சிறிய வெற்றியே. வாகின்கேரா (Wakinkera) என்ற

கோட்டையை எதிரி விட்டுச்சென்ற பிறகு அவருடைய படைகள் கைப்பற்றின. அதே சமயத்தில் அவருடைய உடல் நலமும் மிகவும் குன்றிவிட்டது. அவருக்கு வலிப்பு ஏற்பட்டு மூர்ச்சை அடைந்து கீழே விழுந்து விட்டார். சிறிது நேரம் பிரக்ஞையற்று இருந்தார். பிறகு மிகவும் போராட்டத்துடன் அவர் நிலைமையைச் சமாளித்துக் கொண்டு மக்களுக்குத் தரிசனம் கொடுக்க முயன்றார். மிகவும் தொல்லையுடன், மெதுவாக அவர் ஆமத்நகருக்குச் சென்றார். இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னர் அவர் அங்கே முகாமிட்டிருந்தார். அப்பொழுது அவருக்கு வெற்றியும் புகழும் கிடைக்கும் என்ற நம்பிக்கையிருந்தது. ஆனால் இப்பொழுது மக்களுக்கு தரிசனம் கொடுக்கும் அவையில் அவர் உட்கார்ந்திருந்தபொழுது பலவீனம் அவரை மேற்கொண்டது. அவருடைய முகத்தில் சாவின் சாயல் நன்றாகப் படிந்திருந்தது. அவருக்குக் காய்ச்சல் அதிகமாகியது. இருந்த போதிலும் மரபுகளின்படி வழக்கமான பிரார்த்தனைகளை அவர் செய்தார். பிப்ரவரி 21, 1707-ல் வெள்ளிக்கிழமையன்று காலை நேரத்தில் அவர் பிரார்த்தனையை முடித்துக் கொண்டபிறகு, அவருடைய ஆவி உடலை விட்டுப் பிரிந்தது. பாதுகாக்கப்பட்ட அவருடைய பிரேதம் தௌலதாபாத்திலுள்ள ரவ்ஸா (Rauza என்ற கிராமத்தில் அல்லது குல்தாபாத் என்றழைக்கப் படுகின்ற இடத்தில் மிகச் சிறப்பான மகாத்மாக்களின் கல்லறைகளுக்கு அருகில் அடக்கம் செய்யப்பட்டது. அவருடைய இறுதிச் சடங்குகளை மிகவும் சிக்கனமாகச் செய்யவேண்டுமென்று அவர் எழுதியே வைத்திருந்தார். அவருடைய கல்லறை மிகவும் எளிய முறையில் திறந்தவெளி மேடையின் மீது மிகச் சாதாரணமாக அமைக்கப்பட்டிருக்கிறது.[1]

### அவுரங்கசீப்பின் கொள்கை

ஹனீபா மரபில் வந்த முஸ்லீம் துறவியைப்போல வாழ வேண்டுமென்ற கொள்கையையுடையவர் அவுரங்கசீப்; அவர் இந்தக் குறிக்கோளைப்பெற எப்படி வாழ்ந்தாரோ அப்படியே இறந்தார். அவர் சட்டத்தின்படியும் மரபுகளின்படியும் பிசகாமல் அப்படியே அவருடைய பழக்கவழக்கங்களிலும் பின்பற்றினார். குர்ரான் முழுவதுமே அவருக்கு மனப்பாடமாகத் தெரியும். அவர் பட்டத்திற்கு வந்த பிறகு முஸ்லீம் வேதங்களில்

[1] ரவ்ஸாவில் உள்ள கல்லறைகள் (சுவர்க்கத்தின் தோட்டம்) என்று ஷெய்க் என்பவர் ஹிஸ்டாரிக் லாண்ட் மார்க் ஆப் டெக்கான் (Historic Landmarks of Deccan 1907) பக்கம் 56–58.ல் வர்ணிக்கிறார். குல்த் என்றால் சுவர்க்கம் என்று பொருள். அவுரங்கசீப் இறந்தபிறகு அவருக்கு குல்து மகான் என்று சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டது. 'அவருடைய இடமும் சுவர்க்கமேயாகும்'.

ஈடுபாடுடையவராக இருந்தார். குறிப்பாக இமாம் முகமது கஸாலின் தத்துவங்களில் அவருக்கு நல்ல புலமை இருந்தது.[1]

முஸ்லீம் வேத பாடங்களில் அவருடைய குழந்தைகளுக்கு (பெண்பிள்ளைகள் உட்பட) நல்ல புலமை ஏற்படும்படி கல்வி புகட்டினர். மதக்கோட்பாட்டிற்குப் புறம்பாக உள்ள உணவோ, பானமோ, உடையோ எதையும் அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. அவற்றையெல்லாம் அவர் தவிர்த்தார். இன்னிசையில் அவருக்கே நல்ல புலமை இருந்தபோதிலும் அவருடைய ஆட்சி துவக்கத்திலிருந்தே இந்த இசை இன்பத்தை அவர் விரும்பவே இல்லை. அவர் உயிர் போகின்ற நிலையிலும்கூட, மத சட்டங்களின்படி நியமனம் செய்யப்பட்ட பிரார்த்தனை, உபவாசம், தருமம் செய்தல் ஆகியவற்றை அப்படியே நிறைவேற்றினர். முஸ்லீம் சட்டத்தின் படி எல்லா வழக்குகளையும் விசாரணை செய்யவேண்டுமென்று அவர் விரும்பினர். கூடியவரையிலும் இந்துக்களுக்கு அவர் பதவிகளை அளிப்பதைத் தவிர்த்தார். அவர்களுடைய கோயில்களை அழித்தார். அவர்களுக்குத் தொல்லைதரும் சட்டங்களை இயற்றினர்.

துவக்க கலிபாக்களின் முன்மாதிரியைத்தான் இவர் பின் பற்றினர் என்று இவர் நம்புகிருர். அதே காரணத்திற்காக அவர் ஜெஸ்ஸியா என்ற வரியையும் விதித்தார். அவருடைய கடைசி காலத்திலுங்கூட இந்த வரிவிதிப்பைச் சிறிதும் அவர் தளர்த்த முற்படவில்லை. அவருடைய முகாம்களுக்கு வேண்டிய பொருள்களைப் பெறுவதிலும் கூட இந்த வரியை அவர் தளர்த்த வில்லை.[2] இவ்விதமாக அவர் செய்ததால், முஸ்லீம்களின் நன்மதிப்பை அவர் பெற்றதில் ஆச்சரியமில்லை.

## அரசாட்சியில் தோல்வி

ஓர் அரசராக வைத்து மதிப்பிட்டால் அவர் தோல்வி பெற்றுர் என்று கூறவேண்டும். காபிகான் துறவிக்கு வேண்டிய நற்குணங்களை எடுத்துச் சிறப்பாகக் கூறுவதைப்போல பேரரசின் அரசாங்கத்தை நிர்வாகம் செய்வதில் அவருடைய திறமையின்மையையும் கூறுகிருர்.

தைமூர் அரச பரம்பரையில் வந்த எல்லா அரசர்களைக் காட்டிலும், இல்லை, தில்லியை ஆட்சிசெய்த எல்லா அரசர்களைக்

[1] மஷாத்திற்கு அண்மையில் உள்ள டஸ் என்ற இடத்தைச் சார்ந்த அபு ஹமீது முகம்மது ஸெயினுத்தீன் (1058–1111 கி.பி.) என்பவர் புகழ்பெற்ற தத்துவ ஞானியும் கணக்குமேதையும், வான நூல் வல்லுநருமாவார்.

[2] Sarkar Anecdotes.—p 142

காட்டிலும், சிகந்தர் லோடி காலத்திலிருந்தே இவரைப்போல பக்தியும், சிக்கனமும், நியாயமும் ஒருங்கே நிறைந்த ஓர் அரசனைக் காண்பதரிது. தைரியத்திலும், துன்பங்களைப் பொறுத்துக் கொள்வதிலும், நல்ல நியாயம் வழங்குவதிலும், இவரை மிஞ்சுவார் எவரும் இல்லை. ஆனால் மதக்கோட்பாட்டில் மிகவும் மதிப்பு வைத்திருந்த காரணத்தால் தண்டனை கொடுக்க வேண்டியவர்களுக்கும் தண்டனை அளிக்கவில்லை. தண்டனை கொடுக்காமல் அரசாட்சி செய்வது மிகவும் சிரமமானதாகும். அவருடைய பிரபுக்களிடையே பெருத்த பிளவுகளும் போட்டி மனப்பான்மையும் ஏற்பட்டுவிட்டன. அதனால் அவர் தீட்டிய எந்தத் திட்டமும் சரியான பயனைத்தரவில்லை. எந்தக்காரியத்தை எடுத்துக்கொண்டாலும் அதை நிறைவேற்றக் காலதாமதம் ஏற்பட்டது. அதனால் அதனுடைய நோக்கமும் நிறைவேறாமல் போய்விட்டது.

அவுரங்கசீப்பின் சில தவறுகளைக் கூறுவதில் நட்புறவு கொண்ட இந்த முஸ்லீம் ஆசிரியர் அவருடைய தவறுகளை முழுவதும் கூறவில்லை. அவருடைய அளவு கடந்த சந்தேகபுத்தி அவருடைய வாழ்க்கையைப் பாழாக்கிவிட்டது அவர் யாரையும் நம்பவில்லை. அதனால் யாருமே அவருக்கு சரியாக சேவை செய்யவில்லை. அவருடைய இரக்கமற்ற சிந்தனையும் எதையும் கணக்குப் பார்க்கின்ற மனப்பான்மையும் எந்த ஆணையோ அல்லது பெண்ணையோ நேசிக்க விடவில்லை. அதைப்போலவே அவரை நேசித்தவர்களும் யாரும் இல்லை. அரசாட்சி செய்வதில் தந்திரத்தைப் பயன்படுத்த வேண்டுமென்ற அவரது கொள்கை உண்மையில் அவருடைய குறுகிய மனப்பான்மையைக் காட்டுகின்றது. அதையே நம்பி இருத்தலும் பயன் அளிக்கவில்லை. அவருடைய கடைசி காலத்தில் தக்காணத்தில் அவர் மேற்கொண்ட படையெடுப்புகள், அவர் ஒரு சிறந்த தளபதிக்கு வேண்டிய திறமையை இழந்துவிட்டதை எடுத்துக்காட்டுகின்றன. உண்மையில் அவுரங்கசீப்பின் வரலாற்றிலிருந்து அவர் ஒரு பெரிய அரசன் என்று பிற்காலத்தில் கூறுவதற்கு எவ்விதமான சான்றும் இல்லை. அவருடைய சூழ்ச்சி மனப்பான்மை முதலில் பட்டத்தைக் கைப்பற்ற உதவியாக இருந்தது. பிறகு அதை நிலைநிறுத்திக்கொள்ள அதே சூழ்ச்சியைப் பின்பற்றினர். இலக்கியத்திற்கோ அல்லது கலைக்கோ அவர் ஒன்றும் செய்யவில்லை. அதைவிட, இலக்கியத்தையும் கலையையும் அவர் வளரவிடாது செய்தார் என்று கூறுதலே பொருந்தும்.

**அவுரங்கசீப்பின் கடைசிகால கடிதங்கள்**

அவுரங்கசீப் சாவதற்கு முன்னர் அவருடைய மகனுக்குச் சில சிறப்பான கடிதங்களை எழுதினர். அவர் வாழ்க்கையில் நீண்ட காலம் வாழ்ந்துவிட்ட சலிப்பையும் அவருடைய விருப்பமான திட்டங்களில் தோல்வி பெற்றதையும், அடுத்த உலகத்தில் அவரது விதி எப்படி நிர்ணயிக்கப்படுமோ என்ற பயமும்—மதக் கோட்பாடுகளினுல் அவர் அறிந்திருந்த சில உணர்ச்சிகளையும் அக் கடிதங்களில் அவர் எழுதினுர்.

அவர் எழுதிய மூன்று கடிதங்களும் ஏறக்குறைய ஒரே மாதிரியாக இருக்கின்றன. அக் கடிதங்களிலிருந்து எடுக்கப் பட்ட சில வாக்கியங்களாவன :

‘நான் யாரென்று எனக்கே தெரியவில்லை; நான் எங்கே செல்வேன்? நிறைய பாவங்களைப் புரிந்த இந்தப் பாவிக்கு என்ன கதி நேரிடும்? இப்பொழுது நான் இவ்வுலகிலுள்ளவர்களிட மிருந்து விடை பெற்றுக்கொள்கிறேன். எல்லோரையும் கடவுளின் பொறுப்பில் விட்டுச் செல்கிறேன். என்னுடைய நல்ல பிள்ளைகள் அவர்களுக்கிடையே சண்டை போட்டுக் கொண்டு, மக்களுடைய உயிர்களைப் போக்கடிப்பதில் ஈடுபடக்கூடாது. மக்களெல்லாம் கடவுளின் சேவகர்களாவர்..........நான் பயனில்லாமல் வாழ்க் கையைக் கழித்துவிட்டேன். என்னுடைய இதயத்தில் கடவுள் இருக்கிருர். ஆனுல் என்னுடைய இருளடைந்த கண்களுக்கு அவருடைய ஒளியைக் காணமுடியவில்லை.........எதிர்காலத்தில் எனக்குள்ள நம்பிக்கையை இழந்துவிட்டேன். காய்ச்சல் சென்றுவிட்டது; ஆனுல் மேல்தோல் மட்டுமே எஞ்சியிருக்கிறது .........இராணுவம் குழம்பியிருக்கிறது. அதற்கு அநுதாபப் படவோ அல்லது உதவி செய்யவோ யாருமில்லை; நானும் அப்படித்தானிருக்கிறேன்; கடவுளைத் தவிர என் இதயத்தில் எவ்வித நிம்மதியும் இல்லை... என்னிடத்திலேயே நான் நம்பிக்கையை இழந்துவிட்ட பிறகு பிறரிடத்தில் நான் என்ன நம்பிக்கையைப் பெறப்போகிறேன்?... ...என்னுடைய கடைசி உயிலை நீங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும். முஸ்லீம்கள் வீணுக கொல்லப்பட்டு, அந்த பாவம் இந்தப் பயனற்ற ஜீவனைச் சுற்றிக் கொண்டிருக்கக்கூடாது.........நான் அதிகப் பாவங்களைப் புரிந்து விட்டேன் நான் என்ன தண்டனையைப் பெறப்போகிறேன் என்று எனக்குத் தெரியாது ....... உங்களையும், உங்களுடைய மக்களையும் கடவுளின் பொறுப்பில் விட்டுவிட்டு நான் விடை பெற்றுக்கொள்கிறேன். கடவுளின் ஆசி உங்களுக்கு இருக் கட்டும்’.

அவுரங்கசீப்பின் குணங்களையும் அவரது செயல்களையும் கடுமையாகத் தாக்கியவர்களும்கூட அவருடைய நினைவுப் படலங்களின் சேர்கக் குமுறலைப் பார்த்தும், தனியாக உயிருக் காகப் போராடும் இவ்வயோதிகரின்மீது கழிவிரக்கம் கொள்வர்.

## ஐரோப்பிய நாடுகளுடன் தொடர்பு

அவர் மற்ற ஐரோப்பிய நாடுகளுடனும் குறிப்பாக ஆங்கிலேய நாட்டுடனும் பல வகைகளிலும் தொடர்பு வைத் திருந்தார். அவைகளை நிகழ்ச்சிவாரியாகப் பார்க்காமல் பொதுப்படையாக வேருேரிடத்தில் தனியாகவே எழுதுவோம். இந் நிகழ்ச்சிகளும் மிக அதிகமாக இருப்பதால் அவைகளை முழு விவரங்களுடன் இங்குக் காணவும் முடியவில்லை.

அவுரங்கசீப்பின் காலத்தில் போர்ச்சுகீசியரிடம் ஏற் பட்டிருந்த உறவு மிகவும் குறைவாகவே இருந்ததால் அதை விட்டுச் செல்வோம். அப்பொழுது கிழக்குப் பகுதியில் கடல் வாணிகத்தை ஆதிக்கம் செய்வதில் ஆங்கிலேயர்களுக்கும் டச்சுக் காரர்களுக்கும்தான் அதிக போட்டியிருந்தது. ஆனல் டச்சுக் காரர்கள் கிழக்கு இந்தியத் தீவுகளில்தான் வியாபார ஆதிக் கத்தைப் பெறுவதில் அதிக கவனம் கொண்டிருந்தனர். அதே சமயத்தில் அவர்களுடைய இந்தியக் கிடங்குகளிலும் நல்ல வியாபாரம் நடந்தது. கடற்கரையோரமாக சில ஃபிரெஞ்சு, டேனிஷ் குடியேற்றப் பகுதிகளை நிறுவியதும் மொகலாய அரசாங் கத்தை அதிகமாக பாதிக்கவில்லை.

*1664, 1670* ஆகிய ஆண்டுகளில் சூரத்திலுள்ள ஆங்கிலேயக் கிடங்கு சிவாஜியும் மற்ற மராட்டியக் கொள்ளைக்காரர்களின் தாக்குதல்களிலிருந்தும் நல்ல விதமாகப் பாதுகாக்கப்பட்டது. முதல் தடவை அவர்களுடைய தாக்குதல் நிகழ்ந்தபொழுது சர். ஜார்ஜ் ஆக்ஸிண்டன் (Sir George Oxinden) திறமையாக எதிர்ப்பைச் சமாளித்துப் பாதுகாத்தார். அதனல் அவுரங்க சீப்பின் பாராட்டுதலையும் அவர் பெற்ருர்.

ஹுக்ளியின் (Hugli) சுங்க வரிகளை வசூலிப்பதன் பொருட்டு வங்காள கவர்னர் நவாப் ஷயிஸ்டகான் என்பவருக்கும் ஆங்கிலேய வர்த்தகர்களுக்கும் சில தகராறுகள் ஏற்பட்டன. அத் தகராறுகள் காரணமாக மொகலாய அரசாங்கத்திற்கும் இங்கிலாந்திற்கும் அதிகார பூர்வமில்லாத ஒரு போர் நிகழ்ந்தது. லண்டனிலுள்ள (London) ஆங்கிலேயே கிழக்கு இந்தியக் கம்பெனி அதிகாரிகள் பொதுவாக இந்தியாவில் நாடுபிடிக்க

வேண்டுமென்ற எண்ணமோ அல்லது அவர்களது கிடங்குகளை இராணுவத்தால் பாதுகாக்க வேண்டுமென்ற எண்ணமோ உடையவர்கள் அல்லர். ஆனால் அக்கம்பெனியின் தலைவர் அல்லது கவர்னர் சர் ஜோசய்யா சைல்ட் (Sir Josiah Child) என்பவர் ஆங்கிலேயப் பேரரசை இந்தியாவில் நிலைநாட்ட வேண்டுமென்ற பேராசை கொண்டிருந்தார். 1685-ல் பத்து அல்லது பன்னிரண்டு போர்க் கப்பல்கள் சிட்டகாங்கைக் கைப்பற்ற வேண்டுமென்று அவர் இரண்டாம் ஜேம்ஸைக் (James II) கேட்டிருந்தார். இத் திட்டம் மிகவும் அவசரப்பட்டுத் தீட்டப் பெற்றதால் இந்தப் படையெடுப்பு படுதோல்வி அடைந்தது. 1688-ல் ஆங்கிலேயர்கள் வங்காளத்தைவிட்டே செல்லவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது.

சூரத் கிடங்கின் தலைவரான சர் ஜான் சைல்ட் (Sir John Child) மேலிடத்திலிருந்து ஆணைபெற்று மேற்குக்கரையோரத்தில் அவுரங்கசீப்பின் ஆதிக்கத்தை ஏற்க மறுத்ததால் சூரத்திலுள்ள அவர்களுடைய கிடங்கைக் கைப்பற்றியும் ஆங்கிலேயர்கள் அவருடைய நாட்டிலிருந்து வெளியேறிவிட வேண்டுமென்றும் அவுரங்கசீப் ஆணையிட்டார். பிறகு அவர்களிடையே சமாதானம் ஏற்பட்டது. வங்காள கவர்னராக ஷயிஸ்டகானுக்குப் பிறகு பதவியேற்ற இப்ராஹிம்கான் ஹூக்ளியிலுள்ள ஆங்கிலேயக் கம்பெனியின் தலைவரான ஜாப் சார்னக் (Job Charnock) என்பவரை மீண்டும் அங்கே வியாபாரம் செய்ய வரவழைத்தார். அந்த அழைப்பை அவர் ஏற்றுக்கொண்டார். 24 ஆகஸ்ட் 1690-ல் சார்னக் ஹூக்ளி நதிக்கரையில் ஆங்கிலேயக் கொடியை நாட்டினார். இந்தச் சிறிய கிடங்கு நாளடைவில் கல்கத்தா நகரமாக வளர்ச்சியுற்றது.

1698 முதல் ஏறக்குறைய 1702 வரையில் ஆங்கிலேய கிழக்கிந்தியக் கம்பெனியில் பிளவு ஏற்பட்டு, பழைய கிழக்கிந்தியக் கம்பெனியென்றும் புதிய ஆங்கிலேயக் கம்பெனியென்றும் உருவாகின. இவ்விரண்டு கம்பெனிகளும் போட்டியிட்டு வியாபாரம் செய்துவந்தன. இத்தகவல் அவுரங்கசீப்பிற்குத் தெரியவந்தது. எது உண்மையான கம்பெனி என்று அவருக்கு தெரியவில்லை. ஆனால் இவ்விரண்டு கம்பெனியிடமிருந்தும் அவருடைய அதிகாரிகள் நிறைய லஞ்சத்தைப் பெற்று வந்தனர். அந்த நீண்ட கதையை இங்குச் சுருக்கமாகக் கூறுவதற்கில்லை.

இந்த இரண்டு சைல்டுகளின் போர்க் கொள்கை படுதோல்வியுடைந்த பிறகு, 1708-ல் இரண்டு போட்டிக் கம்பெனிகளும்

ஒன்ருக இணைந்தன. சுமார் ஐம்பதாண்டு காலமாகச் செய்து வந்த போரையும் அரசியல் தலையீட்டையும் நிறுத்திக்கொண்டு, ஆங்கிலேயர்கள் வியாபாரம் செய்வதில் ஈடுபட்டனர்.[1]

## ஆட்சி

அவுரங்கசீப்பின் கடைசி காலத்தில் அக்பர் காலத்தில் இருந்த பதினைந்து மாகாணங்கள் (சுபாக்கள்) இருபத்தொன்ருக அதிகரித்தன. முல்தானிலிருந்து தத்தா (Tatta) அல்லது தெற்கு சிந்துப் பகுதியும், காபூலிலிருந்து காஷ்மீரும், வங்காளத்திலிருந்து ஒரிஸாவும் பிரிக்கப் பெற்றுத் தனி மாகாணங்களாகின. தக்காணத்திலிருந்த மூன்று மாகாணங்கள் இப்பொழுது ஆறு மாகாணங்களாயின.

அக்பர் காலத்திலிருந்த ஆட்சிமுறையே பின்பற்றப்பட்டது. ஆனல் அவுரங்கசீப் காலத்தில் ஆட்சி சீர்குலைந்துவிட்டது. அவரிடம் வேலை செய்த அதிகாரிகளை அவரால் சரியாகக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவருக்கு வயதாகிவிட்ட பிறகு அவருடைய அதிகாரத்தை அதிகாரிகள் சரியாக மதிக்கவில்லை. நிலத்திலிருந்த அதிக வருமானத்தைப் பெரும் வழக்கம் அவருடைய காலத்திலிருந்து தோன்றியது. அதிக வரி விதிக்கப்பட்டதால் பல குடியானவர்கள் நிலத்தைவிட்டு ஓடிவிட்டனர். சில சமயங்களில் மறைமுகமாக அவர்கள் எதிர்ப்பைக் காட்டினர்.

பேரரசிலிருந்து அவ்வப்பொழுது பெறப்படும் வருமானத்தை ஒப்பிட்டுப் பல ஆசிரியர்கள் பரிசீலனை செய்துகாட்டியிருக்கின்றனர். ஆனல் பாதிக்கப்பட்ட இப்புள்ளி விவரங்கள் நம்பகமாக இருப்பதாகத் தெரியவில்லை. அதனல் அவைகளிலிருந்து மேற்கோள் காட்டவோ அல்லது அவற்றை நான் இங்கே எழுதவோ முற்படவில்லை. பெயரளவிற்கு மிகப் பெரிய அளவில் படை சிறிதளவே இராணுவத் திறமை பெற்றிருந்தது. 30,000 பேர் கொண்ட ஒரு நல்ல ஐரோப்பியப் படை இப்பேரரசைக் கைப்பற்றிவிட முடியும் என்ற மனுச்சியின் (Manucci) யூகம், சான்றுகளை வைத்துப் பார்க்கும்பொழுது சரியானதாகத்தானிருக்கிறது. கடற்படை முழுவதும் திறமையற்றிருந்தது. பிரபுக்கள் இறந்துவிட்ட பிறகு அவர்களுடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்யும் பழக்கத்தை அவுரங்கசீப் விட்டுவிட்டார் என்று ஒரு பாரசீக வரலாற்ருசிரியர் திட்டவட்டமாகக் கூறுகிருர்; ஆனல் பேரரசனின்

[1] இந்த இரண்டு சைல்டுகளும், சர் ஜோசய்யா; சர்ஜான் ஆகியோர் சகோதரர்கள் அல்லவென்பதை ஸ்ட்ராசி (Strachy) என்பவர் நிரூபிக்கிருர். அவர்கள் உறவினரும் அல்ல (Keigwins Rbellion—Clarendon Press-1916—App-A).

கடிதங்களைப் பார்த்தால் உண்மை வேறுவிதமாக இருக்கிறது. அவுரங்கசீப்பின் கடிதங்களைப் பில்லிமோரியா மொழி பெயர்த்திருக்கிறார். இறந்துபோன பிரபுக்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்யக் கூறும் மூன்று நிகழ்ச்சிகள் அவருடைய கைப்படவே எழுதி உத்திரவிடப்பெற்ற சில கடிதங்களிலிருந்து காணலாம். காபூல் கவர்னரான அமீர்கான் (Amir Khan) இறந்த பிறகு அவருடைய எல்லாச் சொத்துக்களையும், ஒரு துரும்புவிடாவல் பறிமுதல் செய்யவேண்டுமென்று அதிகாரிகளுக்கு அவர் உத்தரவிட்டார். (கடிதம் XCIX) இவ்விதமான உத்தரவு, அவருடைய தாய்மாமனை ஷயிஸ்டகான், மற்றும் மகபத்கான் ஆகியோர் இறந்துவிட்ட பிறகு கொடுக்கப்பட்டது. (கடிதங்கள் CXXVIII; CXLVI) அவ்விதமாகப் பறிமுதல்களிலிருந்து பெறப்பட்ட வருமானம் மிக அதிகமாக இருந்தது. அவ்விதமான வருமானத்தை திருப்பிக் கொடுக்க வேண்டிய நியாயமே இல்லை. ஏனெனில் 'அரசாங்க நிதி பொது மக்களுடைய சொத்தாகும்' என்று பேரரசர் எழுதுகிறார்.

## காலவரையறைப் பட்டியல்

(சில முக்கியமான தேதிகள் மட்டுமே)
(வாரிசுரிமைப் போர் காலவரிசையைப் பக்கம் 124-ல் காண்க)

| | |
|---|---|
| அவுரங்கசீப் பட்டம் எய்தல். அப்ஸல்கான் சிவாஜியினால் கொல்லப்படுதல் ... ... ... | 1659 |
| போர்ச்சுகீசியர் ஆங்கிலேயர்களுக்கு பம்பாயைக் கொடுத்தல் ... ... ... ... | 1661 |
| மிர்ஜும்லா அஸ்ஸாமின்மீது படையெடுத்தல் ... | 1661–3 |
| அவுரங்கசீப்பின் உடல்நலக்குறைவு, சிவாஜி சூரத்தை முதன் முதலாகத் தாக்குதல், பிரெஞ்சு இந்தியக் கம்பெனி துவக்கம் ... ... | 1664 |
| ஷாஜஹானின் இறப்பு, சிட்டகாங்கை ஷயிஸ்டகான் கைப்பற்றுதல் ... ... ... | 1666 |
| இந்து வழிபாடுகளைத் தடை செய்தல்—கோயில்களை அழித்தல்—முதல் ஜாட் கலகம் ... ... | 1669 |
| மொகலாயப் பகுதியில் முதலாக சௌத் வசூலித்தல் சூரத்தின்மீது சிவாஜியின் இரண்டாவது தாக்குதல் .. | 1670 |
| சத்நாமி கலகம் ... ... ... ... | 1672 |
| சிவாஜி தனி அரசனாகப் பட்டம் எய்தல் ... ... | 1674 |
| தெற்கில் சிவாஜி படையெடுத்தல் ... ... | 1676 |
| ராஜா ஜஸ்வந்த் சிங்கின் மரணம் ... ... | 1678 |
| ஜெஸ்ஸியா வரியை மீண்டும் விதித்தல் ... ... | 1679 |

| | |
|---|---|
| சிவாஜியின் மரணம் ... ... ... | 1680 |
| இராசபுத்திரப் போர்; இளவரசன் அக்பர் கலகம் ... | 1680-1 |
| இரண்டாவது ஜாட் கலகம்—அவுரங்கசீப் தக்காணத்திற்குச் செல்லுதல் ... ... ... | 1681 |
| சர் ஜோசய்யா சைல்டின் போர் ... ... | 1685-6 |
| பீஜப்பூரைக் கைப்பற்றுதல் ... ... | 1686 |
| கோல்கொண்டாவைக் கைப்பற்றுதல் ... ... | 1687 |
| வங்காளத்திலிருந்து ஆங்கிலேயர்கள் முற்றிலும் வெளியேறுதல் ... ... | 1688 |
| ராஜா சாம்பாஜி கொல்லப்படுதல் ... ... | 1689 |
| ஆங்கிலேயர்கள் வங்காளத்திற்குத் திரும்புதல் கல்கத்தா உருவாகுதல் ... ... | 1690 |
| பேரரசின் ஆதிக்கம் தெற்கே பரவுதல் ... ... | 1691 |
| தக்காணத்தில் முடிவில்லாத போர் ... | 1692-1705 |
| போட்டி கிழக்கு இந்தியக் கம்பெனிகள் இணைதல் ... | 1702-8 |
| அவுரங்கசீப் ஆமது நகரத்திற்குப் பின்வாங்குதல் | ஜனவரி 1706 |
| அவுரங்கசீப்பின் மரணம் ... | 21, பிப்ரவரி (O.S. 1707) |

## ஆதாரங்கள்

காபிகான் எழுதியதிலிருந்து மேற்கோள்கள்—மற்றப் பாரசீக ஆசிரியர்கள் எழுதியதை மொழி பெயர்த்து E & D பாகம் VII-ல் தரப்பட்டிருக்கின்றன. பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார், அவருடைய ஆட்சியைப்பற்றியும் மற்றும் பல சுவையான தகவல்களையும் அனெக்டோட்ஸ் ஆப் அவுரங்கசீப் (Anecdotes of Aurangazeb), சரித்திரக் கட்டுரைகள் (Historical Essays) (கல்கத்தா 1912) அவர் எழுதிய அவுரங்கசீப் வரலாறு ஐந்து பாகங்கள் 1925-ல் முடிவு பெற்றன. (History of Aurangazeb 5 Volumes) அவர் எழுதிய சிவாஜியும் அவருடைய காலமும் (Shivaji and his times) மிகவும் பயனுள்ள நூல்—ஆனல் அதில் பொருள் அகவரிசையில் இல்லாதது குறையாக இருக்கிறது. அவுரங்கசீப்பின் சில கடிதங்களை பில்லிமோரியா (Billimoria) வெளியிட்டிருக்கிருர். Billimoria—Letters of Aurangazeb—(London—Luzac and Bombay 1908) இந்த நூல் பயனுள்ளதாக இருக்கிறது. மராட்டிய வரலாற்றைத் தெரிந்துகொள்ள பயனுள்ள ஆதார நூல் கிராண்ட்டப் எழுதிய மராட்டிய வரலாறு (1826, மற்றும் மறுபதிப்புகளும்) (Grant Duff—History of the Marathas, 1826 and Reprints). இந்த நூல் அவருடைய நேரிடையான தொடர்பினுலும், மற்றும் பல பிரதிகளை ஆராய்ச்சி செய்ததாலும் (இப்பொழுது அப்பிரதிகள் கிடைப்பதில்லை.) எழுதப்பட்டதால் மராட்டியர்களைப்பற்றித் தெரிந்து கொள்ள மிக முக்கியமான ஆதாரமாகும். சமீபத்தில் ஆங்கிலத்தில் எழுதி வெளியிடப்பட்ட மிகப் பெரிய நூல். G. S. சார்தேசாய் எழுதிய மராட்டியர்களின் புதிய வரலாறு

(G. S. Sardesai—New History of the Marathas), பேராசிரியர் சுரேந்திரநாத் சென் எழுதிய சிவ சத்திரபதி (Professor Surendranath Sen Siva Chatrapathi Published by the Calcutta University 1920) இந்நூலைத் தொடர்ந்து மராட்டியர்களின் ஆட்சிமுறை (Adminstrative System of the Marathas 1925) மராட்டியர்களின் இராணுவ முறை (Military systems of the Marathas 1928) பேராசிரியர் ராபின்சன் எழுதிய சிவாஜி (Professor Rawlinson's Sketch Shivaji. the Maratha, Clarendon Press 1915) இராமதாஸ், துக்காராம் ஆகியோர் எழுதிய இப் பகுதிகளின் மொழி பெயர்ப்பு இந்நூல் சுவைப்பட கூறப்பெறு கிறது. மராட்டிய நாட்டைப்பற்றியும் மக்களைப்பற்றியும் எலி பின்ஸ்டன் நன்கறிவாராகையால் அவர் எழுதிய நூல் பகுதி களுக்கு முக்கியமான ஆதாரமாக விளங்குகிறது. பல ஐரோப் பியப் பிரயாணிகள் இக்காலத்தைப்பற்றி எழுதியுள்ளனர். பயனுள்ள நூல்களில் பெர்னியர் எழுதியதும் ஒன்ருகும். (Bernier—Ed. Constable and V. A Smith, Oxford University Press 1914) ஃபிரையர்—(Fryer) ed, crooke—Hakluyt Society *1909*, *1912*, *1913*) ஹர்லூயத் கழகத்தைச் சேர்ந்த குருக் என் பவர் தொகுத்ததாகும். தேவ்நாட், கேரேரி ஆகியோரின் இந்தியப் பிரயாணங்கள்—தொகுத்தது சுரேந்திரநாத் சென் (*1949*) (Indian Travels of Thevenot and Careri ed. Surendranath Sen 1849) என். மனுச்சி எழுதிய ஸ்டோரியா டி மோகர் (Munuccis' Storia do Mogor) என்ற நூலை டபில்யூ இர்வின் (W. Irvine) என்பவர் தொகுத்தும் நான்கு பாகங்களாக (*1907–8*) வெளியிட்டிருக்கிருர். டாட் எழுதிய ஆனல்ஸ் ஆப் ராஜஸ்தான் (Tod's Annals of Rajasthan—Populared) ஸ்டிராச்சி எழுதிய கெய்க்வின் கலகம்—கிளாரண்டன் பிரஸ் *1916*. (Strachy, Keigwin's Rebellion Clarendon Press 1916) மற்ற நூல்களும் பார்க்கப்பட்டிருக்கின்றன. ஸ்டான்லி லேன்பூல் எழுதிய அவுரங்கசீப் (Stanley lane poole's Aurangazeb, R. i. 1896) சில நிகழ்ச்சிகளில் திருத்தங்களைச் செய்யவேண்டுமென்பதைத் தவிர, இந்த நூல் படிப்பதற்கு மிகவும் சுவைமிக்கதாக இருக்கிறது. எஸ். என். பட்டாச் சாரியா எழுதிய மொகலாயரின் வடகிழக்கு எல்லைக் கொள்கை (S. N . Bhattacharyas' History of the Mughal N. E. Frontier Policy—Calcutta 1928) இந்நூல் மிகவும் விரிவாக விமர்சன மின்றி எழுதப்பட்டுள்ளது. டபிள்யூ இர்வின் எழுதிய இந்திய மொகலாயர்களின் படை, அவர்களின் இராணுவத்தைத்தவிர அவுரங்கசீப்பின் காலத்து நிகழ்ச்சிகளையும், அவருக்குப்பின் பட்டத்திற்கு வந்தவர்களின் ஆட்சியைப்பற்றியும் கூறுகிறது, (W. Irvine's Army of tha Indian Mughals.)

அவுரங்கசீப் (Aurangazeb) என்று உச்சரிக்கப்படுவது பாரசீக முறையாகும்; அவுரங்கசீப் (Aurangazeb) என்று உச்சரிக்கப் படுவது இந்திய முறையாகவும் இருப்பதைக் காண்க.

# 7. பிற்காலத்தில் முகலாயர்கள்; பேரரசின் வீழ்ச்சி; சீக்கியர்களும் மராட்டியர்களும்

**வாரிசுரிமைப் போர்; பகதூர்ஷா**

அவுரங்சீப் இறந்தவுடனே அவருடைய பிள்ளை இந்துஸ்தானத்தின் அரசப் பதவிக்காக போராடுவர் என்பதை அவுரங்கசீப் நன்ருக உணர்ந்திருந்தார். அதனுல் பலமுறை இப்போர் எடுபடுவதைத் தவிர்ப்பதற்காக அவருடைய பிள்ளைகளுக்கு அவர் அறிவுரை கூறியிருக்கின்ருர். ஆனுல் எந்தப் பயனும் ஏற்படாது என்பதையும் அறிந்திருந்தார். பேரரசைப் பிரிவினை செய்யும் ஒரு குறிப்பையும் கூட அவர் விட்டுச் சென்ருர்; ஆனுல் இச்சிக்கலைத் தீர்ப்பதற்கு இதுதான் வழி என்பதையோ அல்லது அவர்கள் இதை ஏற்றுக்கொள்வார்களோ என்பதும் சந்தேகத்துக்குரியதாகும். அவுரங்கசீப்பிற்கும் அவருடைய சகோதரர்களுக்கும் போர் ஏற்பட என்ன காரணங்கள் இருந்தனவோ அந்தக் காரணங்களின் அடிப்படையிலேயே அவருடைய பிள்ளைகளும் வாரிசுரிமைக்காகப் போரிட்டனர். அவருடைய மூத்த மகனை முஅஸ்ஸம் (Muzzam), ஷா ஆலம் (Shah Alam) என்றும் அழைக்கப்படுபவர், மிகவும் தூரமாக இருந்த காபூலில் அப்பொழுது இருந்தார். அதனுல் அவருக்கு சிறிது தடையாகவே இருந்தது. இரண்டாவது மகன் ஆஸம் (Azam) இளவரசர், மூன்ரும் மகன் கம்பக்ஷ் இளவரசர் (Kambakhsh) ஆக இரண்டு பேருமே தக்காணத்தில் இருந்தனர். அவருடைய உரிமைகளைக் கோருவதில் முந்திக்கொண்டனர். ஒவ்வொருவரும் அரசப் பதவிக்கு உரியவராக அறிக்கைவிட்டதுமன்றி நாணயங்களையும் அவர்கள் பெயர்களாலேயே அச்சடித்து வெளியிட்டனர். அரச உரிமையைக் கோரிய இம்மூன்று சகோதரர்களின் முக்கிய நோக்கம் ஆக்ராவிலுள்ள ஏராளமான நிதியைக் கைப்பற்ற வேண்டும் என்பதேயாகும். யாரிடம் அந்த நிதிக் குவியல் கிடைக்கின்றதோ அவரால் எந்த ஆதரவையும் விலை கொடுத்துப் பெறமுடியும்.

இளவரசர் முஅஸ்ஸம் அவருடைய திறமைமிக்க அதிகாரியான முனீம்கான் (Munim Khan) என்பவருடைய உதவியால் காபூலிலிருந்து மிக விரைந்து வருகையில் ஆக்ராவுக்குத் தெற்கேயுள்ள ஜாஜா (Jajau) என்ற இடத்தில் 10, ஜூன், 1607-ல் அவருடைய சகோதரரான ஆஸமின் படையோடு மோதினர். கம்பக்ஷ் ஹைதராபாத்திலுள்ள பீஜப்பூர், கோல்கொண்டா பகுதிகளை ஏற்கெனவே கைப்பற்றியிருந்ததால் தக்காணத்தைவிட்டு வரமுடியவில்லை. ஜாஜாவில் நடந்த உக்கிரமான போரில் இளவரசர் ஆஸம் தோற்றதுமன்றி அப்போரிலேயே இறந்துவிட்டார். ஷா ஆலம் ஆக்ராவிலுள்ள நிதியைக் கைப்பற்றிக்கொண்டார். மிகவும் தாராளமாக அந்நிதியிலிருந்து பிரபுக்களுக்கும் போர் வீரர்களுக்கும் பரிசுகளை வழங்கினர். பகதூர் ஷா என்ற பட்டப் பெயரையும் வைத்துக்கொண்டார்.

இந்தப் புதிய பேரரசர் இராசபுத்திர தலைவர்களை அடக்குவதற்காகப் பல ஏற்பாடுகளையும் செய்தார். தவிர, கம்பக்ஷ் என்ற மற்ரொரு சகோதரனை ஹைதாரபாத்துக்கருகிலேயே முறியடித்தார். 1608-ன் துவக்கத்தில் பல காயங்கள் பட்டிருந்ததால் அவரும் இறந்தார்.[1]

### சாஹுவின் விடுதலை

சுல்பிகர்கான் (Zulfikar Khan) என்பவருடைய நல்ல ஆலோசனையின் பேரில் சிவாஜியின் பேரப்பிள்ளையான சாஹு (Shahu)—இரண்டாம் சிவாஜி என்பவரை விடுதலை செய்தார். அவர் இதுவரையிலும் மொகலாய அரசவையிலேயே கல்வி கற்று வந்தவர். இப்பொழுதுதான் அவருடைய நாட்டுக்குத் திரும்புகிறர். அவருடைய சிற்றப்பரான இராஜாராமின் (Rajaram) விதவை மனைவியுமான தாராபாயிடம் (Tara Bai) அரசாங்கம் இருந்தது. சாஹுவின் விடுதலை மராட்டியர்களிடையே ஏற்படவிருந்த உள்நாட்டுப் போரைத் தவிர்த்தது. அதனால் முகலாயப் பேரரசிற்கும் தலைவலி குறைந்தது. சுல்பிகர்கானுடைய அறிவுரையும் பயனுடையதாக இருந்தது.

[1] ஆஸ்ஸமைப் பற்றியோ கம்பக்ஷைப் பற்றியோ இரக்கப்பட வேண்டியதில்லை. ஏனெனில், ஆட்சி செய்வதற்கு இருவருமே தகுதியற்றவர்கள். ஆஸம் முரட்டுத்தனமாகவும் மற்றவர்களிடத்தில் அவமரியாதையாகவும் சிற்றின்பப்பிரியராகவும் பேராசை மிக்கவராகவும் இருந்தார். (Irwin Manucci-IV Page 62 கம்பக்ஷ் மூர்க்கத்தன மிகுந்த கொடிய சுபாவத்தையுடையவராக இருந்தார். பணியாட்களுக்கும் நண்பர்களுக்கும் மற்றவர்களுக்கும் இதுவரை கண்டும் கேட்டும் இராதவகையில் பல கொடுமைகளை விளைத்துள்ளார்.

## சீக்கிய கலகத்தைப் பற்றிய செய்தி

பகதூர்ஷா தக்காணத்திலிருந்து திரும்பும்பொழுது தெற்குப் பகுதிகளின் அரசாங்கப் பொறுப்பை சுல்பிகர்கானிடம் ஒப்படைத்தார். அவர் ஆட்சிப் பொறுப்புகளை தாவூத்கான் (Daud Khan) என்ற ஆப்கானியனிடம் ஒப்படைத்தார். தாவுத்கான் இழைத்த பல கொடுமைகளைப் பற்றிக் கதை கதையாக மனூச்சி கூறுகிறார்.[1] பேரரசர் 1710-ல் அஜ்மீரை அடைந்த உடன் சோன்பெட் (Sonepet), சாதவா (Sadhawa), சர்ஹிந்த் (Sirhind) ஆகிய நகரங்கள் பந்தா (Banda) (அடிமை) என்று அழைக்கப்படுகின்றவரின் தலைமையில் சீக்கிய மதத்தினர் தாக்கிக் கலகம் விளைவித்தனர். பந்தா என்பவர் பல கொடுமைகளைப் புரிந்த போலிக் குரு என்று சிலர் கூறுகின்றனர். பேரரசருக்கு இச் செய்தி பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது. அதனால் கலகக்காரர்களை அடக்க அவரே நேரில் சென்றார். இந்த நிகழ்ச்சியை சரியாகப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால் சீக்கிய இயக்கத்தின் துவக்கத்தையும் அதனுடைய ஆரம்ப வளர்ச்சியையும் சுருக்கமாக கூறவேண்டியதிருக்கிறது.

## ஆரம்ப சீக்கிய குருக்கள்

சீக்கியர்கள் அல்லது சீடர்கள் முதலில் பக்திமிக்க இந்துப் பிரிவைச் சார்ந்தவர்களாகவே இருந்தனர். 1469–1535 இக் காலத்திலிருந்த குருநானக் (Guru Nanak) என்பவரை அவர்கள் முதல் குருவாக ஏற்றுக் கொண்டனர். குருநானக்கின் கூற்றுக்கள், கபீர், மற்றும் பல துறவிகளின் கூற்றுக்களைப்போல 'ஒருவரே கடவுள்' வழிபாடுகளின் பயனற்ற தன்மை, ஜாதி வேறுபாடுகளின் போலித்தன்மை ஆகியவற்றை வலியுறுத்தினர் முதல் நான்கு குருக்களும் சீர்திருத்தத்தை விரும்புகிற அமைதியான தலைவர்களாகவே இருந்தனர். அவர்களுக்கு இராணுவப் பயிற்சி அளிப்பதையோ அரசியல் அதிகாரத்தை கைப்பற்றுவதையோ நினைக்கவும் இல்லை. 1517-ல் அக்பர் சீக்கிய மதப் போதனைகளில் விருப்பம் ஏற்பட்டிருந்ததால் நான்காவது குருவுக்குத் தெப்பகுளம் இருக்கின்ற இடத்தையும் அமிர்த்தசாரில் (Amritsar)உள்ள பொற்கோயிலையும் இடத்தையும் அன்பளிப்பாக அளித்தார். பிறகு அமிர்த்தசார் நகரமே சீக்கியர்களின் தலைமைப் பீடமாக வழங்கியது. ஐந்தாவது குருவான அர்ஜின் (Arjun ஆன்மீகப் போதனையில் மட்டும் ஈடுபடாமல் பக்தர்களிடமிருந்து

[1] மீடோஷ் டெய்லர் இவ்வதிகாரியை மிக்க சிறப்புடையவர் என்றும் திறமையும் துணிச்சலும் கொண்டவர் என்றும் கூறுகின்றார். எலிபின்ஸடனும் கூட இவரைப்பற்றிய உண்மையான குறிப்பைக் கூறவில்லை.

செல்வத்தையும் பெற்றுக்கொண்டார். 1606-ல் ஜஹாங்கீரின் கட்டளைப்படி சித்திரவதைக்குள்ளாகிப் பிறகு கொல்லப்பட்டார். அவர் தண்டனைக்குள்ளானதற்குக் காரணம் அவருடைய சமயப் பற்றுதலுக்காக அல்ல, ஆனால் குஸ்ருவுக்கு உதவி செய்த காரணத்தால் அவருக்கு அபராதம் விதிக்கப்பட்டிருந்தது. ஆனால் அதைக் கொடுக்க அவர் மறுத்துவிட்டதால் அவர் இத்தண்டனைக்குள்ளானார். 1604-ல் அர்ஜுன் (Arjun) என்பவருடைய முயற்சியால் 'ஆதிகிரந்தா' (Adi Granth) அல்லது சீக்கிய முதல் வேதமும் தொகுக்கப்பட்டது.

**ஹர் கோவிந்து (Har Govind)**

இவர் சீக்கியரின் ஆறுவது குரு ஆவார். (1606–45) அவருடைய முன்னோர்களின் தலைப்பாகையும் கழுத்தணியும் அவருக்கு அளிக்கப்பட்டபொழுது அவற்றை அவர் ஏற்க மறுத்துவிட்டார். 'என்னுடைய கழுத்தணிக்குப் பதிலாக இடுப்பில் உடை வாள் தொங்கட்டும். என்னுடைய தலைப்பாகையில் அரச அணிகலசன் அலங்கரிக்கட்டும்' என்று அவர் கூறினார். வெறும் பக்தர்களாக இருந்த இந்த இயக்கத்தைப் போர் உணர்ச்சி கொண்ட இயக்கமாக ஆக்கினார். ஜஹாங்கீரால் சிவாலிக் (Siwalik) என்ற காட்டுப் பிரதேசத்திற்கு இவர் விரட்டியடிக்கப் பட்டார். ஜஹாங்கீருக்குப் பிறகு ஷாஜஹானுடைய அதிகாரிகளுடன் அடிக்கடி போரிட்டார்; 1645-ல் அக்குன்றிலேயே இறந்துவிட்டார்.

**தெஜ்பகதூர் (Tegh Bahadur)**

இவர் ஒன்பதாவது குரு ஆவார். அஸ்ஸாமிலுள்ள (Assam) ராம்சிங்கு (Ram Singh) என்பவரிடம் அவர் சீடராக இருந்தார். பஞ்சாபிற்கு வந்தவுடன் அவுரங்கசீப்பின் கொடுமையின் காரணமாக அரசாங்கத்தை எதிர்த்தார். 1675-ல் இவர் கைது செய்யப் பட்டார். இவரை இஸ்லாமிய மதத்தில் சேர்த்துக்கொள்ளும்படி அவுரங்கசீப் வற்புறுத்தினார். அவர் மறுக்கவே 1675-ல் மரண தண்டனைக்குள்ளானார்.

**கோவிந்த் சிங் (Govind Singh)**

பத்தாவதும் கடைசியானவருமான கோவிந்த் சிங் (1675–1708) சீக்கிய இராணுவ இயக்கத்தை உண்மையாகவே தோற்றுவித்தவராவார். முஸ்லீம்களை எதிர்க்கவே இந்த இயக்கத்தை அவர் உருவாக்கினார். சீக்கியருடைய ஒற்றுமையை நிலைநிறுத்த கிறித்துவர்கள் பணியாற்றிய வழிபாடுகளைப்போல இவரும்

இரண்டு வழிபாட்டுச் சின்னங்களை மேற்கொள்ளும்படிச் செய்தார். பாகுல் (Pahul) அல்லது கத்தியை நனைத்த புனிதமான தண்ணீரைப் பெயரிடும் பொழுது குடிக்க வைக்கின்ற ஒரு மரபும் ஏற்பட்டது. ஜாதி வேற்றுமையை அகற்றுவதற்காகவே இவ்விதப் பழக்கத்தை அவர் கொண்டுவந்தார். வட்டமாக இவ்வழிபாட்டுச் சமயத்தின்பொழுது அவர்கள் உட்கார்ந்து மாவு, எண்ணெய், சர்க்கரை, ஆகியவை கலந்த ஒரு திண்பண்டத்தை உண்டனர். அதன் நோக்கமாவது ஜாதிக் கட்டுப்பாடுகளிலிருந்து அவர்கள் விடுவிக்கப்பட்டனர் என்பதாகும். இவ்விதமாக உருவாக்கப்பட்ட அவருடைய சகோதர இயக்கத்தினர் கால்சா (Khalsa) அல்லது 'தூய்மை' என்ற பெயரில் வழங்கப் பெற்றனர். இவர்களை இடைக்கால ஐரோப்பாவில் இருந்த டெம்பிளார்களுக்கும் (Templars) சில இராணுவ இயக்கங்களுக்கும் ஒப்பிட்டுக்கூறலாம். சீக்கிய இனத்தவர் எப்பொழுதாவது, ஆதாரம் தெரிந்தவரையில், ஒரு தேசத்தினராக இருந்ததில்லை. இந்தக் காலத்தைச் சேர்ந்த சீக்கியர்கள் பல இடங்களில் வசித்து வந்த ஒரு சிறு பகுதியினரேயாவர். இப்பொழுது பல சீக்கியர்கள் தங்களை இந்துக்கள் என்று கூறிக்கொள்கின்றனர். உண்மையில் இந்து மதத்திற்கும் சீக்கிய மதத்திற்கும் உள்ள வேறுபாடு திட்டவட்டமாக வரையறுக்கப்படவில்லை. சீக்கியர்கள் பின்பற்றிய சில மரபுகளெல்லாம் இப்பொழுது புறக்கணிக்கப்படுவதை நாம் காண்கின்றோம். அவர்களுடைய இயக்கத்தைச் சார்ந்தவர்கள் புகையிலையைப் பயன்படுத்தக்கூடாது என்று குருகோவிந்து கேட்டுக்கொண்டார். அவருக்கு புகையிலையைக் கண்டாலே பிடிக்காது. திராட்சை மது அருந்துவதும் கெட்டதே; இந்திய 'பாங்' (Bhang) என்ற மதுவை அருந்துவதால் ஒரு தலைமுறை அழிகிறது; ஆனால் புகையிலையோ எல்லாத் தலைமுறைகளையும் அழித்துவிடுகின்றது என்று கூறுகிறார். சீக்கிய இயக்கத்தில் அனுமதிக்கப்பட்ட சகோதரர்கள் ஐந்து 'கே' (Five K's) என்று பொருள் படுகின்ற—ஹிந்தி அல்லது பஞ்சாபி மொழிகளில் 'கே' என்ற முதலெழுத்துடன் ஆரம்பமாகின்ற—அதாவது, நீண்ட ரோமமும், குறுகிய கால் சராய்களும், இரும்பு காப்பும், அல்லது சிறு தாய்த்தும், சிறிய இரும்பு உடை வாளும், ஒரு சீப்பும், எப்பொழுதுமே அவர்களிடம் காணப்பட வேண்டும் என்ற பழக்கத்தைக் கொண்டு வந்தார். இந்த ஆணைகள் இப்பொழுது முழுவதுமாக பின்பற்றப்படுவதில்லை. தற்போதைய சீக்கிய மதம் சீக்கியப் படைகளாலும் சகோதரத்துவ உணர்ச்சியாலும் ஏற்படுகின்ற செல்வாக்கை அடிப்படையாகவே வைத்துத்தான் இயங்குகின்றது; கோவிந்து இறந்தபிறகு அவருடைய போதனைகளையும் ஏற்கெனவே இருந்த அவருடைய 'கிரந்த்' அல்லது

புகைப்படம் 26



(a) ஆக்ராவிற்கருகில் ஃபதேபூர் சிக்ரியில் உள்ள ஷேக் சலீம் ஷிஷ்டியின் கல்லறை



(b) டில்லி கோட்டையில் உள்ள திவான்-இ-ஆம் என்னும் அரியணை



(a) கிருஷ்ணதேவராயரின் செப்புப் படிமம்

(b) 18ஆம நூறறுணடைய படுககை விரிபபு

வேதத்தில் புதிதாகச் சேர்க்கப்பட்டன.[1] அவருடைய வாழ்க்கை முழுவதுமே போராட்டம் நிரம்பியிருந்தது. சில மலையரசர் களையும் முகலாய அதிகாரிகளையும் தாக்கிக் கொள்ளையடித்திருக் கிறார். அந்தப் போராட்டத்தில் இரண்டு பிள்ளைகள் சிர்ஹிண்ட் கவர்னரால் மரண தண்டனைக்கு உள்ளாகினர். வாரிசுரிமைப் போரில் அவர் பகதூர்ஷாவை (ஷா ஆலம்) ஆதரித்தார். அவர் பட்டத்திற்கு வந்த பிறகு கோவிந்தும் அங்கே பணியாற்றினார். 1708-ல் தக்காணத்திலுள்ள நாண்டர் (Nandar) என்ற இடத்தில் ஓர் ஆப்கானியனால் கொல்லப்பட்டார். சீக்கியர்களின் கடைசி குரு இவரேயாவர். அவர் இறந்த பிறகு சீக்கியர்களின் புனித கிரந்தத்தையே குருக்களின் பிரதிநிதித்துவமாக பாவித்தனர்.

**பந்தா**

பந்தா (Banda) என்ற குரு கோவிந்தைப்போல பாவித்துக் கொண்டவர் சிர்ஹிண்டைச் சார்ந்த வசீர்கானை மிகக் கொடுமை யாகப் பழிக்குப்பழி வாங்கிவிட்டார். அவரைப்பற்றி இர்வின் சுவைமிக்க குறிப்பைத் தருகிறார்.

“தோட்டிகளும் சக்கிலியர்களும் மற்றும் அதைப் போன்ற பெரும்பான்மையான சீக்கியர்கள் அப்பகுதியில் மிக அதிகமான கொடுமைகளை இழைத்தனர். சிர்ஹிண்ட் நகரம் நான்கு நாட்களாக அவர்களால் சூறையாடப்பட்டது. அவர்கள் மசூதிகளைச் சீர்குலைத்தனர், வீடுகளைத் தீக்கிரையாக்கினர்; முகம் மதியர்களைக் கொன்று குவித்தனர். அவர்களுடைய பெண் களையும் குழந்தைகளையும் கூட விட்டுவைக்கவில்லை.

சீக்கியர்கள் வசித்துவந்த எல்லாப்பர்கானாக்களிலும் முன்பு பின்பற்றப்பட்டுவந்த அவர்களுடைய பழக்கவழக்கங்கள் முழுமை யும் மாறிவிட்டன. இந்தியர்களின் மதிப்பில் மிகத் தாழ்ந்தவர் களாக கருதப்படும் ஒரு தோட்டியோ அல்லது ஒரு சக்கிலியோ தம் வீட்டைவிட்டுச் சென்று குருவிடம் சேர்ந்துவிடுவார்; சிறிது காலத்திற்குள் அவர் பிறந்த இடத்திற்கு வருகின்றபொழுது அப் பகுதியின் அரசராகவே வருகின்றதற்கு கைகளில் உத்தரவு பெற்றுக்கொண்டே வருவார்; அவர் எல்லைகளுக்குள் வந்து விட்டாலே நல்ல குடும்பத்தில் உதித்தவர்களும் செல்வச் சீமான் களும் அவரை எதிர்கொண்டு அழைத்து வீட்டுக்குச் செல்வர். அவருடைய உத்தரவை யாருமே மறுக்க முடியாது. பல போர்க் களங்களில் போர் செய்தவர்களும் கூட அவரிடம் பயந்தேதான் நடந்தனர். இந்த இயக்கத்தில் சேராத இந்துக்களும் கூட இக் கொடுமைகளிலிருந்துத் தப்பவில்லை.

பகதூர் ஷாவும் முஜிம்கானும் சீக்கியர்களை மலைப்பிரதேசத்திற்கு விரட்டிச்சென்றனர். ஆனால் பந்தா தப்பித்துக் கொண்டார்.

**இராசபுத்திரர்கள்**

அவுரங்கசீப் இறந்த உடனே ஜோத்பூரிலுள்ள (Jodhpur) முகலாயக் கவர்னரை, அஜீத்சிங் பதவியிலிருந்து விலக்கினார். 1608-ல் பகதூர் ஷா அவரைத் தோற்கடித்தார். ஆனால், அரசர் கம்பக்ஷை அடக்க தக்காணத்துக்குச் சென்றபொழுது, துர்காதாஸ் (Durgadas) ஜெய்சிங் கச்வாஹா (Jaisingh Kachwaha), மேவாரைச் சார்ந்த அமர்சிங், ஆகியோருடன் சேர்ந்துகொண்டு ஜோத்பூரிலிருந்தும் ஆம்பரிலிருந்தும் முகலாய இராச்சியத்தை வெளியேற்றினர். சீக்கியப்போரிலே அரசர் கவனம்செலுத்தியதால் கலகம் விளைவித்த இந்த இராசபுத்திரர்களுடன் அவர் சமாதானம் செய்துகொள்ள நேரிட்டது. அதன்படி அவர்களுடைய இராச்சியங்களில் அந்த அரசர்களே பதவியில் இருந்தனர்.

**பகதூர்ஷாவின் மரணம்**

1612-ல் பகதூர்ஷா அவருடைய அறுபத்தொன்பதாவது வயதில் இறந்தார். அவருடைய தந்தையின் காலத்திலே மிகவும் கட்டுப்படுத்தப்பட்டதால் அவருடைய உணர்ச்சி எல்லாம் மழுங்கி இருந்தது. அவருக்குக் கெட்டகுணங்கள் இல்லையென்றாலும் மன்னிக்கக்கூடிய அளவிற்கு பெருந்தன்மையான குணம் இருந்தாலும் அவரால் சரியாக ஆட்சிபுரிய முடியவில்லை. அதனால் அவர் கவலையற்ற அரசன் (Shah-i-Behabar) என்ற புனை பெயரைப்பெற்றார்.

**வாரிசுரிமைப்போர்**

ஜகந்தர்ஷா (Jahandar Shah). வழக்கம்போல அவருடைய நான்கு பிள்ளைகளும் பட்டத்திற்காகப் போராடினர். நான்கு பிள்ளைகளிலே மிகவும் சிறந்தவராக இருந்த அஸிம்-உஷ்-ஷான் (Azim-ush-shan), வங்காளத்துக் கவர்னராக இருந்தவர் மற்ற மூன்று சகோதரர்களோடு போரிடும்போது கொல்லப்பட்டார். பிறகு சகோதரர்களிடையே மீண்டும் போர் ஏற்பட்டது. மூத்தவரான ஜகந்தர்ஷா பட்டத்திற்கு வந்தார். மற்ற சகோதரர்களைக் காட்டிலும் இவர் மோசமான நடத்தையுடையவராக இருந்தார்.

**ஃபருக்ஷியார் (Farrukshiyar)**

அவருடைய மோசமான ஆட்சி பதினொரு மாதத்திற்குள் முடிந்துவிட்டது. அப்பொழுது முகலாயப் பிரபுக்களிடையே

துர்ரானி, (Turrani), பாரசீக, பொருமை ஏற்பட்டதால் அவருடைய அமைச்சரான சுல்பிகர்கான் (Zulpikar Khan) என்பவரால் கொல்லப்பட்டார். பிறகு, 1713-ல் அஸீமுஸ் ஷானின் மகனை ஃரூக்ஷயார் (Farrukshiyar) பட்டத்திற்கு வந்தார். அவர் சுல்பிகர்கான் உட்பட பல பிரபுக்களை தூக்கு மேடைக்கு அனுப்பினர். அவருடைய அரசவையில் பயங்கர ஆட்சியையும் நிறுவினர். எதற்கும் உதவாத ஃபரூக்ஷியாரின் ஆட்சியில் ஊழல்கள் மிகுந்திருந்தன. அவர் மானத்தையும் கருதாது காமக்களியாட்டங்களில் ஈடுபட்டிருந்தார். அதனால் அரசாங்கம் பாராசைய்யிதுகள் (Bara Sayyids) வமிசத்தில் வந்த அப்துல்லா, ஹுஸேன் அலி (Hussan Ali) ஆகிய இரண்டு சகோதரர்களிடமும் சிக்கிவிட்டது. பாராசைய்யிதுகளின் குடும்பம் அக்பருடைய காலத்திலிருந்து மிகவும் சிறப்புற்று இருந்தது. இந்த இரண்டு சகோதரர்களையும் சூழ்ச்சியால் அகற்றிவிடவேண்டும் என்று எண்ணியிருந்த ஃபருக்ஷியாரையே அவர்கள் 1719-ல் பட்டத்தைவிட்டு இறக்கியது மல்லாமல் மிகவும் கொடுமையான முறையில் கொன்றனர்.

ஃபருக்ஷியாரின் ஆட்சி காலத்தில் மீண்டும் ஜிஸ்லியா (Jizya) வரியை விதிக்கவேண்டும் என்ற முயற்சியும் வீணுகியது. பந்தா என்பவரை அவர் காலத்தில் சிறைபிடித்தனர். பண்டாவை சித்திரவதைக்குள்ளாக்கிக் கொன்றனர். சுமார் ஆயிரம்பேர்கொண்ட அவருடைய ஆதரவாளர்களையும் அணி அணியாகக் கொன்றனர். (1715)

அதே ஆண்டில் வங்காள மாகாண அரசாங்கம் கிழக்கு இந்தியக் கம்பெனியை அதிகமான வரிகளைக் கொடுக்கவேண்டும் என்று வற்புறுத்தியது. அதனுல் தில்லிக்கு இரண்டு பிரதி நிதிகளை அனுப்பி அவருடைய குறைகளைத் தீர்த்துக்கொள்ளு மாறு கேட்டுக்கொண்டனர். இப்பிரதிநிதிகள் முப்பதினுயிரம் பவுண்ட் மதிப்புள்ள பரிசுப்பொருள்களை அளித்தனர். அதனுல் கம்பெனிக்கு நிறைய வர்த்தகச் சலுகைகளும் சுங்கவரி களிலிருந்து விதி விலக்கும் கிடைத்தன. அவருடைய வெற்றிக்கு முக்கியகாரணமாக இருந்தது ஆங்கிலேய வைத்தியரான வில்லியம் ஹாமில்டன் (William Hamilton) என்பவர் பேரரசனின் 'மன வியாதியை' குணப்படுத்தியதால் ஏற்பட்டதாகும். மற்ருெரு காரணமாவது சூரத் வியாபாரத்தை ஆங்கிலேயக் கப்பற்படை தடுத்துவிடப்போகிறதோ என்ற பயம் தில்லி அரசாங்கத்திற்கு இருந்தது.

## முகம்மது ஷா (Muhammad Shah)

ஃபருக்ஷியாரை மிகவும் கொடுமையாகக் கொன்றபிறகு அரசர்களை உருவாக்குகின்ற இந்த சய்யதுகள் பல திறமையற்ற அரசர்களைப் பட்டத்துக்குக் கொண்டுவந்தனர்.[1] சூழ்ச்சிக்கு சூழ்ச்சி செய்கின்ற திறமையும் மராட்டியர்களை உதவிக்கு அழைக்கின்ற நிலைக்குச் சென்றும் அவருடைய உயிரையும் பதவியையும் 1648 வரைக்கும் காப்பாற்றிக்கொண்டார். சைய்யது ஹுசேன் அலியை (Syed Hussain Ali) அவர் கொன்றுவிட்டார்; அப்துல்லாவைக் (Abdullah) கைது செய்தார்.[2]

## பேரரசின் சீர்குலை

1722-ல் ஆஸப் ஜா (Asaf Jha) (சின் குலிச் கான்–Chin Qulich Khan) வசீராகப் பதவியேற்றார்; அரசாங்கத்தில் அவரால் ஒழுங்கைக் கொண்டு வரமுடியவில்லை. ஆனால், அதே ஆண்டில் அவர் பதவியைவிட்டு விலகி தக்காணத்திற்குச் சென்றார். அங்கே 1724 முதல் சுதந்திர அரசனாக திகழ்ந்து நைஸாம் வம்சாவளியைத் தோற்றுவித்தார். அவுத் அரசர்களின் முன்னோரான சாதத்கான் (Sadat Khan) அதே ஆண்டில் அவுத்திலேயே சுதந்திரம் பெற்ற அரசனாக ஆட்சி செய்தார். அதைப்போலவே, வங்காளத்து கவர்னரான அலிவர்டிகான் (1740–1756) அப்பகுதிக்கு சுதந்திர அரசனாகவே பாவித்துக்கொண்டார். ஒழுங்காகக் கப்பம் கட்டிவரும் பழக்கமும் அவரிடமில்லை. ஆப்கானிய வம்சத்தைச் சார்ந்த ரோஹிலர்கள் (Rohillas) கங்கைக்கு வடக்கேயுள்ள செழிப்பான பகுதிக்கு அதிபதிகளாகிவிட்டனர். அந்தப் பகுதிக்கு ரோஹில்கண்ட் என்ற பெயரையும் இட்டனர். அவுரங்கசீப் இறந்த பதினேழு ஆண்டுகளுக்குள் பேரரசு சீர்குலைய ஆரம்பித்து விட்டது. பின்வரும் ஆண்டுகளில் சீர்குலைவு மிகவும் துரிதமாக ஏற்பட்டது. தலைநகரில் பல சூழ்ச்சிகளும்

[1] அவர்களுடைய பெயர்களாவன; ரபிவுத்தாஜாத் (Rafiud-darajat) ரபி-உத்-தௌலாத் (Rabi-ud-daulat) இரண்டாம் ஷாஜஹான் நெகுசியார் (Nekusiyar) இப்ராஹிம் (Ibrahim) முதல் மூவரின் ஆட்சி 18, பிப்ரவரி முதல் 27, ஆகஸ்டு 1719க்கு முடிந்தது. 1, அக்டோபர் முதல் 8 நவம்பர் 1720 வரை இப்ரஹிம் பட்டத்தில் இருந்தார். அவருடைய பெயரால் நாணயங்களும் வெளியிட்டார். அந் நாணயங்கள் கிடைப்பது இப்பொழுது அரிதாக இருக்கின்றது. அத்தியாய முடிவில் கொடுக்கப்பட்டுள்ள வம்சாவளியைப் பார்க்க. அவர்களெல்லாம் மிக விரைவாக மறைந்தனர். பிறகு 1719-ல் முகம்மது ஷா என்பவர் பட்டத்துக்கு வந்தார். நைஸாமுஸ் முல்க்கின் (Nizam-ul-Mulk) அரசாங்கத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தவர். அதன் பெயரையே அவர் விட்டு விட்டும் அவருடைய நல்ல ஆலோசனையும் புறக்கணித்து விட்டும் இப் பதவிக்கு வந்தார்.

[2] அவருடைய ஆட்சியில் ஏற்பட்ட குழப்ப நிலையான போராட்டங்கள் டபிள்யூ இர்வின் எழுதிய "பிற்காலத்து மொகலாயர்கள்" என்ற இரண்டாவது பகுதியில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. (W. Irvin India Mughal,–Vol II).

சதித்திட்டங்களும் நிகழ்ந்தவண்ணம் இருந்தன. அவற்றை நினைவுபடுத்தவோ அல்லது குறிக்கவோகூட அந்நிகழ்ச்சிகள் தகுதி பெற்றவை அல்ல.

## மராட்டிய அரசாங்கத்தின் புதியமுறை

அதற்குள் மராட்டிய அரசாங்கத்தில் பல புதிய மாறுதல்கள் ஏற்பட்டன. முகம்மது ஷாவின் காலத்தில் மராட்டியர்கள் இந்தியாவில் வலிமை மிக்கவர்களாகி விட்டனர். சிவாஜி காலத்தில் ஏற்பட்ட மிகச் சிறப்பான உள்நாட்டு ஆட்சி அவருடைய மறைவுக்குப்பின் நீடிக்கவில்லை. அவருடைய மகனை சாம்பாஜியின் காலத்தில் அது மிகவும் சிதறுண்டு விட்டது. சாஹுவை பகதூர் ஷா விடுதலை செய்த பிறகு மராட்டியர்களிடையே உள்நாட்டுப் போர் ஏற்பட்டது அப் பொழுதிலிருந்து மராட்டியர்கள் ஒரு புதிய அரசாங்க முறையை உருவாக்கினர்.

## முதல் பீஷ்வா பாலாஜி விஸ்வநாத் (Balaji Viswanath)

ராஜா சாஹு (Shahu) அவருடைய அரசுரிமையைக் காப்பாற்றிக் கொள்வதற்கு *1714* முதல் பீஷ்வாவாக பணி யாற்றிய கொங்கணி பிராமணனை பாலாஜி விஸ்வநாத்தின் உதவியை நாடினர். பீஷ்வா (Peshva) பதவியென்பது முன்பு இரண்டாவது அமைச்சராக இருக்கும் பதவியைக் குறிப்பதாகும்.[1] பாலாஜி விஸ்வநாத்தின் தனிப்பட்ட திறமையால் இரண்டாவது அமைச்சராக இருந்த பீஷ்வாப் பதவியை முதல் அமைச்சர் பதவியாக மாற்றினர். *1720*-ல் அவர் இறந்த உடனே அப் பதவியை பாஜிராவ் என்ற அவருடைய மகன் அவருடைய வாரி சாகப் பெற்றான். தந்தையைவிட மைந்தன் திறமைசாலியாக இருந்தான். அதனால் அப்பொழுது இருந்த அப் பீஷ்வா பதவி பரம்பரைப்பதவியாக மாறிவிட்டது. வெகு விரைவில் அரச னுடைய பதவியும் பீஷ்வாவின் முன்பு மறைந்து விட்டதாகவே தோன்றுகிறது. தற்காலத்திலுள்ள நேபாள மகாராஜாதிராஜா வைப் போலவே அப்பொழுதுள்ள அரசன் நிலையும் இருந்தது. சாஹுவுக்குப் பிறகு சிவாஜியின் பரம்பரையினர் நம் கவனத் திற்கே வருவதில்லை. வரலாற்றைப் படிப்பவர்கள் பதினெட்டா வது நூற்றாண்டில் மராட்டிய அரசாங்கம் பீஷ்வாக்களுக்குச் சொந்தமானதே என்று கருதவேண்டியுள்ளது. ஒரு நூற்றாண் டிற்கு மேலாகவே, *1714* முதல் *1818* வரையிலும் அவர்களுடைய

[1] சிவாஜியின் காலத்தில் பிரதிநிதி என்ற பதவி இல்லை, அதனால் பீஷ்வாவே முதலமைச்சராகவும் இருந்தார்.

பரம்பரையில் ஏழு பேர்கள் பதவியிலிருந்தார்கள். 1749 வரை வாழ்ந்த சாஹு (Shahu) அவருடைய அமைச்சருக்கு முழு அதிகாரங்களையும் 1727-ல் கொடுத்துவிட்டார்.

**சௌத் சர்தேஷ்முகி** (Chauth, Sardeshmukhi)

சாஹுவின் அமைச்சரான பாலாஜி விஸ்வநாத் மராட்டிய ஆட்சியை ஓரளவுக்குச் சீர்படுத்திக் கொடுத்தார். மராட்டிய ஆதிக்கத்தில் இல்லாத மற்ற அரசுகளின் ஆதிக்கங்களிலிருந்த பகுதிகளில் வருமானத்தை வசூலிப்பதை ஒழுங்காகப் பெறப் பல ஏற்பாடுகளைச் செய்தார். உண்மையில் மராட்டிய அரசாங்கத்தின் பெரும் வருமானமே அங்கிருந்துதான் பெறப்பட்டது. மராட்டியர்களின் நேரடியான ஆட்சியில் இருந்த பகுதிகள் மிகவும் குறைவானதேயாகும். குழப்பமிக்க அக்காலத்தில் தில்லி பேரரசனுடைய ஆதிக்கத்திலிருந்த மாகாணங்களிலும் அல்லது வேறு அரசர்களின் ஆதிக்கத்திலிருந்த பகுதிகளில்தான், அவர்கள் நிறைய வசூல் செய்தனர். சைய்யித் ஹுசேன் அலி (Sayyid Husan Ali) என்பவரும் மராட்டிய அரசாங்கத்தினரும் செய்துகொண்ட ஓர் உடன்படிக்கையின்படி தக்காணம் முழுவதிலும் சௌத் வரியை வசூலிக்கும் உரிமையை அல்லது நில வருமானத்தில் நான்கில் ஒரு பங்கைப் பெறுகின்ற உரிமையும், தவிர அதற்குமேல் நில வருமானத்தில் பத்தில் ஒரு பங்கையும் அல்லது சர்தேஷ்முகி என்ற உரிமையையும் ராஜா சாஹுவுக்கு அளிக்கப்பட்டது.

அக்பர் காலத்தில் தோடர்மால் நிர்ணயம் செய்ததையோ, அல்லது ஷாஜஹான் காலத்தில் மாலிக் ஆம்பர் நிர்ணயம் செய்த நிலவருமானத்தின் அடிப்படையிலோ கணக்கெடுத்துக் கொள்வதென்று பாலாஜி விஸ்வநாத் கோரினார். அழிக்கப்பட்ட பகுதிகளிலிருந்து நிலவருமானத்தை எதிர்பார்க்க முடியாது என்று அவருக்கு நன்றாகவே தெரியும். அதனால், எப்பொழுதுமே வரி பாக்கியிருக்கிறதென்று அவர் கூறிக்கொண்டிருந்தார். அதனால் அவருக்கு நன்மையே ஏற்பட்டது. ராஜாராமின் பிள்ளைகள் வயதுக்கு வராதபொழுது ஒரு சில பெரிய தலைவர்கள் அரைகுறை சுதந்திரத்தைப் பெற்றுவிட்டதால், அவர்களுக்கும் சௌத் வரியை வசூலிக்க உரிமையை அளிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனால், அவர்களும் அரசாங்கத்திற்குச் சிறிய பங்கைச் செலுத்தவேண்டியவர்களாக இருந்தனர். தவிரப் பல நில மான்யங்களையும் படைத்தலைவர்களுக்குத் தொடர்ந்து தரவேண்டிய நிலை ஏற்பட்டதால், அவர்களை பீஷ்வாக்களின் கட்டுப்

பாட்டிற்குள் கொண்டுவருவது மிகவும் கடினமாகிவிட்டது. அதனால் அவர்களுடைய அதிகாரமும் குறைய நேர்ந்தது.

## இரண்டாவது பீஷ்வா, பாஜிராவ்

அவருடைய தந்தை மிகவும் திறமையாக வகுத்து வைத்திருந்த இவ்வரி வசூலிப்பு முறைகளை பாஜிராவ் (1720) மிகவும் திறமையாகப் பயன்படுத்தினர். அவர் படையைப் பலப்படுத்தி, அப்பொழுது முகம்மது ஷாவின் பலவீனமான ஆதிக்கத்திலுள்ள இந்துஸ்தானத்தின் சில வடபகுதிகளின் மீது படையெடுத்தார். ஹைதராபாத் பகுதியின் அரசனை ஆசப் ஜாவின் (Asaf Jah) அதிகாரம் வளர்ந்து வருவதைத் தடுப்பதற்காக அவர் சில ஏற்பாடுகளைச் செய்தார். 1731-ல் பாஜிராவுக்கும் ஆசப் ஜாவுக்கும் ஏற்பட்டிருந்த சண்டைகள் முடிவுற்று, அவ்விருவரும் சமாதானம் செய்துகொண்டனர்.

## கெய்க்வார், சிந்தியா, ஹோல்கார்-தோற்றம் (Origin of the Gaikwar, Sindia and Holkar)

பிற்காலத்தில் சிறப்பெய்திய சில மராட்டிய பரம்பரைகளான, பரோடாவை ஆட்சி செய்த கெய்க்வாரும் (Gaikwar) குவாலியரை ஆட்சி செய்த சிந்தியாவும் (Sindia) இந்தூரை (Indore) ஆட்சி செய்த ஹோல்கரும் (Holkar) அப்பொழுதுதான் முன்னுக்கு வந்தனர். எதிர்பாராத அதிருஷ்டவசமாக மராட்டியர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் ஏற்பட்ட போருக்குப் பிறகு 1818-ல் ஏற்பட்ட ஒப்பந்தத்திற்கு பிறகும், அப் பரம்பரையினர் நிலை பெற்றுவிட்டனர். பாஜிராவினுல் தோற்கடிக்கப்பட்ட ஓர் எதிரியின் முன்னேர்தான் கெய்க்வார் பரம்பரையைச் சார்ந்தவராவார். அவரை பீஷ்வா மிகவும் பெருந்தன்மையாகவே நடத்தினர். சிந்தியா, ஹோல்கார் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் ஆரம்பத்தில் மிக எளிய நிலையில் இருந்தவர்களாவர். பிறகு பாஜிராவிடம் அதிகாரிகளாகப் பணியாற்றி முன்னுக்கு வந்தவர்கள்.

## தில்லிக்கு அண்மையில் மராட்டியர்கள்

மராட்டியர்கள், குஜராத் மாளவம், பண்டல்கண்ட் ஆகிய பகுதிகளைக் கைப்பற்றி ஆதிக்கம் செய்தனர். பேரரசின் பலவீனத்தைப் பயன்படுத்திக்கொள்ளவும், அவர்களுடைய படை வலிமையை எடுத்துக்காட்டவும் அவர்களுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. பேரரசின் படைக்குத் தப்பித்துக் கொண்டு, 1737-ல் திடீரென்று அவர்கள் தில்லிக்கு அண்மையில் வந்துவிட்டனர், ஆனல், அவர்கள் தலைநகரைக் கைப்பற்றும்

முயற்சியில் ஈடுபடவில்லை. தக்காணத்திற்குத் திரும்பி அவர்கள் மீது மீண்டும் போர் தொடுத்த ஆசப் ஜாவை சந்தித்தனர். நைஸாம் அவர்களிடம் போர் செய்வதில் பலனில்லை என்பதை உணரவே, மாளவத்தை அவர்களுக்குத் தரவேண்டிய நிலைமை ஏற்பட்டது.

**பேரரசின் பலவீனம் : அந்நியப்படையெடுப்புகள்**

பாஜிராவ் கைப்பற்றிய பகுதிகளையெல்லாம் அவர் ஏற்றுக் கொண்டார்: ஆனால் பேரரசின் இறுதியான ஒப்புதலைப் பெறு வதற்கு முன்னரே மிகவும் பயங்கரமான படையெடுப்பு நிகழ்ந்து, மற்ற எல்லாக் காரியங்களையும் நிலைகுன்றச் செய்துவிட்டது. மக்களின் வேறு கவனங்களெல்லாம் மறைந்து, இதைப்பற்றிய சிந்தனையிலேயே இருந்தனர். தைமூர், பாபர் ஆகியோர்களின் முன்பு நிகழ்ந்த படையெடுப்புகளைப் போல, பாரசீகத்தில் ஏற்பட்ட சில தொடர்ச்சியான நிகழ்ச்சிகளின் காரணமாக மீண்டும் ஒரு படையெடுப்பு ஏற்பட்டுப் பேரரசு சீர் குலைவு ஏற்படும் நிலை இப்பொழுது இருந்தது, என்று எலிபின்ஸ்டன் கூறுகிறார்.

**நாதிர் ஷா; கார்னல் போர்** (Nadir Shah; batte of Karnal)

நாதிர் (அல்லது தாமாஸ்ப்) குலிகான் (Nadir or Tahmasp Quli Khan) பாரசீகம் இதுவரை கண்டிராத ஒரு பெரிய போர் வீரராவார். 1736-ல் அவர் சஃபாவி பரம்பரையைக் (Safavi Dynasty) கவிழ்த்து விட்டு, நாதிர்ஷா என்ற பெயருடன் அந்த நாட்டிற்கு அரசரானார். செழிப்பானதும், ஆனால், நல்ல பாது காப்பு இல்லாததுமான இந்தியப் பகுதியின் மீது படையெடுக்க அவருக்குப்போதிய காரணங்கள் கிடைத்தன. 1739-ல் காஸ்னி, காபூல், லாகூர் ஆகிய பகுதிகளில் எவ்வித எதிர்ப்புமின்றி அவர் முன்னேறி வந்தார். தில்லிக்கு நூறுமைல் தூரத்திலுள்ள ஜம்னாவுக்கு அருகில் உள்ள கார்னல் (Karnal) என்ற இடத்தில், அவர் பேரரசின் படையை எதிர்த்துப்போராட வேண்டியிருந்தது. கார்னல், பானிப்பட்டிற்கு அண்மையிலேயே இருக்கிறது. இரண்டுமணிநேரம் நீடித்த சண்டைக்குப்பிறகு, பேரரசின் படை யினர் பின்வாங்க முற்பட்டனர். அந்தச் சண்டையில் மட்டுமே, சுமார் 20,000 போர்வீரர்கள் கொல்லப்பட்டனர், என்று மதிப் பிடப்படுகிறது. தவிர, நிறையக் கொள்ளைப் பொருள் களையும் நாதிர்ஷா அடைந்தார். அவரை எதிர்த்துப் போரிட முகம்மது ஷா துணியவில்லை. அதனால் அவரை போர் முகாமில் முகம்மது ஷா சந்தித்துப் பேசி சமரசம் செய்துகொண்டார். முகம்மது ஷாவை அவர் மரியாதையுடன் நடத்தினார். பிறகு

அரசர்களும் ஒன்றாகவே தில்லி நகருக்குள் பிரவேசித்தனர். அது வரையில் எல்லாம் ஒழுங்காகத்தான் இருந்தது. ஆனால் அதற்குள் நாதிர் ஷா இறந்து விட்டதாக ஒரு பொய்யான வதந்தியைப் பரப்பிவிட்டனர், இதைக் கேள்வியுற்ற தில்லி நகர வாசிகள் பல நூற்றுக்கணக்கான நாதிர் ஷாவின் படைவீரர் களைக் கொன்று குவித்துவிட்டனர். நாதிர் ஷா இதற்காக மிகவும் பயங்கரமாகப் பழிவாங்கிவிட்டார். நகரத்தின் முக்கிய வீதியிலுள்ள ரோஷன்-உத்-தௌலா பொன்மசூதியில் (Golden Mosque of Roshan-ud.daula) வீற்றிருந்தவாறே அந்நகரத்து மக்களைக் கொன்று குவிக்குமாறு கட்டளையிட்டார். பல ஆயிரக் கணக்கில் மக்கள் படுகொலைக்குள்ளாவதை அவர் பார்த்த வண்ணமிருந்தார். இப்படுகொலை ஒன்பது மணி நேரம் நீடித்தது. முகம்மது ஷா மிகவும் வேண்டிக் கேட்டுக் கொண்டதிற்குப் பிறகு, இப் படுகொலைகள் நிறுத்தப்பட்டன. மூன்றரை நூற்றாண்டு காலமாக சேர்த்துவைக்கப்பட்ட தில்லியில் உள்ள சொத்துக்களை யெல்லாம், எல்லா மக்களிடமிருந்தும் அவர் சிறிதும் இரக்கமின்றி ஒழுங்காக கைப்பற்றினார். அவர் அங்கே ஐம்பத்தெட்டு நாட்கள் தங்கியிருந்தார். பல விலைமதிக்க முடியாத செல்வங்களுடன், ஷாஜஹானின் பிரசித்திபெற்ற மயிலாசனம் உட்பட, அவர் நாட்டிற்குத் திரும்பினார். சிந்து நதிக்கும் ஹாக்ரா (Hakra) நதிக்கும் (நலா ஆப் சங்கரா-Nala of Sankrah) (இப்பொழுதில்லை) மேற்கேயுள்ள பகுதிகளை அவர் கைப்பற்றிக் கொண்டார். 26 மே, 1739-ல் இது பற்றி ஓர் உடன்படிக்கையும் ஏற்பட்டது. இந்திய அரசனின் ஆதிக்கத்திலிருந்து ஆப்கானிஸ்தானம் பிரிக்கப் பட்டது.

### குழப்பம்; ஆமது ஷா

நாதிர் ஷா மொகலாயப் பேரரசைப் பிழிந்தெடுத்து, சீர்குலைத்துவிட்டுச் சென்றுவிட்டார். மத்திய அரசாங்கம் என்று ஒன்று இருக்கிறதா என்ற சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. எந்த மாகாணத்திலாவது நல்ல ஆட்சி இருந்ததென்றால் அது அந்த மாகணத்திலுள்ள தனிப்பட்ட பிரபுவின் அல்லது தலைவரின் திறமையின் காரணமாகத்தான் ஏற்பட்டது. வங்காளத்தில் ஓரளவு சுமாரான ஆட்சி நிறுவப்பட்டிருந்தது. அக்காலத் திலிருந்த தலைவர்களுள் ஒரு சிலரே திறமை பெற்றிருந்தனர். வலிமையை இழந்துவிட்ட தில்லி அரசாங்கத்தில் அப்பொழுது ஏற்பட்ட சூழ்ச்சிகளையும் ஊழல்களையும் சொல்லாமல் விடுவதே நல்லது. மராட்டிய விவரங்களைப்பற்றிப் பிறகு கூறுவோம். 1748-ல் முகம்மது ஷாவிற்குப் பிறகு அவருடைய மகன் ஆமது ஷா அமைதியான முறையில் பட்ட மெய்தினார்.

**ஆமது ஷா துரானி (Ahmad Shah Durani)**

முகம்மது ஷா இறப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்னர், நாதிர் ஷாவிற்குப் பிறகு அவருடைய கிழக்குப் பகுதிகளின் அரசனுக வந்த ஆப்கானியத் தலைவர் ஆமது ஷா துரானியின் படையெடுப்பைப் பட்டத்து இளவரசனை ஆமதும் அவருடைய அமைச்சரான கம்ருத்தீனும் (Qamr-ud-din) சட்லஜில் உள்ள சர்ஹிண்டில் முறியடித்தனர். ஆமது ஷா துரானி தோற்றுவிட்ட போதிலும், பஞ்சாப்பிலிருந்து கப்பம் பெறுகின்ற அளவிற்கு அவருக்கு வலிமை இருந்தது.

ஆமது ஷா பட்டத்திற்கு வந்த பிறகு துரானி தில்லிக்கு வந்து பஞ்சாபைப் பெற்றுக்கொள்ளும் அளவிற்கு இந்திய அரசாங்கம் பலமற்றிருந்தது. அப்பொழுது இந்தியாவில் ஓர் உள்நாட்டுப் போர் ஏற்பட்டிருந்ததே, அரசாங்கத்தின் பலவீனத்திற்குக் காரணமாகும்.

நைஸாம் பரம்பரையைத் தோற்றுவித்த ஆசப் ஜா வயது முதிர்ந்த பிறகு 1748-ல் மரணமடைந்தார். 1752-ல் அவருடைய பேரனை காஸியுத்தின் (Ghazi-ud-din) அவுத்தைச் (Oudh) சேர்ந்த சப்தர் ஜங்கை (Safdar Jang) வெளியேற்றிவிட்டு அவரே தில்லியில் வாசிராகப் பதவியேற்றார். அந்தப் பிரபு 1754-ல் ஆமது ஷாவைக் குருடாக்கி பட்டத்தை விட்டு இறக்கினர். தவிர அவருடைய உறவினரையே ஆலம்கீர் II (Alamgir ii) என்ற பெயருடன் பட்டத்திற்கும் கொண்டு வந்தார்.

இரண்டு ஆண்டுகள் கழித்து ஆமது ஷா துரானி மூன்றாவது முறையாக இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார்; 1757-ல் தில்லியை அவர் கைப்பற்றியதோடு நிற்காமல் அந்நகரத்தில் பல கொள்ளைகளையும் கொலைகளையும் புரிந்தார்; மீண்டும் தில்லி நகரம் பல கொடுமைகளுக்குள்ளாகியது. மதுராவிலும் கூட அவர் பலரைக் கொன்று குவித்தார். 1757, கோடைக்காலத்தில் துரானி அவருடைய நாட்டிற்குத் திரும்பினர்.

இப்பொழுது நாம் மராட்டியர்களைப்பற்றிப் பார்ப்போம்.

**பாலாஜி, மூன்றாவது பீஷ்வா**

இரண்டாவது பீஷ்வாவாக இருந்த பாஜிராவ் மராட்டிய அரசருக்குக் கட்டுப்பட்டிருந்ததாகத் தெரியவில்லை. உண்மையில் அவரேதான் மராட்டியர்களை ஆட்சி செய்து வந்தார். 1737-ல் தில்லியின்மீது படையெடுத்துத் திரும்பிய பிறகு, அவர்

நைஸாமுடன் ஒரு போரில் ஈடுபட்டார். 1740-ல் அவர் மரண மடைந்தார். அவருடைய மூன்று பிள்ளைகளில், மூத்தவரான பாலாஜிராவ் என்பவர் பீஷ்வாவாக பட்டமெய்தினர். ஆனல் அப்பொழுது மற்ற மராட்டிய தலைவர்களின் எதிர்ப்பு அவருக்கு இருந்தது. 1750-ல் பாலாஜி அவருடைய அதிகாரத்தை நிலை நிறுத்திக்கொண்டு, பூனவை அவருடைய தலைநகரமாக்கிக் கொண்டார். மராட்டிய தலைவர்களின் கூட்டமைப்பிற்கு அவரே தலைவராக இருந்தார். அப்பொழுது செல்வாக்குப் பெற்றிருந்த போட்டித் தலைவராக இருநத ரகுஜீ (Raghuji) என்பவர் அவருடைய நாகப்பூர் பகுதிகளுடன் கட்டாக் (Cuttack) அல்லது ஒரியா (Oriya) மாகாணத்தையும் சேர்த்துக்கொண்டார்.

### பஞ்சாபில் மராட்டிய அதிகாரம்

1758-ல் பீஷ்வாவின் சகோதரரான ரகோபா அல்லது ரகுநாத் (Raghunath) லாகூரைக் கைப்பற்றி, பஞ்சாபையும் ஆதிக்கம் செய்தார். மராட்டியர்கள் இந்தியாவை ஆட்சி செய்கின்ற நிலைமையும் அப்பொழுதிருந்தது. அந்நிலைமை முஸ்லீம் அரசர்களுக்குப் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது. அவுத் நவாப்பான ஷூஜா-வுத்-தௌலா (Shuja-ud-daula) சில ஆண்டுகளுக்கு முன்னர் ரோகில்கண்டில் குடியேறி ரோகில்லா ஆப்கானியர்களுடன் கூட்டுச்சேர்ந்து, இந்துக்களின் படையெடுப்பைத் தடுக்க முயற்சி செய்தார். பஞ்சாபின் ஆதிக்கத்தை இதற்கு முன்னர் பெற்றிருந்த ஆமதுஷா துரானியும் பஞ்சாபை மாராட்டியர்கள் வசம் விடுவதில் விருப்பமில்லாதவராக இருந்தார். 1759-ல் அவர் மீண்டும் படையெடுத்து வந்து பஞ்சாபைக் கைப்பற்றிக்கொண்டார். அப்பொழுது மொகலாயப் பேரரசனக இருந்த ஆலம்கீர் II கொலை செய்யப் பட்டிருந்தார். அவருக்குப் பின்னர், அப்பொழுது வங்காளத்தில் இருந்த இளவரசன் கௌஹர் அலி (Gauhar Ali) அல்லது ஷா ஆலம் பட்டத்திற்கு வந்தார். இந்தப் புதிய பேரரசனைப் பின்னர் ஆமதுஷா துரானி அங்கீகரித்தார்.

### மராட்டியரின் அதிகாரம் உச்சநிலையில் இருந்தது

எல்பின்ஸ்டன் கூறுவதைப்போல அப்பொழுது மராட்டியரின் அதிகாரம் உச்ச நிலையில் இருந்தது. வடக்கிலே, அவர்களுடைய எல்லை சிந்து, ஹிமாலயம் வரையிலும் பரவியிருந்தது. தெற்குக் கோடிவரையிலும் அவர்களது தென் எல்லை பரவியிருந்தது. இவ்வெல்லைகளிடையே அவர்களுடைய ஆதிக்கத்தில் வராத பகுதிகள் மராட்டியர்களுக்குக் கப்பம் செலுத்தின. இப்பகுதிகளிலுள்ள ஆட்சிப்பொறுப்பு முழுவதும் பீஷ்வாவின்

கையிலேதான் இருந்தது. பீஷ்வாவிடம்தான் ஆட்சிப்பொறுப்பு முழுவதும் இருந்தது என்று எல்பின்ஸ்டன் கூறுவதிலே ஒரு சிறிய திருத்தம் செய்யவேண்டியிருக்கிறது. ஏனெனில் பாலாஜி அப்பொழுது காமக் களியாட்டங்களில் ஈடுபட்டிருந்ததால், ஆட்சிப்பொறுப்பை அவருடைய நெருங்கிய உறவினரான சதாசிவ பாவே (Sadasiva Bhao) என்பவரிடம் விட்டுவிட்டார். நைஸாமுடன் போர் செய்தபொழுது, யுட்கிர் (Udgir) (3, பிப்ரவரி, 1760) போர்க்களத்தில் சிறப்பெய்தியவர்தான் இந்த சதாசிவ பாவே என்பவர்.

சதாசிவ பாவே ஒழுங்கான ஒரு படையை அமைத்து, அவர்களுக்கு நல்ல சம்பளத்தையும் கொடுத்தார். அவருடைய படையில் ஆயுதம் தாங்கிய படையினர் அணியும் 10,000 பேர் அடங்கிய காலாட் படையும் அடங்கியிருந்தன. இப்படை அமைப்பை அவர் ஐரோப்பிய முறைப்படி ஏற்படுத்தினர். நல்ல கட்டுப்பாட்டையும் கொண்டுவந்தார். அப் படையின் தலைமையை ஒரு முஸ்லீம் தளபதியான இப்ராஹிம்கான் கார்டி (Ibrahim Khan Gardi) என்பவரிடத்தில்தான் ஒப்படைத்திருந்தார். அதனால் அவர் இந்தியாவின் ஆதிக்கத்தைப் பெறுவதில் துரானியிடம் போட்டியிட தகுதியுடையவர் எனறு நம்பினர்.

**வட இந்தியாவில் மீண்டும் படையெடுத்தல்**

வட இந்தியாவின்மீது மீண்டும் படையெடுத்து அங்கே மராட்டியர்களின் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதென்று மராட்டிய அரசாங்கம் 1760-ல் முடிவு செய்தது. இப் படையெடுப்பைத் தலைமை தாங்கி நடத்தும் பொறுப்பை பீஷ்வாவின் சகோதரரான ரகுநாத ராவிடம் கொடுக்காது அவருடைய மகனை பதினேழு வயதுதான் நிரம்பிய விஸ்வாசராவிடம் (Viswasa Rao) கொடுத்தனர். பெயரளவில்தான் அவர் தளபதியின் பதவியேற்ற போதிலும், அவருக்கு ஆலோசகராக சதாசிவ பாவே நியமனம் செய்யப்பட்டார். உண்மையில் சதாசிவ பாவேயிடம் தான் இராணுவம் முழுவதுமே இருந்தது என்று கூறவேண்டும். பல்வேறு மராட்டியத் தலைவர்களிடம் உள்ள மராட்டிய படைகள் ஒன்று திரண்டன. அத்துடன் பாரத்பூர் (Bharatpur) ஜாட்டுகளின் படையும், அவர்களுடைய தலைவரான சுராஜ்மல் என்பவருடைய தலைமையில் மராட்டியர்களுக்கு உதவி செய்ய முன் வந்தது.[1] ஆமதுஷா துரானியும் அவருடன் கூட்டுச்சேர்ந்த

[1] இந்தப் போரில் ஜாட்டுகள் கலந்துகொள்ளவில்லை. பாவேயின் ஆணவமான நடத்தையைப் பார்த்த பிறகு அவர்கள் இப் போரில் கலந்துகொள்ளாது திரும்பிவிட்டனர்.

ரோகில்லர்களும் பின்பு மராட்டியர்களும் அவுத்தின் இளம் அரசரான ஷு-ஜாயுத்-தௌலாவை தங்கள் பக்கம் இழுப்பதற்கு முயற்சி செய்தனர்.

1760, மழைகாலத்தில் மராட்டிய தளபதி தில்லியை மிகுந்த எதிர்ப்பின்றிக் கைப்பற்றி, அவரது கொடியையும் நாட்டினர். இப்பொழுது புலந்து ஷார் (Buland Shar) ஜில்லாவிலுள்ள கங்கைக்கரையிலுள்ள அனுப்ஷார் (Anup Shar) என்ற இடத்தில் துரானி முகாமிட்டார். ஷுஜாயுத்தௌலா அவரது எல்லையைப் பாதுகாத்துக்கொண்டிருந்தார். மழை நின்று தசரா (Dasara) பண்டிகையையும் கடந்த பிறகு, ஆமதுஷா துரானி மிகவும் பாடுபட்டு அவரது படையை யமுனைவிற்கு அருகில் உள்ள ஓர் ஆபத்தான கடவுத் துறைக்குக் கொண்டுவந்தார். மராட்டியர்களுக்கும் தில்லிக்கு இடையே அவர் 23, 24 அக்டோபரில் அகப்பட்டுக்கொண்டார். அவருடைய இந்த இக்கட்டான நிலையை, மராட்டிய தளபதி பயன்படுத்திக்கொள்ளத் தவறிவிட்டார்.

## இரு படைகளும் சந்தித்தல்

சில நாட்கள் கழித்து இரண்டு படைகளையும் சார்ந்த முன்னணியினர் ஒருவருடன் ஒருவர் மோதுகின்ற நிலை ஏற்பட்டது. அக்டோபர் மாதக் கடைசியில் பாவே பானிப்பட்டில் முகாமிட்டார். நகரத்தைச் சுற்றியும் அவருடைய போர் முகாமைச் சுற்றியும் 60 அடி அகலமும், 12 அடி ஆழமுள்ள ஓர் அகழியை அமைத்துக்கொண்டார். மேட்டுப் பகுதியில் அவருடைய துப்பாக்கிப் படையினரை அணிவகுத்து நிறுத்தினர்.

மராட்டியப்போர் முகாமிற்கு எட்டு மைல் தூரத்தில் துரானி அவருடைய படைகளை அணிவகுத்துக் கொண்டார். மராட்டியர்களுக்கும், அவர்களுக்குமிடையே உள்ள சுமார் ஏழரை மைல் நீளத்திற்கு துரானி மரங்களை வெட்டிப் போட்டு, அவருடைய படைகளுக்குப் பாதுகாப்புத் தேடிக்கொண்டார். சிறிது தூரத்தில் அவருடைய படைகளுக்கு முன்பு, அவர் சிறிய சிவப்புக் கூடாரத்தை அமைத்துக் கொண்டார். பாதுகாப்பு வேலைகளிலும், மற்றும் படைகளைக் கண்காணிப்பதிலும் அவர் மிகுந்த அக்கறை கொண்டிருந்தார். அவருடைய போக்குவரத்துத் தொடர்புகளை மராட்டியர்கள் துண்டித்துவிட்டனர். அதனால் ஆப்கானியப்போர் முகாமில் பெரிய துன்பம் ஏற்பட்டது. டிஸம்பர் மாத நடுவில் போக்குவரத்துகளைப் பாதுகாத்துவந்த கோவிந்த பண்டிதன் (Govind Pandit)) படையைத் தாக்கியதன்

விளைவாக ஆப்கானியர்களுக்குத் தேவையான உணவுப் பொருள் களைப் பெற முடிந்தது. அதனால் அவர்களைத் துன்புறுத்தி வந்த பட்டினி நிலையில் இருந்து அவர்கள் தப்பித்தனர்.

ஆனால் அதற்கு மாறாக மராட்டியர்களின் பெருங்கூட்டத் திற்கு இப்பொழுது போதிய உணவுப் பொருள்கள் கிடைக்கா மல் அவர்கள் பட்டினி கிடக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. பல சிறிய மோதல்கள் அவ்வப்பொழுது இரு தரப்பினரிடையே ஏற்பட்டபோதிலும் அவர்களுடைய பட்டினி நிலையில் எவ்வித மாறுதலையும் ஏற்படவில்லை. கவலையுற்ற பாவே, ஆமது ஷாவுடன் சாதகமாகப் பேச்சு வார்த்தைகளையும் ஆரம் பித்து, சர்ஹிண்ட் வரையிலும பஞ்சாபை அமைதியான முறையில் ஆமதுஷாவிற்குத் தரத் தயாராக இருப்பதாகவும் கூறினர். ஆனல் துரானியின் மனத்தை மாற்ற முடியவில்லை. 'இந்துஸ்தானத் திற்கு மராட்டியர்கள் ஒரு முள்ளைப் போன்றவர்கள்' என்று ரோகில்லாக்களின் தலைவர் கூறியதை துரானி ஒப்புக்கொண் டார். 'அதனால் ஒரே அடியாக அந்த முள்ளைக் களைந்து எறிந்து விட்டால், நம் இரு தரப்பினருக்கும் எப்பொழுதும் நல்லது என்று அவர்கள் ஒப்புக்கொண்டனர்.

இந்துஸ்தானத் தலைவர்களெல்லாம் சமாதான முயற்சியில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்கள் விருப்பம்போல எதையும் செய்யக் காத்திருக்கின்றனர். அவருக்குப் போரைப்பற்றி நன்ருகத் தெரியும்; அதனல் இதன் முடிவை அவர் விருப்பப்படி கொண்டுவர முடியும் என்று ஆமதுஷா அறிவித்தார். கடைசி வரையிலும் மராட்டியர்கள் துன்பத்தைப் பொறுத்துக்கொண் டிருந்த பிறகு, வேறு வழியின்றி அவர்கள் போரிட முற்பட்டனர். 'கோப்பை நிறைந்துவிட்டது; இன்னும் ஒரு சொட்டுக்குக்கூட இடமில்லை' என்று பாவே கூறினர்.

### மூன்ருவது பானிபட்டுப் போர்

அவரே முதலில் தாக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது: 13 ஜனவரி 1761 விடியற் காலையில் மராட்டியப்படை கிழக்கு நோக்கி முன்னேறி தாக்க ஆரம்பித்தனர்.[1] தாக்குதல் மிகவும் கடுமையாகவே இருந்தது. நடுப்பகல் வரையிலும் இந்துக்கள் வெற்றி பெறும் நிலை இருந்தது. ஒரு மணிக்குப் பிறகு,

[1] இப் போர்க்களத்தின் அறிகுறியாக ஒரு கறுப்பு மாமரம் இருந்த இடத் தில், இப்போது ஒரு சாதாரண கல் மேடையுள்ள ஒரு சின்னமே காணப்படு கிறது. அதைச் சுற்றிலும் இரும்புக் கிராதி அடைப்புப் போடப்பட்டிருக்கிறது. (Prog. Report A. S. N. Circle, 1910—11 Muhammadan and Britis monuments. Pl. XV).

ஷாவிற்கு மேலும் உதவிப்படைகள் வந்து சேர்ந்த உடனே மிகவும் கடுமையாக முன்னேறி தாக்க முற்பட்டார். போரிலேயே பெரிய திருப்பம் ஏற்பட்டுவிட்டது. இரண்டு அல்லது மூன்று மணிக்கு பீஷ்வாவின் மகனை விஸ்வாசராவ் பலமாகக் காய மடைந்து குதிரையின்மீதிருந்து கீழே விழுந்துவிட்டார். மூன்று மணி அளவில், ஏதோ மந்திர சக்தியால் கட்டுண்டவர்களைப் போல, மராட்டியப்படை முழுவதுமே புறங்காட்டி வெகு வேக மாகப் பின்வாங்கத் தொடங்கினர். பிறகு பலத்த உயிர்ச்சேதங் கட்கிடையே, போர்க்களத்தைவிட்டு வெளியேறினர். அவர்கள் பின்வாங்கத் தொடங்கியதுமே ஆப்கானியப் படையினர் மிகவும் தீவிரமாக அவர்களைத் துரத்திச் சென்றனர். அவர்கள் இடை வெளி தராது வேகமாகப் பின்வாங்கியதால் எவ்வளவு சேதம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் என்று மதிப்பிட முடியவில்லை. ஆனால் அவர்கள் பின் வாங்கிய எல்லாத்திசைகளிலும் ஆப்கானியர் இருபது மைல் அளவில் துரத்திச் சென்றனர் என்று கூறப்படுகிறது.

மற்ற இரண்டு பானிப்பட்டுப் போர்களைக் காட்டிலும் முக்கியத்துவம் பெற்றதும், அதே சமயத்தில் மிகவும் கொடுமை யானதுமாக இப்போர் கருதப்படுகிறது. பதினாறுவது நூற்றாண் டில் இதற்கு முன்னர் பானிப்பட்டில் இரண்டுபோர்கள் நிகழ்ந் திருக்கின்றன.[1]

## போரில் ஈடுபட்டவர்களும், கொலையுண்டவர்களும்

இருதரப்பிலும் போரில் பங்குகொண்ட வீரர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகமானதாகும். ஆனால் மராட்டியர்களது படை மிகவும் திறமைமிக்கதாக இருந்தது. இந்தப்போர் நிகழும் பொழுது இருந்த காசிராஜா பண்டிட் (Kasi Raja Pundit) என்பவர் ஷாவின் படை வீரர்களைப் பற்றிய தகவல்களை அவர்களுடைய பட்டியலில் இருந்தே விசாரித்துக் கூறுவதாவது ஆமது ஷாவின் படையில் 41,800 பேர் கொண்ட குதிரைப் படையினரும், 38,000 பேர் கொண்ட காலாட்படையினரும் மொத்தமாக 80,000 பேர் இருந்தனர். தாற்காலிகமாகப் போரில் பங்கெடுத்துக் கொண்டவர்களின் எண்ணிக்கை, இதைப்போல நான்கு மடங்கு அதிகமாகவே இருப்பர் என்று அவர் மதிப்பிடுகிறார். இந்த எண்ணிக்கையில் மற்றப்பணியாட்களும் உட்பட்டிருப்பர். மராட் டியப் படையில் 55,000 பேர் கொண்ட குதிரைப்படையினரும்,

[1] பானிப்பட்டுப் போர் (1) பாபருக்கும் இப்ராஹிம் லோடிக்கும் 1526; (2 அக்பருக்கும் ஹெமுவுக்கும் 1556; (3) ஆமது ஷாவுக்கும் மராட்டியர் களுக்கும் 1761.

இதைத் தவிர 15,000 பிண்டாரிகளும் (Pindaris), 15,000 பேர் கொண்ட காலாட்படையினரும் இருந்தனர். மராட்டியரின் பீரங்கிப் படை மிகவும் சிறப்பு மிக்கதாக இருந்தது. மராட்டியப் படையில் மொத்தம் 3,00,000 பேர் இருந்தனர் என்று எல்பின்ஸ்டன் மதிப்பிடுகிறார். எத்தனை பேர் போர் முகாம்களில் பணியாற்றினர் என்று திட்டவட்டமாகக் கூறுவதற்கில்லை என்று கூறுகிறார். இப்போரில் மராட்டியர்கள் பக்கம் உயிரிழந்தவர்கள் தொகை சுமார் 2,00,000 பேர் இருப்பர் என்று மதிப்பிடப்படுகிறது. ஆயிரக்கணக்கான கைதிகளும் கொல்லப்பட்டனர். 'துரானியின் போர் முகாம்களில், ஷாவையும் மற்ற முக்கியமான அதிகாரிகளைத் தவிர ஒவ்வொரு கூடாரத்தின் கதவிலும் தலைகள் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன.

ஏறக்குறைய சிறப்பான எல்லா இந்துத் தலைவர்களும் கொல்லப்பட்டனர். விஸ்வாசராவின் உடல் கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால், பாவேயின் உடல் கண்டு பிடித்தபோதிலும் தலையும் உடலும் அவருடையதுதானா என்று சிறு சந்தேகம் இருந்தது. சிந்தியாவும் ஹோல்காரும் தப்பித்து விட்டனர். பிறகு புகழ் எய்திய பிராமணன் நானா பட்னவிஸ் (Nana Fadnavis) என்பவரும் தப்பித்துவிட்டார். இச் சேதங்களைப் பற்றிப் பீஷ்வாவிடம் மிகவும் உருக்கமாக எடுத்துக் கூறினர். 'இரண்டு முத்துக்கள் கரைந்து விட்டன; இருபத்தேழு தங்க மோகர்களைக் காணவில்லை. வெள்ளி, செம்பு எவ்வளவு என்று கணக்கிட முடியவில்லை' வெற்றி பெற்றவர்கள் தரப்பில் எவ்வளவு சேதம் ஏற்பட்ட தென்பதைப் பதிவு செய்யவில்லை.

**மராட்டியர்கள் தோல்வியுற்றதற்குக் காரணங்கள்**

பொறுமையைக் கடைப்பிடித்தும், பின்பு அவரது போர்த் திறமை கொண்ட தலைமையின் காரணமாகவும் ஆமது ஷா வெற்றிபெற்றார். பாவே ஆணவத்தாலும் பிடிவாதத்தினாலும் தோல்வியுற்றார். மற்றத் தலைவர்கள், அவரிடம் பழைய மராட்டிய முறைப்படியே போரிடலாம் என்றும், இந்தப் பெண்களும் பணியாட்களும் போர் முகாம்களில் பெரிய இடையூறாக இருக்கிறார்களென்றும், அதனால் அவர்களைத் தவிர்த்து விடவேண்டுமென்றும் கூறிய ஆலோசனைகளை பாவே பொருட்படுத்தவில்லை. அவருடைய பீரங்கிகளையும் கட்டுப்பாடுள்ள காலாட்படையையும் பாவே பெரிதும் நம்பிவிட்டார். அவர் போர் முகாம்களை அமைத்து, மற்றும் ஏராளமான ஆட்களுடன் வேலியிட்டு அடைத்துக் கொண்டபொழுதே, இத்தனைபேருக்கும் உணவு அளிக்க முடியுமா என்ற சந்தேகம் ஏற்பட்டது. அப்பொழுதே அவருடைய தலைவிதியும் நிர்ணயம் செய்யப்பட்டுவிட்டது.

### ஷாவின் விருப்பத்திற்குத் தடை

இத் தாக்குதலை ஷா திட்டமிட்டே நடத்தினார். இந்துஸ்தானத்தை அவர் கைப்பற்றிக்கொள்ள வேண்டுமென்று நினைத்தார். ஆனால் ஒரு காலத்தில் அலெக்ஸாண்டருக்கு நேர்ந்த கதியைப்போல இப்பொழுது இவருக்கும் ஏற்பட்டுவிட்டது. ஷாவின் படைவீரர்கள் கலகம் செய்ய முற்பட்டுவிட்டனர். அவருடைய அதிகாரத்தைப் போர்வீரர்கள் புறக்கணித்து விட்டு, இரண்டு ஆண்டு காலமாக அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய சம்பளபாக்கியையும், உடனடியாக காபூலுக்குத் திரும்பவேண்டுமென்றும் கோரினர். இந்த எதிர்ப்புக்கு முன்னர் ஆமது ஷா பணியவேண்டியது நேரிட்டது. அதனால் அவருடைய நாட்டிற்குத் திரும்பினார். அவுத் நவாப்பான ஷுஜாவுத்தௌலா இந்தப் போரில் நேரடியாக பங்கெடுத்துக் கொள்ளவில்லையெனினும் பெயரளவில் ஷாவின் பக்கம்தான் அவர் இருந்தார். மெதுவாக அவரும் அவருடைய நாட்டிற்கே நழுவிவிட்டார்.

### இந்தியாவில் இப்போரின் விளைவுகள்

இப்போரினால் இந்தியாவிற்கு ஏற்பட்ட அரசியல் விளைவுகளைப்பற்றி எல்பின்ஸ்டன் சுருக்கமாகக் கூறுவதாவது, 'இதனுடன் மொகாலப் பேரரசின் வரலாறும் முடிவடைகிறது.' மேலும் அவர் கூறுகிறார்.

'தோல்வியும் முழுமையாக ஏற்பட்டுவிட்டது; அதே சமயத்தில் மிகப் பரந்த அளவில் துயரமும் ஏற்பட்டுவிட்டது. இதைப் போல் வேறு எந்தப்போரிலும் ஏற்பட்டதில்லை. துயரமும் அவநம்பிக்கையும் எல்லா மராட்டிய மக்களிடமும் காணப்பட்டன. உயிரிழந்த உறவினர்களுக்காகப் பலர் துயருற்றனர். மராட்டியப் படை அழிந்துவிட்டதால் அம் மக்களின் தேசியப் புகழ் மறைந்துவிட்டது; பீஷ்வா இந்த அதிர்ச்சியிலிருந்து மீண்டும் எழவே இல்லை. அவருடைய எல்லையிலிருந்து மெதுவாகப் பூனாவிற்குத் திரும்பி அந் நகருக்கு அண்மையில் அவரே நிர்மாணித்த கோயிலில் உயிர் துறந்தார். அவர்களுடைய படை அழிந்துவிட்டதால் இந்துஸ்தானத்தில் கைப்பற்றிய எல்லாப் பகுதிகளையும் விட்டுவிட்டு, நர்மதா நதிக்கும் அப்பால் அவர்கள் வந்து விட்டனர். பாலாஜி இறந்த பிறகு, பல பிளவுகள் அங்கே தோன்றின. பீஷ்வாவின் அரசாங்கம் அதற்குப் பின்னர் சுறுசுறுப்பாகவே இயங்கவில்லை. மராட்டியர்கள் விட்டுவிட்ட பல பகுதிகளைப் பிற்காலத்தில் கைப்பற்றினர். ஆனால் அவைகள் தனிப்பட்ட மராட்டியத் தலைவர்களால் கைப்பற்றப்பட்டவையாகும். அவர்களுக்கு உதவியாக ஐரோப்பிய அதிகாரிகளும்

ஒழுங்காகப் பயிற்சி பெற்ற சிப்பாய்களும் இருந்தனர்: பொதுவான அபாயம் தீர்ந்த பிறகு மராட்டிய இளவரசர்களின் கூட்டமைப்பும் முறிவடைந்தது.'

## முகலாயப் பேரரசு வீழ்ச்சியுறக் காரணங்கள்

மற்றப்பல வல்லரசுகளைப்போல முகலாயப் பேரரசும் சரியாக வேரூன்றவில்லை. ஆட்சிசெய்யும் வல்லரசனுடைய தனிப்பட்ட குணங்களைப் பொறுத்தே அவ்வரசு நீடிக்கவேண்டியிருந்தது. தவிர அவ்வரசனின் படை பலத்தையும் பொறுத்திருந்தது. அவ்வரசிற்கு நல்ல ஆதரவு இல்லை. தேசிய உணர்ச்சியின் அடிப்படையிலும், அதன் பலம் அமைந்திருக்கவில்லை. அல்லது பழைய மரபுகளின் ஆதாரத்திலும் அதற்கு நிரந்தரத்தன்மை இல்லை. அல்லது ஒரே இடத்தில் குவித்திருக்கும் அதிகாரத்திற்கு அதாவது நிரந்தரமான நிறுவனங்களும் தோன்றவில்லை. இப் பேரரசை உண்மையாகப் படைத்தவர் அக்பரேயாவார். அவர் உண்மையிலேயே மிகப்பெரிய மனிதன். சில தவறுகள் இருந்த போதிலும், அவருடைய நாற்பத்தைந்து ஆண்டு ஆட்சி காலத்தில் (1560–1605) இப் பேரரசைப் பலப்படுத்தி வைத்திருந்தார். அதனால்தான் இருபத்துஇரண்டு ஆண்டு காலமாக ஜஹாங்கீரின் பலவீனமான ஆட்சி காலத்திலும் அது நீடித்திருக்கும் நிலையைப்பெற்றது. மிக்க கண்டிப்பும் கொடிய தன்மையும் பெற்ற ஷாஜஹானின் உறுதியான ஆட்சியில் மேலும் முப்பது ஆண்டுகள் இப் பேரரசு நிலைபெற்றது. அவருக்குப்பின் பட்டத்திற்கு வந்த அவுரங்கசீப் ஐம்பது ஆண்டுகளுக்கு ஏறக்குறைய இவ்வாட்சியை நீடிக்க வைத்தார். அதனால் நூற்றைம்பது ஆண்டுகளாக (1560–1707) இந்த நான்கு அரசர்களும் மொகலாயப் பேரரசைப் பாதுகாத்தனர். சராசரி இந்த நான்கு மன்னர்களும் முப்பத்துநான்கு ஆண்டுகள் விகிதமாக ஆட்சி செய்திருப்பது ஆச்சரியமானதாகும். இந்த நான்கு மன்னர்களில் மிகப் பலவீனமான ஜஹாங்கீரும் ஒரு முட்டாள் அல்ல. மற்ற மூவரும் திறமை மிக்கவர்களாவர்.

அக்பரின் அளவு கடந்த திறமையின் காரணமாக அவர் வெற்றிகண்ட ஒரு தளபதியாக இருந்தார். மற்ற இந்திய அரசுகளிடம் உள்ளதைக்காட்டிலும் திறமைமிக்க ஒரு படையை அவர் உருவாக்கி வைத்திருந்தார். ஆனால் அப்படை அமைப்பு ஷாஜஹான் காலத்தில், பாரசீகத்தை எதிர்க்கும்பொழுது பயனில்லாமல் போய்விட்டது. இருந்தபோதிலும், அப் படை அமைப்பை வைத்துக்கொண்டு அவுரங்கசீப்பின் முன் ஆட்சிப் பகுதி வரையிலும் அவர்கள் இந்தியாவை அமைதியாகக்

கட்டிக்காக்க முடிந்தது. அதற்குப் பிறகு படிப்படியாக அப் படை அமைப்பு சீர்குலைந்துவிட்டது. தவிர, நீடித்து, பரந்த அளவில் போர்கள் நிகழ்ந்ததால் பேரரசின் நிதி நிலைமையில் நெருக்கடி ஏற்பட்டது. மாபெரும் மொகலாயப் பேரரசர்களின் கடைசி அரசன் மிக நீண்டகாலம் ஆட்சி செய்தார். மிகுந்த வயோதிக நிலைபெற்றிருந்ததால், அவருடைய திறமையும் மிகவும் குறைந்திருந்தது. அவருடைய நீண்டகால கட்டுப்பாட்டிலே வளர்ந்த, அவருடைய பிள்ளைகளுக்கு ஆட்சிபுரியும் திறமை ஏற்படவில்லை. பிரபுக்கள் மிக உல்லாசமான வாழ்க்கையில் ஈடுபட்டுவிட்டனர். அதனால் மொகலாயப் படை நாளடைவில் ஆதரவற்ற ஒரு கூட்டமாக கருதுகின்ற அளவிற்குத் திறமை குன்றிவிட்டது. மிகக் கடினமான உழைப்பையும் சிக்கனத்தையும் பின்பற்றி வாழ்க்கையை நடத்திவந்த மராட்டியர்கள் இப் பலவீனத்தைப் பயன் படுத்திக்கொண்டு மொகலாயப் படையின் உண்மையான தோற்றத்தை வெளிக்காட்டினர் அவுரங்கசீப் நீண்டகாலமாகத் தலைநகரைவிட்டு, தக்காணத்தில் முகாமிட்டுக்கொண்டிருந்ததால், எல்லாத்துறைகளிலும் ஆட்சி சீர்குலைந்துவிட்டது. சரியான கட்டுப்பாடு இல்லாததால், வன்முறைகளைப் பின்பற்றவேண்டி நேரிட்டது. வன்முறைகளைப் பின்பற்றியதால் வறுமை ஏற்பட்டது. அதனால் நிதி நெருக்கடி ஏற்பட்டது. தவிர முறையற்ற விரயத்தாலும், செலவினங்களாலும், நேர்மை குன்றிய ஆட்சியின் காரணத்தாலும் மேலும் சீர்குலைவு அதிகரித்தது. அக்பர் காலத்தில் மிகவும் திறமையாக இந்துக்களின் ஆதரவை அக்பர் பெற்றிருந்தார். ஆனால் ஷாஜஹானின் தவறுதலான கொள்கையினால் அவர்களுடைய ஆதரவு மிகவும் குறைந்து விட்டது. அதைவிட அதிக அளவில் அவுரங்கசீப்பின் சமய வெறி அவர்களுடைய ஆதரவை இழக்கச் செய்துவிட்டது. தவிர, அடிக்கடி வாரிசுரிமைப் போர்கள் ஏற்பட்டதால் பேரரசின் கட்டுக்கோப்பு மிகவும் சீர்குலைந்துவிட்டது. அவுரங்கசீப் இறப்பதற்குச் சிறிது காலத்திற்கு முன்னரே படைபலம் ஏளனத்திற்குரியதாக இருந்தது. பேரரசனின் அதிகாரத்தையும் அலட்சியம் செய்ய முற்பட்டனர். அவர் இறந்த பிறகு, திசை மாறிச் சென்று புயலில் தவிக்கின்ற ஆட்சிக் கப்பலை, பாறையில் மோதிவிடாது பாதுகாக்கின்ற திறமைமிக்கவர் இந்தியாவில் யாருமில்லாமல் போய்விட்டனர். பேரரசின் வீழ்ச்சி மிகவும் ஆச்சரியமளிக்கும் முறையில் திடீரென்று வீழ்ச்சியுற்றது என்றுங் கூட சிலருக்குத் தோன்றலாம். ஆனால் ஓரளவிற்கு வரலாற்று அறிவு படைத்தவர்களுக்குக்கூட இந்தப் பேரரசு திடீரென்று வீழ்ச்சியுற்றதைக் காட்டிலும் இப் பேரரசு நீண்டகாலமாக நீடித்திருந்ததுதான் ஆச்சரியமாகப்படுகிறது.

இவ்விதமான பல நோக்கங்களைக் கூறுவது சாதாரணமாகவே இருக்கலாம். மற்றப்பல காரணங்களையும் எடுத்துக் கூறலாம். எடுத்துக்காட்டாக, கடற்படையைப் புறக்கணித்து விட்டது மொகலாயப் பேரரசின் அழிவுக்கு ஒரு காரணமாக அமைகிறது. அதனால் இப் பேரரசின் அழிவிற்கு என்ன காரணங்கள் என்று விவரமாகக் கூறிக்கொண்டிருப்பதைக் காட்டிலும், இவ் வரலாற்றைப் படிக்கின்றவரே அவருடைய கவனிப்புக்கு ஏற்ப மற்ற காரணங்களை நிரப்பிக்கொள்ளட்டும்.

## காலவரையறைப் பட்டியல்

### முக்கியமான தேதிகள்

| | |
|---|---|
| அவுரங்கசீப்பின் சாவு | 1707 பிப்ரவரி 21ஆம் நாள் |
| ஜாஜௌ போர்; ஆசாம் முறியடிக்கப்படுதல்; பகதூர்ஷா அரியணையேறல் ... ... | ஜூன் 1707 |
| கம்பக்ஷின் தோல்வியும் மரணமும் ... ... | ஜனவரி 1709 |
| சீக்கியர்களின் கிளர்ச்சி ... ... | 1710 |
| பகதூர்ஷாவின் சாவு; வாரிசுரிமைப்போர் ... | 1712 |
| ஃபருக்ஷியார் அரியணையேறல் ... ... | 1713 |
| பந்தா கொல்லப்படுதல்; கிழக்கு இந்திய வாணிகக் குழுவினரிடமிருந்து தூதுக்குழு ... | 1715 |
| ஃபருக்ஷியார் கொல்லப்படுதல்; முகம்மதுஷா அரியணை யேறல் ... ... | 1719 |
| பாஜிராவ் பீஷ்வா ... ... | 1720 |
| ஔத். தக்காணம் ஆகியவற்றின் சுதந்திரம் ... | 1724 |
| நாதிர்ஷாவின் படையெடுப்பு ... . | 1739 |
| பாலாஜிராவ் பீஷ்வா; வங்காளத்தின் சுதந்திரம் | 1740 |
| முகம்மது ஷாவின் சாவு; தில்லியைச் சார்ந்த ஆமது ஷாவின் அரியணை யேறல் ... | 1748 |
| ஆமத்ஷா சிம்மாசனத்திலிருந்து விலக்கப்படுதல்; இரண்டாம் ஆலம்கீர் அரியணை யேறல் ... | 1754 |
| ஆமத்ஷா துர்ரானி தில்லியைச் சூறையாடுதல் | 1756 |
| மராட்டியர்கள் தாற்காலிகமாகப் பஞ்சாபைக் கைப்பற்றுதல் ... | 1758 |
| மூன்றும் பாணிப்பட்டுப்போர்; மாதவராவ் பீஷ்வா | 1761 |

குறிப்பு: பிரெஞ்சு, ஆங்கில குடியேற்றங்களைப்பற்றிய நிகழ்ச்சிகள் தனியாகக் குறிக்கப்பட்டுள்ளன.

## பிந்திய முகலாயர்கள் (முக்கியமானவர்கள் மட்டும்)



## ஆதாரங்கள்

எலிபின்ஸ்டன் பல விவரங்களை குறிப்பிடுகிறார். அவரது வரலாற்றுக் குறிப்பு சியாருல் முதாகிரின் (Siyar ul-Mutakhirin) என்ற நூலின் அடிப்படையில் இருக்கிறது; தற்போது எலியட், டௌஸன் என்பவர்களின் நூலில் தொகுதி VII காபீகான் எழுதிய வரலாற்றைக் காணலாம்; கிராண்ட் டப் (Grant Duff) எழுதிய மராட்டியர்களின் வரலாறு (HIstory of the Maharattas); மற்றும் சில நூல்கள். பொதுவாக உண்மையான ஏராளமான விவரங்கள் J. A. S. B. Part I for 1894, 1896, 1898; இர்வின் எழுதியுள்ள கட்டுரையிலும் அவர் எழுதியுள்ள "பிந்திய முகலாயர்கள் (Late Mughals) என்ற நூலிலும் காணப் படுகின்றன. அந்நூலில் இரண்டு தொகுதிகளாக சர் ஜாதுநாத் சர்க்கார் (கல்கத்தா, 1921-2) என்பவரால் இயற்றப்பட்டு நீடிக்கப்படுகிறது. அவர் கையொப்பத்திலும் அச்சிடப்பட்டுமுள்ள எல்லா மூலாதாரங்களுக்கும் குறிப்புரைகள் அளிக்கின்றார். காசி ராஜ பண்டிதர் (Kazi (Casi) Raja Pandit) எழுதியுள்ள தெளிவுற்ற வரலாற்றுக் குறிப்புப் பானிப்பட் போரையும் அதைச் சார்ந்த நிகழ்ச்சிகளையும் பற்றிய முதன்மை மூலாதாரமாகும். அந்நூல் பாரசீக மொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டு Indian Historical Quarterly 1934-ல் பிரசுரிக்கப்பட்டுள்ளது. டி. எஸ். ஷஜ்வால்கர் எழுதியுள்ள பானிப்பட்டு, 1761 (T. S Shajwalker's Panipat-1761) என்ற நூலில் முழு ஆராய்ச்சியைக் காணலாம். சீக்கியர்களின் வரலாற்றை Cunningham; History of the Sikhs (1849 and 1853) என்ற நூலிலோ மிக விரிவாக Sir Lepel Griffin-Ranjit Singh (Rulers of India 1898) என்ற நூலிலோ காணலாம். பின்னால் குறிப்பிட்ட நூல் ஒரு சிறிய சிறந்த நூலாகும். அத்தலைப்பைப்பற்றிய மற்ற நூல்களும் உள்ளன. Macaliffe என்பவர் எழுதியுள்ள The Sikh Peligion (ஆறு தொகுதிகள் ஆக்ஸ்போர்ட் 1909). நூல் மிக்க விவரங்களுடன் எழுதப் பட்டுள்ளது. அந்நூல்தான் அம்மதப் பிரிவினையின் சமயத்தைப்பற்றியும் திருமறை நூல்களைப்பற்றியும் ஆதாரமாயுள்ள ஒரே ஒரு நூல். Sir J. Sarkar என்பவர் எழுதியுள்ள Fall of the Mughal Empire (1950-ல் எழுதி முடிக்கப்பட்டது) என்ற நூலின் நான்கு தொகுதிகளும் T. G. P Spear's Twilight of the Mughals (1951) என்ற நூலும் சிறப்புமிக்க பிந்திய நூல்களாகும்.

# கலைச்சொல்லகராதி

## A

Accession — அரியணை யேறுதல்
Account — குறிப்பு; கூற்று
Administration — நிர்வாகம்
Arch — வளைவு
Architecture — கட்டடக் கலை
Artillery — பீரங்கிப் படை
Artists — கலைஞர்
Assessment — மதிப்பீடு
Authorities — ஆதாரங்கள்
Authority — அதிகாரம்

## B

Battle — போர்
Blockade — போக்குவரவுத் தடை

## C

Campaigns — படையடுப்புகள்
Capital — தலைநகரம்; அரசாங்க இருப்பிடம்
Chiefs — சிற்றரசர்கள்; தலைவர்கள்
Chor-mInar — திருடர் கோபுரங்கள்
Chronology — காலவரிசைப் பட்டியல்
Collegium — பாதிரிகளின் இருப்பிடம்
Communication — போக்குவரத்து
Contemporary — சமகாலத்திய; சமகாலத்தவர்
Conversion — மதமாற்றம்



## D

Din-Ilahi — தெய்வீகச் சமயம்
District — மாவட்டம்
Dominions — இராச்சியங்கள்
Drawing — சித்திரக் கலை
Dynasty — வமிசம்

## E

Embassy — தூதுக்குழு
Empire — பேரரசு
Enthronement — முடிசூட்டல்
Expeditions — படையெழுச்சிகள்

## F

Farman — அரச ஆணை
Fortess — அரண்
Foster-mother — மாற்றாந்தாய்

## G

Ghusul Khana — குளிக்கும் அறை
Government — அரசாங்கம்
Governor — மாநிலத் தலைவர்; கவர்னர்
Guardian — பாதுகாவலர்

## H

Hazari — ஆயிரம் வீரர்களைக் கொண்ட தலைவன்

## I

Ibadat Khana — தொழுகை இல்லம்
Imperial — பேரரசுக்குரிய
Institutions — நிறுவனங்கள்
Izzat — மதிப்பு

## J

Jagirdar — ஜாகிர் மானியம் பெற்றவர்
Jarokha — அரசன் தோற்றமளிப்பதற்கான ஜன்னல்
Jizza — இந்துக்களின்மீது விதிக்கப்பட்ட தலைவரி
Journal — குறிப்புச் சுவடு

## K

Kalima — முஸ்லீம் சமயத்தின் வாய்ப்பாடு

Khalsa — அரச நிலங்கள்
Kutba — வெள்ளிக்கிழமை முதலிய புனித நாட்களில் நடக்கும் கூட்டுத் தொழுகையில் நடைபெறும் சொற்பொழிவு

**M**

Memoirs — வாழ்க்கைக் குறிப்புகள்
Minar — கோபுரம்
Mosque — மசூதி; பள்ளிவாசல்
Municipal Councils — நகராண்மைக் கழகங்கள்

**N**

Nobles — பிரபுக்கள்; உயர்குடி மக்கள்

**O**

Occupation — கைப்பற்றுதல்
Officials — அலுவலர்கள்: அதிகாரிகள்
Organisation — ஒழுங்குமுறை

**P**

Paintings — ஓவியங்கள்
Parganas — மாவட்டப் பிரிவுகள்
Pictra dura — கட்டடம்; ரத்தினங்கள்; ரவைக் கற்கள் உள்ளடங்கியது
Promulgation — பிரகடனம் செய்தல்
Province — மாகாணம்
Public Works Department — பொதுப்பணித் துறை
Puritans — தூய்மையாளர்

**R**

Rank — அந்தஸ்து; தகுதி
Rebellion — கிளர்ச்சி
Reforms — சீர்திருத்தங்கள்
Religion — சமயம்
Revenue — வருமானம்
Revolt — கலகம்

**S**

Seperate Voyages — தனிப்பட்ட பயணங்கள்
Spice Islands — மணப்பொருள் தீவுகள்
Suba — மாகாணம்
Successors — வாரிசுரிமையாளர்கள்
Sulh-i-Khul — எல்லா சமயங்களிடத்தும் பொறுமை காட்டுதல்

**T**

Takht-ya-takhta — அரியணை அல்லது சவப்பெட்டி
Territory — ஆட்சிப் பகுதி; இராச்சியப் பகுதி
Throne — சிம்மாசனம்; அரியணை
Tribute — கப்பம்
Tyranny — கொடுங்கோலாட்சி

**U**

Ulema — முஸ்லீம் சமய ஞானி

**V**

Viceroy — வைஸ்ராய்; அரசப் பிரதிநிதி

# பொருட் குறிப்பு அகராதி

ஆ

## இ



## உ

## கி



## கு



## கூ

கெ



கே



கை



கொ



கோ



கௌ



ச



சா

பா



பி



பீ



பு

மூ



மெ



மை



மொ



ய



யா



யூ



ர



ரா



ரு

### ஹு



### ஹெ



### ஹை



### ஹோ

# பிழை திருத்தம்

| திருந்திய படி | திருந்தா படி | பக்கம் |
|---|---|---|
| குபாச்சா | இபாச்சா | 10 |
| உலுக்கான் | உலுத்கான் | 131 |
| கெரால்டு ஆங்கியர் (Gerald Angier) | செரால்டு ஆக்கியர் | 190 |
| கத்தியவாரிலும் | காம்பேயிலும் | 84 |
| Cambay | Combay | 246 |
| Cardova | Gardova | 93 |
| கான்ஜஹான் லோடியின் அழிவு | கான்ஜஹான் லோடியின் அழித்தல் | 312 |
| கான் ஜ ஹான் | கான் ஜ கான் | 31, 44 |
| கோகுண்டா (Gokunda) | கோல்குண்டா (Golkunda) | 211 |
| Jat Rebillions | Jat Revolutions | 323 |
| சபவிக்கள் | சபவிஸ்கள் | 163 |
| சார்ஞல் | சன்னல் | 207 |
| சௌல் | ஆல் | 133 |
| ஹைடாஸ்பெஸ் (Hydespes) | ஹெடாஸ்பென் | 167 |
| ஹனபி (Hanafi) | ஹன்பி (Hanfi) | 294 |
| பெண்கங்கை | வெண்கங்கா | 91 |
| மாபாரும் | மாபெரும் | 68 |
| மாண்டு | மாளவம் | 166 |
| முனிம்கான் | முஜிம்கான் | 370 |

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை-9.

## 1966 வரை வெளியிட்டுள்ள நூல்கள்

### பொருளாதாரம்

| | | | |
|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்-II ... | ... சி. வேலாயுதம் | ... 9—00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | ... திருமதி ஆர். தாமரஜாட்சி | ... 12—00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்-I | ... தி. சி. மோகன் | ... 12—00 |
| 4. | ,, II | ... எம். ஏ. அபூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | ... 10—75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | ... க. முத்தையன் | ... 7—00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்-II ... | ... சி. வேலாயுதம் | ... 11—50 |
| 7. | நவீன பாங்கு இயல் ... | ... க. வெற்றிவேல் | ... 7—50 |
| *8. | இந்தியச் செலவாணியும் பாங்கு முறையும் | ... பி. வி. ஸ்ரீநிவாசன் | ... 5—50 |
| *9. | அரசாங்க நிதி இயல் ... | ... அர. சேஷாசலம் | ... 4—75 |
| 10. | இந்தியப் பொருளியல்-I ... | ... எம். பாலசுப்பிரமணியன் | ... 10—00 |
| 11. | ,, II ... | ... எம். லூர்துநாதன் | ... 4—25 |
| 12. | நமது பொருளாதார பிரச்சினை-I | ... சி. சுந்தரராஜன் | ... 10—75 |
| 13. | ,, II | ... எஸ். குழந்தைநாதன் | ... 10—50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு-I | ... கீ. சீ. இராமசாமி | ... 6—00 |
| 15. | ,, II | ... ,, | ... 6—00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | ... தி. சி. மோகன் | ... 5—00 |

| | | | |
|---|---|---|---|
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு–I | மு. க. சுப்பிரமணியம் | 11—00 |
| 18. | ,, II | பி. வி. சீனிவாசன் | 6—00 |
| 19. | ,, III | ,, | 6—50 |
| 20. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்–I | மா. குமாரசாமி | 10—00 |
| 21. | ,, II | அர. சேஷாசலம் | 9—50 |
| 22. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி–I | தே. வேலப்பன் | 10 - 00 |
| 23. | ,, II | ஜி. சிதம்பரம் | 8—00 |
| 24. | பணம்—சிறு விளக்கம் ... | கோ. இராதாகிருஷ்ணன் | 10—00 |
| *25. | வணிக இயலின் தத்துவங்கள் ... | கு. ஆளுடைய பிள்ளை | 9—50 |
| 26. | பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | சு. ரா. கறுப்பண்ணன் | 11—00 |
| 27. | பென்ஹாம் பொருளாதாரம்–I | ஏ. குழந்தை | 11—00 |
| 28. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 7—00 |
| *29. | வரவுசெலவுத்திட்டம் ... | ஆர். ரங்காச்சாரி | 6—00 |

வரலாறு

| | | | |
|---|---|---|---|
| *30. | பிரிட்டன் வரலாறு–I ... | கி. ர. அனுமந்தன் | 10—00 |
| *31. | ,, II ... | ,, | 9—75 |
| *32. | ஐரோப்பிய வரலாறு–I ... | டி. வி. சொக்கப்பா | 4—50 |
| 33. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றுண்டுகாலச் சரித்திரம் | வை. விருத்தகிரீசன் | 15—00 |
| 34. | இங்கிலாந்து வரலாறு–I ... | இரா. அண்ணுமலை | 13—00 |
| 35. | ,, II ... | பா. மாணிக்கவேலு | 13—00 |
| 36. | ,, III ... | என். ஜே. ராஜகோபால் | 8—00 |
| 37. | ,, IV ... | ,, | 8—00 |

* மூல நூல் (Original Book)

## வரலாறு—தொடர்ச்சி

| | | | |
|---|---|---|---|
| 38. | இங்கிலாந்தின் வரலாறு-I ... | ... க. த. திருநாவுக்கரசு | ... 15—00 |
| 39. | „ II ... | ... எம். எக்ஸ். மிராண்டா | ... 8—00 |
| 40. | „ III ... | ... „ | ... 5—00 |
| 41. | இந்தியாவின் சிறப்பு வரலாறு-I | ... தி. வெ குப்புசாமி | ... 7—50 |
| 42. | „ II | ... ஏ. உஸ்மான் ஷெரீப் | ... 9—00 |
| 43. | „ III | ... அ. பாண்டுரங்கன் | ... 11—00 |
| 44. | கிரேக்க நாட்டு வரலாறு-I | ... சைமன் ஐ. எஸ். பாக்கியநாதன் | ... 7—50 |
| 45. | „ II | ... „ | ... 7—00 |
| 46. | „ III | ... பி. இராமானுஜம் தேவதாஸ் | ... 7—75 |

## அரசியல்

| | | | |
|---|---|---|---|
| *47. | இந்திய அரசியலமைப்பு ... | ... வீ. கண்ணையா | ... 4—75 |
| 48. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் ... | ... டி. செல்லப்பா | ... 8—50 |
| 49. | தற்கால அரசியல் அமைப்புகள் ... | ... மோ. வள்ளுவன் கிளாரன்சு | ... 8—50 |
| 50. | பன்னாட்டு அரசியல்-I ... | ... திருமதி நூர்ஜஹான் பாவா | ... 16—00 |
| 51. | பொதுத்துறை ஆட்சி இயல்-I ... | ... வீ. கண்ணையா | ... 9—00 |
| 52. | „ II ... | ... அ. ஜெகதீசன் | ... 7—25 |
| 53. | பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்-I | வீ. கண்ணையா | ... 7—50 |
| 54. | „ II | டி. செல்லப்பா | ... 7—50 |

## உளவியல்

| | | | |
|---|---|---|---|
| 55 | குழந்தை உளவியல்-I ... | ... கி. ர. அப்புள்ளாச்சாரி | ... 8—00 |
| 56. | „ II ... | ... „ | ... 7—00 |

| | | | |
|---|---|---|---|
| 57. | உட்கவர் மனம் | சி. ந. வைத்தீஸ்வரன் | 7—00 |
| 58. | இளையோர் உளவியல்—I | தி. இரா. அரங்கராசன் | 12—00 |
| 59. | ,, II | ,, | 9—00 |
| 60. | சமூக உளவியல் | என். வேதமணி மானுவேல் | 9—25 |
| 61. | பிறழ்நிலை உளவியல் | அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | 11—00 |
| 62. | பித்தரின் உள்ளம் | ,, | 3—00 |
| *63. | குமர உள்ளம் | டாக்டர் மு. அறம் | 6—25 |

## தத்துவம்

| | | | |
|---|---|---|---|
| 64. | இந்து சமயத் தத்துவம் | ஞா. ராஜாபகதூர் | 5—50 |
| *65. | அறிவு ஆராய்ச்சி இயல் | ஆர். இராமானுஜாச்சாரி | 3—50 |
| *66. | மேலைநாட்டுத் தத்துவம். | ஆர். எஸ். தேசிகன் | 3—50 |
| 67. | அத்துவித தத்துவம் | ஜி. எம். காந்தி | 6—50 |
| 68. | ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 5—50 |
| 69. | இந்தியத் தத்துவம் | வ. அ. தேவசேனபதி, பா. நா. சண்முகசுந்தரம் | 3—50 |

## அறவியல்

| | | | |
|---|---|---|---|
| 70. | அறவியல்— ஓர் அறிமுகம் | கோ. மோ. காந்தி | 8—50 |

## அளவையியல்

| | | | |
|---|---|---|---|
| 71. | அளவை இயல்—தொடக்க நூல் | கி. ர. அப்புள்ளாச்சாரி | 2—50 |

* மூல நூல் (Original Book)

## மானிடவியல்

| | | | |
|---|---|---|---|
| *72. | மானிடவியல் ... | ... ம. சு. கோபாலகிருஷ்ணன் | ... 4—75 |
| 73. | பண்பாட்டுக் கோலங்கள் ... | ... கி. பூ. சுப்பிரமணியன் | ... 5—50 |
| 74. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | ... எஸ். இலட்சுமி | ... 3—50 |

## சமூகவியல்

| | | | |
|---|---|---|---|
| 75. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ... ஜெ. நாராயணன் | ... 10—00 |

## புவியியல்

| | | | |
|---|---|---|---|
| 76. | ஆசியா—I ... | ... கொ. சேஷ. நரசிம்மன் | ... 9—50 |
| 77. | „ II ... | ... „ | ... 8—75 |
| 78. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ... ஏ. எஸ். நாராயணன் | ... 8—50 |
| *79. | தென்கிழக்கு ஆசியா ... | ... ஜி. கிருஷ்ணமூர்த்தி | ... 8—50 |
| *80. | வட அமெரிக்கா ... | ... குமாரி இரா. அலமேலு | ... 8—25 |
| *81. | தென் அமெரிக்கா ... | ... எம். என். பத்மநாபன் | ... 9—00 |
| *82. | தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | ... திருமதி எச். நியூமன் | ... 4 00 |
| *83. | „ —ஆஃபிரிக்கா... | ... எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர் | ... 3—25 |
| *84 | புவிப்புறவியல்-II ... | ... நா. அனந்தபத்மநாபன் | ... 6—00 |
| *85. | செய்முறைப் புவியியல் | [illegible]. ஜெயச்சந்திரன் | ... 9—00 |
| *86. | மக்கட் பரப்பியல் | எஸ். அனந்தபத்மநாபன் | ... 6—25 |
| *87. | சமுத்திரவியல் | ... [illegible] ராமசாமி | ... 6—50 |
| 88. | காலநிலை இயல்-I ... | ... கொ. சேஷ. நரசிம்மன் | ... 10—00 |
| 89. | „ II ... | | ... 5—00 |

| | | | |
|---|---|---|---|
| 90. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11—00 |
| *91. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4—75 |

## புள்ளியியல்

| | | | |
|---|---|---|---|
| *92. | புள்ளியியல்—அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10—00 |
| 93. | புள்ளியியல்—முறைகள்-I | கோ. சண்முகசுந்தரம் | 10—00 |
| 94. | ,, II | கே. ஆர். இராஜகோபாலன் | 14—00 |
| 95. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமிநரசிம்மன் | 6—50 |

## உயர் கணிதம்

| | | | |
|---|---|---|---|
| *96. | ஆயத்தொலை வடிவகணிதம் | டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை | 12—50 |
| *97. | வகை நுண்கணிதம் | ,, | 8—00 |
| *98. | தொகை நுண்கணிதம் | தி. கோவிந்தராசன் | 9—00 |

## விலங்கியல்

| | | | |
|---|---|---|---|
| *99. | விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை, இரா. முருகேசன் | 12—00 |

## பௌதிகவியல்

| | | | |
|---|---|---|---|
| 100. | ஒளி நூல் | ச. சம்பத்து | 10—00 |

* மூல நூல் (Original Book)

## விஞ்ஞானம்

| | | | |
|---|---|---|---|
| *101. | வானவெளி வெற்றி | டாக்டர் எம். ஏ. தங்கராஜ | 6—00 |
| *102. | ரேடியோ | ,, பி. திருஞானசம்பந்தம் | 4—75 |
| *103. | எக்ஸ்-கதிர்கள் | பெ. நா. அப்புசாமி, ஜே: பி. மாணிக்கம் | 4—50 |
| *104. | பாம்புகள் | பெ. மா. அண்ணாமலை | 3—50 |
| *105. | தாவரம்—வாழ்வும் வரலாறும் | டாக்டர் கு. சீனிவாசன் | 8—00 |
| *106. | கரும்பு | கு. பெரியசாமி | 4—00 |

## மருத்துவம்

| | | | |
|---|---|---|---|
| *107. | நீரிழிவு-க்ஷயரோகம் | டாக்டர் ஜி. வெங்கடசாமி, டாக்டர் ஏ. கதிரேசன் | 2—50 |
| 108. | மகப்பேறும் மாதர் நோயும் | டாக்டர் (குமாரி) மணிமேகலை | 8—25 |
| *109. | பாக்டீரியா | சு. சுந்தரம் | 2—50 |

## பொறியியல்

| | | | |
|---|---|---|---|
| 110. | நீங்களே வீட்டைக் கட்டலாம் | கே. வி. கிருஷ்ணராஜ், சி. ஆர். சுப்பிரமணியம், ஆர். இராமசாமி, கே. வேணுகோபால் | 8—50 |

## சட்டம்

| | | | |
|---|---|---|---|
| *111. | குற்றவியல் சட்டம் | எம். சண்முகசுப்பிரமணியம் | 10—00 |

## பொது நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 112. | மகாத்மா காந்தி | சரஸ்வதி தங்கையன் | 3—25 |
| 113. | விவசாயப் புரட்சி | வி. கார்த்திகேயன் | 8—00 |
| 114. | சேமக் கை-நூல் | ஆ. சுப்பிரமணியம் | 2—50 |
| *115. | முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் | எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் | 9—00 |
| *116. | உணவும் ஊட்டமும் | தி. வெங்கடகிருஷ்ணய்யங்கார் | 4—50 |

* மூலநூல் (Original Book)